||ஸ்ரீமத் பகவத் கீதை||

# ||யதார்த்த கீதை||

கீதை–அதன் உண்மைக் கண்ணோட்டம்

5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200
5200

ஆண்டுகள் நீண்ட
இடைவெளிக்குப் பிறகு
ஸ்ரீமத் பகவத் கீதை அதன்
அதிகாரப் பூர்வமான அழியாத
பொக்கிஷமாக வெளிவருகிறது.






மானுட தர்ம நீதி நூல்

||ஸ்ரீமத் பகவத் கீதை||

||யதார்த்த கீதை||

கீதை–அதன் உண்மைக் கண்ணோட்டம்

ஸ்வாமி அட்கடானந்தா

TAMIL

# ஆசிரியரைப் பற்றி

***யதார்த்த கீதையின்*** ஆசிரியர் ஓர் அருட்தொண்டர் உலகக் கல்வி கற்றவர் அல்லர், இருப்பினும் குருவின் அருள் ஆசியினால் ஆன்ம அறிவு நிரம்பப் பெற்றவர். இது நீண்ட கால தியானப் பயிற்சியின் நற்பயனாகும். ஞானத்தை அறிந்து கொள்ளும் பயணத்தில் எழுதுவது கூட ஒரு தடை என கருதுபவர். இருப்பினும் அவருடைய வழிமுறைகள் இந்த சாகித்தியம் உருவாக காரணமாயிற்று. மெய்ஞானம் உணரப்பெற்றதும் யதார்த்த கீதை எழுத வேண்டும் என்ற ஓர் ஆசை தவிர உள்ளத்தில் படிந்திருந்த உணர்வுகள் ஆசைகள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் போயிற்று. முதலில் இந்த ஆசையை கூட தியானத்தின் மூலம் களைந்துவிடத் தான் எண்ணினார். ஆனால் சித்தம் வலுவாக இருந்தது. யதார்த்த கீதை பிறந்த கதை இது தான். இந்த சாகித்தியத்தில் தவறுகள் நேர்ந்த போது எல்லாம் முழுமுதற் காரணனே திருத்தித் தந்தருளியுள்ளார்.

சுவாமிஜி அவர்களுடைய குறிக்கோள் ''மனதுக்குள், அமைதியை ஒரு முகப்படுத்த வேண்டும்'' அதன் வழி 'முடிவில் ஒவ்வொருவருக்கும் அமைதி' என்ற கருத்து பரவ வேண்டும் எனும் விருப்பத்தோடு இந்த நூலை வெளியிடுகிறோம்.

– பதிப்பாளர்

“ஓம் நமஹ; சத்குரு தேவாய”

# “மானுடதர்ம நீதி நூல்”

ஸ்ரீமத் பகவத் கீதை

# யதார்த்த கீதை

**கீதை-அதன் உண்மைக் கண்ணோட்டம்**

தொகுத்து உரை எழுதியவர்:
பரமபூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ மகாராஜ் அவர்களின்
அருளாசி பெற்ற
பரமஹம்ஸ ஸ்வாமி அட்கடாநந்தர்

ஸ்ரீ பரமஹம்ஸ ஆசிரமம்
சக்தேஷ்கட், சுனார், ராஜ்கட் ரோடு
மாவட்டம் மிர்ஜாபூர், (உ.பி.), இந்தியா
தொலைபேசி : 05443 238040

வெளியிடுபவர்:

**Shri Paramhans Swami Adgadanand Ji Ashram Trust**

5, New Apollo Estate, Mogra Lane, Opp. Nagardas Road, Andheri (East), Mumbai – 400069 India
Telephone : (022) 2825300 • Email : contact@yatharthgeeta.com • Website : www.yatharthgeeta.com



ஸ்ரீகிருஷ்ணர் எந்தச் சமயத்தில் கீதையை உபதேசம் செய்தாரோ அந்தச் சமயத்தில் அவருடைய அகவுணர்வு என்னவாக இருந்து இருக்கும்? அகவுணர்வின் மொத்த உருவத்தையும் வெறுமனே பேச்சளவில் மட்டும் வெளிப்படுத்தி விடமுடியாது. ஏதோ கொஞ்சம் பேச்சில் வெளிப்படுத்தலாம். இன்னும் கொஞ்ச உணர்வை அங்க அசைவுகளின் மூலமாக உணர்த்தலாம். மேலும், மீதமுள்ள அனைத்தும் செயல்முறைப் பகுதியாகும். அதை யாரேனும் ஒரு ஆன்மீக சாதகர் மட்டுமே இந்த ஆன்மீகப் பாதையில் பயணம் செய்து கண்டறிகிறார். ஸ்ரீகிருஷ்ணர் எந்த உயர் ஆன்மீக நிலையை அடைந்தவரோ, ஆன்மீக சாதனையை வரிசைக் கிரமமாகப் பயின்று சென்று, அதே நிலையை அடைகின்ற மஹாபுருஷர் மட்டுமே, கீதை என்ன சொல்கிறது? என்பதை அறிகிறார். அவர் கீதையின் வரிகளை மட்டுமே மேலோட்டமாகத் திரும்பத்திரும்ப எடுத்துச் சொல்–க் கொண்டிருப்பதில்லை. மாறாக, அதில் பொதிந்துள்ள உணர்வுகளை அப்படியே வெளிப்படுத்துகிறார். ஏனெனில், எந்தக் காட்சியானது ஸ்ரீ கிருஷ்ணருக்கு எதிரில் இருந்ததோ, அதேதான் நிகழ்காலத்தில் வாழ்ந்து வருகின்ற மஹாபுருஷருக்கு எதிரிலும் இருக்கிறது. எனவேதான் அவர் காண்கிறார்; பிறருக்குக் காண்பிக்கவும் செய்கிறார். உங்களுக்குள்ளும் அவரால் ஆன்மீக விழிப்புணர்வை ஏற்படுத்தித்தர முடியும். அத்துடன் அவர் உங்களை அதே ஆன்மீகப்பாதையில் வழிநடத்தியும் விடுவார்.

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் அத்தகையதொரு ஆன்மீக நிலையை அடைந்த மஹாபுருஷராக இருந்தார். அவருடைய திருவாக்குகள் மற்றும் அகத்தூண்டுத–ன் மூலம் கிடைக்கப்பெற்ற கீதையின் அர்த்தத்தின் தொகுப்பே இந்த “யதார்த்த” கீதை ஆகும்.

**சுவாமி அட்கடானந்தர்**

# Our Publications

| Books | | Languages |
| --- | --- | --- |
| **Yatharth Geeta** | ❖**Indian Languages** | Hindi, Marathi, Punjabi, Gujarati, Urdu, Sanskrit, Oriya, Bengali, Tamil, Telugu, Malayalam, Kannad, Assamee, Sindhi |
| | ❖**Foreign Languages** | English, German, French, Nepali, Spanish, Norwegian, Chinese, Dutch, Italian, Russian, Farsi |
| **Shanka Samadhan** | | Hindi, Marathi, Gujarati, English |
| **Jivanadarsh Evam Atmanubhooti** | | Hindi, Marathi, Gujarati, English |
| **Why do the body parts vibrate? And what do they say?** | | Hindi, English, Gujarati, German |
| **Anchhuye Prashna** | | Hindi, Marathi, Gujarati |
| **Eklavya Ka Angutha** | | Hindi, Marathi, Gujarati |
| **Bhajan Kiska Karein?** | | Hindi, Marathi, Gujarati, German, English |
| **Yog Shastriy Pranayam** | | Hindi, Marathi, Gujarati |
| **Shodasopchar Poojan Padhati** | | Hindi, Marathi, |
| **Yog Darshan** | | Hindi, Gujarati, Sankrit |
| **Glories of Yog** | | English |
| **Prashna Samajke-Uttar Geeta Se** | | Hindi |
| **Barahmasi** | | Hindi |
| **Ahinsa Ka Swaroop** | | Hindi, Gujarati, Marathi, |

## Audio Cassettes

| | |
| --- | --- |
| **Yatharth Geeta** | Hindi, Gujarati, Marathi, English |
| **Amrutvani** (Rev. Swamiji's Discourses Vol.1-51) | Hindi, |
| **Guruvandana (Aarti)** | |

## (MP3) - CDs

| | |
| --- | --- |
| **Yatharth Geeta** | Hindi, Gujarati, Marathi, English, German, Bengali, |
| **Amrutvani** | Hindi |

## Audio CDs

| | |
| --- | --- |
| **Yatharth Geeta** | German |

# ஓம்

அனந்தஸ்ரீ விபூஷித்த

யோகிராஜர், யுகபிதாமகருமான

**பரமபூஜ்ய ஸ்ரீ சுவாமி பரமானந்த ஜி**

ஸ்ரீ பரமஹம்ச ஆஸ்ரமம் அனுசுயியா (சித்ரகூடம்)

அவர்களுடைய

புண்ணிய பாதங்களில் சமர்ப்பணம்

அன்புடன் அர்ப்பணிப்பவர்

☆ ☆ ☆ உள்ளத் தூண்டுதல் ☆ ☆ ☆




# “குரு வணக்கம்”

## ஓம் ஸ்ரீ ஸத்குருதேவ பகவானுக்கு ஜெயம்!

ஜய ஸத்குரு தேவம், பரமானந்தம், அமர சரீரம், அவிகாரி!
நிர்குண நிர்மூலம், தரிஸ்தூலம், காடன சூலம் பவபாரி!

ஸூரதநிஜ ஸோஹம், க–மலகோஹம், ஜனமனமோஹன சவிபாரி!
அமராபுரவாஸி, ஸப்ஸூக்ராசி, ஸதாஏகரஸ நிர்விகாரி!

அனுபவகம்பீர, மதிகேதீரா, அலக்பகீரா அவதாரி!
யோகிஅத்வைஷ்டா, த்ரிகாலத்ரஷ்டா, கேவலபத ஆனந்தகாரி!

சித்ரகூடஹிம்ஆயோ, அத்வைதலகாயோ, அனுசூயியா ஆஸன்மாரி
ஸ்ரீபரமஹம்ஸ ஸ்வாமி, அந்தர்யாமி, ஹைபடநாமி ஸம்சாரி!

ஹம்ஸன ஹித்தகாரி, ஜகபகுதாரி, கர்வப்ரஹாரி உபகாரி!
ஸத்பந்த்சலாயோ, பரமமிடாயோ, ரூபலகாயோ கரதாரி!

யஹசிஷ்யஹைதேரோ, கரதநிஹோரோ, மோபர் ஹேரோ ப்ரணதாரி

ஜய சத்குருதேவம்...................................




“आत्मने मोक्षार्थं जगत् हिताय च”



**ஸ்ரீ ஸ்வாமி பரமானந்தாஜி மகாராஜ் (பரமஹம்ஸஜி)**

பிறப்பு : விக்ரம ஆண்டு 1969 (கி.பி. 1911)

மகா சமாதி : விக்ரம ஆண்டு 2026 (தேதி : 23-5-1969)

பரமஹம்ஸ ஆசிரமம், அனசுயா (சித்ரகூடம்)

श्री हरि की वाणी
वीतराग परमहंसों का आधार
आदिशास्त्र गीता- संत मत

१०-२-२००७- तृतीय विश्वहिन्दू सम्मेलन दिनांक १०-११-१२-१३ फरवरी २००७ के अवसर पर अर्धकुम्भ २००७ प्रयाग भारत में प्रवासी एवं अप्रवासी भारतीयों के विश्व सम्मेलन के उद्घाटन के अवसर पर विश्व हिन्दु परिषद ने ग्यारहवी धर्मसंसद में पारीत गीता हमारा धर्मशास्त्र है प्रस्ताव के परिप्रेक्ष्य में गीता को सदैव से विद्यमान भारत का गुरुग्रन्थ कहते हुए यथार्थ गीता को इसका शाश्वत भाष्य उद्घोषित किया तथा इसके अन्तर्राष्ट्रीय मानव धर्मशास्त्र की उपयोगिता रखने वाला शास्त्र कहा।

अशोक सिंहल
(अशोक सिंहल)
अन्तर्राष्ट्रीय अध्यक्ष–विश्व हिन्दू परिषद

॥ श्री काशीविश्वनाथो विजयते ॥
सर्वतन्त्रस्वतन्त्र-शास्त्रार्थविद्यावतार-विश्वविश्रुत-महामहोपाध्यायादिविरुदविभूषक
पण्डितसम्राट-प्रात:स्मरणीय श्री शिवकुमारशास्त्रिमिश्रप्रतिष्ठापिता
वाराणसेयसर्वविधविद्वत्समाज-प्रतिनिधिभूता-



## श्री काशीविद्वत्परिषद्

टे.नं. : २४५२११३
मो. : ९४१५२८५८५६

पत्राचार कार्यालय :
डी.१७/५८, दशाश्वमेध,
वाराणसी, उत्तर प्रदेश,
भारत

दिनांक 1.3.04

१-३-२००५- भारत की सर्वोच्च श्री काशी विद्वतपरिषद ने दिनांक १-३-२००४ को “श्रीमद् भगवद् गीता” को आदि मनुस्मृति तथा वेदों को इसी का विस्तार मानते हुए विश्वमानव का धर्मशास्त्र और यथार्थ गीता को परिभाषा के रूप में स्वीकार किया और यह उद्घोषित किया कि धर्म और धर्मशास्त्र अपरिवर्तनशील होने से आदिकाल से धर्मशास्त्र “श्रीमद् भगवद् गीता” ही रही है।

गणेशदत्त शास्त्री
मंत्री
श्री काशीविद्वत्परिषद
भारत

आचार्य केदारनाथ त्रिपाठी दर्शनरत्नम वाचस्पति
अध्यक्ष
श्री काशीविद्वत्परिषद
भारत



## विश्व धर्म संसद
## WORLD RELIGIOUS PARLIAMENT

३-१-२००१- विश्वधर्म संसद में विश्व मानव धर्मशास्त्र “श्रीमद् भगवद् गीता” के भाष्य यथार्थ गीता पर परम पूज्य परमहंस स्वामी श्री अड़गड़ानन्द जी महाराज जी को प्रयाग के परमपावन पर्व महाकुम्भ के अवसर पर विश्वगुरु की उपाधि से विभूषित किया।

२-४-१९९८- मानवमात्र का धर्मशास्त्र “श्रीमद् भगवद् गीता” की विशुद्ध व्याख्या यथार्थ गीता के लिए धर्मसंसद द्वारा हरिद्वार में महाकुम्भ के अवसर पर अन्तर्राष्ट्रीय अधिवेशन में परमपूज्य स्वामी श्री अड़गड़ानन्द जी महाराज को भारत गौरव के सम्मान से विभूषित किया गया।

१-४-१९९८- बीसवी शताब्दी के अन्तिम महाकुम्भ के अवसर पर हरिद्वार के समस्त शंकराचार्यो महामण्डलेश्वरो ब्राह्मण महासभा और ४४ देशों के धर्मशील विद्वानों की उपस्थिति में विश्व धर्म संसद द्वारा अन्तर्राष्ट्रीय अधिवेशन में पूज्य स्वामी जी को “श्रीमद् भगवद् गीता” धर्मशास्त्र (भाष्य यथार्थ गीता) के द्वारा विश्व के विकास में अद्वितीय योगदान हेतु “विश्वगौरव” सम्मान प्रदान किया गया।

26-1-2001

Chairman
Presentation Committee
or
Presiding Authority

महाकुम्भ मेला




प्रयाग

Acharya Prabhakar Mishra
Chairman (Indian Region)
World Religious Parliament

## माननीय उच्च न्यायालय इलाहाबाद का ऐतिहासिक निर्णय

माननीय उच्चन्यायालय इलाहाबाद ने रिट याचिका संख्या ५६४४७ सन २००३ श्यामलरंजन मुखर्जी वनाम निर्मलरंजन मुखर्जी एवं अन्य के प्रकरण में अपने निर्णय दिनांक ३० अगस्त २००७ को "श्रीमद् भगवद् गीता" को समस्त विश्व का धर्मशास्त्र मानते हुए राष्ट्रीय धर्मशास्त्र की मान्यता देने की संस्तुति की है । अपने निर्णय के प्रस्तर ११५ से १२३ में माननीय न्यायालय ने विभिन्न गीता भाष्यों पर विचार करते हुए यथार्थ गीता को इसके सम्यक एवं युगानुकुल भाष्य के रुप में मान्य करते हुए धर्म, कर्म, यज्ञ, योग आदि को परिभाषा के आधार पर इसे जाति पाति मजहब सम्प्रदाय देश व काल से परे मानवमात्र का धर्मशास्त्र माना जिसके माध्यम से लौकिक व पारलौकिक दोनों समृद्धि का मार्ग प्रशस्त किया जा सकता है।

नोट – उपरोक्त निर्णय माननीय उच्च न्यायालय ईलाहाबाद की बेवसाईट पर उपलब्ध है।

## Extract from Historical Judgment of Hon'ble High Court, Allahabad

Hon'ble Mr. Justice S.N. Srivastava, (in his judgment dated 30.8.2007 passed in writ petition No. 56447 of 2003 Shyamal Ranjan Mukherjee Vs. Nirmal Ranjan Mukherjee & others) has been pleased to hold that:

"Shrimadbhagwad Gita is a Dharmshastra not only for Hindu but for all human beings. Message of Gita is relevant for all Religions of the world and is not limited for any particular Religion".

"Yatharth Geeta" by Swami Adgadanandji Maharaj, a great saint of India,is Dharm and Dharmshastra for all, irrespective of their caste, creed, race, religion, Dharm & community and is for all times and space.

N.B.:- The aforesaid decision is available on the Website:

http://www.allahabadhighcourt.in

## கீதை - மனித குலத்திற்கு மட்டுமே உரித்தான தர்மசாஸ்திரம் ஆகும்

✡ மஹரிஷி வேதவியாஸர் ✡

பகவான் ஸ்ரீகிருஷ்ணருடைய காலத்தைச் சேர்ந்த மஹரிஷி வேதவியாஸருக்கு முன்பு எந்தவொரு சாஸ்திரமும் நூல்வடிவம் பெறவில்லை. 'செவிவழிக் கேட்டுணர்தல்' என்ற ஸ்ருதி ஞானப் பரம்பரையை உடைக்கும் வகையில் அவர் நான்கு வேதங்கள், பிரம்ம சூத்திரம், மஹாபாரதம், பாகவதம் மற்றும் கீதை முதலான கிரந்தங்களில் ஏற்கனவே சேகரித்து வைக்கப்பட்டிருந்த உலகியல் மற்றும் ஆன்மீகம் தொடர்பான அனைத்து அறிவுப் பெட்டகத்தையும் நூல் வடிவில் தொகுத்து, கடைசியில் தாமே முன்னின்று தீர்மானிக்கும் வகையில் **'ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபால நந்தன:'** – 'எல்லா வேதங்களின் உயிர், மற்றும் உபநிஷதங்களின் சாரமே கீதையாகும். அதை கோபாலனாகிய ஸ்ரீகிருஷ்ணர் கறந்து கொடுத்துள்ளார். மேலும், அவர் அமைதியற்றுத் தவிக்கும் ஜீவாத்மாவானது பரமாத்மாவை தரிசனம் செய்யவும், மற்றும் சாதனையில் நிலை பெறச் செய்து, என்றும் நிலையான, மாறாத அமைதியில் நிலை பெறுகின்ற வரைக்கும் அழைத்துச் செல்கிறார்'. அந்த (வியாஸர்) மஹாபுருஷர் தமது படைப்புகளில் கீதைக்கு மட்டுமே சாஸ்திரம் என்ற மரியாதையை அளித்துப் பின்வருமாறு ஸ்துதியும் செய்து கூறுகிறார்:

**கீதா ஸுகீதா கர்த்தவ்யா கிமன்யை: சாஸ்த்ரவிஸ்தரை:**
**யா ஸ்வயம் பத்மநாபஸ்ய முகபத்மாத்வினி:ஸ்ருதா**
**(மஹாபாரதம் /பீஷ்மபர்வம் அத்43/1)**

கீதை நல்ல முறையில் மனனம் செய்யப்பட்டு இதயத்தில் தாரணை செய்ய உகந்தது. அது ஸ்ரீபத்மநாப சுவாமிகளின் திரு வாயில் இருந்து வெளிப்பட்ட இறைமொழியாக இருக்கும்போது மற்ற சாஸ்திரங்களை எல்லாம் சேகரித்து வைத்துக் கொண்டிருப்பதற்கான அவசியம்தான் என்ன?

கீதையின் சாரத்தை இந்த சுலோகம் முழுவதுமாக வெளிப்படுத்துகிறது.:
**ஏகம் சாஸ்திரம் தேவகீ புத்ர கீதம்**
**ஏகோ தேவோ தேவகீ புத்ர ஏவ**
**ஏகோ மந்த்ரஸ்தஸ்ய நாமானி யானி**
**கர்மாப்யேகம் தஸ்ய தேவஸ்ய ஸேவா**

(கீதா மஹாத்ம்யம்)

அதாவது, தேவகியின் மகனான பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் திருவாயினால் பாடப்பட்ட கீதை ஒன்று மட்டுமே சாஸ்திரம் ஆகும். அடையத் தகுதிபடைத்த

இறைவன் ஒருவரே ஆவார். அந்தப் பாடலில் ஆத்மா என்பதே உண்மை என்று கூறப்பட்டுள்ளது. ஆத்மாவைத் தவிர வேறு எதுவும் நிலையானது இல்லை. அந்தப் பாடலில் அந்த மஹாயோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணர் 'ஓம்' என்னும் திருமந்திரத்தையே ஜபம் செய்ய வேண்டும் என்று கூறியுள்ளார். 'அர்ஜுனா! 'ஓம்' என்பது குறைவற்ற, அழிவற்ற பரமாத்மாவின் திருநாமம் ஆகும். அதையே ஜபம் செய் மற்றும் என்னுடைய திருஉருவத்தைத் தியானம் செய். கீதையில் வர்ணிக்கப்பட்டுள்ள அந்தப் பரம தெய்வமாகிய ஒரே பரம்பொருளுக்குச் சேவை செய்வது மட்டும்தான் தர்மம் ஆகும். அவரையே சிரத்தையுடன் உனது இதயத்தில் தாரணை செய்'. மேலும், ஆரம்பத்தில் இருந்தே கீதைதான் உங்களுடைய சாஸ்திரமாக இருந்து வந்துள்ளது. பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்கு ஆயிரம் வருடங்களுக்கு முன்னால் தோன்றிய மஹாபுருஷர்கள் 'இறைவன் ஒருவரே உண்மையானவர்' என்று கூறினார்கள் என்றால் கீதையில் உள்ள செய்தியைத்தானே பிரச்சாரம் செய்து உள்ளனர்! இறைவன் மூலமாகவே இகவுலக மற்றும் பரலோக இன்பங்களை அடைய முடியும்; இறைவனுக்குப் பயந்து நடத்தல்; வேறு எதையும் இறைவனுக்கு இணையாக ஏற்றுக் கொள்ளாதிருத்தல் என்பது வரைக்கும் எல்லா மஹாபுருஷர்களுமே கூறிவந்துள்ளனர் என்பது உண்மைதான், ஆனால் அந்த இறைவன் வரைக்கும் நம்மைக் கொண்டு போய்ச் சேர்ப்பது வரைக்குமான விதிமுறைகள் அனைத்தும் எந்தச் சிதைவும் இன்றிக் கட்டுக் கோப்பாகவும் முழுமையாகவும் வரிசைக் கிரமமாகவும் கீதையில் மட்டுமே பாதுகாப்பாக உள்ளது. கீதையின் மூலமாக சுகமும் அமைதியும் கிடைக்கவே செய்கிறது. ஆனால் அதையும் விட மேலாக இது குறைவற்ற, அழிவற்ற அனாமய பதத்தையும் உங்களுக்கு அளிக்கிறது. அவை அனைத்தையும் அடைவதற்கு, கீதையின் கௌரவத்தை மீட்டுத் தந்த 'யதார்த்த கீதை' உரையைப் பாருங்கள்

உலகம் முழுவதும் கீதைக்குச் சமமான மரியாதை இருந்தபோதிலும்கூட அது எந்தவொரு குறிப்பிட்ட மதப் பிரிவு மற்றும் சம்பிரதாயத்திற்கு மட்டுமே உரியதொரு படைப்பாக இல்லை. ஏனெனில் சம்பிரதாயம் என்பது ஏதோவொரு மூடநம்பிக்கைக்குக் கட்டுண்டதுதான். பாரதத்தில் தோன்றிய கீதையோ உலகம் முழுவதும் வாழும் மனித குலத்தின் நம்பிக்கை நட்சத்திரமாகத் திகழ்கிறது. ஆகவே, இதற்கு 'தேசத்தின் சாஸ்திரம்' என்ற மரியாதையை அளித்து உயர்வு, தாழ்வுகள், வேற்றுமை உணர்ச்சி மற்றும் கலகமூட்டும் பரம்பரைகளால் பீடிக்கப்பட்டுள்ள உலக மக்கள் அனைவருக்கும் அமைதியைப் பெற்றுத் தர முயற்சி செய்யுங்கள்.

# தர்மக் கோட்பாடு – ஒன்றே

## 1. எல்லோரும் கடவுளின் குழந்தைகள்:–

**மமைவாம்ஸோ ஜீவ லோகே ஜீவபூத: ஸநாதன:**
**மன: ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்த்தானி கர்ஷதி (15/7)**

எல்லா மனிதர்களும் கடவுளின் குழந்தைகள்.

## 2. மனித உடல் கொண்டதன் நோக்கம்:

**அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வமாம் (9/33)**

சுகமற்ற, குறைந்த கால நிலைப்பாடு உடைய, ஆனால், அடைதற்கரிய மனித உடலைப்பெற்று என்னுடைய வழிபாட்டைச் செய். அதாவது இறைவனை வழிபடும் அதிகாரம் மனித உடல் தரித்தவர்களுக்கானது.

## 3. மனிதருள் ஜாதிகள் இரண்டு:

**த்வெள பூதஸர்க்கெள லோகேஸ்மின்தைவ ஆஸுர ஏவ ச**
**தைவோ விஸ்தரஷ : ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ஸ்ருணு (16/6)**

மனிதர் இரண்டு வகைப்படுவர் – தேவதைகள் மற்றும் அசுரர்கள். எவருடைய இதயத்தில் தெய்வீகக் குணங்கள் செயல்படுகின்றனவோ, அவரே 'தேவதை' ஆவார். மேலும், எவருடைய இதயத்தில் அசுர குணங்கள் செயல்படுகின்றனவோ, அவரே 'அசுரர்' ஆவார். மூன்றாவதாக, வேறு எந்த ஜாதியும் படைப்பில் இல்லை.

## 4. இறைவன் மூலமாக நமது அனைத்து விருப்பங்களை அடைவது எளிது:–

**த்ரைவித்யா மாம் ஸோமபா : பூதபாபா**
**யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்க்கதிம் ப்ரார்த்தயந்தே**
**தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ர லோக**
**மஷ்னந்தி திவ்யான்திவி தேவ போகான் (9/20)**

என்னை வழிபட்டு மனிதர்கள் சொர்க்கத்தையும் கூட விரும்பிக் கேட்கிறார்கள். அதை நான் அவர்களுக்குக் கொடுக்கிறேன். அதாவது, ஏக இறைவன் மூலமாக அனைத்தையும் அடைவது சுலபம்.

## 5. பகவானைச் சரணடைவதால் பாவங்கள் அழிகின்றன:–

**அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம:**
**ஸர்வம் ஜ்ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி (4/36)**

எல்லாப் பாவிகளையும் விட அதிகமான பாவங்களைச் செய்தவனாக இருந்தாலும்கூட ஞானம் என்னும் படகின் மூலம் சந்தேகமே இல்லாமல் கரை கடந்து விடுவான்.

**6. ஞானம்:**

**அத்யாத்ம ஜ்ஞான நித்யத்வம் தத்வ ஜ்ஞானார்த்த தர்சனம்**
**ஏதஜ்ஜானமிதி ப்ரோக்தமஜ்ஞானம் யததோன்யதா (13/11)**

ஆன்மாவின் அதிகாரத்திற்குள் அடங்கி நடத்தல், தத்துவத்தின் அர்த்த ரூபமாக விளங்கும் பரமாத்மாவாகிய என்னை நேரடியாக தரிசனம் செய்தல் ஞானம் ஆகும். இதைத் தவிர, மற்றவை அனைத்தும் அஞ்ஞானம் எனப்படும். ஆகவே, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதே ஞானம் ஆகும்.

**7. இறைவனை வழிபடும் அதிகாரம் அனைவருக்கும் உள்ளது:**

**அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மாமனன்யபாக்**
**ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: (9/30)**
**க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஷஸ்வச்சாந்திம் நிகச்சதி**
**கௌந்தேய ப்ரதிஜானீஹி நமே பக்த: ப்ரணஷ்யதி (9/31)**

மிகுந்த கெட்ட நடத்தை உள்ளவன்கூட, என்னை வழிபட்டு சீக்கிரமே தர்மாத்மாவாகிறான். மேலும் என்றும் நிலையாக இருக்கும் அமைதியை அடைகிறான். எனவே, எவன் ஒருவன் பரமாத்மாவிடம் சமர்ப்பணம் அடைந்துள்ளானோ, அவனே தர்மாத்மா ஆவான். மேலும், இறைவனை வழிபடுகின்ற அதிகாரம் மிகுந்த கெட்ட நடத்தை உள்ளவனுக்கும் கூட இருக்கிறது.

**8. ஆன்மீகப் பாதையில் விதைக்கப்படும் விதைக்கு அழிவில்லை:**

**நேஹாபிக்ரம நாஷோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே**
**ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் (2/40)**

இந்த ஆன்ம தரிசனத்திற்காகச் செய்யப்படும் கிரியையை சிறிய அளவில் பயின்று வந்தாலும்கூட பிறப்பு, இறப்பு என்ற மாபெரும் பயத்தில் இருந்து காப்பாற்ற வல்லது.

**9. இறைவனின் இருப்பிடம்:**

**ஈஸ்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேசேர்ஜுனே திஷ்ட்டதி**
**ப்ராமயன்ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா (18/61)**

இறைவன் அனைத்து ஜீவராசிகளின் இதயத்தில் வசிக்கிறார்

**தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத**
**தத்ப்ரஸாதாத்பராம் சாந்திம் ஸ்த்தானம் ப்ராப்ஸ்யஸி சாஸ்வதம் (18/62)**

எனவே முழுமையான உணர்வுடன் அந்த ஒரே பரம் பொருளின் சரணத்திற்குப் போ, அவருடைய கிருபையால் நீ மேலான அமைதி, என்றும் நிலையான, மேலான பரமபதம் ஆகியவற்றை அடைவாயாக!

## 10. வேள்வி:

**ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராண கர்மாணி சாபரே**
**ஆத்ம ஸம்யம யோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞானதீபிதே (4/27)**

அனைத்துப் புலன்களின் இயக்கம் மற்றும் மனத்தின் செயல்பாடு ஆகியவற்றை ஞானத்தால் தெளிவுபெற்ற ஆன்மாவில் கட்டுப்பாடு (ஸம்யம்) என்னும் யோக அக்கினியில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்க வேண்டும்.

**அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேஅபானம் ததாபரே**
**ப்ராணாபான கதீருத்த்வா ப்ராணாயாம பராயணா: (4/29)**

பெரும்பாலான யோகிகள் உள்மூச்சினை வெளிமூச்சில் ஹோமம் செய்கிறார்கள். (வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர்). மேலும், மற்றவர்களோ, வெளிமூச்சினை உள்மூச்சில் (வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர்). ஹோமம் செய்கிறார்கள். இதையும் விட உயர்ந்த நிலையை எட்டிய பிறகு, இன்னும் சிலரோ, உள்மூச்சு வெளிமூச்சு ஆகியவற்றின் வேகத்தை தடுத்து நிறுத்தி பிராணாயாமமுகமாகி விடுகின்றனர். இந்த முறையில் யோக சாதனையின் சிறப்பு விதிமுறைக்குப் பெயரே 'வேள்வி' எனப்படுகிறது. இந்த வேள்வியைச் செயல்முறைப் படுத்துவதற்குப் பெயரே 'கர்மம்' ஆகும்.

## 11. வேள்வியைச் செய்வதற்கான அதிகாரம்:

**யஜ்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம்**
**நாயம் லோகோஅஸ்த்யயஜ்ஞஸ்ய குதோன்ய: குருஸத்தம (4/31)**

வேள்வியைச் செய்யாதவர்களுக்கு மீண்டும் மனித உடல் கூட கிடைப்பது இல்லை. அதாவது, வேள்வியைச் செய்வதற்கான அதிகாரம் மனித உடல் கிடைத்திருக்கும் அனைவருக்கும் உள்ளது.

## 12. இறைவனைக் காண முடியும்!

**பக்த்யா த்வனன்யயா சக்ய அஹமேவம்விதோர்ஜுன**
**ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப (11/54)**

அனன்ய பக்தியின் மூலமாக நான் நேரடியாக தரிசனம் செய்யப்படுவதற்கும் அறிந்து கொள்ளப்படுவதற்கும் மற்றும் நுழைவு பெறுவதற்கும் சுலபமாகிறேன்.

**ஆஸ்சர்யவத்பச்யதி கஸ்சிதேனம்**
**ஆஸ்சர்யவத்வததி ததைவ சான்ய:**
**ஆஸ்சர்யவச்சைனமன்ய: ச்ருணோதி**
**ஸ்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித் (2/29)**

இந்த அழிவற்ற ஆத்மாவை யாரேனும் ஒருவர்தான் ஆச்சரியமாகக் காண்கிறார். அதாவது, இந்த ஆத்மாவை நேரடியாக தரிசனம் செய்ய முடியும்.

## 13.ஆத்மாவே உண்மையானதும் அனாதியானதுமாகும்:-

**அச்சேத்யோ அயமதாஹ்யோயம்அக்லேத்யோஅசோஷ்ய ஏவ ச**
**நித்ய : ஸர்வகத : ஸ்த்தாணுரசலோயம் ஸநாதன: (2/24)**

இந்த ஆத்மா எங்கும் நிறைந்துள்ளது. அசையாத, நிலையான உறுதிப்பாடு கொண்டது. மற்றும், என்றும் மாறாதது (ஸநாதனம் ஆனது). இந்த ஆத்மாவே உண்மையானது.

## 14. பிரம்மாவும், அவரால் படைக்கப்பட்ட இந்த உலகமும் அழியும் தன்மை உடையது

**ஆப்ரஹ்ம புவனால்லோகா: புனராவர்த்தினோர்ஜுன**
**மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ( 8/16)**

பிரம்மாவும் அவரால் நிர்மாணிக்கப்பட்டுள்ள இந்தப் படைப்பு, தேவதை மற்றும் தானவர் (அசுரர்) அனைத்துமே துக்கத்தின் சுரங்கமாகும், நிலையற்றதும் அழியக் கூடியதுமாகும்.

## 15. தேவபூஜை:-

**காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞானா: ப்ரபத்யந்தேன்யதேவதா:**
**தம் தம் நியம மாஸ்த்தாய ப்ரக்ருத்யா நியதா : ஸ்வயா (7/20)**

ஆசைகளால் எவருடைய புத்தியானது சூழப்பட்டுள்ளதோ, அத்தகைய மூட புத்தியினரே பரமாத்மாவைத் தவிர மற்ற பிற தேவதைகளைப் பூஜைசெய்கின்றனர்.

**யேப்யன்யதேவதா பக்தா யஜந்தே ஸ்ரத்தயான்விதா**
**தேஅபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் (9/23)**

தேவதைகளை வழிபடுபவர்களும்கூட என்னைத்தான் வழிபடுகிறார்கள். ஆனால், அவர்களுடைய அந்த வழிபாடு விதிமுறைகளுக்கு முரண்பாடானது. எனவேதான் அவர்கள் இழப்பை அடைகின்றனர்.

### சாஸ்திர விதியைத் துறத்தல்:-

அர்ஜுனா! சாஸ்திர விதியைப் புறக்கணித்துவிட்டு வழிபடுபவர்களில் ஸாத்வீகமான சிரத்தை உடையவர்கள் தேவதைகளையும், ராஜஸீகமான சிரத்தை உடையவர்கள் யட்சர், ராட்சஸர்களையும் மற்றும் தாமஸீகமான சிரத்தை உடையவர்கள் பூதங்களையும் பிரேதங்களையும் வழிபடுகின்றனர். ஆனால்,

**கர்சயந்த சரீரஸ்த்தம் பூதக்ராமமசேதஸ:**
**மாம் சைவாந்த: சரீரஸ்த்தம் தான்வித்த்யாஸுர நிஸ்ச்சயான் (17/6)**

அவர்கள் உடலில் நிலைபெற்றுள்ள பூத சமுதாயம் மற்றும் அந்தர்யாமியாக விளங்கும் பரமாத்மாவான என்னையும் துன்புறுத்துகிறார்கள். அவர்கள் அனைவருமே அசுரர்கள் என்று அறிந்து கொள். அதாவது, தேவதைகளை வழிபடுபவர்களும்கூட அசுர எண்ணவோட்டத்திற்குள் அடங்கியவர்களே.

## 16. தாழ்ந்தவர் யார்?

**தானஹம் த்விஷத: க்ரூரான்ஸம்ஸாரேஷு நராதமான்**
**க்ஷிபாம்யஜஸ்த்ரமசுபாநாஸுரீஷ்வேவ யோனிஷு (16/19)**

எவன் வேள்வியின் நிச்சயிக்கப்பட்டுள்ள விதிமுறையைப் புறக்கணித்து விட்டு, கற்பனையான விதிகளைக் கொண்டு வேள்வி செய்கிறானோ, அவனே கொடூரமான கர்மத்தைச் செய்பவன், பாவத்தை அனுசரிப்பவன், மற்றும் மனிதர்களிலேயே மிகவும் தாழ்ந்தவன் ஆவானே தவிர வேறுயாரும் இல்லை.

## 17. நிச்சயிக்கப்பட்டுள்ள விதி என்ன?

**ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன்**
**ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் (8/13)**

'ஓம்' இதுவே குறைவற்ற, அழிவற்ற பிரம்மத்தை அறியச் செய்யவல்ல திருமந்திரம் ஆகும். அதையே ஜபம் செய்ய வேண்டும். மேலும், பரமாத்மாவாகிய என்னையே நினைத்தல், மற்றும் தத்துவ தரிசி மஹாபுருஷருடைய நேரடிப்பார்வையின் கீழ் தியானம் பழகுதல்.

## 18.சாஸ்திரம்:-

**இதி குஹ்யதமம் சாஸ்த்ரமித முக்தம் மயானக**
**ஏதத் புத்வா புத்திமான்ஸ்யாத் க்ருதக்ருத்யஸ்ச பாரத (15/20)**

இம்முறையில் இந்த மிகவும் மேலான, மறைபொருள் இரகசியம் வாய்ந்த சாஸ்திரம் என் மூலமாகச் சொல்லப்பட்டது. இதிலிருந்து கீதையே சாஸ்திரம் என்பது தெளிவாகிறது.

**தஸ்மாச் சாஸ்திரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்த்திதௌ**
**ஜ்ஞாத்வா சாஸ்த்ரவிதானோக்தம் கர்ம கர்த்து மிஹார்ஹஸி (16/24)**

எது கடமை, எது கடமை இல்லை என்பனவற்றை எல்லாம் நன்கு தீர்மானிப்பதில் சாஸ்திரம் ஒன்று மட்டுமே பிரமாணம் ஆகும். எனவே, கீதையில் நிச்சயிக்கப்பட்டு உள்ள விதிமுறைகளையே கடைப்பிடிக்க வேண்டும்.

## 19. தர்மம்:

**ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ**
**அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச (18/66)**

எல்லாவிதமான தர்மங்களையும் துறந்து விட்டு என்னை மட்டுமே சரணடைந்து விடு. அதாவது, பகவான் ஒருவரிடம் மட்டுமே சமர்ப்பணம் அடைவதுதான்

தர்மத்தின் மூலமாகும். அந்தப் பிரபுவைப் பெறுவதற்கு நிச்சயிக்கப்பட்டுள்ள விதியினைக் கடைப்பிடிப்பது மட்டும்தான் தர்மத்தை அனுசரித்தல் என்று ஏற்றுக் கொள்ளப்படும். (அத்தியாயம் 2 சுலோகம் 40) மேலும், எவர் இதைச் செய்கிறாரோ அவர் மாபெரும் பாவியாக இருந்தாலும்கூட சீக்கிரமே தர்மாத்மாவாகி விடுகிறார். (அத்தியாயம் 9 சுலோகம் 30)

## 20. இந்த தர்மத்தை எங்கிருந்து பெறுவது?

**ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்ட்டாஹம்ருதஸ்யாவ்யயஸ்ய ச**
**சாஸ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்யச (14/27)**

அந்த அழிவற்ற பிரம்மத்தை, அம்ருதத்தை, என்றும் நிலையான தர்மத்தை மற்றும் அகண்ட, ஒருநிலைப்பட்ட ஆனந்தத்தை அடைவதற்கு என்னை மட்டுமே துணையாகக் கொள்ள வேண்டும். அதாவது, பரமாத்மாவில் நிலைபெற்ற ஸத்குரு மட்டுமே இவற்றிற்கெல்லாம் இருப்பிடம் ஆவார்.

**குறிப்பு:**

உலகம் முழுவதும் உள்ள எல்லா தர்மங்களுக்கும் ஆதார மூலமாக விளங்குவது
ஸ்ரீமத் பகவத்கீதைதான்.

# புராதன காலம் தொட்டு இன்றுவரை ஆன்றோர்கள் அருளிய அருளுரைகள் (காலக்கிரம வரிசைப்படி)

ஸ்ரீ பரமஹம்ஸ ஆசிரமம், ஜகதானந்த, பரைனி (வ.பி) கச்சுவா, மிர்ஜாபூர் மாவட்டம், உத்திர பிரதேச மாநிலம் என்ற இடத்தில் தாம் வாழ்ந்து வந்த காலத்தில் ஸ்வாமி அட்கடானந்தஜீ அவர்கள் ஆசிரமத்தின் நுழைவாயிலுக்கு அருகில் இந்தக் கல்வெட்டினை கங்காதசரா (1993) என்னும் புனித நாளன்று திறந்து வைத்தார். அதில் பொறிக்கப்பட்டுள்ள வாசகங்கள் பின்வருமாறு:

## ❖ விஷ்வ குரு பாரதம் ❖

❖ **வேதகால ரிஷிகள் (அநாதி காலம் – நாராயணஸூக்தம்)**
இங்கிங்கெனாதபடி எங்கெங்கிலும் நீக்கமற நிறைந்துள்ள பிரம்மமே உண்மையானது ஆகும். அதை அனுபூதியில் உணர்ந்து தெளிவதைத் தவிர முக்தி அடைவதற்கு வேறு எந்த வழியும் இல்லை.

❖ **பகவான் ஸ்ரீராமர் (த்ரேதா – இலட்சக்கணக்கான வருடங்களுக்கு முற்காலத்தைய – இராமாயணம்)**
பரமாத்மா ஒருவரை மட்டுமே வழிபடாமல் பரம நன்மையை எவன் விரும்புகிறானோ அவன் மூடன் ஆவான்.

❖ **யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் (5000 வருடங்களுக்கு முன்பு கீதை)**
பரமாத்மாவே உண்மையானவர், ஆன்ம சிந்தனையின் நிறைவில் அந்த ஸநாதன பிரம்மத்தை அடைவது சாத்தியமாகும். தேவி தேவதைகளை வழிபடுதல் மூடபுத்திக்காரர்களின் வேலையாகும்.

❖ **மஹாத்மா மோசஸ் (3000 வருடங்களுக்கு முன்பு – யூதமதம்)**
நீங்கள் ஏக இறைவன் மீது வைத்திருந்த நம்பிக்கையை விலக்கிக் கொண்டீர்கள். சிலைகளை உருவாக்கினீர்கள். இதனால் அந்த இறைவன் உங்கள் மீது சினம் கொண்டுள்ளார். எனவே நீங்கள் பிரார்த்தனையில் ஈடுபடுங்கள்.

❖ **மஹாத்மா ஜரதுஷ்ட்ரர் (2700 வருடங்களுக்கு முன்பு – பார்ஸீமதம்)**
அஹூர் மஜ்தா (இறைவன்) வின் வழிபாடு மூலமாக இதயத்தில் நிலைபெற்றுள்ள புலன் இன்ப ஆசைகளை அழித்து விடுங்கள். அவையே எல்லா துக்கங்களுக்கும் காரணம் ஆகும்.

❖ **பகவான் மஹாவீரர் (2600 வருடங்களுக்கு முன்பு – சமண நூல்கள், மதம்)**
ஆன்மாவே உண்மையானது ஆகும். கடுமையான தவத்தின் மூலமாக இதே பிறவியில் அதனை அறிய முடியும்.

- **கௌதம புத்தர் (2500 வருடங்களுக்கு முன்பு - மஹாபரிநிர்வாண ஸூக்தம்**
  பண்டைக்கால மஹரிஷிகள் அடைந்த அதே அழிவற்ற இறைப்பதத்தை நானும் அடையப் பெற்றேன். இதுவே முக்தியாகும்.

- **இயேசு கிறிஸ்து (2000 வருடங்களுக்கு முன்பு - கிறிஸ்தவ மதம்)**
  இறைவன் பிரார்த்தனை மூலமாக அடையப்படுகிறார். என்னிடம் அதாவது சத்குருவிடம் வாருங்கள். அதன்மூலம் நீங்களும் இறைவனின் குழந்தைகள் என்றழைக்கப்படுவீர்கள்.

- **முகமது நபி பெருமானார் : (1400 ஆண்டுகளுக்கு முன்பு - இஸ்லாமிய மதம்)**
  லா இலாஹா இல்லல்லாஹூ முகம்மதுர் ரசுல் லல்லா"– ஒவ்வொரு அணுவிலும் வியாபித்திருக்கும் அல்லாவைத் (இறைவன்) தவிர வழிபடத் தகுந்தவர் எவருமே இல்லை. முஹம்மது அல்லாவினுடைய இறைத் தூதர் ஆவார்.

- **ஆதி சங்கராச்சாரியார் (1200 ஆண்டுகளுக்கு முன்பு)**
  உலக வாழ்க்கை பயனற்றது. இதில் ஹரியினுடைய பெயரும் ஹரியுமே உண்மையாகும்.

- **ஞானி கபீர் (600 ஆண்டுகளுக்கு முன்பு)**
  ராம் நாம் அதி துர்லப் ஔரன் தே நஹீ காம் ஆதி மத்ய ஔர் அந்தஹூம் ராமஹீ தே ஸங்க்ராம் 'ராம நாமம் தான்' முடிவான ஒன்று, மற்றவை யாவும் அர்த்தமற்றது, பயனற்றது. முதலும், இடையும், முடிவும் ராம நாமம் ஜபிப்பது அன்றி வேறு இல்லை. ராம நாமம் ஓதுவதே உய்யும் ஒரே வழி. ஆகவே ராமருடனே போரிடுங்கள் அதுவே நன்மை பயக்கவல்லது.

- **குரு நானக் : (500 ஆண்டுகளுக்கு முன்பு)**
  "ஏக் ஓம்கார் சத்குரு பிரசாதி", ஓங்காரம் மட்டுமே உண்மையானது. ஆனால் அதுவே சத்குருநாதருடைய கிருபையின் பிரசாதமாகும்.

- **சுவாமி தயானந்த சரசுவதி (200 ஆண்டுகளுக்கு முன்பு)**
  என்றுமுள்ள எல்லாம் வல்ல இறைவனை வழிபடு சர்வ வல்லமை பொருந்தியவரின் திருப்பெயர் தான் ஓம்.

- **சுவாமி ஸ்ரீ பரமானந்தாஜி (கி.பி. 1911-1969)**
  எல்லாம் வல்ல இறைவன் அருள் மழை பொழியும் போது பகைவர்கள் நண்பர்கள் ஆகிவிடுகிறார்கள், தீயவைகள் நல்லவைகளாக மாறிவிடுகின்றன. இறைவனே எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன். இறைவன் எல்லாத் திசைகளிலிருந்தும் பார்க்கிறான்.

✻✻✻ ஓம் ✻✻✻

# “பொருளடக்கம்”

# முன்னுரை

உண்மையில், கீதைக்கு உரை எழுத வேண்டிய அவசியம் இப்போதைக்கு இல்லை என்பது போலத்தான் தோன்றுகிறது. ஏனெனில், இதன்மீது எண்ணற்ற உரைகள் ஏற்கனவே எழுதப்பட்டு விட்டன. அவற்றில் மட்டும் ஐம்பதுக்கும் மேல் சம்ஸ்கிருத மொழியில் அமைந்து உள்ளன. கீதையை அடிப்படையாகக் கொண்டு ஐம்பதுக்கும் மேல் வேறுபட்ட கருத்துகள் இருந்தாலும் அவை அனைத்திற்கும் அடிப்படையாகத் திகழ்வதென்னவோ ஒரேயொரு கீதைதான். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரோ ஒரு விஷயத்தைத்தானே சொல்லியிருப்பார். எனில் இத்தனை கருத்துவேறுபாடுகள் ஏன்? உண்மையில் சொல்பவர் என்னவோ ஒரு கருத்தையே வெளிப்படுத்துகிறார். ஆனால் கேட்பவர் ஒருவேளை பத்து பேர்களாக இருந்தால் பத்து விதமாக அதனைப் புரிந்து கொள்கிறார்கள். தனிமனிதனின் புத்தியில் தாமஸீகம், ராஜஸீகம், ஸாத்வீகம் ஆகிய குணங்களின் ஆளுமைக்கு ஏற்ப, அந்நிலையில் இருந்து கொண்டேதான் சொல்லப்படுகின்ற கருத்தினைப் புரிந்து கொள்ள முடிகிறது. அதற்குமேல் அவனால் ஒன்றும் புரிந்து கொள்ள முடியாது. ஆகவே, கருத்து வேறுபாடு இயல்பான ஒன்றே!

பல்வேறுபட்ட கருத்து வேறுபாடுகளினால் அவ்வப்போது ஒரே சித்தாந்தத்தை வெவ்வேறு காலகட்டங்களில் மற்றும் மொழிகளின் மூலமாக விளக்கும்போது, சாதாரண மனிதர்கள் அதனைப் புரிந்து கொள்ள முடியாமல் சந்தேகத்திற்கு ஆளாகி விடுகின்றனர். எண்ணற்ற உரைகளுக்கு மத்தியில் அந்த உண்மையைப் பறை சாற்றுகின்ற உரையும் இருக்கத்தான் செய்கிறது. ஆனால், தூய்மையான பொருளை உணர்த்துகின்ற அந்தவொரு நூலை ஆயிரமாயிரம் உரைகளுக்கு நடுவில் இடம் பெறச் செய்துவிட்டால், அவை அனைத்திலும் யதார்த்தத்தை உணர்த்துகின்ற உரை எதுவென்பதை அடையாளம் கண்டு கொள்வது கடினமாகிவிடுகிறது.

நிகழ்காலத்தில் கீதைக்கு எண்ணற்ற உரைகள் எழுதப்பட்டு விட்டன. அனைத்துமே தங்களுடைய உரையே மேலானது உண்மையானது என்று முழக்கமிடுகின்றன. ஆனால் கீதையின் தூய்மையான பொருளுரையில் இருந்து அவை எல்லாமே வெகுதூரத்திலேயே இருக்கின்றன. சில மஹாபுருஷர்கள் உண்மை பொருளைத் தொட்டு உணர்ந்துள்ளனர் என்பதில் சந்தேகம் இல்லைதான். ஆனால் தவிர்க்கமுடியாத பலகாரணங்களால் அவர்களால் தாங்கள் உணர்ந்ததை எல்லாம் சமுதாயத்தின் முன்பு எடுத்துரைக்க முடியாமல் போய்விட்டது.

ஸ்ரீகிருஷ்ணர் சொல்ல விரும்பிய கருத்தினை மற்றவர்களால் புரிந்து கொள்ள முடியாமல் போனதற்கு மூல காரணம் அவர் ஒரு யோகியாக இருந்தார் என்பதுதான். ஸ்ரீகிருஷ்ணர் எந்த உயர் ஆன்மீக நிலையைப் பற்றிப் பேசினாரோ, அதே நிலையை வரிசைக் கிரமமாக சாதனை செய்து அடைகின்ற ஏதேனும் ஒரு மஹாபுருஷரால் மட்டுமே, ஸ்ரீகிருஷ்ணர் எந்தச் சமயத்தில் கீதையை உபதேசித்தாரோ, அந்தச் சமயத்தில் அவரது அகவுணர்வு என்னவாக இருந்தது என்பதை எல்லாம் அட்சரம் பிசகாமல் எடுத்துச் சொல்ல முடியும். அகவுணர்வை முழுவதுமாக அப்படியே வார்த்தைகளால் மட்டுமே வெளிப்படுத்தி விட முடியாது. ஏதோ கொஞ்சம் வேண்டுமானால் வார்த்தைகளில் வெளிப்படலாம். இன்னும் கொஞ்சம் முகபாவங்கள் மூலமாக உணர்த்தப்படலாம். மீதமுள்ள அனைத்துமே செயல்முறைப் பகுதியாகும். அதை எல்லாம் இந்த ஆன்மீகப் பாதையில் பயணம் செய்கின்ற சாதகன் மட்டுமே அறிந்து கொள்கிறான். ஸ்ரீகிருஷ்ணர் எந்நிலையில் இருந்தாரோ, அந்நிலையை சாதனைவரிசைக் கிரமத்தில் படிப்படியாகச் சென்று அடைகின்ற மஹாபுருஷரால் மட்டுமே உண்மையில் கீதை என்ன சொல்ல விளைகிறது என்பதை உணர முடியும். அவர் கீதையின் வரிகளை மட்டுமே மேலோட்டமாகத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பதில்லை. அதற்கு மாறாக, அவற்றில் பொதிந்துள்ள உண்மையை, உணர்வுகளை அப்படியே வெளிப்படுத்துகின்றார். ஏனெனில், ஸ்ரீகிருஷ்ணருக்கு எதிரில் இருந்த காட்சியே நிகழ்காலத்தைய மஹாபுருஷருக்கு எதிரிலும் வாய்க்கப் பெற்றுள்ளது. எனவேதான் அவரால் காண முடிகிறது. பிறருக்குக் காண்பிக்கவும் முடிகிறது. உங்களுக்குள்ளும் ஆன்மீக விழிப்புணர்வை அவரால் ஏற்படுத்தித் தரவும் முடியும். அதே பாதையில் வழிநடத்திச் செலுத்தியும் விடுவார்.

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களும்கூட அத்தகையதொரு உயர் ஆன்மீகநிலையை எட்டியிருந்த மஹாபுருஷராக இருந்தார். அவரது திருவாக்குகள் மற்றும் எமது இதயத்தில் எழுந்தருளி கீதைக்குப் பொருள் உணர்த்தியது ஆகியவற்றின் தொகுப்பே இந்த ‘யதார்த்த கீதை’ உரையாகும். இதில் என்னுடையதென்று எதுவும் இல்லை. இது முழுக்க முழுக்க செயல்முறைப்பகுதியாகும். ஆன்மீக சாதனையைச் சிரமேற்கொள்கின்ற ஒவ்வொருவருமே இந்தப் பாதையின் வழியாகத்தான் சென்றாக வேண்டும். எதுவரை அவர் இதிலிருந்து விலகியிருக்கிறாரோ, அதுவரை அவர் சாதனை ஒன்றும் செய்யவில்லை என்பது தெளிவாகிறது. ஆனால் சாதனை என்ற பெயரில் வேறு எதையோ செய்து கொண்டு மார்தட்டிக் கொண்டிருக்கிறார் என்பது மட்டும் என்னவோ உண்மைதான். ஆகவே, ஏதேனும் ஒரு மஹாபுருஷரின் சரணத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். ஸ்ரீகிருஷ்ணர் புதியதாக ஏதோவொரு சத்தியத்தைக் கண்டுபிடித்துக் கூறிவிடவில்லை. மாறாக **‘ருஷிபிர் பஹுதா**

**கீதம்'** – 'ரிஷிகள் எண்ணற்றமுறை எதனைப் பற்றி பாடியுள்ளனரோ அதையே கூறப்போகிறேன்' என்றார். அவர், 'இந்த ஞானத்தை நான் மட்டுமே அறிவேன்; எனவே நான் மட்டும்தான் கூறுவேன்' என்றெல்லாம் சொல்லவில்லை. அதற்குமாறாக அவர், "யாரேனும் ஒரு தத்துவதரிசி மஹாபுருஷரிடம் செல்" என்றுதான் கூறுகிறார். "அவரிடம் சென்று கபடமற்ற உள்ளத்துடன் சேவை செய்து அந்த ஞானத்தைப் பெற்றுக் கொள்" என்கிறார் அவர். ஸ்ரீகிருஷ்ணர் மஹாபுருஷர்கள் மூலமாக வெளிக் கொண்டு வரப்பட்ட உண்மையையே தாமும் வெளிப்படுத்தி உள்ளார்.

கீதை எளிமையான சம்ஸ்கிருத மொழியில் அமைந்துள்ளது. ஒருவேளை வரிகளை எல்லாம் பதம் பிரித்துக் கொண்டாலும்கூட கீதை முழுவதையும் உங்களால் மனப்பாடம் செய்து புரிந்து கொள்ள முடியும்தான். ஆனால் உங்களால் அதனுடைய உள்ளது உள்ளபடிக்கான பொருளை மட்டும் உணர்ந்து கொள்ள முடியாது. உதாரணமாக, ஸ்ரீகிருஷ்ணர், "வேள்வியின் செயல்முறையே கர்மம் ஆகும்" என்று தெளிவாகக் கூறியிருக்கிறார். அப்படி இருந்தபிறகும்கூட நீங்கள் விவசாயம் செய்வதையும்கூட கர்மம் என்றுதான் நினைக்கிறீர்கள். வேள்வியை நன்றாகத் தெளிவுபடுத்தும் வகையில் அவர், "வேள்வியில் பெரும்பாலான யோகிகள் பிராணனை (உள்மூச்சு) அபானனில் (வெளிமூச்சு) (வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர்) ஹோமம் செய்கிறார்கள். இன்னும் பலர், அபானனை (வெளிமூச்சு) பிராணனில் (உள்மூச்சு) (வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர்) ஹோமம் செய்கிறார்கள். மேலும் பலரோ, பிராணன் – அபானன் ஆகிய இரண்டின் போக்கினையும் கட்டுப்படுத்தி பிராணாயாம முகமாகிவிடுகின்றனர். நிறைய யோகிகள், புலன்களின் அனைத்துச் செயல்பாடுகளையும் கட்டுப்பாடு என்னும் அக்கினியில் **(ஸம்யமாக்னி)** வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர் ஹோமம் செய்கிறார்கள்," என்கிறார். இந்த முறையில் உள்மூச்சு – வெளிமூச்சில் செய்யப்படுகின்ற ஆன்ம சிந்தனையே வேள்வியாகும். மனம் மற்றும் அனைத்துப் புலன்களையும் கட்டுப்படுத்துவதே வேள்வி எனப்படும். கீதையின் ஆசிரியரோ தாமே முன்னின்று வேள்வியை இவ்வாறு விளக்கியிருந்த பிறகும்கூட, நீங்கள் விஷ்ணுவின் நிமித்தமாக 'ஸ்வாஹா' என்று உச்சரிப்பதையும் நெருப்பை வளர்த்து அதில் நெல், உமி, எண்ணெய், நெய் ஆகியவற்றைக் கொண்டுபோய்ப் போடுவதையே 'வேள்வி' என்கிறீர்கள். ஆனால், யோகேஷ்வரரோ அவ்வாறெல்லாம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை.

உங்களால் இதைப் புரிந்து கொள்ள முடியாததற்கு என்ன காரணம்? தலைமுடியைப் பிய்த்துக் கொண்டு மனப்பாடம் செய்தபிறகும்கூட

வாக்கியங்களைச் கூடச் சரியாகப் பொருத்திப் பொருள் கொள்ள முடியாமல் போகிறதே எதனால்? நீங்களே உங்களை யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் சூன்யமாக உணர்கிறீர்களே ஏன்? உண்மையில், மனிதன் பிறந்து படிப்படியாக வளரும்போது, அவனுக்குப் பெற்றோர் வழிச் செல்வங்கள் (வீடு, கடை, நிலம், தோட்டம், பதவி, பெருமை, கால்நடைச் செல்வம், இயந்திர உபகரணக் கருவிகள் முதலானவை) தலைமுறைச் சொத்தாக வந்தடைகின்றன. சரி, இதே போன்றுதான், அவனுக்குக் கொஞ்சம் சிலபல மூடநம்பிக்கைகளும், பரம்பரைப் பழக்கவழக்கங்களும், பல்வேறுவிதமான பூஜை விதிமுறைகளும் தலைமுறை மூலமாகக் கிடைக்கிறது. பாரத தேசத்தில் பழங்காலம் தொட்டே முப்பத்தி மூன்று கோடி தேவி – தேவதைகள் பற்றிய எண்ணிக்கை உள்ளதென்றால் உலகம் முழுவதுமோ அவற்றின் தொகை கணக்கில் அடங்காத அளவில் உள்ளன. குழந்தை கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து பெரியதாகும்போது தன்னுடைய தாய் – தந்தை, சகோதரன்–சகோதரி, அக்கம்பக்கத்தார்– உற்றார் உறவினர்கள் செய்து வருகின்ற பூஜைகளை எல்லாம் பார்க்கிறது. உறவினர் மற்றும் தனது குடும்பத்தில் நிலவி வருகின்ற பூஜைவிதிமுறைகள் அதனுடைய மூளையில் அழிக்க முடியாத முத்திரையாகப் பதிந்து விடுகின்றன. தேவியின் பூஜை கிடைத்தால் வாழ்நாள் முழுவதும் தேவி–தேவி என்று அரற்றிக் கொண்டு திரிகிறது. உறவினர்களிடமிருந்து பூதங்களின் பூஜை கிடைத்தாலோ பூதம், பூதம் என்று உளறுகிறது. சிலர் சிவனையும் சிலர் கிருஷ்ணரையும் இன்னும் சிலர் வேறு யாரையுமோ பிடித்துக் கொள்கின்றனர். அவைகளை ஒருபோதும் விடுவதில்லை.

அத்தகைய மனக் குழப்பம் அடைந்துள்ள மனிதர்களுக்கு கீதை போன்ற நன்மை பயக்கவல்ல சாஸ்திரம் கிடைத்தாலும்கூட, அவர்களால் அதனைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. பெற்றோர் வழிச் சொத்துக்களைக் கூட ஒருவேளை அவர்களால் விட்டுவிட முடியும். ஆனால், இந்த மூட நம்பிக்கைகள் மற்றும் மதப் பிரிவினைவாதச் சண்டைகளில் இருந்து மட்டும் ஒருபோதும் விலகியிருக்க முடிவதில்லை. பெற்றோர் வழிச் சொத்துகளை எல்லாம் உதறிவிட்டு நீங்கள் வேறெங்கோ ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் கூடச் சென்று வாழ்ந்து விடுவீர்கள். ஆனால் இதயத்திலும் மூளையிலும் பதிந்து போயிருக்கும் இந்த மூடநம்பிக்கை எண்ணவோட்டங்களோ அங்கேயும் உங்களைப் பின்தொடரவே செய்கின்றன. நீங்களும் தலையை வெட்டித் தனியாக வைத்துக் கொண்டு வாழவும் முடியாதுதானே! எனவே, நீங்கள் யதார்த்தமான சாஸ்திரத்தையும்கூட அத்தகைய மூடநம்பிக்கைகள், நடைமுறைப் பழக்கவழக்கங்கள், வழக்கமான அணுகுமுறைகள், மற்றும் பூஜை விதிமுறைகளுக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக் கொண்டு பார்க்கவே விரும்புகிறீர்கள். ஒருவேளை அதற்கு ஏற்றவாறு

பேச்சமைந்தால், உரையாடலின் பொருள் பொருந்தினால் மட்டுமே அதனைச் சரியென்று ஏற்றுக் கொள்கிறீர்கள். மேலும், அப்படி அமையவில்லையென்றால் தவறென்று ஒதுக்கித் தள்ளி விடுகிறீர்கள். இதனால்தான் நீங்கள் கீதையின் இரகசியத்தைக் காண்பதில்லை. கீதையின் இரகசியமும் இரகசியமாகவே இருந்து விடுகிறது. இதனுடைய உண்மையான பொருளை **(ஸந்த்)** முனிவர் அல்லது சத்குருவால் மட்டுமே உணர்த்த முடியும். 'கீதை என்ன சொல்கிறது?' என்பதை அவரால் மட்டுமே கூறமுடியும். எல்லோராலும் அறிந்து கொள்ள முடியாது. அனைவருக்குமான எளிமையான வழி என்னவென்றால் இதனை ஏதேனும் ஒரு மஹாபுருஷரின் சரண சான்னித்தியத்தில் அறிந்து கொள்ள வேண்டும் என்பதுதான். ஸ்ரீகிருஷ்ணரும் இதையேதான் வலியுறுத்திக் கூறுகிறார்.

கீதை எந்தவொரு தனிப்பட்ட மனிதன், ஜாதி, வர்க்கம், பிரிவு, தேசம், காலம் மற்றும் வேறெந்த விதமான மூடப்பழக்க வழக்கங்களால் கட்டுண்டு கிடக்கும் சம்பிரதாயத்திற்கும் சொந்தமான கிரந்தம் அன்று. மாறாக, இது, உலகம் முழுவதற்கும் எல்லாக் காலத்திற்கும் பொருந்துகின்ற தர்மநூல் ஆகும். இது ஒவ்வொரு நாட்டிற்கும், ஒவ்வொரு ஜாதிக்கும், மற்றும் ஒவ்வொரு நிலையில் வாழ்கின்ற ஆண்–பெண் என்று அனைவருக்குமானது ஆகும். எனவே, யாரோ சொன்னதைக் கேட்டோ, யாராலோ கவரப்பட்டோ மனிதர்கள் எந்தவிதமான முடிவிற்கும் வந்து விடலாகாது. அத்தகைய முடிவினால் ஏற்படும் விளைவு அல்லது தாக்கம் நேரடியாக அவர்களுடைய நிலைப்பாட்டின் மீது விழுகிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டியது அவசியமாகிறது. தலைமுறைப் பழக்கவழக்கம் என்ற பாவனையிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு உண்மைப் பொருளை அறிய விழையும் அன்பர்களுக்காக இந்த ரிஷிகிரந்தம் ஒரு கலங்கரை விளக்கமாகும். வேதமே பிரமாணம் என்பதுதான் இந்துக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கொள்கையாகும். வேதம் என்பதற்கு ஞானம், பரமாத்மாவை அறிந்து தெளிதல் என்று அர்த்தம். பரமாத்மா ஸம்ஸ்கிருத மொழியிலோ அல்லது வேதமந்திரங்களின் தொகுப்புகளிலோ இல்லை. புத்தகங்கள் அவரைப் பற்றிக் குறிப்பால் உணர்த்துபவை மட்டுமே ஆகும். அவர், உண்மையில் இதய தேசத்தில்தான் எழுந்தருள்கிறார்.

விஸ்வாமித்திரர் ஆன்ம சிந்தனையில் ஈடுபடலானார். அவரது பக்தியைக் கண்டு மனமகிழ்ந்து பிரம்மா அவர்முன் தோன்றி, "இன்று முதல் நீ ரிஷி என்றழைக்கப்படுவாய்" என்று கூறியருளினார். விஸ்வாமித்திரரோ இதைக் கேட்டு திருப்தியடையவில்லை. அவர் ஆன்ம சிந்தனையைத் தொடரலானார். கொஞ்சகாலம் கழித்து தேவதைகள் புடைசூழ பிரம்மா மீண்டும் தோன்றி "இன்று முதல் நீ ராஜரிஷி என்றழைக்கப்படுவாய்" என்று கூறினார். ஆனால் இதுவும்

விஸ்வாமித்திரருக்கு சமாதானத்தை ஏற்படுத்தவில்லை. அவரோ தொடர்ந்து எந்நேரமும் ஆன்மீக சிந்தனையிலேயே மூழ்கி விட்டார். பிரம்மா தெய்வீக குணங்களை எல்லாம் அழைத்துக் கொண்டு மீண்டும் அவர்முன் தோன்றி "இன்று முதல் நீ மஹரிஷி ஆகிவிட்டாய்" என்றார். அதற்கு விஸ்வாமித்திரரோ, "இல்லை, என்னை புலன்கள் அனைத்தையும் வென்ற பிரம்மரிஷி என்றழையுங்கள்" என்று கூறினார். பிரம்மாவோ அதை மறுத்து, "இப்போதைக்கு நீ இன்னும் புலன்கள் அனைத்தையும் முழுமையாக வென்றுவிடவில்லையே!" என்று சொல்லி மறைந்து விட்டார். விஸ்வாமித்திரரும் தொடர்ந்து தவத்தில் ஆழ்ந்துவிட்டார். அவருடைய உச்சந்தலையில் இருந்து தவத்தினால் உண்டாகும் புகை கிளம்ப ஆரம்பித்ததும் தேவதைகள் அனைவரும் சென்று பிரம்மாவை வேண்ட ஆரம்பித்தனர். பிரம்மாவும் அதையேற்று விஸ்வாமித்திரரிடம் சென்று "இப்போது முதல் நீ பிரம்மரிஷி ஆவாய்" என்று கூறினார். அதற்கு விஸ்வாமித்திரரோ, "அப்படி ஒருவேளை நான் பிரம்மரிஷி என்பது உண்மையானால், வேதம் என்னை ஏற்றுக்கொள்ளட்டும்" என்று கூறினார். அடுத்த கணமே வேதம் விஸ்வாமித்திரரின் இதயத்தில் இருந்து வெளிப்பட்டது. எந்த தத்துவம் அறியப்படாமல், வெளிப்படாமல் இருந்ததோ அந்த தத்துவம் அறியப்பட்டு விட்டது. இதையே வேதம் என்கிறோமே ஒழிய, வேறு ஏதோ நூல் திரட்டை அல்ல. எங்கெல்லாம் விஸ்வாமித்திரர் வாழ்ந்தாரோ, அங்கெல்லாம் அவர் மூலமாக வேதமும் வெளிப்படுத்தப்பட்டது.

இதையேதான் ஸ்ரீகிருஷ்ணரும் கூறுகிறார். "உலகம் என்பது அழிவற்ற அரச மரத்திற்கு ஒப்பானது ஆகும். அதனுடைய மேல்பாகத்தில் பரமாத்மா வேராகவும் (மூலம்) கீழ்ப்பாகத்தில் பிரகிருதி முழுவதும் கிளைகளாகவும் அமைந்துள்ளன. எவர் இந்தப் பிரகிருதி அல்லது படைப்பினை முடிவிற்குக் கொண்டு வந்து பரமாத்மாவை அறிந்து தம்மில் வரித்துக் கொள்கிறாரோ, அவரே 'வேதவித்' எனப்படுகிறார். அர்ஜுனா நானும் வேதவித் ஆவேன்!" எனவே பிரகிருதி முழுமையும் முடிவு பெறுவதுடன் சேர்த்து பரமாத்மாவை அனுபூதியில் உணர்வதற்குப் பெயரே 'வேதம்' எனப்படுகிறது. இந்த அனுபூதி இறைவனால் அளிக்கப்படுவது ஆகும். எனவேதான் வேதம் மனித சக்திக்கு அப்பாற்ப்பட்டது (அபௌருஷேயம்) எனப்படுகிறது. மஹாபுருஷர் மனித சக்திக்கு அப்பாற்பட்டவராகத் திகழ்கிறார். அவர் மூலமாக அந்தப் பரமாத்மாவே பேசுகிறார். அவர் அந்த பரமாத்மாவின் செய்தியை ஒலிபரப்பும் சாதனமாகவே மாறி விடுகிறார். வெறும் கேள்வியறிவை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு அவருடைய திருவாக்குகளில் பொதிந்துள்ள யதார்த்தத்தைச் சோதித்து அறிந்து கொள்ள முடியாது. எவரொருவர் செயல்முறைப் பாதையில் சென்று இந்த மானுட இயல்பிற்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட **அபௌருஷேய** நிலையை அடைகிறாரோ, எவருடைய

தனித்தன்மை (அஹம்) பரமாத்மாவில் ஒன்று கலந்து முழுவதுமாக மறைந்து விட்டதோ, அவரே இதை அறிகிறார்.

உண்மையில் வேதம் மனித சக்திக்கு எல்லாம் அப்பாற்ப்பட்டதாகும். ஆனால் அதை வெளிப்படுத்தியது என்னவோ நூறிலிருந்து நூற்றி ஐம்பதிற்கும் மேற்பட்ட மஹாபுருஷர்கள் ஆவர். அவர்களுடைய திருவாக்குகள் அடங்கிய தொகுப்பிற்குப் பெயரே 'வேதம்' எனப்படுகிறது. ஆனால் எப்பொழுது சாஸ்திரமானது எழுத்து வடிவம் பெற்றதோ, அந்தக் காலத்தைய சமுதாய அமைப்பிற்கான நியமங்களும் அத்துடன் சேர்த்தே எழுதப்பட்டு விடுகின்றன. மஹாபுருஷரின் பெயரால் மக்களும் அவற்றையெல்லாம் கடைப்பிடித்து வாழத் தொடங்கிவிடுகின்றனர். எந்த வகையிலும் தர்மத்திற்கும் இவற்றிற்கும் யாதொரு சம்பந்தமும் இருப்பதில்லை. இந்தக் காலத்தில் மந்திரிகளுக்கு முன்னும் பின்னும் சுற்றிக் கொண்டு திரியும் சாதாரண அரசியல்வாதிகளும்கூட அதிகாரிகளிடம் தங்களுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்வதைப் பார்க்கிறோம். ஆனால், அந்த மந்திரிகளுக்கோ அத்தகைய அரசியல்வாதிகளைப் பற்றியெல்லாம் ஒன்றுமே தெரியாது. இதேபோலத்தான், சமுதாய அமைப்பாளர்களும் மஹாபுருஷர்களின் பெயரால் உண்பது வாழ்வது தொடர்பான அமைப்பியலையும் சேர்த்து நூல்களில் எழுதி வைத்து விடுகின்றனர். அவற்றின் சமுதாயப் பயன்பாடு அந்தக் காலத்திற்கு மட்டுமே ஏற்புடையதாக இருக்கிறது. வேதங்களைப் பொறுத்தவரைக்கும் இதுவேதான் நிலைமை. அவற்றின் அழியாத உண்மை உபநிஷதங்களில் சேகரித்து வைக்கப்பட்டுள்ளது. அந்த உபநிஷதங்களின் சாராம்சமே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் திருவாய் மலர்ந்தருளிய கீதையாகும். சுருக்கமாகச் சொல்வதென்றால், கீதை மனித சக்திக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட வேதம் என்னும் பாற்கடலைக் கடைந்து கிடைத்த உபநிஷதம் என்னும் அமிர்தத்தின் சாரத்தை முழுமையாக உள்ளடக்கியது ஆகும்.

இதேமுறையில் பரம தத்துவமாகிய பரமாத்மாவை அடையப் பெற்ற ஒவ்வொரு மஹாபுருஷரும் தாங்களே சுயமாக ஒரு தர்ம கிரந்தமாக விளங்குகின்றனர். அவர்களுடைய திருவாக்குகளின் தொகுப்பு, உலகின் எந்த மூலையில் இருந்தாலும், சாஸ்திரம் என்று ஏற்றுக்கொள்ளப்படுகிறது. ஆனால் சில மதவாதிகளுடைய கருத்து என்னவென்றால், "எதெல்லாம் குரானில் எழுதப்பட்டுள்ளதோ அது மட்டுமே உண்மை. இனிமேல் வேறு எந்தக் குரானும் வெளிப்படாது" என்கிறார்கள். இன்னும் சிலரோ," இயேசு கிறிஸ்துவின்மீது நம்பிக்கை கொள்ளாமல் சொர்க்கத்தைப் பெறமுடியாது. அவர் இறைவனின் கடைசிப் புதல்வர் ஆவார். இனிமேல் அவரைப் போன்ற மஹாபுருஷர் உருவாக முடியாது" என்கிறார்கள். இதெல்லாம் அவர்களுடைய நம்பிக்கையே தவிர

வேறொன்றுமில்லை. ஒருவேளை யாரேனும் அதே தத்துவத்தை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து விட்டார்களேயானால் இதே பேச்சைத்தான் திரும்பவும் கூறுவார்கள்.

கீதை உலகப் பொதுமறையாகும். தர்மத்தின் பெயரால் உலகம் முழுவதும் நிலவி வருகின்ற தர்மநூல்களில் கீதையின் ஸ்தானம் முதன்மையானதாகும். இது தன்னில் தானே நிறைவானதொரு தர்ம சாஸ்திரம் மட்டுமில்லை. மாறாக அனைத்து தர்ம நூல்களில் பொதிந்துள்ள உண்மையை நிர்ணயிக்கின்ற சரியான அளவுகோலும் ஆகும். ஒவ்வொரு தர்ம நூல்களிலும் மேலான உண்மை ஒளிவு மறைவின்றி வெளிப்பட்டு, ஒன்றுக்கொன்று விரோதமான கருத்துகள் அனைத்தும் மறைகின்றதோ, அத்தகையதொரு உயர் ஆன்மீகத் தளம் கீதையில் முழுமையாக அடையப்பட்டுள்ளது. எல்லா தர்ம நூல்களிலுமே இவ்வுலகில் எப்படி வாழ்வது? உண்பது? என்ற கலை மற்றும் கர்ம காண்டம் பற்றிய குறிப்புகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. அன்றாட வாழ்க்கையில் ஒரு பிடிப்பை ஏற்படுத்துவதற்காக அவற்றையெல்லாம் செய்வது அல்லது செய்யாமல் இருப்பதால் ஏற்படும் விளைவுகள் பற்றிய இனிமையான மற்றும் பயங்கரமான வர்ணனைகள் தர்மநூல்களில் எல்லாம் நிரம்பிக் கிடக்கின்றன. கர்ம காண்டங்களின் இந்தப் பரம்பரையையே மக்கள் அனைவரும் தர்மம் என்று எண்ணிக் கொள்கின்றனர். வாழ்க்கையை நிர்வகிக்கின்ற வாழும் கலைக்காகவென்று நிர்மாணிக்கப்படுகின்ற இந்தப் பூஜை விதிமுறைகள் எல்லாமே தேசம் – காலம் மற்றும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப மாற்றத்திற்கு உட்படுவதென்பது இயல்பான ஒன்றுதான். தர்மத்தின் பெயரால் சமுதாயத்தில் நிலவுகின்ற கலகங்களுக்கு எல்லாம் இதுமட்டுமே காரணமாகும். கீதை இந்தக் கணநேரத்தில் தோன்றி மறைகின்ற அமைப்புகளில் இருந்தெல்லாம் மேலே உயர்ந்து எழும்பி ஆன்மீக முழுமையில் நம்மை நிலைபெறச் செய்கின்ற செயல்முறை ஒழுக்கவியல் ஆகத் திகழ்கிறது. கீதையின் ஒரு சுலோகம்கூட சராசரி உலகியல் வாழ்க்கையைப் பற்றி விளக்கிக் கொண்டிருக்கவில்லை. இதனுடைய ஒவ்வொரு சுலோகமும் உங்களிடம் அகம் சார்ந்த யுத்தம் அதாவது ஆராதனையை மேற்கொள்ள வேண்டுகிறது. மேற்குறிப்பிட்டுள்ள பல்வேறு தர்ம நூல்களைப் போன்று உங்களை சொர்க்கம் அல்லது நரகம் போன்ற சிக்கல்களில் மாட்டிவிடுவதில்லை. மாறாக, எதற்குப் பின்னால் பிறப்பு, இறப்பு ஆகிய பந்தம் இருப்பதில்லையோ அந்த அழியாத அமரத்துவ நிலையை அடையச் செய்கிறது.

ஒவ்வொரு மஹாபுருஷருக்கும் தங்களுக்கென்று ஒரு தனிநடை மற்றும் சில தனிப்பட்ட சொற்பிரயோகங்களும் உண்டு. யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூட கீதையில் ‘கர்மம்’, வேள்வி (யக்ஞம்), ‘வர்ணம்’, ‘வர்ணக்கலப்பு’, ‘யுத்தம்’ ‘க்ஷேத்திரம்’, ‘ஞானம்’, முதலான சொற்களை மீண்டும் மீண்டும் வலியுறுத்திக்

கூறியுள்ளார். இந்தச் சொற்கள் அனைத்திற்கும் தனிப்பட்ட பொருள் உண்டு, மேலும் அவற்றைத் திரும்பத் திரும்பப் பயன்படுத்தும்போது தனியொரு அழகுடன் திகழ்கிறது. இந்தி மொழி மற்றும் இந்த உரையின் தமிழாக்கத்திலும் இந்தச் சொற்களின் பொருள் சிதைவுறாமல் அப்படியே கையாளப்பட்டுள்ளன. மற்றும் தேவைப்படும் இடங்களில் எல்லாம் அவற்றிற்கான விரிவான விளக்கவுரையும் தரப்பட்டுள்ளது. கீதையின் கவர்ச்சியை வெறும் சொற்களால் மட்டும் வர்ணித்துவிட முடியாது. ஆனால் அது என்ன சொல்ல விரும்புகிறது என்பதோ இன்றைய சமுதாயத்தில் மறைந்து போய்விட்ட ஒன்றாகும். அதை உள்ளது உள்ளபடியாக இந்த யதார்த்த கீதையில் நீங்கள் காணலாம்.

1. **ஸ்ரீ கிருஷ்ணர்** – ஒரு யோகேஷ்வரர் ஆவார்.

2. **ஸத்தியம் (உண்மை)** – ஆன்மாவே உண்மையானது ஆகும்.

3. **சநாதனம்** – ஆன்மாவே சநாதனம் ; பரமாத்மாவே சநாதனம் ஆகும் (அனாதியானது)

4. **சநாதன தர்மம்** – பரமாத்மாவுடன் இணைத்து வைக்கின்ற ஆன்மீகக் கிரியை (செயல் முறை) ஆகும்.

5. **யுத்தம்** – தெய்வீக மற்றும் அசுர குணங்களுக்கு இடையில் நடைபெறும் போரே ‘யுத்தம்’ ஆகும். இவை உள் மனத்தின் இரு மனப்பான்மைகளாகும். இவையிரண்டும் அழிந்து விடுவதே இதன் விளைவாகும்.

6. **யுத்த ஸ்தலம்** – இந்த மனித உடல் மற்றும் மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களின் சமூகமே யுத்த ஸ்தலம் ஆகும்.

7. **ஞானம்** – பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதே ஞானம் எனப்படும்.

8. **யோகம்** – உலகியல் சேர்க்கை – பிரிவு ஆகியவற்றில் இருந்து விடுபட்டு, புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட பிரம்மத்தில் ஒன்றிணைவதற்குப் பெயரே ‘யோகம்’ ஆகும்

9. **ஞானயோகம்** – ஆராதனையே கர்மம் ஆகும். தன்னை மட்டுமே முழுமையாக நம்பி, கர்மத்தில் ஈடுபடுவதே ஞான யோகம் எனப்படும்.

10. **நிஷ்காம கர்மயோகம் (பற்றற்ற)** – இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவை மட்டுமே முழுமையாக நம்பி, சமர்ப்பண உணர்வுடன் இந்தக் கர்மத்தில் ஈடுபடுவதே ‘நிஷ்காம கர்ம யோகம்’ எனப்படும்.

11. **ஸ்ரீகிருஷ்ணர் எந்த உண்மையை எடுத்துரைத்தார்?**
தத்துவ தரிசிகளால் ஏற்கனவே காணப்பட்டதும் மற்றும் இனிமேல் காணப்போகின்ற அதே உண்மையையே ஸ்ரீ கிருஷ்ணர் எடுத்துரைத்தார்.

12. **வேள்வி** – ஆன்மீக சாதனையின் சிறப்பான விதிமுறைகளுக்குப் பெயரே 'வேள்வி' எனப்படும்

13. **கர்மம்** – அந்த வேள்வியைச் செயல்முறைப்படுத்துவதற்குப் பெயரே 'கர்மம்' ஆகும்.

14. **வர்ணம்** – ஆராதனையின் ஒரே சிறப்பான விதிமுறைக்குப் பெயரே கர்மம் ஆகும். அந்தக் கர்மத்தையே நான்கு வகுப்புகளாகப் பிரித்து ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டுள்ளது. இதுவே நான்கு வர்ணங்கள் ஆகும். இது ஒரே ஆன்மீக சாதகனின் உயர்ந்த தாழ்ந்த நிலைகளாகுமே தவிர, வேறு எந்தவொரு சாதியையும் குறிப்பிடுவன அல்ல.

15. **வர்ண ஸங்கரம்** (வர்ணக் கலப்பு) பரமாத்மாவின் பாதையில் இருந்து வழிதவறிப் போவது, சாதனையில் மனக் குழப்பத்திற்கு (பிரமை) உள்ளாவதே 'வர்ண ஸங்கரம்' (வர்ணக்கலப்பு) எனப்படும்.

16. **மனிதனின் வகைகள்** – உள் மனத்தின் இயல்பின் பிரகாரம் மனிதர்கள் இரண்டு வகைப்படுவர். 'தேவதைகள்' ஒருவகை; 'அசுரர்' இரண்டாம் வகை. உள்மனத்தின் சுபாவத்தின் மூலமாக நிர்ணயிக்கப்பட்ட இவை மட்டுமே மனிதருள் இரண்டு சாதிகள் ஆகும். மேலும் இந்த சுபாவங்கள் ஒரே மனிதரிடம் கூடிக்கொண்டும் குறைந்து கொண்டுமிருக்கும்.

17. **தேவதை** – இதய தேசத்தில் பரம தெய்வமாகிய பரமாத்மாவின் தெய்வத்துவத்தை அதிகரிக்கச் செய்கின்ற உயர் ஆன்மீக குணங்களின் சமூகம் ஆகும். இது தவிர, வெளியுலகில் 'தேவதைகள்' என்ற பெயரில் நிலவிவருகின்ற பல்வேறுவிதமான பூஜை விதிமுறைகள் எல்லாம் மூட அறிவின் விளைவாகும்.

18. **அவதாரம்** – அனுராகம் (இறைப்பற்று) நிறைந்த அன்பரின் இதயத்தில் நிகழ்கிறது, வெளியில் அன்று.

19. **விராட தரிசனம்** – யோகியின் இதயத்தில் இறைவனின் மூலமாக அளிக்கப்படுகின்ற ஆன்மீக அனுபூதி ஆகும். பகவான் சாதகனின் இதயத்தில் எழுந்தருளி தெய்வீகப் பார்வையை அளிக்கும் போது மட்டுமே இதைக் காண முடியும்.

**20. இஷ்ட தெய்வமாகிய ஸத்குரு ஒருவரே வழிபடத் தகுந்த தெய்வம்**

அனைத்தையும் விட மேலான பிரம்மம் ஒன்றே வழிபடத் தகுந்த தெய்வம் ஆகும். அவரைத் தேட வேண்டிய இடம் இதய தேசம் ஆகும். அவரைப் பெறுவதற்கான ஒரே வழிவகை, புலன் உணர்வு கடந்த பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலை பெற்றுள்ள இறைநிலையை அடையப்பெற்ற மஹாபுருஷர் மூலமாக மட்டுமே ஆகும்.

இனிமேல், இவற்றில் இருந்து ஸ்ரீகிருஷ்ணர் என்பவர் யார்? அவர்தம் உண்மை உருவம் யாது? என்பதை அறிந்து கொள்வதற்காக மூன்றாவது அத்தியாயம் வரை நீங்கள் படிக்க வேண்டியதிருக்கும். மேலும், பதின்மூன்றாம் அத்தியாயம்வரை படித்து விட்டால், ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார் என்பதை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்வீர்கள். இரண்டாவது அத்தியாயத்தில் இருந்தே எது (ஸத்தியம்) உண்மை? என்பது தெளிவாக ஆரம்பித்து விடும். ஸநாதனம் மற்றும் உண்மை ஆகிய இரண்டு சொற்களுமே ஒன்றையொன்று நிறைவு செய்கின்றன. இது இரண்டாவது அத்தியாயத்தில் இருந்தே தெளிவாக ஆரம்பித்து, அப்படியே முடிவுவரைப் போய்க் கொண்டே இருக்கும். 'யுத்தம்' என்பது நான்காவது அத்தியாயம் வரைக்குள்ளாகவே தெளிவு பெற்று, பதினோராவது அத்தியாயம் வந்ததும் அதுபற்றிய அனைத்து சந்தேகங்களும் ஆணிவேருடன் களைந்தெறியப்பட்டு விடும். அவ்வாறே பதினாறாவது அத்தியாயம் வரைக்கும் பார்த்துக் கொண்டே செல்ல வேண்டும். 'யுத்த ஸ்தலம்' (ஸ்தானம்) பற்றி அறிந்து கொள்ள பதின்மூன்றாவது அத்தியாயம் திரும்பத் திரும்பப் பார்க்கப்பட வேண்டும்.

'ஞானம்' என்பது நான்காவது அத்தியாயத்தில் தெளிவு பெறும். மற்றும் பதின்மூன்றாவது அத்தியாயத்தில், 'இறைவனை நேரடியாக தரிசனம், செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம்' என்பது மிகவும் நல்லபடியாகப் புரிந்து போய்விடும். 'யோகம்' என்பது ஆறாவது அத்தியாயத்திற்குள்ளாகவே உங்களுக்குப் புரிந்து விடும். அவ்வாறே கீதையின் முடிவுப் பகுதி வரைக்கும் யோகத்தின் பல்வேறு அம்சங்கள் பற்றிய விளக்கவுரை இடம் பெற்றுள்ளன. 'ஞான யோகம்' என்பது மூன்றாவது அத்தியாயத்தில் இருந்து ஆறாவது அத்தியாயத்திற்குள்ளாகவே தெளிவுபடுத்தப்பட்டு விடும். அதற்கு மேலும் பார்ப்பதற்கு பெரிதாக எந்தவொரு அவசியமும் இல்லைதான். நிஷ்காம (பற்றற்ற) கர்மயோகம் இரண்டாவது அத்தியாயத்தில் இருந்து கடைசி அத்தியாயம் வரை விளக்கப்பட்டுள்ளது. 'வேள்வி' யைப் பற்றி அறிந்து கொள்ள நீங்கள் மூன்றாவது அத்தியாயத்தில் இருந்து நான்காவது அத்தியாயம் வரைக்கும் படித்தால் போதும், தெளிவாகப் புரிந்து விடும்.

'கர்மம்' என்ற சொல்லை அத்தியாயம் 2/39–ல் முதன்முறையாகப் பயன்படுத்தப்பட்டு உள்ளது. இந்த சுலோகத்தில் இருந்து நான்காவது அத்தியாயம்வரைப் படித்தாலே போதும் கர்மம் என்பதன் பொருள் இறை ஆராதனை, வழிபாடு (பஜனை) என்று சொல்லப்படுவது ஏன்? என்பது தெளிவாகப் புரிந்து விடும். 16 மற்றும் 17 ஆவது அத்தியாயங்கள் இதுவே உண்மை என்ற எண்ணத்தை உறுதி செய்து விடுகின்றன. 'வர்ண ஸங்கர்' (வர்ணக் கலப்பு) மூன்றாவது அத்தியாயத்திலும் 'அவதாரம்' நான்காவது அத்தியாயத்திலும் தெளிவு பெற்றுவிடும். வர்ண அமைப்பு பற்றி அறிந்து கொள்ள பதினெட்டாவது அத்தியாயத்தைப் பார்க்க வேண்டும். இதைப் பற்றிய குறிப்புகள் மூன்றாவது, நான்காவது அத்தியாயங்களிலும் காணக் கிடைக்கின்றன. மனிதர்களின் தெய்வீக மற்றும் அசுர இயல்பை அடிப்படையாகக் கொண்ட இரண்டு ஜாதிகள் பற்றி அறிய பதினாறாவது அத்தியாயத்தை நோக்கவும். 'விராட் தரிசனம்' பத்தாவது அத்தியாயத்தில் இருந்து பதினோறாவது அத்தியாயத்திற்குள்ளாகவே தெளிவாகப் புரிந்து விடும். ஏழாவது, ஒன்பதாவது, மற்றும் பதினைந்தாவது அத்தியாயங்களிலும் இதுபற்றி வெளிச்சம் பரப்பப்பட்டு உள்ளது. ஏழு, ஒன்பது, மற்றும் பதினேழாவது அத்தியாயத்தில் 'தேவதைகளின் நிலையற்றதன்மை' தெளிவாகி விடுகிறது. பரமாத்மாவை வழிபடும் இடம் இதய தேசம் மற்றும் அங்கே செய்யப்படுகின்ற தியானம், உள்மூச்சு – வெளிமூச்சில் ஆன்ம சிந்தனையை மேற்கொள்தல் முதலான கிரியைகள், ஏகாந்தமான இடங்களில் வாழ்ந்து கொண்டு நிறைவேற்றப்படுகின்ற ஆன்மீக சாதனைகள் (கோயில்கள், சிலைகளுக்கு அருகில் அமர்ந்து கொண்டு அல்ல.) ஆகியவை அனைத்தும் மூன்று, நான்கு, ஆறு மற்றும் பதினெட்டாவது அத்தியாயங்களில் தெளிவாக விளக்கப்பட்டு உள்ளன. நிறைய யோசிப்பதாலும், சிந்திப்பதாலும் என்ன பயன்? ஒருவேளை ஆறாவது அத்தியாயம் வரைக்கும் படித்து விட்டாலே போதும், 'யதார்த்த கீதையின்' அடிப்படை நோக்கம் உங்களுக்குப் புரிந்து விடும்.

கீதை வெறும் அன்றாட வாழ்க்கைப் போராட்டத்திற்கான சாதனம் அன்று, அதையும் விட, அந்த வாழ்க்கைப் போராட்டத்தில் என்றும் நிலையான வெற்றியை அடைவதற்கான செயல்முறைப் பயிற்சி நூலாகும். எனவேதான், உண்மையான நிரந்தரமான வெற்றியைப் பெற்று தருகின்ற காரணத்தால் இதனை 'யுத்த நூல்' என்றழைக்கிறார்கள். ஆனால், கீதையில் கூறப்பட்டு உள்ள யுத்தமோ வாள், வில், அம்பு, கதாயுதம் மற்றும் கோடாரி ஆகியவற்றைப் பிரயோகித்துச் செய்கின்ற உலகியல் யுத்தம் அன்று. மேலும், அத்தகைய போர்களில் நிலையான வெற்றி என்பதும் கிடையாது. இது உண்மை (ஸத்) மற்றும் உண்மையற்றது (அஸத்) எனும் இரு எண்ணவோட்டங்களுக்கு இடையில் நடைபெறும் மோதலாகும். இவற்றை உருவகப்படுத்தி வர்ணிக்கின்ற பரம்பரை இருந்தே வந்துள்ளது.

வேதத்தில் இந்திரன் மற்றும், விருத்திரன்; வித்யா மற்றும் அவித்யா; புராணங்களில் தேவாசுர யுத்தம்; மகாகாவியங்களில் இராமர் மற்றும் இராவணன், கௌரவர் மற்றும் பாண்டவர் ஆகியோருக்கு இடையில் நடைபெற்ற யுத்தத்தையேதான் கீதையில் தர்ம க்ஷேத்திரம் மற்றும் குருக்ஷேத்திரம்; தெய்வீக குணங்கள் மற்றும் அசுர குணங்கள்; ஒருமுகப்பட்ட எண்ணவோட்டம் மற்றும் முரண்பாடான எண்ணவோட்டம்; நற்குணம் மற்றும் தீயகுணம் ஆகியவற்றிற்கு இடையிலான மோதல் என்று விளக்கப்பட்டு உள்ளது.

இந்த மோதல் எங்கே நடைபெறுகிறதோ அந்த இடம் எது? கீதையில் கூறப்பட்டுள்ள தர்மக்ஷேத்திரம் மற்றும் குருக்ஷேத்திரம் இந்தியாவில் உள்ள எந்த நிலப்பகுதியையும் குறிப்பதல்ல. மாறாக கீதை ஆசிரியரின் நேரடியான வார்த்தைகளில் **'இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே'** – குந்தியின் மகனே! இந்த உடலே ஒரு க்ஷேத்திரம் ஆகும். இதில் விதைக்கப்படுகின்ற நல்ல மற்றும் தீய எண்ணங்கள் என்னும் விதைகளே சம்ஸ்காரங்கள் என்னும் வடிவத்தில் எப்போதும் முளைக்கின்றன. பத்து புலன்கள், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், ஐந்துவிகாரங்கள் மற்றும் மூன்று குணங்கள் ஆகிய விகாரங்களை உள்ளடக்கியதே இந்த க்ஷேத்திரத்தின் விரிவாகும். பிரகிருதியில் இருந்து தோன்றிய இந்த மூன்று குணங்களால் உந்தப்பட்டு மனிதர்கள் கர்மத்தில் ஈடுபட வேண்டியிருக்கிறது. அவனால் கணப்பொழுதுகூட கர்மம் செய்யாமல் இருக்க முடிவதில்லை. **"புனரபி ஜனனம் புனரபி மரணம் புனரபி ஜனனீ ஜடரே சயனம்"** பிறவிகள் தோறும் எதையெல்லாமோ செய்து கொண்டேதான் கழிகிறது. இதுவே குருக்ஷேத்திரம் ஆகும். சத்குருவின் மூலமாக சாதனையின் சரியான விதிமுறையைப் பற்றிக் கொண்டு சாதகன் எப்பொழுது பரம தர்ம பரமாத்மாவை நோக்கித் தீவிரமாக முன்னேற ஆரம்பிக்கிறானோ, அப்போதிருந்துதான் இந்த க்ஷேத்திரம் தர்ம க்ஷேத்திரமாக மாறுகிறது. இந்த உடல்தான் க்ஷேத்திரம் எனப்படுகிறது.

இதே உடலின் அகத்தில், அடியாழத்தில் அந்தகரணத்தில் இரண்டு விதமான எண்ணவோட்டங்கள் எப்போதும் இருந்தே வருகின்றன. அவைகள் முறையே தெய்வீககுணங்கள் மற்றும் அசுர குணங்கள் எனப்படும், தெய்வீக குணங்களில் வருவது – புண்ணியத்தின் உருவகமான பாண்டு மற்றும் கடமையுணர்வின் உருவகமான குந்தி, புண்ணியம் விழிப்புறுவதற்கு முன், மனிதன் எதையெல்லாம் கடமை என்று எண்ணிச் செய்கிறானோ, அவனுக்குத் தெரிந்தவரையில் அவன் என்னவோ தனது கடமையைத்தான் செய்கிறான். ஆனால் அது கடமை என்று ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

ஏனெனில், புண்ணியம் இல்லாமல் கடமையைப் புரிந்து கொள்ளவே முடியாது. குந்தியானவள் பாண்டுவைத் திருமணம் செய்து கொள்வதற்கு முன் எதையெல்லாம் சேகரித்து வைத்திருந்தாளோ அதுவே கர்ணன். அவன் வாழ்நாள் முழுவதும் குந்தியின் புத்திரர்களுடன் சண்டை போட்டுக் கொண்டே இருந்தான். பாண்டவர்களுக்கு எளிதில் வெல்ல முடியாத பலம் பொருந்திய எதிரி என்று ஒருவன் இருந்தான் என்றால் அவன்தான் கர்ணன். முரண்பாடான கர்மமே கர்ணன் எனப்படுகிறது. அதுவே பந்தத்திற்குக் காரணமாக அமைகிறது. இதில் பரம்பரை வழியாகக் கடைபிடித்து வரப்படுகின்ற மூடப்பழக்க வழக்கங்களைப் பற்றிய விளக்கம் வருகிறது. அத்தகைய பல்வேறு பூஜை விதிமுறைகள் நம்மை விட்டு விலகுவதில்லை. புண்ணியம் விழிப்புற்றபிறகு தர்மத்தின் உருவமான 'யுதிஷ்டிரர்', அனுராகத்தின் உருவமான 'அர்ஜுனன்', உணர்ச்சியின் உருவமான 'பீமன்,' நியமத்தின் உருவமான 'நகுலன்', ஸத்ஸங்கத்தின் (நன்மக்கள்) உருவமான 'ஸஹதேவன்', ஸாத்வீகத்தின் உருவமான 'ஸாத்யகீ', உடல் கட்டுப்பாட்டின் உருவமான 'காசிராஜன்', கடமையின் மூலமாக உலகையே வெல்லவல்ல 'குந்தி போஜன்' முதலான இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவை நோக்கிச் செல்கின்ற எண்ணவோட்டங்கள் மனத்தில் பெருகத் தொடங்குகின்றன. அவற்றின் எண்ணிக்கை மொத்தம் ஏழு அக்குரோணி (அக்செளஹிணி) ஆகும். 'அக்ஷ' என்றால் 'பார்வை' என்று பொருள். சத்தியமயமான கண்ணோட்டத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பவை எவையோ, அவையே தெய்வீகக் குணங்கள் எனப்படும். பரமதர்ம பரமாத்மா வரைக்கும் நம்மைக் கொண்டு போய்ச் சேர்க்கவல்ல இந்த ஏழு சாதனைப்படிகள்தான் 'ஏழு வரம்புநிலைகள்' எனப்படுகிறதே தவிர, வேறு ஏதோ எண்ணிக்கை விபரம் இல்லை. உண்மையில் இந்த எண்ணவோட்டங்கள் கணக்கில் அடங்காதவை. இவை அனைத்துமே தெய்வீகச் செல்வம் எனப்படுகிறது.

மற்றொன்று குருக்ஷேத்திரம் எனப்படுகிறது. இதில் பத்துப் புலன்கள் மற்றும் ஒரு மனம் ஆகியவை சேர்த்து மொத்தம் பதினோரு அக்குரோணி (அக்செளஹிணி) சேனை உள்ளது. மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்கள் வரையில் மட்டும் அமைகின்ற கண்ணோட்டம் அசுர குணங்கள் எனப்படுகிறது. இதில் அஞ்ஞானத்தின் உருவகமான திருதராஷ்டிரர், அதாவது எது உண்மை? என்பதை அறிந்து இருந்தபிறகும்கூட பிறவிக் குருடராக வாழ்ந்து வருகிறார். அவருக்கு உறுதுணையாகச் செயல்படுபவர் காந்தாரி அதாவது, புலனறிவை ஆதாரமாகக் கொண்டு செயல்படும் எண்ணவோட்டத்தின் உருவகம் ஆவார். இவர்களுடன் சேர்த்து, மோகத்தின் உருவகமான துரியோதனன், தீய அறிவின் உருவகமான துச்சாதனன், முரண்பாடான கர்மத்தின் உருவமான கர்ணன், பிரமையின் உருவமான பீஷ்மர், த்வைதம் (நாம் வேறு; இறைவன் வேறு என்ற

வேற்றுமையுணர்வு நிலை) என்ற நிலையை அனுசரிக்கின்றதின் உருவமான துரோணாச்சாரியர், உலகியல் பற்றுணர்வின் உருவமான அஸ்வத்தாமன், விகல்பத்தின் (உறுதியற்ற நிலைப்பாடு) உருவமான விகர்ணன், ஆன்மீக சாதனை அரைகுறையான நிலையில் இருக்கும்போது கிருபை புரிதலை அனுசரிப்பதன் உருவமான கிருபாச்சாரியர் மற்றும் இவர்கள் அனைவருக்கும் மத்தியில் ஜீவாத்மாவின் உருவமான விதுரர் வாழ்ந்து வருகிறார். இவர் அஞ்ஞானத்தின் பக்கத்திலேயே வாழ்ந்து வந்தாலும், அவரது பார்வை மட்டும் எப்போதுமே பாண்டவர் மீதே இருக்கிறது; புண்ணியம் நிறைந்த எண்ணங்களின் மீதுதான் உள்ளது. ஏனெனில் ஆத்மா, பரமாத்மாவின் தூய்மையான அம்சம் ஆகும். இந்த வகையில் அசுர குணங்களும் எண்ணிக்கையில் அடங்காதவை. க்ஷேத்திரம் ஒன்றுதான் – அதுவே இந்த சரீரம் ஆகும். இதில் மோதுகின்ற எண்ணவோட்டங்கள் இருவகைப்படும். ஒருவகை, பிரகிருதி அல்லது இந்தப் படைப்பில் நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. தாழ்ந்த மற்றும் கீழான பிறவிகளுக்குக் காரணமாக அமைகின்றது. மற்றொரு வகை, பரம புருஷராகிய பரமாத்மாவிடம் நம்பிக்கையை ஏற்படுத்துகின்றது. மற்றும் அவருக்குள் நுழைவு பெற்றுத் தருகின்றது. தத்துவதரிசி மஹாபுருஷரின் சரண சான்னித்தியத்தில் இருந்து கொண்டு ஆன்மீக சாதனையை வரிசைக்கிரமமாகச் செய்து வரும்போது தெய்வீகச் செல்வங்கள் அதாவது தெய்வீக குணங்கள் படிப்படியாகப் பெருகத் தொடங்குகின்றன. மற்றும் அசுரச் செல்வங்கள் அதாவது அசுர குணங்கள் முழுவதுமாக அழிகின்றன. எப்பொழுது எந்தவொரு தீயஎண்ணமும் (விகாரம்) இல்லாமல் போகிறதோ, மனம் முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு, அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக் கலந்து மறைந்து விடுகிறதோ, அப்பொழுது இந்த தெய்வீகச் செல்வங்களின் அவசியமும் முடிவடைந்து விடுகிறது. அர்ஜுனன், கௌரவர் படையினரைத் தொடர்ந்து பாண்டவர் படையினரும்கூட யோகேஷ்வரருக்குள் சென்று மறைவதைக் கண்டான். சாதனை முழுமை பெறுவதுடன் சேர்த்தே, இந்த தெய்வீக குணங்களும் இறைவனில் ஒன்று கலந்து மறைந்து விடுகின்றன. அத்துடன் இறுதியான, நிலையான பரிணாமம் (விளைவு) வெளிப்படுகிறது. இதற்குப் பிறகு, மஹாபுருஷர் ஒருவேளை எதையாவது செய்தாரேயானால், தம்மைப் பின்பற்றுபவர்களுக்கு ஆன்மீக அறிவைப் புகட்டுவதற்காக மட்டுமே ஆகும்.

உலக ஒற்றுமை (லோக சங்க்ரஹம்) என்ற கருத்தினை மனத்தில் கொண்டு மஹாபுருஷர்கள் நுட்பமான அகவியல்பு உணர்வுகளை வலியுறுத்தும் விதமாக, அவற்றிற்கு எல்லாம் ஸ்தூல உருவம் தந்து வர்ணனை செய்துள்ளனர். கீதை ஒரு சந்தப்பாடலாகும். இலக்கண விதிமுறைக்குள் அடங்கிய ஒன்றுதான். ஆனால் இதில் இடம் பெற்றிருக்கும் கதாபாத்திரங்கள் அனைத்தும் உருவகங்கள்

ஆகும். எந்தவொரு குறிப்பிட்ட உருவமும் அற்ற அகம் சார்ந்த குணாதிசயங்களுக்கு உருவம் அளிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது, அவ்வளவுதான், கீதையின் ஆரம்பத்தில் முப்பது நாற்பது கதாபாத்திரங்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டு உள்ளது. அவற்றில் பாதி ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்கள், (ஸஜாதீயம்) மீதியுள்ளவை அனைத்தும் முரண்பாடான எண்ணவோட்டங்கள் (விஜாதீயம்) ஆகும். கொஞ்சம் பாண்டவர் பக்கத்தைச் சேர்ந்தவை, கொஞ்சம் கௌரவர் பக்கத்தைச் சேர்ந்தவை. 'விஸ்வரூப தரிசன' சமயத்தில் இவற்றில் இருந்து நான்கு – ஆறு பேர்களுடைய பெயர்கள் மீண்டும் இடம் பெற்றுள்ளன. இதைத் தவிர, கீதை முழுவதும் இந்தப் பெயர்களைப் பற்றி எங்கேயும் விவாதிக்கப்படவில்லை. ஆனால், அர்ஜுனன் என்ற ஒரேயொரு பாத்திரம் மட்டும்தான் ஆரம்பத்தில் இருந்து முடிவுவரை யோகேஷ்வரருக்கு முன்னால் இருக்கிறான். அந்த அர்ஜுனன் என்பதும் கூட ஆன்மீகக் குண இயல்பின் பெயரே தவிர, எந்தவொரு தனிநபரையும் குறிப்பதன்று. கீதையின் ஆரம்பத்தில் அர்ஜுனன் என்றும் நிலையான குலதர்மத்திற்காக மிகவும் வேதனைப்படுகிறான். ஆனால், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரோ அதனை அஞ்ஞானம் என்று கூறியதுடன் மட்டுமின்றி, 'ஆன்மாவே என்றும் நிலையானது; இந்த உடல் அழியக்கூடியது. எனவே, யுத்தம் செய்' என்று அறிவுறுத்துகிறார். இந்தக் கட்டளை, 'அர்ஜுனன் கௌரவர்களைக் கொல்ல வேண்டும்' என்பதற்காகக் கொடுக்கப்பட்டுள்ளதுபோல் தோன்றவில்லை. பாண்டவர் பக்கத்திலும் உடல் தரித்தவர்கள்தானே நின்று கொண்டு இருந்தனர். இருபிரிவினருமே நெருங்கிய உறவினர்களும் கூட. சம்ஸ்காரங்களை ஆதாரமாகக் கொண்டிருக்கும் இந்த உடல் வாள் கொண்டு வெட்டப்பட்டுவிட்டால் மட்டும் அழிந்து போய்விடுமா என்ன? எப்பொழுது இந்த உடல் என்பதே அழியக்கூடியது, அதற்கு நிலைத்தன்மை என்று ஒன்றும் கிடையாது என்றாகிவிட்டதோ அப்பொழுது இந்த அர்ஜுனன் என்பதுதான் யார்? ஸ்ரீகிருஷ்ணர் யாரைப் பாதுகாப்பதற்காக முனைந்து கொண்டு இருக்கிறார்? அவர் உடல் தரித்த யாரோ ஒரு தனிமனிதனைக் காப்பாற்றுவதற்காக நின்று கொண்டிருக்கிறாரா என்ன? ஸ்ரீகிருஷ்ணரே, "எவனொருவன் இந்த உடலைப் பேணிக் காப்பதற்காக உழைக்கிறானோ, அந்தப் பாவியும் மூட அறிவும் உடைய மனிதன் வீணாகவே வாழ்கிறான்" என்றல்லவா கூறுகிறார். ஒருவேளை ஸ்ரீகிருஷ்ணர் ஏதேனும் ஒரு உடல் தரித்த மனிதனைக் காப்பாற்றுவதற்காக முனைந்து கொண்டிருக்கிறார் என்றால், 'அவரும்கூட மூட அறிவினர்; வீணாகவே வாழ்கிறார்' என்றுதானே ஆகிறது. உண்மையில், அனுராகமே (இறைப்பற்றே) அர்ஜுனன் எனப்படுகிறது.

அனுராகிக்காக மஹாபுருஷர் எப்போதும் உதவுவதற்குத் தயாராக

இருக்கிறார். அர்ஜுனன் ஒரு சிஷ்யனாவான்; ஸ்ரீகிருஷ்ணர் ஒரு ஸத்குரு ஆவார். அர்ஜுனன் பணிவுடன், 'தர்மத்தின் பாதையில் மோகவசப்பட்டிருக்கும் மனநிலையில் இருக்கும் நான் எது உயர்வானதோ (ச்ரேயஸ்) பரம நன்மையைத் தருவது எதுவோ அதற்கான உபதேசத்தை எனக்காகக் கூறுங்கள்" என்று வேண்டினான். அர்ஜுனன் உயர்ந்ததை (ச்ரேயஸ்) விரும்பினான்; உலகியலை (ப்ரேயஸ்) அல்ல. 'வெறுமனே சொன்னால் மட்டும் போதாது, எனக்குத் துணையாக இருங்கள்; என்னைக் காத்தருளுங்கள். நான் உங்களுடைய சிஷ்யன்; உங்களைச் சரணமடைந்தவன்' என்றும் அவன் வேண்டுகிறான். இந்த முறையில் அர்ஜுனன் ஒரு மனத்துயரத்தைப் போக்கிக் கொள்ள ஆசைப்படுகின்ற (ஆர்த்த அதிகாரி) ஆன்மீக சாதகன் என்பதும், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஒரு ஸத்குரு என்பதும் கீதையில் பல்வேறு இடங்களில் தெள்ளத் தெளிவாக விளக்கப்பட்டு உள்ளது. அந்த ஸத்குருவானவர் அனுராகிக்குத் துணையாக எப்போதும் இருந்து கொண்டு அவனை ஆன்மீகப் பாதையில் வழிநடத்திச் செல்கிறார்.

சிலசமயங்களில் பக்தர்கள் சிலர் உணர்ச்சி வசப்பட்டு 'பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ்' அவர்களிடம் அவருடனேயே ஆசிரமத்தில் தங்கி வாழ விரும்புவதாகக் கூறுவார்கள் அப்பொழுதெல்லாம் அவர் பின்வருமாறு கூறுவார்: "போ! உடலால் எங்கே வேண்டுமானால் இரு! மனத்தால் என்னிடம் வந்து கொண்டே இரு! தினந்தோறும் காலையும் மாலையும் 'ராம், சிவ, ஓம்' – இது போன்ற இரண்டு இரண்டரை எழுத்துகளுக்குள் அடங்கிய திருமந்திரங்களில் உனக்குப் பிடித்த ஏதேனும் ஒன்றை மட்டும் தேர்ந்தெடுத்து அதனை ஜபம் செய் மற்றும் என்னுடைய திருவுருவத்தை இதயத்தில் தியானம் செய்து வா. என்னுடைய திருவுருவத்தை ஒரு நிமிடம் உன்னால் பிடிக்க முடிந்தால் போதும். அதற்குப் பெயர்தான் பஜனை (வழிபாடு) ஆகும். அதை நான் உனக்குத் தருவேன். இதைவிட இன்னும் அதிகமாக உன்னால் என்னுடைய திருவுருவத்தைப் பிடிக்க முடிந்து விட்டாலோ, உனது இதயத்தில் எழுந்தருளி சாரதியாக எப்போதும் உன்னுடனேயே இருப்பேன்." எப்பொழுது மனத்தின் கவனப் பார்வை (ஸுரத்) பிடிக்குள் வந்து விடுகிறதோ, அதற்குப்பிறகு, மஹாபுருஷர், நம்முடைய கை,கால், மூக்கு, காது முதலான உடல் உறுப்புகள் எவ்வளவு சமீபமாக இருக்கிறதோ, அவ்வளவு நெருக்கமாக நமக்கு அருகில் இருப்பதை உணர முடியும். நீங்கள் ஆயிரம் கிலோமீட்டர் தூரம் வேண்டுமானால் போய்விடுங்களேன். அப்போதும்கூட அவர்கள் சமீபமாகவே இருக்கின்றனர். மனத்தில் இருந்து எண்ணங்கள் எழுவதற்கு முன்பாகவே அவர்கள் அதைப் பற்றி உணர்த்தியருளி உங்களை ஆன்மீகப்பாதையில் வழிநடத்திச் செல்கின்றனர். அனுராகியின் இதயத்தில் அந்த மஹாபுருஷர் எப்போதும் ஆன்மாவில் இரண்டற கலந்து நின்று விழிப்புடன் நிற்கிறார். அர்ஜுனன் அனுராகத்தின் உருவகம் ஆவான்.

கீதையின் பதினோராவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் தெய்வீக மஹிமைகளைக் கண்டபிறகு அர்ஜுனன் தன்னுடைய சின்னஞ்சிறிய தவறுகளுக்கும்கூட மன்னிப்புக் கேட்கலானான்.

ஸ்ரீகிருஷ்ணரும் அவனை மன்னித்தார். அத்துடன் அவனுடைய வேண்டுதலையும் ஏற்றுக் கொண்டு அவர் அமைதியும் இனிமையும் நிறைந்த வடிவை அடைந்து," அர்ஜுனா! என்னுடைய இந்த ஸ்வரூபத்தை இதற்கு முன்பும் எவரும் கண்டதில்லை. மேலும், எதிர்காலத்திலும் எவரும் காணப்போவதும் இல்லை." என்று கூறினார். அப்படியென்றால் கீதையால் நம்மைப் போன்றவர்களுக்கு எந்தப் பயனும் இல்லை. ஏனெனில், அந்த தெய்வீக தரிசனத்தைப் பெறுவதற்கான தகுதி அர்ஜுனன் வரை மட்டும்தான் உள்ளது. ஆனால், அதே சமயம் சஞ்ஜயனும் இந்த தெய்வீக தரிசனத்தைக் கண்டிருக்கிறான். ஸ்ரீகிருஷ்ணரும் ஏற்கனவே, "பெரும்பாலான யோகிகள் ஞானம் என்னும் தவத்தால் புனிதமடைந்து எனது உண்மையான ஸ்வரூபத்தை அடைந்துள்ளனர்" என்று சொல்லியிருக்கிறார். கடைசியாக, அந்த மஹாபுருஷர் என்னதான் சொல்ல விரும்புகிறார்? உண்மையில், அனுராகமே அர்ஜுனன் ஆவான். அனுராகம் என்பது உங்களுடைய இதயத்தில் உள்ள உயர் ஆன்மீகச் சிறப்பு வாய்ந்ததொரு உணர்வின் பெயராகும். அத்தகைய அனுராகம் இல்லாத எவனும் இதற்குமுன்பும் ஒருபோதும் கண்டதில்லை. மேலும், எதிர்காலத்திலும் காணப்போவதில்லை. **"மிலஹிம் ந ரகுபதி பினு அனுராகா, கியே ஜோக் தப் க்யான் விராகா''** எவ்வளவு வேண்டுமானால் யோகம், தவம், ஞானம், வைராக்கியம் ஆகியவற்றைப் பயிலலாம். ஆனால் அனுராகம் இல்லாமல் இறைவன் கிடைக்கமாட்டார்." ஆகவே, அர்ஜுனன் என்பது ஒரு உருவகம் மட்டுமே ஆகும். ஒருவேளை உருவகம் இல்லையென்றால். கீதையை அப்படியே கைவிட்டு விடவேண்டியதுதான். கீதை உங்களுக்காக இல்லை. ஏனெனில், இறைவனை தரிசனம் செய்கின்ற தகுதிநிலை அர்ஜுனன் என்ற குறிப்பிட்டதொரு தனிமனிதனுடன் நின்று போய்விட்டது.

அத்தியாயத்தின் முடிவில் யோகேஷ்வரர் தமது தீர்மானத்தை எடுத்துரைக்கிறார் – "அர்ஜுனா! அனன்ய பக்தி மற்றும் சிரத்தை (நம்பிக்கை) மூலமாக நான் இந்த முறையில் நேரடியாக தரிசனம் செய்யப்படுவதற்கும், (எவ்வாறு நீ பார்த்தாயோ) தத்துவநிலையில் இருந்து தெளிவாக அறிந்து கொள்ளப்படுவதற்கும் மற்றும் நுழைவு பெறுவதற்கும் சுலபமாகிறேன்." அனன்ய பக்தி என்பது அனுராகத்தின் மற்றொரு உருவம்தான். மேலும் இதுதான் அர்ஜுனன் என்பதன் முழுமையான உருவமும் ஆகும். அர்ஜுனன் ஆன்மீக

சாதகனின் உருவகம் ஆவான். இம்முறையில் கீதையின் கதாபாத்திரங்கள் அனைத்துமே உருவகங்கள்தான். பொருத்தமான இடங்களில் எல்லாம் அதற்கான குறிப்புகள் உள்ளன.

இதிகாசம் குறிப்பிடுகின்ற ஸ்ரீகிருஷ்ணரும் அர்ஜூனனும் இருந்திருக்கலாம். நிச்சயமாகவே உலகப்போரும் (மஹாபாரதப் போர்) நிகழ்ந்திருக்கலாம். ஆனால், கீதையில் உலகில் நடைபெறுகின்ற யுத்தத்தைப் பற்றிய விளக்கம் கண்டிப்பாக இடம்பெறவில்லை. அந்த இதிகாச யுத்தத்தின் முகாந்தரத்தில் பயந்திருந்தது அர்ஜூனனே தவிர சேனையில்லை. சேனையோ போரிடத் தயாராகத்தான் இருந்தது.

ஸ்ரீகிருஷ்ணர் ஸவ்ய ஸாசினான அர்ஜூனனுக்கு (இடது கையாலும் அம்புவிடவல்லவன்) கீதையை உபதேசித்து அவனை சேனைக்குத் தகுதி உடையவனாக்கினாரா என்ன? உண்மையில் ஆன்மீக சாதனை வெறுமனே எழுத்து மூலமாக எழுதப்பட முடிவதில்லை. எல்லாவற்றையும் படித்த பிறகும்கூட, அதனைச் செயல்முறைப்படுத்துவது என்னவோ அப்படியே மீதம் இருக்கிறது. அதற்கான அகத்தூண்டுணர்வே இந்த **யதார்த்த கீதை** ஆகும்.

ஸ்ரீ குரு பூர்ணிமா — ஸத்குரு க்ருபாஸ்ரயீ, ஜகத்பந்து

24, ஜூலை 1983, — ஸ்வாமி, அட்கடானந்தர்

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:
## முதல் அத்தியாயம்

**த்ருதராஷ்ட்ர உவாச**
**தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:**
**மாமகா பாண்டவாஸ்சைவ கிமகுர்வத ஷஞ்ஜய (1)**

திருதராஷ்டிரர் கேட்கிறார்: ‘‘சஞ்ஜயனே! தர்மக்ஷேத்திரம், குருக்ஷேத்திரத்தில் யுத்தம் புரியும் விருப்பத்துடன் ஒன்று கூடியிருக்கும் என்னுடைய மற்றும் பாண்டுவின் புத்திரர்களும் என்ன செய்கிறார்கள்?”

அஞ்ஞானத்தின் உருவம்தான் திருதராஷ்டிரன்; புலன்கள் மற்றும் மனக்கட்டுப்பாட்டின் உருவம்தான் சஞ்ஜயன். அஞ்ஞானம் மனத்தின் அடியாழத்தில் இருக்கிறது. அஞ்ஞானத்தால் சூழப்பட்ட மனம் எனப்படும் திருதராஷ்டிரர் பிறவிக் குருடர் ஆவார். ஆனால் அவர் கட்டுப்பாடே உருவமான சஞ்ஜயனின் மூலமாக, பார்க்கவும், கேட்கவும் செய்கிறார். அவருக்குப் பரமாத்மாவே உண்மை என்பது நன்றாகவே தெரிந்துதான் இருக்கிறது. அப்படி இருந்தும்கூட, எதுவரைக்கும் தம்மிடமிருந்து பிறந்த மோகத்தின் உருவமான துரியோதனன் உயிருடன் இருக்கிறானோ அதுவரை அவருடைய கவனம் முழுவதும் எப்போதுமே கௌரவர்கள் மீதுதான் இருக்கிறது, புலன்நுகர்வு எண்ணங்களின் மீதே (விகாரங்கள்) இருக்கிறது.

இந்த உடலே ஒரு க்ஷேத்திரம் ஆகும். எப்பொழுது இதய தேசத்தில் தெய்வீக குணங்கள் வலிமையடையத் தொடங்குகின்றனவோ, அப்பொழுதே இந்த உடல் தர்மக்ஷேத்திரமாகி விடுகிறது. மேலும், எப்பொழுது இந்த உடலில் அசுரக் குணங்கள் வலிமையடையத் தொடங்குகின்றனவோ, அப்பொழுது இதுவே குருக்ஷேத்திரமாகி விடுகிறது. ‘குரு’ அதாவது ‘செய்’ – இது கட்டளைச் சொல்லாகும். ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்: “பிரகிருதியில் இருந்து தோன்றிய மூன்று குணங்களின் மூலமாக ஈர்க்கப்பட்டு மனிதன் கர்மத்தைச் செய்கிறான். அவனால் கணப்பொழுது கூடக் கர்மம் செய்யாமல் இருக்கவே முடியாது. குணம் அவனைச் செய்விக்கிறது. தூக்கத்தில்கூடக் கர்மம் நின்று போய்விடுவதில்லை. உறக்கம் என்பது ஆரோக்கியமான உடலுக்கு அவசியமான உணவாகும். இந்த மூன்று குணங்களும் மனிதனை தேவதைகளில் இருந்து புழு, பூச்சிகள் வரையிலான உடல்களில் பிணைக்கின்றன. எதுவரை பிரகிருதி (இயற்கையும்) மற்றும் பிரகிருதியில் இருந்து தோன்றிய குணங்கள் உயிருடன் இருக்கின்றனவோ, அதுவரை ‘செய்தல்’ (குரு) என்பதும் பின்தொடர்கிறது. எனவே, பிறப்பிற்கும் இறப்பிற்கும் உட்படுகின்ற க்ஷேத்திரம், விகாரங்கள்

நிறைந்துள்ள க்ஷேத்திரம் 'குருக்ஷேத்திரம்' ஆகும். மேலும், பரமதர்ம பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தருகின்ற புண்ணியமயமான எண்ணவோட்டங்கள் (பாண்டவர்) செயல்படுகின்ற க்ஷேத்திரம் 'தர்ம க்ஷேத்திரம்' ஆகும்.

தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் பஞ்சாபிலும் காசி – பிரயாகை ஆகிய இடங்களுக்கு மத்தியிலும், மற்றும் இன்னும் பல இடங்களிலும் குருக்ஷேத்திரம் அமைந்திருக்கலாம் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளனர். ஆனால், கீதையின் ஆசிரியரோ, எந்த க்ஷேத்திரத்தில் யுத்தம் நடைபெற்றதோ, அந்த இடம் எங்கே இருக்கிறது என்பதைத் தாமே முன்னின்று விளக்குகிறார். **'இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே'** (13/1) "அர்ஜுனா! இந்த உடலே க்ஷேத்திரம் ஆகும். எவர் இதனை அறிகிறாரோ, இதனைக் கடந்து அப்பால் செல்கிறாரோ, அவரே **க்ஷேத்திரக்ஞர்** ஆவார்". மேலும் அவர் இந்த க்ஷேத்திரத்தின் விரிவை விளக்குகிறார். இதில், பத்துப் புலன்கள், மனம், புத்தி, அஹங்காரம், ஐந்து விகாரங்கள், மற்றும் மூன்று குணங்கள் ஆகியவற்றின் வர்ணனை இடம் பெற்றுள்ளது. இந்த உடலே ஒரு க்ஷேத்திரம், போர்க்களம் ஆகும். இதில் மோதுகின்ற எண்ணவோட்டங்கள் இருவகைப்படும். தெய்வீக குணங்களும் மற்றும் அசுர குணங்களும், பாண்டுவின் பிள்ளைகள் மற்றும் திருதராஷ்டிரரின் பிள்ளைகள், ஒருமுகப்பட்ட எண்ணங்கள் மற்றும் முரண்பட்ட எண்ணங்கள்.

அனுபவம் வாய்ந்த மஹாபுருஷரின் சரணத்தை அடைந்தபிறகு, இவ்விரு எண்ணவோட்டங்களுக்கு இடையில் போர்துவங்குகிறது. இதுவே க்ஷேத்திர – க்ஷேத்திரக்ஞருக்கு இடையில் நடைபெறும் போராகும். அதுவே உண்மையான யுத்தமும் ஆகும். உலகப் போர்களால் சரித்திரங்கள் நிரம்பி வழிகின்றன. ஆனால் அவற்றில் வென்றவர்களுக்கும்கூட நிலையான வெற்றி என்பது கிடைப்பது இல்லை. அவை எல்லாம் பழிக்குப் பழி வாங்கும் முயற்சிகளே தவிர வேறில்லை. இயற்கையை (பிரகிருதியை) முழுமையாகச் சமனப்படுத்தி, அதற்கு அப்பால் உள்ள மேலான பரம்பொருளை நேரடியாக தரிசனம் செய்தல் மற்றும் அவருள் நுழைவு பெறுதலே உண்மையான வெற்றியாகும். இதுவே தோல்வி என்பதே இல்லாத வெற்றி எனப்படும். இதுவே பிறப்பு, இறப்பு என்ற பந்தம் நீங்கப்பெற்ற முக்தி ஆகும்.

இந்தமுறையில் அஞ்ஞானத்தால் சூழ்ப்பட்டுள்ள ஒவ்வொரு மனமும் புலன் மற்றும் மனக்கட்டுப்பாட்டின் மூலமாக க்ஷேத்திரம் – க்ஷேத்திரக்ஞருக்கு இடையில் நடைபெறுகின்ற யுத்தத்தில் என்ன நிகழ்கிறது? என்பதை அறிகிறது. இனி, அவரவருடைய புலன் அடக்கம் மற்றும் மனக் கட்டுப்பாட்டிற்கு ஏற்றவாறு காட்சிகள் மாறி மாறிக் கிடைக்கத் தொடங்குகின்றன.

**சஞ்ஜய உவாச**
**த்ருஷ்ட்வா து பாண்டவானீகம் வ்யூடம் துர்யோதனஸ்ததா**
**ஆசார்யமுபஸங்கம்ய ராஜா வசன மப்ரவீத் (2)**

அந்தச் சமயத்தில் ராஜா துரியோதனன் வியூகமாக அணிவகுத்து நிற்கும் பாண்டவர்களின் படையை நோட்டமிட்டவாறே, துரோணாச்சாரியரிடம் சென்று இவ்வாறு கூறலானான்:—

த்வைதத்தை அனுசரித்தலே துரோணாச்சாரியர் எனப்படுகிறது. எப்பொழுது நாம் பரமாத்மாவில் இருந்து விலகிவிட்டோம் என்பது தெரிய வந்து விட்டதோ, (இதுவே த்வைதம் என்னும் உணர்வு ஆகும்) அப்பொழுதே அவரை அடைய வேண்டும் என்ற மனஏக்கமும் பிறந்து விடுகிறது. அதற்குப் பிறகுதான் நாம் குருவைத் தேடிப் புறப்படுகிறோம். இரு எண்ணவோட்டங்களுக்கும் நடுவில் இவரே ஆரம்பநிலை குருவாகிறார். அதையடுத்துதான் யோகத்தில் நிலைபெற்றுள்ள ஸத்குருவாகிய யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் உண்மையான குருவாக அமைகிறார்.

ராஜா துரியோதனன் ஆச்சாரியரிடம் செல்கிறான். மோகத்தின் உருவமே துரியோதனன். மோகமே எல்லா வியாதிகளுக்கும் மூலமாகும், ராஜாவாகும். துர்யோதன் – 'துர்' அதாவது 'குற்றமுள்ள' 'யோ தன்' – 'அந்தக் குணம்' அல்லது 'அந்தச் செல்வம்.' ஆன்மீகச் செல்வமே நிலையான செல்வம் ஆகும். அதில் களங்கத்தை ஏற்படுத்துவது எதுவோ அதுவே மோகம் எனப்படும். இதுவே நம்மைப் பிரகிருதி அல்லது படைப்பை நோக்கி இழுக்கிறது. மற்றும் இதுவேதான் உண்மையை அறிந்து கொள்ள நமக்குத் தூண்டுணர்ச்சியையும் அளிக்கிறது. மோகம் இருப்பதால்தானே கேட்க வேண்டும் என்ற பிரச்சினையும் எழுகிறது! அது மட்டும் இல்லையென்றால் எல்லோருமே முழுமையானவர்கள்தான்.

ஆகவே, வியூகத்தில் அணிவகுத்து நிற்கும் பாண்டவர் படையை நோட்டமிட்டான். அதாவது புண்ணியம் மூலமாகப் பெருக்கெடுத்து ஓடுகின்ற ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்களின் அணிவகுப்பைக் கண்டு மோகத்தின் உருவமான துரியோதனன் முதல் குருவாகிய துரோணருக்கு அருகில் சென்று இவ்வாறு கூறலானான்.

**பச்யைதாம் பாண்டுபுத்ராணாமாசார்ய மஹதீஞ் சமூம்**
**வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ சிஷ்யேன தீமதா (3)**

ஆச்சாரியரே! உங்களுடைய புத்திசாலி சீடரான துருபதனின் மகனான த்ருஷ்டத்யும்னன் மூலமாக வியூகம் அமைத்து நின்றுகொண்டிருக்கும் பாண்டவர்களின் இந்த மாபெரும் சேனையைப் பாருங்கள்.

என்றும் நிலையான, அசைக்கமுடியாத இறைவனில் நம்பிக்கை வைத்துள்ள திடமான மனமே 'த்ருஷ்டத்யும்னன்' ஆகும். இதுவே, புண்ணியமயமான எண்ணவோட்டங்களின் நாயகன் ஆகும். **'ஸாதன் கடின் ந மன் கர் டேகா'** – 'சாதனை கடினம் இல்லை, மனத்தின் உறுதிப்பாடே நிலையாக இருக்க வேண்டும்.

இனி படையின் அளவைப் பார்ப்போம்.

**அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுனஸமா யுதி**
**யுயுதானோ விராடஸ்ச த்ருபதஸ்ச மஹாரத: (4)**

இந்தப் படையில் **'மஹேஷ்வாஸா'** – மாபெரும் இறைவனில் வாசம் செய்ய வழிகாட்டுபவர்களான உணர்வின் (பாவனை) உருவமான 'பீமன்', அனுராகத்தின் உருவமான 'அர்ஜுனன்', ஆகியோர்களுக்கு இணையான எண்ணற்ற வீரர்கள், உதாரணமாக சாத்வீகத்தின் உருவமான 'ஸாத்யகீ', **'விராட'**– எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இறைப்பிரவாகத்தை தாரணைசெய்யும் திறன், மஹாரதி ராஜா துருபதன் அதாவது அசைவற்ற உறுதிப்பாடு மற்றும்,

**த்ருஷ்டகேதுஸ்சேகிதான: காசிராஜஸ்ச வீர்யவான்**
**புருஜித்குந்திபோஜஸ்ச சைப்யஸ்ச நரபுங்கவ: (5)**

**'த்ருஷ்டகேது:–'** திடமான கடமையுணர்வு, **'சேகிதான:'–** சித்தம் எங்கெல்லாம் செல்கிறதோ, அங்கிருந்தெல்லாம் அதனை இழுத்துக் கொண்டு வந்து இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவின் திருவுருவச் சிந்தனையில் நிலைநிறுத்துதல், **'காசிராஜ:'–** இந்த உடலே 'காசி' எனப்படுகிறது. அதில்தான் இறைவனின் சாம்ராஜ்ஜியமும் அமைந்துள்ளது. **'புருஜித்'** – ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களின் மீது வெற்றியை ஈட்டித் தருகின்ற புருஜித் **குந்திபோஜ:–** கடமையின் மூலமாக உலகையே வெல்லும் வலிமை, மனிதர்களில் சிறந்தவனான **'சைப்யன்'** அதாவது சத்தியத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதல்.

**யுதாமன்யுஸ்ச விக்ராந்த உத்தமௌஜாஸ்ச வீர்யவான்**
**ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வ ஏவ மஹாரதா : (6)**

மேலும், யுத்தத்தில் வீரத்தை வெளிப்படுத்தவல்ல **'யுதாமன்யு:'–** யுத்தத்தில் மாறுகின்ற சூழ்நிலைகளுக்கெல்லாம் ஏற்றவாறு மனத்தை மாற்றி அமைத்துக் கொள்கின்ற திறன், **'உத்தமௌஜா:'–** நல்லதில் மகிழ்வுடைய, சுபத்திரையின் புதல்வனான **அபிமன்யு** – எப்பொழுது நல்லதை ஆதாரமாகக் கொள்கிறோமோ, அப்பொழுதே மனத்தில் இருக்கும் பயம் நீங்கிவிடுகிறது– அத்தகைய, நல்லதை மட்டுமே அடிப்படையாக, ஆதாரமாகக் கொண்டு தோன்றிய

பயமற்ற மனம், தியானமே வடிவான த்ரௌபதியின் ஐந்து புதல்வர்கள் – **வாத்ஸல்யம், லாவண்யம், ஸஹ்ருதயம், ஸௌம்யதா, ஸ்திரதா** (அதாவது முறையே, **அன்புடைமை, அழகுடைமை, நல்லிதயம், இனிமையுடைமை, உறுதியுடைமை** என்று பொருள்) – இவர்கள் அனைவருமே மஹாரதிகள் ஆவர். ஆன்மீகப் பாதையில் அனைத்துவிதமான தகுதிகளுடன் செல்வதற்கான ஆன்மீகத் திறன்பாடுகள் ஆகும்.

இந்த வகையில் துரியோதனன் பாண்டவர் படையில் இருந்து பதினைந்து – இருபது வீரர்களின் பெயர்களை எண்ணினான். அவைகள் அனைத்துமே தெய்வீகச் செல்வங்கள் அல்லது தெய்வீக குணங்களின் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த அங்கங்கள் ஆகும். முரண்பாடான எண்ணவோட்டங்களின் ராஜாவாக இருந்தபோதும்கூட மோகமே ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்களைப் பற்றி அறிந்து கொள்ள நிர்ப்பந்திக்கிறது.

துரியோதனன் தன்னுடைய படையைப் பற்றிச் சுருக்கமாகக் கூறினான். ஒருவேளை இது வெளிஉலகில் நடைபெறும் யுத்தமாக இருந்தால் தன்னுடைய படையை மிகைப்படுத்தி எண்ணியிருப்பான். ஆனால், விகாரங்கள் (புலன்நுகர்வு எண்ணங்கள்) குறைவாகவே எண்ணப்பட்டது. ஏனெனில், அவற்றை வென்றாக வேண்டும். அவை அழியக் கூடியவை. வெறும் ஐந்து – ஏழு விகாரங்கள் மட்டுமே கூறப்படுகிறது. ஆனால், அவற்றின் அடியாழத்தில் ஒட்டு மொத்தமான எல்லா வெளிமுக எண்ணவோட்டங்களும் நிலைபெற்று உள்ளன. எப்படியென்றால்

**அஸ்மாகம் து விசிஷ்டா யே தான்னிபோத த்விஜோத்தம**
**நாயகா மம ஸைன்யஸ்ய ஸஞ்ஞார்த்தம் தான்ப்ரவீமி தே (7)**

த்விஜோத்தமரே! நம்முடைய படையில் உள்ள முக்கியமான படைத்தலைவர்களைப் பற்றியும் நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். நீங்கள் அறிந்து கொள்வதற்காக என்னுடைய சேனையில் உள்ள படைத்தலைவர்களைப் பற்றிக் கூறுகிறேன்.

புறப்போரில் சேனாதிபதிக்கு **'தவிஜோத்தமர்** என்னும் அடைமொழி தருவது அச்சமயத்தில் பொருத்தமற்ற ஒன்றாகும். உண்மையில் கீதையில், அந்தக்கரணத்தில் (உள்மனத்தில்) இரண்டுவிதமான எண்ணவோட்டங்களுக்கு இடையில் நடைபெறும் யுத்தமே கூறப்பட்டு உள்ளது. இதில் **'த்வைதம்'** என்னும் நிலையை அனுசரித்தலே **'துரோண்'** எனப்படுகிறது. எதுவரை நாம் இம்மியளவுகூட ஆராதிக்கும் இறைவனிடமிருந்து விலகியிருக்கிறோமோ, அதுவரைக்கும் பிரகிருதி இருக்கவே செய்கிறது. 'த்வைதம்' என்னும் வேற்றுமையுணர்வு நிலை உள்ளது. இந்த 'த்வி' என்ற நிலையை வெற்றி

கொள்வதற்கான தூண்டுணர்வு முதல் குருவாகிய துரோணாச்சாரியரிடம் இருந்துதான் கிடைக்கிறது. அரைகுறை அறிவே முழுமையாக அறிந்துகொள்வதற்கான தூண்டுதலைத் தருகிறது. அது வழிபாட்டுத் தலம் அன்று. அங்கே வீரத்தைத் தூண்டுகின்ற ஊக்கம் அளிக்கப்பட வேண்டும். முரண்பாடான எண்ணவோட்டங்களின் நாயகர்கள் யார், யார்? என்று பார்ப்போம்.

**பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய:**
**அஸ்வத்தாமா விகர்ணஸ்ச ஸௌமதத்திஸ்ததைவ ச்ச – (8)**

முதலாவதாக நீங்கள், ('த்வைதம்' என்ற 'நாம் வேறு; இறைவன் வேறு' – என்ற வேற்றுமையுணர்வு நிலையைக் கடைப்பிடித்தலே 'துரோணாச்சாரியர்' எனப்படுகிறது) பிரமையின் உருவமான பீஷ்ம பிதாமஹர். பிரமையே இந்தத் தீய எண்ணவோட்டங்கள் (விகாரங்கள்) அனைத்திற்கும் மூல ஊற்றுக் கண் ஆகும். கடைசிவரைக்கும் உயிருடன் இருக்கிறது. எனவேதான் பிதாமஹர் எனப்படுகிறது. ஒட்டுமொத்தப் படையும் இறந்துவிட்டது. இதுமட்டும் உயிருடன் இருக்கிறது. அம்புப்படுக்கையில் சுயஉணர்வின்றிக் கிடக்கிறது. அதற்குப்பிறகும்கூட உயிருடன்தான் உள்ளது. இதுவே பிரமையின் உருவமான பீஷ்மர். பிரமை கடைசிவரைக்கும் உயிருடன் இருக்கிறது. இந்தவகையில், முரண்பாடான கர்மத்தின் உருவமான கர்ணன் மற்றும் ஒட்டுமொத்தப் போரையும் வென்று விடவல்ல கிருபாச்சாரியர் ஆகியோரும் உள்ளனர். சாதனைக் காலத்தில் சாதகர் மூலமாக கிருபைபுரிதலை அனுசரித்தலே கிருபாச்சாரியர் ஆகும். பகவான் கிருபையின் உறைவிடம் ஆவார். மேலும், அவரை அடைந்த பிறகு, மஹாபுருஷரும் (ஸந்த்) (சித்தபுருஷர்) இதே ஸ்வரூபமாகத் திகழ்கிறார். ஆனால், சாதனைக் காலத்தில், எதுவரைக்கும் நாம் தனித்தும் பரமாத்மா தனித்தும் உணரப்படுகின்ற நிலை நீடிக்கிறதோ, முரண்பாடான எண்ணவோட்டங்கள் உயிருடன் இருக்கின்றனவோ, மோகமயமான சூழல் உள்ளதோ – அத்தகைய சூழ்நிலையில் சாதகர் ஒருவேளை கிருபை புரிதலை அனுசரிப்பாரேயானால், அவர் கண்டிப்பாக இழப்பை அடைகிறார். சீதை தயை புரிந்தார். அதற்காக அவர் கொஞ்சகாலம் இலங்கையில் சிறைப்பட்டு பிராயச்சித்தம் செய்ய வேண்டியதாயிற்று, விஸ்வாமித்திரர் கருணைவசப்பட்டார். ஆன்மீக சாதனையில் நழுவிப் போக நேர்ந்தது. யோக சூத்திரங்களை இயற்றிய மஹரிஷி பதஞ்ஜலியும் இதையேதான் கூறுகிறார் – **'தே ஸமாதாஉபஸர்க்கா வ்யுத்தானே ஸித்தய:' (3/37)** 'ஆன்மீக சாதனை பலன் தரக்கூடியகாலத்தில் சித்திகள் (மன ஆற்றல்) தோன்றுகின்றன. அவை உண்மையில் சித்திகள்தான். ஆனால், கைவல்யத்தைப் (முக்தி) பெறும் வழியில், காமம், குரோதம், லோபம், மோகம் ஆகியவற்றைப் போன்றே இவைகளும் பெருந் தடைகளாகும். துளஸிதாஸகோஸ்வாமி அவர்களின்

முடிவும் இதுவேதான்.

**சோரத் க்ரந்தி ஜானி ககராயா**
**விக்ன அனேக கரயி தப் மாயா**
**ரித்தி சித்தி ப்ரேரயி பஹு பாயி**
**புத்திஹிம் லோப் திகாவஹிம் ஆயி**
**(ராமசரித மானஸ் 7/117/6-7)**

மாயை அநேகத் தடைகளைத் தோற்றுவிக்கிறது. ரித்தி, சித்திகளை அளித்து சித்தராக்குகிறது. அத்தகைய நிலையை அடைந்த சாதகர் அருகில் வந்து நின்றால் போதும், மரணப் படுக்கையில் உள்ள நோயாளி கூட உயிர் பெற்று எழுந்து உட்கார்ந்து விடுவான். அவன் என்னவோ நன்றாக குணமடைந்து விடுகிறான். ஆனால், சாதகன் அதனைத் தான் கொடுத்த வரம் என்று எண்ணிக் கொண்டு உட்கார்ந்து விட்டால் கண்டிப்பாக நஷ்டமடைந்து போகிறான். ஒரு நோயாளியின் இடத்தில் ஆயிரமாயிரம் நோயாளிகள் வந்து குவியத் தொடங்குகின்றனர். இறைவழிபாடு, – ஆன்ம சிந்தனையின் வரிசைத்தொடர் தடைபட்டு விடுகிறது. மேலும், அந்தப் பக்கமாகவே போகப்போக மாயை வலுப்பெற்று விடுகிறது. இயற்கையின் பிடியில் சிக்கிக் கொள்கிறான். ஒருவேளை இலட்சியம் தூரத்தில் இருக்கும் பட்சத்தில் சாதகன் கிருபை புரிந்தானேயானால், அவ்வாறு கிருபை புரிவது ஒன்றேபோதும், **'ஸமிதிஞ்ஜய:'**– ஒட்டு மொத்தப் படையையும் வென்றுவிடும். ஆகவே, சாதனை முழுமையடைகின்ற காலம்வரைக்கும் சாதகன் இதனின்று எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும். **'தயா பினு ஸந்த கஸாயி, தயா கரீ தோ ஆஃபத் ஆயி'** தயை இல்லாத ஸாது கசாப்புக்கடைக்காரனைப் போன்றவன். ஆனால் தயை புரிந்தாலோ ஆபத்தும் வரும்.' எதுஎப்படியோ, சாதனை அரைகுறையான சூழ்நிலையில் உள்ளபோது இந்த முரண்பாடான எண்ணவோட்டம் எளிதில் வெல்வதற்கரிய போர்வீரராகும். இம்முறையில் உலகியல் பற்றுணர்வின் உருவகமான அஸ்வத்தாமன் இவ்வுலகில் காணப்படும் எந்தவொரு பொருளின் மீதும் உள்ள பிடிப்புணர்வையே 'உலகியல் பற்றுணர்வு' என்கிறோம். 'த்வைதம்' என்ற இருமை நிலையை நாம் வேறு; இறைவன் வேறு என்றுள்ள நிலை) அனுசரித்தலே துரோணச்சாரியர் ஆகும். த்வைதமே உலகியல் பற்றுணர்வு பிறக்க காரணமாக அமைகிறது. ஆயுதம் கையில் இருந்திருந்தால் ஆச்சார்யர் துரோணருக்கு மரணம் ஏற்பட்டிருக்காது. அவர் வெல்லவே முடியாதவர் ஆவார். பகவான் ஸ்ரீகிருஷ்ணர், "கௌரவர் படையில் ஒரு யானையின் பெயர் அஸ்வத்தாமன் என்பதாகும். பீமன் அந்த யானையைக் கொன்றுவிட்டு", அஸ்வத்தாமன் இறந்துவிட்டான் என்று உரத்த குரலில் முழங்கட்டும். இந்த விரும்பத்தகாத செய்தியைக் கேட்டதும்

ஆச்சார்யர் மர்மத்தலத்தில் அடிவிழுந்ததுபோல் நிலைகுலைந்து துவண்டு போய்விடுவார். அந்தச் சமயம் பார்த்து அவரைக் கொன்றுவிடவேண்டும்" என்று கூறினார். பீமனும் யானையைக் கொன்றுவிட்டு அஸ்வத்தாமன் 'இறந்துவிட்டான்' என்று பிரச்சாரம் செய்தான். ஆச்சார்யா துரோணரோ, தம்முடைய மகனான அஸ்வத்தாமனே இறந்துவிட்டான் என்று தவறாகப் புரிந்துகொண்டார். அவர் நிலைக்குலைந்து துவண்டு போய்விட்டார், அவர்தம் வில்லானது கைகளிலிருந்து நழுவிவிட்டது. அவர் மனத்தளர்ச்சி அடைந்தவராக, செயலற்று, யுத்தபூமியில் அப்படியே உட்கார்ந்துவிட்டார். அந்நிலையில் அவருடைய தலை துண்டிக்கப்பட்டுவிட்து. மகன் மீது அவர் கொண்டிருந்த அளவுகடந்த பற்றுணர்வே அவருடைய மரணத்திற்குக் காரணமாக அமைந்தது. அஸ்வத்தாமன் நீண்ட ஆயுள் கொண்டவன் ஆவான். முக்தி (நிவிருத்தி) அடைகின்ற கடைசித் தருணம் வரையில் இது தடையின் உருவில் உயிருடன் இருக்கிறது. எனவேதான் அமரன் எனப்படுகிறது.

விகல்பத்தின் உருவமான விகர்ணன். ஆன்ம சாதனையின் உயர்நிலைகளில் விதவிதமான கற்பனைகள் உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. மனத்தில் 'ஆன்ம வடிவத்தை அடைவதுடன் சேர்த்து பகவானுடைய தரப்பிலிருந்து எந்த மாதிரியான சித்திகள், உலகியலுக்கு அப்பாற்பட்ட அதிஅற்புத சக்திகள் எல்லாம் நமக்கு கிடைக்கும்? என்பது போன்ற சங்கல்ப விகல்பங்கள் உருவாகிக்கொண்டே இருக்கும். பகவானைச் சிந்தனை செய்கின்ற இடத்தில் அவரிடமிருந்து கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகின்ற அவரது தெய்வீக மகிமைகளைப் பற்றிய (விபூதிகள்) சிந்தனை நடைபெற ஆரம்பித்துவிடுகிறது. ஆன்ம சாதகனுடைய பார்வை எப்போதும் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை செய்வதில் மட்டுமே நிலைத்திருக்கவேண்டும். அவனுக்கு கர்மத்தின் பலனின் மீது வாசனை என்பதுகூட இருக்கக்கூடாது. ஆனால், எப்பொழுது அவன் ரித்திகள், சித்திகளைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்து விடுகிறானோ, அத்தகையை உறுதியற்ற நிலைப்பாடே விகல்பமே விகர்ணன் எனப்படுகிறது. இந்தக் கற்பனைகள் விதவிதமானவைதான். ஆனால், ஆன்மசாதனையில் பயங்கரமான தடையாகும்.

பிரமைமயமான சுவாசமே பூரிஸ்ரவா ஆகும். ஆன்ம சாதனையின் நிலை உன்னதமடைந்ததும், சாதகரைக் குறித்து, அவர் மஹாத்மா, சித்தர், அவரிடம் தெய்வீக சக்திகள் உள்ளன; என்றெல்லாம் பாராட்டுரைகள் பொழியப்படுகின்றன. அவர் முன்பு பிரபலமான முக்கியப் பிரமுகர்களும் கூட தலைவணங்கி நிற்கிறார்கள். இத்தகைய நடைமுறை, புகழ் ஆகியவற்றால் சாதகன் மகிழத்தொடங்கினால், மனம் நெகிழத் தொடங்கினால் இத்தகைய பிரமை

மயமான சுவாசமே பூரிஸ்ரவா ஆகும். பூஜ்ய குருதேவ பகவானுடைய கூற்று இதுவே: இவ்வுலகம் பூமழை பொழியட்டுமே, புகழுரை பாடட்டுமே, உலகமே ஜகத்குரு என்று கூறட்டுமே, இதனால் உனக்கு எதுவுமே கிடைக்கப்போவதுமில்லை. அழுவதற்கு ஒரு துளி கண்ணீர்கூட எஞ்சி இருக்கப்போவதில்லை! ஒருவேளை இறைவன் உன்னை சாது என்று கூறிவிட்டால் நீ அனைத்தையும் அடைந்துவிடுவாய். இவ்வுலகம் கூறினாலும் சரி, ஒருபோதும் கூறாவிட்டாலும் சரி, அதற்குப் பிறகும்கூட நீ அனைத்தையுமே அடைந்து விடுவாய்'' இதுபோன்று இவ்வுலகின் புகழ்ச்சிகளில் மூழ்கிப்போவதே பிரமைமயமான சுவாசம் என்பதாகும், இதுவே பூரிஸ்ரவா ஆகும். இது புலன் மனக்கட்டுப்பாட்டின் நிலை உன்னதமடைந்த பிறகு வருகின்ற உருக்குலைவிற்குப் பெயராகும், புறமுக எண்ணவோட்டங்களின் அங்கம் மற்றும் துணை அங்கமாகும்.

**அன்யே ச பஹவ : சூரா மதர்த்தே த்யக்தஜீவிதா:**
**நானா ஷஸ்த்ரப்ரஹரணா : ஸர்வே யுத்தவிசாரதா :(9)**

இன்னும் நிறைய வீராதிவீரர்கள் எண்ணற்ற ஆயுதங்களைத் தரித்தவர்களாக, என் பொருட்டு, தங்கள் வாழ்வின் ஆசைகளை எல்லாம் தியாகம் செய்து விட்டு, யுத்தத்திற்குத் தயாராக நின்று கொண்டிருக்கிறார்கள். எல்லோருமே எனக்காக உயிரையும் விடத் துணிந்தவர்கள். ஆனால், அவர்களுடைய எண்ணிக்கை முழுமையாகத் தெரியவில்லை. அடுத்ததாக, எந்தெந்த சேனை எந்தெந்த உணர்வுகளின் மூலமாகப் பாதுகாக்கப்படுகிறது? இதுபற்றிக் கூறலானான்:—

**அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம்**
**பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் (10)**

பீஷ்மரின் மூலமாகப் பாதுகாக்கப்படுகின்ற நம்முடைய சேனை எல்லா வகையிலும் வெல்லப்பட முடியாததாகும். மேலும் பீமனின் மூலமாகப் பாதுகாக்கப்படுகின்ற அவர்களின் சேனையோ வெல்வதற்கு எளியதாகும். 'போதுமானது' (பர்யாப்தம்) மற்றும் 'போதுமானதல்ல' (அபர்யாப்தம்) என்பது போன்று குழறுபடியான வார்த்தைகளை உடயோகப்படுத்துவது துரியோதனுக்கு உள்ள சந்தேகத்தையே வெளிப்படுத்துகிறது. ஆகவே, கௌரவர்கள் முழுக்க முழுக்க நம்பியிருக்கும் பீஷ்மர் என்பது எந்த சக்தி? என்பதையும் மற்றும் பாண்டவர்கள் (தெய்வீக குணங்கள்) முழுக்க முழுக்க நம்பியிருக்கும் பீமன் என்பது எந்த சக்தி? என்பதையும் பார்க்க வேண்டும். துரியோதனன் தனது திட்டத்தைக் கூறுகிறான்.

**அயனேஷு ச ஸர்வேஷு யதாபாகமவஸ்த்திதா:**
**பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த : ஸர்வ ஏவ ஹி (11)**

ஆகவே, எல்லாப் பக்கங்களிலும் அவரவர் இடங்களில் நிலையாக இருந்து கொண்டு நீங்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாக பீஷ்மரையே எல்லாத் திசைகளிலிருந்தும் பாதுகாத்து வாருங்கள். பீஷ்மர் உயிருடன் இருக்கும்வரை, நம்மை யாராலும் வெல்ல முடியாது. ஆகவே, நீங்கள் பாண்டவர்களுடன் மோதாமல் பீஷ்மரையே காத்து வரவேண்டும்.

தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள முடியாத, கௌரவர்களால் காப்பாற்ற வேண்டிய நிலையில் உள்ள, இந்த பீஷ்மர் எனப்படும் வீரர்தான் யார்? இது யாரோ ஒரு வெளியில் நடைபெறுகின்ற போரில் பங்கு பெற்றுள்ள வீரர் இல்லை. பிரமையே பீஷ்மர் எனப்படுகிறது. எதுவரை பிரமை உயிருடன் உள்ளதோ, அதுவரை முரண்பட்ட எண்ணவோட்டங்களை (கௌரவர்) வெல்லவே முடியாது. வெல்ல முடியாது என்பதற்கு ஒருபோதும் வெல்லவே முடியாது என்பதல்ல அர்த்தம். மாறாக, மிகவும் கடினமாகத்தான் வெல்ல முடியும் என்று அர்த்தமாகும்.

**மஹா அஜய் ஸம்ஸார் ரிபு, ஜீதி ஸகயீ ஸோ பீர்**
(ராம சரித மானஸ் 6/80)

'(சம்சாரம் என்னும் எதிரி வெல்லுதற்கரியவன். வீரனால் மட்டுமே அதை வெல்ல முடியும்.)'

ஒருவேளை பிரமை அழிந்து விடுமேயானால் அவித்யை நிலையற்றுப் போய் மறைந்து விடும். மோகம் முதலான எஞ்சியுள்ளவை அனைத்தும் சீக்கிரமே அழிந்து போய்விடும். பீஷ்மர் தன்னிச்சைப்படியே சாகும் வரம் பெற்றவர் (இச்சா மருத்யு) ஆவார். இச்சையே பிரமை ஆகும். இச்சையின் முடிவு, பிரமையில் இருந்து விடுபடுதல் இரண்டுமே ஒன்றுதான். இதையேதான் **ஸந்த் கபீர்** எளிமையான முறையில் பின்வருமாறு பாடிச் சென்றுள்ளார்:

**'இச்சா காயா இச்சா மாயா இச்சா ஜக் உபஜாயா**
**கஹ் கபீர் ஜே இச்சா விவர்ஜித தாகா பார் ந பாயா'**

எங்கே பிரமை இல்லையோ, அது எல்லையற்றதும் மற்றும் புலன் உணர்வுக்கு எல்லாம் அப்பாற்பட்டதும் ஆகும். இந்த உடல் பிறவியெடுப்பதற்குக் காரணம் இச்சையே ஆகும். இச்சையே மாயை ஆகும். மேலும் இச்சையே இந்த உலக உற்பத்திக்கும் காரணம் ஆகும். **('ஸோகாமயத' ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய இதி'** (சாந்தோக்ய உபநிஷதம் 6/2/3) கபீர் கூறுகிறார்: "எவர்

இச்சையில் இருந்து என்றென்றைக்குமாக விடுபட்டுவிடுகிறாரோ, **'தின்கா பார் ந பாயா'**– அவர் பரந்த, எல்லையற்ற, முடிவற்ற, இறைத்தத்துவத்தில் நுழைவுபெற்று விடுகிறார்." **'யோகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமோ ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி'** (ப்ருஹதாரண்யக உபநிஷதம் 4/4/6)– "எவர் ஆசைகள் அற்றுப்போய், ஆத்மாவில் நிலைபெற்று ஆன்ம ஸ்வரூபமாகவே ஆகிவிடுகிறாரோ, அவருக்கு ஒருபோதும் அழிவு என்பதே இல்லை. அவர் பிரம்மத்தில் ஒன்றிணைந்து விடுகிறார். ஆரம்பத்தில் இச்சைகள் கணக்கில் அடங்காமல் எண்ணற்று உள்ளன. ஆனால் முடிவிலோ பரமாத்மாவை அடைய வேண்டும் என்ற இச்சை மட்டுமே எஞ்சுகிறது. எப்பொழுது, இந்த இச்சையும் நிறைவேறி விடுகிறதோ, அப்பொழுதே இச்சை என்ற ஒன்றே இல்லாமல் போய்விடுகிறது. ஒருவேளை, இறைவனைவிடப் பெரிய பொருள் என்று ஒன்று இருந்தால் நீங்கள் அவசியம் அதை அடைய ஆசைப்படுவீர்கள். எப்பொழுது, அவருக்கு மேல் வேறு ஒன்றும் இல்லை என்றாகிவிட்டதோ, அப்பொழுது இச்சை கொள்வது எதற்காக? எப்பொழுது அடையத்தகுந்த எந்தப் பொருளும் அடையப்படாமல் இல்லை என்றொரு நிலை வந்துவிடுகிறதோ, இச்சை என்பதும் ஆணிவேருடன் அழிந்து போய்விடுகிறது. மேலும், இச்சையில் இருந்து விடுபட்டவுடனே பிரமையும் என்றென்றைக்குமாக முடிந்து விடுகிறது. இதுவே பீஷ்மரின் **இச்சா ம்ருத்யு** எனப்படுகிறது. இந்த முறையில் பீஷ்மர் மூலமாகப் பாதுகாக்கப்படுகின்ற நம்முடைய படை எல்லா வகையிலும் வெல்ல முடியாததாக இருக்கிறது. எதுவரைக்கும் பிரமை உள்ளதோ, அதுவரைக்கும் அவித்யைக்கும் நிலைத்தன்மை உள்ளது. பிரமை அமைதியடைந்த உடனேயே, அவித்யையும் முடிவிற்கு வந்து விடுகிறது.

பீமன் மூலமாகப் பாதுகாக்கப்படுகின்ற இவர்களுடைய (பாண்டவர்) படையோ வெல்வதற்கு எளியது. உணர்வின் உருவமே பீமன் எனப்படுகிறது. **'பாவே வித்யதே தேவ:'** அடையப்பட முடியாத, அறியப்பட முடியாத பரமாத்மாவைக்கூட அடையவும் அறியவும் முடிகின்ற திறன்உணர்வுக்கு உள்ளது. **'பாவ பஸ்ய பகவான், ஸுக் நிதான் கருணா பவன்'** (ராம சரித மானஸ் (7/92க)' – ஸ்ரீகிருஷ்ணர் இதையே (சிரத்தை) நம்பிக்கை என்னும் சொல்லால் குறிப்பிட்டு விளக்குகிறார். உணர்வுக்கு, பகவானையே வசப்படுத்துகின்ற அளவு திறன் உண்டு. உணர்வுப்பூர்வமான அணுகுமுறையால்தான் எல்லா புண்ணியமயமான எண்ணவோட்டங்களும் விரிவாக்கம் பெற்று தெளிவுபடுகின்றன. இது புண்ணியத்தின் பாதுகாவலன் ஆகும். பரமாத்மாவையே சம்பவிக்கச் செய்கின்ற அளவிற்கு பலம் பொருந்தியதுதான்! ஆனால், இன்றைய உணர்வுப்பூர்வமான அணுகுமுறை, நாளையே காணாமல் போய்விடுவதற்கு அதிக நேரம் பிடிக்காது என்பது போல் மிகவும் மென்மையானதும்கூட. இன்று, "சுவாமிஜீ

மஹராஜ் அவர்கள் மிகவும் நல்லவர்" என்று கூறும் நீங்களே நாளை, "இல்லை, அவர் பாயாசம் எல்லாம் குடிக்கிறார். நானே பார்த்தேன்" என்றும் சொல்லி விடுவீர்கள்.

**காஸ் பாத் ஜோ காத் ஹை தினஹி ஸதாவே காம்**
**தூத் மலாயீ காத் ஜே, தினகீ ஜானே ராம்**

இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் சிறிதளவு குறை இருப்பதுபோல் தோன்றினாலும்கூட, அவர்மீது நாம் கொண்டு இருக்கும் உணர்வானது (எண்ணமானது) தடுமாற ஆரம்பிக்கிறது. புண்ணியமயமான எண்ணங்கள் பாதை நிலை தடுமாறுகின்றன. இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் கொண்டிருந்த தொடர்பு துண்டிக்கப்படுகிறது. எனவேதான் பீமன் மூலமாகப் பாதுகாக்கப்படுகின்ற இவர்களுடைய (பாண்டவர்) படையானது வெல்வதற்கு எளியது எனப்பட்டது. மஹரிஷி பதஞ்ஜலியின் முடிவும் இதுதான். '**ஸ து தீர்க்க கால நைரந்தர்ய ஸத்காரா ஸேவிதோ த்ருடபூமி**': (யோக சூத்திரம் 1/14) – 'நீண்ட காலம்வரை நிரந்தரமாக, நம்பிக்கையுடன் (சிரத்தை) மற்றும் பக்திபூர்வமாகச் செய்யப்படுகின்ற சாதனை மட்டுமே உறுதிப்படுகிறது.'

**தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷ குருவ்ருத்த: பிதாமஹ:**
**ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: சங்கம் தத்மௌ ப்ரதாபவான் (12)**

இந்த முறையில் அவரவருடைய பலத்தை நிர்ணயித்துக் கொண்டு சங்கநாதம் எழுந்தது. சங்க நாதம் அந்தந்த கதாபாத்திரங்களின் பராக்கிரமத்தைப் பறைசாற்றுகின்ற கோஷமாகும். அதாவது வெற்றி பெற்றால் எந்த கதாபாத்திரம் உங்களுக்கு என்ன தரும்? என்பதை அறிவிப்பதாகும். கௌரவர்களில் முதியவரும், வல்லமை பொருந்தியவரும், பிதாமஹருமான பீஷ்மர் அந்த துரியோதனனின் இதயத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்தியவாறே உரத்த குரலில் சிம்ம நாதத்திற்குச் சமமான **பயப்ரத்** என்னும் சங்கொலியை எழுப்பினார். சிங்கம் பிரகிருதியின் (இயற்கையின்) பயம் நிறைந்த தன்மையின் உருவகம் ஆகும். அடர்ந்த காட்டில் ஆள் அரவமற்ற அமைதியான ஏகாந்தத்தில் சிங்கத்தின் கர்ஜனை நமது காதில் திடீரென்று வந்து விழுந்தால் போதும், அக்கணமே மயிர் கூச்சல் ஏற்படுகிறது. இதயம் நடுநடுங்க ஆரம்பித்து விடுகிறது. ஒருவேளை சிங்கமானது நம்மை விட பலமைல் தொலைவில் இருந்தால் கூட இதுதான் நிலைமை. பயம் பிரகிருதியில் தான் இருக்கிறதே ஒழிய, பரமாத்மாவில் இல்லை. அவர் பயமற்ற நிலையில் உள்ளவர். பிரமையின் உருவமான பீஷ்மர் ஒருவேளை வெற்றி பெற்றாரேயானால், பிரகிருதியின் எந்த பயம் சூழ்ந்த அடர்ந்த காட்டில் நீங்கள் இருக்கிறீர்களோ, அதையும் விட அதிகமான பயம் என்னும் சூழலிலேயே

உங்களைப் பிணைத்து விடுவதாக அமையும். பயத்தின் சுற்று இன்னும் ஒரு படி உயர்ந்துவிடும். பயத்தின் சூழல் இன்னும் கொஞ்சம் அடர்த்தியாகும். இந்த பிரமை இதற்கும் மேலாக வேறொன்றையும் தரப் போவதில்லை. ஆகவே, பிரகிருதியில் (இயற்கையில்) இருந்து விடுபடுதலே இலட்சியப்பாதை ஆகும். சம்சாரத்தில் உழல்வது என்பதோ உலகம் என்னும் அடர்கானகத்தில் காணாமல் போவதற்கு ஒப்பானதாகும், ஆழ்ந்த இருட்டின் நிழலாகும். இதற்கு மேல் கௌரவர்களின் கோஷம் வேறொன்றையும் அறிவிக்கவில்லை. அவர்களின் கூட்டத்தில் இருந்து அநேக வாத்தியங்கள் ஒரே சமயத்தில் முழங்கின. ஆனால், ஒட்டு மொத்தமாக அவை அனைத்தும் பயம் என்னும் உணர்வையே வெளிப்படுத்தினவே தவிர, அதற்கு மேல் ஒன்றுமில்லை. ஒவ்வொரு விகாரமுமே ஏதேனும் கொஞ்சம் பயத்தை உண்டாக்கவே, செய்கிறது. எனவேதான் ‘அவர்களும் கோஷம் எழுப்பினர்’ எனப்படுகிறது.

**தத சங்காஸ்ச பேர்யஷ்ச பணவானககோமுகா:**
**ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ சப்தஸ்துமுலோஅபவத் (13)**

அதைத் தொடர்ந்து அநேக சங்குகள், தாரைதப்ப்பட்டை, கொம்பூதிகள் முதலான வாத்தியங்கள் ஒருசேர முழங்கின. அவற்றின் சத்தமும் பயங்கரமாக இருந்தது. பயத்தை உண்டுபண்ணுவதைத் தவிர கௌரவர்களின் கோஷம் வேறொன்றையும் வெளிப்படுத்தவில்லை. புறமுகமாகச் செயல்படும் முரண்பட்ட எண்ணவோட்டங்கள் வெற்றி பெற்ற பிறகு மோகமயமான பந்தங்கள் மேலும் அடர்ந்து விடுகின்றன. அடுத்து, புண்ணியமயமான எண்ணவோட்டங்களின் பக்கத்தில் இருந்தும் கோஷங்கள் எழுந்தன. அவற்றில் முதன்முதலாக யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் கோஷம் எழுந்தது.

**தத ஸ்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ**
**மாதவ : பாண்டவஸ்சைவ திவ்யௌ சங்கௌ ப்ரதத்மது : 14**

அதற்குப் பிறகு வெண்மை நிறக் குதிரைகள் பூட்டிய ( எதில் இம்மியளவு கூடக் கருமை என்னும் மாசு இருப்பதில்லையோ அந்த வெண்மை நிறமானது ஸாத்வீகம், மற்றும் தூய்மையின் சின்னமாகும்) **‘மஹதி ஸ்யந்தனே’** – மாபெரும் இரதத்தில் அமர்ந்திருந்த யோகேஷ்வரர் ஸ்ரீ கிருஷ்ணரும் அர்ஜூனனும் தெய்வீகமான சங்குகளை ஊதினார். (அலௌகீகம்) என்பதற்கு உலகியலுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்டது என்று பொருள். மருத்யு லோகம், தேவலோகம், பிரம்மலோகம் என்று எதுவரைக்கும் பிறப்பு இறப்பு என்ற பயம் உள்ளதோ, அத்தகைய அனைத்து உலகங்களுக்கும் எல்லாம் அப்பாற்ப்பட்ட பரலோகம், பரமார்த்திகம் என்ற இறைப் பேறுநிலையைப் பெற்றுத் தருகின்ற கோஷமே

ஸ்ரீகிருஷ்ணருடையது ஆகும். தங்கம், வெள்ளி மற்றும் மரத்தாலோ தயாரிக்கப்பட்ட இரதம் அன்று இது. இரதமும் அலௌகீகம், சங்கும் அலௌகீகம். எனவேதான் கோஷமும் அலௌகீகமாக இருக்கிறது. உலகங்களுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்டது பிரம்மம் ஒன்றுதான். நேரடியாக அவருடன் தொடர்பை ஏற்படுத்துகின்ற கோஷமாகும் அது. அவர் எவ்வாறு இந்த இறைப்பேறு நிலையைப் பெற்றுத் தருவார்?

**பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தனஞ்ஜய**
**பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா வ்ருகோதர: (15)**

**'ஹ்ருஷீகேச':–** இதயத்தில் உள்ள அனைத்தையும் அறிந்தவரான அந்த ஸ்ரீகிருஷ்ணர் 'பாஞ்சஜன்யம்' என்ற சங்கினை ஊதினார். ஐம்புலன்களையும் ஐந்து புலன் விஷயங்கள் அல்லது தன்மாத்திரைகள் என்று சொல்லப்படும் கேட்டல், தொடுதல், பார்த்தல், சுவைத்தல், நுகர்தல் (சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம்) ஆகிய விஷய இன்பங்களில் இருந்து முழுவதுமாக விடுவித்து தம்முடைய பக்தனை பக்தி என்ற நிலைப்பாட்டில் உறுதியாக நிலைப்படுத்துகின்ற கோஷத்தை எழுப்பினார். பயங்கரமான வடிவில் இங்கிங்கெனாதபடிக்கு அலைந்து கொண்டிருக்கும் புலன்களை எல்லாம் ஒன்று திரட்டி, அன்பரைத் தம்முடைய சேவகன் என்ற நிலையில் உறுதியாக நிற்கச் செய்வது, அவனது இதயத்தில் எழுந்தருளி, ஆன்மீகத் தூண்டுணர்வை அளிக்கும் வல்லமை கொண்ட சத்குருவின் திருக்கொடை ஆகும். ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகேஷ்வரரும் சத்குருவும் ஆவார். **'சிஷ்யஸ்தேஹம்'** 'பகவானே! நான் உங்களுடைய சிஷ்யன் ஆவேன்.' அதாவது வெளி விஷயப் பொருட்களைப் பற்றிய சிந்தனையை விடுத்து இஷ்ட தெய்வமாகிய சத்குருவைத் தவிர வேறு எதையும் பார்க்காமல், கேட்காமல், தொடாமல் இருக்கும் நிலையானது, சத்குருவின் மூலமாக இயக்குவிக்கப்படுகின்ற ஆன்மீக அனுபவங்களையே முழுவதுமாகச் சார்ந்துள்ளது.

**'தேவதத்தம் தனஞ்ஜய:'**– தெய்வீகச் செல்வங்கள் அல்லது தெய்வீகக் குணங்களை எல்லாம் தன்வசப்படுத்திக் கொள்ளும் திறனுடைய அனுராகமே அர்ஜூனன் ஆவான். இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் மட்டுமே பிடிப்புணர்வு கொள்தல், இதில் பிரிவாற்றாமை (விரஹம்), வைராக்கியம், மெய்மறந்து, ஆனந்தக்கண்ணீர் விட்டு அழுதல், **'கத்கத் கிரா நயன பஹ் நீரா'–** மயிர் கூச்செறிதல், இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவைத் தவிர வேறெந்த வெளி விஷயப் பொருட்களைப் பற்றிய சிந்தனை இம்மியளவுகூட இடைமறிக்காதிருத்தல் ஆகியவை அனைத்தும் அடங்கும். இதையே 'அனுராகம்' என்கிறோம். ஒருவேளை

இந்த அனுராகம் என்ற தெய்வீகக் குணம் வெற்றி பெறுமேயானால், பரம தெய்வமாகிய பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்ல தெய்வீகச் செல்வங்கள் அதாவது தெய்வீகக் குணங்கள் மீதான தனது அதிகாரத்தைப் பெற்று விடுகிறான். இதற்கு மற்றொரு பெயர்தான் தனஞ்ஜயன் என்பதாகும். வெளி உலகில் சம்பாதிக்கின்ற பொருட் செல்வம் ஒருவகையான செல்வமாகும். அதன்மூலமாக உடல் வரைக்குமான நிர்வாகத்திற்கான ஏற்பாடுகள் கிடைத்து விடுகிறது. ஆனால், ஆத்மாவிற்கும் இதற்கும் ஒரு தொடர்பும் இல்லை. இதை எல்லாம் விட மேலான, உறுதியான ஆன்மீகச் செல்வமே உண்மையான செல்வம் ஆகும். ப்ருஹதாரண்யகோபநிஷதத்தில் யாக்ஞவல்க்யர் தமது மனைவியாகிய மைத்ரேயியிடம், 'பொருட் செல்வம் நிறையப் பெற்ற, இந்த உலகத்திற்கே தலைவன் என்ற பதவியால் கூட, அம்ருத தத்துவம் எனப்படுகின்ற மரணமில்லாப் பெருவாழ்வைப் பெற்றுத் தர இயலாது' என்று சொல்லிப் புரிய வைக்கிறார். அதற்கான ஒரேவழி ஆன்மீகச் செல்வத்தைப் பெறுவது ஒன்றேயாகும்.

பயங்கரமாகக் கர்மத்தில் ஈடுபடவல்ல பீம சேனன் **'பௌண்ட்ரம்'**– அதாவது அன்பு **(ப்ரீத்தி)** என்னும் பெயர் கொண்ட மஹாசங்கை ஊதினார். உணர்வின் உற்பத்தி ஸ்தானம் அல்லது மூலஊற்றுக்கண் மற்றும் உறைவிடம் இதய தேசம் ஆகும். எனவேதான் பீமனின் மற்றொரு பெயர் **'வ்ருகோதரர்'** என்பதாகும். உங்களுடைய உணர்வு அல்லது பிடிப்பு குழந்தையின் மீது இருக்கிறது என்பது உண்மைதான். ஆனால் உண்மையில் அந்தப் பிடிப்புணர்வு உங்களுடைய இதயத்தில்தான் இருக்கிறது. அதுவே குழந்தையிடம் சென்று உருப்பெறுகிறது. இந்த உணர்வு மிகவும் ஆழமானது. மேலும் மிகுந்த பலம் பொருந்தியதும்கூட. அவன் **ப்ரீத்தி** (அன்பு) என்னும் பெயர் கொண்ட மஹாசங்கை ஊதினான். உணர்வில்தான் அன்பு மறைந்து இருக்கிறது. எனவேதான் பீமன் **'பௌண்ட்ரம்'** அன்பு என்னும் பெயருடைய மஹாசங்கை ஊதினான். உணர்வு மிகுந்த பலம் வாய்ந்ததுதான், ஆனால் அதில் அன்பு இயக்கநிலை பெற்றிருப்பதன் மூலமாகத்தான்.

**"ஹரி வ்யாபக் ஸர்வத்ர ஸமானா, ப்ரேம் தே ப்ரகட் ஹோஹி மை ஜானா"**

(ராமசரிதமானஸ் 1/184/5)

"இறைவன் (ஹரி) எங்கும் சமமாக நிறைந்து இருக்கிறார். அவரை அன்புடன் (பிரேமம்) அழைத்தால் தம்மை வெளிப்படுத்தி அருள்கிறார் என்பதை நான் அறிவேன்"

**அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர:**
**நகுல : ஸஹதேவஸ்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ (16)**

குந்தியின் மகனான ராஜா யுதிஷ்டிரர் **‘அனந்த விஜயம்’** – என்னும் பெயருடைய சங்கை ஊதினார். கடமை என்பதன் உருவகமே குந்தி, மற்றும் தர்மம் என்பதன் உருவகமே யுதிஷ்டிரர் (தர்மர்). தர்மத்தின்மீது உறுதியான நிலைப்பாடு இருக்குமேயானால் – முடிவு என்பதே இல்லாத ‘பரமாத்மாவில் நிலைபெறல்’ கிடைத்துவிடும். **‘யுத்தே ஸ்திர: ஸ: யுதிஷ்டிர:’**– பிரகிருதி – புருஷன்; க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞர் ஆகியவற்றிற்கு இடையிலான மோதலில் உறுதியாக நிற்பவனும், மாபெரும் துக்கத்திலும்கூட உறுதி குலையாமல் இருப்பவனும் என்றேனும் ஒருநாள் கண்டிப்பாக, முடிவற்றதும், அதாவது எதற்கு முடிவு என்பதே இல்லையோ, அதுவே பரம தத்துவமாகிய பரமாத்மா, அவரை அடைவதில் வெற்றியும் பெற்று விடுகிறான்.

நியமத்தின் உருவகமான நகுலன் **‘ஸுகோஷம்’** என்னும் பெயருடைய சங்கை ஊதினான். எவ்வளவுக்கு எவ்வளவு நியமம் உயர்நிலைகளை அடைகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு தீயவை அனைத்தும் அழிந்து போகின்றன. நல்லவை பெருகத்தொடங்குகின்றன. சத்ஸங்கத்தின் உருவகமான சஹதேவன் **‘மணிபுஷ்பகம்’**– என்னும் பெயருடைய சங்கை ஊதினான். முனிவர்கள் நம்முடைய ஒவ்வொரு மூச்சையும் (சுவாசம்) விலைமதிப்பற்ற மணிக்கு ஒப்பாகக் கூறி உள்ளனர். **‘ஹீரா ஜைஸீ ஸ்வாஸா பாதோ மே பீதீ ஜாய்’** (பிந்து) – ‘வைரம் போன்ற ஒவ்வொரு மூச்சும் வெட்டிப் பேச்சில் கழிகிறது’. சத்புருஷர்களின் அருளுரையைக் கேட்பது சத்ஸங்கத்தில் ஒருவகை, ஆனால் உண்மையான சத்ஸங்கம் அகத்தில் வீற்றிருக்கும் ஆன்மாவுடன் தொடர்பு கொள்வதேயாகும். ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் ஆன்மாவே உண்மையானது; சனாதனமானது ஆகும். சித்தத்தை (மனத்தை) எல்லாப் பக்கங்களில் இருந்தும் விடுவித்துக் கொண்டு ஆன்மாவுடன் தொடர்புகொள்ள ஆரம்பித்து விட்டால், அதுவே உண்மையான சத்ஸங்கம் ஆகும். இந்த சத்ஸங்கம் ஆன்ம சிந்தனை, தியானம் மற்றும் சமாதி ஆகியவற்றைப் பயில்வதன் மூலமாக நிறைவு பெறுகிறது. எவ்வளவுக்கு எவ்வளவு உண்மையின் மீது மனத்தின் கவனப்பார்வை (ஸுரத்) ஒன்ற ஆரம்பித்து விடுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு ஒவ்வொரு மூச்சும் நமது முழுமையான கட்டுப்பாட்டிற்குள் வந்து விடுகிறது; மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களின் இயக்கமும் தடைப்பட்டுக் கொண்டே போகிறது. எந்நாள் அவை ஒட்டுமொத்தமாக தடைப்பட்டுவிடுகிறதோ அந்நாளே ஆன்மா அடையப்படுகிறது. இசைக் கருவிகளைப் போன்று நமது சித்தத்தை ஆன்மாவின் ஸ்வரத்துடன் லயிக்கச் செய்வதே ‘சத்ஸங்கம்’ ஆகும்.

அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தப்படுகின்ற மணி மிகவும் கடினமானது. ஆனால் சுவாசம் எனும் மணியோ பூவை விடவும் மென்மையானது.

மலரும் கூட நன்றாக மலர்ந்த பிறகோ அல்லது ஒடிந்து விழுந்த பிறகோதான் வாடிப் போகிறது. ஆனால் நீங்கள் அடுத்த மூச்சுவரை உயிருடன் இருப்போம் என்பதற்கு எந்தவிதமான உத்திரவாதமும் தரமுடியாது. ஆனால் சத்ஸங்கம் வெற்றிகரமாக நிகழ ஆரம்பித்து விட்டாலோ ஒவ்வொரு மூச்சும் கட்டுப்படுத்தப்பட்டு மேலான இலட்சியத்தை அடையச் செய்து விடுகிறது. இதற்கு மேல் பாண்டவர்கள் வேறெந்த கோஷமும் எழுப்பவில்லை. ஆனால் ஒவ்வொரு சாதனையுமே தூய்மையின் பாதையில் ஏதோ சிறிதளவு தூரத்தைக் கடக்கவே செய்கிறது. மேலும் கூறுகிறார்.

**காச்யஸ்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மஹாரத :**
**த்ருஷ்டத்யும்னோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜித : (17)**

இந்த உடலே 'காசி' எனப்படுகிறது. எப்பொழுது ஒருவன் எல்லாப் பக்கங்களில் இருந்தும் மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் விடுவித்துக் கொண்டு, இந்த உடலின் அகத்தில் ஒருமுகப்படுத்துகிறானோ, அப்பொழுது அவன் **பரமேஷ்வாஸ:** 'மேலான இறைவனில் வாழ்வதற்கான தகுதிநிலையைப் பெற்று விடுகிறான். மேலான இறைவனில் வாழுகின்ற தகுதியைப் பெற்றுத் தரவல்ல பொருத்தமான உடலே 'காசி' ஆகும். இந்த உடலில்தான் அந்தப் பரம இறைவன் உறைகிறார். எனவே 'பரமேஷ்வாஸ:' என்பதற்கு 'சிறந்த வில்லை உடையவன்' என்று பொருள் அல்ல. மாறாக, பரம் + ஈஸ + வாஸ என்பதாகும்.

சிகை அல்லது குடுமி, உபநயன நூல் அல்லது பூணூலைத் துறப்பதே **'சிகண்டீ'** எனப்படுகிறது. இன்றைய நிலையில், தலையை மொட்டையடித்துக் கொண்டு, பூணூல் என்ற பெயரில் கழுத்தில் அணிந்து உள்ள உபநயன நூலைக் களைந்து விட்டு, நெருப்பை வளர்ப்பதை விட்டுவிடுவதாக உறுதிமொழி எடுத்துக் கொள்கிறார்கள். இதையே சன்னியாஸம் (துறவறம்) என்கிறார்கள்! ஆனால் உண்மையில் அப்படி ஒன்றும் இல்லை. சரியாகச் சொல்வதென்றால் சிகை அல்லது குடுமி இலட்சியத்தின் சின்னமாகும். அதாவது எதை நீங்கள் அடைய வேண்டுமோ அதனை உணர்த்துவது ஆகும். உபநயன நூல் அல்லது பூணூல் உங்களுடைய சம்ஸ்காரங்களின் உருவகம் ஆகும். எதுவரைக்கும் உங்கள் முன் பரமாத்மாவை அடைய வேண்டும் என்னும் நிலை எஞ்சியுள்ளதோ, பின்னால் சம்ஸ்காரங்களின் வரிசைத்தொடர் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் நிலைமை உள்ளதோ, அதுவரைக்கும் தியாகம் என்ற பேச்சிற்கே இடமில்லை. இதை சன்னியாஸம் என்று எப்படிச் சொல்வது? இப்போது உள்ள நிலையில் நீங்கள் ஆன்மீகப் பாதையில் பயணம் செய்து கொண்டிருக்கும் பயணி மட்டும்தான். சாதகர் எப்பொழுது அடையப்பட வேண்டிய இறைவன்

அடையப்பட்டு விடுகிறாரோ, மேலும் உங்களைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் சம்ஸ்காரங்களின் தொடர் அறுபட்டு விடுகிறதோ, அத்தகைய நிலையில்தான் பிரமை முற்றிலுமாக அமைதியடைகிறது. எனவேதான் சிகண்டியால் மட்டுமே பிரமையின் உருவகமான பீஷ்மரை அழிக்க முடியும் என்று சொல்லப்படுகிறது. சிகண்டி ஆன்ம சிந்தனைப் பாதையில் மிக உயர்ந்ததொரு தகுதிநிலையாகும். மஹாரதியாகும்.

**'த்ருஷ்டத்யும்ன:'–** திடமான மற்றும் அசையாத உறுதிப்பாடுடைய மனம் மற்றும் **'விராட:'–** இங்கிங்கெனாதபடி எங்கும் விரிந்தும் பரந்தும் உள்ள இறைவனின் விரிவாக்கத்தைக் காண்பதற்கான திறன் முதலானவை தெய்வீகச் செல்வம் அல்லது தெய்வீகக் குணங்களின் முக்கியமான குணங்கள் ஆகும். சாத்வீகமான குணமே **ஸாத்யகீ** ஆகும். சத்தியப் பொருளாகிய ஆன்மாவை மட்டுமே சிந்தனையில் கொள்கிற எண்ணவோட்டம் அதாவது சாத்வீகம் இருக்கிறதென்றால், ஒருபோதும் சாதனையில் வீழ்ச்சி ஏற்பட வாய்ப்பே இல்லை. அது இந்த மோதலில் தோல்வி ஏற்பட இடம் தராது.

**த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வஷ: ப்ருதிவீபதே**
**ஸௌபத்ரஷ்ச்ச மஹாபாஹு: ஷங்கான்தத்மு : ப்ருதக் ப்ருதக் (18)**

அசைவற்ற, உறுதிப்பாட்டை அளிக்கவல்ல துருபதன் மற்றும் தியானத்தின் உருவகமான த்ரௌபதியின் ஐந்து பிள்ளைகள் – ஸஹ்ருதயதா, வாத்ஸல்யம், லாவண்யம், ஸௌம்யதா, ஸ்திரதா (அதாவது, நல்லிதயம், அன்புடைமை, அழகுடைமை, இனிமையுடைமை, உறுதியுடைமை முதலான) ஆகிய குணநலன்கள் அனைத்தும் ஆன்ம சாதனையில் மாபெரும் உதவி புரியக் கூடிய மஹாரதிகள் ஆவர். அவர்களுடன் பெருந்தோள் உடைய அபிமன்யு, இவர்கள் அனைவரும் தனித்தனியாகத் தங்களுக்குரிய சங்குகளை ஊதினர். தோள்கள் காரியச் செயல்முறையின் சின்னமாகும். எப்பொழுது மனமானது பயம் நீங்கப் பெற்று விடுகிறதோ, அப்பொழுதே அதனுடைய செயலாக்கத்தின் எல்லை விரிவடைந்து விடுகிறது.

ராஜன்! இவர்கள் அனைவரும் தனித்தனியான சங்குகளை ஊதினர். எல்லோருமே ஏதோ கொஞ்சம் தூரத்தை நிர்ணயிக்கின்றனர். எனவே, அவற்றைப் பின்பற்றுவது அவசியமானதாகும். ஆகவேதான், அவற்றின் பெயர்களும் எண்ணப்பட்டு உள்ளன. இதற்கும் மேல் உள்ள தூரமோ, மனம் மற்றும் புத்தி ஆகியவற்றிற்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட ஒன்றாகும். பகவான் தாமே முன்வந்து, அந்தகரணத்தில் (ஆழ்மனம்) எழுந்தருளி அந்த இடைவெளியைத் தீர்மானம் செய்கிறார். இங்கே அவர் தமது கடைக்கண் பார்வையை ஆன்ம சாதகனின்

மீது வைத்துக் கொண்டு, அவனது இதயத்தில் எழுந்தருளி நின்று கொள்கிறார். மேலும், அவனுக்கு அருகிலும் வந்து, நின்று கொண்டு தம்மை முழுவதுமாக அறிமுகப்படுத்திக் கொள்கிறார்.

**ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத்**
**நபஸ்ச்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யனுனாதயன் (19)**

அந்தப் பயங்கரமான ஓசையானது ஆகாயம் மற்றும் பூமி ஆகியவற்றையும் கூட அலறச் செய்தபடியே திருதராஷ்டிரரின் பிள்ளைகளின் இதயங்களையும் பிளந்து கொண்டு சென்றது. பாண்டவர்களின் பக்கத்திலும்தான் படைவீரர்கள் நின்று கொண்டிருந்தனர். ஆனால் இதயம் பிளந்ததென்னவோ, திருதராஷ்டிரரின் புத்திரர்களுக்குத்தான். உண்மையில், பாஞ்சஜன்யம், தெய்வீக ஆற்றலின்மீது ஆளுமை, முடிவு என்பதே இல்லாத இறைவனை அடைவதில் வெற்றி பெறல், தீயவை அழிதல், நல்லவை பெருகுதல் ஆகியவற்றின் கோஷங்கள் தங்கு தடையின்றி பெருக ஆரம்பித்து விட்டதென்றால், குருக்ஷேத்திரம், அசுரக் குணம், புறமுக எண்ணவோட்டங்களின் இதயம் பிளவுபட்டு விடுகிறது. அவற்றின் வலிமை கொஞ்சம் கொஞ்சமாகக் குன்றத் தொடங்கி விடுகிறது. முழுமையான வெற்றி கிடைத்து விட்டால் மோகமயமான எண்ணவோட்டங்கள் அனைத்தும் முழுவதுமாக அமைதியடைந்து விடுகின்றன.

**அத வ்யவஸ்திதான்த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ரான்கபித்வஜ**
**ப்ரவ்ருத்தே ஷஸ்த்ரஸம்பாதே தனுருத்யம்ய பாண்டவ (20)**

**ஹ்ருஷீகேசம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே**
**அர்ஜுன உவாச**
**ஸேனயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மேஅச்யுத (21)**

புலன் அடக்கம் மற்றும் மனக் கட்டுப்பாடு ஆகியவற்றின் உருவமான சஞ்ஜயன் அஞ்ஞானத்தால் சூழப்பட்டுள்ள மனத்திற்கு இவ்வாறு சொல்லிப் புரியவைக்கிறார்: ஹே ராஜன்! அதற்குப் பிறகு **'கபித்வஜ:'** வைராக்கியத்தின் உருவமான **ஹனுமான்–!** எவருக்கு வைராக்கியமே கொடியாக அமைந்துள்ளதோ (கொடியானது தேசத்தின் அடையாளச் சின்னமாக மதிக்கப்படுகிறது. ஒருசிலர், 'கொடியானது எப்போதும் காற்றில் அசைந்தாடிக் கொண்டு சஞ்சலத்துடனே காணப்படுகிறது. எனவேதான் 'கபித்வஜ' எனப்படுகிறது' என்று சொல்கின்றனர். ஆனால், அப்படி ஒன்றும் இல்லை. இங்கே 'கபி' எனப்படுவது சாதாரணக் குரங்கு அல்ல. சாட்சாத் ஹனுமானே ஆவார். அவர் மான – அவமானங்களை எல்லாம் அழித்துப் போட்டவர். **'சம மான நிராதர் ஆதரஹீம்'** (மானஸ் 7/13/8)

– 'மான அவமானங்களைச் சமமாக எடுத்துக் கொள்ளும் வல்லமை உடையவர், பிரகிருதி அல்லது இந்தப் படைப்பில் காண்கின்ற கேட்கின்ற பொருட்களில் உள்ள விஷய இன்பங்கள் மீதான விருப்பத்தைத் துறப்பதே 'வைராக்கியம்' ஆகும். ஆகவே, அத்தகைய வைராக்கியமே எவருக்குக் கொடியாக அமைந்துள்ளதோ) அந்த அர்ஜுனன் அணிவகுத்து நிற்கின்ற திருதராஷ்டிரரின் புத்திரர்களின் படையை நோக்கியவாறே, ஆயுதங்களைச் செலுத்துவதற்குத் தயாரான நிலையில் தன்னுடைய வில்லை எடுத்தபடியே, **'ஹ்ருஷிகேசம்'** – இதயம் முழுவதையும் அறிந்தவராகிய, அந்த யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணரிடம் இவ்வாறு கூறலானான்: "ஹே! அச்யுதரே! (எப்போதும் தன்னிலை தவறாதவர். என்னுடைய இரதத்தை இருசேனைகளுக்கும் மத்தியில் நிறுத்துங்கள்." இது தேரோட்டிக்கு இடப்பட்ட கட்டளையன்று. மாறாக, இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் பணிவுடன் செய்யப்படுகின்ற பிரார்த்தனை ஆகும். எதற்காக நிறுத்த வேண்டும்?

**யாவதேதான்னிரீக்ஷேஹம் யோத்து காமானவஸ்த்திதான்**
**கைர்மயா ஸஹ யோத்தவ்யமஸ்மின்ரணஸமுத்யமே (22)**

எதுவரைக்கும் நான் இங்கே யுத்தத்திற்காக ஆசைப்பட்டு நின்று கொண்டிருப்பவர்களை நன்றாகப் பார்க்கவில்லையோ, மேலும் இந்த யுத்தத்தில் நான் யார் யாருடன் போர் புரிவது உகந்தது?– இந்த யுத்தத்தில் நான் யார் யாருடன் எல்லாம் போர் புரிந்தாக வேண்டும்? என்பதை எப்படி அறிவேன்?

**யோத்ஸ்யமானானவேக்ஷேஹம் ய ஏதேஅத்ர ஸமாகதா:**
**தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர்யுத்தே ப்ரியசிகீர்ஷவ : (23)**

தீய அறிவினனான துரியோதனனுக்கு இந்த யுத்தத்தில் நன்மை ஏற்பட வேண்டும் என்ற விருப்பத்துடன் எந்தெந்த அரசர்கள் எல்லாம் இந்தப் படையில் வந்திருக்கிறார்களோ, அந்த யுத்தம் புரியப் போகின்றவர்களை எல்லாம் நான் சரிவரப் பார்க்க வேண்டும். எனவே தேரைக் கொண்டு போய் நிறுத்துங்கள். மோகமே உருவமான துரியோதனன். மோகமயமான எண்ணவோட்டங்களின் நன்மையை விரும்புகின்ற எந்தெந்த அரசர்கள் எல்லாம் இந்த யுத்தத்திற்கு வந்திருக்கிறார்களோ, அவர்களை நான் பார்த்துக் கொள்கிறேன்.

**ஸஞ்ஜய உவாச**
**ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேஷேன பாரத**
**ஸேனயோருபயோர்மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் (24)**
**பீஷ்மத்ரோணப்ரமுகத: ஸர்வேஷாஞ் ச மஹீக்ஷிதாம்**

**உவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான் குருனிதி (25)**

ஸஞ்ஜயன் கூறலானான்: உறக்கத்தை வென்ற அர்ஜுனன் மூலமாக இவ்வாறு கேட்டுக் கொள்ளப்பட்டதை அடுத்து இதயத்தை அறிந்தவரான ஸ்ரீகிருஷ்ணர் இரண்டு சேனைகளுக்கும் மத்தியில் பீஷ்மர், துரோணர் மற்றும் **'மஹீக்ஷிதாம்'** – உடல் என்பதன் உருவகமான இந்தப் பூமியில் அதிகாரத்தைச் செலுத்துகின்ற எல்லா அரசர்களுக்கும் மத்தியில் கொண்டு போய் உத்தம இரதத்தை நிறுத்தி விட்டுக் கூறினார் : "பார்த்தனே! இங்கே ஒன்று கூடியிருக்கும் கௌரவர்களைப் பார்." இங்கே கூறப்படுகின்ற உத்தம இரதம் என்பது ஏதோ தங்கம் மற்றும் வெள்ளியால் செய்யப்பட்டதன்று. உலகியலில் உத்தமம் என்பதற்கான விளக்கவுரை, அழியும் பொருட்களுக்கு அனுகூலமாக அல்லது பிரதிகூலமாக இருப்பதை அனுசரித்தே தரப்படுகிறது. ஆனால், அத்தகைய விளக்கவுரை முழுமையானதன்று, எது நம்முடைய ஆத்மா மற்றும் நம்முடைய ஸ்வரூபத்துடன் எப்போதும் நம்மைச் சேர்த்து வைக்கவல்லதோ அதுதானே உத்தமம்? அதற்குப் பின்னால் '**அனுத்தம்**' எந்தவொரு குறைபாடும் இல்லாமல் இருக்க வேண்டும்.

**தத்ராபச்யத்ஸ்த்திதான்பார்த்த : பித்ருனதபிதாமஹான்**
**ஆசார்யான்மாதுலான்ப்ராத்தருன்புத்ரான்பௌத்ரான்**
**ஸகீன்ஸ்ததா (26)**
**ஸ்வ சுரான் ஸுஹ்ருதஸ்சைவ ஸேனயோருபயோரபி**

அதற்குப் பிறகு குறிதவறாத இலட்சியம் உடைய, அழியும் உடலையே இரதமாகக் கொண்ட பார்த்தன் அந்த இரு சேனைகளில் நின்று கொண்டிருந்த தந்தையின் சகோதரர்களையும், தாத்தாக்களையும், ஆச்சார்யர்களையும், மாமாக்களையும், சகோதரர்களையும், மகன்களையும், பேரன்களையும், நண்பர்களையும், மாமனார்களையும் மற்றும் நலம் விரும்பிகளையும் பார்த்தான். இரண்டு படைகளிலும் அர்ஜுனனுக்குத் தன்னுடைய குடும்பம், மாமாவின் குடும்பம், மாமனாரின் குடும்பம், நலம் விரும்பிகள் மற்றும் குருஜனங்கள் மட்டுமே தென்படுகின்றனர். மஹாபாரதக் காலத்தில் உள்ள கணக்கீட்டின்படி, பதினெட்டு அக்குரோணி (அக்ஷௌஹிணி) என்பது ஏறத்தாழ நாற்பது இலட்சத்திற்கு அருகில் வருகிறது. ஆனால், இன்றைய நடைமுறையில் உள்ள கணக்கீட்டின்படியோ, பதினெட்டு அக்குரோணி என்பது **ஆறரை அரப்** – அதாவது, அறுநூற்று ஐம்பது கோடி வரை வருகிறது. இது இப்போதுள்ள உலக மக்கட்தொகைக்குச் சமமாகும். இவ்வளவு பேருக்கும், உலகளாவிய அளவில் உணவு மற்றும் இருப்பிட வசதிகளை ஏற்படுத்துவதில் இன்றுவரை பிரச்சினை நீடிக்கவே செய்கிறது. இத்தனை பெரிய மக்கள் கூட்டத்தில் அர்ஜுனனுக்கு

உண்மையில் நான்கைந்து குடும்பங்கள் மட்டும்தான் உறவினர்கள் ஆவர். யாருக்காவது அவ்வளவு பெரிய உறவினர் குடும்பம் இருக்குமா என்ன? கண்டிப்பாக இல்லை. அது இதய தேசத்தின் வர்ணனை ஆகும்.

**தான்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய : ஸர்வான்பந்தூனவஸ்த்திதான் (27)**
**க்ருபயா பரயாவிஷ்டோ விஷீதன்னிதமப்ரவீத்**

இந்தமுறையில் நின்று கொண்டு இருக்கும் அந்த ஒட்டு மொத்த உறவினர்களையும் பார்த்து அளவிடமுடியாத அளவு கருணைவசப்பட்டவனாக, அந்தக் குந்தியின் மகனான அர்ஜுனன் மிகுந்த மனவருத்தத்துடன் கூறினான். அர்ஜுனன், மன வருத்தம் கொள்ளத்தொடங்கினான். ஏனெனில், அவர்கள் அனைவருமே தன்னுடைய உறவினர்கள், மற்றும் குடும்பத்தினர் மட்டுமே என்பது தெரிகிறது.எனவே கூறுகிறான்.

**அர்ஜுன உவாச**
**த்ருஷ்ட்வேம் ஸ்வஜனம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்த்திதம் (28)**
**ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிசுஷ்யதி**
**வேபதுஷ்ச சரீரே மே ரோமஹர்ஷஸ்ச்ச ஜாயதே (29)**

"ஹே கிருஷ்ணா! யுத்தம் செய்யும் விருப்பத்துடன் இங்கே கூடியிருக்கும் சுற்றத்தார்களின் கூட்டத்தைப் பார்த்ததும் என்னுடைய உடல் தளர்கிறது; வாய் உலர்கிறது மற்றும் எனது உடம்பெல்லாம் நடு நடுங்க ஆரம்பிக்கிறது, மயிர்கூச்செரிகிறது. இது மட்டுமல்ல.

**காண்டீவம் ஸ்த்ரம்ஸதே ஹஸ்தாத்வக்சைவ பரிதஹ்யதே**
**ந ச ஷக்னோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மன: (30)**

எனது கையில் இருக்கும் காண்டீவம் நழுவுகிறது. உடம்பெல்லாம் எரிகிறது. அர்ஜுனனுக்குக் காய்ச்சல் வந்தது போன்ற உணர்வு ஏற்பட்டது. அவன், "இது எந்தமாதிரியான யுத்தம்? எல்லாம் உறவினர்கள் அல்லவா நின்று கொண்டிருக்கிறார்கள்?" என்று எண்ணி வெகுண்டு எழுந்தான். அர்ஜுனனுக்கு பிரமை உண்டானது. அவன் கூறலானான்:" இனிமேல் நிற்பதற்குக்கூட வலிமையற்றவனாக உணர்கிறேன். இதற்குமேல் பார்க்கின்ற வலிமையும் எனக்கு இல்லை."

**நிமித்தானி ச பஷ்யாமி விபரீதானி கேஷவ**
**ந ச ஷ்ரேயோஅனுபஷ்யாமி ஹத்வா ஸ்வஜனமாஹவே (31)**

கேசவா! இந்தப் போரில் விபரீதமான பல அறிகுறிகளைக் காண்கிறேன்.

இந்த யுத்தத்தில் சொந்தக் குலத்தைக் கொல்வதால் பரம நன்மை ஒன்றும் கிடைக்கப் போவதில்லை எனும்போது குலத்தை அழிப்பதால் நன்மை எப்படி ஏற்படும்?

**ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச**
**கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர் ஜீவிதேன வா (32)**

மொத்த உறவினர்களும் யுத்தத்தின் முகாந்தரத்தில் உள்ளனர். இவர்களை யுத்தத்தில் கொன்று கிடைக்கும் வெற்றியும், அந்த வெற்றியால் கிடைக்கும் ராஜ்ஜியமும் மற்றும் ராஜ்ஜியத்தால் கிடைக்கும் சுகமும் அர்ஜுனனுக்கு வேண்டியதில்லை. அவன் கூறுகிறான்: "கிருஷ்ணா! நான் வெற்றியை விரும்பவில்லை. ராஜ்ஜியம் மற்றும் சுகம் ஆகியவற்றையும் கூட விரும்பவில்லை. கோவிந்தா! நமக்கு இந்த ராஜ்ஜியம் அல்லது போகம் மற்றும் வாழ்க்கை ஆகியவற்றால்கூட என்ன பயன் கிடைத்து விடப் போகிறது?" இதுபற்றிக் கூறுகிறான்.

**யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா: ஸுகானி ச**
**த இமேஅவஸ்த்திதா யுத்தே ப்ராணாம்ஸ்த்யக்த்வா தனானி ச (33)**

எவர்களுக்காக இந்த ராஜ்ஜியம், சுகம், போகம் மற்றும் அனைத்தையும் விரும்புகிறோமோ, அந்த சொந்த பந்தங்களே வாழ்க்கையின் எல்லா ஆசைகளையும் துறந்துவிட்டுப் போர்க்களத்தில் நின்று கொண்டிருக்கிறார்கள். நாம் ராஜ்ஜியத்தை விரும்பினோம், ஆனால், அதெல்லாம் சொந்தக்காரர்களுடன் சேர்ந்து அனுபவிப்பதற்காகத்தான். போகம், சுகம் மற்றும் பொருட் செல்வம் ஆகியவற்றின் மீது தாகம் இருந்ததுதான். ஆனால், அதையெல்லாம் சுற்றத்தார் மற்றும் சொந்தபந்தங்களுடன் சேர்ந்து அனுபவிக்கலாமே என்ற எண்ணத்தால்தான். ஆனால், எப்பொழுது அவர்கள் அனைவருமே உயிர் மீது உள்ள ஆசையை வெறுத்து போருக்குத் தயாராகி விட்டார்களோ, அதற்குப்பிறகு, எனக்கு இந்த சுகம், ராஜ்ஜியம் மற்றும் போகம் ஆகியவை வேண்டியதில்லை. அவையெல்லாம் எனக்கு இவர்களுக்காகத்தான் பிரியமாக இருந்தன. அவர்களைவிட்டுப் பிரிந்து போனபிறகு, நமக்கு அவற்றின் தேவையும் அவசியம் இல்லாமல் போய்விட்டது. எதுவரைக்கும் குடும்பமும், உற்றார் உறவினர்களும் இருக்கிறார்களோ அதுவரைக்கும் விஷய இன்ப வாசனைகளும் இருக்கவே செய்கின்றன. குடிசையில் வாழ்பவன்கூட தன்னுடைய குடும்பம், நண்பர்கள் மற்றும் உற்றார் உறவினர்களைக் கொன்று விட்டுக் கிடைக்கின்ற உலகளாவிய சாம்ராஜ்ஜியத்தை ஏற்றுக் கொள்ளமாட்டான். அர்ஜுனனும்கூட இதையேதான் கூறுகிறான்: "நமக்கு போகத்தின் மீது விருப்பமாக இருந்தது, வெற்றி விருப்பமாக இருந்தது, ஆனால்

அதெல்லாம் யாருக்காக? எப்பொழுது அவர்களே இல்லை என்றாகிவிட்டதோ, இந்த போகங்கள் கிடைத்துதான் என்ன பயன் இருக்கிறது? இந்த யுத்தத்தில் யாரைக் கொல்ல வேண்டியிருக்கிறது?

**ஆசார்யா : பிதர : புத்ராஸ்ததைவ ச பிதாமஹா:**
**மாதுலா : ஷ்வசுரா : பௌத்ரா : ஷ்யாலா : ஸம்பந்தினஸ்ததா (34)**

இந்த யுத்தத்தில் ஆச்சாரியர்கள், பெரியப்பாக்கள், சித்தப்பாக்கள், பிள்ளைகள், மற்றும் இதே முறையில் தாத்தாக்கள், மாமாக்கள், மாமனார்கள், பேரன்கள், மைத்துனர்கள் என்று அனைவருமே உறவினர்களாக அல்லவா நின்று கொண்டிருக்கிறார்கள்.

**ஏதான்ன ஹந்துமிச்சாமி க்னதோபி மதுஸூதன**
**அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ : கிம் நு மஹீக்ருதே (35)**

ஹே! மதுசூதனா! என்னைக் கொன்றாலும் சரி, அல்லது மூவுலகங்களின் ராஜ்ஜியங்கள் கிடைத்தாலும் சரி, இவர்களையெல்லாம் கொல்வதற்கு நான் விரும்பவில்லை. இவ்வாறு இருக்க இந்த பூமியை அடைவது பற்றித் தனியாக என்ன சொல்ல வேண்டியிருக்கிறது?

பதினெட்டு அக்குரோணி (அக்சௌஹிணி) சேனையிலும் அர்ஜூனனுக்குத் தன்னுடைய குடும்பமே தென்படுகிறது. இவ்வளவு அதிகமான சுற்றத்தார்கள் என்பதுதான் என்ன? உண்மையில், அனுராகமே (இறைப்பற்றே) அர்ஜூனன் ஆவான். இறைவழிபாட்டின் ஆரம்பத்தில், ஒவ்வொரு அனுராகிக்கும் முன்பு எழுகின்ற கேள்வி இதுதான். எல்லோருமே இப்படித்தான் நினைக்கிறார்கள்: “நாம் இறைவழிபாடு செய்வோம்; அந்தப் பரம சத்தியப் பொருளை அடைவோம்,” ஆனால் ஏதேனும் ஒரு அனுபவம் வாய்ந்த சத்குருவின் சரணத்தை அடைந்தபிறகு, அனுராகி ஒருவருக்குள் எப்பொழுது இந்த க்ஷேத்திர –க்ஷேத்திரக்ஞருக்கு இடையிலான மோதல் உருவாக ஆரம்பிக்கிறதோ, ‘நாம் யாருடன் சண்டை போட வேண்டியிருக்கிறது, என்பது தெரியவருகிறதோ, அப்பொழுதே மனத்தளர்ச்சியடைந்து போய்விடுகிறான். அவன், நமது தந்தையின் உறவினர்கள், மாமனாரின் உறவினர்கள், மாமாவின் உறவினர்கள், மற்றும் ‘நலம் விரும்பிகள், நண்பர்கள், குருஜனங்கள் அனைவரும் நம்முடனே இருக்கவேண்டும், எல்லோரும் சுகமாக வாழ வேண்டும். இவர்கள் அனைவருக்கும் நல்லதொரு வாழ்க்கையை அமைத்துக் கொடுத்தபடியே, நாமும் பரமாத்ம ஸ்வரூபத்தையும் அடைந்து விடுவோம்’ என்று விரும்புகிறான். ஆனால், இறை ஆராதனையில் தீவிரமாக ஈடுபட வேண்டுமென்றால், சொந்த பந்தங்கள் அனைவரையும் உதறித் தள்ள

வேண்டும் என்பது எப்பொழுது அவனுக்குப் புரியவருகிறதோ, இந்த உறவுகளின் மீதுள்ள மோகத்தை அழித்தேயாக வேண்டும் என்பது எப்பொழுது அவனுக்குத் தெளிவாகத் தெரிய ஆரம்பிக்கிறதோ அப்பொழுதே அவன் மாபெரும் அதிர்ச்சிக்கு உள்ளாகி விடுகிறான்.

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் பின்வருமாறு கூறுவதுண்டு: இறந்து போவதும் சாதுவாக மாறுவதும் ஒன்றுதான். இந்தப் படைப்பு முழுவதும் சாதுவுக்கென்று வேறு யார் வேண்டுமானால் இருக்கலாம். ஆனால், குடும்பத்தினர் என்ற பெயரில் ஒருவரும் இருக்க முடியாது, ஒருவேளை அப்படி இருந்தார்கள் என்றால் அங்கே பிடிப்புணர்வு இருக்கிறது என்றுதானே அர்த்தம்! மோகம் எங்கே அழிந்து விட்டது என்று ஏற்றுக் கொள்ள முடியும்? எதுவரை இந்தப் பிடிப்புணர்வு இருக்கிறதோ, அதனை முழுமையாகத்துறத்தல், அந்தப் பிடிப்புணர்வின் நிலைத்தன்மையிலிருந்து விடுபடுதல், இதற்குப் பிறகுதான் அவனுக்கு வெற்றி என்பது கிடைக்கும். இந்த சொந்த பந்தங்களின் விரிவைத்தானே உலகம் என்கிறோம்.அவை மட்டும் இல்லையென்றால் இந்த உலகில் நம்முடையதென்று என்ன உள்ளது." **'துளஸிதாஸ் கஹ் சித்விலாஸ் ஜக், பூஜத், பூஜத் பூஜை' (வினய பத்திரிகா 124) –** 'மனத்தின் விரிவுதான் உலகம்' என்று துளஸிதாஸர் கூறுகிறார். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரும்கூட 'மனத்தின் விரிவுதான் உலகம்' என்றுரைக்கிறார். எவர் இந்த மனத்தின் ஆளுமையைக் கட்டுப்படுத்தி விடுகிறாரோ, அவர் இந்த சராசர உலகத்தையும் வென்று விடுகிறார் **இஹைவ தைர்ஜித : ஸர்க்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன : '(கீதை 5/19)**

அர்ஜுனன் மட்டும்தான் மனக்கலக்கமடைந்தான் என்பதன்று பேச்சு, அனுராகம் (இறைப்பற்று) அனைவரின் இதயத்திலும் இருக்கவே செய்கிறது. ஒவ்வொரு அனுராகிக்கும் இந்த மனக்கலக்கம் ஏற்படவே செய்கிறது. அவனுக்குத் தன்னுடைய சொந்தபந்தங்களின் நினைவு வருகிறது. அவன் முதலில், "இந்த இறைவழிபாட்டினால் ஓரளவு இலாபம் உண்டாகும், அதனால் அனைவரும் இன்பம் அடைவர், இவர்களுடன் சேர்ந்து நாமும் அந்த இன்பத்தை அனுபவிப்போம்" என்றே நினைக்கிறான். எப்பொழுது அவனுக்கு இவர்கள் யாரும் கூடவே இருக்கப் போவதில்லை என்பது தெரிய வருகிறதோ, அப்பொழுது அவன் இந்த சுகத்தைப் பெற்று என்ன செய்யப் போகிறோம்? என்று எண்ணத் தொடங்குகிறான். அர்ஜுனனுடைய பார்வை ராஜ்ஜியம் மற்றும் சுகம் ஆகியவற்றின் மீது மட்டுமே இருக்கிறது. அவன் மூவுலக சாம்ராஜ்ஜியத்தை மட்டுமே சுகத்தின் இறுதி எல்லையாகப் புரிந்து கொண்டிருந்தான். அதற்கு மேலானதாகவும் ஒரு உண்மை இருக்கிறது என்பதோ அதைப் பற்றிய எந்தவொரு

அறிவுமோ இப்போதைய நிலையில் அர்ஜுனனுக்கு இல்லை.

**நிஹத்ய தார்த்தராஷ்ட்ரான்ன : கா ப்ரீத்தி: ஸ்யாஜ்ஜனார்த்தன**
**பாபமேவாஸ்ரயேதஸ்மான்ஹத்வைதானாததாயின : (36)**

ஹே! ஜனார்த்தனா! திருதராஷ்டிரருடைய புதல்வர்களைக் கொன்றாலும்கூட நமக்கு என்ன மகிழ்ச்சி கிடைக்கப் போகிறது? எங்கே 'திருதராஷ்டிரம்' அதாவது அசட்டுத்துணிச்சலின் ராஜ்ஜியம் இருக்கிறதோ, அதனின்று தோன்றிய மோகத்தின் உருவமான துரியோதனனையும் மற்றவர்களையும் கொன்றாலும் கூட நமக்கு என்ன மகிழ்ச்சி உண்டாகப் போகிறது? இந்தப் பாவிகளைக் கொன்றால் நம்மையும் பாவம்தான் பிடிக்கும். எவன் வாழ்க்கையில் சிறிதளவு பயன் கிடைக்கும் என்பதற்காக அநீதியைக் கடைப்பிடிக்கிறானோ, அவனே பாவி என்றழைக்கப்படுகிறான். ஆனால், உண்மையில் ஆன்மாவின் வழியில் தடையை உண்டுபண்ணுகிறவனே மாபெரும் பாவியும் கொடியவனும் ஆவான். ஆத்மாவை தரிசனம் செய்யும் பாதையில் தடையாக நிற்கும் காமம், கோபம், லோபம், மோகம் முதலான தீய எண்ணங்களின் கூட்டமே உண்மையில் பாவிகள் ஆகும்.

**தஸ்மான்னார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ரான்ஸ்வபாந்தவான்**
**ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகின : ஸ்யாம மாதவ (37)**

ஆகவே மாதவரே! நம்முடைய உறவினரான திருதராஷ்டிரரின் புதல்வர்களைக் கொல்ல நாம் தகுதியுடையவர்கள் இல்லை. அவர்களை சொந்த பந்தம் என்று எவ்வாறு ஏற்றுக் கொள்வது? உண்மையில் அவர்கள் எதிரிகளே அல்லவா? சரியாகச் சொல்வதென்றால் உடல் ரீதியான உறவுகள் அனைத்தும் அஞ்ஞானத்தினால் உண்டாகிறது. இவர் மாமா, மாமனார், உறவினர் கூட்டம் இவை எல்லாம் அஞ்ஞானமே ஆகும். எப்பொழுது இந்த உடல் என்பதே அழியக் கூடியது என்றாகி விட்டதோ, அதற்குத் தொடர்புடைய உறவுகள் மட்டும் எங்கே நிலையாக இருக்கப்போகிறது? மோகம் இருக்கும்வரைதான், நம்முடைய சொந்தபந்தங்கள், நம்முடைய உலகம் என்ற நட்புணர்வுகள் எல்லாம். மோகம் இல்லையென்றால் ஒன்றுமே கிடையாது. எனவேதான் எதிரிகளும்கூட அர்ஜுனனுக்குத் தன்னுடைய சொந்தபந்தங்களாகத் தெரிகிறது. அவன், 'தன்னுடைய குடும்பத்தையே கொன்றொழித்து விட்டு நாம் மட்டும் எவ்வாறு இன்பமாக இருக்க முடியும்?' என்று கேட்கிறான். ஒருவேளை இந்த அஞ்ஞானம் (மோகம்) மட்டும் இல்லையென்றால் குடும்பம் என்பதற்கும் நிலைத்தன்மை இல்லாதிருப்பது தெரிந்துவிடும். இந்த அஞ்ஞானமே ஞானம் பெறுவதற்கான தூண்டுகோலும் ஆகும். பர்த்ருஹரி, துளஸிதாஸர் முதலான எண்ணற்ற மகான்களுக்கு வைராக்கியம் பெறுவதற்கான தூண்டுணர்வு அவர்களுடைய

மனைவியரிடம் இருந்து கிடைத்தது. இன்னும் சிலரோ சிற்றன்னையின் கொடுமைகளுக்கு ஆளாகி மனமுடைந்து இந்த வைராக்கியப் பாதையில் தீவிரமாக முன்னேறிச் சென்றதும் காணக் கிடைக்கிறது.

**யத்யா ப்யேதே ந பஷ்யந்தி லோபோபஹத சேதஸ :**
**குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் (38)**

பேராசையினால் வழிதவறிச் செல்லும் அறிவுடைய இவர்கள் குலநாசத்தால் ஏற்படும் குற்றம் மற்றும் நண்பர்களுக்குத் துரோகம் இழைப்பதால் விளையும் பாவம் ஆகியவற்றைப் பற்றி நினைக்காமல் இருப்பதென்னவோ அவர்களுடைய குறைதான். அப்படி இருந்தபோதிலும்.

**கதம் ந ஜ்ஞேயமஸ்மாபி : பாபாதஸ்மான்னிவர்த்திதும்**
**குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர்ஜனார்த்தன (39)**

ஜனார்த்தனா! குலநாசத்தினால் ஏற்படும் குற்றங்களை அறிந்த நாமும் ஏன் இந்தப் பாவத்திலிருந்து விடுபட்டு விடுவதற்கு சிந்திக்கக் கூடாது? ‘நான் மட்டும்தான் பாவம் செய்கிறேன்’ என்பதல்ல பேச்சு, நீங்களும் இதை மறந்து செயல்படுகிறீர்கள்’— என்று அவன் ஸ்ரீகிருஷ்ணரின் மீதும் குற்றம் சுமத்தினான். இப்போதைய நிலையில், அவன் தன்னை ‘ஸ்ரீகிருஷ்ணருக்கு எந்தவிதத்திலும் குறைந்தவன் இல்லை’ என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தான். ஒவ்வொரு புதிய சாதகனும் சத்குருவின் சரணத்தை அடைந்த பிறகும் இதேபோன்றுதான் விவாதிக்கிறான். மேலும், அவன் தன்னை அறிவு நிலையில் அவரைவிடவும் எந்தவிதத்திலும் குறைந்தவன் இல்லை என்றேதான் நினைத்துக் கொள்கிறான். இதையேதான் அர்ஜுனனும் வெளிப்படுத்துகிறான். ‘அவர்களுக்குத் தெரியாவிட்டால் போகட்டும். ஆனால் நானும் நீங்களும் நன்றாகத் தெரிந்து கொண்டதுதானே’ என்கிறான். அவன் குலநாசத்தினால் ஏற்படும் குற்றங்களைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டியது அவசியம் என்றும் கூறினான். குலநாசத்தினால் ஏற்படும் குற்றங்கள் என்ன?

**குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸனாதன:**
**தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்னமதர்மோபிபவத்யுத (40)**

குலத்தை அழிப்பதால் சனாதன குலதர்மம் அழிந்து போய்விடும். அர்ஜுனன் குலதர்மம், குல வழக்கம் ஆகியவற்றை சனாதன தர்மம் என்று புரிந்து வைத்திருந்தான். தர்மம் அழிந்து போய்விட்டால் ஒட்டு மொத்தக் குலத்தையும் பாவம் வந்து அழுத்தி விடும்.

**அதர்மாபிபவாத்க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய:**
**ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: (41)**

கிருஷ்ணா! பாவம் அதிகமாகிவிட்டால் குலப் பெண்கள் கெட்டுப் போவார்கள். வ்ருஷ்ணிகுலத் தோன்றலே! குலப் பெண்கள் கெட்டுப் போனபிறகு வர்ணக் கலப்பு உண்டாகும். 'குலப் பெண்கள் கெடுவதால் வர்ணக்கலப்பு உண்டாகும்' என்பதே அர்ஜுனனின் கணிப்பு. ஆனால், ஸ்ரீகிருஷ்ணர் இதற்கு மறுப்புத் தெரிவித்து, இனிவரும் பகுதியில் 'நான் அல்லது ஆன்மாவில் நிலைபெற்றுள்ள மஹாபுருஷர் ஒருவேளை இறை ஆராதனை வரிசைக் கிரமத்தில் பிரமையை உண்டாக்கி விட்டோமென்றால் மட்டுமே வர்ணக் கலப்பு ஏற்படும்' என்று கூறுகிறார். வர்ணக் கலப்பினால் ஏற்படும் குற்றங்களை அர்ஜுனன் தெளிவுபடுத்துகிறான்.

**ஸங்கரோ நரகாயைவ குலக்னானாம் குலஸ்ய ச**
**பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோதகக்ரியா : (42)**

வர்ணக்கலப்பு, குலத்தைக் கெடுப்பவர்களையும் குலத்தையும் நரகத்திற்குக் கொண்டு செல்வதற்காகவே உண்டாகிறது. இவர்களிடமிருந்து பிண்டம் பெற்று வாழும் இறந்து போன மூதாதையர்கள் (பித்ருக்கள்) அவர்களுடைய உலகங்களில் (பித்ரு லோகம்) இருந்து நழுவிக் கீழே விழ நேரிடும். நிகழ்காலம் நாசம் அடைகிறது. இறந்துபோன மூதாதையர்களும் (பித்ருக்கள்) வீழ்ச்சியடைகின்றனர். எதிர்காலத்தைச் சேர்ந்தவர்களும் விழவேண்டிவரும். இது மட்டுமல்ல.

**தோஷைரேதை: குலக்னானாம் வர்ணஸங்கரகாரகை:**
**உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாஷ்ச்ச சாஸ்வதா : (43)**

இந்த வர்ணக்கலப்பு மூலமாக உண்டாகும் குற்றங்களால் குலம் மற்றும் குலத்தைக் கெடுப்பவர்களின் சனாதன தர்மம் மற்றும் ஜாதி தர்மம் ஆகியவை எல்லாம் அழிந்து விடும் என்றான். மேலும் அர்ஜுனன், 'குலதர்மமே சனாதனம், குலதர்மமே சாஸ்வதம்' என்றே எண்ணிக்கொண்டு இருந்தான். ஆனால், ஸ்ரீகிருஷ்ணர் இதற்கு மறுப்புத் தெரிவித்ததுடன் இனிவரும் பகுதியில் "ஆத்மாவே என்றும் நிலையானது (சனாதனம்) என்றும் மாறாதது (சாஸ்வதம்)' என்றும் கூறுகிறார். உண்மையான சனாதன தர்மத்தை அறிந்து கொள்வதற்கு முன்பு மனிதர்கள் அனைவருமே தர்மத்தின் பெயரால் ஏதேனும் ஒரு மூடப் பழக்க வழக்கத்தையே பிடித்துக் கொண்டு உள்ளனர். சரி, இதேபோன்றுதான் அர்ஜுனனும் எதையோ அறிந்து வைத்திருந்தான். ஆனால், ஸ்ரீகிருஷ்ணரின்

வார்த்தைகளில் சொல்லப் போனால் அது வெறும் மூடநம்பிக்கை மட்டுமே ஆகும்.

**உத்ஸன்னகுலதர்மாணாம் மனுஷ்யாணாம் ஜனார்த்தன**
**நரகேஅநியதம் வாஸோ பவதீத்யனுசுஸ்ரும (44)**

ஜனார்த்தனா! அழிவடைந்த குலதர்மிகள் நெடுங்காலம்வரை நரகத்தில் உழல்கிறார்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். வெறுமனே குலதர்மம் மட்டும் அழிவதில்லை. மாறாக, என்றும் நிலையான, மாறாத சனாதன தர்மமும்கூட அழிந்து விடுகிறது. எப்பொழுது தர்மமே அழிந்து விடுகிறதோ, அத்தகைய மனிதர்கள் நீண்ட நெடுங்காலம் வரைக்கும் நரகத்தில் உழல்கிறார்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். பார்த்ததில்லை, ஆனால் கேட்டிருக்கிறேன்.

**அஹோ பத மஹத்பாபம் கர்த்தும் வ்யவஸிதா வயம்**
**யத்ராஜ்யஸுகலோபேன ஹந்தும் ஸ்வஜனமுத்யதா (45)**

அந்தோ! இதில் வருத்தம் என்னவென்றால் நாமெல்லாம் அறிவாளிகளாக இருந்தும்கூட மாபெரும் பாவத்தைச் செய்யத் தயாராகி விட்டோம். ராஜ்ஜியம் மற்றும் சுகம் ஆகியவற்றின் மீதுள்ள பேராசையினால் சொந்தக் குலத்தையே அழிப்பதற்கு ஆயத்தமாகி விட்டோம்.

இதுவரைக்கும் அர்ஜூனன் தன்னை எந்தவிதத்திலும் குறைந்தவன் இல்லை என்றேதான் எண்ணிக் கொண்டிருக்கிறான். ஆரம்பத்தில் ஒவ்வொரு சாதகனுமே இதேபோன்றுதான் பேசுகிறான். மஹாத்மா புத்தர் கூறுகிறார்: "மனிதன் எப்பொழுது அரைகுறை அறிவுடன் இருக்கிறானோ, அப்பொழுது தன்னை மாபெரும் ஞானி என்றே எண்ணிக் கொள்கிறான். அவன் எப்பொழுது இந்த அரைகுறை அறிவையும் தாண்டிச் சென்று முழுமையான அறிவுடையவனாக மாற ஆரம்பிக்கிறானோ, அப்பொழுது அவனே தன்னை மாபெரும் முட்டாளாகப் பார்க்கிறான்." சரியாக, இதேபோன்றுதான் அர்ஜூனனும் தன்னை ஞானி என்றே எண்ணிக் கொண்டிருக்கிறான். அவன் ஸ்ரீகிருஷ்ணருக்கே, "இந்தப் பாவத்தால் மேலான நன்மை ஒன்றும் கிடைக்கப்போவதில்லை என்பது மட்டுமல்ல பேச்சு. வெறும் இந்த ராஜ்ஜியம் மற்றும் சுகம் ஆகியவற்றின் மீது பேராசை கொண்டு நாமெல்லோரும் குலத்தையே அழிப்பதற்காக அல்லவா ஆயத்தமாகி விட்டோம்! மாபெரும் தவறை அல்லவா செய்யத் துணிந்து விட்டோம்!'' என்று அறிவுறுத்துகிறான். ஸ்ரீகிருஷ்ணருக்கும் ஒரு அதிர்ச்சியைக் கொடுக்கிறான். இறுதியாக அர்ஜூனன் தன்னுடைய முடிவைக் கூறுகிறான்.

**யதி மாமப்ரதீகாரமஷஸ்த்ரம் ஷஸ்த்ரபாணய:**
**தார்த்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ்தன்மே க்ஷேமதரம் பவேத் (46)**

ஒருவேளை, நிராயுதபாணியாக எதிர்கொண்டு போரிடாமல் நின்று கொண்டு இருக்கும் என்னை ஆயுதங்களுடன் நிற்கும் திருதராஷ்டிரரின் புத்திரர்கள் யுத்த களத்தில் கொன்றாலும் பரவாயில்லை, அவர்களால் அப்படிக் கொல்லப்படுவதே என்னைப் பொறுத்தவரையில் மேலான நன்மை பயக்கவல்ல செயலாகும் என்றே எண்ணுகிறேன். அர்ஜூனன் பெரிய அறிவாளி, தன்னைப் பலி கொடுத்தாவது யுத்தத்தை நிறுத்திவிட்டான் என்று வரலாறு கூறும். ஒன்றுமறியாத பச்சிளம் குழந்தைகளாவது நன்றாக வாழட்டும், குலம் தழைத்தோங்கட்டும் என்று எண்ணித்தான் அனைவருமே தங்கள் உயிரையும் பலிகொடுக்கின்றனர். மனிதன் வெளிநாடு சென்று வாழட்டுமே! ஆனால் சகல வசதிகளும் அவனுக்குக் கிடைத்து விட்டாலும்கூட, இரண்டு நாட்கள் கழிந்ததுமே அவனுக்குத் தான் விட்டு வந்த தன்னுடைய சின்னஞ்சிறு குடிசையைப் பற்றிய நினைப்பு ஏற்படத் தொடங்குகிறது. மோகம் அத்தனை வலிமை வாய்ந்தது. எனவேதான் அர்ஜூனன், “இந்த ஆயுதம் தரித்து நிற்கும் திருதராஷ்டிரரின் புதல்வர்கள் எதிர்த்துப் போரிடாத என்னை யுத்தகளத்தில் மோதிக் கொன்றாலும்கூட, என்னைப் பொறுத்தவரையில் மேலான நன்மை பயக்கவல்ல செயலாகும்” என்று கூறுகிறான். ஏனெனில் பிள்ளைகளாவது நன்றாக வாழ்வார்கள் அல்லவா!

**ஸஞ்ஜய உவாச**
**ஏவமுக்த்வார்ஜூன : ஸங்க்யே ரதோபஸ்த்த உபாவிசத்**
**விஸ்ருஜ்ய ஸஷரம் சாபம் ஷோக ஸம்விக்னமானஸ:(47)**

ஸஞ்ஜயன் கூறுகிறான்: “யுத்த களத்தில் துயரத்தால் நிலைகுலைந்த மனத்துடன் நின்று கொண்டிருந்த அர்ஜூனன் இவ்வாறெல்லாம் கூறியவாறே வில் மற்றும் அம்பறாத் தூணியைத் தூக்கிக் கீழே போட்டு விட்டுத் தேரின் பின்புறம் பேசாமல் உட்கார்ந்து விட்டான். அதாவது, அவன் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞருக்கு இடையிலான மோதலில் பங்கு கொள்வதில் இருந்து பின்வாங்கினான்.

**முடிவுரை:–**

கீதை க்ஷேத்திரம் – க்ஷேத்திரக்ஞருக்கு இடையிலான யுத்தத்தை வலியுறுத்துகின்றது. இது தெய்வீக மஹிமைகளுடன் கூடிய பகவத் ஸ்வரூபத்தைக் காட்டியருளுகின்ற தெய்வீகப் பாடலாகும். இந்தப் பாடல் அரங்கேறுகின்ற இடம் எதுவோ, அதுவே யுத்த பூமியாகிய இந்த உடல். இதில்

உள்ள இரண்டு விதமான எண்ணவோட்டங்கள் (மனப்போக்குகள்) – தர்ம க்ஷேத்திரம் மற்றும் குருக்ஷேத்திரம் ஆகும். இவற்றில் அணிவகுத்து நிற்கின்ற இரண்டு படைகளின் விபரம் அவற்றின் வலிமையின் தனித்தன்மை எடுத்துச் சொல்லப்பட்டது. சங்க நாதத்தின் மூலமாக ஒவ்வொரு எண்ணவோட்டத்தின் வீரதீரம் என்ன? என்பது பற்றி அறிவிக்கப்பட்டது. அதையடுத்து எந்தப் படையுடன் மோத வேண்டுமோ, அதைப் பற்றி நன்றாக ஆராயப்பட்டது. மொத்தப் படைகளின் எண்ணிக்கை பதினெட்டு அக்குரோணி (அக்ஸௌஹினி) என்று கணக்கிடப்பட்டது (ஏறத்தாழ அறுநூற்று ஐம்பது கோடியாகும்). ஆனால், உண்மையில் அவற்றின் எண்ணிக்கையோ கணக்கில் அடங்காதது. பிரகிருதி (குணங்கள்) அல்லது மனித சுபாவத்தில் அமைந்துள்ள கண்ணோட்டங்கள் இரண்டு வகைப்படும். ஒன்று இஷ்ட தெய்வமாகிய சத்குரு இறைவனை நோக்கிச் செல்கின்ற அகமுக எண்ணவோட்டம் அல்லது தெய்வீகக் குணங்கள் எனப்படுவது; மற்றொன்று, புறமுக எண்ணவோட்டம் அல்லது அசுரக் குணங்கள் எனப்படுவது. இரண்டுமே பிரகிருதி அல்லது மனித சுபாவத்தைச் சேர்ந்தவைதான். ஒன்று, இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவை நோக்கி அழைத்துச் செல்கிறது, பரம தர்மமாகிய பரமாத்மாவிடம் கொண்டு போய்ச் சேர்க்கிறது, மற்றொன்று, பிரகிருதி அல்லது படைப்பில் நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. முதலில் தெய்வீகக் குணங்களை வளர்த்துக் கொண்டே போய் அசுர குணங்கள் அழிக்கப்படுகின்றன. அதற்குப் பிறகு, என்றும் நிலையான, மாறாத சனாதன பரப்பிரம்மமாகிய முழுமுதற் கடவுளின் தரிசனம் மற்றும் அவரில் நிலைபெற்ற பிறகு, அத்துடன் சேர்த்தே தெய்வீகக் குணங்களின் அவசியமும் இல்லாமல் போய்விடுகிறது. யுத்தத்தின் விளைவு தெளிவுபடுகிறது.

அர்ஜுனனுக்குப் படையைப் பரிசீலித்தபோது தன்னுடைய சொந்த பந்தங்கள் மட்டுமே தென்பட்டது. அவர்களைத்தான் கொல்லவும் வேண்டியிருந்தது. உறவுகள் எதுவரையோ, அதுவரைதான் உலகமும். அனுராகத்தின் ஆரம்ப நிலையில் சொந்தக் குடும்பம் மற்றும் உறவினர்கள் மீதுள்ள மோகமே தடையாக இருக்கிறது. இந்த இனிமையான உறவு நிலைகள் அனைத்துமே ஒருபோதும் இல்லவே இல்லை என்ற அளவிற்குச் சிதைந்து உருத்தெரியாமல் போகப்போகிறது என்பதை அறிந்ததுமே ஆன்ம சாதகன் அதிர்ச்சியடைந்து போகிறான். சொந்த பந்தங்கள் என்ற உறவுகளை எல்லாம் அழிப்பதில் அவனுக்குத் தீமையே தட்டுப்படுகிறது. அவன் உடனே உலகவழக்கில் நிலவிவருகின்ற ஏதேனும் ஒரு மூட நம்பிக்கைக்குள் அடைக்கலம் புகுந்து தன்னைத்தற்காத்துக் கொள்ளத் துடிக்கிறான். அதாவது அர்ஜுனனை போன்றே நடந்து கொள்கிறான். அர்ஜுனன், குலதர்மமே என்றும் நிலையானது, மாறாதது, என்றுதானே கூறினான். இந்த யுத்தத்தால் என்றும் நிலையான, மாறாத தர்மம் (சநாதனம்) அழிந்து போய்விடும்,

குலப் பெண்கள் கெட்டுப் போவார்கள், வர்ணக் கலப்பு உண்டாகி விடும், அதனால் குலம் மற்றும் குலத்தைக் கெடுத்தவர்கள் அனைவரும் நீண்ட நெடுங்காலம் வரைக்கும் நரகத்தில் உழல வேண்டியிருக்கும் என்றான் அவன். அர்ஜுனன் தன்னுடைய அறிவிற்கு எட்டிய வரையில் அறிந்து வைத்திருக்கும் என்றும் நிலையான, மாறாத (சனாதனம்) தர்மத்தைப் பாதுகாப்பதற்காகத் துடித்துக் கொண்டிருக்கிறான். அவன் ஸ்ரீ கிருஷ்ணரிடம், நாமெல்லாம் அறிவாளிகளாக இருந்த பிறகும் கூட இந்த மாபெரும் பாவத்தை ஏன் செய்ய வேண்டும்? என்று வினவினான். அதாவது ஸ்ரீ கிருஷ்ணரும் கூட பாவம் செய்யப் போகிறார். இறுதியாக அவன் பாவத்தில் இருந்து தப்பிப்பதற்காக, 'நான் யுத்தம் செய்யமாட்டேன்!' என்று கூறியபடியே மனம் வெறுத்துப்போய் இரதத்தின் பின்பாகத்தில் பேசாமல் உட்கார்ந்துவிட்டான். க்ஷேத்திரம் – க்ஷேத்திரக்ஞ யுத்தத்தில் இருந்து பின்வாங்கினான்.

கீதையின் உரையாசிரியர்கள் இந்த அத்தியாயத்திற்கு அர்ஜுன விஷாத யோகம் என்று பெயரிட்டுள்ளனர். அர்ஜுனன் அனுராகத்தின் உருவகம் ஆவான். என்றும் நிலையான, மாறாத தர்மத்திற்காக (சனாதன தர்மம்) வருத்தம் கொள்கின்ற அனுராகியின் வேதனையே யோகத்திற்குக் காரணமாக அமைகிறது. இந்த வேதனை மனுவிற்கு உண்டானது.

**ஹ்ருதய் பஹுத் துக் லாக, ஜனம் கயவு ஹரி பகதி பினு (ராமசரித மானஸ் 1-142)**

'ஹரிபக்தியின்றி இதயம் மிகுந்த வேதனையில் உள்ளது.' சந்தேகத்தில் விழுந்துதான் மனிதன் வேதனைக்குள்ளாகிறான். அர்ஜுனனுக்கு, வர்ண சங்கரம் (வர்ணக் கலப்பு) உண்டாகிவிடும், அதனால் நரகத்தில் உழல வேண்டியிருக்கும் என்ற சந்தேகம் உண்டானது. என்றென்றும் நிலையான, மாறாத ஸனாதன தர்மம் அழிந்து போய்விடும் என்ற வேதனை அவனுக்கு இருந்தது. ஆகவே, சம்சய – விஷாத யோகம் (சந்தேக – வேதனை யோகம்) என்ற எளிமையான பெயரே இந்த அத்தியாயத்திற்குப் பொருத்தமாக இருக்கும். அத்துடன்

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே ஸம்சய விஷாத யோகோ நாம ப்ரதமோத்யாய:**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'சம்சய விஷாத யோகம்' அதாவது 'சந்தேக வேதனை யோகம்' என்ற பெயருடைய முதலாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ப்ரமானந்தஸ்ய சிஷ்யசுவாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத்பகவத் கீதாயா: யதார்த்த கீதா பாஷ்யே ஸம்சய விஷாத யோகோ நாம ப்ரதமோத்யாய:**

இது, ஸ்ரீமத் பரமஹம்ச பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'சம்சய விஷாத யோகம்' அதாவது 'சந்தேக வேதனை யோகம்' என்ற பெயருடைய முதல் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

// ஹரி: ஓம் தத் ஸத்//

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:
## இரண்டாவது அத்தியாயம்.

முதல் அத்தியாயம் கீதையின் ஆரம்ப நிலை ஆகும். அதில் ஆரம்பநிலையில் உள்ள ஆன்ம சாதகருக்கு ஏற்படும் மனக்குழப்பங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன. மோதப்போவது ஒட்டு மொத்த கௌரவர்களும் பாண்டவர்களும்தான். ஆனால், அர்ஜுனன் மட்டுமே சந்தேகத்திற்கு உரியவனாகக் கருதப்படுகிறான். அனுராகமே (இறையார்வமே) அர்ஜுனன் ஆவான். இஷ்ட தெய்வமாகிய சத்குருவின் மீது மட்டுமே கொள்கின்ற மாறாத இறைவிருப்பமே ஆன்ம சாதகனை க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞருக்கு இடையிலான மோதலில் ஈடுபடத் தூண்டுகிறது. அனுராகத்தின் ஆரம்பநிலையாகும் இது. பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் பின்வருமாறு கூறியருள்வார்: “ஒழுக்கமான இல்லற வாழ்க்கையில் இருந்து கொண்டிருக்கையில் எப்பொழுது இறைவனை நினைத்து மனம் வருந்துகிறதோ, கண்ணீர் பெருகுகிறதோ, தொண்டை அடைத்துக் கொள்கிறதோ, அப்பொழுதே இறைவழிபாடு ஆரம்பித்துவிட்டது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.” அனுராகம் இருந்தால் இவை அனைத்தும் தானாகவே வந்துவிடும். அதில் தர்மம், நியமம், சத்ஸங்கம், உணர்வு (பாவனை) ஆகிய அனைத்தும் அடங்கியுள்ளன.

அனுராகத்தின் ஆரம்பநிலையில் குடும்ப உறவுகளின் மீதுள்ள மோகம் தடையாக அமைகிறது. ஆரம்பத்தில் மனிதர்கள் எல்லோருமே அந்தப் பரமசத்தியப் பொருளை அடைந்து விட வேண்டும் என்றுதான் விரும்புகிறார்கள். ஆனால், கொஞ்ச தூரம் முன்னேறிச்சென்ற உடனே, அந்த இனிமையான உறவுகளை எல்லாம் முறித்துக் கொள்ள வேண்டியிருப்பதை அவர்கள் காண நேர்ந்ததும் மிகுந்த மனச் சோர்வுக்கு ஆளாகி விடுகின்றனர். அவன் இதற்கு முன்பு எதையெல்லாம் கர்மம், தர்மம் என்று எண்ணிச் செய்து வந்தானோ, அதிலேயே அவன் திருப்தியடைந்து விடுகிறான். அத்துடன் நின்று விடாமல் தன்னிடமுள்ள மோகத்தை நியாயப்படுத்திக் கொள்ளும் வகையில் அவன் வழக்கத்தில் நிலவி வருகின்ற மூடநம்பிக்கைகளை எல்லாம் அதற்கு ஆதாரமாகக் காட்டத் தொடங்குகிறான். அதாவது அர்ஜுனன் கூறியதுபோல், ‘குலதர்மமே என்றென்றும் நிலையானது; மாறாதது; இந்த யுத்தத்தால் என்றும் நிலையான, மாறாத சனாதன தர்மம் அழிந்து போய்விடும்; குலம் நசிவடையும்; தான்தோன்றித்தனம் பெருகும்’ என்றெல்லாம் சொல்லத் தொடங்குகிறான். இதெல்லாம் அர்ஜுனனின் பதில் அன்று; மாறாக, சத்குருவின் சரண சான்னித்தியத்தை அடையும் முன்பு தன்னுடையது என்று அவன் தவறாக வரித்துக் கொண்டிருந்ததொரு தீயநெறி மட்டுமேயாகும்.

இந்தத் தீயநெறிகளில் சிக்கிக் கொண்டு மனிதன் விதவிதமான தர்மம், எண்ணற்ற சம்பிரதாயங்கள், சிறியதும், பெரியதுமான மதக் குழுக்கள், மற்றும் கணக்கிலடங்காத சாதிகள் ஆகியவற்றை எல்லாம் உருவாக்கிக் கொள்கிறான். சிலர் மூக்கை அழுத்திக்கொண்டால், சிலர் காதை அடைத்துக் கொள்கின்றனர். சிலருக்குத் தொட்டால் தர்மம் அழிவடைந்து விட்டது என்றால் சிலருக்கு உண்பதாலும் தண்ணீர் குடிப்பதாலும் தர்மம் அழிவடைந்து விடுகிறது. இதெல்லாம் என்ன, தீண்டத் தகாதவர்களின் குற்றமா? அல்லது தீண்டியவர்களின் குற்றமா? இல்லவே இல்லை. குற்றமானது நம்மை மனக் குழப்பத்திற்கு ஆளாக்கியவர்களுடையது. தர்மத்தின் பெயரால் நாம் தீயநெறிக்கு இறையாகி விட்டதால், குற்றம் நம்முடையதும்தான்.

மஹாத்மா புத்தருடைய காலத்தில் **'கேஷ்–கம்பள்'** என்றொரு சம்பிரதாயம் இருந்தது. அதன்படி, முடியை வளர்த்துக் கம்பளியைப் போன்று பயன்படுத்துவதையே ஆன்மீக முதிர்ச்சியின் அளவுகோலாகக் கருதப்பட்டு வந்தது. சிலர் பசுமாட்டைப் போன்று வாழ்வதை விரதமாகக் கொண்டிருந்தால், இன்னும், சிலரோ நாயைப் போன்று (உண்டும் அருந்தியும்) வாழ்வதை விரதமாகக் கொண்டிருந்தனர். பிரம்ம வித்தைக்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை.

சம்பிரதாயங்களும் தீயநெறிகளும் இதற்கு முன்பும் இருந்தன. இன்றும் இருக்கவே செய்கின்றன. சரியாக, இதேபோன்றுதான், ஸ்ரீகிருஷ்ணருடைய காலத்திலும் இந்தச் சம்பிரதாயங்கள் இருந்தன; தீயநெறிகளும் இருந்தன. இவற்றில் ஒருசில தீயநெறிகளுக்கு அர்ஜூனனும் பலியாகி இருந்தான். அவன் நான்கு வகையான தர்க்கங்களை முன் வைத்தான்:

'இத்தகைய யுத்தத்தினால் (1) சனாதன தர்மம் அழிந்து விடும். (2) வர்ணக் கலப்பு தோன்றும். (3) பிண்டோதக் கிரியை மறைந்து போய்விடும். (4) நாம் அனைவருமே குலம் அழிவடைவதன் மூலமாக மாபெரும் பாவத்தைச் செய்வதற்குத் தயாராகி விட்டோம். இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ஸஞ்ஜய உவாச**
**தம் ததா க்ருபயாவிஷ்டம்அஸ்ருபூர்ணாகுலேக்ஷணம்**
**விஷிதந்தமிதம் வாக்யமுவாச்ச மதுசூதனः (1)**

கருணை நிரம்பிய உள்ளத்துடன் கண்ணீரும் வேதனையும் நிறைந்த கண்களுடன் இருந்த அர்ஜூனனைப் பார்த்து **'மதுசூதன்'** – அஹங்காரத்தை (மதம்) அழிப்பவராகிய பகவான் பின்வருமாறு கூறினார்.

**ஸ்ரீபகவானுவாச**
**குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்த்திதம்**
**அனார்ய ஜுஷ்டமஸ்வர்க்யம் அகீர்த்திகர மர்ஜுன (2)**

அர்ஜுனா! இந்த விஷமமான இடத்தில் உனக்கு இந்த அஞ்ஞானம் எங்கிருந்து உண்டானது? **விஷம ஸ்தலம்** அதாவது எதற்குச் சமமாக இந்தப் படைப்பில் வேறெந்த இடமும் இல்லவே இல்லையோ, பரலோகம் என்ற மேலான இறைவனே இலட்சியம் எனும் அளவிற்கு விவாதத்திற்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட இவ்விடத்தில் உனக்கு இந்த அஞ்ஞானம் எங்கிருந்து உண்டானது? இது எப்படி அஞ்ஞானம் ஆகும்? அர்ஜுனனோ என்றும் நிலையான, மாறாத தர்மத்தை காக்க வேண்டிய உறுதியுடன் வரிந்து கட்டிக்கொண்டு அல்லவா நிற்கிறான்! என்றும் நிலையான மாறாத சனாதன தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக உடல் பொருள் ஆவியைத் தியாகம் செய்துவிட்டு முனைந்து நிற்பதென்ன அஞ்ஞானமா? ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்: "ஆம்" இது அஞ்ஞானம்தான். சான்றோர்கள் மூலமாகக்கூட இவையெல்லாம் கடைப்பிடிக்கப்படவில்லை. இவை சொர்க்கத்தையும் அளிக்கப்போவது கிடையாது, மேலும், இது எந்தவொரு புகழையும் பெற்றுத்தராது". சன்மார்க்கம் எனப்படும் உண்மையின் பாதையில் எவர் ஒருவர் திடமான உறுதியுடன் முன்னேறிச் செல்கிறாரோ, அவரே **ஆரியர்** எனப்படுகிறார். கீதை ஆரிய ஸம்ஹிதை ஆகும். 'சொந்த பந்தங்களுக்காக இறப்பதும் அழிவதும் ஒருவேளை அஞ்ஞானம் இல்லை' என்றிருந்தால் மஹாபுருஷர்கள் அந்த வழியில் அவசியம் சென்றிருப்பார்கள். ஒருவேளை குலதர்மமே உண்மையானது என்றிருந்தால், சொர்க்கம் மற்றும் நன்மை ஆகியவற்றிற்கு நிச்சயமாக அவல நிலை உண்டாகியிருக்கும். இது புகழைப் பெற்றுத்தரப் போவதுகூடக் கிடையாது. மீரா இறைவழிபாட்டில் ஈடுபட்டதைக் கண்டு **'லோக் கஹே மீரா பயீ பாவரீ, ஸாஸ் கஹே குலநாஸீ ரே'** – 'உலகம் மீராபாய் பைத்தியமாகி விட்டாள் என்று சொன்னது; அவரது அத்தை அதாவது மாமியாரோ குலத்தை அழிக்க வந்தவள்' என்று மீராவை தூற்றினாள்". ஆனால் எந்தச் சுற்றத்தார், குலம் மற்றும் மரியாதை ஆகியவற்றிற்காக மீராவின் மாமியார் தேம்பிக் கொண்டிருந்தாரோ இன்று அந்தக் குலத்தைக் காத்த மாமியாரை யாருக்குமே அடையாளம் தெரியாது. ஆனால், மீராவையோ உலகே வணங்குகிறது. இதேபோலத்தான், சுற்றத்தார்களைப்பற்றி வேதனைப்படுபவர்கள் நிலைமையும். அதனால் அவர்களுக்குக் கிடைக்கின்ற புகழ் எதுவரை நீடிக்கும், எதில் புகழ் இல்லையோ நன்மை இல்லையோ? உயர்வான மஹாபுருஷர்கள் மறந்தும்கூட எதை அனுசரிக்கவில்லையோ, அது அஞ்ஞானமே என்பது தெளிவாகிறது. ஆகவே

**க்லைப்யம் மா ஸ்ம கம : பார்த்த நைதத்வய்யுபபத்யதே**
**க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப (3)**

அர்ஜுனா! ஆண்மையற்ற தன்மையை அடைந்து விடாதே, அர்ஜுனன் என்ன ஆண்மையற்றவனா? அப்படி என்றால் நீங்கள் என்ன ஆண்மையுள்ளவரோ? ஆண்மை இல்லாதவனையே ஆண்மையற்றவன் என்கிறோம். எல்லோருமே தங்கள் புருஷார்த்தம் என்று புரிந்து வைத்துக் கொண்டிருப்பதை வைத்துதானே ஏதேதோ காரியங்களை எல்லாம் செய்கின்றனர். விவசாயி இரவும் பகலும் இரத்தத்தையும் வியர்வையையும் ஒன்றாக்கி நிலத்தில் உழைக்கிறான். சிலர் தொழில் செய்வதையே புருஷார்த்தம் என்று புரிந்து வைத்திருந்தால், இன்னும் சிலர் பதவியைத் தவறாகப் பயன்படுத்துவதை புருஷார்த்தம் என்று புரிந்து வைத்துள்ளனர். இவ்வாறு வாழ்க்கை முழுவதுமே உழைத்தாலும் கூடப்போகும்போது என்னவோ வெறும் கையுடன்தான் போகவேண்டியுள்ளது. ஆகவே இவை எதுவுமே புருஷார்த்தம் இல்லை என்பது தெளிவாகிறது. தூய்மையான புருஷார்த்தம் என்பது ஆத்ம தரிசனமே ஆகும். கார்க்கி யாக்ஞவல்க்யரிடம் பின்வருமாறு கூறினார்:

**நபும்ஸக : புமான் ஞேயோ யோ ந வேத்தி ஹ்ருதி ஸ்த்திதம்**
**புருஷம் ஸ்வப்ரகாசம் தஸ்மானந்தாத்மானமவ்யயம் (ஆத்ம புராணம்)**

‘இதயத்தில் நிலைபெற்றுள்ள ஆத்மாவை அறியாதவன் ஆணாகவே இருந்தாலும்கூட ஆண்மையற்றவனாகவே கருதப்படுவான். அந்த ஆத்மாவே ஆண்மையின் மொத்த வடிவம் ஆகும்; தன்னில்தானே ஒளிமயமானதும் ஆகும்; உத்தமமானதும் ஆகும்; ஆனந்த வடிவானதுமாகும்; மற்றும் புலன் உணர்வுகள் அனைத்தையும் கடந்து விளங்குவதும் ஆகும். அதை அடைவதற்காக முயற்சிப்பதே உண்மையில் ஆண்மை புருஷார்த்தம் என்று ஏற்றுக் கொள்ளப்படத் தக்கதாகும்”. அர்ஜுனா! நீ ஆண்மையற்ற தன்மையை அடைந்து விடாதே. இது உனக்குத் தகுதியானது அன்று. பரந்தபனே! (பெருந்தவத்தை உடையவனே!) இதயத்தின் இந்த இகழத்தக்க பலவீனத்தைத் துறந்து விட்டு யுத்தத்திற்காக எழுந்து நில்! பற்றினைத் துறந்துவிடு. இது இதயத்தின் பலவீனம் மட்டுமே ஆகும். இதுபற்றி அர்ஜுனன் மூன்றாவது கேள்வியை முன்வைத்தான்.

**அர்ஜுன உவாச்ச**
**கதம் பீஷ்ம மஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுஸூதன**
**இஷுபி : ப்ரதி யோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதன (4)**

அஹங்காரத்தை அழிப்பவரே மதுசூதனா! நான் இந்த யுத்தபூமியில்

பிதாமஹர் பீஷ்மர் மற்றும் ஆச்சார்யர் துரோணர் ஆகியோர்களுடன் பாணங்களைத் தொடுத்து எவ்வாறு போர் புரிவேன்? ஏனெனில் எதிரிகளை அழிப்பவரே! அரிசூதனா! அவர்கள் இருவருமே எனது வழிபாட்டிற்குரியவர்கள் ஆயிற்றே!

த்வைதமே (இருமை) துரோணர் எனப்படுகிறது. இறைவன் வேறு; நாம் வேறு – த்வைதத்தின் இந்த வேற்றுமையுடன் கூடிய அறிவே இறைவனை அடையத் தூண்டுணர்த்துகின்ற ஆரம்ப ஊற்றாகும். இதுவே துரோணாச்சாரியரின் குருத்துவம் ஆகும். பிரமையே பீஷ்மர் ஆகும். எதுவரைக்கும் பிரமை இருக்கிறதோ அதுவரைக்கும் பிள்ளைகள், சுற்றத்தார், உறவினர்கள் என்று அனைவருமே நமக்குச் சொந்தமானவர்கள் என்பது போலவே தோன்றுகிறது. அவ்வாறு நம்முடையது என்பது போலத் தோன்றுவதற்கு இந்த பிரமையே காரணம் ஆகும். ஆன்மாவோ இவர்களை எல்லாம் வழிபாட்டிற்குரியவர்களாக எண்ணிக் கொண்டு இது அப்பா, தாத்தா, குலகுரு என்றெல்லாம் உறவாடியபடியே அவர்களுடனே சேர்ந்து வாழ்ந்து வருகிறது. ஆன்மீக சாதனை முழுமை பெறுகின்ற காலத்தில் **'குரு ந சேலா, புருஷ் அகேலா'**– 'உறவும் இல்லை; நட்பும் இல்லை; குருவும் இல்லை; சீடனும் இல்லை. சிதானந்த வடிவமாகிய சிவமே நான்; சிவமே நான்! குருவும் இல்லை, சீடனும் இல்லை. ஆன்மாஎன்ற நிலை மட்டும் எஞ்சுகிறது.

**ந பந்துர்ன மித்ரம் குருர்நைவ சிஷ்ய;**
**சிதானந்த ரூபம் சிவோஅஹம் சிவோஅஹம் (ஆத்மாஷ்டகம் 5)**

எப்பொழுது சித்தமானது அந்த மேலான ஆனந்தத்தில் ஒன்று கலந்து விடுகிறதோ, அப்பொழுது குரு எனப்படுகின்ற ஞானத்தை அளிப்பவரும், மற்றும் சீடன் எனப்படுகின்ற ஞானத்தைப் பெறுபவரும் ஆகிய இரு நிலைகளுமே இருப்பதில்லை. இதுவே உச்சநிலை ஆகும். குருவின் குருத்துவம் அடையப்பெற்ற பிறகு, குருத்துவம் என்ற நிலை ஒரே மாதிரியாகி விடுகிறது. ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! நீ என்னில் வாழ்வாய்!" என்று கூறுகிறார். ஸ்ரீகிருஷ்ணர் எவ்வாறோ, அவ்வாறே அர்ஜுனனும். சரியாக இதேபோன்றுதான் இறைவனை அடைந்த மஹாபுருஷரும் அவ்வாறே ஆகிவிடுகிறார். அத்தகைய நிலையில் குரு என்ற நிலையும்கூட மறைந்து விடுகிறது. குருத்துவமோ இதயத்தில் பெருகியோடத் தொடங்கி விடுகிறது. அர்ஜுனன் இந்த குரு என்ற நிலையையே கேடயமாகப் பயன்படுத்திக் கொண்டு இந்த யுத்தத்தில் ஈடுபடாமல் தப்பியோடுவதற்கு விரும்புகிறான். அவன் கூறுகிறான்.

**குருனஹத்வா ஹி மஹானுபாவான்**
**ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே**

**ஹத்வார்த்தகாமாம்ஸ்து குருனிஹைவ**
**புஜ்ஜீய போகான்ருதிரப்ரதிக்தான் (5)**

இந்தப் போற்றுதலுக்குரிய குருஜனங்களைக் கொல்வதை விடவும் இந்த உலகத்தில் பிச்சையின் மூலமாகக் கிடைக்கின்ற அன்னத்தையே உயர்வானதாகக் கருதுகிறேன். இங்கே பிச்சை என்பதற்கு வயிற்றை நிரப்புவதற்காகப் பிறரிடம் இரந்து பெறுவது என்று பொருள் கொள்ளக் கூடாது. மாறாக, சத்புருஷர்களுக்குச் சின்னஞ் சிறிய தொண்டுகள் ஆற்றி அவர்களிடம் ஆன்மீக நன்மையை வேண்டுவதையே, இங்கே 'பிச்சை' என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது. **'அன்னம் ப்ரஹ்மேதி வ்யஜானாத்' (தைத்தீரிய உபநிஷதம் 2/1)–** 'எதனை அடைந்து ஆன்மாவானது என்றென்றைக்குமாகத் திருப்தி காண்கிறதோ, ஒருபோதும் அதிருப்தியை அடைவதில்லையோ, அந்த ஒன்று மட்டுமே பரமாத்மா ஆகும்.' நாம் மஹாபுருஷர்களுக்குத் தொண்டுகள் புரிந்து வேண்டுவதன் மூலமாகக் கொஞ்சம் கொஞ்சமாக **பிரம்ம பீயுஷ்** எனப்படும் இறை அமுதத்தை அடைவோம். ஆனால் இந்தச் சொந்த பந்தங்களும் உடன் இருக்கட்டும். இதுவே அர்ஜூனனின் 'பிச்சையின் மூலமாகக் கிடைக்கும் அன்னம்' என்கின்ற ஆசையாகும். இந்த உலகத்தில் பெரும்பாலோர் இவ்வாறுதான் நடந்து கொள்கிறார்கள். அவர்கள் தங்களுடைய உற்றார் உறவினர், நண்பர்கள் என்ற உறவுமுறைகளை அழிக்காமலேயே கொஞ்சம் கொஞ்சமாக முக்தியைப் பெற்று விடவேண்டும் என்றே விரும்புகின்றனர். ஆனால், இந்த ஆன்மீகப் பாதையில் செல்கின்ற தகுதிபடைத்த சாதகனுக்காக, அதாவது எவனுடைய சம்ஸ்காரம் இந்த நிலையை விடவும் உயர்ந்த ஒன்றோ, எவனுக்கு மோதலுக்கான திறன் அமைந்துள்ளதோ, சுபாவத்தில் க்ஷத்திரியத்துவம் நிரம்பி வழிகிறதோ, அவனுக்காக இந்தப் பிச்சையின் மூலமாக அன்னத்தைப் பெறுகின்ற வழிவகை கிடையவே கிடையாது. தானாகவே முயன்று அடையாமல் பிறரிடம் இரந்து பெறுவதே பிட்சான்னம் எனப்படுகிறது. கௌதம புத்தரும் கூட மஜ்ஜிம் நிகாய் – தம்மதாயாத ஸூக்தத்தில் (1/1/3) இந்த பிட்சான்னத்தை 'மாமிசப் பங்காளி' என்று கூறி இழிவாகக் கருதுகிறார். இத்தனைக்கும் அவர்கள் அனைவருமே துறவிகள் வேறு.

இந்த குருஜனங்களைக் கொல்வதால் என்ன கிடைக்கும்? இந்த உலகத்தில் இரத்தம் தோய்ந்த செல்வமும் உலகியல் இன்பங்களும் வேண்டுமானால் அனுபவிக்கக் கிடைக்கும். அர்ஜூனன் இந்த இறை வழிபாட்டின் மூலமாக உலகியல் இன்பங்கள் மட்டுமே பெருகும் என்று ஒருவேளை நினைத்திருக்கலாம். இவ்வளவு பெரிய மோதலை எதிர் கொண்டு வென்றாலும்கூட இந்த உடலைப் பேணுகின்ற செல்வம் மற்றும் உலகியல்

இன்பங்கள்தானே கிடைக்கும். அவன் மறுபடியும் தனது வாதத்தை (துர்க்கத்தை) எடுத்து வைக்கிறான்.

**ந சைதத் வித்ம : கதரந்ன்னோ கரீயோ**
**யத்வா ஜயேம யதி வாநோ ஜயேயு:**
**யானேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம –**
**ஸ்தேஅவஸ்த்திதா : ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா : (6)**

அந்த உலகியல் இன்பங்களும் கிடைக்கும் என்ற நிச்சயமும் இல்லை. நமக்கு எது உயர்வைத் தருவது என்பதும் எனக்குத் தெரியாது. ஏனெனில், நான் கூறியவை அனைத்துமே அஞ்ஞானம் என்பது நிரூபணமாகிவிட்டது. இந்தப் போரில் வெற்றி பெறப் போவது நாமா? அல்லது அவர்களா? என்பதும் தெரியவில்லை. யாரைக் கொன்று நாம் வாழவும் விரும்ப மாட்டோமோ, அந்த திருதரஷ்டிரரின் புதல்வர்களே நமக்கு எதிரில் நின்று கொண்டிருக்கிறார்கள். அஞ்ஞானத்தின் உருவமான திருதராஷ்டிரரிடமிருந்து பிறந்த மோகம் முதலான உற்றார் உறவினரின் சமுதாயமே அழிந்துபோனபிறகு நாம் மட்டும் வாழ்ந்து என்ன செய்யப் போகிறோம்? ஒருவேளை இப்போது கூறியதும்கூட அஞ்ஞானம்தானோ? என்று மறுபடியும் எண்ணியவனாக அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணரிடம் பிரார்த்தனை செய்யலானான்.

**கார்ப்பண்ய தோஷோபஹத ஸ்வபாவ:**
**ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்முடசேதா:**
**யச்ச்ரேய: ஸ்யான்னிஸ்சிதம் ப்ரூஹி தன்மே**
**சிஷ்யஸ்தேஹம் ஷாதி மாம் த்வாம் ப்ரபன்னம் (7)**

கோழைத்தனம் என்னும் குறையால் இழப்பை அடைந்த சுபாவத்தை உடையவனும், தர்மத்தின் விஷயத்தில் எல்லாவகையிலும் மோகம் சூழ்ந்த சித்தத்தை உடையவனுமாகிய நான் உங்களிடம் கேட்கிறேன். எது நிச்சயமாகவே மேலான நன்மையை அளிக்க வல்லதோ, அந்த சாதனையை எனக்காகக் கூறுங்கள். நான் உங்களுடைய சிஷ்யன்; உங்களையே சரணடைந்துள்ளேன். என்னைக் காத்தருளுங்கள். வெறுமனே உபதேசம் செய்வதுடன் மட்டுமே நின்று விடாமல், நான் தடுமாற்றம் அடைகின்ற போதெல்லாம் முன்வந்து காத்தருளுங்கள், சுமையை ஏற்றியும் வைக்க வேண்டும் சுமையை ஏற்றிவைப்பதோடல்லாமல் துணையாக வரவும் வேண்டும். ஏனெனில் வந்து கொண்டிருக்கையில் ஒருவேளை சுமையானது கீழே விழுந்து விட்டால் யார் மீண்டும் தூக்கிவைப்பது? – அர்ஜுனனின் சமர்ப்பணம் அத்தகையது.

இங்கே அர்ஜூனன் முழுமையாகத் தன்னைச் சமர்ப்பணம் செய்து விட்டான். இதுவரைக்கும் அவன் ஸ்ரீகிருஷ்ணருக்குச் சமமானவனாகவே தன்னையும் எண்ணிக் கொண்டிருந்தான். பல்வேறு வகையான வித்தைகளில் ஸ்ரீகிருஷ்ணரையும் விடத் தானே ஒருபடி மேலானவன் என்றும் தன்னைப்பற்றி எண்ணி வைத்திருந்தான். ஆனால், இங்கேயோ அவன் தனது கடிவாளத்தை முழுமையாக ஸ்ரீகிருஷ்ணரிடமே ஒப்படைத்து விட்டான். சத்குருவானவர் ஆன்மீக சாதனையானது முழுமை அடைகின்ற காலம் வரைக்கும் சாதகனின் இதயத்தில் எழுந்தருளி அவனுக்குத் துணையாகவே வந்து கொண்டிருக்கிறார். ஒருவேளை அவர் துணையாக நின்றருளவில்லையென்றால் சாதகன் கரைகடக்க முடியாது. இளவயதுடைய கன்னிப் பெண்ணின் குடும்பத்தினர் எந்த முறையில் அவளுக்குத் திருமணம் நடைபெறும்வரை கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்வது என்பது போன்ற படிப்பினைகளைக் கற்றுத் தந்து பாதுகாப்பாக வழிநடத்திச் செல்கிறார்களோ, சரியாக அதேமுறையில்தான் சத்குருவும் தன்னுடைய சீடனின் அகத்தில் எழுந்தருளி, இரண்டறக் கலந்து நின்று கொண்டு அவனை பிரகிருதி அல்லது படைப்பின் மேடுபள்ளங்களில் இருந்து விடுவித்துக் கரையேற்றி விடுகிறார். அர்ஜூனன், “பகவானே! இன்னும் ஒரு விஷயம் உள்ளது” என்று வேண்டுகோள் விடுக்கிறான்.

**ந ஹி ப்ரபஷ்யாமி மமாபனுத்யாத்**
**யச்சோக முச்சோஷண மிந்த்ரியாணாம்**
**அவாப்ய பூமாவஸபத்னம்ருத்தம்**
**ராஜ்யம் ஸுராணாமபி சாதிபத்யம் (8)**

இந்த பூமியில் தங்குதடையில்லாமல் கிடைக்கும் தன – தானியங்கள் நிறையப்பெற்ற ராஜ்ஜியம், மற்றும் தேவதைகளுக்கெல்லாம் தலைவன் என்னும் பதவி, ஆகியவற்றைப் பெற்றாலும்கூட, என்னுடைய இந்தப் புலன்களை எல்லாம் வாட்டுகின்ற சோகத்தை நீக்குகின்ற உபாயத்தை மட்டும் என்னால் காணமுடியவில்லை. இந்தச் சோகம் இருந்து கொண்டேதான் இருக்குமென்றால், இவை அனைத்தையும் வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன்? ஒருவேளை இவை மட்டுமே கிடைக்கும் என்றால் என்னை மன்னித்து விடுங்கள். இதற்கு மேலும் என்ன சொல்ல இருக்கிறது? என்று அர்ஜூனன் நினைத்தான்.

**ஸஞ்ஜய உவாச**
**ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச : பரந்தப**
**ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த்வா தூஷ்ணீம் பபூவஹ (9)**

ஸஞ்ஜயன் கூறினான் – மன்னா! மோகம் என்னும் இருளை வென்ற

அர்ஜுனன் இதயத்தில் உள்ள அனைத்தையும் அறிந்தவரான ஸ்ரீகிருஷ்ணரிடம், "கோவிந்தரே! நான் யுத்தம் செய்ய மாட்டேன்" என்று கூறிவிட்டு மௌனமானான். இதுவரைக்கும் அர்ஜுனனுடைய கண்ணோட்டம் புராண ரீதியாகவே அமைந்துள்ளது. அதில் கர்ம காண்டத்துடன் சேர்த்து உலகியல் இன்பங்களைப் பெற்று அனுபவிப்பது வரை மட்டுமே வழிவகை சொல்லப்பட்டு உள்ளது. அதில், 'சொர்க்கமே எல்லாம்' என்று மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படுகிறது. — ஸ்ரீகிருஷ்ணரோ இத்தகைய சிந்தனை ஓட்டமே தவறானது என்பதைத் தெளிவாக விளக்கியருள்வார்.

**தமுவாச ஹ்ருஷீகேச : ப்ரஹஸன்னிவ பாரத**
**ஸேனயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வச : (10)**

இதற்குப் பிறகு மன்னா! அந்தர்யாமியாகிய யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இரண்டு படைகளுக்கும் நடுவில் வருத்தத்துடன் நின்று கொண்டிருந்த அர்ஜுனனைப் பார்த்துச் சிரித்தபடியே கூறுகிறார்.

**ஸ்ரீபகவானுவாச**
**அஷோச்யானன்வஷோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதாம்ஷ்ச்ச பாஷஸே**
**கதாஸூனகதாஸூம்ஷ்ச்ச நானுஷோசந்தி பண்டிதா: (11)**

அர்ஜுனா! எதற்கெல்லாம் வருந்தக்கூடாதோ, அதற்கெல்லாம் நீ வருந்துகிறாய். அத்துடன் சிறந்த அறிவாளியைப் போன்றும் பேசுகிறாய். ஆனால், அறிவில் சிறந்த பண்டிதர்கள் யாருடைய உயிர் பிரிந்து விட்டதோ, அவர்களுக்காகவும் மற்றும் எவருடைய உயிர் இன்னும் பிரியவில்லையோ, அவர்களுக்காகவும் வருத்தப்படுவது இல்லை. ஏனெனில், அவர்களும் இறப்பது உறுதி. நீ அறிவாளியைப் போன்று பேசுகிறாயே தவிர, உண்மையில் நீ அறிவாளி அல்ல. ஏனெனில்—

**ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபா**
**ந சைவ ந பவிஷ்யாம : ஸர்வே வயமத : பரம் (12)**

நான் அதாவது சத்குருவானவர் இல்லாமல் இருந்த காலம் என்ற ஒன்று ஒருபோதும் இருந்ததில்லை. மற்றும் நீ அதாவது அனுராகியாகிய ஆன்மீக சாதனைக்கான தகுதிபடைத்த அதிகாரியும் மற்றும் **'ஜனாதிபா'**: 'ராஜாக்கள்' அதாவது ராஜஸீக எண்ணவோட்டத்தில் காணப்படுகின்ற 'நான்' என்ற தன்னுணர்வும் இல்லாமல் இருந்ததில்லை. மேலும் இனிவரும் காலத்திலும் நாம் அனைவரும் இருக்க மாட்டோம் என்ற நிலையும் இல்லை. சத்குருவானவர் எப்போதும் இருக்கிறார்; அனுராகியும் எப்போதும் இருக்கிறார். இங்கே,

யோகேஷ்வரர் யோகத்தின் காலம் கடந்த தன்மையை வெளிச்சம் போட்டுக் காட்டிக் கொண்டே, எதிர்காலத்திலும் அந்த யோகம் அழியாமல் இருக்கும் என்பதை உறுதிப்படுத்துகிறார். இறந்து போகின்றவர்களுக்காக வருந்தக் கூடாது என்பதற்கான காரணத்தை எடுத்துரைக்கும்போது அவர் கூறுகிறார்.

**தேஹினோஸ்மின்யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா**
**ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்தத்ர ந முஹ்யதி (13)**

எவ்விதமாக ஜீவாத்மாவின் இந்த உடலில் குழந்தைப் பருவம் **(குமாரம்),** இளமைப் பருவம் **(யௌவனம்)**, முதுமைப் பருவம் **(வ்ருத்தம்)** ஆகிய நிலைகள் உண்டாகின்றனவோ, அவ்விதமாகவே வெவ்வேறு உடல்கள் அடையப்படுவதைப் பற்றியெல்லாம் தீரபுருஷர்கள் மோகம் கொள்வது கிடையாது. எப்போதோ நீங்கள் குழந்தையாக இருந்தீர்கள், கொஞ்சம் கொஞ்சமாக இளமைப் பருவத்தை அடைந்தீர்கள். அத்துடன் நீங்கள் இறந்து போய்விடவில்லையே?. மறுபடியும் முதுமையை அடைகிறீர்கள். ஆனால் இருப்பது என்னவோ அதே நீங்கள்தான். இதே போன்றுதான் புதிய உடலை அடைவதிலும் கொஞ்சம்கூட இடைவெளி ஒன்றும் இருப்பதில்லை. உடல்களின் பரிமாற்றம் என்ற இந்த உருமாற்றம், மாற்றங்களுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட இறைவன் என்ற உண்மைப் பொருள் கிடைக்கும்வரை தொடர்கிறது.

**மாத்ராஸ்பர்ஷாஸ்து கௌந்தேய சீதோஷ்ணஸுகதுக்கதா:**
**ஆகமாபாயினோஅநித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத (14)**

குந்தியின் மைந்தனே! சுகம், துக்கம்; குளிர்ச்சி, வெப்பம் ஆகியவற்றை உணரச் செய்கின்ற புலன்கள் மற்றும் புலனின்ப விஷயங்களின் சேர்க்கை நிரந்தரமற்றவை; கணப்பொழுதில் அழியக் கூடியவை. ஆகவே, பரத வம்சத்தில் உதித்தவனே அர்ஜுனா! நீ இவற்றையெல்லாம் தியாகம் செய். அர்ஜுனன் புலன்கள் மற்றும் புலனின்ப விஷயங்கள் ஆகியவற்றின் சேர்க்கையால் அனுபவிக்கப்படுகின்ற உலகியல் சுகத்தை எண்ணியே மிகவும் கலங்கிக் கொண்டிருந்தான். குலதர்மம், குலகுரு வழிபாடு முதலானவை அனைத்துமே புலன் இன்பங்களின் மீதுள்ள பற்றுணர்விற்குள் அடங்கியவைதான். அவை கணப் பொழுதிற்கானவை, பொய்யானவை, அழியக்கூடியவை. புலனின்ப விஷயங்களின் சேர்க்கை எப்போதுமே கிடைத்துக் கொண்டிருக்கப் போவதுமில்லை. மேலும், அவற்றை அனுபவிப்பதற்கு எப்போதுமே புலன்களுக்கு வலிமையும் இருக்கப் போவதில்லை. ஆகவே அர்ஜுனா! நீ இவற்றைத் தியாகம் செய்து விடு. இவற்றைத் தாங்கிக் கொள். ஏன்? இதுவென்ன இயமயமலையில் நடைபெறுகின்ற சண்டையா என்ன? அங்கே போய் நின்று கொண்டு அர்ஜுனன் குளிரைத்

தாங்கிக்கொள்வதற்கு, அல்லது இது ஏதேனும் ஒரு பாலைவனத்தில் நடைபெறுகின்ற போரா என்ன? அங்கே போய் அர்ஜுனன் வெப்பத்தைத் தாங்கிக் கொள்வதற்கு? எல்லோரும் குறிப்பிடுகின்ற, வெளியில் உள்ள குருக்ஷேத்திரமோ சமமான சீதோஷ்ண நிலைகொண்ட இடமாகும். மொத்தம் பதினெட்டு நாட்களுக்குத்தான் போரும் நடைபெற்றது. இத்தனை குறுகிய நாட்களுக்குள் எத்தனைமுறை குளிர்காலமும் கோடைக்காலமும் கடந்து விட்டது? உண்மையில் குளிர் வெப்பம், துக்கம், சுகம், மானம், அவமானம் ஆகியவற்றை எல்லாம் பொறுத்துக் கொள்வதென்பது யோகியைச் சார்ந்துள்ள விஷயமாகும். இது இதய தேசத்தில் நடைபெறும் மோதலை வெளிப்படுத்துகின்ற சித்திரமாகும். வெளியில் நடைபெறுகின்ற யுத்தத்தைப் பற்றியெல்லாம் கீதை ஒன்றும் கூறவில்லை. இது க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞருக்கு இடையில் நடைபெறுகின்ற மோதலாகும். இதில் அசுரக் குணங்கள் அனைத்தையும் முழுவதுமாக (கட்டுப்படுத்தி) அழித்து பரமாத்மாவில் நிலையைப் பெற்றுத் தந்தபிறகு தெய்வீகக் குணங்களும் அமைதியடைந்து விடுகின்றன. எப்பொழுது நுகர்ச்சி ஆசைகள் (விகாரங்கள்) என்பதே இல்லையென்று ஆகிவிடுகிறதோ, ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்கள் எவற்றின் மீது தாக்குதல் தொடுக்கும்? ஆகவே, பூரணத்துவ நிலையானது அடையப்பட்டதுடன் சேர்த்தே அவைகளும் அமைதியடைந்து விடுகின்றன. இதற்கு முன்பு அல்ல. கீதை அகவுலகில் நடைபெறும் போரின் வர்ணனையாகும். இந்தத் தியாகத்தினால் என்ன கிடைக்கும்? இதனால் என்ன இலாபம்? இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப**
**ஸமதுக்கஸுகம் தீரம் ஸோஅம்ருதத்வாய கல்பதே (15)**

ஏனெனில் புருஷர்களில் சிறந்தவனே! துக்கம், சுகம் ஆகியவற்றைச் சமமாக ஏற்றுக் கொள்கின்ற எந்தவொரு தீர புருஷரை (எதையும் தாங்கக் கூடியவர்) புலன்கள் மற்றும் புலன்விஷயங்கள் ஆகியவற்றின் சேர்க்கை எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்த முடியாதோ, அத்தகையவர் மரணத்திற்கெல்லாம் அப்பாற்ப்பட்ட அம்ருத தத்துவத்தை (மரணமில்லாப் பெருவாழ்வு) அடைகின்ற தகுதியைப் பெற்று விடுகிறார். இங்கே ஸ்ரீகிருஷ்ணர் அடைய முடிகின்ற 'அம்ருதம்' என்ற ஒன்றைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அர்ஜுனன், 'இந்த யுத்தத்தின் விளைவாக சொர்க்கம் கிடைக்கும் அல்லது பூமி கிடைக்கும்' என்று நினைத்திருந்தான். ஆனால், ஸ்ரீகிருஷ்ணரோ, 'சொர்க்கமும் கிடைக்காது, இந்த பூமியும் கிடைக்காது, மாறாக, அம்ருதம் கிடைக்கும்' என்கிறார்.

அந்த அம்ருதம் என்றால் என்ன?

**நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:**
**உபயோரபி த்ருஷ்டோஅந்தஸ்த்வனயோஸ்தத்வதர்ஷிபி: 16**

அர்ஜுனா! உண்மையற்ற பொருளுக்கு நிலைத்தன்மை கிடையாது. அது இல்லவே இல்லை, அதை நிலை நிறுத்தி வைக்கவும் முடியாது. மேலும் உண்மைக்கோ (ஸத்) மூன்று காலங்களிலும் குறைவொன்றும் இல்லை. அதை அழிக்கவே முடியாது. அர்ஜுனன், "பகவானாக இருக்கின்ற காரணத்தால் நீங்கள் இவ்வாறு கூறுகிறீர்களா?" என்று கேட்டான். அதற்கு ஸ்ரீகிருஷ்ணர், "நான்தான் கூறுகிறேன் என்பதோடு மட்டுமல்லாமல் இந்த இரண்டிற்கும் இடையில் உள்ள வேறுபாடு என்னைப் போன்றே தத்துவதரிசிகள் பலராலும் காணப்பட்டும் உள்ளது" என்று கூறுகிறார். தத்துவதரிசிகள் மூலமாக ஏற்கனவே காணப்பட்ட உண்மையைத்தான் ஸ்ரீகிருஷ்ணர் மறுபடியும் எடுத்துரைக்கிறார். ஸ்ரீ கிருஷ்ணரும் ஒரு தத்துவதரிசி மஹாபுருஷர் ஆவார். பரம தத்துவமாகிய பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அவரிலேயே நிலைபெற்று விடுகின்றவரே தத்துவதரிசி எனப்படுகிறார். உண்மை மற்றும் உண்மையற்றது என்பவை யாவை? இதுபற்றிக் கூறுகிறார்.

**அவிநாசி து தத்வித்தி யேன ஸர்வமிதம் ததம்**
**விநாச மவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித்கர்த்துமர்ஹதி (17)**

எவருள் இந்த ஒட்டு மொத்த உலகமும் விரிவுற்றுள்ளதோ, அவரே அழிவற்றவர் ஆவார். இந்த **'அவ்யயஸ்ய'** – அழிவற்றதை அழிக்கும் சாமர்த்தியம் எவருக்கும் கிடையாது. ஆனால் இந்த 'அழிவற்றது' **'அம்ருதம்'** என்றால் என்ன? அது யார்?

**அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: சரீரிண:**
**அநாசிநோஅப்ரமேயஸ்ய தஸ்மாத்யுத்யஸ்வ பாரத (18)**

அழிவற்றது, வரையறைக்கு அப்பாற்ப்பட்டது, என்றென்றும் நிலையானது என்னும் இயல்புடைய இந்த ஆத்மா உறைகின்ற எல்லா உடல்களுமே அழியக்கூடியவை என்று சொல்லப்படுகிறது. ஆகவே, பரத வம்சத்தில் உதித்தவனே அர்ஜுனா! நீ யுத்தம் செய்! ஆன்மாவே அம்ருதம் (மரணமற்றது) எனப்படுகிறது. ஆன்மாவே அழிவற்றதாகும். அதற்கு மூன்று காலங்களிலும் அழிவே இல்லை. ஆன்மாவே (ஸத்) உண்மையானது ஆகும். இந்த உடல் அழியக் கூடியது. அதுவே (அஸத்) உண்மையற்றது எனப்படும். அதற்கு மூன்று காலங்களிலுமே நிலைத்தன்மை என்பதில்லை.

'இந்த உடல் அழியக் கூடியது, எனவே நீ யுத்தம் செய்' – அர்ஜுனன் கௌரவர்களைக் கொல்ல வேண்டும் என்பதற்காக இடப்பட்ட கட்டளை போலத் தெரியவில்லை. பாண்டவர்களுடைய பக்கத்திலும் உடல் தரித்தவர்கள்தானே

நின்று கொண்டிருந்தனர். அந்தப் பாண்டவர்களுடைய உடல்கள் மட்டும் அழிவற்றவையா என்ன? உடல் அழியக் கூடியது என்பது உண்மையானால், ஸ்ரீகிருஷ்ணர் யாரைக் காப்பாற்றுவதற்காக நின்று கொண்டிருக்கிறார்? இங்கே அர்ஜுனன் யாரோ ஒரு உடல் தரித்தவனா? உண்மையற்றதாகிய இந்த உடல், அதாவது எதற்கு நிலைத்தன்மை என்பதே கிடையாதோ, எதனை நிலைநிறுத்தி வைக்கவும் முடியாதோ, அத்தகையதொரு உடலைக் காப்பாற்றுவதற்காகவா ஸ்ரீகிருஷ்ணர் நின்று கொண்டிருக்கிறார்? அப்படியென்றால் அவரும்கூட விவேகம் அற்றவர், மூடர் என்றாகி விடுமே? ஏனெனில், இனிவரும் பகுதியில் ஸ்ரீகிருஷ்ணர் தாமே முன்னின்று, ''எவனொருவன் வெறுமனே இந்த உடலுக்காகவே ஜீரணிக்கப்படுகிறானோ, உழைக்கிறானோ (3/13) அவனே விவேகமற்றவனும் மூடபுத்தியுடையவனும் ஆவான்'' என்று கூறியருள்கிறார். ''அத்தகைய பாவி மனிதன் வீணாகவே வாழ்கிறான்'' என்கிறார் அவர். முடிவாக இந்த அர்ஜுனன் என்பவன் யார்?

உண்மையில் அனுராகமே (இறையார்வமே) அர்ஜுனன் ஆவான். அனுராகிக்காக இஷ்ட தெய்வம் (சத்குரு – இறைவன்) எப்போதும் அவனுடன் ஒன்று கலந்தவராகி சாரதியின் நிலையை ஏற்றுக் கூடவே இருக்கிறார். நெருங்கிய நண்பராக இருந்து கொண்டு அவனுக்கு வழிகாட்டியபடியே அழைத்துச் செல்கிறார். நீங்கள் இந்த உடல் அன்று. உடல் என்பது வெறும் வெளியுறை மட்டும்தான்; வெறும் தங்கும் அறை மட்டும்தான். அதில் தங்கி இருப்பதோ அனுராகம் நிரம்பிய ஆன்மாவாகும். உலகியல் சார்ந்த யுத்தம், வெட்டு, குத்துகளால் மட்டுமே இந்த உடல்களுக்கு ஒரு முடிவைக் கொடுத்துவிட முடியாது. இந்த உடல் அழிந்துபோனால், ஆன்மாவானது, மற்றொரு உடலை ஏற்றுக் கொள்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீகிருஷ்ணர், ''எவ்விதமாக குழந்தைப் பருவத்தில் இருந்து இளமையும், பின்பு முதுமையும் உண்டாகிறதோ, அவ்விதமாகவே உடலுக்கு முடிவும் ஏற்படுகிறது. உடல் வெட்டி வீழ்த்தப்பட்டு விட்டால் ஜீவாத்மாவானது வேறொரு புதிய ஆடையை (உடல்) மாற்றிக் கொள்கிறது'' என்று ஏற்கனவே கூறியுள்ளார்.

இந்த உடல் சம்ஸ்காரங்களைச் சார்ந்திருக்கிறது. மேலும் இந்த சம்ஸ்காரங்களோ மனத்தைச் சார்ந்திருக்கின்றன. **'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ: (பஞ்சதசீ 5/60)** – 'மனமே' ஒருவனுடைய பந்தத்திற்கும் மோட்சத்திற்கும் காரணமாகும், மனமானது எல்லா வகையிலும் முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு, அசைவற்ற உறுதிப்பாடுடன் நிறுத்தப்படுதல் மற்றும் கடைசி சம்ஸ்காரத்தின் (வினைகளின்) அழிவு ஆகிய இரண்டுமே ஒரே செயலாகும். சமஸ்காரங்களின் பிடியில் இருந்து மொத்தமாக விடுபடுதலே

'உடல்களின் முடிவு' எனப்படும். இந்த சம்ஸ்காரங்களை முறிப்பதற்கு நீங்கள் இறை ஆராதனையில் ஈடுபட வேண்டியிருக்கும். இதையே ஸ்ரீகிருஷ்ணர் 'கர்மம்' அல்லது 'நிஷ்காம கர்ம (பற்றற்ற) யோகம் என்று குறிப்பிடுகிறார். ஸ்ரீகிருஷ்ணர் வாய்ப்புக் கிடைக்கும் இடங்களில் எல்லாம் அர்ஜுனனை யுத்தம் செய்யுமாறு தூண்டுணர்த்துகிறார். ஆனால், கீதையின் ஒரு சுலோகம்கூட உலகியல் யுத்தம் அல்லது வெட்டு குத்து ஆகியவற்றை ஆதரிக்கவில்லை. இந்த யுத்தம் ஒருமுகப்பட்ட முரண்பட்ட எண்ணவோட்டங்களுக்கு இடையில் நடைபெறுவதாகும் அகவுலகில், நிகழ்வதாகும்.

**ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யஸ்சைனம் மன்யதே ஹதம்**
**உபௌ தௌ ந விஜானீதோ நாயம் ஹந்தி நஹன்யதே (19)**

எவர் இந்த ஆத்மாவைக் கொல்பவராகக் கருதுகிறாரோ மற்றும் எவர் இந்த ஆத்மாவைக் கொல்லப்பட்டதாகக் கருதுகிறாரோ, அவர்கள் இருவருமே இந்த ஆத்மாவை அறியவில்லை. ஏனெனில், இந்த ஆத்மா கொல்வதுமில்லை, மற்றும் கொல்லப்படுவதும் இல்லை. மறுபடியும் இதையே வலியுறுத்தும் விதமாக

**ந ஜாயதே ம்ரியதே வா கதாசின்**
**நாயம் பூத்வா பவிதா வா ந பூய**
**அஜோ நித்ய : சாஸ்வதோயம் புராணோ**
**ந ஹன்யதே ஹன்யமானே சரீரே (20)**

இந்த ஆத்மா எந்தக் காலத்திலும் பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. ஏனெனில் இது ஆடையை மட்டுமே மாற்றிக் கொள்கிறது. இது ஆன்மாவாக இருந்து கொண்டு வேறு ஏதோ ஒன்றாக ஆகப் போவதும் இல்லை. ஏனெனில், இது பிறப்பற்றது, என்றும் உள்ளது, என்றும் நிலையானது, மாறாதது, பழைமையானது. இந்த உடலே அழிந்து போய்விட்ட பிறகும்கூட இது அழிவதில்லை. ஆன்மாவே உண்மையானது ஆத்மாவே பழைமையானது, ஆத்மாவே என்றும் நிலையானது, மாறாதது, மற்றும் என்றும் உள்ளது. நீங்கள் யார்? என்றும் நிலையான தர்மத்தைப் பின்பற்றுபவர். என்றும் நிலையான தர்மம் எது? ஆத்மா. நீங்கள் ஆத்மாவைப் பின்பற்றுபவர்கள். ஆத்மா, பரமாத்மா மற்றும் பிரம்மம் ஆகியவை எல்லாம் ஒரேபொருளைத் தருகின்ற வெவ்வேறு சொற்களாகும். நீங்கள் யார்? என்றும் நிலையான, மாறாத தர்மத்தின் உபாசகர் என்றும் நிலையானது, மாறாதது எது? ஆத்மா, அதாவது, நான் – நீங்கள் எல்லோருமே ஆத்மாவின் உபாசகர்கள். ஒருவேளை நீங்கள் ஆன்மீகப் பாதையை அறிந்திருக்கவில்லையென்றால், உங்களிடம் என்றும் நிலையானது, மாறாதது என்ற பெயரில் ஒரு பொருளும் கிடையாது. அதற்காக நீங்கள் ஏங்குபவரானால் அதை அடைவதற்கு முயற்சிக்கிறீர்கள் என்பதுவரை சரிதான். ஆனால், என்றும்

நிலையான, மாறாத தர்மத்தைப் பின்பற்றுபவர் அல்லவே! என்றும் நிலையான, மாறாத தர்மத்தின் பெயரால் ஏதோவொரு தீயநெறிக்கு இரையானவர் மட்டுமே ஆவீர்!

உள்நாடானாலும் சரி, வெளிநாடானாலும் சரி மனிதர்களைப் பொறுத்தவரையில் ஆத்மா என்பது ஒன்று போலவேதான் அமைந்துள்ளது. எனவேதான் உலகில் எங்கிருந்தாலும் ஆத்மாவில் நிலைபெற்றுத் தருகின்ற கிரியையை அறிந்தவராக இருந்தால், மற்றும் அந்த வழியில் செல்வதற்கான முயற்சியுடையவராக இருந்தால், அவரே என்றும் நிலையான மாறாத சனாதன தர்மத்தைப் பின்பற்றுபவர் எனப்படுவார். அவர் ஒருவேளை தம்மை கிறிஸ்தவர், முஸ்லீம், யூதர் அல்லது வேறு எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்பவராக இருக்கட்டும்.

**வேதா விநாசினம் நித்யம் ய ஏனமஜமவ்யயம்**
**கதம் ஸ புருஷ : பார்த்த கம் காதயதி ஹந்தி கம் (21)**

அழியும் தன்மையுடைய உடலையே இரதமாக்கி பிரம்மம் என்னும் இலட்சியத்தின் மீது தப்பாமல் குறிவைக்கும் ஆற்றல் படைத்த ப்ருதை (குந்தி)யின் புத்திரனே அர்ஜுனா! எவனொருவன் இந்த ஆத்மாவை அழிவற்றதாக, என்றும் உள்ளதாகவும், பிறப்பற்றதாகவும், மற்றும் புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்டதாகவும் அறிந்து கொள்கிறானோ, அவன் எவ்வாறு மற்றவரைக் கொல்வதற்குத் தூண்டுவான், மற்றும் எவ்வாறு மற்றவரைக் கொல்வான்? அழிவற்றதற்கு அழிவு என்பது நடக்காத காரியம். பிறப்பற்றது ஒருபோதும் பிறப்பதில்லை. ஆகவே, இந்த உடலை எண்ணித் துயரப்படக் கூடாது. இதையே ஒரு உதாரணம் மூலமாகத் தெளிவுபடுத்துகிறார்.

**வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய**
**நவானி க்ருஹ்ணாதி நரோபராணி**
**ததா சரீராணி விஹாய ஜீர்ணான்**
**யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ (22)**

எவ்வாறு மனிதர் **ஜீர்ணானி வாஸாம்ஸி** பழுதடைந்த – கிழிந்த, பழையதாகிப்போன ஆடைகளைத் துறந்து விட்டுப் புதிய ஆடைகளை ஏற்றுக் கொள்கிறார்களோ, சரியாக அதேபோன்றுதான் இந்த ஜீவாத்மாவும் பழையதாகிப்போன ஆடைகளைத் துறந்து விட்டு வேறொரு புதிய உடல்களை ஏற்றுக்கொள்கிறது. பழுதடைந்த போன பிறகுதான் புதிய உடலை ஏற்றுக் கொள்ள வேண்டுமானால் பச்சிளம் குழந்தைகள் இறந்து போகின்றனவே ஏன்? அந்த

ஆடை (உடல்) இன்னும் நன்றாக விரிந்தும் மலர்ந்தும் இருக்க வேண்டும்தானே? உண்மையில் இந்த உடலானது சம்ஸ்காரங்களையே (வினைகளையே) ஆதாரமாகக் கொண்டுள்ளது. எப்பொழுது சம்ஸ்காரம் பழுதடைந்து, செயலற்று விடுகிறதோ, அப்பொழுதே இந்த உடலும் விழுந்து விடுகிறது. ஒருவேளை சம்ஸ்காரம் இரண்டு நாட்களுக்கு மட்டுமே என்றிருந்தால் அதற்கு அடுத்த நாளே இந்த உடலானது பழுதடைந்து செயலிழந்து போய்விடுகிறது. இதற்குப்பிறகு மனிதனால் ஒரு மூச்சைக் கூட அதிகமாக எடுத்து வாழ முடியாது. சம்ஸ்காரமே உடல் எனப்படுகிறது. ஆத்மாவானது சம்ஸ்காரங்களுக்கு ஏற்றவாறு புதிய உடலைப் பெற்றுக் கொள்கிறது. **'அத கலு க்ரதுமய: புருஷ :. யதா இஹைவ, ததைவ ப்ரேத்ய பவதி, க்ருதம் லோகம் புருஷோபிஜாயதே' (சாந்தோக்ய உபநிஷதம் 3.14)–** அதாவது இந்த மனிதன் நிச்சயமாகவே சங்கல்பமயமானவன். இவ்வுலகில் மனிதன் எத்தகைய நிச்சயமுடையவனாக இருக்கிறானோ, அவ்வாறே இங்கிருந்து இறந்து விட்டுப் போனபிறகும் இருக்கிறான். தன்னுடைய சங்கல்பத்தால் உருவாக்கிக் கொண்ட உடல்களில் அவன் மீண்டும் பிறக்கிறான். இம்முறையில் மரணம் என்பது உடல்களை மாற்றிக் கொள்வது மட்டுமேயாகும். ஆத்மா ஒருபோதும் இறப்பதில்லை. மறுபடியும் அதனுடைய பிறப்பற்ற தன்மை– (அமரத்துவம்) ஆகியவற்றை வலியுறுத்திக் கூறும்வகையில்.

**நைநம் சிந்தந்தி ஷஸ்த்ராணி நைநம் தஹதி பாவக:**
**ந சைனம் க்லேதயந்த்யாபோ ந ஷோஷயதி மாருத: 23**

அர்ஜுனா! இந்த ஆத்மாவை ஆயுதங்களால் வெட்ட முடியாது. நெருப்பினால் இதனை எரிக்கவும் முடியாது. நீரினால் இதனை நனைக்கவும் முடியாது. மேலும் காற்றினால் இதனை உலர்த்தவும் முடியாது.

**அச்சேத்யோஅயமதாஹ்யோஅயமக்லேத்யோஅஷோஷ்ய ஏவ ச**
**நித்ய ஸர்வகத : ஸ்த்தாணுரசலோஅயம் ஸனாதன : (24)**

இந்த ஆத்மா துளைக்க முடியாதது. இதனைத் துளையிட முடியாது. இந்த ஆத்மா தகனத்திற்கு அப்பாற்பட்டது. இதனை எரிக்க இயலாது. இந்த ஆத்மா நனையப்படாதது. ஆகவே, இதனை நீரினால் நனைக்கவும் முடியாது. ஆகாயம் இதனைத் தன்னில் மறைக்கவும் முடியாது. இந்த ஆத்மாவானது சந்தேகமற வதைக்க முடியாததும், எங்கும் விரிந்தும் பரந்தும் உள்ளதும் அசைவற்றதும் உறுதியானதும் மற்றும் என்றும் நிலையானதும் மாறாததும் அநாதியானதுமாகும்.

அர்ஜுனன், 'குலதர்மமே என்றும் நிலையானது, மாறாதது அநாதியானது என்கிறான். இது போன்ற போரினால் என்றும் நிலையான மாறாத குலதர்மம்

அழிந்து போய்விடும் என்றான். ஆனால், ஸ்ரீகிருஷ்ணர் இதனை வெறும் அஞ்ஞானம் என்றதுடன், 'ஆத்மாவே என்றும் அநாதியானதும் நிலையானதும், மாறாததும் ஆகும்' என்று கூறினார். நீங்கள் யார்? என்றும் நிலையான, மாறாத சநாதன தர்மத்தின் வழிநடப்பவர்கள். என்றும் நிலையானதும், மாறாததும் எது? ஆத்மாவே! ஒருவேளை நீங்கள் ஆன்மா வரையிலான தூரத்தைக் கடக்கச் செய்கின்ற சிறப்பு வாய்ந்த ஆன்மீக சாதனை விதிமுறைகளைப் பற்றி அறியாதவர்களாக இருந்தால் நீங்கள் அந்த என்றும் நிலையான, மாறாத தர்மத்தைப் பற்றி ஒன்றுமறியாதவர் ஆவீர். அதனால் ஏற்பட்ட தீயவிளைவுகளைத்தான் மதவாதங்களின் பிடியில் சிக்கிக் கொண்டு தர்மத்தின் பாதையில் பயந்து நடப்பவர்கள் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. பாரத தேச வரலாற்றின் இடைக்காலத்தில் வெளியில் இருந்து வந்த முஸ்லீம்கள் வெறும் பன்னிரண்டாயிரம் பேர்மட்டும்தான் இருந்தனர். ஆனால், இன்றோ அவர்களின் எண்ணிக்கை இருபத்தி எட்டு கோடியாக உயர்ந்து விட்டது. பன்னிரண்டாயிரத்தில் இருந்து பெருகி, இலட்சமாகலாம். இன்னும் மேலும் கொஞ்சம் அதிகமாகப் போனால் ஒரு கோடியாக இருக்கலாம். ஆனால் எவ்வளவு ஆனது? இந்த இருபத்தி எட்டு கோடியையும் தாண்டி அதிகமாகிக் கொண்டே போகிறது. அவர்கள் அனைவருமே இந்துக்கள் மற்றும் உங்கள் உடன் பிறவா சகோதரர்கள்தானே! அவர்களைத் தொட்டதாலும், அவர்களோடு உண்டதாலும் அழிந்து விட்டனரா? அவர்கள் அழியவில்லை. மாறாக, அவர்களுடைய என்றும் நிலையான, மாறாததும், மாற்றம் என்பதே இல்லாததுமான சனாதன தர்மம் அழிந்து விட்டது. உலகியலைச் சார்ந்த, இவ்வுலகில் தோன்றிய எந்தவொரு பொருளும் என்றும் நிலையான மாறாத அந்தச் சனாதன தர்மத்தை தொடக்கூட முடியாத நிலையில் தொடுவதாலும், உண்பதாலும், அந்த நிலையான தர்மம் (சனாதன தர்மம்) எவ்வாறு அழிந்து போகும். அழிந்தது தர்மநெறியன்று. மாறாக, சூழ்நிலைவசப்பட்ட ஒரு மூடநம்பிக்கை, ஒரு தீய நெறி, வெறும் பழக்கவழக்கம் மட்டுமேயாகும். இதனால் மட்டும்தான் நாட்டில் மதக்கலவரம் தூண்டப்பட்டு பகைமையுணர்வு பெருகியது. இதன் காரணமாக தேசம் இரண்டாகத் துண்டுபட்டது. மேலும் தேசிய ஒருமைப்பாடு இன்றளவும் மாபெரும் கேள்விக் குறியாகவே உள்ளது.

இந்தத் தீயநெறிகளைப் பற்றிய கதைகள் சரித்திரங்களில் நிரம்பி வழிகின்றன. ஹமீர்பூர் மாவட்டத்தில் ஐம்பது அறுபது குடும்பங்கள் க்ஷத்திரிய குலத்தைச் சேர்ந்தவையாக இருந்தன. ஆனால் இன்றோ அவர்கள் அனைவருமே முஸ்லீம்களாகி விட்டனர். அவர்கள் மீது பீரங்கி துப்பாக்கிகளின் பிரயோகமோ வாள்வீச்சுகளோ பயன்படுத்தப்படவில்லை. உண்மையில் என்ன நடந்தது? நள்ளிரவில் இரண்டொரு மௌல்விகள் (முஸ்லீம் மதத் தலைவர்கள்) அந்தக்

கிராமத்தில் இருந்த ஒரேயொரு கிணற்றுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு, கர்ம காண்டத்தைப் பின்பற்றுகின்ற பிராம்மணர்கள் அதிகாலையில் எல்லோருக்கும் முன்பு அங்கே குளிக்க வருவார்கள் என்பதை அறிந்து, அவர்களின் வருகையை எண்ணிக் காத்திருந்தனர். அவர் வந்ததும் பிடித்து அவர் வாயை பொத்தியவாறே கெட்டியாக இறுகப்பிடித்து கொண்டு விட்டனர். அந்த பிராம்மணருடைய கண்ணெதிரிலேயே மௌல்விகள் கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்து, அதில் சிறிதளவு குடித்து விட்டு, மீதமிருந்த எச்சிலாக்கப்பட்ட தண்ணீரைக் கிணற்றிலேயே கொட்டி விட்டனர். அத்துடன் சேர்த்து எச்சில் ரொட்டித் துண்டு ஒன்றையும் கிணற்றின் உள்ளே வீசிவிட்டனர். பிராம்மணரோ ஒன்றும் செய்ய முடியாதவராக, திகைப்புடன் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு இருந்தார். அதற்குப்பிறகு மௌல்விகள் அந்தப் பண்டிதரைத் தங்கள் இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்று, வீட்டில் அடைத்து வைத்தனர்.

மறுநாள் அவர்கள் அந்த பண்டிதரிடம் கைகூப்பி உணவருந்துமாறு வேண்டினர். ஆனால் பண்டிதரோ கோபத்துடன், “அடேய், நீங்களோ முஸ்லீம்கள், நானோ பிராம்மணர். நீங்கள் தருகின்ற உணவை நான் எப்படி உண்பது?” என்று வெகுண்டு எழுந்தார். அதற்கு அந்த மௌல்விகள், நகைத்தவாறே “மஹராஜ் எங்களுக்கு உங்களைப் போன்ற சிந்தனையாளர்கள்தான் மிகவும் அவசியம் தேவைப்படுகின்றனர். எங்களை மன்னித்து விடுங்கள்” என்று கூறியபடியே பண்டிதரை விடுவித்து விட்டனர்.

பண்டிதர் தமது கிராமத்திற்கு வந்தார். அங்கே கிராமத்து மக்கள் வழக்கம்போலக் கிணற்றுத் தண்ணீரை எடுத்து உபயோகப்படுத்திக் கொண்டிருப்பதைக் கண்ட அவர் அவ்விடத்திலேயே உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். கிராமத்து மக்கள் அதற்கான காரணத்தைக் கேட்டபோது அவர், “இந்தக் கிணற்று மேடையில் ஏறி நின்று முஸ்லீம்கள், என் கண் முன்னால் நீரை எச்சில்படுத்தி விட்டார்கள். மேலும், இதில் எச்சில் ரொட்டித் துண்டையும் எறிந்தார்கள்” என்றார். இதைக் கேட்ட கிராமத்து மக்கள் திடுக்கிட்டவாறே,” “இப்போது என்ன செய்வது” என்று கேட்டனர். அதற்கு அந்த அதிமேதாவியான பண்டிதர், “இனி என்ன செய்வது! உங்களின் தர்மம் அழிந்து விட்டது” என்று ஒரே போடாகப் போட்டார்.

அந்தக் காலத்தில் மக்கள் கல்வியறிவு பெற்றிருக்கவில்லை. பெண்களுக்கும் சூத்திரர்களுக்கும் கல்வி கற்கும் உரிமை எப்போது இருந்து பறிக்கப்பட்டது என்பதும் தெரியவில்லை. வைசியர்கள் பணம் சம்பாதிப்பதை மட்டுமே தங்களின் நெறி என்று கருதி உட்கார்ந்து கொண்டனர்.

க்ஷத்திரியர்களோ சாரணர்களின் புகழ்ச்சிப்பாடலில் தங்களை மறந்து மூழ்கிக்கிடந்தனர் ‘‘அன்னமிட்டோரின் வாளிலிருந்து மின்னல் தோன்றினால்போதும். தில்லியின் தலைநகரின் ஆட்சிபீடமே ஆட்டம் காணத் துவங்கிவிடும். எப்படியோ ஒருவகையில் நமக்கு மதிப்பும் மரியாதையும் கிடைக்கிறது என்றிருக்கையில் கல்வி கற்க வேண்டிய அவசியம்தான் என்ன? மேலும் தர்மத்துடன் நமக்கென்ன கொடுக்கல் வாங்கல் இருக்கிறது?” என்பதே அவர்களின் எண்ணமாக இருந்தது. ஆகையால் தர்மமும் பிராம்மணர்களுக்கு மட்டுமே உரிமையான பொருள் என்பது போன்றொரு நிலை ஏற்பட்டது. அவர்களே தர்ம சூத்திரங்களை இயற்றுபவர்கள். அவர்களே அவற்றிற்காக விளக்கமும் தரவல்லவர்கள். அவர்களே அதில் உள்ள உண்மை – பொய்மையைப் பற்றிய நிர்ணயத்தையும் தருகின்ற தகுதி படைத்தவர்களாக இருந்தனர். ஆனால் பழங்காலத்திலோ பெண்கள்,சூத்திரர், வைசியர், க்ஷத்திரியர், மற்றும் பிராம்மணர்கள் என்று அனைவருக்குமே வேதம் கற்பதற்கான அதிகாரம் இருந்தது. ஒவ்வொரு பிரிவிலும் பிறந்த ரிஷிகள் வேத மந்திரங்களை இயற்றி உள்ளனர். சாஸ்திரங்களின் பொருளை நிர்ணயிப்பதிலும் அவர்கள் பெரும்பங்காற்றியுள்ளனர். பண்டைக்கால ராஜாக்கள் தர்மத்தின் பெயரால் ஆடம்பரத்தைப் பரப்புபவர்களுக்குத் தண்டனை வழங்கியுள்ளனர். தர்மத்தைப் பின்பற்றி நடப்பவர்களுக்கு மரியாதை அளித்து கௌரவித்து வந்துள்ளனர்.

ஆனால் இடைக்கால பாரதத்தில் என்றும் நிலையான, மாறாத தர்மத்தைப் பற்றிய உள்ளது உள்ளபடியான, உண்மையான அறிவைப் பெற்றிராத காரணத்தால், மேலே குறிப்பிடப்பட்ட கிராம மக்கள், தங்களது தர்மம் அழிந்து விட்டதாகக் கருதிச் செய்வதறியாது ஒரு மூலையில் ஒதுங்கிக் கொண்டனர். மேலும் சிலர் இந்த விரும்பத்தகாத வார்த்தைகளைக் கேட்டுத் தற்கொலை செய்து கொண்டனர். ஆனால், எத்தனைபேர்தான் அவ்வாறு உயிரை விடத் துணிவர். திடமான நம்பிக்கை கொண்டிருந்த பிறகும்கூட நிலைதடுமாறி வேறுவழியைத் தேட வேண்டிய கட்டாயத்திற்கு அவர்கள் உள்ளாயினர். இன்றும் கூட அவர்கள் மூங்கில் நட்டு, உலக்கை வைத்து, இந்துக்களைப் போலவேதான் திருமணம் நடத்துகின்றனர். கடைசி நேரத்தில் மட்டும் ஒரு மௌல்வி வந்து ‘நிக்காஹ்’ படித்து விட்டுச் செல்கிறார். அவர்கள் அனைவருமே தூய்மையான இந்துக்கள்தான். ஆனால் இன்றோ அவர்கள் எல்லோருமே முஸ்லீம்களாகி விட்டனர்.

என்னதான் நடந்தது? தண்ணீரைக் குடித்தார்கள், நடந்ததை அறியாமல் முஸ்லீம்களால் எச்சிலாக்கப்பட்டதை உண்டு விட்டார்கள். அதனால் அவர்களின் தர்மம் அழிந்துபோய் விட்டது. அவர்களைப் பொறுத்தவரையில் தர்மமோ தொட்டாற் சிணுங்கிச் செடியாகிவிட்டது. இந்தச் செடியின் இலைகளைத் தொட்டால் அவை சுருங்கிவிடும், விட்டால் மீண்டும் மலர்ந்து விடும். இந்தச் செடியின் இலைகளாவது

விட்டால் மீண்டும் மலர்ந்து விடுகிறது. ஆனால் இவர்களுடைய தர்மமோ மீண்டும் மலரவே முடியாதபடிக்கு ஒரேயடியாக அழிந்துவிட்டது. அவர்களும் செத்துப் போய்விட்டனர். அவர்களுடைய பரமாத்மாவான ராமரும், கிருஷ்ணரும் என்றென்றைக்குமாக மடிந்து விட்டனர். எது என்றும் நிலையானதோ, மாறாததோ அதுவும் இறந்து போய்விட்டது. உண்மையில், இதெல்லாம் நிலையான தர்மத்தின் பெயரில் வழக்கத்தில் இருந்து வந்த ஏதோவொரு தீயநெறி மட்டுமேயாகும். இதையே அனைவரும் தர்மம் என்று எண்ணிக் கொண்டு இருந்தனர்.

நாம் தர்மத்தைச் சரணடைவதற்கான காரணம் என்ன? ஏனெனில் நாம் மரணத்தின் ஆளுமைக்குட்பட்டவர்கள் (இறந்தும் பிறந்தும் கொண்டிருப்பவர்). மேலும், தர்மமோ மிகவும் வலிமையான ஆதாரமாகும். எனவே நாம் அதனைச் சரணடைந்தால் அமரத்துவ நிலையைப் பெற்று விடுவோம். ஆனால், நாமோ யாரேனும் வெட்டினால்தான் இறந்து போவோம். இந்த தர்மமோ வெறுமனே தொடுவதாலும் உண்பதாலும்கூட அழிந்துபோகும் என்றால் அது எப்படி நம்மைக் காப்பாற்றப் போகிறது? தர்மம் உங்களைக் காக்கும் வல்லமை படைத்தது. உங்களை விடவும் பலம் பொருந்தியது. நீங்கள் வாள் கொண்டு வெட்டப்பட்டால்தான் இறந்து போவீர்கள். ஆனால் உங்களுடைய தர்மமோ? தொட்ட மாத்திரத்திலேயே அழிந்துவிட்டதே! எந்தமாதிரியான தர்மம் உங்களுடையது? தீயநெறிகள்தான் அழிந்து போகும். என்றென்றும் நிலையான சனாதன தர்மமோ ஒருபோதும் அழியாது.

என்றும் நிலையான சனாதன தர்மம் என்பது ஆயுதங்களால் வெட்ட முடியாது; நெருப்பால் எரிக்க முடியாது; நீரால் ஈரப்படுத்த முடியாது என்ற அளவிற்கு வலிமை பொருந்திய ஒன்றாகும். இவ்வாறிருக்க உண்பதும் குடிப்பதும் எல்லாம் வெகுதூரம். இயற்கை அல்லது படைப்பில் உண்டான எந்தவொரு பொருளுமே அதனைத் தொடக்கூட முடியாது எனும்போது அந்த என்றும் நிலையான சனாதனம் எப்படி அழிந்து போய்விடும்?

இத்தகைய பல்வேறு தீய நெறிகள் அர்ஜுனனின் காலத்திலும்கூட இருந்தது. அவனும் அவற்றிற்கு இரையானவன்தான். அவன் நடுநடுங்கித் தேம்பியபடியே 'குலதர்மமே என்றும் நிலையானது' என்று புலம்பினான், 'யுத்தத்தால் என்றும் நிலையான சனாதன தர்மம் அழிந்து விடும். குலதர்மம் அழிந்து போனால் நாமெல்லோரும் நீண்ட காலம்வரை நரகத்தில் உழல வேண்டியிருக்கும்' என்றெல்லாம் அவன் கூறினான். ஆனால் ஸ்ரீகிருஷ்ணரோ, "உனக்கு இந்த அஞ்ஞானம் எங்கிருந்து உண்டானது?" என்று கேட்டார். அதுவொரு தீயநெறி என்பது இதிலிருந்தே தெளிவாகிறது. அதனால்தானே ஸ்ரீகிருஷ்ணர் இதற்கு

மறுப்புத் தெரிவித்ததுடன், "ஆத்மாவே என்றும் நிலையானது, மாறாதது" என்றும் எடுத்துரைக்கிறார். ஒருவேளை நீங்கள் ஆன்மீகப் பாதையைப் பற்றி அறிந்திருக்கவில்லை என்றால் என்றும் நிலையான, மாறாத சனாதன தர்மத்தில் இன்னும் உங்களுக்கு நுழைவு கிடைக்கவில்லை என்பதே உண்மை.

இந்த என்றும் நிலையான, மாறாத ஆத்மாவானது எல்லோருடைய அகத்திலும் நிறைந்துள்ளது எனும்போது அதை எப்படித் தேடி அடைய வேண்டும்? இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**அவ்யக்தோயமசிந்த்யோயமவிகார்யோஅயமுச்யதே**
**தஸ்மாதேவம் விதித்வைனம் நானுசோசிது மர்ஹஸி (25)**

இந்த ஆன்மா **அவ்யக்தம்** அதாவது புலன்களால் அறியப்பட முடியாதது. புலன்களின் மூலமாக இதனைப் புரிந்து கொள்ளவும் முடியாது. எதுவரைக்கும் புலன்களும் மற்றும் புலன் விஷயச் சேர்க்கையும் உள்ளதோ அதுவரை ஆன்மா என்னவோ இருந்து கொண்டு இருந்தாலும் அதனை அறிந்து கொள்வது மட்டும் முடியாது. அது சிந்தனைக்கு அப்பாற்ப்பட்டது. எதுவரை சித்தமும் அந்தச் சித்தத்தில் இருந்து எழுகின்ற எண்ண அலைகளும் இருக்கின்றனவோ, அதுவரைக்கும் அந்த ஆத்மா என்னவோ என்றும் நிலையானது மாற்றமில்லாததுதான் ஆனால் அது நம்முடைய தரிசனத்திற்கோ உபயோகத்திற்கோ, அதில் நாம் பிரவேசிப்பதற்கோ, நுழைவு பெறுவதற்கோ இயலாது, ஆகவே, நீங்கள் முதலில் சித்தத்தைக் (மனதைக்) கட்டுப்படுத்துங்கள். ஏற்கனவே ஸ்ரீகிருஷ்ணர், "உண்மையற்ற பொருளுக்கு நிலைத்தன்மை இல்லை. மேலும், உண்மைப் பொருளுக்கோ மூன்று காலங்களிலும் குறைவொன்றுமில்லை. இந்த ஸத் (உள்ளது) எனப்படுவதே ஆன்மா, ஆன்மாவே மாற்றமில்லாதது, என்றும் நிலையானது, மாறாதது மற்றும் புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்டது" என்று கூறியுள்ளார். தத்துவதரிசிகள் இந்த ஆத்மாவை இத்தகைய குணதர்மங்களுடன் கூடிய ஒன்றாகக் கண்டுள்ளனர். பத்து மொழிகளைக் கற்று அறிந்த மொழி வல்லுநர்களோ, பணம் படைத்த செல்வந்தர்களோ காணவில்லை. மாறாக, தத்துவதரிசிகள் மட்டுமே கண்டுள்ளனர். ஸ்ரீகிருஷ்ணர் இனி வரும் பகுதியில், 'பரமாத்மா ஒருவரே அந்த தத்துவம்' என்று கூறுகிறார். மனமானது முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு விடுகின்ற காலத்தில்தான் சாதகன் அவரை தரிசனம் செய்கிறான் மற்றும் அவருள் நுழையவும் செய்கிறான். சாதனையின் இறுதிக் காலத்தில்தான் பகவான் கிடைக்கிறார். மேலும் அடுத்த கணமே அவன் தன்னுடைய ஆன்மாவையே அனைத்து தெய்வீகமான குணதர்மங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளதாகக் காண்கிறான். அவன் ஆன்மாவே உண்மையானது,

என்றென்றும் நிலையானது, மாறாதது மற்றும் முழுமையானது என்றும் காண்கிறான். இந்த ஆன்மா சிந்தனைக்கு அப்பாற்ப்பட்டது. இது விகாரங்கள் அற்றது. அதாவது, மாறுதல் அற்றது என்று சொல்லப்படுகிறது. எனவே, 'அர்ஜுனா! ஆன்மாவை இவ்வாறு அறிந்து கொண்டு, நீ வருந்துவது தகுதியானது அல்ல'. இப்பொழுது ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜுனனுக்குச் சாதாரணமான விவாதம் மூலமாகப் புரியவைக்கிறார்.

**அத சைனம் நித்யஜாதம் நித்யம் வா மன்யஸே ம்ருதம்**
**ததாபி த்வம் மஹாபாஹோ நைவம் சோசிதுமர்ஹஸி (26)**

ஒருவேளை நீ இதனை எப்போதும் பிறப்பதாகவும் எப்போதும் இறப்பதாகவும் கருதினாலும்கூட நீ வருத்தப்பட வேண்டியது இல்லை. ஏனெனில்

**ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம்ஜன்ம ம்ருதஸ்ய ச**
**தஸ்மாதபரிஹார்யேஅர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி (27)**

அவ்வாறு ஏற்றுக் கொண்டாலும் கூட பிறப்பவர்கள் அனைவரும் இறப்பதும் இறப்பவர்கள் அனைவரும் மீண்டும் பிறப்பதும் உறுதி என்பதும் தெளிவாகிறது. மேலும் இதை அறிந்த நீ தீர்மானிக்க முடியாத இந்த விஷயத்தைப் பற்றி வருத்தப்பட வேண்டியதில்லை. எதற்கு மாற்று சிகிச்சை என்பது இல்லையோ, அதை எண்ணி வருந்திக் கொண்டிருப்பது இன்னுமொரு துக்கத்தை வரவேற்பதற்கு ஒப்பானதாகும்.

**அவ்யக்தாதீனி பூதானி வ்யக்தமத்யானி பாரத**
**அவ்யக்தநிதனான்யேவ தத்ர கா பரிதேவனா(28)**

அர்ஜுனா! மனிதர் உட்பட எல்லா உயிரினங்களுமே பிறப்பதற்கு முன்பும்; இறந்ததற்குப் பின்பும் உடலற்றவைகளாகவே இருக்கின்றன. பிறப்பிற்கு முன்பும் மற்றும் இறந்த பிறகும் அவை புலன்களுக்குப் புலப்படாத நிலையில்தான் உள்ளன. பிறப்பு – இறப்பிற்கு இடையில்தான் உடல் தரித்தவைகளாகத் தென்படுகின்றன. எனவே, இந்த மாற்றங்களைப் பற்றி வீணாக ஏன் எண்ணிக் கொண்டிருக்கிறாய்? இந்த ஆத்மாவை எவர் காண்கிறார்? இதுபற்றிக் கூறுகிறார்.

**ஆஸ்சர்யவத்பச்யதி கஸ்சிதேனம்**
**ஆஸ்சர்யவத்வததி ததைவ சான்ய:**
**ஆஸ்சர்யவச்சைனமன்ய: ச்ருணோதி**
**ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித் (29)**

இதற்கு முன்பு ஸ்ரீகிருஷ்ணர், “இந்த ஆத்மாவை தத்துவ தரிசிகள் கண்டுள்ளனர்” என்று கூறியிருந்தார். இப்பொழுது தத்துவ தரிசனத்தின் அரியதன்மையை வெளிச்சம் போட்டுக் காட்டும் வகையில், “மிகவும் அரிதாக யாரேனும் ஒரு சில மஹாபுருஷர்கள்தான் இந்த ஆத்மாவை வியப்பிற்குரிய ஒன்றாகப் பார்க்கிறார்கள்” என்கிறார். கேட்பதில்லை, கண்கூடாக, நேருக்கு நேராகப் பார்க்கிறார்கள். மேலும், அதேபோன்று, வேறு ஏதேனும் ஒரு மஹாபுருஷர்தான், வியப்பிற்குரிய ஒன்றாக இதனுடைய தத்துவத்தைக் கூறுகிறார். பார்த்தவர் எவரோ, அவரே உள்ளது உள்ளபடியாகக் கூறமுடியும். இன்னும் யாரேனும் ஒரு அரிதான ஆன்மீக சாதகரோ, இதனை வியப்பிற்குரிய முறையில் கேட்கிறார். அனைவரும் கேட்பது இல்லை. ஏனெனில் இது ஆன்மீக சாதனையில் ஈடுபடுகின்ற தகுதியுடைய அதிகாரிகளுக்கு மட்டுமேயாகும். அர்ஜுனா! இன்னும் ஒரு சிலரோ கேட்டாலும்கூட இந்த ஆன்மாவை அறிந்து கொள்ள முடிவதில்லை. ஏனெனில் ஆன்மீக சாதனை முழுமை பெறுவதில்லை. நீங்கள் வேண்டுமானால் இலட்சம் முறை இந்த ஞானத்தைப் பற்றிக் கேளுங்கள், புரிந்து கொள்ளுங்கள். – தலைமுடியைப் பிய்த்துக் கொண்டு வேண்டுமானால் இதனைப் புரிந்து கொள்ள முயற்சியுங்கள், வாயைப் பிளந்து கொண்டு இதனை அறியும் விருப்பத்துடன் இருந்து பாருங்கள். ஆனால், மோகம் மிகவும் வலியது. சிறிது நேரம் கழிந்தவுடனேயே, நீங்கள் உங்களுடைய உலகியல் விவகாரங்களில் மூழ்கிப்போய் விடுவீர்கள். இறுதியாக ஸ்ரீகிருஷ்ணர் நிர்ணயித்துக் கூறுவதாவது.

**தேஹீ நித்யமவத்யோஅயம் தேஹே ஸர்வஸ்ய பாரத**
**தஸ்மாத்ஸர்வாணி பூதானி ந த்வம் ஷோசிதுமர்ஹஸி (30)**

அர்ஜுனா! இந்த ஆன்மா எல்லோருடைய உடலிலும் ஒருபோதும் கொல்லப்பட முடியாததாக, வெட்டப்பட முடியாததாக இருக்கிறது. எனவே மனிதர் உட்பட ஒட்டு மொத்தஉயிரினங்கள் அனைத்திற்காகவும் நீ வருந்திக் கொண்டிருக்க வேண்டியதில்லை.

“ஆன்மாவே என்றும் நிலையானது, மாறாதது” எனும் இந்த உண்மையை நிரூபித்து, அதனுடைய சர்வவல்லமையுடன் சேர்த்து வர்ணனை செய்யப்படுவதுடன் கேள்வி நிறைவடைகிறது.

அர்ஜுனா, ““இப்பொழுது இதை எவ்வாறு அடைவது?” என்ற புதியதொரு கேள்வி எழுகிறது, கீதை முழுமையிலும் இதனை அடைய இரு வழிகள் மட்டுமே உள்ளன. அவைகள் முறையே **“நிஷ்காம கர்மயோகம்** (பலனை எதிர் பாராத கர்மயோகம்) இரண்டாவது **ஞானயோகம்** ஆகும். ஆக இவ்விரண்டு வழிகளிலுமே கடைப்பிடிக்கவேண்டிய முறைகள் என்னவோ ஒன்றேதான்.

இந்தமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தியவாறே யோகேஷ்வரரான ஸ்ரீ கிருஷ்ணர் ஞானயோகத்தைப் பற்றி விளக்க ஆரம்பிக்கிறார்.

**ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி**
**தர்ம்யாத்தி யுத்தாச்ரேயோன்யத்க்ஷத்ரியஸ்ய ந வித்யதே (31)**

அர்ஜுனா! சுய தர்மம் என்ற முறையில் பார்த்தாலும்கூட நீ பயம் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் தர்மத்துடன் கூடிய யுத்தத்தை விடவும் வேறெந்த மேலான நன்மையைத் தருகின்ற வழியும் க்ஷத்திரியனுக்கு இல்லை. இதுவரைக்கும், " ஆன்மாவே என்றும் உள்ளதாகிய சனாதன தர்மம்; அது ஒன்று மட்டுமே தர்மம் ஆகும்" என்றெல்லாம் சொல்லப்பட்டது. அடுத்ததாக இந்தச் சுயதர்மம் என்றால் என்ன? ஆன்மா ஒன்று மட்டும்தானே உள்ளதொரு தர்மம். அது அசையாத நிலைப்பாடும் உறுதிப்பாடும் உடையது எனும்போது தர்மத்தை அனுசரிப்பது என்றால் என்ன? உண்மையில், இந்த ஆன்மீகப் பாதையில் முன்னேறிச் செல்வதற்கான திறன் ஒவ்வொரு தனிமனிதனிடமும் வேறுபடுகிறது. சுபாவத்தில் இருந்து தோன்றிய இந்தத் திறனையே 'சுய தர்மம்' என்கிறோம்.

இந்த ஒரே என்றும் நிலையான, உறுதியான ஆன்மீகப் பாதையில் செல்கின்ற சாதகர்களை மஹாபுருஷர்கள் சுபாவத்தால், அவர்களுக்கு உள்ள திறன்பாட்டிற்கு ஏற்ப நான்கு பிரிவுகளாக வகைப்படுத்தி உள்ளனர். அவை முறையே, 'சூத்திரர், வைசியர், க்ஷத்திரியர், மற்றும் பிராம்மணர்' என்று கூறப்படுகிறது. ஆன்மீக சாதனையின் ஆரம்ப நிலையில் எல்லா சாதகர்களுமே 'சூத்திரர்' அதாவது 'குறைவான ஞானம் உடையவர்' எனப்படுகிறார்கள். மணிக்கணக்கில் இறைவழிபாட்டில் உட்கார்ந்தபோதும்கூட அவனால் பத்து நிமிடங்களுக்குக் கூடத் தான் விரும்பியதுபோல் அதில் மனம் ஒன்றி ஈடுபட முடிவதில்லை. அவனால் இயற்கை அல்லது படைப்பின் மாயாஜாலத்தை வெட்டியெறிய முடிவதில்லை. இந்த நிலையில் மஹாபுருஷரின் சேவையின் மூலமாக அவனுடைய சுபாவத்தில் நற்குணங்கள் வர ஆரம்பிக்கின்றன. அவன் 'வைசியப்' பிரிவைச் சேர்ந்த சாதகனாக உயர்கிறான். ஆன்மீகச் செல்வமே நிலையான செல்வமாகும். அதை அவன் கொஞ்சம்—கொஞ்சமாகச் சேகரிக்கத் தொடங்குகிறான். மேலும் 'கோபாலன்' அதாவது புலன்களைப் பாதுகாப்பதில் தேர்ச்சி பெறுகிறான். காமம், குரோதம் முதலானவற்றால் புலன்களுக்குத் தீங்கு விளைகிறது. அதே போன்று விவேகம், வைராக்கியம் ஆகியவற்றால் அவை பாதுகாக்கப்படுகின்றன. ஆனால் இயற்கையை அல்லது சுபாவத்தை (படைப்பை) ஆணிவேருடன் அழிக்கின்ற திறமை அவனிடம் இருப்பதில்லை. படிப்படியாக

மேன்மையடைந்து கொண்டே சென்று சாதகனுடைய (உள்மனத்தில்) அந்தகரணத்தில் மூன்று குணங்களையும் வெட்டி வீழ்த்துகின்ற திறமை அதாவது 'க்ஷத்திரியத்துவம்' வந்துவிடுகிறது. இதே நிலையில் இயற்கையையும் அதன் விகாரங்களையும் அழிக்கின்ற திறமையும் அவனுக்குள் வந்து விடுகிறது. ஆகையால் யுத்தம் இங்கிருந்துதான் ஆரம்பம் ஆகின்றது. படிப்படியாகச் சாதனை செய்து கொண்டே சென்று சாதகன் 'பிராம்மணத்துவப்' பிரிவிற்கு உயர்ந்து விடுகிறான். இந்தச் சமயத்தில் அவனுள் மனக்கட்டுப்பாடும், புலன் அடக்கமும், தங்கு தடையில்லாமல் சிந்தனை ஓட்டமும் நடைபெறும். ஆன்மீகச் சிந்தனை, எளிமை, ஆன்மீக அனுபவம், ஞானம் முதலான இலட்சணங்கள் சாதகனுக்குள் இயல்பாகவே பெருக்கெடுக்கின்றன. இவற்றைக் கடைப்பிடித்துக்கொண்டே சென்று படிப்படியாக அவன் பிரம்மத்திற்குள் நுழைவு பெற்று விடுகிறான். இவ்விடத்தில் அவன் பிராம்மணன் என்ற நிலையையும் கடந்து விடுகிறான். இறுதியில் அவன் பிராம்மணராகவும் இருப்பதில்லை. விதேக நாட்டின் அரசனான ஜனகருடைய சபையில் மஹரிஷி யாக்ஞ்யவல்கியரானவர், சாக்ராயணா, உஷஸ்தி, கஹோல், ஆருணி, உத்தாலகர் மற்றும் கார்க்கி ஆகியோர்களின் கேள்விகளுக்குப் பதிலளித்தவாறே கூறியதாவது: "ஆத்மாவை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரத்தை முழுமையாகப் பெற்றுப் பயனடைபவரே பிராம்மணர் ஆவார். இந்த ஆத்மாவே இகவுலகம், பரலோகம் மற்றும் மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களின் அகத்தில் இருந்து கொண்டு இயக்குவிக்கிறது. சூரியன், சந்திரன், நிலம், நீர், வாயு, நெருப்பு, நட்சத்திர மண்டலம், வெளி மண்டலம் (அந்தரிக்ஷம்), ஆகாயம் மற்றும் ஒவ்வொரு கணமும் இந்த ஆத்மாவின் ஆளுகைக்கு உட்பட்டு இருக்கின்றன. இந்த உன்னுடைய ஆத்மா அந்தர்யாமியாக விளங்கும் அமிர்தமாகும். (மரணமற்றது) ஆத்மா ஒன்றே அழியாதது, அதைத் தவிர மற்றவை எல்லாம் அழியக் கூடியவையே ஆகும். எவனொருவன் இந்த அழிவற்ற ஆன்மாவை அறியாமல் வேள்வி செய்கிறானோ, தவம் செய்கிறானோ, ஆயிரம் வருடங்கள் வரைக்கும் கூட வேள்வியில் ஈடுபடுகிறானோ, அவனுடைய இந்த எல்லாக் கர்மங்களுமே அழியக்கூடியவைதான். எவனொருவன் இந்த அழிவற்ற ஆன்மாவை அறிந்து கொள்ள முடியாமல் இவ்வுலகிலிருந்து மரணமடைந்து செல்கிறானோ அவன் பரிதாபத்திற்குரியவன்; கருமியுமாவான். மேலும், எவனொருவன் இந்த அழிவற்ற ஆன்மாவை அறிந்து கொண்டு இவ்வுலகிலிருந்து மரணமடைந்து செல்கிறானோ அவனே பிராம்மணன் ஆவான்". (ப்ருஹதாரண்யக உபநிஷதம் 3 4–5–7–8)

அர்ஜுனன் க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்த சாதகன் ஆவான். ஸ்ரீகிருஷ்ணர், 'க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்த சாதகனுக்கு யுத்தத்தைத் தவிர வேறெந்த நன்மை பயக்கவல்ல வழியும் கிடையாது' என்கிறார். இங்கே, க்ஷத்திரியன் என்றால் என்ன?

என்றொரு கேள்வி எழுகிறது. பெரும்பாலோர் இதற்கு, சமுதாயத்தில் நிலவி வருகின்ற பிறப்பை அடிப்படையாகக் கொண்டு வழங்கப்படுகின்ற பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர ஜாதிகளையே குறிப்பிடுவதாகப் பொருள் கொள்கின்றனர். இவற்றையே நான்கு வர்ணங்கள் என்றும் ஏற்றுக் கொண்டுள்ளனர். ஆனால் உண்மை அதுவன்று. கீதையின் ஆசிரியர் தாமே முன்னின்று, 'க்ஷத்திரியன் யார்? வர்ணம் என்றால் என்ன? என்பதையெல்லாம் விளக்கியருள்கிறார். இங்கே அவர் வெறுமனே க்ஷத்திரியன் என்ற பெயரை மட்டுமே குறிப்பிடுகிறார். மேலும் பதினெட்டாவது அத்தியாயம் வரைக்கும் இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் பதில் அளிக்கிறார். உண்மையில் இந்த வர்ணம் என்றால் என்ன? மற்றும் இவற்றில் எவ்வாறு மாற்றங்கள் உண்டாகின்றன? என்பதையெல்லாம் அவரே விளக்குகிறார்.

'ஸ்ரீகிருஷ்ணர், **சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்**' (கீதை 4/13) என்கிறார். அதாவது 'நான்கு வர்ணங்களை நானே உருவாக்கினேன்' என்கிறார். அப்படியென்றால் அவர் என்ன மனிதர்களைப் பிரித்தாடினாரா? ஸ்ரீகிருஷ்ணர் இதற்கு 'இல்லை' என்று பதில் கூறும் விதமாக, **'குணகர்ம விபாகச:'** – 'குணங்களை அடிப்படையாகக் கொண்டு கர்மத்தையே நான்கு பிரிவுகளாக ஒழுங்குபடுத்தியுள்ளேன்' என்கிறார். இனி அவ்வாறு ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள கர்மம் என்றால் என்ன? என்று பார்க்க வேண்டும். குணங்கள் மாறிக் கொண்டேயிருக்கும் இயல்புடையவை ஆன்மீக சாதனையின் சரியான கிரியையின் மூலமாக தாமஸீகத்தில் இருந்து ராஜஸீகம் மற்றும் ராஜஸீகத்தில் இருந்து ஸாத்வீகம் என்று குணங்களுக்குள் நுழைவு கிடைத்துக்கொண்டே செல்கிறது. கடைசியில், பிராம்மண சுபாவம் அல்லது இயல்பு வந்துவிடுகிறது. அந்தச் சமயத்தில், பிரம்மத்தில் நுழைவு பெறவல்ல அனைத்து தகுதிகளும் அந்த சாதகரிடம் குடி கொண்டிருக்கும். வர்ணம் தொடர்பான கேள்வியானது இங்கிருந்து ஆரம்பமாகி பதினெட்டாவது அத்தியாயத்தில் சென்று நிறைவடைகிறது. ஸ்ரீ கிருஷ்ணருடைய கருத்து இதுவே.

**'ஸ்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத்** (கீதை (18/47)

ஒருவனுடைய சுபாவத்தில் இருந்து உண்டான, இந்த தர்மத்தில் முன்னேறிச் செல்வதற்கான திறன்பாடு எத்தகையதோ, அது ஒருவேளை குணமற்றதாகவே, சூத்திரப் பிரிவையே சேர்ந்ததாக இருந்தாலும்கூட, மேலான நன்மையைத் தரவல்லதாகும். ஏனெனில், நீங்கள் படிப்படியாக அங்கிருந்துதான் உயர்வடைய முடியும். அதைவிட உயர்ந்த நிலையில் உள்ள சாதனைப் பிரிவினரைப் போல நடிக்கத் தொடங்கினால் சாதகன் சாதனையிலிருந்து நழுவி விடுகிறான்.

அர்ஜுனன் க்ஷத்திரிய பிரிவைச் சேர்ந்த சாதகனாக இருந்தான். எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! உன்னுடைய சுபாவத்தில் அமைந்துள்ள, இந்த யுத்தத்தில் ஈடுபடுகின்ற, உன்னிடமுள்ள திறன்பாட்டைக் கருத்தில் கொண்டு பார்த்தாலும் நீ பயப்பட வேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. இதைவிட மேலாக, மற்றொரு நன்மை பயக்கவல்ல காரியம் க்ஷத்திரியருக்கு இல்லவே இல்லை" என்கிறார். இதுபற்றி விளக்கிக் கூறும் வகையில் மறுபடியும் யோகேஷ்வரர் கூறுகிறார்.

**யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க்கத்த்வாரமபாவ்ருதம்**
**ஸுகின : க்ஷத்ரியா : பார்த்த லபந்தே யுத்தமீத்ருஷம் (32)**

அழியும் உடலையே இரதமாக்கி இலட்சியத்தை நோக்கித் தவறாமல் குறிவைப்பவனே அர்ஜுனா! தானாகவே கிடைத்திருக்கும் திறந்த சொர்க்க வாயிலாகிய இந்த யுத்தத்தை பாக்கியவானாகிய க்ஷத்திரியனே அடையப் பெறுகிறான். க்ஷத்திரிய பிரிவின் சாதகனிடம் மூன்று குணங்களையும் வெட்டி எறிகின்ற திறமை இருக்கிறது. அவனுக்காக சொர்க்கத்தின் வாசல் திறந்தே இருக்கிறது. ஏனெனில், அவனிடம் தெய்வீகச் செல்வம் முழுமையாகச் சேகரிக்கப்பட்ட நிலையில் உள்ளது. சுவாசத்தில் (ஸ்வரம்) சஞ்சாரம் செய்கின்ற திறமை அவனுக்கு உள்ளது. இதுவே 'சொர்க்கத்தின் திறந்த வாசல்' எனப்படுகிறது. க்ஷேத்திரன் மற்றும் க்ஷேத்திரக்ஞன் ஆகிய இவர்களுக்கு இடையிலான இந்த யுத்தத்தை பாக்கியவானான க்ஷத்திரியனே அடையப்பெறுகிறான். ஏனெனில் அவனிடத்தில்தான் போர் புரியத் தக்க வல்லமை இயற்கையாகவே குடி கொண்டிருக்கிறது.

உலகத்தில் யுத்தங்கள் என்னவோ நடக்கவே செய்கின்றன. ஒட்டு மொத்த உலகமும் ஒன்றுகூடிச் சண்டையிடுகின்றன. ஒவ்வொரு வகுப்பினரும் மோதிக் கொள்கின்றனர். ஆனால், என்றும் நிலையான, மாறாத வெற்றி என்பது அவற்றில் எல்லாம் வெற்றி பெற்றவர்களுக்குக்கூட கிடைப்பதில்லை. அவையெல்லாம் வெறும் பழிக்குப் பழி மட்டுமேயாகும். எவ்வளவு தூரம் ஒருவன் மற்றவனை அடக்கியாள்கிறானோ, காலப்போக்கில் அவனே அவ்வளவு தூரம் அடங்கி வாழ வேண்டியிருக்கிறது. எதில், புலன்களை வாட்டுகின்ற இந்த சோகம் இருந்து கொண்டே இருக்கிறதோ, கடைசியில் உடலே அழிந்து போய்விடுகிறதோ அது எந்த மாதிரியான வெற்றியாகும்? உண்மையான மோதல் என்பது க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்திரக்ஞருக்கு இடையில் நடைபெறுவதாகும். அதில் மட்டும் ஒருமுறை வெற்றி கிடைத்து விட்டால் இயற்கை அல்லது சுபாவம் (குணங்கள்) என்றென்றைக்குமாகக் கட்டுப்படுத்தப்பட்டு அழிக்கப்படுகிறது. மேலும் பரம புருஷராகிய பரமாத்மாவையும் அடைந்து விடலாம். இது தனக்குப் பின்னால்

தோல்வி என்பதையே கொண்டிராத நிரந்தரமான வெற்றியாகும்.

**அத சேத்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி**
**தத : ஸ்வதர்மகீர்த்திஞ் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி (33)**

மேலும் ஒருவேளை நீ இந்த தர்மத்திற்காக நடைபெறும் யுத்தம் அதாவது என்றும் நிலையான, மாறாத, சனாதன, பரம தர்ம பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்ல தர்ம யுத்தத்தைச் செய்யவில்லையென்றால் சுயதர்மம் அதாவது சுபாவத்தில் இருந்து உண்டான, மோதலில் ஈடுபடுகின்ற திறன், ஆன்மீகக் கிரியையில் முன்னேறிச் செல்கின்ற திறமையை இழந்து பாவம் அதாவது பிறப்பு, இறப்பு மற்றும் இகழ்ச்சியைப் பெறுவாய், இகழ்ச்சியைப் பற்றி எடுத்துரைக்கிறார்.

**அகீர்த்திம் சாபி பூதானி கதயிஷ்யந்தி தேஅவ்யயாம்**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்மரணாததிரிச்யதே (34)**

எல்லோரும் வெகுகாலம்வரை உனக்கு நேர்ந்த இகழ்ச்சியைப் பற்றிப் பேசுவர். இன்றும்கூட ஆன்மீகப் பாதையில் இருந்து வழிதவறிச் சென்ற மஹாத்மாக்களின் வரிசையில் விஸ்வாமித்திரர், பராசரர், நிமி, ச்ருங்கி முதலானவர்களின் பெயர்கள் எண்ணப்படுகின்றன. பெரும்பாலான சாதகர்கள் தங்களுடைய தர்மத்தைப் பற்றிச் சிந்திக்கின்றனர். உலகம் நம்மைப் பற்றி என்ன சொல்லும்? என்று யோசிக்கிறார்கள். அத்தகைய உணர்வும்கூட சாதனைக்கு உதவியாக இருக்கிறது. இதன் மூலம் சாதனையில் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டு முன்னேறிச் செல்வதற்கான ஊக்கமும் தூண்டுணர்வும் கிடைக்கிறது. கொஞ்சதூரம் வரைக்கும் இத்தகைய உணர்வு கைகொடுத்து உதவவே செய்கிறது. மரியாதைக்குரிய மனிதர்களைப் பொறுத்தவரையில் இகழ்ச்சி என்பது மரணத்தையும் விடக் கொடியதாகும்.

**பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா :**
**யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் (35)**

எந்த மஹாரதிகளின் பார்வையில் நீ தலைசிறந்தவனாக எண்ணிப் போற்றப்பட்டாயோ உன்னை அவர்கள் இப்பொழுது துச்சமாக மதிக்க நேரிடும். அந்த மஹாரதிகள் உன்னை பயத்தின் காரணமாகவே யுத்தத்தில் இருந்து பின்வாங்கி விட்டதாக எண்ணுவார்கள். இந்த மஹாரதிகள் எனப்படுபவர் யார்? இந்த ஆன்மீகப் பாதையில் மிகவும் கடினமான முயற்சியுடன் மேன்மேலும் முன்னேறிச் செல்கின்ற சாதகர்களே 'மஹாரதிகள்' ஆவர். இதேமுறையில், அதே அளவு முயற்சியுடன் அவித்யையை நோக்கி இழுத்துச் செல்கின்ற காமம்,

குரோதம், லோபம், மோஹம் முதலானவைகளும் மஹாரதிகளே ஆவர். எவரெல்லாம் உன்னைக் குறிப்பிட்டு, 'இந்த சாதகர் மிகவும் போற்றத்தக்கவர்' என்றெல்லாம் கூறி நிறைய மரியாதை அளித்தனரோ, அவர்களுடைய பார்வையில் இருந்து நீ தாழ்ந்து விடுவாய் இதுமட்டுமல்ல, இன்னும் கேள்.

**அவாச்யவாதாம்ஸ்ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதா :**
**நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ துக்கதரம் நு கிம் (36)**

பகைவர்களின் கூட்டம் உன்னுடைய பராக்கிரமத்தை நிந்தனை செய்தபடியே சொல்லத்தகாத வார்த்தைகளால் உன்னைத் திட்டுவார்கள். ஒரு களங்கம் ஏற்பட்டால் போதும், அத்துடன் சேர்த்து நான்கு பக்கங்களில் இருந்தும் நிந்தனை மற்றும் இழிவான பேச்சுகள் வந்து குவியத் தொடங்கிவிடும். சொல்லத்தகாத வார்த்தைகளைக் கூடத் துணிந்து சொல்வார்கள். இதை விடப் பெரிய துக்கம் வேறென்னவாக இருக்க முடியும்? ஆகவே –

**ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்**
**தஸ்மாதுத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஸ்சய : (37)**

இந்த யுத்தத்தில் இறந்தாலும் சொர்க்கத்தைப் பெறுவாய். அதாவது, சுவாசத்தில் சஞ்சாரம் செய்கின்ற திறமை கிடைத்து விடும். சுவாசத்திற்கு வெளியில், இயற்கை அதாவது படைப்பில் உழன்று திரிகின்ற எண்ணவோட்டங்கள் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடும். பரம தெய்வமாகிய பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்ல தெய்வீகச் செல்வம் அதாவது தெய்வீக குணங்கள் இதயத்தில் முழுமையான அளவில் பெருக ஆரம்பிக்கும். அப்படி இல்லாமல் இந்த மோதலில் வெற்றி பெற்று விட்டாயென்றால் **'மஹாமஹிம்'** (இறைப் பேறுநிலை) என்ற நிலையை அடைவாய். எனவேதான் அர்ஜுனா! யுத்தம் செய்யும் உறுதியுடன் எழுந்து நில்!

பெரும்பாலோர் இந்த சுலோகத்திற்கு, "இந்த யுத்தத்தில் இறந்து போய்விட்டால் சொர்க்கத்திற்குப் போவாய். மேலும், வெற்றி பெற்றாலோ இந்த நிலவுலகில் கிடைக்கும் செல்வங்கள், இன்பங்களை அனுபவிப்பாய்" என்றே பொருள் கொள்கின்றனர். ஆனால் உங்களுக்கு நினைவிருக்கலாம். அர்ஜுனன் ஏற்கனவே, "பகவான்! இந்தப் பூமி மட்டுமில்லை, மூன்று உலகின் சம்ராஜ்ஜியம் மற்றும் தேவர்களின் தலைமைப் பதவி அதாவது இந்திர பதவியே கிடைத்தாலும்கூட, இந்த என்னுடைய புலன்களை வாட்டுகின்ற சோகத்தைத் தூர விலக்குகின்ற உபாயம் எதுவும் அவற்றில் இருப்பதாக நான் காணவில்லை" என்று கூறியுள்ளான். ஒருவேளை இவ்வளவுதான் கிடைக்கும் என்றிருந்தால்,

கோவிந்தரே! நான் ஒரு போதும் யுத்தம் செய்யவே மாட்டேன்" என்றும் கூறிவிட்டான். இத்தனைக்குப் பிறகும் கூட ஒருவேளை ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜுனா! நீ போர் செய்! வெற்றி பெற்றால் இந்த நிலவுலகச் செல்வம் கிடைக்கும் தோற்றால் சொர்க்கத்தில் வாழ்வதற்கான தருதியைப் பெற்று விடுவாய்" என்றே கூறினால் உண்மையில் அவர் பெரிதாக என்ன தந்து விட்டதாக ஆகிறது? அர்ஜுனன் இதைவிட மேலான, உயர்ந்த உண்மையையும் மேலான நன்மையையும் அடைய விருப்பம் கொண்டிருக்கும் சிஷ்யன் ஆவான். எனவேதான் சத்குருதேவராகிய ஸ்ரீகிருஷ்ணர், "க்ஷேத்திரம்—க்ஷேத்திரக்ஞர் ஆகியவற்றிற்கு இடையிலான இந்த மோதலில், ஒருவேளை உடலின் காலம் முடிந்து போய்விட்டது, மற்றும் இலட்சியத்தை அடைய முடியவில்லை என்றொரு நிலை ஏற்பட்டாலும் கூட நீ சொர்க்கத்தை அடைவாய், அதாவது, சுவாசத்தில் சஞ்சாரம் செய்கின்ற திறமையைப் பெற்று விடுவாய். தெய்வீகச் செல்வம் இதய தேசத்தில் பெருகிவழியும். மேலும், இந்த உடலில் வாழ்ந்து கொண்டிருக்கும் காலத்திலேயே இந்த மோதலில் வெற்றி கிடைத்துவிட்டாலோ **'மஹீம்'** – அனைத்தையும் விட உயர்ந்த மாபெரும் இறைவனாகிய பிரம்மத்தின் இறை மகிமைகளைப் பெற்று அனுபவிப்பாய் அதாவது, **'மஹாமஹீம்'** என்ற இறைப்பேறு நிலையை அடைவாய். வெற்றி பெற்றால் அனைத்தும் கிடைக்கிறது. ஏனெனில் மஹாமஹிம் எனும் மகத்துவத்தைப் பெற்றுவிடுவாய். மேலும் தோற்றாலோ 'தேவத்துவம்'. இரண்டு கைகளிலுமே லட்டுதான் கிடைக்கும். இலாபத்திலும் இலாபம் மற்றும் நஷ்டத்திலும் கூட இலாபமே கிடைக்கிறது" என்கிறார். மீண்டும் இதையே வலியுறுத்தும் வகையில்

**சுக துக்கே ஸமேக்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ**
**ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி (38)**

இந்த முறையில் சுகம், துக்கம்; இலாபம், நஷ்டம்; வெற்றி, தோல்வி ஆகியவற்றைச் சமமாக எண்ணிக் கொண்டு நீ யுத்தத்திற்க்காகத் தயாராகி கொள். யுத்தம் செய்வதால் நீ பாவத்தை அடைய மாட்டாய். அதாவது, சுகத்தில் அனைத்தும் கிடைத்துவிடும், மற்றும் துக்கத்திலும்கூட தேவத்துவம் கிடைக்கிறது. இலாபத்தில் **மஹீம்** என்னும் நிலை அதாவது அனைத்தும் கிடைக்கின்ற நிலை மற்றும் நஷ்டத்திலும் கூட தேவத்துவம் கிடைக்கிறது. வெற்றியில் **மஹாமஹிம்** நிலை மற்றும் தோல்வியில் தெய்வீகச் செல்வம் அதாவது தெய்வீகக் குணங்களின்மீது அதிகாரம் செலுத்துகின்ற தகுதி கிடைக்கிறது. இந்த முறையில் தன்னுடைய இலாபம், நஷ்டம் ஆகியவற்றை நல்லமுறையில் நீயாகவே முயன்று புரிந்து கொண்டு நீ யுத்தத்திற்காகத் தயாராகிக் கொள். யுத்தத்தில் மட்டுமே இவ்விரண்டு பொருட்களும் கிடைக்கின்றன. யுத்தம் செய்தால் நீ பாவம் அதாவது

பிறப்பு, இறப்பு என்ற பாவத்தை அடைய மாட்டாய். ஆகவே நீ யுத்தத்திற்காகத் தயாராகிக் கொள்.

**ஏஷா தேஅபிஹிதா ஸாங்க்யே புத்திர் யோகேத்விமாம் ச்ருணு**
**புத்தயா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி (39)**

பார்த்தனே! இந்த புத்தியானது உனக்காக ஞானயோகத்தின் விஷயத்தில் கூறப்பட்டுள்ளது. எந்த வகையான புத்தி? 'நீ யுத்தம் செய்' என்னும் புத்தி. ஞான யோகம் என்பது இவ்வளவுதான்: "சாதகன் தன்னுடைய நிலையை நன்குணர்ந்து கொண்டு, இலாபம், நஷ்டம் ஆகியவற்றை நல்ல முறையில் ஆராய்ந்து அறிந்து கொண்டு, வெற்றி பெற்றால் **மஹாமஹிம்** என்ற நிலை மற்றும் தோற்றாலும்கூட தெய்வத்துவம் கிடைக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு, வெற்றியில் அனைத்தும், தோல்வியிலும் தெய்வத்துவம் என்று இரண்டு வகையிலுமே இலாபம் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ள வேண்டும். நாம் யுத்தம் செய்யவில்லையென்றால் எல்லோருமே நம்மைப்பற்றி இழிவாகப் பேசுவார்கள். பயத்தினால் பின்வாங்கிவிட்டான் என்று கருதுவார்கள். இகழ்ச்சி வந்து சேரும் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்." இந்த முறையில் தன்னுடைய நிலைப்பாட்டினை அருகில் வைத்துக் கொண்டு, தானே முன்னின்று ஆராய்ந்து அறிந்து கொண்டு யுத்தத்தில் முன்னேறிச் செல்வதே 'ஞானயோகம்' ஆகும்.

பொதுவாகவே, பெரும்பாலோரின் தவறான கருத்து என்னவென்றால், 'ஞானமார்க்கத்தில் கர்மம் (யுத்தம்) செய்ய வேண்டியதில்லை என்பதுதான். அவர்கள் 'ஞான மார்க்கத்தில் கர்மம் இல்லவே இல்லை' என்கிறார்கள். 'நான் தூய்மையானவன்; நான் அந்த உணர்வுப் பொருளே; நானே அந்த இறைவன் **(அஹம் ப்ரஹ்மாஸ்மி);** குணம் குணத்திலேயே செயல்படுகிறது' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு கைமேல் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து கொள்கின்றனர். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் இது ஞானயோகம் இல்லை. ஞான யோகத்திலும்கூட, நிஷ்காம கர்ம யோகத்தில் செய்யப்படுகின்ற அதே கர்மத்தைச் செய்துதான் ஆகவேண்டும். இரண்டிலுமே புத்திநிலை மற்றும் கண்ணோட்டம் ஆகியவை மட்டுமே வேறுபடுகின்றன. ஞானயோகி தன்னுடைய நிலையை அறிந்து கொண்டு, தன்னையே முழுமையாகச் சார்ந்து கொண்டு கர்மத்தைச் செய்கிறான். அதேசமயம் நிஷ்காம கர்ம யோகியோ இஷ்ட தெய்வமாகிய சத்குருவையே முழுமையாகச் சார்ந்து நின்று இந்தக் கர்மத்தைச் செய்கிறான். இரண்டு மார்க்கத்திலுமே கர்மத்தைச் செய்துதான் ஆகவேண்டும். மேலும் அந்தக் கர்மமும் ஒன்றேதான். அந்தவொரு

கர்மத்தையேதான் இரண்டு மார்க்கத்திலுமே செய்ய வேண்டியதாக இருக்கிறது. கர்மம் செய்கின்ற கண்ணோட்டம் மட்டுமே வேறுபடுகிறது.

அர்ஜுனா! இந்த புத்தியை இப்பொழுது நீ நிஷ்காம கர்மயோகத்தின் விஷயமாகக் கேள். அதனுடன் இணைந்து நீ கர்மங்களின் பந்தங்களை மிகவும் நல்ல முறையில் அழித்து விட முடியும். இங்கே ஸ்ரீகிருஷ்ணர் கர்மத்தின் பெயரை முதன் முறையாக எடுத்துரைக்கிறார். ஆனால் அந்தக் கர்மம் என்றால் என்ன? என்பதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. இனி கர்மத்தைப் பற்றி ஒன்றும் கூறாமல் கர்மத்தின் சிறப்புத் தன்மைகளின்மீது வெளிச்சம் பரப்புகிறார்.

**நேஹாபிக்ரமநாஷோஅஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே**
**ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் (40)**

இந்த நிஷ்காம கர்மயோகத்தில் ஆரம்பத்திற்கு அதாவது விதைக்கு அழிவு என்பதே கிடையாது. வரம்பிற்கு உட்பட்ட அளவே பயன் தரக் கூடியது என்ற குறைபாடும் கிடையாது. எனவே இந்த நிஷ்காமகர்மத்தை, இந்த கர்மத்தால் நிறைவேற்றப்படுகின்ற (தர்மத்தின்) சிறிதளவு சாதனையும்கூட இறப்பு, பிறப்பு என்ற மாபெரும் பயத்தில் இருந்து விடுவிக்க வல்லதாக அமைந்து விடுகிறது. நீங்கள் இந்தக் கர்மத்தை புரிந்து கொண்டு, சரிவர இந்தப் பாதையில் இரண்டு அடியாவது எடுத்து வைத்து விடுங்கள். (ஒழுக்கமான இல்லற வாழ்க்கையில் இருந்து கொண்டே கூட இந்த ஆன்மீகப் பாதையில் செல்ல முடியும். ஆன்மீக வாழ்க்கையை முழுமையாக வரித்துக்கொண்டு உள்ள சாதகர் ஏற்கனவே சென்று கொண்டு தானே இருக்கிறார்) அதாவது விதையை மட்டும் முழுமையாக விதைத்து விட்டால் போதும், அர்ஜுனா! அந்த விதைக்கு அழிவு என்பதே கிடையாது. இயற்கையில் அதாவது படைப்பில் அந்த உண்மையை (விதையை) அழித்து விடலாம் என்பது போன்ற எந்தவொரு ஆற்றலோ சக்தியோ ஆயுதமோ இல்லவே இல்லை. இயற்கை அதாவது படைப்பு வெறுமனே அதனைத் திரையிட்டு மறைக்கலாம், கொஞ்சம் காலம் கடத்தலாம், ஆனால் சாதனையின் ஆரம்பத்தை மட்டும் அதனால் அழிக்கவே இயலாது.

ஸ்ரீகிருஷ்ணர் இனி வரப் போகின்ற பகுதியில், 'எல்லாப் பாவங்களையும் விடவும் அதிகமாகப் பாவம் செய்த பெரும் பாவியாகக் கூட இருக்கட்டுமே. ஞானம் என்னும் படகின் மூலமாகச் சந்தேகமே இல்லாமல் கரை கடந்துவிட முடியும்" என்று சொல்கிறார். சரி, அதேபோன்றுதான் இங்கும் அவர் பின்வருமாறு கூறுகிறார்: "அர்ஜுனா! நிஷ்காம கர்ம யோகத்தில் விதைக்கின்ற படலத்தை மட்டும் (கர்மத்தைமட்டும்) தொடங்கி விடு. அந்த விதை ஒருபோதும் அழிவது இல்லை". உங்களை சொர்க்கம், ரித்திகள், சித்திகள் வரைக் கொண்டு போய்ச்

சேர்த்து விட்டுக் காணாமல் போய்விடுகின்ற விபரீதமான பலனைத் தருகின்ற குறைபாடும் இதில் இல்லை. நீங்கள் இந்த சாதனையை வேண்டுமானால் கைவிட்டுவிடலாம். ஆனால் இதுவோ உங்களை முழுவதுமாகக் கரையேற்றிய பிறகுதான் அமைதியடையும். இந்த நிஷ்காம கர்ம யோகத்தைச் சிறிதளவு சாதனையாகப் பயிற்சி செய்தாலும் கூட பிறப்பு – இறப்பு என்ற மாபெரும் பயத்தில் இருந்து உங்களை விடுவிக்க வல்லதாக அமையும்.

**'அனேக ஜன்ம ஸம்ஸித்திஸ்ததோ யாதி பராம் கதிம்** (கீதை 6/45) – இவ்வாறு விதை வடிவில் நடப்பட்டுள்ள இந்தக் கர்மமானது நிறைய பிறவிகளுக்குப் பிறகு பரமபதம், பரமகதி என்று அழைக்கப்படுகின்ற இறைவனிடம் கொண்டு போய் நிறுத்தி விடும். இதே வரிசையில் அவர் மேலும் கூறுகிறார்.

**வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தன**
**பஹுசாகா ஹ்யனந்தாஸ்ச புத்தயோஅவ்யவஸாயினாம் (41)**

அர்ஜுனா! இந்த நிஷ்காம கர்ம யோகத்தில் செயல்முறை அறிவும் ஒன்றுதான். செயலும் ஒன்றுதான். மற்றும் விளைவும் ஒன்றேதான். ஆன்மீகச் செல்வமே நிரந்தரமான செல்வமாகும். இந்தச் செல்வத்தை இயற்கை அதாவது படைப்பின் மோதல்களில் இருந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சேகரிப்பதையே தொழில் என்கிறோம். இந்தத் தொழில் அல்லது செயல்முறை அறிவும் ஒன்றுதான். அப்படியென்றால் நிறையபேர் பல்வேறு வகையான செயல்முறை (கிரியைகள்) களைப் பற்றிக் கூறுகிறார்களே, அவர்களெல்லாம் இறைவனை வழிபடுவது கிடையாதா என்ன? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு," "ஆம், அவர்கள் இறைவழிபாடு செய்வதில்லை. அத்தகைய மனிதர்களுடைய புத்தியானது எண்ணற்ற கிளைகளை உடையதாக இருக்கிறது. எனவேதான் எண்ணற்ற செயல்முறைகளை விரிவுபடுத்திக் கொண்டே செல்கின்றனர்." என்று கூறுகிறார்.

**யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சித:**
**வேதவாதரதா : பார்த்த நான்யதஸ்தீதி வாதின : (42)**
**காமாத்மான : ஸ்வர்க்கபரா ஜன்மகர்மஃபலப்ரதாம்**
**க்ரியாவிசேஷபஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி (43)**

பார்த்தனே! அவர்கள் **'காமாத்மான':** – ஆசைகளுடன் கூடியவர்களாகவும் **'வேதவாதரதா':** – வேதங்களின் வசனங்களில் கவரப்பட்டவர்களாகவும், ஆர்வமுடையவர்களாகவும்) **'ஸ்வர்க்கபரா':–** சொர்க்கத்தையே மேலான இலட்சியமாகவும், அதற்கு மேலே ஒன்றுமில்லை என்றும் கருதுகின்ற விவேகமற்றவர்கள் பிறப்பு, இறப்பு என்ற பலனை அளிக்கின்றதும் உலகில் இன்பம், செல்வம் ஆகியவற்றை அடைகின்ற நோக்கத்துடன் எண்ணற்ற

கிரியைகளை விரிவுபடுத்திக் கொண்டே செல்கின்றனர். மேலும், போலித்தனமும் வெளி ஆடம்பரமும் நிறைந்த வெறும் அலங்காரச் சொற்களின் மூலமாக அவற்றை வெளிப்படுத்தவும் செய்கின்றனர். அதாவது, விவேகமற்றவர்களின் புத்தி எண்ணற்ற வேறுபாடுகளைக் கொண்டதாக இருக்கிறது. அவர்கள் பலனைப் பற்றிச் சொல்கின்ற வாக்கியங்களிலேயே விரும்பி ஈடுபடுகின்றனர்; வேத வாக்கியங்களையே பிரமாணமாகக் (சான்று) கொள்கின்றனர்; சொர்க்கத்தையே உயர்வானதாகக் கருதுகின்றனர். அவர்களுடைய புத்தியானது எண்ணற்ற வேறுபாடுகளைக் கொண்டுள்ளது. எனவேதான் எண்ணற்ற செயல்களை உருவாக்கிக் கொண்டே செல்கின்றனர். அவர்கள் என்னவோ பரம தத்துவமாகிய பரமாத்மாவின் பெயரைத்தான் குறிப்பிடுகிறார்கள். ஆனால் அவருடைய பெயரின் கீழ் எண்ணற்ற செயல்களை விரிவுபடுத்திக் கொண்டே செல்கிறார்கள். அப்படியென்றால் எண்ணற்ற செயல்கள் எல்லாம் கர்மம் இல்லையா? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, ''இல்லை, எண்ணற்ற கிரியைகள் கர்மம் ஆகாது'' என்கிறார் அப்படியென்றால் அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள செயல் (கிரியை) என்றால் என்ன? ஸ்ரீகிருஷ்ணர் இதுவரை அதைப்பற்றி ஒன்றும் கூறவில்லை. இப்போதைக்கு அவர், 'விவேகமற்றவர்களுடைய புத்தி எண்ணற்ற கிளைகளைக் கொண்டுள்ளது. எனவேதான் அவர்கள் எண்ணற்ற செயல்களை விரிவுபடுத்திக் கொண்டே செல்கின்றனர். அவர்கள் அவ்வாறு விரிவுபடுத்துவதுடன் மட்டும் நின்று விடுவதில்லை. அத்துடன் அலங்கார நடையில் அவற்றை வெளிப்படுத்தவும் செய்கிறார்கள்' என்று மட்டும் கூறினார். அதனுடைய தாக்கம் எவ்வாறு அமைகிறது.

**போகைச்வர்யப்ரஸக்தானாம் தயாபஹ்ருதசேதஸாம்**
**வ்யவஸாயாத்மிகா புத்தி : ஸமாதௌ ந விதீயதே (44)**

அவர்களுடைய வார்த்தைகளின் அச்சானது (ஜாலமானது) எவரெவருடைய சித்தத்தில் படுகிறதோ, அர்ஜுனா! அவரவர்களுடைய புத்தியானது பேதலித்து, அழிந்துவிடுகிறதே தவிர, வேறொன்றையும் பெறுவதில்லை. அந்த வாக்குகளின் மூலமாக அபகரிக்கப்பட்டுள்ள சித்தத்தை உடையவர்களும் மற்றும் உலகியல் இன்பம், செல்வம் ஆகியவற்றில் பற்றுடையவர்களுமாகிய மனிதர்களின் அந்த கரணத்தில் (உள்ளத்தில்) செயல்முறை அறிவு என்பதே இருப்பதில்லை. இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் சமாதி நிலையை பெற்றுத்தரக்கூடிய நிச்சயிக்கப்பட்ட செயல்முறை அறிவும் அவர்களிடம் காணப்படுவதில்லை.

அத்தகைய விவேகமற்றவர்களுடைய வாக்கினைக் கேட்பவன் யார்? உலகியல் இன்பம் – செல்வம் ஆகியவற்றில் பற்றுடையவர்களே கேட்கிறார்கள் ஆன்மீக சாதனையில் ஈடுபடும் தகுதிபடைத்த அதிகாரிகள் அவற்றையெல்லாம்

கேட்பது கிடையாது. அத்தகைய மனிதர்களிடம் சமமான மற்றும் ஆதிதத்துவத்தில் நுழைவு பெற்றுத் தருகின்ற நிச்சயப்பூர்வமான செயல் முறையுடன் இணைந்து செயல்படுகின்ற அறிவும் இருப்பதில்லை.

இங்கே ஒரு கேள்வி எழுகிறது. **'வேதவாதரதா.'** – எவர் வேத வசனங்களில் விரும்பி ஈடுபடுகிறார்களோ, அவர்களும் கூடவா இந்தத் தவறைச் செய்கின்றனர்? இது பற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன**
**நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்த்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவான் (45)**

அர்ஜுனா! **'த்ரைகுண்யவிஷயா வேதா'** – வேதம் மூன்று குணங்கள் வரைதான் வெளிச்சம் பரப்புகிறது. அதற்கு மேல் உள்ள நிலவரத்தை அவை அறிவதில்லை. எனவேதான், **'நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன'**– அர்ஜுனா! நீ மூன்று குணங்களையும் தாண்டி மேலே எழு! அதாவது, வேதங்களின் செயல்படு தளத்திற்கும் அப்பால் செல். எவ்வாறு தாண்டிச் செல்வது? இது பற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்: **'நிர்த்வந்த்வ'** – சுகம், துக்கம் ஆகியவற்றின் போராட்டங்களைத் தவிர்த்து என்றும் நிலையான, மாறாத உண்மைப் பொருளில் நிலைபெற்று, யோக நலன்களின் மேல் விருப்பமின்றி ஆன்மாவை மட்டுமே சார்ந்து இரு. இந்த முறையில் மேலெழுந்து நில். நாம்தான் இவ்வாறு எழுந்து நிற்க வேண்டுமா? அல்லது வேறு எவரேனும் வேதங்களையும் கடந்து எழுந்து நின்று உள்ளனரா? என்றொரு கேள்வி பிறக்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு 'இவற்றையெல்லாம் தாண்டி எவர் எழுகிறாரோ, அவரே பிரம்மத்தை அறிகிறார். மேலும் எவர் பிரம்மத்தை அறிகிறாரோ, அவரே பிராம்மணர் **(விப்ரர்)** ஆவார்" என்று கூறுகிறார்.

**யாவானர்த்த உதபானே ஸர்வத : ஸம்ப்லுதோதகே**
**தாவான்ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானத: (46)**

எல்லாப் பக்கங்களிலும் முழுமையாகத் திகழும் பெரிய தண்ணீர்ப் பொய்கையைப் பெற்றுவிட்ட பிறகு மனிதர்களுக்கு சின்னஞ் சிறிய நீர்க்குட்டையினால் எவ்வளவு பயன் இருக்கிறதோ, அதேபோல் மிகவும் நல்ல முறையில் பிரம்மத்தை அறிந்த பிராம்மணருக்கு வேதங்களால் அவ்வளவு பயன்தான் இருக்கிறது. இதற்குப் பொருள் என்னவென்றால் எவர் வேதங்களையும் கடந்து சென்று மேலெழுகிறாரோ, அவரே பிரம்மத்தை அறிகிறார், அவரே பிராம்மணனும் ஆவார். அதாவது, நீ வேதங்களையும் கடந்து எழுந்து நில். நீயும் பிராம்மணன் ஆவாய்!

அர்ஜூனன் க்ஷத்திரியனாக இருந்தான் ஸ்ரீகிருஷ்ணர் அவனை, 'பிராம்மணனாக மாறு! என்கிறார். பிராம்மணன், க்ஷத்திரியன் முதலான வர்ணங்கள் சுபாவத்தில் அதாவது மனிதனின் அக இயல்பில் காணப்படும் திறன்பாடுகளின் பெயர்களாகும். இவை கர்மத்தை முதன்மையாகக் கொண்டு தீர்மானிக்கப்படுபவையே தவிர, பிறப்பைக் கொண்டு நிச்சயிக்கப்படுகின்ற ஏதோவொரு மூடநம்பிக்கை அன்று எவருக்கு கங்கையின் நீர்ப்பெருக்கோட்டம் கிடைத்து விட்டதோ, அவருக்கு சின்னஞ்சிறிய நீர்க் குட்டையினால் என்ன பயன்? சிலர் அதில் காலைக்கடன்களைக் கழித்து விட்டு உடலைச் சுத்தம் செய்து கொள்கிறார்கள் என்றால் இன்னும் சிலரோ பசுக்களைக் குளிப்பாட்டுகிறார்கள். இதற்குமேல் அதனால் வேறெந்தப் பயனும் இல்லை. இதேமுறையில் பிரம்மத்தை நேருக்கு நேராக தரிசனம் செய்து அறிந்து கொண்ட அந்த மஹாபுருஷருக்கு **(விப்ரர்),** அந்த பிராம்மணருக்கு வேதங்களால் அத்தனை அளவு பயனே இருக்கிறது. பயன் அவசியம் இருக்கிறது. வேதங்களும் இருக்கின்றன. ஏனெனில் எதிர்காலச் சந்ததியினருக்கு அவற்றின் பயன் இருக்கவே செய்கிறது. அவற்றில் இருந்துதான் சர்ச்சையே ஆரம்பமாகின்றது. இதற்குப் பிறகு யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கர்மத்தைச் செய்யும்போது கடைப்பிடித்து ஒழுகவேண்டிய எச்சரிக்கை முறைகளை பற்றி விரிவாக எடுத்துரைக்கிறார்.

**கர்மண்யேவாதிகரஸ்தே மாஃ பலேஷு கதாசன**
**மா கர்மஃபலஹேதுர்பூமா தே ஸங்கோஅஸ்த்வகர்மணி (47)**

கர்மத்தைச் செய்வதற்கு மட்டுமே உனக்கு அதிகாரம் உள்ளது, பலனில் ஒருபோதும் இல்லை . பலன் என்பது இல்லவே இல்லை என்றே எண்ணிக் கொள். பலனின் மீது ஆசை கூட வைக்காதே. மேலும், கர்மத்தைச் செய்வதில் உனக்கு நம்பிக்கையின்மையும் இருக்கக் கூடாது.

இதுவரைக்கும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் முப்பத்தி ஒன்பதாவது சுலோகத்தில் முதன்முறையாக 'கர்மம்' என்ற சொல்லைப் பிரயோகிக்கிறார். ஆனால், 'அந்தக் கர்மம் என்றால் என்ன? அதை எவ்வாறு செய்ய வேண்டும்?' என்பதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. அந்தக் கர்மத்தின் சிறப்பு அம்சங்களின் மீது வெளிச்சம் பரப்புகிறார். அதன்படி

**1)** அர்ஜூனா! இந்தக் கர்மத்தின் மூலமாக நீ கர்மங்களின் பந்தங்களில் இருந்து நல்ல முறையில் விடுபட்டு விடுவாய்.

**2)** அர்ஜூனா! இதில் ஆரம்பத்திற்கு அதாவது விதைக்கு அழிவு என்பதே கிடையாது. இதைத் தொடங்கி விட்டால் மட்டும் போதும். இயற்கையில் அதாவது

படைப்பில் அதனை அழிப்பதற்கு எந்தவொரு சக்தியும் இல்லை.

3) அர்ஜுனா! இதில் வரம்பிற்குட்பட்ட பலன் மட்டுமே கிடைக்கும் என்ற குறைபாடும் கிடையாது. அதாவது சொர்க்கம், ரித்திகள், சித்திகள் ஆகியவற்றில் சிக்க வைத்து விட்டு நின்று விடுவதில்லை.

4) அர்ஜுனா! இந்தக் கர்மத்தின் சிறிதளவு சாதனைகூட பிறப்பு – இறப்பு என்ற பயத்தில் இருந்து விடுவிக்க வல்லது.

ஆனால், இதுவரை, 'அந்தக் கர்மம் என்றால் என்ன? 'அதை எப்படிச் செய்யவேண்டும்?' என்பதைப் பற்றியெல்லாம் ஒன்றும் கூறவில்லை. இந்த அத்தியாயத்தின் நாற்பத்தி ஒன்றாவது சுலோகத்தில் அவர் கூறுகிறார்.

5) அர்ஜுனா! இதில் நிச்சயப்பூர்வமான அறிவு ஒன்றுதான்; செயல் (கிரியை) ஒன்றுதான். அப்படியென்றால் எண்ணற்ற செயல்களைச் செய்பவர்கள் இறைவனை வழிபடுவது இல்லையா? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, "அவர்கள் கர்மம் செய்வது இல்லை. அதற்குக் காரணம், விவேகமற்றவர்களுடைய அறிவானது எண்ணற்ற கிளைகளுடன் கூடியதாக அமைந்துள்ளது. எனவேதான் அவர்கள் எண்ணற்ற செயல்களை (கிரியைகளை) விரிவுபடுத்திக் கொண்டே செல்கின்றனர். அவர்கள் போலித்தனமும், வெளி ஆடம்பரமும் நிறைந்த அலங்காரமான வார்த்தைகளால் அத்தகைய கிரியைகளை வெளிப்படுத்தவும் செய்கின்றனர். அவர்களுடைய வார்த்தைகளின் தாக்கமானது (முத்திரை) எவருடைய சித்தத்தில் படுகிறதோ, அவர்களின் அறிவும் மழுங்கிவிடுகிறது. ஆகவே, நிச்சயப்பூர்வமான செயல் ஒன்றுதான். ஆனால் அந்தக் கிரியை எது? என்பதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை.

அவர் நாற்பத்தி ஏழாவது சுலோகத்தில், "அர்ஜுனா! கர்மத்தைச் செய்வதற்கு மட்டுமே உனக்கு அதிகாரம் உள்ளது. பலனில் ஒருபோதும் இல்லை. பலனின் மீது ஆசைகூட வைத்து விடாதே. மேலும், கர்மத்தைச் செய்வதிலும் உனக்கு நம்பிக்கையின்மை வரக்கூடாது. அதாவது, நிரந்தரமாகச் செய்வதற்காக, அதிலேயே மூழ்கிப் போய்விடு. ஆனால், அந்தக் கர்மம் என்றால் என்ன? என்பதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. தற்காலத்தில் இந்த சுலோகத்தைச் சான்றாகச் சுட்டிக்காட்டி, "எதை வேண்டுமானாலும் செய். பலனை மட்டும் விரும்பாதே. அதுவே நிஷ்காம கர்மயோகம்" எனக் கூறுகின்றனர். ஆனால், இதுவரை ஸ்ரீகிருஷ்ணர், அந்தக் கர்மம் என்றால் என்ன? எதைச் செய்ய வேண்டும்?' என்பதைப் பற்றி ஒன்றுமே கூறவில்லை. இவ்விடத்தில் அவர் வெறுமனே கர்மத்தின் சிறப்புத்தன்மைகள் மீது மட்டுமே வெளிச்சம் பரப்பும்

விதமாக, ‘கர்மம் என்ன தருகிறது? மற்றும் கர்மத்தைச் செய்யும்போது கடைப்பிடித்து ஒழுக வேண்டிய எச்சரிக்கை முறைகள் யாவை?’ ஆகியவற்றை மட்டுமே விளக்கினார். கேள்வியானது நிறைவடையாமல் அப்படியேதான் உள்ளது. அதனை யோகேஷ்வரர் இனிவருகின்ற மூன்றாம், நான்காம் அத்தியாயங்களில் தெளிவுபடுத்துவார். மீண்டும் இதையே வலியுறுத்தும் விதமாக அவர்

**யோகஸ்த்த : குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய**
**ஸித்தயஸித்தயோ : ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே (48)**

தனஞ்ஜயா! பற்றுடைமை மற்றும் சேர்க்கை தோஷம் ஆகியவற்றைத் துறந்து, இறைவனை அடைவதில் வெற்றி, தோல்வி இரண்டையும் சமமாக எடுத்துக் கொண்டு யோகத்தில் நிலைபெற்று கர்மத்தைச் செய். எந்தக் கர்மத்தைச் செய்ய வேண்டும்? நிஷ்காம கர்மத்தைச் செய். **‘ஸமத்வம் யோக உச்யதே’** இந்த சமத்துவ உணர்வே யோகம் எனப்படுகிறது. எதில் ஏற்றத்தாழ்வு என்பதே இல்லையோஅத்தகைய உணர்வையே சமத்துவம் என்கிறோம். ரித்திகளும் சித்திகளும் ஏற்றத்தாழ்வை உண்டாக்குகின்றன. பற்றுடைமை நம்மை ஏற்றத்தாழ்வு உடையவர்களாக்குகிறது. பலனில் உள்ள விருப்பமே ஏற்றத்தாழ்வுணர்வைத் தோற்றுவிக்கிறது. எனவேதான் பலனின் மீது ஆசைகூட வைத்துவிடாதே. அதற்குப் பிறகும் கர்மம் செய்வதில் உனக்கு அவநம்பிக்கை இருக்கக் கூடாது. கேட்கின்ற, பார்க்கின்ற எல்லாப் பொருட்களில் இருந்தும் பற்றினைத் துறந்து, கிடைக்கும் மற்றும் கிடைக்காது என்பதைப் பற்றியெல்லாம் சிந்திக்காமல், யோகத்தில் மட்டுமே நிலைபெற்று நின்றவாறே இந்தக் கர்மத்தைச் செய். யோகத்தில் இருந்து உனது சித்தம் விலகிச் செல்லாமல் பார்த்துக் கொள்.

யோகம் என்பது உச்சக்கட்ட நிலையாகும். அதேபோன்று ஆரம்பநிலை என்ற ஒன்றும் இருக்கிறது. ஆரம்ப நிலையில் இருந்தே நம்முடைய பார்வை இலட்சியத்தின்மீது மட்டுமே இருக்க வேண்டும். ஆகவே யோகத்தின் மீது மட்டுமே நமது பார்வையை வைத்துக் கொண்டு கர்மத்தைப் பழகி வரவேண்டும். சமத்துவ உணர்வு, அதாவது தெய்வத்தை அடைவதில் சித்தி மற்றும் அசித்தி ஆகியவற்றில் சமமான உணர்வைக் கொண்டிருப்பதே யோகம் எனப்படுகிறது. எதனை வெற்றி மற்றும் தோல்வி நிலைகுலையச் செய்வதில்லையோ, எதில் ஏற்றத்தாழ்வு உணர்வு தோன்றுவது கிடையாதோ, அத்தகைய உணர்வினைப் பெறுவதன் காரணமாகவே இது சமத்துவ யோகம் என்றும் அறியப்படுகிறது. இது இஷ்ட தெய்வத்துள் (ஸத்குரு—இறைவன்) சமத்துவநிலையைப் பெற்றுத் தருகிறது. எனவேதான் இதனை சமத்துவ யோகம் என்கிறோம். ஆசைகள் என்றென்றைக்குமாகத் துறக்கப்படுகிறது. எனவேதான் இதனை ‘நிஷ்காம கர்ம

யோகம்' என்கிறோம். பரமாத்மாவிடம் இணைத்து வைக்கிறது. எனவேதான் இதற்குப் பெயர் 'யோகம்' அதாவது 'இணைதல்' என்பதாகும். இதில், உலகியல் நிலையில், வெற்றி, தோல்வி ஆகியவற்றில் சமமான உணர்வு கொண்டிருத்தல், பற்றில்லாதிருத்தல், பலனின் மீது ஆசை வராமல் பார்த்துக் கொள்ளுதல் ஆகியவற்றை எல்லாம் நினைவில் கொண்டிருக்க வேண்டியிருப்பதால், இந்த நிஷ்காம கர்ம யோகத்தை 'புத்தியோகம்' என்றும் கூறுகிறோம்.

**தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய**
**புத்தௌ சரணமன்விச்ச க்ருபணா : பலஹேதவ : (49)**

தனஞ்ஜயனே! **'அவரம் கர்ம'** – கீழ்த்தரமான கர்மம், ஆசைகள் நிறைந்த கர்மம் புத்தியோகத்தில் இருந்து வெகுதூரத்தில் இருக்கிறது. பலனில் ஆசை வைப்பவன் கருமி. அவன் ஆன்மாவிடம் பெருந்தன்மையுடன் நடந்து கொள்வதில்லை. எனவே, சமத்துவ புத்தியோகத்தின் சரணத்தை ஏற்றுக் கொள். எவ்விதமான ஆசைகள் உள்ளனவோ, அவையெல்லாம் கிடைத்துவிடலாம். ஆனால் அவற்றை அனுபவிப்பதற்காக உடல் எடுக்க வேண்டியிருக்கும். பிறப்பு–இறப்புச் சூழல் இருந்தால் நன்மை எவ்விதம் உண்டாகும்? சாதகனைப் பொறுத்தவரையில் மோட்சத்திற்கான ஆசையும் வைத்துக் கொள்ளக் கூடாது. ஏனெனில் ஆசைகளில் இருந்து முக்தி அடைவதற்குப் பெயரே மோட்சம் ஆகும். பலனை அடைவதைப் பற்றியே எண்ணிக் கொண்டிருப்பதால் சாதகனுடைய நேரம் வீணாகிறது. மேலும், பலன் கிடைத்த பிறகு அவன் அந்தப் பலனிலேயே உழலத் தொடங்கி விடுகிறான். அவனுடைய சாதனை நின்று போய்விடுகிறது. அதற்குமேல் அவன் ஏன் இறை வழிபாட்டில் ஈடுபடப் போகிறான்? அங்கிருந்து அவன் வழிதவறிச் செல்ல ஆரம்பிக்கிறான். எனவேதான் சமத்துவ புத்தியுடன் யோகத்தைக் கடைப்பிடித்து வரவேண்டும்.

ஞான மார்க்கத்தையும் கூட ஸ்ரீகிருஷ்ணர் புத்தி யோகம் என்கிறார். அதன்படி "அர்ஜுனா! இந்த புத்தி உனக்காக ஞானயோகத்தின் விஷயத்தில் கூறப்பட்டது" என்கிறார். மேலும், இங்கேயோ நிஷ்காம கர்ம யோகத்தையும் கூட புத்தி யோகம் என்றே கூறுகிறார். உண்மையில், இரண்டிலுமே அறிவு நிலை, மற்றும் கண்ணோட்டத்தில்தான் வேறுபாடு உள்ளது. ஞானயோகத்தில் இலாபம் – நஷ்டம் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளை எடுத்து வைத்துக் கொண்டு, அவற்றை நன்றாக அலசி ஆராய்ந்தபடியே செல்ல வேண்டியுள்ளது. நிஷ்காம கர்மயோகத்தில் உலகியலில் சமத்துவ உணர்வை வைத்திருக்க வேண்டியுள்ளது. எனவேதான் இது சமத்துவ புத்தியோகம் என்றும் கூறப்படுகிறது. எனவே தனஞ்ஜயா! நீ சமத்துவ புத்தியோகத்தின் சரணத்தை ஏற்றுக் கொள். ஏனெனில் பலனில்

ஆசை வைப்பவன் மிகுந்த கருமி ஆவான்.

**புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே**
**தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌசலம் (50)**

சமத்துவ புத்தியுடன் இணைந்த மனிதன் புண்ணியம்–பாவம் இரண்டையுமே இதே உலகத்தில் துறந்து விடுகிறான். அவன் அவைகளிடம் ஒட்டுவதில்லை. எனவேதான் சமத்துவ புத்தியோகத்திற்காகப் பாடுபடு. **'யோக : கர்மஸு கௌசலம்' –** சமத்துவ புத்தியுடன் இணைந்து கர்மத்தை நேர்த்தியாக அனுசரிப்பதே யோகம் எனப்படுகிறது.

இவ்வுலகில் கர்மத்தைச் செய்வதில் இரண்டுவிதமான கண்ணோட்டங்கள் வழக்கத்தில் உள்ளன. மக்கள் கர்மத்தைச் செய்கிறார்கள் என்றால் அதற்கான பலனையும் அவசியம் விரும்பவே செய்கிறார்கள். ஒருவேளை பலன் கிடைக்கவில்லை என்றால் கர்மத்தைச் செய்யவே விரும்ப மாட்டார்கள். ஆனால் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இந்தக் கர்மங்கள் அனைத்தும் பந்தத்தையே ஏற்படுத்துபவை என்று கூறி இறை ஆராதனை ஒன்றை மட்டுமே கர்மம் என்று ஏற்றுக்கொள்கிறார். இந்த அத்தியாயத்தில் அவர் கர்மத்தின் பெயரை மட்டுமே குறிப்பிடுகிறார். மூன்றாவது அத்தியாயத்தில் ஒன்பதாவது சுலோகத்தில் கர்மத்திற்கான விளக்கவுரையை அளிக்கிறார். மேலும், நான்காவது அத்தியாயத்தில் கர்மத்தின் முழுமையான வடிவத்தை விரிவாக விளக்கியருள்கிறார். இந்த சுலோகத்திலோ ஸ்ரீகிருஷ்ணர் உலகியல் சார்ந்த தொடர்புகளில் இருந்து விடுபட்டு, கர்மம் செய்வதற்கான நுணுக்கத்தைப் பற்றிக் கூறும் விதமாக, "கர்மத்தைச் செய்; முழுநம்பிக்கையுடன் செய். ஆனால், பலனின் மீதுள்ள அதிகாரத்தை மட்டும் சுயவிருப்பத்துடன் விட்டுக் கொடுத்துவிடு. பலன் எங்கே போய்விடும்?" என்கிறார். இதுவே கர்மத்தைச் செய்கின்ற நேர்த்தியான முறையாகும். நிஷ்காம (பற்றற்ற) சாதகனுடைய மொத்த சக்தியும் இந்த முறையில் கர்மத்திலேயே ஈடுபடுத்தப்படுகிறது. இறை ஆராதனைக்காக மட்டுமே இந்த உடல் கிடைத்து உள்ளது. அதற்குப் பிறகும்கூட, "எப்போதுமே இந்தக் கர்மத்தைச் செய்து கொண்டேதான் இருக்க வேண்டுமா? அல்லது இந்தக் கர்மத்திற்கு ஏதேனும் முடிவு உண்டா?" என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வம் பிறப்பது இயல்பானதுதான். அதுபற்றிப் பார்க்கலாம்.

**கர்மஜம் புத்தியுக்தா ஹி : பலம் த்யக்த்வா மனீஷிண:**
**ஜன்மபந்தவிநிர்முக்தா: பதம் கச்சந்த்யனாமயம் (51)**

புத்தி யோகத்துடன் இணைந்த ஞானிப் பெருமக்கள் கர்மங்களால் விளைகின்ற பலன்களைத் துறந்து விட்டு பிறப்பு, இறப்பு ஆகிய பந்தங்களில்

இருந்து விடுபட்டு விடுகின்றனர். அவர்கள் களங்கமற்ற குறைவற்ற, மரணமில்லாப் பெருவாழ்வுடைய மேலான இறைப்பதத்தை அடைகிறார்கள்.

இங்கே மூன்று விதமான புத்திகளைப் பற்றிய விபரம் கொடுக்கப்பட்டு உள்ளது. (சுலோகம் 39) ஸாங்க்ய புத்தியில் அதாவது ஞான யோகத்தில் இரண்டு பலன்கள் உள்ளன. ஒன்று சொர்க்கம் மற்றும் இரண்டாவது மிகவும் உயர்வான இறைநிலை (ச்ரேயம்) என்பதாகும் (சுலோகம் 51). கர்ம யோகத்தில் ஈடுபடுகின்ற புத்திக்கு ஒரேயொரு பலன் மட்டுமே உண்டு. அதுவே பிறப்பு, இறப்பு ஆகியவற்றில் இருந்து, முக்தி, நிர்மலமான, அழிவற்ற இறைப்பதத்தினை அடைதல். இவ்விரண்டு யோகக் கிரியைகள் மட்டுமே உள்ளன. இதைத் தவிர உள்ள புத்தி விவேகமற்றது, எண்ணற்ற கிளைகளுடன் கூடியது. அதற்கான பலனோ, கர்மத்திற்கான வினையை அனுபவிக்கும் வகையில் மீண்டும், மீண்டும் பிறப்பு, இறப்பு என்ற சூழலில் மாட்டிக் கொள்வதாகும்.

அர்ஜுனனுடைய பார்வை மூவுலக சாம்ராஜ்ஜியம் மற்றும் தேவதைகளின் தலைமைப்பதவிவரை மட்டுமே குறுகி இருந்தது. இதனால்தான் அவன் யுத்தத்தில் ஈடுபட மறுக்கிறான். இங்கோ ஸ்ரீகிருஷ்ணர் புதியதொரு உண்மையை வெளிக் கொண்டுவருகிறார். அது என்னவென்றால், (பற்றுடைமை இல்லாத) நிஷ்காம கர்மத்தின் மூலமாக குறையற்ற இறைநிலை அடையப்படுகிறது என்பதாகும். நிஷ்காம கர்ம யோகம் எங்கே மரணம் என்பதே நுழைய முடியாதோ அத்தகைய பரம பதத்தைப் பெற்றுத்தருகிறது. இந்தக் கர்மத்தில் எப்போது ஈடுபட முடியும்?

**யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி**
**ததா கந்தாஸி நிர்வேதம் ஸ்ரோதவ்யஷ்ய ஸ்ருதஸ்ய ச (52)**

எந்தக் காலத்தில் உன்னுடைய (ஒவ்வொரு சாதகருடைய) புத்தியானது மோகம் என்னும் சேற்றினை முழுவதுமாகக் கடந்து விடுகின்றதோ, இம்மியளவுகூட மோகம் என்பதே இல்லாமல் போய்விடுகிறதோ பிள்ளைகள் மீது, செல்வத்தின் மீது, புகழ், மரியாதை ஆகியவற்றின் மீது – இவை அனைத்தின் மீதுள்ள பிடிப்புணர்வு முறிக்கப்படுகிறதோ அந்தச் சமயத்தில்தான் எது கேட்பதற்குத் தகுதியானதோ, அதை உன்னால் கேட்க முடியும். மேலும் கேட்டதற்கு ஏற்ப வைராக்கியத்தையும் அடையப் பெறுவாய். அதாவது அதனைச் செயல்முறையில் பழகத் தொடங்குவாய். இப்போதைய நிலையில் எது கேட்பதற்குத் தகுதியானதோ, அதை நீ கேட்கவும் இல்லை. மேலும், அதைச் செயல்முறைப்படுத்துவது என்ற பிரச்சினையே எழ வாய்ப்பில்லை. இந்தத் தகுதியைப் பற்றி மறுபடியும் விளக்கப்போகிறார்.

**ஸ்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்த்தாஸ்யதி நிஷ்ச்சலா**
**ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி (53)**

பல்வேறு வகையான வேத வாக்கியங்களைக் கேட்டு நிலைகுலைந்து போயிருக்கும் உனது புத்தியானது எப்பொழுது பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலைபெற்று, அசையாமலும் உறுதியாகவும் நின்று விடுகிறதோ, அப்பொழுதுதான் நீ சமத்துவ யோகத்தை அடையப் பெறுவாய். முழுமையான சமநிலையை அடைவாய். அதையே 'குறையற்ற பரமபதம்' என்கிறோம். இதுவே யோகத்தின் உச்ச இறுதி எல்லையாகும். மேலும் இதுவே 'அடைய முடியாததை அடைதல்' என்பதாகும். வேதங்களில் இருந்து படிப்பினை என்னவோ கிடைக்கவே செய்கிறது. ஆனால் ஸ்ரீகிருஷ்ணரோ,**'ஸ்ருதிவிப்ரதிபன்னா'** "ஸ்ருதிகளின் (வேதங்கள்) பல்வேறு சிந்தாந்தங்களைக் (இறைக் கொள்கைகள்) கேட்பதால் புத்தியானது கலங்கிப்போய்விடுகிறது" என்கிறார். எண்ணற்ற சித்தாந்தங்களைக் (இறைக் கொள்கைகள்) கேட்கவே செய்கிறார்கள். ஆனால், எது கேட்பதற்குத் தகுதியானதோ, அதனின்று மக்கள் அனைவருமே வெகுதூரம் விலகியே இருக்கின்றனர்.

இந்தக் கலங்கிக் கிடக்கின்ற உனது புத்தியானது எந்தச் சமயத்தில் சமாதியில் உறுதிப்பாடு அடைகிறதோ, அப்பொழுதுதான் நீ யோகத்தினுடைய உச்ச நிலையான அமிர்த பதத்தை (மரணமில்லாப் பெருவாழ்வு) அடைவாய். அந்தக் குறையற்ற, மேலான இறைநிலை எனப்படும் அனாமய பரமபதத்தில் நிலைபெற்றவரும், சமாதியில் புத்தியை உறுதிப்படுத்தியவருமானஅந்த மஹாபுருஷர் எவ்வாறு இருப்பார்? என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வம் இயல்பாகவே அர்ஜுனனுக்கு எழுந்தது. எனவே அவன் கேள்வி கேட்கிறான்.

**அர்ஜுன உவாச**
**ஸ்தித ப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ**
**ஸ்திததீ : கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் (54)**

**'ஸமாதீயதே சித்தம் யஸ்மின் ஸ ஆத்மா ஏவ ஸமாதி:'** –எதன் மூலமாகச் சித்தமானது சமாதானம் அடையப்பெறுகிறதோ, அந்த ஆத்மாவே 'சமாதி' எனப்படும். ஆரம்பம் என்பதே இல்லாத அனாதி தத்துவத்தில் எவரொருவர் சமத்துவத்தைப் பெற்றுவிடுகிறாரோ, அவரையே சமாதியில் நிலைபெற்றவர் என்கிறோம். அர்ஜுனன், "கேசவரே! சமாதியில் நிலைபெற்றுள்ள உறுதிப்பாடுடைய புத்தியை அடையப்பெற்ற மஹாபுருஷருடைய இலட்சணம் யாது? ஆத்மாவில் நிலைபெற்ற அம் மஹாபுருஷர் எவ்வாறு பேசுகிறார்? அவர் எவ்வாறு உட்காருகிறார்? அவர் எவ்வாறு செல்கிறார்?" என்று கேட்டான். நான்கு

கேள்விகளை அர்ஜுனன் கேட்டான். இதற்கு பகவான் ஸ்ரீகிருஷ்ணர், ஆத்மாவில் நிலைபெற்ற மஹாபுருஷருடைய இலட்சணங்களை எடுத்துரைக்கும் வகையில் பின்வருமாறு கூறுகிறார்.

**ஸ்ரீபகவானுவாச**
**ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான்பார்த்த மனோகதான்**
**ஆத்மன்யே வாத்மனா துஷ்ட : ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே (55)**

பார்த்தனே! எப்பொழுது மனிதன் தன்னுடைய மனத்தில் நிலைபெற்றுள்ள எல்லா ஆசைகளையும் துறந்து விடுகிறானோ, அப்பொழுது அவன் ஆத்மாவின் மூலமாகவே ஆத்மாவில் மட்டுமே இன்புறுகின்ற திருப்தியுறுகின்ற நிலையான அறிவுடையவன் எனப்படுகிறான். ஆசைகளைத் துறந்த பிறகுதான் ஆன்மாவின் தரிசனம் கிடைக்கிறது. அத்தகைய ஆன்மாவில் மட்டுமே உறவாடுகின்ற, ஆன்மாவில் மட்டுமே திருப்தி காண்கின்ற மஹாபுருஷரே ஆன்மாவில் நிலைபெற்றவர் ஆவார்.

**துக்கேஷ்வனுத்விக்னமனா : ஸுகேஷு விகதஸ்ப்ருஹ:**
**வீதராகபயக்ரோத : ஸ்திததீர்முனிருச்யதே (56)**

உடல் ரீதியாக, தெய்வத்தின் மூலமாக மற்றும் உலகியல் வாயிலாகவும் உண்டாகும் துக்கங்களால் எவருடைய மனமானது கிளர்ச்சியடைவது இல்லையோ, இன்பங்களை அடையும் வேட்கையானது முழுவதுமாக விலகிவிட்டதோ, மற்றும் எவருடைய விருப்பம், பயம் மற்றும் குரோதம் அழிந்து விட்டதோ, ஆழ்சிந்தனைத் திறன் எனப்படும் மன ஒழுக்கத்தின் இறுதி எல்லைக் கோட்டைத் தொட்டுவிட்டதோ அத்தகைய முனிவரே 'ஆன்ம நிலைபெற்றவர்' (ஸ்தித ப்ரக்ஞர்) எனப்படுகிறார். அவருடைய மற்ற இலட்சணங்களைப் பற்றிக் கூறுகிறார்.

**ய: ஸர்வத்ரானபிஸ்நேஸ்தத்தத் ப்ராப்ய சுபாசுபம்**
**நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா (57)**

எவரொருவர் எதனிடமும் பற்றற்றவராக, நல்லவை மற்றும் கெட்டவை ஆகியவற்றை அடைந்தாலும்கூட, மகிழ்ச்சியோ, அல்லது வெறுப்போ அடைவதில்லையோ, அவருடைய புத்தியே உறுதியானது ஆகும். பரமாத்ம ஸ்வரூபத்தில் ஈடுபடச் செய்வது எதுவோ, அதுவே நல்லது ஆகும். மற்றும் பிரகிருதி அதாவது படைப்பை நோக்கி இழுத்துச் செல்வது எதுவோ, அதுவே கெட்டது ஆகும். ஆனால், ஆன்ம நிலைபெற்ற புருஷரோ (ஸ்தித ப்ரக்ஞர்) சாதகமான சூழ்நிலைகளைக் கண்டு மகிழ்ச்சி அடைவதும் இல்லை. மேலும் பாதகமான சூழ்நிலைகளைக் கண்டு வெறுப்புறுவதும் இல்லை. ஏனெனில், அடையத்

தகுதியுடைய பொருள் அவரிடமிருந்து வேறுபட்டுத் தனியாக இல்லை. மற்றும் இறைவனிடமிருந்து விலகிப் போகச் செய்யும் எந்தவொரு நுகர்ச்சி ஆசைகளும் (விகாரம்) அவரிடம் எஞ்சியிருக்கவும் இல்லை. அதாவது, இனிமேல் ஆன்மீக சாதனையினால் அவருக்குத் தனிப்பட்ட எந்தவொரு பயனும் இருப்பதில்லை. அத்தகையவரே 'ஆன்ம நிலைபெற்றவர்', 'ஸ்திதப்ரக்ஞர்' என்று அழைக்கப்படுகிறார்.

**யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோஅங்கானீவ ஸர்வஷ:**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா : (58)**

எந்தமுறையில் ஆமையானது தனது உடல் உறுப்புகளை எல்லாம் ஓட்டிற்குள் இழுத்துக் கொள்கிறதோ, சரியாக அதேபோன்றுதான் இந்த புருஷரும் எப்பொழுது எல்லாப் பக்கங்களில் இருந்தும் தன்னுடைய புலன்களைத் தன்வயப்படுத்திக் கொள்கிறோரோ அப்பொழுதே நிலைபெற்றுவிடுகிறார். அவருடைய புத்தியானது ஆபத்தைக் கண்டவுடனே ஆமையானது எந்த முறையில் தனது தலை மற்றும் கால்களை உள் இழுத்துக் கொள்கிறதோ, சரியாக இதே போன்றுதான் எவரொருவர் உலகியல் விஷயங்களில் உழன்று கொண்டிருக்கின்ற புலன்களை எல்லாப் பக்கங்களில் இருந்தும் விடுவித்துக் கொண்டு இதய தேசத்தில் கட்டுப்படுத்தி விடுகிறாரோ அந்தக் காலத்தில் அந்த புருஷருடைய புத்தியானது நிலைபெற்று உறுதிப்படுகிறது. ஆனால், இதுவொரு வகையான உதாரணம் மட்டுமேயாகும். ஆபத்து நீங்கியவுடனே ஆமையானது தன்னுடைய உடல்உறுப்புகளை மறுபடியும் வெளியே நீட்டிக் கொள்கிறது. அதேபோன்று ஆன்ம நிலைபெற்ற மஹாபுருஷரும்கூட உலகியல் இன்பங்களை அனுபவிக்கத் தொடங்கி விடுவாரா என்ன? இதுபற்றிக் கூறுகிறார்.

**விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின :**
**ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே (59)**

புலன்களின் மூலமாக விஷய இன்பங்களை உள்வாங்காத புருஷர்களுக்கு அந்த விஷய இன்பங்களில் இருந்து என்னவோ விடுதலை கிடைத்து விடுகிறது. ஏனெனில், அவர்கள்தான் உள்வாங்குவதில்லையே. ஆனால், அவற்றின் மீதான விருப்பமோ நீங்குவதில்லை, பற்று இன்னும் இருந்து கொண்டேதான் இருக்கிறது. ஒட்டு மொத்தப் புலன்களையும் விஷயங்களில் இருந்து விலக்கிக் கொள்கின்ற நிஷ்காமகர்ம யோகிகளின் விருப்பமும் (பற்றுணர்வு) கூட **'பரம் த்ருஷ்ட்வா'** – பரம தத்துவமாகிய பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரமடைந்த பிறகே நீங்குகிறது.

மஹாபுருஷர் ஆமையைப் போன்று தம்முடைய புலன்களை மீண்டும் விஷயங்களை அனுபவிப்பதற்காக வெளியில் நீட்டுவதில்லை. ஒருமுறை புலன்கள் கட்டுப்படுத்தப்பட்டுவிட்டால், அத்துடன் சம்ஸ்காரங்களும் (அனைத்து கர்ம வினைகளும்) அழிந்து போய்விடுகின்றன. மறுபடியும் அவை தலைதூக்குவதில்லை. நிஷ்காம கர்ம யோகத்தினைக் கடைப்பிடிப்பதன் மூலமாக பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்வதுடன் சேர்ந்தே அந்தப் புருஷருடைய விஷயங்களின் மீதான விருப்பமும்கூட நீங்கப் பெறுகிறது. பெரும்பாலோர் ஆன்மீகச் சிந்தனைப் பாதையில் பிடிவாதமாகப் புலன்களை அடக்க முயல்கின்றனர். அவர்கள் பிடிவாதமாகப் புலன்களை அடக்கிக் கொண்டு, விஷயங்களில் இருந்து என்னவோ விடுதலை பெற்று விடுகின்றனர். ஆனால் மனத்தில் அவற்றைப் பற்றிய சிந்தனையும் விருப்பமும் இருந்து கொண்டேதான் இருக்கிறது. இந்தப் பற்றும்கூட **'பரம் த்ருஷ்ட்வா'**– பரமாத்மாவை நேரடியாக (தத்துவரீதியாக) தரிசனம் செய்தபிறகுதான் நீங்குகிறதே ஒழிய, அதற்கு முன்பு அல்ல.

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் இது தொடர்பாகத் தம்முடைய வாழ்க்கையில் நடந்த சம்பவம் ஒன்றைக் கூறுவார். குடும்ப வாழ்க்கையைத் துறப்பதற்கு முன்பு, அவருக்கு மூன்றுமுறை இறைவனின் குரல் (ஆகாஷ்வாணி) கேட்டது. நாங்கள் அவரிடம், "மஹராஜ் அவர்களே! உங்களுக்கு மட்டும் ஏன் இறைவனின் குரல் கேட்டது? எங்களுக்கு எல்லாம் கேட்கவில்லையே" என்று கேட்டோம். இதற்கு மஹராஜ் ஜீ அவர்கள், "இந்த சந்தேகம் எனக்கும் இருந்தது. **('ஹ! ஈ சங்கா மோஹீம் கே பய் ரஹீ')** என்று கூறினார். "இதுபற்றி எனக்கு ஏற்பட்ட ஆன்மீக அனுபவத்தில், நான் தொடர்ந்து ஏழு பிறவிகளாக சாதுவாக இருந்திருக்கிறேன் என்பதை அறிந்து கொண்டேன். நான்கு பிறவிகளில் வெறுமனே சாதுவின் வேஷம் மட்டுமே தரித்து, நெற்றியில் திலகமிட்டும், சிலசமயம் விபூதி பூசிக் கொண்டும், சிலசமயம் கமண்டலத்தை வைத்துக் கொண்டு இங்குமங்கும் சுற்றியலைந்து கொண்டும் இருந்திருக்கிறேன். யோகக் கிரியையைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாதிருந்த காலம் அது. ஆனால், அடுத்த மூன்று பிறவிகளில், ஒரு சாது எப்படி இருக்க வேண்டுமோ, அதேபோல் நல்லதொரு சாதுவாக இருந்திருக்கிறேன். என்னுள் யோகக் கிரியை விழிப்புற்றிருந்தது. கடந்த, ஏழாவது பிறவியிலோ கரை கடந்து, விடுதலையும் கிடைத்து விட்டது. ஆனால், இரண்டே இரண்டு ஆசைகள் மட்டுமே எஞ்சி இருந்தன. ஒன்று 'பெண்' மற்றொன்று 'கஞ்சா'. இந்த ஆசைகள் மனத்தின் அடியாழத்தில்தான் இருந்தனவே தவிர, வெளி உலகத்தைப் பொறுத்தவரையில், உடலளவில் கட்டுப்பாடுடன் நடந்து கொண்டேன். மனத்தில் ஆசைகள் (வாசனை) நீங்காமல் இருந்ததால் மீண்டும் பிறவி எடுக்க வேண்டியதாயிற்று. இந்தப்

பிறவியிலோ இறைவன் சிறிது காலத்திற்குள்ளாகவே அனைத்தையும் பார்க்கவும், கேட்கவும் அனுபவிக்கவும் வைத்து விடுதலை அளித்து விட்டார். இரண்டு – மூன்று சொடுக்கு சொடுக்கினார். சாதுவாக மாற்றி விட்டார்.”

சரியாக, இதையேதான் ஸ்ரீகிருஷ்ணரும், “புலன்களின் மூலமாக விஷயங்களை உள்வாங்காத புருஷருக்கும்கூட, விஷயத்தில் இருந்து என்னவோ விடுதலை கிடைக்கவே செய்கிறது. ஆனால், ஆன்மீக சாதனையின் மூலமாக பரம புருஷராகிய பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்டபிறகு (சாட்சாத்காரம்) அவருக்கு விஷயங்களின் மீதுள்ள பற்றுணர்வில் இருந்தும் முழுமையான விடுதலை கிடைத்து விடுகிறது. ஆகவே, எதுவரைக்கும் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வது என்கின்ற சாட்சாத்காரம் கிடைக்கவில்லையோ, அதுவரைக்கும் கர்மத்தைக் கடைபிடித்தே ஆகவேண்டும்.

**உர் கச்சு ப்ரதம் பாஸனா ரஹி**
**ப்ரபு பத் ப்ரீத்தி ஸரித ஸோ பஹீ (ராமசரித மானஸ் 5/48/6)**

(என்னுடைய இதயத்தில் முன்பு கொஞ்சம் புலனின்ப விஷய வாசனை இருக்கவே செய்தது. அதுவும்கூட பிரபுவின் குணங்களில் உண்டான பிரியம் என்னும் நதியில் மூழ்கிக் காணாமல் போய்விட்டது). புலன்களை விஷயங்களில் இருந்து விடுவிப்பது மிகவும் கடினமானது. இதுபற்றி விளக்குகிறார்.

**யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித :**
**இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மன : (60)**

குந்தி மகனே! இந்த முயற்சியில் ஈடுபடுகின்ற, மேதாவி புருஷர்களின், கலங்கச் செய்கின்ற இயல்புடைய புலன்கள், அவர்களுடைய மனத்தை வலுக்கட்டாயமாக இழுத்து, நிலைகுலையச் செய்து விடுகின்றன. எனவேதான்.

**தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர :**
**வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா : (61)**

அந்தப் புலன்கள் அனைத்தையும் கட்டுப்படுத்தி, யோகத்தில் இணைந்து, மற்றும் சமர்ப்பணத்துடன் கூடியவனாக, என்னையே சார்ந்து கொள். ஏனெனில், எந்த புருஷருடைய புலன்கள் கட்டுப்படுத்தப்பட்டு விட்டதோ, அவருடைய புத்தியே நிலைபெற்று உறுதிப்படுகிறது. இங்கே, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஆன்மீக சாதனையில் தவிர்க்கப்பட வேண்டிய அம்சங்களுடன் சேர்த்து, நன்றாக கவனத்தில் கொள்ள வேண்டிய விதிமுறைகளுக்கு அதிக முக்கியத்துவம் தந்து விளக்குகிறார். வெறுமனே புலன்களைக் கட்டுப்படுத்துவதாலோ அல்லது தவிர்ப்பதாலோ மட்டும்

புலன்கள் வசப்படுவது இல்லை. சமர்ப்பணத்துடன் சேர்த்து இஷ்டதெய்வமாகிய சத்குருவை ஆன்ம சிந்தனையில் வழிபடுவது மிகவும் இன்றியமையாத ஒன்று. இஷ்ட தெய்வமாகிய சத்குருவை ஆன்ம சிந்தனையில் வழிபடுவதில் குறைபாடு ஏற்பட்டால் உலகியல் சிந்தனை தலைதூக்க ஆரம்பித்து விடும். அதனால் உண்டாகும் தீயவிளைவுகளையும் ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகள் மூலமாகவே அறிவோம்.

**த்யாயதோ விஷயான்பும்ஸ : ஸங்கஸ்தேஷூபஜாயதே**
**ஸங்காத்ஸஞ்ஜாயதே காம : காமாத்க்ரோதோபிஜாயதே (62)**

உலகியல் விஷயங்களைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் மனிதர்களுக்கு, அந்த விஷயங்களில் பற்றுண்டாகிவிடுகிறது. பற்றினால் ஆசைகள் (விருப்பங்கள்) தோன்றுகின்றன. ஆசைகள் (விருப்பங்கள்) நிறைவடைவதில் தடையேற்பட்டால் கோபம் உண்டாகிறது. கோபம் எதை உண்டாக்குகிறது?

**க்ரோதாத்பவதி ஸம்மோஹ : ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம:**
**ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத்ப்ரணச்யதி (63)**

கோபத்தால் பெரும் மூடத்தனம் அதாவது விவேகமற்ற தன்மை உண்டாகிறது. நிலையான நிலையற்ற பொருளைப் பற்றிய பகுத்தறிவு இருப்பது இல்லை. விவேகமற்ற தன்மையால் நினைவாற்றல் தடுமாறுகிறது. (அர்ஜூனனுக்கு உண்டானதைப் போன்று – **'ப்ரமதீவ சமே மன:'** (2/30) – 'எனது மனம் குழப்பமடைந்து விட்டது.' அவனே கீதையின் முடிவில் **'நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்த்தா'** (18/73) 'எனது மோஹம் அழிந்து விட்டது. எனக்கு எல்லாம் ஞாபகத்திற்கு வந்துவிட்டது.' என்கிறான் இந்த நிலையில் எதைச் செய்ய வேண்டும், எதைச்செய்யக் கூடாது என்பதைச் சரியாக முடிவெடுக்க முடியாமல் நினைவாற்றல் தடுமாறிப் போய்விடுவதால், யோகத்துடன் இணைந்து செயல்பட்டு வந்த புத்தியானது அழிவடைந்து போகிறது. மேலும் புத்தி கெட்டுப்போவதால் அந்த மனிதன் தன்னுடைய உயர்நன்மை பயக்கவல்ல சாதனையில் இருந்து வழிதவறிக் கீழே போய்விடுகிறான்.

இங்கே ஸ்ரீ கிருஷ்ணர், அழுத்தம் திருத்தமாக, "உலகியல் விஷயங்களைப் பற்றி அறவே சிந்திக்கக் கூடாது" என்கிறார். சாதகன் எப்போதுமே இறைவனின் பெயர், வடிவம், திருவிளையாடல் மற்றும் அவர் இருப்பிடம் ஆகியவற்றிலேயே மனத்தை வைத்திருக்க வேண்டும். இறைவழிபாட்டில் சிறிதளவு பிடியைத் தளர்த்தி விட்டாலும் கூட, மனமானது உலகியல் விஷயங்களை நோக்கி ஓடிவிடும். விஷயங்களைச் சிந்தித்துக் கொண்டே இருந்தால் அவற்றில் பற்றுதல்

உண்டாகிறது. பற்றுதலின் காரணமாக அந்த விஷயத்தின் மீதான ஆசை (விருப்பம்) சாதகனின் மன ஆழத்தில் எழத்தொடங்குகின்றன. அந்த ஆசைகள் நிறைவேறுவதில் தடையேற்ப்பட்டால் உடனே கோபமும் கோபத்தால் விவேகமற்ற தன்மையும், விவேகமற்ற தன்மையால் நினைவாற்றல் தடுமாறவும் செய்கின்றன. மேலும் நினைவாற்றல் தடுமாறினால் புத்தியானது மழுங்கிவிடுகிறது. நிஷ்காமகர்ம யோகத்தை புத்தி யோகம் என்றும் சொல்கிறோம். ஏனெனில் புத்தி நிலையில், 'ஆசைகள் (விருப்பங்கள்) எழக் கூடாது; பலன் என்பது இல்லவே இல்லை' என்பது போன்ற நிபந்தனைகளையெல்லாம் நன்றாக நினைவில் வைத்துக் கொண்டிருக்க வேண்டிய கட்டாயம் உள்ளது. ஆசைகள் தோன்றுவதால் இந்த புத்தி யோகம் அழிவடைகிறது. **'ஸாதன் கரிய விசாரஹீன் மன் சுத்த ஹோய் நஹீம் தைஸே'** (வினய பத்திரிகா, பத் ஸங்க்யா 115/3)– 'விசாரமின்றி (சிந்தனையின்றி) செய்யப்படும் சாதனையால் மனமானது தூய்மையடைவதில்லை.' எனவே ஆன்ம சிந்தனை மிகவும் அவசியமானது. சிந்தனையற்ற மனிதனோ உயர்நன்மை தரவல்ல சாதனையில் இருந்து இடறிக் கீழேவிழுந்து விடுகிறான். சாதனையின் வரிசைக் கிரமம் சீர்குலைந்து போய்விடுகிறது. ஆனால் முழுவதுமாக அழிந்து போவதில்லை. உலகியல் இன்ப துன்பங்களை அனுபவித்தபிறகு, சாதனை எங்கே தடைப்பட்டதோ, மீண்டும் அங்கிருந்தே ஆரம்பமாகி விடுகிறது.

இது உலகியல் விஷய இன்பங்களில் நாட்டம் வைத்திருந்த சாதகனுக்கு ஏற்படுகின்ற நிலையாகும். சுயக்கட்டுப்பாடு உடைய உள்மனத்தைப் (அந்தகரணம்) பெற்ற சாதகன் எத்தகைய நிலையை அடைகிறான்? இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ராகத்வேஷ வ்யுக்தைஸ்து விஷயானிந்த்ரியைஸ்ச்சரன்**
**ஆத்மவச்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி (64)**

ஆத்மாவின் விதியை அடையப் பெற்ற மஹாபுருஷர் விருப்பு வெறுப்பு ஆகியவை இன்றி, தன்வயப்படுத்திய புலன்களின் மூலமாக **'விஷயான் சரண்'** – உலகியல் நடவடிக்கைகளில் இறங்கிய போதிலும் கூட **'ப்ரஸாதமதி கச்சதி'** – அவருடைய அந்தக்கரணம் (உள்மனம்) தூய்மையாகவே இருக்கிறது. அவர் எப்போதும் ஆன்ம உணர்விலேயே நிலைத்திருக்கிறார். மஹாபுருஷருக்கென்று எந்தவொரு கட்டுப்பாடும், விதிமுறையும் இருப்பதில்லை. அவருக்கென்று, தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, எந்தவொரு தீமையும் இருப்பதில்லை. மேலும், ஆசைப்படுவதெற்கென்று எந்தவொரு நன்மையும் எஞ்சியிருப்பதும் கிடையாது.
–

**ப்ரஸாதே ஸர்வதுக்கானாம் ஹானிரஸ்யோபஜாயதே**
**ப்ரஸன்னசேதஸோ ஹ்யாசு புத்தி : பர்யவதிஷ்டதே (65)**

பகவானுடைய முழுமையான, கிருபை என்னும் பிரசாதமாகிய இறைநிலையுடன் ஒன்று கலந்து விட்ட பிறகு, அவருடைய எல்லாத் துன்பங்களும் அறவே நீங்கி விடுகிறது. **'துக்காலயம் அசாஸ்வதம்'** (கீதை 8/15) உலகம் என்பதே அவரைப் பொறுத்தவரையில் இல்லாமல் போய்விடுகிறது. மேலும், அந்த மகிழ்ச்சியான சித்தத்தை உடைய புருஷரின் புத்தியானது சீக்கிரமே மிகவும் நல்லமுறையில் உறுதியடைந்து விடுகிறது. ஆனால், இந்த யோகத்தில் நன்கு நிலை பெறாதவர்களுக்கு என்ன நேர்கிறது என்பதை மேலும் விளக்குகிறார்.

**நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா**
**ந சாபாவயத : சாந்திரசாந்தஸ்ய குத : ஸுகம் (66)**

யோக சாதனை இல்லாதவனுடைய அந்தகரணத்தில் (உள் மனத்தில் ) நிஷ்காம கர்மத்துடன் இணைந்த புத்தியானது இருப்பது இல்லை. அந்தத் தகுதியற்றவனுடைய அந்தகரணத்தில் உணர்வுப் பூர்வமான அணுகுமுறையும் கூடக் காணப்படுவது இல்லை. அந்த உணர்வுப் பூர்வமற்ற மனிதனுக்கு அமைதி எங்கிருந்து கிடைக்கப் போகிறது? மேலும், அமைதியற்ற மனிதனுக்கோ எங்கிருந்து சுகம் கிடைக்கப் போகிறது? யோகக் கிரியையைச் செய்து, ஏதோ கொஞ்சம் இறை அனுபவங்கள் கிடைத்த பிறகுதான், சத்குரு மற்றும் இறைவன்மீது ஒரு ஆர்வம் உண்டாகிறது. **'ஜானே பினு ந ஹோய் பரதீதீ'** (மானஸ் 7.88க 7) – 'இறைவனைப் பற்றிய அனுபவம் கிடைக்காமல் அவர்மீது நம்பிக்கை உண்டாவது இல்லை.' உணர்வுப் பூர்வமான அணுகுமுறை இல்லாமல் அமைதி கிடைப்பது இல்லை. மேலும் அமைதியற்ற மனிதனுக்கோ சுகம், அதாவது என்றும் நிலையான, மாறாத அனாதியான இறைவன் கிடைக்கமாட்டார்.

**இந்த்ரியாணாம் ஹி சரதாம் யன்மனோனுவிதீயதே**
**ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி (67)**

நீரில் மிதக்கின்ற படகானது எந்தமுறையில் காற்றினால் அடித்துச் செல்லப்பட்டு இலக்கிலிருந்து வெகுதூரம்வரை விலகிப் போய் விடுகிறதோ, சரியாக அதேபோன்றுதான் உலகியல் விஷயங்களில் உழன்று கொண்டிருக்கும் புலன்களும், எந்தப் புலனுடன் மனமானது இணைகிறதோ, அந்த ஒரு புலனே, சாதனை செய்கின்ற தகுதியற்ற அந்த மனிதனின் புத்தியைச் சுழற்றி இழுத்துச் செல்கின்றது. ஆகவே, யோகத்தை அனுசரிப்பது மிகவும் அவசியமாகும். 'யோகத்தைச் செயல் முறையில் கடைப்பிடித்தல்' பற்றி ஸ்ரீ கிருஷ்ணர் மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறார்:–

**தஸ்மாத்யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வச:**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா (68)**

ஆகவே, பெருந் தோள்களை உடையவனே! மஹாபாஹோ! எந்த மனிதனுடைய புலன்கள், புலன்களின் விஷயங்களில் இருந்து முழுவதுமாக விடுவிக்கப்பட்டுக் கட்டுப்பாட்டில் உள்ளதோ, அவனுடைய புத்தியே உறுதிப்படுகிறது. **'பாஹு'** அதாவது 'தோள்கள்' இங்கே காரியச் க்ஷேத்திரத்தின் உருவகச் சின்னமாகும். பகவான், பெருந் தோள்களை உடையவர் **(மஹாபாஹு),** மற்றும் நீண்ட தோள்களை உடையவர் **(ஆஜானுபாஹு)** என்றும் அழைக்கப்படுகிறார். அவர் கைகள், கால்கள் ஆகியவற்றின் உதவியின்றியே எங்கும் காரியம் ஆற்றுகிறார். அவருள் யாரெல்லாம் நுழைவு பெறுகிறாரோ, மேலும் எவரெல்லாம் அந்த மாபெரும் வல்லமை படைத்த இறைவனை நோக்கித் தீவிரமாக முன்னேறிச் செல்கிறாரோ, அவரே பெருந் தோள்களை உடையவர் **(மஹாபாஹு)** எனப்படுகிறார். ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுனன் இருவருமே பெருந் தோள்களை உடையவர் எனப்படுகிறார்கள்.

**யா நிசா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே: (69)**

மனிதர் உட்பட ஒட்டு மொத்த ஜீவராசிகளுக்கும் அந்த பரமாத்மாவானவர் இரவிற்கு ஒப்பானவர். ஏனெனில் அவற்றால் இறைவனைக் காணமுடிவதில்லை, அவற்றால் இறைவனைப் பற்றிச் சிந்திக்கவும்கூட முடிவதில்லை. எனவேதான் 'இரவிற்கு ஒப்பானவர்' எனப்படுகிறது. அந்த இரவில், பரமாத்மாவை, புலன் அடக்கம் மற்றும் மனக்கட்டுப்பாடுடைய மனிதர் நல்ல முறையில் காண்கிறார்; அவருடன் செல்கிறார்; அவரில் விழித்திருக்கிறார். ஏனெனில், அங்கே அவருக்கு இறைவனுடன் பிடிப்பு இருக்கிறது. யோகியானவர் புலன் அடக்கம், மற்றும் மனக் கட்டுப்பாடு ஆகியவற்றின் மூலமாக இறைவனுள் நுழைவு பெறுகிறார். எந்த அழிவுறும், உலகியல் சுகம் மற்றும் இன்பத்திற்காக மனிதர் உட்பட ஒட்டு மொத்தப் பிராணிகளும் இரவும் பகலும் கடுமையாக உழைக்கின்றனவோ, யோகியைப் பொறுத்தவரையில் அவை இரவிற்கு ஒப்பானதாகும்.

**ரமா விலாஸு ராம அனுராகீ தஜத் பமன் ஜிமி ஜன் பட்பாகீ**
**(ராம சரிதமானஸ் 2/323/8)**

**(—**'ஸ்ரீராமச்சந்திர பகவானிடம் மட்டுமே அன்பு கொண்டிருக்கும் பெரும் பாக்கியசாலி, உலகியல் போகங்கள் மற்றும் இன்பங்களை எல்லாம் ஒவ்வாத பொருளாகக் கருதித் துறந்து விடுகிறான்'**).**

எந்தவொரு யோகி பரமார்த்தப் பாதையில் நிரந்தரமான விழிப்புணர்வும் மற்றும் உலகியல் ஆசைகளில் இருந்து முழுவதுமாக விலகியும் இருக்கிறானோ, அவனே இஷ்ட தெய்வமாகிய சத்குருவிற்குள் நுழைவு பெறுகிறான். அவன் வாழ்வதென்னவோ, இந்த உலகத்தில்தான். ஆனால், இவ்வுலகின் தாக்கம் அவன்மீது எந்த பாதிப்பையும் ஏற்படுத்துவதில்லை. மஹாபுருஷருடைய இந்த வாழ்வியலைப் பற்றிய விளக்கத்தைப் பார்க்கலாம்.

**ஆபூர்யமாணமசலப்ரதிஷ்ட்டம்**
**ஸமுத்ரமாப: ப்ரவிஷந்தி யத்வத்**
**தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே**
**ஸ சாந்திமாப்னோதி ந காமகாமீ (70)**

எவ்வாறு எல்லாப் பக்கங்களிலும் முழுமையானதும், அசைக்க முடியாமல் நிலைபெற்றுள்ள கடலில் நதிகளுடைய தண்ணீரானது, அதனுள் எந்தவொரு சலனத்தையும் ஏற்படுத்தாமல் பெரும் வேகத்துடன் வந்து கலக்கின்றனவோ, அவ்வாறே பரமாத்மாவில் நிலைபெற்ற, மகா புருஷருக்குள் ஒட்டு மொத்த உலகியல் இன்பங்களும், எந்தவொரு புலன் நுகர்வு ஆசைகளையும் (விகாரம்) உண்டு பண்ணாமல், இரண்டறக் கலந்து மறைந்துவிடுகின்றன. அத்தகைய புருஷரே மேலான, என்றும் நிலையான பரம அமைதியை அடைகிறாரே தவிர, உலகியல் இன்பங்களை அனுபவிக்க விரும்புபவர் அல்ல.

பயங்கர வேகத்துடன் பாய்ந்தோடி வருகின்ற ஆயிரக்கணக்கான நதிகளின் வெள்ளமானது பயிர்களை எல்லாம் நாசம் செய்தபடியே, உயிர்களை எல்லாம் மாய்த்தபடியே, நகரங்களை எல்லாம் மூழ்கடித்த வண்ணம், பேரிரைச்சலுடன் கடுமையான வேகத்துடன் வந்து கடலில் விழுகின்றன. ஆனால் அவற்றால் கடலின் மட்டத்தை ஒரு இம்மியளவுகூட உயர்த்தவோ அல்லது தாழ்த்தவோ முடிவதில்லை. மாறாக அதிலேயே ஒன்று கலந்து மறைந்து விடுகின்றன. இதேபோன்றுதான் பரமாத்மாவில் நிலைபெற்ற மஹாபுருஷரை நோக்கி எல்லாவிதமான உலகியல் இன்ப துன்பங்களும் அவ்வளவுக்கவ்வளவு வேகத்துடன் விரைந்தோடி வருகின்றன. ஆனால் அவருள் எந்தவொரு சலனத்தையும் ஏற்படுத்தாமல் ஒன்று கலந்து மறைந்து விடுகின்றன. அந்த மஹாபுருஷருக்குள் நல்ல வினைகளையும் உண்டாக்க முடிவதில்லை, தீய வினைகளையும் ஏற்படுத்த முடிவதில்லை, யோகியினுடைய கர்மம் நல்லவை மற்றும் தீயவை ஆகிய இரண்டுவிதமான வினைகளையும் ஏற்றுக் கொள்வதில்லை. ஏனெனில் எந்தச் சித்தத்தில் சம்ஸ்காரங்கள் (வினைகள்) விழுகின்றனவோ, அதுவே முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு,

அழிக்கப்பட்டுவிட்டது. அத்துடன் சேர்த்தே இறைப் பேறுநிலையும் கிடைத்துவிட்டது. இந்நிலையில் (வினைகள்) சம்ஸ்காரங்கள் விழுந்தால் எங்கே போய் விழும்? இந்த ஒரு சுலோகத்திலேயே ஸ்ரீ கிருஷ்ணர், அர்ஜுனனுடைய எல்லா கேள்விகளுக்கும் விடையளித்துவிட்டார். அவனுக்கு, ஆன்ம நிலை பெற்ற (ஸ்தித ப்ரக்ஞ) மஹாபுருஷருடைய இலட்சணம் என்ன? அவர் எவ்வாறு பேசுவார்? எவ்வாறு உட்காருவார்? எவ்வாறு செல்வார்? என்பதையெல்லாம் அறிந்து கொள்ளும் ஆர்வம் இருந்தது. ஸ்ரீகிருஷ்ணரோ, அந்த மஹாபுருஷர் மாபெரும் சமுத்திரத்திற்கு ஒப்பானவர்' என்று ஒரே வார்த்தையில் அதற்கு விடையளித்து விட்டார். அவருக்கென்று இப்படித்தான் உட்கார வேண்டும், இப்படித்தான் போகவேண்டும் என்று எந்தவொரு கட்டுப்பாட்டு விதிமுறைகளோ அல்லது விளக்கங்களோ கிடையாது. அவரே மேலான அமைதியை அடையப் பெறுகிறார். ஏனெனில் அவர் புலன்கள், மற்றும் மனத்தைக் கட்டுப்படுத்தி இறைவனில் ஒன்றியவர் ஆவார். உலகியல் இன்பங்களின் மீது ஆசை வைப்பவன் அமைதியைப் பெறுவதில்லை. இதையே மீண்டும் வலியுறுத்துகிறார்.

**விஹாய காமான்ய ஸர்வான்புமான்ஸ்சரதி நிஸ்ப்ருஹ:**
**நிர்மமோ நிரஹங்கார : ஸ சாந்திமதிகச்சதி (71)**

எந்தவொரு மனிதன் எல்லா ஆசைகளையும் துறந்து விட்டு '**நிர்மம:**— 'நான்' மற்றும் 'எனது' என்ற உணர்வு மற்றும் அகங்காரம் மற்றும் வேட்கை ஆகியவை அறவே இல்லாமல் இருக்கிறானோ, அவனே, எதை அடைந்தபிறகு எதையுமே அடைய வேண்டியதிருக்காதோ அந்த மேலான அமைதியை அடையப் பெறுகிறான்.

**ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி : பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி**
**ஸ்தித்வாஸ்யா மந்தகாலேபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி (72)**

பார்த்தனே! மேலே சொல்லப்பட்டுள்ளது பிரம்மத்தை அடைந்த மஹாபுருஷருடைய நிலையாகும். மாபெரும் சமுத்திரத்திற்கு ஒப்பான அந்த மஹாபுருஷர்களுக்குள் உலகியல் விஷயங்கள் நதிகளைப் போன்று ஓடிவந்து சங்கமமாகி விடுகின்றன. அவர் முழுமையாகப் புலன் மற்றும் மனக்கட்டுப்பாடுடையவரும், இறைவனை நேருக்கு நேராகக் கண்டு தரிசனம் செய்து அவரிலேயே நிலைபெற்றுள்ள பரமாத்மதரிசியும் ஆவார். வெறுமனே, '**அஹம் ப்ரஹ்மாஸ்மி**' என்று படிப்பதாலோ, அல்லது ஓயாமல் ஒப்பித்துக் கொண்டு இருப்பதாலோ, இந்த நிலை கிடைப்பதில்லை. ஆன்ம சாதனையைச் செய்துதான் இந்த பிரம்ம நிலையைப் பெறமுடியும். அத்தகைய மஹாபுருஷர் பிரம்மத்தில் மட்டுமே உறுதியுடையவராக இருந்தவாறே உடலின் அந்திமக் காலத்திலும்கூட பிரம்மானந்தத்தையே அடைகிறார்.

**முடிவுரை:-**

பெரும்பாலோர், ‘இரண்டாவது அத்தியாயத்துடன் கீதை முழுமை பெற்று விடுகிறது” என்கின்றனர். ஆனால், ஒருவேளை கர்மத்தின் பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே கர்மம் நிறைவடைந்து விடுகிறது என்று எடுத்துக் கொண்டால் மட்டுமே கீதை இவ்விதமாக இரண்டாவது அத்தியாயத்துடன் முடிந்து விடுகிறது என்பதையும் ஏற்றுக் கொள்ள முடியும். இந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் “அர்ஜுனா! நிஷ்காம கர்ம யோகத்தின் விஷயமாகக் கேள். இதையறிந்து நீ உலக பந்தத்தில் இருந்து விடுதலை பெற்று விடுவாய். கர்மத்தைச் செய்யமட்டுமே உனக்கு அதிகாரம் உள்ளது. பலனில் ஒருபோதும் இல்லை. அதேசமயம் கர்மத்தைச் செய்வதிலும் உனக்கு நம்பிக்கையின்மை கூடாது. நிரந்தரமாகச் செய்வதற்கென்று முயற்சியுடையவனாக மாறு. இதன் விளைவாக நீ **பரம் த்ருஷ்ட்வா** (2/59) – ‘பரம புருஷராகிய, மேலான இறைவனை தரிசனம் செய்து ஸ்தித ப்ரக்ஞராவாய், மேலான அமைதியைப் பெறுவாய்,” என்று மட்டும் கூறினார். ஆனால், ‘அந்தக் கர்மம் என்றால் என்ன?’ என்பதைப் பற்றி ஒன்றுமே கூறவில்லை.

இது ‘ஸாங்க்ய யோகம்’ என்னும் பெயருடைய அத்தியாயம் இல்லை. இந்தப் பெயர் கீதையின் ஆசிரியரான ஸ்ரீகிருஷ்ணரால் சூட்டப்பட்டதல்ல. மாறாக, அதற்கு உரையெழுதிவர்களின் வேலையாகும். அவர்கள் தங்களுடைய அறிவிற்கு ஏற்பவே புரிந்து கொள்கின்றனர் எனும்போது இதில் ஆச்சரியப்பட என்னவிருக்கிறது?

இந்த அத்தியாயத்தில் கர்மத்தின் முக்கியத்துவம், மற்றும் அதில் ஈடுபடும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய நிபந்தனைகள் மற்றும் (ஸ்தித ப்ரகஞருடைய) ஆன்மாவில் நிலை பெறுபவருடைய இலட்சணம் ஆகியவற்றைப் பற்றிச் சொல்லி ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜுனனுடைய மனத்தில் கர்மத்தின் மீது ஆர்வம் தோன்றச் செய்தார். அவன் சில கேள்விகளை எழுப்பினான், அதற்கு அவர் “ஆன்மாவே என்றும் நிலையானது, மாறாதது, என்றும் உள்ளது. அதையறிந்து தத்துவதரிசியாக மாறு” என்றார். அதை அடைவதற்கு இரண்டு சாதனைகள் உள்ளன – ஞானயோகம் மற்றும் நிஷ்காம (பலனை விரும்பாத) கர்மயோகம்.

தன்னுடைய சக்தியை அறிந்து கொண்டு, இலாபம் – நஷ்டம் ஆகியவற்றைச் சுயமாகவே நிர்ணயம் செய்து கொண்டு, கர்மத்தில் முன்னேறிச் செல்வதே ஞானயோகம் எனப்படும். மேலும், இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் முழுவதுமாகச் சரணடைந்து, அவரை மட்டுமே சார்ந்து கொண்டு,

சமர்ப்பணத்துடன் சேர்த்து, அதே கர்மத்தில் முன்னேறிச் செல்வதே நிஷ்காம கர்மயோகம் அல்லது பக்தியோகம் எனப்படும். துளஸிதாஸ கோஸ்வாமி அவர்களும் இவ்விரண்டையும் பின்வருமாறு விளக்கிக் கூறுகிறார்.

**மோரே ப்ரௌட் தனய் ஸம க்யானி பாலக் சுத் சம தாச அமானீ ஜனஹி மோரபல நிஜபலதாஹீ துஹூ கஹம் காம் க்ரோத் ரிபு ஆஹீ (ராமசரித் மானஸ் 3/42/8-9)**

என்னை வழிபடுபவர்களில் இரண்டு வகையினர் உண்டு. ஒருவகை ஞானயோகியர், மற்றொருவகை பக்தியோகியர். நிஷ்காம கர்மயோகி அல்லது பக்தியோகி சரணாகதியுடன், என்னைச் சார்ந்து என்னைத் துணைக்கு அழைத்துக் கொண்டு செல்கிறான். ஞானயோகியோ தன்னுடைய சக்தியை அருகில் வைத்துக் கொண்டு தன்னுடைய இலாபம் – நஷ்டம் ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து கொண்டு, தன்னை மட்டுமே சார்ந்தவனாகச் செல்கிறான். ஆனால், இருவருக்குமே ஒரே எதிரிதான். ஞானயோகிக்கும் காமம், கோபம் முதலான எதிரிகளுடன்தான் மோதி வெற்றி பெற்றாக வேண்டும். மேலும், நிஷ்காம கர்மயோகியும் இவர்களுடன் தான் யுத்தம் செய்தாக வேண்டும். இருவருமே ஆசைகளை துறக்கிறார்கள். மேலும், இரண்டு பாதைகளிலுமே செய்யப்படுகின்ற கர்மம் மட்டும் ஒன்றேதான். "இந்தக் கர்மத்தின் விளைவாக மேலான அமைதியை அடைவாய்." ஆனால், அந்தக் கர்மம் என்றால் என்ன? என்பதைக் கூறவில்லை. இந்நிலையில், உங்கள் முன்பும் இந்தக் கர்மம் என்றால் என்ன? என்ற கேள்வி விடையளிக்கப்படாமல் நிற்கிறது. அர்ஜுனனுடைய மனத்திலும் இதேபோல் கர்மத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம் உண்டானது. மூன்றாவது அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே அவன் கர்மத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் விஷயமாகக் கேள்வி எழுப்பினான். அத்துடன்

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே 'கர்ம ஜிஞ்ஞாஸா' நாம த்விதீயோத்யாய:**

இம்முறையில் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய **'கர்ம ஜிஞ்ஞாஸா'** அதாவது **'கர்மத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம்'** என்ற பெயருடைய இரண்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத்பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்யஸ்வாமி அட்கடானந்தக்ருதே ஸ்ரீமத்**

**பகவத்கீதாயா: 'யதார்த்தகீதா' பாஷ்யே**
**'கர்ம ஜிஞ்ஞாஸா' நாம த்விதீயோத்யாய:**
/**ஹரி : ஓம் தத் ஸத்**/

இது, ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் **'கர்ம ஜிஞ்ஞாஸா'** அதாவது 'கர்மத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம்' என்ற பெயருடைய இரண்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

/ஹரி : ஓம் தத் ஸத்/

# ஸ்ரீ பரமாத்மனே நம:
# மூன்றாவது அத்தியாயம்

இரண்டாவது அத்தியாயத்தில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், “ இந்த புத்தியானது உனக்காக ஞானமார்க்கம் என்னும் விஷயத்தில் கூறப்பட்டது” என்று கூறினார். எத்தகைய புத்தி? அதுவே ‘யுத்தம் செய்!’ என்னும் புத்தி. ‘வெற்றி பெற்றால் ‘மஹாமஹீம்’ எனும் நிலையை அடைவாய், தோற்றாலோ ‘தெய்வத்துவம் எனும் நிலை பெறுவாய்’ என்பதாகும். வெற்றியில் எல்லாமே கிடைத்துவிடும். தோற்றாலும்கூட தெய்வத்துவம் கிடைக்கவே செய்கிறது. எனவே, எந்தக் கோணத்தில் இருந்து பார்த்தாலும் இலாபம் மற்றும் நஷ்டம் ஆகிய இரண்டிலுமே கண்டிப்பாக ஏதோ கொஞ்சம் கிடைக்கவே செய்கிறது. சிறிதளவுகூட பாதிப்பு என்பது இல்லவே இல்லை. அவர் பிறகு, “இப்போது இதையே நீ (பற்றற்ற) நிஷ்காமகர்ம யோகத்தின் விஷயத்தில் கேள். அந்த புத்தியுடன் இணைந்து நீ கர்மத்தின் பந்தங்களில் இருந்து நல்ல முறையில் விடுவிக்கப்பட்டு விடுவாய்” என்று கூறினார். அதையடுத்து அவர் கர்மத்தின் சிறப்புத்தன்மைகள் மீது விளக்கம் அளிக்கிறார். கர்மத்தைச் செய்கின்ற சமயத்தில் கவனத்தில் கொள்ள வேண்டிய அவசியமான எச்சரிக்கைகளை வலியுறுத்தும் விதமாக, ‘பலனின் மீது ஆசை வைக்கக் கூடாது, ஆசைகளை அறவே விலக்கி விட்டுக் கர்மத்தில் முன்னேறிச் செல்ல வேண்டும். மேலும், கர்மத்தைச் செய்வதிலும் உனக்கு நம்பிக்கை இன்மையும் கூடாது. இதன்மூலம் நீ கர்ம பந்தங்களில் இருந்து விடுபட்டு விடுவாய்’ என்றார். விடுபட்டு விடுவது என்னவோ சரிதான். ஆனால் பாதையில் நம்முடைய நிலை அறியப்படவில்லை.

ஆகவே, அர்ஜுனனுக்கு (பற்றற்ற) நிஷ்காமகர்ம யோகத்துடன் ஒப்பிடும்போது ஞான மார்க்கமே எளிமையானதாகவும் அடையக் கூடியதாகவும் தோன்றியது. அவன் கேள்வி கேட்டான் – ஜனார்த்தனா! (பற்றற்ற) நிஷ்காம கர்மத்துடன் ஒப்பிடும்போது ஞானமார்க்கமே உங்களுடைய பார்வையில் உயர்ந்ததென்றால் என்னை ஏன் இந்தப் பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்கள்? – கேள்வி இயல்பானதுதானே. ஒரே இடத்தை அடைவதற்கு இரண்டு பாதைகள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். ஒருவேளை நீங்கள் உண்மையாகவே அங்கே போக விரும்பினால், இவற்றில் எந்தப் பாதை எளிமையானது? என்று அவசியம் கேள்வி எழுப்புவீர்கள். ஒருவேளை அப்படி எழுப்பவில்லையென்றால் நீங்கள் பயணியே கிடையாது. இதேபோன்றுதான் அர்ஜுனனும் கேள்வியை முன்வைத்தான்.

**அர்ஜுன உவாச**

**ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்தே மதா புத்திர் ஜனார்த்தன**

**தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ (1)**

மக்கள் மீது தயை புரியும் ஜனார்த்தனா! ஒருவேளை (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்துடன் ஒப்பிடும்போது ஞானயோகமே உங்களைப் பொறுத்தவரையில் உயர்வானதாகக் கருதப்பட்டால் கேசவா! நீங்கள் என்னைப் பயங்கரமான இந்தக் கர்மயோகத்தில் ஏன் ஈடுபடுத்துகிறீர்கள்?

(பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தில் அர்ஜுனனுக்கு பயங்கரம் தென்படுகிறது. ஏனெனில், அதில் கர்மத்தைச் செய்வதற்கு மட்டுமே அதிகாரம் உள்ளது. பலனில் ஒருபோதும் இல்லை. கர்மத்தைச் செய்வதில் நம்பிக்கையின்மையும் இருக்கக்கூடாது. மேலும், நிரந்தரமான சமர்ப்பணத்துடன், யோகத்தின் மீது மட்டுமே பார்வையை வைத்துக் கொண்டு, கர்மத்திலேயே தொடர்ந்து ஈடுபட்டிருக்க வேண்டும். ஆனால் ஞானமார்க்கத்திலோ தோற்றாலும் தெய்வத்துவம் இருக்கிறது; வெற்றி பெற்றாலோ மஹாமஹீம் என்ற நிலை கிடைக்கிறது. தன்னுடைய இலாப, நஷ்டத்தைத் தானே கணக்கிட்டவாறே முன்னேறிச் செல்ல வேண்டும். இம்முறையில், அர்ஜுனனுக்கு பற்றற்ற கர்ம யோகத்துடன் ஒப்பிடும்போது ஞானமார்க்கமே எளிமையாகத் தோன்றியது. எனவேதான் அவன் வேண்டினான்.

**வ்யாமிஸ்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே**
**ததேகம் வத நிஸ்சித்ய யேன ஸ்ரேயோஹமாப்னுயாம் (2)**

நீங்கள் இந்த இரண்டையும் ஒன்றாகக் கூறி (கலப்படமான வார்த்தைகளால்) என் அறிவைக் குழப்பவே செய்கிறீர்கள். நீங்கள் எனது அறிவில் ஏற்பட்டுள்ள குழப்பத்தை நீக்குவதற்கான முயற்சியில் அல்லவா இறங்கியுள்ளீர்கள். எனவே, இவற்றிலிருந்து ஒன்றை நிச்சயப்படுத்திக் கூறுங்கள். அதன் மூலமாக நான் **'ஸ்ரேய'** மேலான நன்மையாகிய மோட்சத்தை அடைவேனாக! இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**லோகேஸ்மின்த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக**
**ஞானயோகேன ஸாங்க்யானாம் கர்மயோகேன யோகினாம் (3)**

பாவம் அற்றவனே! அர்ஜுனா! இந்த உலகில் உண்மையை தேடியறிந்து கொள்வதற்கு இரண்டு சிந்தனையோட்டங்கள் என்மூலமாக முன்பே சொல்லப்பட்டுள்ளது. இங்கே, 'முன்பே' என்பதற்கு எப்போதோ சத்தியயுகம் அல்லது த்ரேதாயுகத்தில் என்று அர்த்தம் கிடையாது. மாறாக, இப்போதுதான் நிறைவுபெற்ற இரண்டாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டது என்று அர்த்தம் ஆகும். ஞானிகளுக்காக ஞான மார்க்கமும் மற்றும் யோகிகளுக்காக (பற்றற்ற) நிஷ்காம

கர்ம மார்க்கமும் சொல்லப்பட்டது. இரண்டு மார்க்கங்களுக்கும் ஏற்றவாறு கர்மத்தை செய்துதான் ஆகவேண்டும். கர்மம் தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

**ந கர்மணாமனாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோஷ்னுதே**
**ந ச ஸன்யஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி (4)**

அர்ஜுனா! மனிதர்கள் கர்மத்தை ஆரம்பிக்காமல் இருப்பதால் மட்டுமே நிஷ்கர்மத்தின் கர்மம் விடுபட்ட இறுதி நிலையை அடைந்து விடுவதில்லை. மேலும், ஆரம்பிக்கப்பட்ட கிரியையை துறந்து விடுவதால் மட்டுமே இறைவனை அடையப்பெறுதல் என்ற மேலான வெற்றியைப் பெற்று விடுவதும் இல்லை. இந்நிலையில் உனக்கு ஞானமார்க்கம் நல்லதென்று தோன்றினாலும் சரி, அல்லது பற்றற்ற கர்ம மார்க்கம் நல்லதென்று தோன்றினாலும் சரி, இரண்டிலுமே கர்மத்தைச் மட்டும் செய்துதான் ஆகவேண்டும்.

இவ்விடத்தில் பெரும்பாலோர் ஆன்மீகப் பாதையில் சுருக்கமான வழி ஏதேனும் இருந்தால் அதன்மூலமாகத் தப்பிச் சென்று விடலாமே என்று தேடத் தொடங்குகின்றனர். “கர்மத்தை ஆரம்பிக்கவே வேண்டாம். நிஷ்காமகர்மி!” ஆகிவிட்டோம் என்பதை போன்ற தவறான கண்ணோட்டம் இருக்கக்கூடாது. எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர், ‘கர்மத்தை ஆரம்பிக்காமலேயே எவரும் நிஷ்கர்ம உணர்வை அடைவதில்லை. நல்லவை மற்றும் தீயவை ஆகிய கர்மம் விடுபட்ட நிலை கர்மங்கள் எங்கே முடிவுறுகின்றனவோ, அந்த மேலான நிஷ்கர்ம (கர்மம் விடுபட்ட நிலை) நிலையினை கர்மத்தைச் செய்துகொண்டேபோய்த்தான் அடையமுடியும்’’ என்கிறார். இதேபோன்று பெரும்பாலோர்,’’ நாங்களோ ஞானமார்க்கத்தைப் பின்பற்றுபவர்கள். ஞான மார்க்கத்திலோ கர்மம் என்பதே இல்லை” என்றே கூறுகின்றனர். ஆனால் இவ்வாறு எண்ணிக் கொண்டு கர்மங்களைத் துறப்பவன் ஞானியாவதில்லை. ஆரம்பிக்கப்பட்டுள்ள கிரியையைத் துறப்பதால் மட்டுமே எவரும் இறைவனை நேரடியாக அறிந்து தெளிதல் (சாட்சாத்காரம்) எனும் மேலான வெற்றியை அடைவதில்லை. ஏனெனில்

**ந ஹி கஸ்சித்க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்**
**கார்யதே ஹ்யவஷ : கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை: (5)**

எந்தவொரு மனிதனுமே எந்தக் காலத்திலும் கணப்பொழுதுகூடக் கர்மம் செய்யாமல் இருக்கமுடியாது. ஏனெனில், எல்லோருமே இயற்கையில் (சுபாவத்தில்) இருந்து தோன்றிய குணங்களின் மூலமாக உந்தப்பட்டுக் கர்மத்தைச் செய்கின்றனர். இயற்கை மற்றும் இயற்கையில் இருந்து உருவான குணங்கள் எதுவரைக்கும் உயிருடன் உள்ளதோ, அதுவரை எந்தவொரு மனிதனுமே கர்மத்தைச் செய்யாமல் இருக்கவே முடியாது.

நான்காவது அத்தியாயத்தில் உள்ள முப்பத்தி மூன்று, மற்றும் முப்பத்தி ஏழாவது சுலோகங்களில் ஸ்ரீகிருஷ்ணர், "எல்லாக் கர்மங்களுமே ஞானத்தில் முடிவடைகின்றன. ஞானம் என்னும் நெருப்பு எல்லாக் கர்மங்களையும் எரித்துச் சாம்பலாக்கி விடுகின்றது" என்கிறார். ஆனால் இங்கேயோ அவர், "கர்மத்தை செய்யாமல் எவரும் இருப்பதில்லை" என்கிறார். இறுதியாக, அந்த மஹாபுருஷர் என்னதான் சொல்ல விரும்புகிறார்? அவர் சொல்ல விரும்புவது இதைத்தான்.

அதாவது வேள்வியைச் செய்து கொண்டேபோய் மூன்று குணங்களையும் கடந்து சென்றபிறகு மனத்தின்அழிவு (ஒன்றியநிலை) மற்றும் இறைவனை நேரடியாக தரிசனம் செய்வதுடன் (சாட்சாத்காரத்துடன்) சேர்த்து வேள்வியின் இறுதிவிளைவானது தோன்றிய பிறகுதான் கர்மம் எஞ்சிவிடுகிறது. அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கிரியையானது முழுமை பெறுவதற்கு முன்பாகக் கர்மம் அழிவதில்லை மேலும் இயற்கையானது நம் பிண்டத்தை (உடலை) விட்டு விடுவதுமில்லை.

**கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்**
**இந்த்ரியார்த்தான்விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே (6)**

இவ்வாறிருந்தும்கூட குறிப்பாக மூடர்களோ, புலன்களை வலுக்கட்டாயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டு புலன் இன்பங்களை மனத்தால் அசைபோட்ட வண்ணம் இருக்கின்றனர். அவர்கள் கபடர்கள், வேஷதாரிகளே ஒழிய ஞானிகள் அல்லர். இதிலிருந்து ஸ்ரீகிருஷ்ணருடைய காலத்திலும்கூட இத்தகைய மூடநம்பிக்கைகள் இருந்துள்ளன என்பது தெளிவாகிறது. மக்கள் செய்யத் தகுதியுடைய செயல்களைக் கைவிட்டுப் புலன்களை வலுக்கட்டாயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டு உட்கார்ந்து கொள்கின்றனர். மேலும், அவர்கள், "நான் ஞானி; முழுமை பெற்றவன்" என்றெல்லாம் வேறு சொல்லிக் கொள்கின்றனர். ஆனால், ஸ்ரீகிருஷ்ணரோ, அவர்களை எல்லாம் கீழ்த்தரமானவர்கள் என்கிறார். ஞான மார்க்கம் பிடித்திருந்தாலும் சரி, அல்லது (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகம் பிடித்திருந்தாலும் சரி, இரண்டு மார்க்கங்களிலுமே கர்மத்தை மட்டும் செய்துதான் ஆகவேண்டும்.

**யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரபதேர்ஜுன**
**கர்மேந்த்ரியை : கர்மயோகமஸக்த : ஸ விசிஷ்யதே (7)**

அர்ஜுனா! எவனொருவன் மனத்தால் புலன்களைத் தன்வயப்படுத்திக் கொண்டு, மனத்தளவில்கூடப் புலனின்ப நுகர்ச்சிகளைச் சிந்திக்காமல், முழுமையாகப் பற்றுகளில் இருந்து நீங்கியவனாக புலன்களைக் கொண்டு கர்மயோகத்தைக் கடைப்பிடித்து வருகிறானோ, அவனே சிறந்தவன். சரி,

கர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது வரைக்கும் புரிந்துவிட்டது. ஆனால், எந்தக் கர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்? என்ற கேள்வி எழுகிறது. இதுபற்றிக் கூறுகிறார்.

**நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:**
**சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்தயேத கர்மண : (8)**

அர்ஜுனா! நீ நிச்சயிக்கப்பட்டு உள்ள கர்மத்தைச் செய். அதாவது, கர்மங்களோ பலவகைப்பட்டன. அவற்றிலிருந்து ஏதோ ஒன்று மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டு உள்ளது. அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய். கர்மத்தைச் செய்யாமல் இருப்பதைவிட கர்மத்தைச் செய்வதே உயர்வானது. எனவேதான் செய்து கொண்டே இருந்து, கொஞ்ச தூரத்தினைக் கடந்து விட்டாயானால், ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளதைப் போன்று, மாபெரும் பிறப்பு – இறப்பு என்ற பயத்தில் இருந்து உன்னை விடுவிக்க (காப்பாற்ற) வல்லதாக அமையும். எனவேதான் உயர்வானது எனப்படுகிறது. கர்மத்தைச் செய்யாவிட்டால் உன்னுடைய உடல் பயணமும் முடிவுக்கு வரப்போவதில்லை. உடற் பயணம் என்பதற்கு எல்லோரும் சொல்லும் பொருள் இதுதான் – 'உடல் நிர்வாகம்.' (உடலைப் பேணிப்பாதுகாப்பது). எந்த மாதிரியான உடல் நிர்வாகம்? நீங்கள் என்ன இந்த உடலா? இந்த மனிதன் பிறவி, பிறவியாக, யுக யுகாந்தரங்களாக உடல்களில்தானே மாறி மாறிப் பயணம் செய்து வந்து கொண்டிருக்கிறான். எவ்விதம் ஆடையானது பழுதடைந்து போய்விட்டால் இரண்டாவது, மூன்றாவது என்று மாற்றிக் கொள்கிறோமோ, அவ்விதமே புழு, பூச்சிகள் முதல் மனிதர் வரை, மற்றும் பிரம்மாவில் இருந்து ஒட்டு மொத்தப் பிரபஞ்சமும் மாறிக் கொண்டேயிருக்கும் இயல்புடையவை. உயர்ந்த, தாழ்ந்த பிறவிகளில் பாரபட்சமின்றி இந்த உயிரானது மாறி மாறி உடல்களில்தானே பயணம் செய்து வந்து கொண்டிருக்கிறது. கர்மமோ, இந்தப் பயணத்தை ஒரு முடிவிற்குக் கொண்டு வந்து, முழுமைபெறச் செய்கின்ற வல்லமை படைத்தது. இன்னுமொரு பிறவி எடுக்க வேண்டும் என்றிருப்பதாக வைத்துக் கொள்வோம். பயணம் தொடர்கிறது. இப்போதைய நிலையில் அவன் ஒரு பயணிதான்; போய்க் கொண்டு இருக்கிறான்; அவன் மற்றொரு உடலில் பயணம் செய்து கொண்டிருக்கிறான். எப்பொழுது இலட்சியம் (சேருமிடம்) அடையப்படுகிறதோ, அப்பொழுதுதான் பயணமும் முடிவிற்கு வருகிறது. பரமாத்மாவில் நிலைபெற்று விட்டபிறகு இந்த ஆத்மாவிற்கு உடல்களில் பயணம் செய்ய வேண்டியிருக்காது. அதாவது, உடலைத் துறப்பது மற்றும் உடலை ஏற்பது என்ற வரிசைக் கிரமம் முடிவுக்கு வந்து விடுகிறது. எனவே, இந்த மனிதன் மறுபடியும் உடல்களில் பயணம் செய்ய வேண்டியதில்லை என்றொரு நிலையைத் தரும் வல்லமை இந்தக்

கர்மத்திற்கு உண்டு. **மோக்ஷ்யஸேஅசுபாத்’ (கீதை 4/16)** – ‘அர்ஜுனா! இந்தக் கர்மத்தைச் செய்து நீ உலகியல் பந்தங்கள் (அசுபம்) என்னும் தளைகளிலிருந்து விடுதலை பெற்று விடுவாய். கர்மம் என்பது, உலகியல் பந்தங்களில் இருந்து முக்தி அளிக்கும் வல்லமை உடையது. இப்பொழுது, அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் எது? என்றொரு கேள்வி எழுகிறது. இதுபற்றிக் கூறுகிறார்.

**யஜ்ஞார்த்தாத்கர்மணோன்யத்ர லோகோயம் கர்மபந்தன :**
**ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க ஸமாசர (9)**

அர்ஜுனா! வேள்வியைச் செயல்முறைப்படுத்துவதையே கர்மம் என்கிறோம். வேள்வியை நிறைவு செய்வதற்காகக் கடைப்பிடிக்கப்படுவதே கர்மம் ஆகும். இதிலிருந்தே கர்மம் என்பது ஒரு நிச்சயிக்கப்பட்டுள்ள செயல்முறை என்பது தெளிவாகிறது. இதைத் தவிர, செய்யப்படுகின்ற மற்றவை எல்லாம் கர்மம் ஆகாதா என்ன? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, “இல்லை, அவை கர்மம் அல்ல” என்கிறார். **‘அன்யத்ர லோகோஅயம் கர்ம பந்தன:’** – ‘இந்த வேள்வியின் செயல் முறையைத் தவிர்த்து, இவ்வுலகில் செய்யப்படுபவை அனைத்தும், மொத்த உலகமும் இரவும் பகலும் எவற்றில் மூழ்கிக்கிடக்கின்றனவோ அவையனைத்துமே இதே உலகில் அவர்களைப் பந்தப்படுத்துபவை ஆகுமே தவிர அவையெல்லாம் கர்மம் ஆகாது. கர்மம் எனப்படுவதோ **‘மோக்ஷ்யஸேஅசுபாத்’** – அசுபம், தீயவை, அதாவது உலகியல் பந்தங்களில் இருந்து விடுதலை பெற்றுத் தருவது ஆகும். வேள்வியின் செயல்முறை மட்டுமே கர்மம் எனப்படும். வேள்வியை நிறைவேற்றுவதற்காகக் கடைப்பிடிக்கப்படுவதே கர்மம் எனப்படும். எனவே அர்ஜுனா! அந்த வேள்வியை நிறைவேற்றுவதற்காகச் சேர்க்கை தோஷங்களில் இருந்து விலகி நின்று, நல்லமுறையில் கர்மத்தைக் கடைப்பிடித்து வா. சேர்க்கை தோஷத்தில் இருந்து விலகி இராமல் இந்தக் கர்மம் நிகழ்வதில்லை.

இப்போது நாம், ‘வேள்வியின் செயல்முறையே கர்மம்’ என்பதைப் புரிந்து கொண்டோம். ஆனால் இங்கே மறுபடியும், எதனைச் செய்ய வேண்டுமோ ‘அந்த வேள்வி என்பது எது? என்றொரு புதிய கேள்வி தோன்றிவிட்டது. இதற்காக, முதலில், வேள்வியைப் பற்றி ஒன்றும் கூறாமல் ஸ்ரீகிருஷ்ணர், வேள்வி எங்கிருந்து வந்தது? அது என்ன தருகிறது? அதனுடைய சிறப்பு அம்சங்கள் ஆகியவற்றை விளக்க ஆரம்பிக்கிறார். மேலும் நான்காவது அத்தியாயத்தில் சென்று, ‘நாம் எதற்குச் செயல் வடிவம் தருவதால் நம் மூலமாகக் கர்மம் நிகழத் தொடங்குமோ, அந்த வேள்வி என்பது என்ன?’ என்பதைத் தெளிவாக விளக்கியருள்கிறார். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணருடைய தனிச் சிறப்பு என்னவென்றால், அவர் எதைப் பற்றி விளக்க விரும்புகிறாரோ, முதலில் அதனுடைய சிறப்புத் தன்மைகளைப்

பற்றி விளக்கி, அதன்மீது நம்பிக்கை ஏற்படச் செய்கிறார். அதற்குப் பிறகு அதனைக் கடைப்பிடித்து ஒழுகும் போது கவனத்தில் கொள்ள வேண்டிய எச்சரிக்கைகளின் மீது விளக்கம் அளிக்கிறார். மேலும் கடைசியில் அதன் முக்கியமான, மையக்கொள்கையைத் தெளிவாக விளக்கியருளி அதனை நிலைநாட்டுகிறார்.

இவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணர் கர்மத்தின் மற்றொரு அங்கத்தின்மீது விளக்கம் தரும் விதமாக, "இந்தக் கர்மம் என்பது ஒரு நிச்சயிக்கப்பட்டுள்ள கிரியை (செயல்) ஆகும். அதைத் தவிர, செய்யப்படும் மற்றவை அனைத்தும் கர்மம் ஆகாது" என்று சொல்லி விளக்கம் தந்தது அனைவருக்கும் நினைவிருக்கலாம்.

இரண்டாவது அத்தியாயத்தில் முதன்முறையாக 'கர்மம்' என்ற பெயர் மட்டும் உச்சரிக்கப்பட்டது. அதனுடைய சிறப்புத்தன்மைகள் வலியுறுத்திக் கூறப்பட்டன. அதைச் செய்யும்போது கடைப்பிடிக்க வேண்டிய, கவனத்தில் கொள்ள வேண்டிய எச்சரிக்கைகள் விளக்கிச் சொல்லப்பட்டன. ஆனால், அந்தக் கர்மம் எது? என்பதை மட்டும் சொல்லவில்லை. இங்கே, மூன்றாவது அத்தியாயத்திலோ, அவர், "எவருமே கர்மம் செய்யாமல் இருக்க முடியாது. இயற்கையினால் அல்லது சுபாவத்தால் ஈர்க்கப்பட்டு மனிதன் கர்மத்தைச் செய்கிறான். இதற்கு மாறாக, எவரெல்லாம் புலன்களை வலுக்கட்டாயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டு மனத்தால் புலனின்ப விஷயங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் கபடர்கள், கபடத்தையே தொழிலாகக் கொண்டவர்கள். எனவேதான் அர்ஜுனா! மனத்தால் புலன்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு, இந்தக் கர்மத்தைச் செய். ஆனால் எந்தக் கர்மத்தைச் செய்ய வேண்டும்? என்ற கேள்விக்கு இன்னும் விடையளிக்கப்படாமல் அப்படியேதான் உள்ளது. இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! நீ நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்!" என்று கூறினார்.

இப்போது, அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் எது? எதைச் செய்ய வேண்டும்? என்றொரு புதிய கேள்வி பிறக்கிறது. அதற்கு அவர், "வேள்விக்குச் செயல் வடிவம் தருவதே கர்மம் ஆகும்" என்று கூறினார். இப்போது "அந்த வேள்வி எது?" என்று இன்னொரு கேள்வி முளைத்து விட்டது. இங்கே வேள்வியின் உற்பத்தி, சிறப்புத் தன்மை ஆகியவற்றை மட்டும் எடுத்துச் சொல்லி விட்டு அமைதியாகிறார். மேலும், நான்காவது அத்தியாயத்தில் வேள்வியின் தெளிவான மெருகேற்றப்பட்ட முழு உருவமும் கிடைத்து விடும். அந்த வேள்வியைச் செய்வதையே கர்மம் என்கிறோம்.

கர்மத்தின் இந்த விளக்கமே கீதையைப் புரிந்து கொள்வதற்கான திறவுகோல் ஆகும். வேள்வியைத் தவிர, இவ்வுலகில் மக்கள் வேறு எதையெதையெல்லாமோ செய்து கொண்டேதான் இருக்கிறார்கள். சிலர் விவசாயம் செய்கிறார்கள் என்றால் இன்னும் சிலரோ ஏதேனும் தொழில் செய்கிறார்கள். சிலர் பதவியில் இருந்தால் இன்னும் சிலரோ பணியாட்களாக இருக்கின்றனர். சிலர் தங்களை அறிவாளி என்று அழைத்துக் கொண்டால், இன்னும் சிலரோ தங்களை உடல் உழைப்பாளிகள் என்கின்றனர். சிலர் சமூக சேவையை மட்டுமே கர்மம் என்று கருதினால் வேறுசிலர் தேசசேவையே கர்மம் என்கிறார்கள். மேலும் அத்தகைய கர்மங்களையே மக்களும் பலன் கருதிச் செய்யப்படும் கர்மம் (ஸகாம்) மற்றும் பலன் கருதாமல் செய்யப்படும் கர்மம் (நிஷ்காம கர்மம்) என்றும் எண்ணி பெயரிட்டு விளக்கங்களை வழங்குவதிலும் முனைந்துள்ளனர். ஆனால் ஸ்ரீகிருஷ்ணரோ, 'அவையெல்லாம் கர்மம் அன்று' என்கிறார். **'அன்யத்ர லோகோயம் கர்ம பந்தன:'–** வேள்வியின் செயல்முறையைத் தவிர, வேறு எதைச் செய்தாலும் இதே உலகில் பந்தப்படுத்தும் கர்மமாகுமே தவிர, அவையெல்லாம் மோட்சத்தை அளிக்கின்ற கர்மமாகாது. உண்மையில் வேள்வியின் செயல்முறையே கர்மம் எனப்படுகிறது. அடுத்து, வேள்வியைப் பற்றி ஒன்றும் சொல்லாமல், முதலில் வேள்வி எங்கிருந்து வந்தது என்பதைப் பற்றிச் சொல்கிறார்.

**ஸஹ யஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:**
**அனேன ப்ரஸவிஷ்யத்வமேஷ வோஸ்த்விஷ்டகாமதுக் (10)**

படைப்புக் கடவுளாகிய (பிரஜாபதி) **பிரம்மா** படைப்பின் (கல்பம்) ஆரம்பத்தில் வேள்வியுடன் கூடிய குடிமக்களை (பிரஜைகள்) உருவாக்கி, "இந்த வேள்வியின் மூலமாக விருத்தியடையுங்கள். இந்த வேள்வியானது உங்களுடைய **'இஷ்ட காமதுக்'–** 'எதில் கெடுதல் என்பதே இல்லையோ, அந்த அழிவற்ற, இஷ்ட தெய்வமாகிய பரமாத்மாவுடன் (சத்குரு) தொடர்பான, உயர்வான ஆன்மீக ஆசைகள் அனைத்தையும் நிறைவேற்றுவார்!" என்று கூறினார்.

வேள்வியுடன் கூடிய குடிமக்களை யார் உருவாக்கினார்? பிரஜாபதியாகிய பிரம்மா உருவாக்கினார். யார் இந்த பிரம்மா? – வழக்கத்தில் உள்ளது போல், நான்கு முகங்களும், எட்டுக் கண்களும் உடைய ஏதோவொரு தெய்வமா? இல்லை. ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் 'தேவதை' என்ற பெயரில் தனியாக எந்தவொரு சக்தியும் கிடையாது. அப்படியென்றால் இந்த பிரஜாபதி எனப்படுவது யார்? உண்மையில் எவரொருவர் பிரஜைகளின் மூலஊற்றுக் கண்ணாகிய பரமாத்மாவில் நுழைவு பெற்று விட்டாரோ, அந்த மஹாபுருஷரே 'பிரஜாபதி' எனப்படுகிறார். புத்தியே பிரம்மா எனப்படுகிறது – **'அஹங்கார் சிவ புத்தி அஜ, மன் சசி சித்த மஹான்' (ராம சரித மானஸ் 6/15க)** –

அகங்காரமே சிவன், புத்தியே பிரம்மா, மனமே சந்திரன், சித்தமே மகான். அந்தச்சமயத்தில் புத்தியானது வெறும் இயந்திரமாகச் செயல்படுகிறது. அந்த மஹாபுருஷருடைய வாக்கின் மூலமாக அந்தப் பரமாத்மாவே பேசுகிறார்.

இறைவழிபாட்டிற்கான உண்மையான கிரியை ஆரம்பித்து விட்டபிறகு புத்தியானது மேன்மேலும் உயர்வடைந்து கொண்டே செல்கிறது. ஆரம்பநிலையில் அந்த புத்தியானது பிரம்ம வித்யையுடன் இணைந்துள்ள காரணத்தால் **'பிரம்ம வித்'** என்றழைக்கப்படுகிறது. படிப்படியாக, நுகர்ச்சி ஆசைகள் (விகாரங்கள்) அழிந்தபிறகு, பிரம்ம வித்யையில் மேன்மையடைந்து விட்ட காரணத்தால் அதுவே 'பிரம்மவித்வர்' என்றழைக்கப்படுகிறது. இன்னும் உயர்ந்து மிகவும் நுட்பமடைந்து விட்டால், அந்த புத்தியின் நிலையே மேலும் நன்றாக விரிந்து மலர்ந்து விடுகிறது. அந்த நிலை, **'பிரம்மவித்வரியான்'** என அழைக்கப்படுகிறது. அந்த நிலையை அடைந்துள்ள **பிரம்மவித்வேத்தா** எனப்படும் மஹாபுருஷர் மற்றவர்களையும் உயர்வான ஆன்மீக மார்க்கத்திற்கு அழைத்து வருகின்ற அதிகாரத்தைப் பெற்று விடுகிறார். 'புத்தியின் உச்ச நிலையே' – **'பிரம்ம வித்வரிஷ்டர்'** அதாவது இஷ்டதெய்வம் (ஸத்குரு – இறைவன்) முழுக்க முழுக்க நிரம்பி வழிகின்ற நிலையை எட்டிய **'பிரம்ம வித்'** என்று இதற்குப்பொருள். இத்தகைய நிலையை அடைந்துள்ள மஹாபுருஷர் குடிமக்களின் (பிரஜைகள்) மூலஊற்றுக் கண்ணாகிய பரமாத்மாவில் நுழைவு பெற்று அவரிலேயே நிலைத்து விடுகிறார். அத்தகைய மஹாபுருஷருடைய புத்தி வெறும் இயந்திரம் மட்டுமேயாகும். அவரே 'பிரஜாபதி' என்றும் அழைக்கப்படுகிறார். அவர் இயற்கையின் அதாவது மனித இயல்பில் அமைந்துள்ள இன்பதுன்பங்கள் (இருமைகள்) எனப்படும் வேற்றுமை உணர்வுகளையெல்லாம் நன்கு அலசி ஆராய்ந்து இந்த ஆராதனை கிரியையைப் படைக்கின்றார். வேள்வியைச் செயல்படுத்துவதற்கு ஏற்ற வகையிலான வினைகளைத் (சம்ஸ்காரங்கள்) தருவதே 'குடிமக்களை (பிரஜைகள்) உருவாக்குதல்' எனப்படுகிறது. இதற்குமுன்பு மனித சமுதாயம் சுயஉணர்வின்றி, எந்தவொரு நெறிமுறையும் இல்லாதவர்களாகவே உள்ளனர். படைப்பு தொடக்கமற்றது. (சம்ஸ்காரங்கள்) வினைகள் முன்பிருந்தே உள்ளன. ஆனால் தாறுமாறாகச் சிதறியும் சீர்குலைந்தும் கிடக்கின்றன. வேள்வியில் ஈடுபடுவதற்கு ஏற்றவாறு அவற்றை நெறிப்படுத்துவதே 'உருவாக்குதல் அல்லது' ஒழுங்குமுறைப் படுத்துதல்' எனப்படுகிறது.

அத்தகைய மஹாபுருஷர் படைப்பின் (கல்பம்) ஆரம்பத்தில் வேள்வியுடன் கூடிய குடிமக்களை (பிரஜைகள்) உருவாக்கினார். கல்பம் நோயற்ற ஆரோக்கியமான வாழ்வைத் தருகிறது. வைத்தியர்கள் கல்பத்தைத் தயாரித்துக் கொடுக்கின்றனர். ஒருசிலர் காயகல்பத்தைத் தயாரிக்கின்றனர். இது கணப்பொழுது மட்டுமே நீடிக்கின்ற இந்த அழியும் உடல்களுக்கான கல்பமாகும். ஆனால், இந்த உலகம்

என்னும் பெருநோயில் இருந்து விடுதலை கிடைக்கச் செய்வதே உண்மையான கல்பமாகும். இறை ஆராதனையின் ஆரம்பமே அத்தகைய கல்பத்திற்கான தொடக்கமாகும். ஆராதனை முழுமையாக நிறைவு பெற்று விட்டால், உங்களுடைய கல்பமும் அத்துடன் நிறைவடைகிறது.

இம்முறையில் பரமாத்மாவில் நிலைபெற்ற மஹாபுருஷர்கள் இறைவழிபாட்டின் ஆரம்பத்தில் வேள்வியுடன் கூடிய வினைகளை (சமஸ்காரங்களை) ஒருங்கிணைத்து, 'இந்த வேள்வியால் நீங்கள் விருத்தியடையுங்கள் (முன்னேற்றமடையுங்கள்)' என்று கூறியருளினார். எத்தகைய விருத்தி? சிறிய மண்குடிசையானது பெரிய பங்களா ஆகிவிடுமா? அல்லது வருமானம் அதிகமாகப் பெருகத் தொடங்கி விடுமா? இல்லை! இந்த வேள்வியானது **'இஷ்டகாமதுக்'** – இஷ்ட தெய்வம் (ஸத்குரு–இறைவன்) தொடர்பான உயர் ஆன்மீக ஆசைகளை நிறைவேற்றுவதாகும்! பரமாத்மாவே இஷ்டதெய்வம். அந்தப் பரமாத்மாவுடன் தொடர்புடைய உயர் ஆன்மீக ஆசைகளை நிறைவேற்ற வல்லதாகும். இந்த வேள்வியானது நேரடியாக அந்தப் பரமாத்மாவைப் பெற்றுத் தந்து விடுமா? அல்லது, படிப்படியாகத்தான் சென்று அவரை அடைய முடியுமா? என்றொரு கேள்வி எழுவதும் இயல்பானதே.

**தேவான் பாவயதானேன தே தேவா பாவயந்து வ:**
**பரஸ்பரம் பாவயந்த : ஸ்ரேய : பரமவாப்ஸ்யத்த (11)**

இந்த வேள்வியின் மூலமாக தேவதைகளை உயர்வடையச் செய்! அதாவது, தெய்வீகச் செல்வங்களைப் பெருகச் செய்! அந்த தேவதைகள் உங்களை உயர்வடையச் செய்வார்கள்! இந்த முறையில் ஒருவருக்கொருவர் உயர்வடையச் செய்து கொண்டேபோய், மிகவும் உயர்வானதை அடைந்தபிறகு, மேலும் அடைவதற்கென்று வேறொன்றும் எஞ்சியிருப்பதில்லையோ, அந்தப் பரம நன்மையாகிய இறைவனை அடைவாயாகுக! நாம் எவ்வளவுக்கு எவ்வளவு வேள்வியில் நுழைவு பெற ஆரம்பிக்கிறோமோ (ஆராதனையின் விதிமுறையே வேள்வி என்று பின்வரும் பகுதியில் சொல்லப்படும்.) அவ்வளவுக்கு அவ்வளவு இதய தேசத்தில் தெய்வீகச் செல்வங்கள் நிறைந்து கொண்டே செல்ல ஆரம்பிக்கும். பரமாத்மா ஒருவரே உள்ளதொரு பரம தெய்வம். அந்தப் பரம தெய்வத்துள் நுழைவு பெற்றுத் தருகின்ற செல்வம் அல்லது குணங்கள் எவையோ, நமது உள்மனத்தில் உள்ள ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்களாகிய அவற்றையே 'தெய்வீகச் செல்வம்' என்கிறோம். அவை நமக்கு அந்தப் பரமதெய்வத்தைப் பெற்றுத் தருகின்றன. எனவேதான் 'தெய்வீகச் செல்வம்' எனப்படுகிறதே தவிர, வெளிஉலகில் நிலவி வருகின்ற, தெய்வங்கள் என்ற பெயரில் மற்றவர்கள் கற்பனை செய்வதைப்போல் கற்சிலைகளையோ, புண்ணிய நதிகள் என்ற பெயரில்

வழங்கப்படும் நதிநீர் நிலைகளையோ எண்ணிக் கொள்ளக்கூடாது. யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணருடைய வார்த்தைகளில் சொல்வதென்றால், இவற்றிற்கெல்லாம் எந்தவொரு நிலைத்தன்மையும் இல்லை. மேலும் அவர் கூறுகிறார்.

**இஷ்டான் போகான் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞ பாவிதா:**
**தைர்தத்தானப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ:(12)**

வேள்வியின் மூலமாக நன்கு பராமரிக்கப்படுகின்ற தேவதைகள் (தெய்வீகச் செல்வங்கள்) உங்களுக்கு **'இஷ்டான் போகான் ஹி தாஸ்யந்தே'**– இஷ்ட தெய்வம் அதாவது ஆராதனைக்குரிய தெய்வம் (ஸத்குரு – இறைவன்) தொடர்புடைய உயர் ஆன்மீக அனுபவங்களைத் தரும். இதைத்தவிர வேறொன்றும் இல்லை. **'தை: தத்தான்'** – அவர் (ஸத்குரு – இறைவன்) ஒருவர் மட்டுமே 'கொடுப்பவர்'. இஷ்ட தெய்வத்தை (ஸத்குரு –இறைவன்) அடைவதற்கு இதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை. இந்த தெய்வீகக் குணங்களை வளர்த்துக் கொள்ளாமலேயே, இந்நிலையை அனுபவிப்பவன் நிச்சயமாகவே திருடன் ஆவான். அந்த நிலையை அவன் அடையவே இல்லை எனும்போது அதை அவன் எப்படி அனுபவிப்பான்? ஆனால் கண்டிப்பாக அவன் 'நாங்கள் முழுமை அடைந்தவர்கள்; தத்துவ தரிசிகள்' என்று சொல்லத்தான் செய்கிறான். அவ்வாறு சுயதம்பட்டம் அடித்துக் கொள்பவன் இந்தப் பாதையில் தன்னுடைய முகத்தை மறைத்துக் கொண்டு, போலித்தனமான முகமூடியை அணிந்து திரிகிறான். அவன் நிச்சயமாகவே திருடன்தானே தவிர இறைநிலையை அடையப் பெற்றவன் இல்லை. சரி, அது இருக்கட்டும், இறைவனை அடைபவன் என்ன பெறுகிறான்?

**யஜ்ஞசிஷ்டாசின: ஸந்தோ முச்யந்தே ஸர்வ கில்பிஷை:**
**புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் (13)**

வேள்வியில் எஞ்சுகின்ற அன்னத்தை உண்கின்ற சாதுக்கள் எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுதலை அடைந்து விடுகின்றனர். தெய்வீகச் செல்வங்களைப் பெருக்கிக் கொண்டே சென்று, அதன் நல் விளைவாக இறைவனை அடைகின்ற காலமே வேள்வி முழுமையடைகின்ற காலமாகும். வேள்வி நிறைவடைந்த பிறகு, அதில் எஞ்சுகின்ற பிரம்மமே அன்னமாகும். இதையேதான் ஸ்ரீகிருஷ்ணர் வேறு விதமாகக் கூறுகிறார். – **'யஜ்ஞ சிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம்'** – 'வேள்வியானது எதைப் படைக்கிறதோ, அந்த அன்னத்தைப் பருகுபவனே பிரம்மத்தில் நிலைபெறுகிறான்.' இங்கேயோ அவர், 'வேள்வியில் எஞ்சுகின்ற அன்னத்தைப் **(ப்ரஹ்ம பீயுஷ்)** பருகுகின்றவன் எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுதலை பெற்று விடுகிறான்' என்கிறார். சாதுக்கள் என்னவோ விடுதலை பெற்று விடுகின்றனர். ஆனால் பாவிகளோ மோகத்தின் மூலமாக

உருவாக்கப்படுகின்ற இந்த உடல்களுக்காகவே ஜீரணிக்கப்படுகின்றனர். அவர்கள் பாவத்தையே உண்கிறார்கள். அவர்கள் இறை வழிபாட்டினைச் செய்தனர், இறை ஆராதனையைப் புரிந்து கொண்டனர், அதில் தீவிரமாகவும் ஈடுபட்டனர். ஆனால், அதற்குப் பதிலாக ஒரு இனிய ஆசையைத் தோற்றுவித்துக் கொண்டு **'ஆத்ம காரணாத்'–** உடலுக்காகவும், அந்த உடல்களை சார்ந்த உறவுகளுக்காகவும் ஏதேனும் கிடைக்குமா? என்றும் எதிர்பார்ப்புகளை வளர்த்துக் கொண்டனர். அவர்களுக்கு ஆசைப்பட்டது கிடைத்து விடலாம். ஆனால், அவற்றையெல்லாம் அனுபவித்தபிறகு, இறை ஆராதனையை எங்கிருந்து ஆரம்பித்தார்களோ, அதே இடத்திற்கு வந்து நிற்க வேண்டியிருக்கும். இதை விடப் பெரிய இழப்பு வேறென்னவாக இருக்க முடியும்? இந்த உடலே அழியக் கூடியது எனும்போது அதன் மூலமாக அனுபவிக்கப்படுகின்ற சுகபோகங்கள் எதுவரை துணை நிற்கும்? அவர்கள் இறை வழிபாட்டினை என்னவோ செய்கிறார்கள். ஆனால், பதிலுக்கு பாவத்தையே உண்கிறார்கள். **'பலடி ஸுதா தே ஸட் விஷ் லேஹீ' –** 'அமிர்தம் இருக்கையில் அவர்கள் விஷத்தை அருந்துகிறார்கள்.' அவர்கள் அழிவடைவதில்லை. ஆனால் வழிபாட்டில் முன்னேற மாட்டார்கள். எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர் பற்றற்ற உணர்வுடன் கர்மத்தைச் (வழிபாடு) செய்வதை வலியுறுத்துகிறார். இதுவரை ஸ்ரீகிருஷ்ணர், 'வேள்வியானது மிகவும் உயர்வான இறைநிலையைப் பெற்றுத்தருகிறது. மற்றும் வேள்வியின் உருவாக்கம் மஹாபுருஷர்கள் மூலமாக நடைறெுகிறது' என்பதையெல்லாம் கூறினார். ஆனால், அந்த மஹபுருஷர் குடிமக்களை (பிரஜைகள்) உருவாக்குவதில் ஈடுபடுவது ஏன்? இதுபற்றியும் கூறுகிறார்.

**அன்னாத் பவந்தி பூதானி பர்ஜன்யா தன்னஸம்பவ:**
**யஜ்ஞாத்பவதி பர்ஜன்யோ யஜ்ஞ: கர்மஸமுத்பவ: (14)**
**கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம்**
**தஸ்மாத்ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் (15)**

மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் இந்த அன்னத்தில் இருந்துதான் உற்பத்தியாகின்றன. **'அன்னம் ப்ரஹ்மேதி வ்யஜானாத்'** – **(தைத்திரீய உபநிஷதம் 2/1)** அன்னமே பரமாத்மா ஆகும். அந்த **(ப்ரஹ்ம பீயுஷ்)** பிரம்மாமிர்தத்தைக் குறிக்கோளாகக் கொண்டுதான் மனிதர்கள் வேள்வியில் தீவிரமாக ஈடுபடுகின்றனர். அன்னத்தின் உற்பத்தி மழையினால் உண்டாகிறது. மேகங்களால் பெய்கின்ற மழையினால் அல்ல. மாறாக இறைவனின் அருள் மழையினாலேயே ஆகும். முற்பிறவியில் சாதகனால் சேர்த்துவைக்கப்பட்டிருந்த வேள்வியின் பயன்களே, இப்பிறவியில் அவனுக்கு சாதனையானது எந்த இடத்தில் விடுபட்டிருந்ததோ அங்கிருந்து இறையருளாகப் பொழிகிறது. இன்றைய

வழிபாடானது நாளை அருள் வடிவமாக கிடைக்கிறது. ஆதலால், 'அருள் மழையானது வேள்வியின் மூலம் உண்டாகிறது' எனப்படுகிறது. தவிர எள், முதலான வித்துக்களை நெருப்பிலிட்டு எரிப்பதால் மழை பொழிகிறதென்றால் உலகிலுள்ள பெரும்பாலான பாலைவன பூமிகள் ஏன் தரிசாகவே கிடக்கிறது? அவையனைத்தும் பசுமையானதாகிவிடாதா என்ன? ஆகவே, 'அருள் மழையே வேள்வியின் பயன்' என்று அறிய வேண்டும். இந்த வேள்வியானது கர்மத்தின் மூலமே தோன்றுகிறது. அந்தக்கர்மத்தால் வேள்வியானது நிறைவு பெறுகிறது.

அந்தக் கர்மம் வேதத்தில் இருந்து உற்பத்தியாகிறது என்று அறிந்து கொள். வேதம் பிரம்மத்தில் நிலைபெற்ற மஹாபுருஷர்களின் திருவாக்குகள் ஆகும். எந்தத் தத்துவமானது வெளிப்படாமல் இருந்ததோ, அதனை நேரடியாக தரிசனம் செய்து அனுபூதியில் அறிந்து கொள்வதற்குப் பெயரே வேதம் ஆகுமே தவிர, ஏதோ கொஞ்சம் சுலோகங்கள் அடங்கிய நூல் திரட்டு அல்ல. 'வேதம் அழிவற்ற பரமாத்மாவில் இருந்து தோன்றுகிறது' என்று அறிந்து கொள். அவற்றை வெளிப்படுத்துவது என்னவோ மஹாத்மாக்கள்தான். ஆனால், அவர்கள் பரமாத்மாவுடன் ஒன்று கலந்து அவருடைய இயல்பை அடைந்து விட்டதால், அவர்கள் வாயிலாக அந்த அழிவற்ற பரமாத்மாவே பேசுகிறார். எனவேதான் வேதம் மனித சக்திக்கு (அபௌருஷேய) அப்பாற்ப்பட்டது எனப்படுகிறது. மஹாபுருஷர்கள் இந்த வேதத்தை எங்கிருந்து பெற்றார்கள்? என்று கேட்டால் வேதங்கள் அழிவற்ற பரமாத்மாவில் இருந்து உற்பத்தியாகிறது என்பதே பதிலாகும். அந்த மஹாபுருஷர்களோ பரமாத்மாவை ஒத்த இயல்பை அடைந்தவர்கள். அவர்கள் வெறும் இயந்திரமாகச் செயல்படுகின்றனர். எனவேதான் அவர்கள் மூலமாகப் பரமாத்மாவே பேசுகிறார். ஏனெனில், வேள்வியின் மூலமாகவே மனமானது முழுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு விடுகின்ற காலத்தில் அந்த பரமாத்மா தோன்றுகிறார். இதனால் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள மேலான, அழிவற்ற, பரமாத்மா எப்பொழுதும் வேள்வியிலேயே நிலைபெற்று இருக்கிறார். வேள்வியே அவரை அடைவதற்கான ஒரே வழியாகும். இதை மேலும் வலியுறுத்தியபடியே.

**ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்த்தயதீஹ ய :**
**அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி (16)**

பார்த்தனே! எவனொருவன் இந்த உலகத்தில் மனித உடலைப் பெற்ற பிறகும் இந்த முறையில் சுழன்று கொண்டிருக்கும் சாதனைச் சக்கரத்திற்கு ஏற்ப நடக்கவில்லையோ அதாவது தெய்வீகச் செல்வங்களைப் பெருக்குதல்; தெய்வீகக் குணங்கள் எனப்படும் தெய்வீகச் செல்வங்களை உயர்த்துதல்; மற்றும் ஒருவரைஒருவர் முன்னேற்றுவதன் மூலம் குறைவற்ற, அழிவற்ற இறைவனை அடைதல் – மேலும் இந்த வரிசைக் கிரமத்திற்கு ஏற்ப நடக்கவில்லையோ,

புலன்களின் இன்பங்களையே நாடுகின்ற, அவற்றின் ஓய்வையே விரும்புகின்ற அந்தப் பாவி மனிதன் வீணாகவே வாழ்கிறான்.

சகோதரர்களே! யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இரண்டாவது அத்தியாயத்தில் கர்மத்தின் பெயரை மட்டுமே உச்சரித்தார். மேலும் இந்த அத்தியாயத்திலோ, 'நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்!' என்று கூறினார். வேள்வியின் செயல் முறையே கர்மம் எனப்படுகிறது. இதைத் தவிர, செய்யப்படுகிற அனைத்துமே இதே உலகில் நம்மை பந்தப்படுத்துபவை ஆகும். 'எனவேதான் சேர்க்கை தோஷங்களில் இருந்து விலகி இருந்து கொண்டு, அந்த வேள்வியை முழுமையாக நிறைவேற்றி முடிப்பதற்காக இந்தக் கர்மத்தைக் கடைப்பிடி' என்று அவர் வேள்வியின் சிறப்புத் தன்மைகள்மீது விளக்கமளிக்கிறார். மேலும், வேள்வியானது பிரம்மத்தில் இருந்து உற்பத்தியாகிறது என்றும் கூறினார். குடிமக்கள் (பிரஜைகள்) அன்னத்தையே குறிக்கோளாகக் கொண்டு இந்த வேள்வியில் ஈடுபடுகிறார்கள். வேள்வியானது கர்மத்தில் இருந்தும், கர்மமானது மனித சக்திக்கு அப்பாற்பட்ட (அபௌருஷேயம்) வேதத்தில் இருந்தும் உற்பத்தியாகிறது. வேத மந்திரங்களைக் கண்டறிந்து வெளிப்படுத்துவது மஹாபுருஷர்கள்தாம். அவர்களுடைய தன் உணர்வு அழிந்து போய்விட்டது. இறைவனில் ஒன்றியவுடன் (முக்தி) அழிவற்ற பரமாத்மா மட்டுமே எஞ்சியிருக்கிறார். எனவேதான் வேதம் பரமாத்மாவில் இருந்து தோன்றுகிறது.

எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரமாத்மா வேள்வியில் முழுவதுமாக நிலைபெற்றுள்ளார். இந்தச் சாதனை சக்கரத்திற்கு ஏற்றவாறு எவர் நடக்கவில்லையோ, அந்தப் பாவி மனிதன் புலனின்ப சுகங்களை மட்டுமே நாடுபவன் ஆவான். அவன் வீணாகவே வாழ்கிறான். அதாவது வேள்வி என்பது, எதில் புலனின்ப நாட்டத்திற்கு இடமில்லையோ, மாறாக, குறைவற்ற, அழிவற்ற இறைஇன்பத்தை அளிப்பது எதுவோ அந்தச் சிறப்பான விதிமுறையே ஆகும். புலன்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு இதில் ஈடுபடுவதற்கே வழிவகை உள்ளது. புலன்களின் ஓய்வை நாடுபவன் பாவியாவான். இதுவரைக்கும் ஸ்ரீகிருஷ்ணர், வேள்வி என்றால் என்ன? என்பது பற்றி ஒன்றும் கூறவில்லை. மேலும் இந்த வேள்வியைச் செய்து கொண்டேதான் இருக்க வேண்டுமா? இதற்கு முடிவு என்ற ஒன்றும் உண்டா? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஸ்ச மானவ:**
**ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே (17)**

ஆனால், எவரொருவர் ஆன்மாவில் மட்டுமே திளைத்தவராக, ஆன்மாவில்

மட்டுமே திருப்தியுடையவராக மற்றும் ஆன்மாவில் மட்டுமே மகிழ்ச்சி அடைபவராக இருக்கிறாரோ, அத்தகையவருக்கு எந்தக் கடமையும் இருப்பதில்லை. இதுவே அடைய வேண்டிய இலட்சியமாக இருந்தது. எப்பொழுது புலன்களுக்கு அப்பாற்ப்பட்ட, என்றும் நிலையான, மாறாத, அழிவற்ற ஆன்ம தத்துவம் அடையப்பட்டு விட்டதோ, அதற்குமேல் எதைப் போய்த் தேடிக் கொண்டு இருப்பது? அத்தகைய மஹாபுருஷருக்கு கர்மம் செய்ய வேண்டிய அவசியமும் இருப்பதில்லை. இறைஆராதனையில் ஈடுபட வேண்டிய கட்டாயமும் கிடையாது. ஆன்மா மற்றும் பரமாத்மா ஆகிய இரண்டுமே சமமான அர்த்தத்தையே தருகின்றன. இதையே அவர் மறுபடியும் விவரிக்கிறார்.

**நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேனேஹ கஸ்சன**
**ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஸ்சிதர்த்தவ்யாபாச்ரய : (18)**

இந்த உலகில், அத்தகைய மஹாபுருஷருக்குக் கர்மம் செய்வதால் எந்த இலாபமும் கிடையாது. மேலும், கர்மம் செய்யாமல் இருப்பதால் எந்த நஷ்டமும் கிடையாது. ஆனால் இதற்கு முன்பு கர்மம் செய்ய வேண்டிய அவசியம் இருந்தது. அவருக்கு மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிடமும் சுயநலத்துடன் கூடிய எந்தவொரு தொடர்பும் இருப்பதில்லை. ஆன்மாவே என்றும் நிலையானது, என்றும் உள்ளது, புலன் உணர்வுகளைக் கடந்து விளங்குவது, மாற்றங்கள் இல்லாதது, மற்றும் அழிவற்றதுமாகும். எப்போது அந்த ஆன்மாவை அடைந்து விட்டாரோ, அதிலேயே திருப்தி உடையவராகவும், அதிலேயே மகிழ்ச்சி அடைபவராகவும், அதிலேயே ஆழ்ந்து நிலைபெற்றும்விடுகிறார். அதற்குமேல் வேறு ஒரு நிலை இல்லை எனும்போது எதைப் போய்த் தேடுவது? என்னதான் கிடைக்கும்? அந்த மஹாபுருஷருக்கு கர்மத்தைச் செய்யாமல் விட்டு விடுவதால் எந்தவொரு பாதிப்பும் இல்லை. ஏனெனில் நல்ல மற்றும் தீய எண்ணங்கள் (விகாரங்கள்) எங்கே பதிகின்றனவோ அந்தச் சித்தமே (மனம்) இல்லாமல் போய்விட்டது. அவருக்கு ஒட்டு மொத்த உயிரினங்கள், வெளி உலகம் மற்றும் அகத்தில் எழும் சங்கல்பங்களின் படலம் ஆகியவை அனைத்தும் கொஞ்சம்கூட அர்த்தமற்றவைகளாகிவிட்டன. பரமாத்மா ஒருவரே, மிகஉயர்ந்த பொருளாக இருந்தார். அவரே கிடைத்து விட்டபிறகு, பிறவற்றால் அவருக்கு என்ன பயன் இருக்க முடியும்?

**தஸ்மாதஸக்த : ஸததம் கார்யம் கர்ம ஸமாசர**
**அஸக்தோ ஹ்யாசரன்கர்ம பரமாப்னோதி பூருஷ : (19)**

இந்த நிலையை அடைவதற்காக நீ பற்றுகள் அனைத்தும் நீங்கியவனாகி நிரந்தரமாக **'கார்யம் கர்ம'** செய்யத் தகுந்த கர்மத்தை நல்லமுறையில் செய்.

ஏனெனில், பற்றற்றவனே கர்மத்தைச் செய்து பரமாத்மாவை அடைகிறான். 'நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம்' 'செய்யத் தகுந்த கர்மம்' இரண்டும் ஒன்றுதான். கர்மத்தை செய்வதற்குத் தூண்டுணர்வைத் தந்தபடியே அவர் மறுபடியும் கூறுகிறார்.

**கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்த்திதா ஜனகாதய:**
**லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யன்கர்த்துமர்ஹஸி (20)**

ஜனகர் என்றால் ராஜா ஜனகர் இல்லை. பிறப்பு (ஜன்மம்) அளிப்பவரே ஜனகர் ஆவார். யோகமே ஜனகர் என்பதாகும். அதுவே உங்களுடைய உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தை பிறப்பிக்கிறது, அதனை வெளிப்படுத்துகிறது. யோகம் கைகூடப் பெற்ற ஒவ்வொரு மஹாபுருஷருமே ஜனகர் ஆவார். அவ்வாறு யோகம் கைகூடப்பெற்ற எத்தனையோ ரிஷிகள் **'ஜனகாதய:'**– ஜனகர் முதலான ஞானியர் பெருமக்களாகிய மஹாபுருஷர்களும் **'கர்மணா ஏவ ஹி ஸம்ஸித்திம்'** கர்மங்களின் மூலமாகவே மேலான வெற்றி எனப்படும் பரம சித்தியை அடைந்துள்ளனர். பரமசித்தி என்றால் பரம தத்துவமாகிய பரமாத்மாவை அடைதல் என்று பொருள், ஜனகர் முதலான, பண்டைக் காலத்தில் தோன்றிய மஹரிஷிகள் அனைவருமே வேள்வியின் செயல்முறை எனப்படுகின்ற இந்தச் செய்யத் தகுந்த கர்மத்தைச் செய்து, அதன் மூலமாகத்தான் **'ஸம்ஸித்திம்'** வீடு பேற்றை அடைந்துள்ளனர். ஆனால் இறைவனை தரிசித்து முக்தி அடைந்தபிறகு அவர்களும் கூட பின்வரும் சமுதாயத்தினரின் நலனைக் கருத்தில் கொண்டு கர்மத்தைத் தொடர்ந்து செய்கின்றனர். எனவே நீயும் இறைவனை தரிசித்து முக்தி அடைவதற்கும் அவ்வாறு முக்தி அடைந்தபிறகு உலக நாயகனாக உருவாவதற்கும் இந்தச் செய்வதற்குரிய கர்மத்தைச் செய்யும் தகுதியுடையவனாவாய். ஏன்?

இப்போதுதான் ஸ்ரீகிருஷ்ணர், "இறைவனை தரிசித்து முக்தியடைந்தபிறகு, மஹாபுருஷருக்கு கர்மம் செய்வதால் எந்தவொரு இலாபமும் இல்லை, மற்றும் கர்மம் செய்யாமல் விட்டுவிடுவதால் எந்தவொரு நஷ்டமும் இல்லை. அப்படி இருந்தபிறகும்கூட பின்வரும் சமுதாயத்தினரின் நலனைக்கருதியும் உலக நன்மை ஆகியவற்றை உருவாக்குவதற்காகவும் நல்லமுறையில் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை தொடர்ந்து அனுசரிக்கிறார்" என்று கூறியிருந்தார்.

**யத்யதாசரதி ஸ்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜன:**
**ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவர்த்ததே (21)**

மனிதருள் சிறந்த மஹாபுருஷர்கள் எவற்றையெல்லாம் கடைப்பிடித்து

வருகிறார்களோ, மற்றவர்களும் அவற்றையே பின்பற்றுகின்றனர். அந்த மஹாபுருஷர் எவற்றையெல்லாம் சான்றாக எடுத்துரைக்கிறாரோ, உலகம் அவற்றையே ஏற்று நடக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணர் முதலில் ஆன்ம வடிவத்தில் நிலைபெற்ற, ஆன்மாவில் மட்டுமே திருப்தி காண்கின்ற மஹாபுருஷருடைய வாழ்வியலைப் பற்றித் தெளிவுபடுத்தினார். அவரைப் பொறுத்தவரையில் கர்மத்தைச் செய்வதால் எந்தவொரு இலாபமும் இல்லை. கர்மத்தைச் செய்யாமல் இருப்பதால் எந்தவொரு நஷ்டமும் இல்லை. அதற்குப் பிறகும்கூட ஜனகர் முதலாகிய மகாபுருஷர்களும் கர்மத்தில் நல்லவிதமாக ஈடுபட்டு வந்தனர். இங்கே அந்த மஹாபுருஷர்களுடன் ஸ்ரீகிருஷ்ணரும் மெதுவாகத் தம்மையும் ஒப்பிட்டு, 'தானும் ஒரு மஹாபுருஷர் என்று அறிவிக்கிறார்.

**ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன**
**நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி (22)**

பார்த்தனே! எனக்கு இந்த மூன்று உலகங்களிலும் எந்தவொரு கடமையும் இல்லை. 'அந்த மஹாபுருஷருக்கு மனிதர் உட்பட ஒட்டு மொத்த ஜீவராசிகள் எதனிடமும் எந்தவொரு கடமையும் கிடையாது' என்று ஏற்கனவே சொல்லப்பட்டு உள்ளது. இங்கேயோ அவர், "மூன்று உலகங்களிலும் எனக்கென்று செய்வதற்குரிய எந்தவொரு கடமையும் எஞ்சியிருக்கவில்லை. மேலும், சிறிதளவுகூட அடைவதற்குத் தகுதியுடைய எந்தவொரு பொருளும் எனக்குக் கிடைக்காமல் இல்லை. அப்படி இருந்தும்கூட நான் மிகவும் நல்லமுறையில் கர்மத்தைச் செய்து கொண்டிருக்கிறேன் ஏன் தெரியுமா?" என்கிறார்.

**யதிஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித :**
**மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வஷ : (23)**

ஏனெனில் ஒருவேளை நான் மட்டும் கவனமாக இருந்து கொண்டு கர்மத்தைச் செய்யவில்லை என்றால் மற்றவர்களும் என்னைப் பின்பற்றிக் கர்மத்தைச் செய்யாமல் இருந்து விடுவார்கள். உங்களைப் பின்பற்றி நடப்பது கூடத் தவறா என்ன? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, "ஆம்! தவறுதான்!" என்கிறார்.

**உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம்**
**ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹன்யாமிமா: ப்ரஜா: (24)**

ஒருவேளை நான் மட்டும் கவனத்துடன் இந்தக் கர்மத்தைச் செய்யவில்லையென்றால் இந்த உலகமே நெறிதவறிப் போய்விடும். மேலும் நான்

**'ஸங்கரஸ்ய'** வர்ணக்கலப்பு உண்டாகக் காரணமாகிவிடுவேன். மேலும் அனைத்துக் குடிமக்களையும் (பிரஜைகள்) அழிக்கின்றவனாக, கொல்பவனாகிவிடுவேன்.

ஆன்ம வடிவத்தில் நிலைபெற்ற மஹாபுருஷர் மட்டும் எச்சரிக்கை உணர்வுடன் இருந்து கொண்டு ஒருவேளை இறை ஆராதனையில் தொடர்ந்து ஈடுபடவில்லையென்றால் மக்கள் சமுதாயமும் அவரைப் பின்பற்றி கர்மத்தைச் செய்யாமல் நெறி தவறிப் போய்விடுவார்கள். மஹாபுருஷரோ இறை ஆராதனையை முழுமையாக நிறைவேற்றிய பிறகுதான் **பரம நைஷ் கர்ம்யம்** என்ற மகத்தான, உயர் நிலையை அடைந்துள்ளார். அவர் கர்மத்தைச் செய்யவில்லை என்றாலும்கூட அதனால் அவருக்கு எந்தவொரு பாதிப்பும் இல்லை. ஆனால், மக்கள் சமுதாயமோ இன்னும் ஆராதனையை ஆரம்பிக்கவே இல்லை. தம்மைப் பின்பற்றுபவர்களை ஆன்மீகப் பாதையில் வழிநடத்துவதற்காகவே அந்த மஹாபுருஷர் கர்மத்தைச் செய்கிறார். நானும் செய்கிறேன் என்கிறார். அதாவது, ஸ்ரீகிருஷ்ணரும் ஒரு மஹாபுருஷரே தவிர வைகுண்டத்தில் இருந்து இறங்கி வந்த ஏதோவொரு குறிப்பிட்ட பகவான் இல்லை. "மஹாபுருஷர் பின்வரும் மக்களின் நன்மைகளைக் கருதியும் அவர்களை தர்மத்தின் பாதையில் செலுத்துவதற்காகவும் கர்மத்தைச் செய்கிறார். நானும் செய்கிறேன். ஒருவேளை நான் கர்மத்தைச் செய்யவில்லை என்றால் மக்கள் (வழிதவறி) நஷ்டமடைந்து போய்விடுவார்கள். எல்லோரும் கர்மத்தைச் செய்யாமல் கைவிட்டு விடுவார்கள்" என்கிறார் அவர்.

மனம் மிகவும் அலைபாயும் தன்மை உடையது. அது இறைவழிபாட்டினைத் தவிர, மற்ற அனைத்தையும் விரும்புகிறது. ஒருவேளை ஆன்ம வடிவத்தில் நிலைபெற்ற மஹாபுருஷர் கர்மம் செய்யவில்லையென்றால், அவரைப் பார்த்து மற்றவர்களும் உடனே செய்து கொண்டிருக்கும் கர்மத்தைக் கைவிட்டுவிடுவார்கள். அவர்கள் மஹாபுருஷர்களைச் சுட்டிக் காட்டி, 'இவர்களும் இறைவழிபாடு செய்வதில்லை. வெற்றிலை போடுகிறார்கள். வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொள்கிறார்கள். உலகியல் விஷயங்களைப் பேசுகிறார்கள். அப்படி இருந்த பிறகும்கூட மஹாபுருஷர்கள் என்றே அழைக்கப்படுகின்றனர்' என்றெல்லாம் சொல்வதற்கு வாய்ப்பளிப்பது போலாகிவிடும். அவர்கள் இவ்வாறு எண்ணிக் கொண்டு இறைஆராதனையில் இருந்து விலகிப் போய்விடுவார்கள், நெறி தவறி விடுவார்கள். இதையேதான் ஸ்ரீகிருஷ்ணரும், "ஒருவேளை நான் கர்மம் செய்யவில்லையென்றால், எவ்லோருமே நெறிபிறழ்ந்து போய்விடுவர், மேலும் நான் வர்ணக்கலப்பு (நெறி தவறுதல்) உருவாகக் காரணமாகி விடுவேன்" என்று கூறுகிறார்.

பெண்கள் களங்கப்படுவதால்தான் வர்ணக்கலப்பு ஏற்படும் என்றே

பார்த்தும் கேட்டும் இருக்கிறோம். அர்ஜுனனும் கூட ‘பெண்கள் களங்கப்பட்டுவிடுவதால்! வர்ணக்கலப்பு ஏற்பட்டு விடுமே! என்ற பயத்தினால்தான் மனக்குழப்பம் அடைந்திருந்தான். ஆனால் ஸ்ரீகிருஷ்ணரோ, “ஒருவேளை நான் கவனத்துடன் இறைஆராதனையில் ஈடுபடவில்லை என்றால்தான் வர்ணக் கலப்பு ஏற்படக் காரணமாகி விடுவேன்” என்கிறார். உண்மையில், ஆன்மாவின் தூய்மையான வர்ணமே பரமாத்மா ஆகும். தன்னுடைய உண்மை இயல்பாகிய, என்றும் நிலையான, மாறாத ஆன்ம வடிவத்தின் பாதையிலிருந்து வழிதவறிப் போய் விடுவதையே வர்ணக்கலப்பு (வர்ணசங்கரம்) என்கிறோம். ஒருவேளை ஆன்ம வடிவத்தில் நிலைபெற்ற மஹாபுருஷர் ஆன்மக் கிரியையைக் கடைப்பிடித்து வரவில்லையென்றால் மற்றவர்களும் அவரைப் பின்பற்றி ஆன்மக் கிரியையைக் கைவிட்டு விட்டு ஆன்மீகப் பாதையில் இருந்து வழிதவறிப் போய்விடுவார்கள், வர்ணக் கலப்பு உண்டாகிவிடும். அவர்கள் இயற்கை அல்லது படைப்பின் பக்கமாக இழுத்துச் செல்லப்பட்டுக் காணாமல் போய்விடுவார்கள்.

பெண்களின் கற்புடைமை மற்றும் வம்ச விருத்தியின் பரிசுத்தம் என்பதெல்லாம் ஒரு சமுதாய ஒழுங்குமுறைகளாகும், அவையெல்லாம் உலகியல் தொடர்பான அதிகாரங்கள் பற்றிய கேள்விக்குறிகளாகும். சமுதாயத்திற்கு அவற்றின் உபயோகம் இருக்கவே செய்கிறது. ஆனால் தாயோ, தந்தையோ ஒழுக்கம் தவறுவதற்கும் அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் ஆன்மீக சாதனையில் முன்னேறிச் செல்வதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. **‘ஆபன் கரனி பார் உதரனீ’** (அவனவன் சுயமுயற்சியால் சம்சாரக் கடலைக் கடந்து கரையேற வேண்டும்).

**அனுமான், வியாஸர், வசிஷ்டர், நாரதர், சுக தேவர், கபீர், இயேசு கிறிஸ்து** முதலானோர் சிறந்ததொரு மஹாபுருஷர்களாகத் திகழ்ந்தனர். ஆனால் சமுதாயத்தின் நெறிமுறைக்கும் இவர்களுக்கும் எந்தவொரு தொடர்புமில்லை. ஆன்மாவானது முந்தைய பிறவிகளில் பெற்ற குணதர்மங்களைச் சுமந்து கொண்டு வருகிறது. ஸ்ரீ கிருஷ்ணர் இதையே, **‘மன ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி** (15/7)’ – என்று கூறுகிறார். மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களின் வாயிலாக எந்தக் காரியமானது இந்தப் பிறவியில் நிகழ்த்தப்பட்டதோ, அவற்றால் உண்டான வினைகளை சுமந்து கொண்டு ஜீவாத்மாவானது பழைய உடலைத் துறந்து விட்டுப் புதிய உடலுக்குள் நுழைந்து விடுகிறது. இதில் பெற்றோர்களின் பங்கு என்ன இருக்கிறது? அவர்களுடைய பராமரிப்பில் வளர்வதால் மட்டுமே பெரிய வேறுபாடு ஒன்றும் உண்டாவதில்லை. ஆகவே, பெண்கள் கெட்டுப் போவதால் ஒன்றும் வர்ணக்கலப்பு உண்டாவதில்லை.

பெண்கள் கெட்டுப் போவதற்கும் வர்ணக்கலப்பு உண்டாவதற்கும் எந்தவொரு தொடர்பும் இல்லை. ஆன்ம வடிவத்தை நோக்கித் தீவிரமாக முன்னேறிச் செல்லாமல் இயற்கை அல்லது படைப்பின் பக்கமாக உலகின் இன்ப துன்பங்களிலேயே சிதறிப் போவதையே வர்ணக்கலப்பு என்கிறோம்.

ஒருவேளை மஹாபுருஷர் எச்சரிக்கையுடன் இருந்து கொண்டு நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மமாகிய ஆன்மக் கிரியையைச் செய்து கொண்டு, மற்றவர்களையும் செய்ய வைக்காமல் இருப்பாரேயானால் மொத்தக் குடிமக்களையும் (பிரஜைகள்) அழிப்பவராகவும் கொல்பவராகவும் ஆகிவிடுகிறார். சாதனைக் கிரமத்தில் சென்று அந்த அழிவற்ற மூலப் பொருளை அடைவதே வாழ்க்கையாகும். மேலும், இயற்கை அல்லது படைப்பில் சிதறிப்போவதும், வழிதவறி உழலுவதுமே மரணமாகும். ஆனால் அந்த மஹாபுருஷர் இந்த எல்லாக் குடிமக்களையும் (பிரஜைகள்) ஒருவேளை செயல்முறை வழியில் வழிநடத்திச் செல்லவில்லை என்றால், அவர்களையெல்லாம் சிதறிப் போவதிலிருந்து தடுத்து உண்மை வழியில் அழைத்துச் செல்லவில்லை என்றால், அவர் அந்தக் குடிமக்களை எல்லாம் வதைப்பவராகவும் கொல்பவராகவும் ஆகிவிடுகிறார். மேலும், படிப்படியாகஆன்மீக சாதனையை முறைதவறாமல் தாமும் செய்து கொண்டு, மற்றவர்களையும் அதில் ஈடுபடுத்திக் கொண்டிருப்பவரே தூய்மையான அஹிம்ஸாவாதி ஆவார். கீதையின் பிரகாரம், உடலின் அழிவு, அழியும் பொருட்களின் உலகியல் மாற்றங்கள் யாவும் வெறும் உருமாற்றம் மட்டுமே தவிர, ஹிம்ஸை இல்லை.

**ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத**
**குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஸ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம் (25)**

ஹே பாரதா! கர்மத்தில் பற்றுடைய அஞ்ஞானிகள் எவ்வாறு கர்மம் செய்கின்றனரோ, அவ்வாறே பற்றற்ற அறிவாளிகளும் (வித்வான்) பூரண ஞானிகளும் உலக மக்களின் இதயத்தில் ஆன்மீகத் தூண்டுணர்வை ஏற்படுத்தி நன்மைகளைப் பெருக்கும் விருப்பத்துடன் அக்கர்மத்தைச் செய்ய வேண்டும். வேள்வியின் விதிமுறையை அறிந்த பிறகும், அவற்றைச் செய்து கொண்டிருக்கும் போதும்கூட நாமென்னவோ அஞ்ஞானிகள்தான். 'ஞானம்' என்பதற்கு அர்த்தம் என்னவென்றால் 'இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிதல் என்பதாகும். எதுவரை இம்மியளவு கூட நாம் தனி; ஆராதனைக்குரிய தெய்வம் (ஸத்குரு—இறைவன்) தனி என்ற நிலை உள்ளதோ, அதுவரை அஞ்ஞானம் உயிருடன் உள்ளது. எதுவரை அஞ்ஞானம் உள்ளதோ, அதுவரை கர்மத்தில் பற்றும் இருக்கிறது. அஞ்ஞானி எத்தனைப் பற்றுடன் ஆராதனையில் ஈடுபடுகிறானோ, அதேயளவு பற்றறுத்த ஞானியும் ஆராதனையில் ஈடுபடவேண்டும். எவருக்குக்

கர்மங்களால் எந்தவொரு பயனும் இல்லையோ, அவருக்குக் கர்மத்தின்மீது எப்படிப் பற்றுதல் உண்டாகும்? அத்தகைய பூரண ஞானியாகிய மஹாபுருஷரும் உலக நன்மையை கருதி அவர்களைப் போலவே கர்மத்தைச் செய்ய வேண்டும். அவர்கள் உள்ளத்தில் தெய்வீகச் செல்வங்களைப் பெருக்க வேண்டும். அதன் மூலம் சமுதாயம் அந்தப் பாதையில் செல்ல முடியும்.

**ந புத்திபேதம் ஜனயேதஜ்ஞானம் கர்மஸங்கினாம்**
**ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வான்யுக்த: ஸமாசரன்(26)**

ஞானிகளான மஹாபுருஷர்கள் கர்மத்தில் பற்றுடைய அஞ்ஞானிகளின் புத்தியில் பிரமையை ஏற்படுத்தக் கூடாது, அதாவது, ஆன்ம வடிவத்தில் நிலைத்த மஹாபுருஷர், தம்மைப் பின்பற்றுவர்களின் மனத்தில் எந்தவிதத்திலும் கர்மத்தின் மீது அவநம்பிக்கை ஏற்பட்டு விடாமல் கவனமாகப் பார்த்து நடந்து கொள்ள வேண்டும். பரமாத்ம தத்துவத்தில் ஒன்றிணைந்துவிட்ட மஹாபுருஷர் தாமும் முன்நின்று நல்லமுறையில் நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்து கொண்டே மற்றவர்களையும் செய்விக்கவேண்டும்.

இந்த காரணத்தினால்தான் 'பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ்' அவர்கள் வயதான காலத்திலும்கூட இரவில் இரண்டு மணியளவில் எழுந்து உட்கார்ந்து கொள்வார். அவர் மெதுவான குரலில் இருமிக் கொண்டே சரியாக மூன்று மணிக்கு," எழுந்திருங்கள்! மண்பொம்மைகளே!" என்று அங்கே படுத்து உறங்கிக் கொண்டிருப்பவர்களைப் பார்த்துக் குரல் கொடுப்பார். அனைவரும் எழுந்து உட்கார்ந்து ஆன்மீகச் சிந்தனையில் ஈடுபடத் தொடங்கியபிறகு, சிறிதுநேரம் கழித்துக் கொஞ்சம் ஓய்வெடுப்பதற்காகக் கால்களை நீட்டிப் படுத்துக் கொள்வார். இன்னும் கொஞ்சநேரம் கழித்து மீண்டும் எழுந்து உட்கார்ந்து விடுவார். அவர் தமக்கு முன்னால் இறைவழிபாட்டில் அமர்ந்திருப்பவர்களைப் பார்த்து, "நீங்கள் எல்லாம் மஹாராஜ் அவர்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார் என்றா நினைக்கிறீர்கள்? ஆனால் நான் உறங்கவில்லை. நான் சுவாசத்தில் நிலைத்திருக்கிறேன். வயதான உடம்பு என்பதால் உட்காருவதற்குக் கஷ்டப்படுகிறது. எனவேதான் கொஞ்சம் படுத்துக் கொள்கிறேன். ஆனால் நீங்கள் எல்லாம் நேராக நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு ஆன்ம சிந்தனையில் (தியானம்) ஈடுபடவேண்டும். எதுவரைக்கும் எண்ணெய் ஒழுக்கினைப் போன்று சுவாசத்தில் மனமானது ஒன்றி, தொடர்ச்சி அறுந்து போகாமல், மற்ற சங்கல்பங்கள் எதுவும் நடுவில் நுழைந்து இடையூறு செய்யாமல் இருக்கிறதோ, அதுவரைக்கும் விழிப்புடன் இருந்து கொண்டு ஆன்ம சிந்தனையைப் பழக வேண்டும். இதுவே சாதகனின் அறநெறியாகும் (தர்மமாகும்). என்னுடைய சுவாசமோ மூங்கிலைப் போன்று உறுதியுடன் நிற்கிறது" என்பார். இந்த காரணத்தினால்தான் தம்மைப்

பின்பற்றுபவர்களைக் கர்மத்தில் ஈடுபடுத்துவதற்காக அந்த மஹாபுருஷரும் மிகவும் நல்ல முறையில் கர்மத்தைச் செய்து வருகிறார். **'ஜிஸ் குண் கோ ஸிகாவை, உஸே கர்கே திகாவை'** – (எந்த குணத்தைப் போதிக்கிறாயோ அதை நீ முதலில் செய்து காட்டு).

இம்முறையில் ஆன்ம வடிவத்தில் நிலைபெற்ற மஹாபுருஷரும் கூட தாமும் முன்னின்று கர்மத்தைச் செய்து கொண்டே, சாதகர்களையும் இறை ஆராதனையில் ஈடுபடுத்த வேண்டும். சாதகரும் நம்பிக்கைப் பூர்வமாக இறை ஆராதனையில் ஈடுபட வேண்டும். ஆனால், ஞான யோகியாக இருந்தாலும் சரி, சமர்ப்பண உணர்வுடன்கூடிய (பற்றற்ற) நிஷ்காமகர்ம யோகியாக இருந்தாலும் சரி, சாதகனுக்குத் தனது ஆன்மீக சாதனையைப் பற்றிய அகங்காரம் மட்டும் வரவே கூடாது. கர்மம் யார் மூலமாக நிகழ்கிறது? அது நிகழ்வதற்கு யார் காரணம்? – இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் விளக்குகிறார்.

**ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வஷ:**
**அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மன்யதே (27)**

ஆரம்பத்தில் இருந்து முடிவுவரை கர்மமானது இயற்கையின் குணங்களின் மூலமாகவே நிகழ்த்தப்படுகிறது. அப்படி இருந்தும்கூட அகங்காரத்தால் ஆட்கொள்ளப்பட்ட மஹாமூடர்கள், "நானே செய்கிறேன்" என்று எண்ணிக் கொள்கின்றனர். இறை ஆராதனை இயற்கையிலிருந்து தோன்றிய குணங்களின் மூலமாகவே நடைபெறுகிறது என்பதை எப்படி ஏற்றுக் கொள்வது? யாரேனும் அவ்வாறு பார்த்திருக்கிறார்களா? – இதுபற்றிக் கூறுகிறார்.

**தத்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ:**
**குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே (28)**

பெருந்தோள்களை உடையவனே! மஹாபாஹோ! குணம் மற்றும் கர்மம் ஆகியவற்றின் பிரிவுகளை **'தத்வவித்'**– பரம தத்துவமாகிய பரமாத்மாவை அறிந்தவர்களான மஹாபுருஷர்கள் கண்டறிந்துள்ளனர். மேலும், அவர்கள் எல்லாக் குணங்களும் குணங்களிலேயே செயல்படுகின்றன என்பதை அறிந்து கொண்டு குணம் மற்றும் கர்மங்களின் கர்த்தா நாம்தான் என்று பற்றுக் கொள்வதில்லை.

இங்கே 'தத்துவம்' என்பதற்குப் பரம தத்துவமாகிய பரமாத்மா என்று பொருளே தவிர, உலகம் எண்ணிக் கொண்டிருப்பதைப்போல் ஐந்து அல்லது இருபத்தைந்து தத்துவங்கள் என்பதல்ல. யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளின் பிரகாரம் சொல்வதென்றால், 'பரமாத்மா ஒருவரே உள்ளதொரு தத்துவம்' ஆவார். வேறு எந்தவொரு தத்துவமும் இல்லை. குணங்களைக்

கடந்து சென்ற, பரமதத்துவ பரமாத்மாவில் நிலைபெற்ற, மஹாபுருஷர் மட்டுமே குணங்களுக்கு ஏற்பக் கர்மங்களில் உள்ள பிரிவுகளைக் காண முடியும். தாமஸ குணம் இருந்தால் அதற்கேற்பவே காரியம் நிகழும் – சோம்பேறித்தனம், உறக்கம், கவனக் குறைவு, கர்மத்தில் ஈடுபட இயலாத சுபாவம் இருக்கும். ராஜஸ குணம் இருந்தாலோ, இறை ஆராதனையில் இருந்து பின்வாங்க நினைக்காத சுபாவம், வீரம், தலைமையுணர்வுடன் கூடிய கர்மம் நிகழும். மேலும் சாத்வீக குணம் செயல்படும் நிலையில் இருந்தாலோ, தியானம், ஸமாதி, ஆன்மீக அனுபவங்கள் பெறுதல், தங்கு தடையின்றி தொடர்ந்து நிகழும் ஆன்மீகச் சிந்தனை, எளிமையுணர்வு ஆகியவை சுபாவத்தில் இருக்கும். குணம் மாறும் இயல்புடையது, இறைவனை நேரடியாக தரிசனம் செய்த ஞானியே, 'குணங்களைப் பொறுத்தே கர்மம் நிகழ்வது அதிகரிக்கவும் குறையவும் செய்கிறது' என்பதைப் பார்க்க முடியும். குணம் தன்னுடைய காரியத்தைச் செய்து கொள்கிறது. அதாவது, 'குணம் குணங்களிலேயே செயல்படுகின்றன' – என்பதை நன்கு அறிந்து கொண்டு, அந்த இறைவனை நேரடியாக தரிசனம் செய்த மஹாபுருஷர் கர்மத்தில் பற்றுக் கொள்வதில்லை. ஆனால், குணங்களை இன்னும் கடக்காத, ஆன்மீகப் பாதையில் பாதிவரை சென்று கொண்டிருக்கும் சாதகனுக்குக் கர்மத்தில் பற்று இருக்க வேண்டும். ஆகவே

**ப்ரக்ருதேர் குணஸம்மூடா : ஸஜ்ஜந்தே குணகர்மஸு**
**தானக்ருத்ஸ்னவிதோ மந்தான் க்ருத்ஸ்னவின்ன விசாலயேத் (29)**

இயற்கையின் அதாவது சுபாவத்தின் குணங்களால் மோகவசப்பட்டிருக்கும் மனிதர்கள் குணம் மற்றும் கர்மங்களில் படிப்படியாக, நிர்மலமான தூய்மையான குணங்களின் மேன்மையைக் கண்டு அவற்றில் பற்றுக் கொள்கின்றனர். அந்த, இன்னும் நல்லமுறையில் புரிந்து கொள்ளாத, **'மந்தான்'** – குறைவான முயற்சியுடையவனை, நல்லமுறையில் அறிந்து கொண்டுள்ள ஞானி மனச் சஞ்சலத்திற்கு ஆளாக்கிவிடக் கூடாது. அவனை மனம் தளரும்படிச் செய்யக்கூடாது, மாறாக, அவனை உற்சாகப்படுத்த வேண்டும். ஏனெனில், கர்மத்தைச் செய்து கொண்டே போய்த்தான் அவன் மேலான 'பரமநைஷ்கர்ம்யம்' (கர்மம் விடுபட்ட நிலை) நிலையினை அடைய முடியும். தன்னுடைய சக்தி மற்றும் நிலைப்பாட்டினை நன்றாக ஆராய்ந்து கொண்டு, கர்மத்தில் முன்னேற வேண்டிய, ஞானமார்க்கத்தைப் பின்பற்றுகின்ற சாதகர்கள், 'கர்மம் நிகழ்வது குணத்தினால்தான் என்பதை அறிந்து கொண்டு, தன்னைக் கர்த்தா என்று எண்ணிக்கொண்டு ஆணவம் கொள்ளாமல், நிர்மலமான தூய்மையான குணங்கள் கிடைத்தபிறகும்கூட அவற்றில் பற்று வைத்துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.' ஆனால் (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகிக்கு கர்மம் மற்றும்

குணங்கள் ஆகியவற்றையெல்லாம் அலசி ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. அவனைப் பொறுத்தவரையில் சமர்ப்பண உணர்வுடன் இணைந்து கர்மத்தைச் செய்து கொண்டே போக வேண்டும், அவ்வளவுதான். எந்தக் குணம் வருகின்றது? எந்தக் குணம் போகின்றது என்பதையெல்லாம் கண்காணித்துக் கொள்வது இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு—இறைவன்) பொறுப்பாகி விடுகிறது. குணங்களின் மாற்றம் மற்றும் படிப்படியாக அவற்றின் உயர்வு ஆகியவை எல்லாம் அவனைப் பொறுத்தவரையில் இஷ்டதெய்வத்தின் (ஸத்குரு, இறைவன்) திருக்கொடையாக, வரமாகவே ஏற்றுக் கொள்கிறான். மேலும் கர்மம் நிகழ்வதற்கும் அவரே காரணம் என்றும் ஏற்றுக் கொள்கிறான். அவன் தொடர்ந்து எந்நேரமும் கர்மத்தில் ஈடுபட்டிருந்தும் கூட, கர்த்தா நாம்தான் என்று தலைதூக்கும் ஆணவத்தைப் பற்றியோ அல்லது குணங்களில் பற்று உண்டாகி விடுமோ என்று கவலைப்பட வேண்டிய அவசியமோ அவனுக்குக் கிடையாது. இவ்வாறிருக்க அத்துடன் சேர்த்து யுத்தத்தின் முழுவடிவத்தையும் ஸ்ரீகிருஷ்ணர் விளக்கிக் கூறுகிறார்.

**மயி ஸர்வாணி கர்மாணி ஸன்யஸ்யாத்யாத்மசேதஸா**
**நிராசீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: (30)**

ஆகவே, அர்ஜுனா! நீ **'அத்யாத்ம சேதஸா'**— அந்தராத்மாவில் சித்தத்தைக் கட்டுப்படுத்தி, தியானத்தில் அமர்ந்து, எல்லாக் கர்மங்களையும் என்னிடமே சமர்ப்பணம் செய்து, ஆசைகள் அற்றவனாக, 'நான்' எனது என்ற பற்று இல்லாதவனாக, மனவேதனையற்று யுத்தம் செய். சித்தமானது எப்பொழுது தியானத்தில் நிலைபெற்று விட்டதோ, சிறிதளவுகூட எதன்மீதும் ஆசையும் இல்லையோ, கர்மத்தில் மமத்துவம் அதாவது 'நானே செய்பவன்! என்ற எண்ணம் இல்லையோ, தோல்வியை நினைத்துக் கலக்கமும் இல்லையோ, அத்தகையவன் எவ்வாறான யுத்தத்தைச் செய்வான்? மேலும் எல்லாப் பக்கங்களில் இருந்தும் சித்தத்தை ஒன்று திரட்டி, இதய தேசத்தில் அதனைக் கட்டுப்படுத்திக் கொண்டே செல்கின்ற அவன் எதற்காகச் சண்டை போடுவான்? எவருடன் சண்டை போடுவான்? மேலும், அங்கே அவனைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்? உண்மையில், எப்போது நீங்கள் தியானத்தில் நுழைய முயற்சிக்கிறீர்களோ, அப்போதுதான் யுத்தத்தின் முழுஉருவமும் உங்கள் முன்னால் வந்து நிற்கும். அப்போதுதான் காமம்—கோபம், விருப்பு—வெறுப்பு, ஆசை—வேட்கை முதலான புலன் நுகர்வு எண்ணங்களின் சமூகம், **'குரு'** எனப்படும் முரண்பாடான எண்ணவோட்டங்கள் அதாவது பொருள் நுகர்வு ஆசைகள் மனத்தில் தோன்றி உலகியல் விஷயங்களை நோக்கி நமது மனத்தை இழுத்துச் சென்று கொண்டே இருக்கும் ஆராதனையில் தடையை ஏற்படுத்தும் எண்ணத்துடன் பயங்கரமாக நம்மைச் சூழ்ந்து கொண்டு தாக்குதல் தொடுக்கும். இவற்றையெல்லாம் வென்று,

கடந்து செல்வதையே 'யுத்தம்' என்கிறோம். அவற்றையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக அழித்துக் கொண்டே சென்று, அந்தராத்மாவில் அவற்றை ஒன்று கலந்து மறையச் செய்து கொண்டே போய், தியானத்தில் முன்னேறிச் செல்வதே உண்மையான யுத்தம் (யதார்த்தமான) ஆகும். இதையே மீண்டும் வலியுறுத்தும் வகையில்

**யே மே மதமிதம் நித்யமனுதிஷ்ட்டந்தி மானவா:**
**ஸ்ரத்தாவந்தோனஸூயந்தோ முச்யந்தே தேபி கர்மபி: (31)**

அர்ஜுனா! எவனொருவன் குற்றமற்ற பார்வையுடன், நம்பிக்கை உணர்வோடு சமர்ப்பணத்துடன் கூடியவனாக எப்போதுமே "யுத்தம் செய்" என்ற எனது இந்த திட்டவட்டமான கொள்கையைப் பின்பற்றி வாழ்கிறானோ, அவன் எல்லாக் கர்மங்களில் இருந்தும் விடுதலை பெற்று விடுகிறான். யோகேஷ்வரரின் இந்த வாக்குறுதி இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர் என்று எந்தவொரு குறிப்பிட்ட மதத்தினருக்காகவும் சொல்லப்படவில்லை, மாறாக, ஒட்டு மொத்த மனித குலத்திற்காகச் சொல்லப்படுகிறது. "யுத்தம் செய்" என்பதே அவருடைய கொள்கை. இதை நோக்கும்போது யுத்தம் செய்பவர்களுக்காக மட்டும்தான் இந்த உபதேசம் சொல்லப்பட்டதோ என்றே எண்ணத் தோன்றும். அர்ஜுனனுக்கு எதிரில் அதிர்ஷ்டவசமாக ஒரு மாபெரும் உலக மகாயுத்தம் நடைபெறத் தயாராகிக்கொண்டு இருந்தது. உங்கள் முன்போ எந்தவொரு யுத்தமும் இல்லை. பிறகு ஏன் நீங்கள் கீதையைப் பின்தொடர வேண்டும்? ஏனெனில், யுத்தம் செய்பவர்கள் மட்டுமே கர்மங்களில் இருந்து விடுதலை பெறமுடியும் என்றல்லவா அதில் சொல்லப்பட்டு உள்ளது! ஆனால், அப்படி ஒன்றும் கிடையாது. உண்மையில் இது அகவுலகில் நடைபெறும் யுத்தமாகும். க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்திரக்ஞருக்கு இடையில், வித்யை மற்றும் அவித்யைக்கு இடையில், தர்ம க்ஷேத்திரம் மற்றும் குருக்ஷேத்திரம் ஆகியவற்றிற்கு இடையில் நடைபெறும் மோதலாகும். நீங்கள் எவ்வளவுக்கு எவ்வளவு தியானத்தில் அமர்ந்து சித்தத்தைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுகிறீர்களோ, முரண்பாடான எண்ணவோட்டங்கள் இறைஆராதனையில் தடையை ஏற்படுத்தும் வகையில் உங்கள் முன் வந்து நிற்கும். மேலும் பயங்கரமாக உங்களை ஆக்கிரமிக்க முயற்சிக்கும். அவற்றையெல்லாம் அழித்துக் கொண்டே சென்று சித்தத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டே போவதுதான் யுத்தம் எனப்படும். எவர் குற்றமற்ற பார்வையுடன், நம்பிக்கையோடு இணைந்து இந்த யுத்தத்தில் ஈடுபடுகிறாரோ, அவரே கர்மங்களின் பந்தத்தில் இருந்து, பிறப்பு—இறப்புச் சூழலில் இருந்து நல்லமுறையில் விடுதலை பெறுகிறார். யார் இந்த யுத்தத்தில் ஈடுபடுவதில்லையோ, அவருக்கு என்ன கதி நேரிடுகிறது? இதுபற்றிக் கூறுகிறார்.

**யே த்வேத தப்யஸூயந்தோ நானுதிஷ்டந்தி மே மதம்**
**ஸர்வஜ்ஞானவிமூடாம்ஸ்தான்வித்தி நஷ்டானசேதஸ: (32)**

எவரெல்லாம் குற்றமுள்ள பார்வையுடையவர்களாக **'அசேதஸ:'** மோகம் என்னும் இருட்டில் சுயநினைவற்று ஆழ்ந்து உறங்கிபடியே என்னுடைய இந்த கருத்திற்கு ஏற்றவாறு நடக்கவில்லையோ அதாவது, தியானத்தில் நிலைத்து நின்று ஆசை, பாசம், கலக்கம் ஆகியவற்றில் இருந்து விலகி, சமர்ப்பணத்துடன் யுத்தம் செய்யாதவர்கள் **'ஸர்வஜ்ஞான விமூடான்'** ஞானப் பாதையிலிருந்து முற்றிலும் மோகவயப்பட்டு எப்போதுமே விலகியே இருக்கும் அவர்களை நீ மேலான நன்மையைப் பெறுவதிலிருந்து வீழ்ச்சியடைந்தவர்கள் என்று அறிந்து கொள். எப்பொழுது இதுவே சரியான பாதை என்றாகி விட்டதோ அனைவரும் இதை ஏன் செய்வதில்லை? இதுபற்றிக் கூறுகிறார்.

**ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஜ்ஞானவானபி**
**ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி (33)**

மனிதர் உட்பட எல்லா ஜீவராசிகளும் தங்களுடைய இயற்கை, அதாவது சுபாவத்தை அடையப் பெறுகின்றன. தங்களுடைய சுபாவத்தால் ஈர்க்கப்பட்டு அவையெல்லாம் கர்மத்தில் ஈடுபடுகின்றன. இறைவனை நேரடியாக தரிசனம் செய்து கொண்ட ஞானியும் கூடத் தம்முடைய பிரகிருதி (இயற்கையானகுணம்) அதாவது ஆன்ம சுபாவத்திற்கு ஏற்பவே செயல்படுகிறார். உயிரினங்களும் தங்களுடைய கர்மங்களில் ஈடுபடுகின்றன. மேலும், ஞானியோ தம்முடைய உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தில் ஈடுபடுகிறார். ஒவ்வொருவரும் இயற்கையான குணங்களின் தாக்கத்திற்கு ஏற்பவே காரியங்களைச் செய்கின்றனர். இது ஒரு தன்னிலை விளக்கமாகும். இதை யாரால் மறுக்க முடியும்? என்னுடைய கருத்தின்படி (தெள்ளத் தெளிவாக வரையறுத்துத் தந்திருக்கும் கொள்கைப்படி) அனைவரும் கர்மத்தில் ஈடுபடாமல் இருப்பதற்கு இதுவே காரணமாகும். அவர்களால்ஆசை, பாசம், கலக்கம், வேறு வார்த்தைகளில் சொல்லப்போனால் விருப்பு–வெறுப்பு ஆகியவற்றை விலக்க முடிவதில்லை. எனவேதான் அவர்களால் கர்மத்தை முழுமையான முறையில் அனுசரித்து வரமுடிவதில்லை. இதையே இன்னும் தெளிவாக விளக்கும் வகையில் வேறொரு காரணத்தையும் எடுத்துக் கூறுகிறார்.

**இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்த்திதௌ**
**தயோர்ந வஸமாகச்சேத்தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ (34)**

புலன்கள் மற்றும் புலன்களின் மூலமாகக் கிடைக்கும் இன்பம் ஆகியவற்றில் விருப்பம் மற்றும் வெறுப்பு ஆகியவை நிலைபெற்றுள்ளன.

இவ்விரண்டின் வசத்தில் மட்டும் சிக்கிக் கொள்ளவே கூடாது. ஏனெனில் இந்த மேலான நன்மையைத் தரவல்ல வழியில் கர்மங்களில் இருந்து விடுதலை பெறுகின்ற செயல்முறைப்பாட்டியலில் விருப்பு மற்றும் வெறுப்பு ஆகிய இரண்டுமே எளிதில் வெல்ல முடியாத பெரும் பகைவர்களாகும். அவை இறைஆராதனையை அபகரித்துக் கொண்டு விடும். எப்பொழுது எதிரிகள் அகத்தில் உள்ளனர் என்றாகி விட்டதோ, புறத்தில் யாருடன் எதற்காகச் சண்டை போடவேண்டும்? எதிரிகள் புலன்கள் மற்றும் புலன் இன்பங்களின் சேர்க்கையில் இருக்கின்றன. உள்மனத்தில் உள்ளன. எனவே, இந்த யுத்தமும்கூட உள்மனத்தில் நடைபெறும் யுத்தமாகும். ஏனெனில் இந்த உடலே **க்ஷேத்திரம்** (களம்) எனப்படுகிறது. அதில் ஒருமுகப்பட்டவை, முரண்பாடானவை என்று இரண்டு விதமான எண்ணவோட்டங்கள் அதாவது மாயையின் இரண்டு அங்கங்களான ஞானம் (வித்யை) மற்றும் அஞ்ஞானம் (அவித்யை) ஆகியவை உள்ளன. இந்த எண்ணவோட்டங்களைக் கடந்து செல்வது, ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்களின் துணையுடன் முரண்பாடான எண்ணவோட்டங்களை அழிப்பதே யுத்தமாகும். முரண்பாடான எண்ணவோட்டங்களை முழுவதுமாக அழித்து விட்டபிறகு ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்களின் உபயோகமும் முடிவிற்கு வந்து விடுகிறது. ஆன்ம வடிவத்தைத் தொட்டுணர்ந்து, ஒருமுகப்பட்ட எண்ணவோட்டங்களையும் அதற்குள் ஒன்று கலந்து மறையச் செய்வது, இந்த முறையில் இயற்கை அல்லது படைப்பைக் கடந்து செல்வதே யுத்தமாகும். இது தியானத்தினால் மட்டுமே நடைபெறும்.

விருப்பு—வெறுப்பு ஆகியவற்றை அழிப்பதற்குக் கொஞ்ச காலம் ஆகிறது. எனவேதான் பெரும்பாலான சாதகர்கள் ஆன்மக் கிரியையைக் கைவிட்டு விட்டு உடனே மஹாபுருஷர்களைப்போல் நடிக்க ஆரம்பித்து விடுகின்றனர். ஸ்ரீகிருஷ்ணர் இதைப் பற்றிக்கூறி எச்சரிக்கிறார்.

**ஸ்ரேயான் ஸ்வதர்மோ விகுண : பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத்**
**ஸ்வதர்மே நிதனம் ஸ்ரேய: பரதர்மோ பயாவஹ : (35)**

ஒரு சாதகன் பத்து வருடங்களாகச் சாதனையில் ஈடுபட்டிருக்கிறான். மற்றொருவனோ இன்றுதான் சாதனையில் நுழைந்திருக்கிறான். இருவருடைய திறமையும் ஒன்றுபோல் இருப்பது இல்லை. ஆரம்பநிலையில் உள்ள சாதகன் ஒருவேளை உயர்நிலையில் இருக்கும் சாதகனைப் போன்று நடிக்க ஆரம்பித்து விட்டால் கண்டிப்பாக தாழ்ந்துவிடுகிறான். இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர், "மிகவும் நல்லமுறையில் அனுசரிக்கப்படுகின்ற மற்றவர்களுடைய தர்மத்தை விடவும் குணமற்றதாகவே இருந்தாலும் கூடத் தன்னுடைய சுயதர்மம் மிகவும் உயர்ந்ததாகும். சுபாவத்தில் (மனித இயல்பு) இருந்து இயல்பாகவே உண்டான, கர்மத்தில்

முன்னேறிச் செல்வதற்கான திறன்பாடே சுயதர்மம் எனப்படும். தன்னுடைய திறமைக்கு ஏற்பக் கர்மத்தில் ஈடுபட்டு முன்னேறிச் செல்வதால் சாதகன் என்றேனும் ஒருநாள் கண்டிப்பாகக் கரைகடந்து விடமுடியும். எனவே சுயதர்மத்தைச் செய்து கொண்டிருக்கும்போது மரணமே ஏற்பட்டாலும்கூட மேலான நன்மையைத் தரவல்லதாகவே அமையும். எங்கிருந்து சாதனை நின்று போனதோ, வேறு உடல் கிடைத்தபிறகு மீண்டும் அங்கிருந்தே ஆரம்பித்துவிடும். ஆன்மா ஒன்றும் இறப்பதில்லை. ஆடையை (உடல்) மாற்றிக் கொள்வதால் உங்களுடைய புத்தி எண்ணங்கள் ஆகியவை ஒன்றும் மாறிப்போவதில்லையே? ஆன்மீகத்தில் உயர்நிலையை அடைந்தவர்களைப் பார்த்து அவர்களைப்போல் நடிக்க ஆரம்பித்தால் சாதகன் பயத்திற்கு ஆளாக வேண்டியிருக்கும். பயம் படைப்பில் உள்ளது. பரமாத்மாவில் இல்லை. இயற்கை அதாவது படைப்பின் சூழல் இன்னும் அடர்த்தியாகி விடுகிறது.

இந்த ஆன்மீகப்பாதையில் நடிப்பவர்களின் ஆதிக்கம் பெருகி விட்டது. ஒருமுறை பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ் அவர்களுக்கு, **சதி அனுசூயியா** சென்று தங்கி இரு! என்று இறைவனின் குரல் (ஆகாஷ்வாணி) கட்டளையிட்டது. அவரும் ஜம்முவில் இருந்து சித்திரகூடம் வந்தார். அங்கிருந்து அனுசூயியா வந்து அடர்ந்த காட்டில் வாழ்ந்து கொண்டே தமது ஆன்மீக வாழ்க்கையை நடத்திவந்தார். அங்கே பல மஹாத்மாக்கள் வந்து போய்க் கொண்டிருப்பது வழக்கம். அவர்களில் ஒருவர் பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் ஆடையெதுவும் அணியாமல் முழுநிர்வாணமாக (திகம்பரர்) இருப்பதைத் கண்டார். அவருக்கு மக்கள் மத்தியில் நல்ல மரியாதையும் இருப்பதைக் கண்ட அந்த மஹாத்மா தான் அணிந்து கொண்டிருந்த கோவணத் துணியைக் கழற்றித் தூரஎறிந்துவிட்டு, தண்டம், கமண்டலம் ஆகியவற்றை வேறொரு மஹாத்மாவிடம் கொடுத்து விட்டு முழு நிர்வாணமாகிவிட்டார். சிறிது காலம் கழித்து வந்து பார்த்தபோது பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் பொதுமக்களுடன் பேசுவதையும் அவ்வப்போது அவர்களைக் கடிந்து கொள்வதையும் கண்டார். பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் அவர்களுக்கு, "பக்தர்களின் ஆன்மீக நன்மையைக் கருத்தில் கொண்டு அவ்வப்போது கொஞ்சம் கடிந்துரைக்க வேண்டும். இந்த ஆன்மீகப் பாதையில் பயணம் செய்யும் தகுதியுடைய சாதகர்களை எப்போதும் கண்காணித்து வர வேண்டும்" என்று இறைவனே கட்டளையிட்டு இருந்தார். பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ச பரமானந்த மஹாராஜ் அவர்களைப் போலவே நடித்துப் பழகிவந்த மஹாத்மா இதைப் பார்த்து தானும் அதேபோல் மற்றவர்களைத் திட்டத் தொடங்கிவிட்டார். ஆனால் பதிலுக்கு மற்றவர்களும் அவரை வாய்க்கு வந்தவாறு திட்டியபடியே சென்றனர். இதனைச் சற்றும் எதிர்பார்க்காத அந்த மஹாத்மா, "அங்கே ஒன்றும் எதிர்த்துப் பேசுவதில்லை. ஆனால் இங்கே மட்டும்

பதிலுக்கு பதில் எதையாவது சொல்லி விட்டுப் போகிறார்கள்'' என்று வருத்தப்பட்டுக் கொண்டார். பிறகு வேறு எங்கோ போய்விட்டார்.

அதே மஹாத்மா ஓரிரு வருடங்கள் கழிந்து திரும்ப வந்து பார்த்தபோது, பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் மெத்தையில் உட்கார்ந்து இருப்பதையும் பொதுமக்கள் அவருக்குச் சாமரம், விசிறி ஆகியவற்றை வீசியபடியே சேவை செய்து கொண்டிருப்பதையும் கண்டார். உடனே அவரும் அந்தக் காட்டில் பாழடைந்து கிடந்த ஒரு வீட்டில், பலகையால் ஆன ஆசனம் ஒன்றை வரவழைத்து அதன்மீது மெத்தை ஒன்றையும் விரித்துப் போட்டு அதில் உட்கார்ந்துவிட்டார். சாமரம் வீசுவதற்கு வேலையாட்களையும் அமர்த்திக் கொண்டார். அவரிடமும் ஒவ்வொரு திங்கட்கிழமை தோறும் கூட்டம் கூடத் தொடங்கியது. குழந்தை வரம் கேட்டு வருபவர்களிடம் ஆண் குழந்தை வேண்டுமானால் ஐம்பது ரூபாயும் பெண் குழந்தை வேண்டுமானால் இருபத்தி ஐந்து ரூபாயும் வாங்கிக் கொண்டு வரமளித்துக் கொண்டிருந்தார் அவர். ஆனால் **'உகரே அந்த் ந ஹோய் நிபாஹூ'** – ஒரே மாதத்தில் குட்டு வெளிப்பட்டு, மரியாதை இழந்து முகவரி தெரியாமல் எங்கோ ஓடிப் போய்விட்டார். இந்த ஆன்மீகப் பாதையில் நடிப்பு நீண்ட நாட்களுக்குக் கைகொடுக்காது. எனவே சாதகன் சுயதர்மத்தையே கடைப்பிடித்து வரவேண்டும்

எது சுயதர்மம்? இரண்டாவது அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணர் 'சுயதர்மம்' என்ற சொல்லை உபயோகித்து, "அர்ஜுனா! நீ சுய தர்மத்தை மனத்தில் கொண்டால்கூட யுத்தம் செய்வதற்கே தகுதியுடையவன் ஆகிறாய்" என்கிறார். க்ஷத்திரியனுக்கு இதைவிட மேலான நன்மையைத் தரும் மார்க்கம் வேறு கிடையாது. சுயதர்மத்தின் அடிப்படையில் அர்ஜுனன் க்ஷத்திரியனாகக் காணப்பட்டான். எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! எவர் பிராம்மணரோ, வேதங்களின் உபதேசம் அவருக்குத் தேங்கிய நீர்க்குட்டைக்கு ஒப்பானதாகும். நீ வேதங்களையும் தாண்டி எழு. பிராம்மணனாக மாறு," என்றார். அதாவது சுயதர்மத்தில் பரிமாற்றம் என்பது இயல்பான ஒன்றே!" என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார். அங்கே அவர் மேலும், "விருப்பு–வெறுப்பு ஆகியவற்றின் பிடிக்குள் சிக்கி விடாதே. அவற்றை வெட்டியெறி" என்றும் அறிவுறுத்தினார். சுயதர்மமே மேன்மைளிக்க வல்லது – அர்ஜுனன் யாராவது ஒரு பிராம்மணரைப் போன்று நடையுடை பாவனைகளை மாற்றிக் கொண்டு அவரைப் போன்று நடிக்க வேண்டும் என்பதல்ல ஸ்ரீகிருஷ்ணருடைய கருத்து.

ஒரே கர்மப்பாதையைத்தான் மஹாபுருஷர் நான்கு பிரிவுகளாகப் பிரித்துள்ளார். அவை, தாழ்ந்தது, நடுத்தரம், உயர்ந்தது, மிகவும் உயர்ந்தது எனப்படும். இந்தப் பிரிவுகளைச் சேர்ந்த சாதகர்கள் முறையே சூத்திரர், வைசியர்,

சத்திரியர், பிராம்மணர் என்று உவமையாகக் கூறப்பட்டுள்ளனர். சூத்திர நிலையின் கர்மத்திறனுடன் கர்மத்தை ஆரம்பிக்கும் சாதகனே படிப்படியாக சாதனைப் பாதையில் முன்னேறி பிராம்மணனாகி விடுகிறான். அதையும் தாண்டி மேலே சென்று அவன் பரமாத்மாவில் நுழைவு பெற்று விட்டானென்றால் **'ந ப்ராஹ்மணோ ந க்ஷத்ரிய: ந வைச்யோ ந சூத்ர: சிதானந்த ரூப : சிவோஹம் சிவோஹம்'** –('பிராம்மணனும் இல்லை, க்ஷத்திரியனும் இல்லை, வைசியனும் இல்லை, சூத்திரனும் இல்லை, சிதானந்த ரூபம், சிவமே நான், நானே சிவன்). அவன் எல்லா வர்ணங்களையும் (நான்கு சாதனைப் பிரிவுகள்) விட்டுத் தாண்டிச் சென்று விடுகிறான் இதையேதான் ஸ்ரீகிருஷ்ணரும், **'சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்'** – 'நான்கு வர்ணங்களையும் நானே படைத்தேன்' என்கிறார். அப்படியென்றால் பிறப்பை ஆதாரமாகக் கொண்டு மனிதர்களைத் துண்டாடினாரா? 'இல்லை'. **'குணகர்ம விபாகஷ'** குணங்களை ஆதாரமாகக் கொண்டு கர்மத்தையே நான்கு பிரிவுகளாக வரிசைப்படுத்தியுள்ளேன். எந்தக் கர்மம்? உலகியல் கர்மங்களையா? ஸ்ரீகிருஷ்ணர், "இல்லை, நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம்" என்கிறார். 'நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம்'' என்றால் என்ன? அதுதான் வேள்வியின் செயல்முறை. இதில் உள்மூச்சை வெளிமூச்சில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பித்தல், வெளிமூச்சை உள்மூச்சில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பித்தல், புலன்அடக்கம், மனக் கட்டுப்பாடு முதலியவை அடங்கும். இதனுடைய தூய்மையான பொருள் யோக சாதனை, ஆராதனை என்பதாகும். ஆராதனைக்குரிய தெய்வம் (இறைநிலை) வரைக்கும் கொண்டு போய்ச் சேர்க்கவல்ல சிறப்பான யோக விதிமுறையே ஆராதனை எனப்படும். இந்த ஆராதனைக் கர்மத்தையே நான்கு பிரிவுகளாகப் பிரித்து ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டு உள்ளது. ஒருவர் எத்தகைய கர்மத்திறன் உடையவரோ, அவர் அந்தப் பிரிவில் இருந்தே கர்மத்தைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். இது எல்லோருக்குமான, அவரவருடைய சுயதர்மம் எனப்படும். ஒருவேளை அவன் உயர்நிலை ஆன்மீக சாதனைப் பிரிவினரைக் கண்டு அவர்களைப் போலவே நடிக்கத் தொடங்கினால் பயத்தையே அடைவான். முழுவதுமாக அழிவடைய மாட்டான்; ஏனெனில் அவனுக்குள் விதைக்கப்பட்ட ஆன்மீக விதை நாசம் அடைவதில்லை. அவன் இயற்கை அதாவது சுபாவத்தின் உந்துதலால், பயத்தால் பீடிக்கப்பட்டு அவலமான தாழ்ந்த நிலையை அவசியம் அனுபவிக்க வேண்டியிருக்கும். ஆரம்பப் பள்ளியில் படிக்க வேண்டிய குழந்தைகள் கல்லூரியில் போய் உட்கார்ந்து கொண்டால் பட்டம் பெற்று விடுவார்களா என்ன? அவர்கள் முதலாம் வகுப்பில் படிக்க வேண்டிய உயிர், மெய்யெழுத்துக்களையும் கூடக் கற்றுக்கொள்ள முடியாமல் ஏமாற்றமடைவார்கள். மனிதர்களால் ஏன் சுயதர்மத்தை அனுசரிக்க முடிவதில்லை? என்று அர்ஜுனன் கேள்வி எழுப்புகிறான்.

**அர்ஜுன உவாச்ச**
**அத கேன ப்ரயுக்தோயம் பாபம் சரதி பூருஷ:**
**அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: (36)**

கிருஷ்ணா! மனிதன் பிறகு ஏன் பலவந்தமாக இழுத்துச் செல்லப்பட்டதைப் போல் தானாகவே விரும்பா விட்டாலும் கூட எதனுடைய தூண்டுதலினால் பாவத்தைச் செய்கிறான்? ஹே! கிருஷ்ணா! உங்களுடைய கொள்கைக்கு ஏற்ப அவனால் நடக்க முடியவில்லையே ஏன்? இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ஸ்ரீ பகவானுவாச்ச**
**காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ:**
**மஹாஷனோ மஹாபாப்மா வித்யேனமிஹ வைரிணம் (37)**

அர்ஜுனா! ரஜோ குணத்தில் இருந்து உண்டாகும் இந்தக் காமமும் மற்றும் கோபமும் நெருப்பிற்குச் சமமானவை. இன்பத்தை அனுபவிக்க அனுபவிக்க ஒருபோதும் திருப்தியடையாத மஹாபாவிகளாவர். காமம்—கோபம் ஆகியவை விருப்பு—வெறுப்பு ஆகியவற்றிற்கு இணையானவையாகும். இப்போது நான் எவற்றை விவரித்துக் கூறினேனோ, அந்த விஷயத்தில் நீ இவற்றையே பகைவர்கள் என்று அறிந்து கொள். இப்போது அவற்றின் தாக்கத்தைப் பற்றிக் கூறுகிறார்.

**தூமேனாவ்ரியதே வஹ்னிர்யதாதர்ஷோ மலேன ச**
**யதோல்பேநாவ்ருதோ கர்ப்பஸ்ததா தேனேதமாவ்ருதம் (38)**

எவ்வாறு புகையினால் நெருப்பும் மற்றும் அழுக்கினால் கண்ணாடியும் மூடப்படுகிறதோ எவ்வாறு மெல்லிய சவ்வுப் படலத்தால் கர்ப்பமானது மறைக்கப்பட்டிருக்கிறதோ அதேபோன்றுதான் காமம், கோபம் ஆகிய விகாரங்களால் இந்த ஞானமும் மூடப்பட்டு உள்ளது. ஈரமான விறகினை எரிக்கும்போது மிகுதியான புகை கிளம்புகிறது. நெருப்பு இருந்தும்கூட அதனால் கொழுந்து விட்டு எரிய முடிவதில்லை. அழுக்கினால் மூடப்பட்டுள்ள கண்ணாடியில் எவ்வாறு பிரதி பிம்பம் தெளிவாகத் தெரிவதில்லையோ, மெல்லிய சவ்வினால் கர்ப்பமானது எவ்வாறு மூடப்பட்டுள்ளதோ, அதேபோல் இந்த (காமமும், கோபமும்) விகாரங்கள் இருக்கும்வரை பரமாத்மாவின் நேரடி தரிசனம் என்ற ஞானம் உண்டாவதில்லை.

**ஆவ்ருதம் ஜ்ஞானமேதேன ஜ்ஞானினோ நித்யவைரிணா**
**காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச (39)**

குந்தி மகனே! நெருப்பிற்கு சமமானதும், போகங்களால் ஒருபோதும்

திருப்தியுறாததும் ஞானிகளின் நிரந்தரமான எதிரியுமாகிய இந்தக் காமத்தால் ஞானம் மூடப்பட்டு உள்ளது. இப்போதுதான் ஸ்ரீகிருஷ்ணர் காமம், கோபம் ஆகிய இரண்டு எதிரிகளைப் பற்றிக் கூறினார். இந்த சுலோகத்திலோ அவர் காமம் என்ற ஒரேயோரு எதிரியின் பெயரை மட்டுமே குறிப்பிடுகிறார். உண்மையில் காமத்தில் கோபமும் அடங்கியிருக்கிறது. காரியம் முழுமையடைந்தபிறகு கோபம் மறைந்து விடுகிறது. ஆனால் காமமோ (ஆசைகள்) மறைவதில்லை. ஆசைகள் (காமம்) நிறைவேறுவதில் தடங்கல் ஏற்பட்டால் கோபம் மறுபடியும் பொங்கியெழுந்து விடுகிறது. காமத்தின் அடியாழத்தில் கோபம் ஒளிந்திருக்கிறது. இந்த எதிரியின் வசிப்பிடம் எது? அதை எங்கே போய்த் தேடுவது? இதன் இருப்பிடத்தை மட்டும் அறிந்து கொண்டால் இதனை வேருடன் அழிப்பதற்கு வசதியாக இருக்குமே. இது பற்றி ஸ்ரீகிருஷ்ணர் மேலும் கூறுகிறார்.

**இந்த்ரியாணி மனோ புத்திரஸ்யாதிஷ்டானமுச்யதே**
**ஏதைர்விமோஹயத்யேஷ ஜ்ஞானமாவ்ருத்ய தேஹினம் (40)**

புலன்கள், மனம் மற்றும் புத்தி ஆகியவையே இதன் (காமம்) இருப்பிடங்களாகக் கூறப்படுகிறது. இந்தக் காமமானது, இந்த மனம், புத்தி மற்றும் புலன்களின் மூலமாகவே ஞானத்தை மறைத்துக்கொண்டு ஜீவாத்மாவை மோகத்தில் ஆழ்த்துகிறது.

**தஸ்மாத்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப**
**பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஜ்ஞானவிஜ்ஞானநாசனம் (41)**

ஆகவே அர்ஜுனா! நீ முதலில் புலன்களை **'நியம்ய'** – கட்டுப்படுத்து. ஏனெனில் எதிரி இவற்றின் அடியாழத்தில்தான் ஒளிந்து இருக்கிறான். அவன் உனது உடலுக்கு உள்ளே இருக்கிறான். வெளியில் தேடுவதால் அவன் ஒருபோதும் கிடைக்க மாட்டான். இது இதய தேசத்தில், அகவுலகில் நடைபெறும் மோதலாகும். புலன்களை வசப்படுத்திக் கொண்டு ஞானம் மற்றும் விஞ்ஞானத்தை நாசம் செய்கின்ற இந்தப் பாவியாகிய காமத்தையே கொல். காமம் நேரடியாகப் பிடிக்குள் சிக்குவதில்லை. எனவே, புலன் நுகர்ச்சி ஆசைகள் நிரம்பிய (விகாரங்கள்) வசிப்பிடத்தையே சுற்றி வளைத்துக் கொள். புலன்களையே முழுவதுமாகக் கட்டுப்படுத்திக் கொள். ஆனால், புலன்கள் மற்றும் மனத்தைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவது என்பது மிகவும் கடினமானது. நம்மால் இதைச் செய்ய முடியுமா என்ன? இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் உங்களுடைய சாமர்த்தியத்தை எடுத்துக் கூறி உற்சாகப்படுத்துகிறார்.

**இந்த்ரியாணி பராண் யாஹுரிந்த்ரியேப்ய: பரம் மன:**
**மனஸஸ்து பரா புத்திர் யோ புத்தே பரதஸ்துஸ: (42)**

அர்ஜுனா! நீ இந்த உடலை விடப் புலன்கள் மேலானவை அதாவது நுட்பமானவை மற்றும் பலம் பொருந்தியவை என்பதை அறிந்து கொள். புலன்களை விட மனம் மேலானது, பலம் வாய்ந்தது. மனத்தை விட மேலானது புத்தி மற்றும் அந்த புத்தியை விடவும் மிகவும் மேலானது உனது ஆத்மாவாகும். அதுவே நீ யாவாய். எனவே இந்தப் புலன்கள், மனம் மற்றும் புத்தியை அடக்க உன்னால் முடியும்.

**ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மானமாத்மனா**
**ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் (43)**

இந்த முறையில் புத்தியை விடவும் மேலான அதாவது நுட்பமான மற்றும் பலம் வாய்ந்த உனது ஆன்மாவை அறிந்து கொண்டு, ஆன்ம பலத்தைப் புரிந்து கொண்டு, புத்தியின் மூலமாக உன்னுடைய மனத்தை வசப்படுத்திக் கொண்டு அர்ஜுனா! இந்தக் காமமே வடிவான, எளிதில் வெல்ல முடியாத எதிரியைக் கொன்றுவிடு. உனது சக்தியை நன்கு புரிந்து கொண்டு இந்த எளிதில் வெல்ல முடியாத எதிரியைக் கொன்றுவிடு. காமம் என்பது எளிதில் வெல்ல முடியாத எதிரியாகும். புலன்களின் மூலமாக இது ஆன்மாவை மோகத்தில் ஆழ்த்துகிறது. எனவே உனது சக்தியை நன்கு புரிந்து கொண்டு, ஆன்மாவையே பலம் பொருந்தியதாக அறிந்து கொண்டு காமமே உருவான, இந்த எதிரியைக் கொன்றுவிடு. இந்த எதிரி அகத்தில் இருப்பவன், மற்றும் இந்த யுத்தம் அகவுலகில் நடைபெறுவது என்பதையெல்லாம் இனிமேலும் சொல்லிக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

**முடிவுரை:**

கீதையின்மீது தீராத அன்பு வைத்திருக்கும் அதன் உரையாசிரியர்கள் பலரும் இந்த அத்தியாயத்திற்கு 'கர்ம யோகம்' என்ற பெயரையே வைத்துள்ளனர். ஆனால் இது பொருத்தமானதன்று. இரண்டாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் 'கர்மம்' என்ற சொல்லை மட்டுமே பிரயோகிக்கிறார். அவர் கர்மத்தின் மகத்துவத்தை நிரூபணம் செய்து அதன் மீது, அதாவது, கர்மத்தைப்பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வத்தை விழிப்புறச் செய்கிறார். மேலும் இந்த அத்தியாயத்திலோ அவர், வேள்வியின் செயல்முறையே கர்மம் என்று எடுத்துக் கூறி கர்மத்தை விளக்குகிறார். இதில் இருந்து வேள்வி என்பது ஒரு நிச்சயிக்கப்பட்டுள்ள திசையில் செல்வது என்பது தெளிவாகிறது. இதற்கு மாறாக, எது ஒன்று செய்யப்பட்டாலும் அது இந்த உலகத்தில் பந்தத்தையே உண்டாக்கும். ஸ்ரீகிருஷ்ணர் கூறுகின்ற கர்மமோ, **'மோக்ஷ்யஸே சுபாத்'** – உலக பந்தங்களில் இருந்து விடுதலை பெற்றுத்தரவல்ல கர்மம் ஆகும்.

ஸ்ரீகிருஷ்ணர் வேள்வியின் உற்பத்தியைப் பற்றிக் கூறினார். அது என்ன தருகிறது? அதன் சிறப்புத் தன்மைகள் என்ன? என்பதை எல்லாம் விளக்கிக் கூறினார். 'வேள்வியைச் செய்ய வேண்டும்!' என்றும் வலியுறுத்திக் கூறினார். இந்த வேள்வியின் செயல்முறையே கர்மம் என்றும் அவர் கூறினார். எவர் இந்த வேள்வியைச் செய்யவில்லையோ, அந்தப் பாவி மனிதன், புலன் இன்பங்களையே நாடுகின்ற அவன், வீணாகவே வாழ்கிறான். பண்டைக்கால மஹரிஷிகளும் கூட இதைச் செய்துதான் மேலான உயர்ந்த பரமநைஷ்கர்ம்ய ஸித்தி எனப்படும் கர்மம் விடுபட்ட நிலை அடைந்துள்ளனர். அந்த ஆன்மாவில் மட்டுமே திருப்தி காண்கின்ற அவருக்கு, கர்மம் செய்ய வேண்டிய எந்தவொரு அவசியமும் இல்லை. அப்படி இருந்தும்கூடப் பின்வரும் சமுதாயத்தினரை ஆன்மீகப் பாதையில் சரிவர வழிநடத்திச் செல்வதற்காக அவர்களும் நல்லமுறையில் கர்மத்தைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள். அந்த மஹாபுருஷர்களுடன் ஸ்ரீகிருஷ்ணரும் தம்மை ஒப்பிட்டு, 'எனக்கும் கூட இனிமேல் கர்மம் செய்வதால் எந்தவொரு பயனும் இல்லை. ஆனால், நானும் கூட பின்வருபவர்களின் நலனிற்காகக் கர்மத்தில் தொடர்ந்து ஈடுபடுகிறேன்" என்கிறார். ஸ்ரீகிருஷ்ணர் தாமும் ஒரு யோகியென்று இங்கே தெளிவாகத் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிறார்.

அவர், கர்மத்தில் இப்போதுதான் ஈடுபடத் தொடங்கியிருக்கும் சாதகர்களைத் திசை திருப்பக் கூடாது என்று கூறினார். ஏனெனில், கர்மத்தைச் செய்துதான் அந்தச் சாதகர்கள் இறைநிலையை அடைய வேண்டியதுள்ளது. ஒருவேளை அவர்கள் கர்மத்தைச் செய்யவில்லை என்றால் வீழ்ச்சியடைந்து விடுவார்கள். இந்தக் கர்மத்திற்காக தியானத்தில் அமர்ந்து யுத்தம் செய்ய வேண்டும். கண்கள் மூடியுள்ளன. புலன்களை அடக்கி, சித்தமானது முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு அழிந்து விட்டது எனும்போது எங்கிருந்து யுத்தம் செய்வது? அந்தச் சமயத்தில் கோபம்—காமம், விருப்பு—வெறுப்பு ஆகியவை தடையாக எழுந்து நிற்கின்றன. இந்த முரண்பாடான எண்ணவோட்டங்களைத் தாண்டிச் செல்வதே யுத்தமாகும். அசுரச் செல்வமாகிய குருக்ஷேத்திரத்தில், முரண்பாடான எண்ணவோட்டங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அழித்துக் கொண்டே சென்று, தியானத்தில் நிலைபெறுதலே யுத்தமாகும். உண்மையில் தியானத்தில்தான் யுத்தம் சம்பவிக்கிறது. இதுவே இந்த அத்தியாயத்தின் சாராம்சமாகும். இதில் கர்மத்தைப் பற்றியோ அல்லது வேள்வியைப் பற்றியோ ஒன்றும் கூறவில்லை. ஒருவேளை வேள்வி என்றால் என்ன? என்பது புரிய ஆரம்பித்து விட்டால் கர்மமும் புரிய ஆரம்பித்துவிடும். இப்போதுள்ள நிலையில் கர்மம் இன்னும் புரிய வைக்கப்படவில்லை.

இந்த அத்தியாயத்தில் (நிலைபெற்ற) ஸ்திதப்ரக்ஞ மஹாபுருஷர்கள் மட்டுமே

பின்பற்ற வேண்டிய விதிமுறைகள் மற்றும் கவனத்தில் கொள்ள வேண்டிய செயல்முறைகள் வலியுறுத்திக் கூறப்பட்டு உள்ளது. இவையனைத்தும் குருமார்களுக்கே இறைவன் அளித்துள்ள கட்டளைகளாகும். அவர்கள் இந்தக் கர்மத்தைச் செய்யவில்லையென்றாலும்கூட எந்தவொரு பாதிப்பும் இல்லை; செய்வதால் எந்தவொரு இலாபமும் இல்லை. ஆனால் எந்த சாதகர்களுக்கு பரம கதியின் மீது விருப்பம் உள்ளதோ, அவர்களுக்கென்று தனியாகவும் குறிப்பிடும்படியாகவும் ஒன்றுமே சொல்லப்படவில்லை எனும்போது இது எப்படிக் கர்மயோகம் ஆகும்? எதைச் செய்ய வேண்டுமோ அந்தக் கர்மத்தின் முழுவடிவமும் கூடத் தெளிவாக்கப்படவில்லை. ஏனெனில், 'வேள்வியின் செயல்முறையே கர்மம்' எனப்படும்—இப்போதைக்கு அவர் இவ்வளவு மட்டுமே கூறியுள்ளார். வேள்வி பற்றி ஒன்றும் கூறவில்லை. கர்மத்தின் முழு வடிவமும் எங்கே தெளிவாக்கப்பட்டு உள்ளது? ஆம்! யுத்தத்தின் உண்மையான வடிவம் கீதையின் இந்த அத்தியாயத்தில்தான் கிடைக்கிறது.

கீதை முழுவதையும் நோக்கினால், இரண்டாவது அத்தியாயத்தில், "உடல் அழியக் கூடியது; எனவே யுத்தம் செய்" என்று சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். கீதையில், யுத்தம் செய்ய வேண்டும் என்பதற்கு இதையே திடமான காரணமாகக் கொள்ளப்பட்டு உள்ளது. இதற்கு முன்பு, ஞான யோகத்தைப் பற்றிக் கூறும் சந்தர்ப்பத்தில், "க்ஷத்திரியனுக்கு யுத்தம் ஒன்றுதான் மேலான நன்மையைத் தரவல்ல ஒரேவழி. இந்த புத்தி உனக்காக ஞான யோகத்தின் விஷயமாகக் கூறப்பட்டது" என்றார். எந்த புத்தி? 'அதுவே வெற்றி—தோல்வி ஆகிய இரண்டு வகையில் பார்த்தாலும் இலாபமே உள்ளது என்று அறிந்து கொண்டு யுத்தம் செய்' என்னும் புத்தி. அதற்குப் பிறகு நான்காவது அத்தியாயத்தில், 'யோகத்தில் நிலைத்து நின்று, இதயத்தில் நிலைபெற்று உள்ள உனது இந்த சந்தேகத்தை ஞானம் என்னும் வாள் கொண்டு வெட்டி எறி' என்றார். அந்த வாள் யோகத்தில் உள்ளது. ஐந்தாவது அத்தியாயத்தில் இருந்து பத்தாவது அத்தியாயம் வரை யுத்தம் பற்றி எதுவும் விவாதிக்கப்படவில்லை. பதினோராவது அத்தியாயத்தில், 'இந்த எதிரிகள் என்மூலமாக ஏற்கனவே கொல்லப்பட்டு விட்டனர். நீ வெறும் நிமித்த காரணமாக வந்து நின்று கொள். புகழைப் பெறு. (வெற்றியை அடைவாயாக) இவர்கள் நீயில்லையென்றாலும் இறப்பது உறுதி. நடத்துபவர் (இறைவன்) அக்காரியத்தைச் செய்து முடிப்பார். நீ இந்தச் சடலங்களையே கொல்" என்கிறார்.

பதினைந்தாவது அத்தியாயத்தில், "(சம்சாரம்) உலகம் என்பது திடமாக வேரூன்றி நின்று கொண்டிருக்கும் அரச மரத்திற்கு ஒப்பானது. அதனை சேர்க்கை தோஷத்திலிருந்து விலகி நின்று வைராக்கியம் என்ற ஆயுதத்தால் வெட்டி எறிந்து அந்தப் பரம பதத்தைத் தேடுவதற்கு உனக்கு கட்டளை இடப்பட்டுள்ளது"

என்கிறார். அதற்குப் பிறகு வரும் அத்தியாயங்களில் யுத்தம் பற்றிய எந்தவொரு குறிப்பும் இடம் பெறவில்லை. ஆம்! பதினாறாவது அத்தியாயத்தில், 'நரகத்தைப் பெற்றுத் தரும் அசுரர்களைப் பற்றிய விளக்கம் இடம் பெற்றுள்ளது. மூன்றாவது அத்தியாயத்தில்தான் யுத்தம் பற்றிய தெளிவான விளக்கம் இடம் பெற்றுள்ளது. முப்பதாவது சுலோகத்தில் இருந்து நாற்பத்தி மூன்றாவது சுலோகம் வரைக்கும் யுத்தத்தின் முழுவடிவம், அதன் இன்றியமையாத தன்மை, யுத்தம் செய்யாதவர்களுக்கு ஏற்படும் அழிவு, யுத்தத்தில் கொல்லப்பட வேண்டிய எதிரிகளின் பெயர்கள், அவர்களைக் கொல்வதற்காகத் தன்னுடைய சொந்த ஆன்மீக சக்திக்கு அழைப்பு விடுத்தல், மற்றும் நிச்சயமாகவே அவர்களை வெட்டியெறிந்து தூக்கிப் போடுமாறும் வலியுறுத்தப்பட்டது. இந்த அத்தியாயத்தில் யாரைக் கொல்வதற்கு ஆணையிடப்பட்டதோ, அந்த எதிரிகள் மற்றும் அவர்களுடைய உண்மை உருவம் தெளிவுபடுத்தப்பட்டது. அத்துடன் அவர்களை அழிப்பதற்கும் உங்களுக்கு ஊக்கம் அளிக்கப்பட்டுள்ளது. எனவே இந்த அத்தியாயத்திற்கு 'சத்ரு விநாச ப்ரேரணா' அதாவது, எதிரிகளை அழிக்க வல்ல ஊக்கம் என்ற பெயரே பொருத்தமானதாகும்.

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத் கீதாஸூபஷத்ஸீ ப்ரஹ்ம்ம**
**வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜூன ஸம்வாதே**
**'சத்ரு விநாச ப்ரேரணா' நாம த்ருதீயோத்யாய:**

இம்முறையில் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜூன உரையாடலுமாகிய 'சத்ரு விநாச ப்ரேரணா' அதாவது 'பகைவரை அழிக்கவல்ல ஊக்கம்' என்ற பெயருடைய மூன்றாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய**
**ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத்கீதாயா:**
**'யதார்த்த கீதை' பாஷ்யே 'சத்ரு விநாச ப்ரேரணா**
**நாம த்ருதீயோத்யாய:**
**ஹரி : ஓம் தத்ஸத்**

இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'சத்ரு விநாச ப்ரேரணா' அதாவது பகைவரை அழிக்கவல்ல ஊக்கம்' என்ற பெயருடைய மூன்றாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**ஹரி ஓம் தத் ஸத்**

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம
## நான்காவது அத்தியாயம்

மூன்றாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், 'குற்றமற்ற பார்வையுடன் எந்தவொரு மனிதன் என்மீது நம்பிக்கைக் கொண்டவனாக நடக்கிறானோ என்னுடைய கொள்கைக்கு ஏற்றவாறு செல்கிறானோ, அவன் கர்மங்களின் பந்தங்களில் இருந்து நல்ல முறையில் விடுவிக்கப்படுகிறான்' என்று உறுதிப்படுத்தினார். கர்ம பந்தங்களில் இருந்து முக்தி விடுதலை பெற்றுத் தருகின்ற வல்லமை யோகத்திற்கு (ஞானயோகம், கர்ம யோகம்) உள்ளது. யோகத்தில்தான் யுத்தம் நிகழ்வது சாத்தியமாகிறது. இந்த அத்தியாயத்தில் அவர், "இந்த யோகத்தை உண்டாக்கியவர் யார்? இது எவ்வாறு படிப்படியாக வளர்ச்சி அடைகிறது?" என்பதைக் கூறுகிறார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவானஹமவ்யயம்**
**விவஸ்வான்மனவே ப்ராஹ மனுரிக்ஷ்வாகவேப்ரவீத்(1)**

அர்ஜுனா! நானே இந்த அழிவற்ற யோகத்தைக் கல்பத்தின் ஆரம்பத்தில் விவஸ்வானிடம் (சூரியன்) கூறினேன். விவஸ்வான் மனுவிடமும், மனு இக்ஷ்வாகுவிடமும் கூறினார்."கூறியது யார்?" "நானே" என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். "ஸ்ரீகிருஷ்ணர் யார்?". "ஒரு யோகி". தத்துவத்தில் (ஆன்மாவில்) நிலைபெற்ற மஹாபுருஷரே இந்த அழிவற்ற யோகத்தைக் கல்பத்தின் ஆரம்பத்தில், அதாவது, இறைவழிபாட்டின் ஆரம்பத்தில், விவஸ்வான் அதாவது, இறைவனை அடைய நிலை கொள்ளாமல் தவித்துக் (விவஸ்) கொண்டிருக்கும், அனைத்து மனித ஜீவராசிகளுக்கும் கூறுகிறார். அவர்களுடைய சுவாசத்தில் (சுரா) இந்த யோகத்தை இயங்கச் செய்கிறார். இங்கே சூரியன் (சுரா) என்பது ஒரு உருவகமே. ஏனெனில் சுராவில் (மூச்சில்) அதாவது உயிர்களின் சுவாசத்தில்தான் அந்தப் பரம் பொருளின் பிரகாச வடிவம் இருக்கிறது. மேலும் அங்கேதான் அவரை அடையும் வழியும் இருக்கிறது. உண்மையான வெளிச்சத்தைத் தருபவர் (சூரியன்) இறைவன் மட்டுமே ஆவார்.

'இந்த யோகம் அழிவற்றது. இதில் ஆரம்பத்திற்கு அழிவு என்பதே இல்லை' என்று ஸ்ரீ கிருஷ்ணர் கூறியிருக்கிறார். இந்த யோகத்தைத் தொடங்கி விட்டால் மட்டும் போதும், இது பூரணத்துவ (முழுமை) நிலையைப் பெற்றுத் தந்தபிறகே அமைதியடையும். உடலுக்கான கல்பம் மூலிகை மருந்துகளின் மூலம் தயாரிக்கப்படுகிறது. ஆனால், ஆன்மாவிற்கோ இறைவழிபாட்டின் மூலம் கல்பம் உண்டாகிறது. இறைவழிபாட்டின் ஆரம்பமே ஆன்ம கல்பத்திற்கான

ஆரம்பமாகும். இந்த ஆன்மீக சாதனை – இறைவழிபாடு எல்லாமே ஏதேனும் ஒரு மஹாபுருஷரின் திருக்கொடையாகும். மோகம் என்னும் இரவில் சுயநினைவின்றி ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும் ஆதிமனிதன், தன்னில் இறைவழிபாடு செய்வதற்கான எந்தவொரு பயிற்சிக்குணமும் இல்லாதிருக்கும் நிலையில், யோகத்தைப் பற்றியெல்லாம் இன்னும் யோசனை கூடச் செய்யாதிருக்கும் அத்தகைய மனிதன் ஏதேனும் ஒரு மஹாபுருஷரைக் கண்டு அவருடைய திருப்பார்வை விழுந்த மாத்திரத்தில், அவருடைய திருவசனங்களைக் கேட்டு, அவருக்குச் சின்னஞ்சிறு தொண்டுகள் புரிந்து, அவருடைய சரண சான்னித்தியத்தைப் பெற்ற உடனே அவனுக்குள் யோகத்திற்கான பயிற்சிகள் (குணாதிசயங்கள்) உயிர் பெற்று இயங்க ஆரம்பிக்கின்றன. துளஸீதாஸ கோஸ்வாமி அவர்களும்கூட இதையே பின்வருமாறு கூறுகிறார்: **'ஜே சிதயே ப்ரபு ஜின்ஹ் ப்ரபு ஹேரே, தே ஸப் பயே பரம் பத் ஜோகு' (ராம சரித மானஸ் 2/216/1-2)**

('போகும் வழியெல்லாம் மக்கள் கூட்டம் அலைமோதியது. அவர்களில் யாரையெல்லாம் பிரபு ஸ்ரீராமச்சந்திர பகவான் பார்த்தாரோ, அல்லது யாரெல்லாம் ஸ்ரீராமசந்திர பகவானைப் பார்த்தனரோ, அவர்கள் அனைவருமே ஆன்மீகப் பாதையில் செல்லும் தகுதியுடையவர்களாகி விட்டனர்.' )

ஸ்ரீகிருஷ்ணர் "இந்த யோகத்தை நானே ஆரம்பத்தில் சூரியனிடம் கூறினேன்" என்கிறார் **'சக்ஷோ: சூர்யோ அஜாயத'** மஹாபுருஷர்களின் திருஅருட் பார்வை வீச்சினால் மட்டுமே யோகத்திற்கான குணாதிசயங்கள் சுவாசத்தில் (சுரா) பரவத் தொடங்குகின்றன. சுயம் பிரகாசமான, சுயவசமான பரமேஷ்வரரின் வாசம் அனைவரின் இதயத்தில் உள்ளது. சுவாசத்தைக் கட்டுப்படுத்துவதால் மட்டுமே அவரை அடைவதற்கு வழிவகுக்கப்பட்டுள்ளது. சுவாசத்தில் (சுரா) ஆன்மீக குணாதிசயங்களை எழுச்சிபெறச் செய்வதே 'சூரியனிடம் கூறினேன்' என்பதற்குப் பொருளாகும். தக்ககாலம் வந்ததும், ஆன்மீக குணாதிசயங்களின் எழுச்சி இந்த மனத்தில் துளிர்விடுகிறது. இதுவே, 'சூரியன் மனு (மனம்) விடம் கூறினார்' என்பதாகும். மனத்தில் துளிர்விட்டெழத் தொடங்கியபிறகு மகாபுருஷர்களின் அந்தத் திருவாக்கியங்களின் மீது 'இச்சை' அல்லது 'விருப்பம்' விழிப்படைய ஆரம்பிக்கும். ஒருவேளை மனத்தில் எதைப் பற்றியாவது எண்ணிக் கொண்டு இருந்தால் உடனே அதை அடைய வேண்டும் என்ற இச்சை (விருப்பம்) அவசியம் உண்டாகும். இதுவே, 'மனு இக்ஷ்வாகுவிடம் கூறினார்' என்பதாகும். அழிவற்றது, கர்ம பந்தங்களில் இருந்து விடுதலை பெற்றுத் தரவல்லது என்றெல்லாம் எது சொல்லப்படுகிறதோ அது இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் என்பதேயாகும்! கண்டிப்பாக அதைச் செய்ய

வேண்டியதுதான் என்று அதன்மீது ஒருவிதமான ஏக்கம் பிறந்து விடுகிறது. மேலும், இறை ஆராதனையும் வேகம் பிடிக்கத் தொடங்குகிறது. வேகம் பிடிக்கத் தொடங்கிய இந்த யோகம் எங்கே கொண்டு போய்ச் சேர்க்கிறது? இதுபற்றி மேலும் கூறுகிறார்.

**ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது:**
**ஸ காலேனேஹ மஹதா யோகோ நஷ்ட பரந்தப (2)**

இம்முறையில் ஏதேனும் ஒரு மகாபுருஷரின் மூலமாக சம்ஸ்காரமெதுவும் இல்லாத மனிதர்களின் சுவாசத்திலும் (சுரா), சுவாசத்தில் இருந்து மனத்திலும் (மனம்) மனத்தில் இருந்து இச்சைக்கும் (இக்ஷ்வாகு) இதற்குப்பிறகு இச்சையானது தீவிரமடைந்து, செயல்முறைக்குக் கொண்டு வரப்பட்டும் இந்த யோகமானது, படிப்படியாக உன்னத நிலையை அடைந்து 'ராஜரிஷி' என்ற நிலைவரை போய்ச் சேருகிறது. அந்த நிலையை அடைந்தபிறகு வெளிப்படுகிறது. இந்நிலையில் உள்ள சாதகருக்குள் ரித்திகளும் சித்திகளும் தோன்ற ஆரம்பிக்கின்றன. அந்த யோகம் இந்த மகத்துவம் வாய்ந்த நிறைவடையும் காலத்தில் இதே உலகத்தில் (உடலில்) ஏறத்தாழ சேதமடைந்து விடுகிறது. இந்த எல்லைக் கோட்டைத் தாண்டிச் செல்வது எப்படி? இந்த மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த இடத்தைச் சென்றடைந்தபிறகு எல்லோருமே நஷ்டமடைந்து விடுகிறார்களா என்ன? இதற்கு ஸ்ரீகிருஷ்ணர், ''இல்லை, எவன் என்னையே ஆதாரமாகப் பற்றிக் கொண்டிருக்கிறானோ, எவன் எனக்கு மிகவும் பிரியமான பக்தனோ, என்னுடைய இணைபிரியாத தோழனோ அவன் மட்டும் வீழ்ச்சி அடைவது இல்லை" என்று கூறுகிறார்.

**ஸ ஏவாயம் மயா தேத்ய யோக: ப்ரோக்த புராதன:**
**பக்தோஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம் (3)**

அதே புராதனமான (பழைமையான) யோகத்தையே இப்போது நான் உனக்காக விளக்கிக் கூறினேன். ஏனெனில் நீ எனது பக்தனாகவும் நண்பனாகவும் இருக்கிறாய். மேலும் இந்த யோகம் மிகவும் சிறந்ததும் இரகசியமானதும் ஆகும். அர்ஜூனன் க்ஷத்திரிய வகுப்பின் சாதகன் ஆவான். ராஜ ரிஷியின் நிலையில் உள்ளவன் ஆவான். இந்நிலையில்தான் ரித்திகள் – சித்திகளின் பிடிக்குள் சிக்கிக் கொண்டு சாதகன் வீழ்ச்சியடைந்து விடுகிறான். இந்த நிலையிலும் கூட யோகம் நன்மையைத் தருவதற்குத் தயாரான நிலையில்தான் உள்ளது. ஆனால் பெரும்பாலான சாதகர்கள் இந்த நிலைக்கு வந்து சேர்ந்த உடனே தடுமாறத் தொடங்குகின்றனர். அத்தகைய அழிவற்றதான, ஆனால், இரகசியம் வாய்ந்த, இந்த யோகத்தை ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜூனனிடம் கூறினார். ஏனெனில் அர்ஜூனன் வீழ்ச்சியடைகின்ற நிலையில்தானே இருந்தான்.

ஏன் கூறினார்? ஏனெனில், "நீ எனது பக்தன், நிலைத்த உணர்வுடன் (என்னைத் தவிர வேறு எதையும் விரும்பாத) என்னை மட்டுமே சரணடைந்துள்ளவன், எனக்குப் பிரியமானவன், எனது நண்பன் என்பதால் கூறினேன்" என்று கூறினார்.

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் பகவான், "இந்த அழிவற்ற யோகத்தை நானே கல்பத்தின் ஆரம்பத்தில் சூரியனிடம் கூறினேன்" என்கிறார். சூரியனின் மூலமாக மனுவிற்கு இதே கீதை கிடைக்கப் பெற்றது. மனு இந்த கீதையைத் தமது நினைவாற்றலில் **(ஸ்ம்ருதி)** தக்கவைத்துக் கொண்டார். மனுவிடம் இருந்து இந்த கீதை என்னும் ஸ்ம்ருதி **இக்ஷ்வாகுவிற்குக்** கிடைத்தது. அவரிடமிருந்து **ராஜரிஷிகள்** அறிந்து கொண்டனர். ஆனால், இந்த மகத்துவம் வாய்ந்த, இந்த யோகம் நிறைவடையும் காலத்தில் மறைந்து போய்விட்டது. அந்தப் பழம்பெருமை வாய்ந்த ஸ்ம்ருதி ஞானத்தையே பகவான் அர்ஜுனனுக்குக் கூறினார். சாராம்சம் இதுதான்: "மனுவிற்கு எந்த ஞானம் கிடைத்ததோ அதுவே இந்த கீதையாகும். மனுவிற்கு இந்த கீதை பரம்பரைச் சொத்தாகக் கிடைத்தது. இதைத் தவிர வேறு எந்த ஸ்ம்ருதியை அவர் ஞாபகத்தில் வைத்திருந்தார்? கீதை ஞானத்தை நன்றாகக் கேட்டு அறிந்து கொண்ட பிறகு பதினெட்டாவது அத்தியாயத்தின் முடிவில் அர்ஜுனன், "மனுவிற்குக் கிடைத்த அதே ஸ்ம்ருதி ஞானம் எனக்கும் கிடைத்து விட்டது" என்று கூறுகிறான். ஆகவே, இந்த ஸ்ரீமத்பகவத் கீதைதான் உண்மையான **மனுஸ்ம்ருதி** ஆகும்.

நமக்கு எந்த பரமாத்மாவின் மீது விருப்பமோ, அந்த பரமாத்மாவானவர் நமது ஆன்மாவில் ஒன்று கலந்து நின்று, எப்பொழுது கட்டளைகளைப் பிறப்பிக்கத் தொடங்குகிறாரோ அப்பொழுதுதான் உண்மையான இறைவழிபாடே ஆரம்பிக்கிறது. இங்கே ஆன்மீகத் தூண்டுணர்வாளராக இருந்து செயல்படுகின்ற பரமாத்மா மற்றும் ஸத்குரு ஆகிய இருவருமே ஒருவருக்கொருவர் இணையானவர்கள். எந்த நிலையில் நாம் நின்று கொண்டிருக்கிறோமோ, அந்த நிலைக்கு எப்பொழுது இறைவனே இறங்கி வந்து, நமது இதயத்தில் எழுந்தருளி, நம்மைத் தடுத்தாட்கொள்கிறாரோ, தடுமாறும் போதெல்லாம் நம்மை கைதூக்கி விட்டுக் காப்பாற்றுகிறாரோ, அப்பொழுதுதான் மனமானது வசப்படுகிறது – **'மன் பஸ் ஹோய் தபஹிம், ஜப் ப்ரேரக் ப்ரபு பரஜே' (வினய பத்திரிக்கை, 89)** – 'எதுவரை இஷ்ட தெய்வம் (ஸத்குரு–இறைவன்) நமது ஆன்மாவில் ஒன்று கலந்து நின்று கொண்டு, சாரதியாகி, வழிநடத்துபவரின் நிலையை ஏற்றுக்கொள்ளவில்லையோ, அதுவரை சரியான அளவில் இறைவழிபாட்டிற்குள் நுழைவு கிடைப்பதில்லை. அந்த சாதகன்–என்னவோ கண்டிப்பாக ஏதோ முயற்சி செய்கிறான். ஆனால் அவனிடம் இறைவழிபாடு என்ற பெயரில் என்ன இருக்கிறது?'

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ் (குருதேவ் பகவான்) அவர்கள் இவ்வாறு கூறுவார்: "ஓ! நான் பலமுறை வீழ்ச்சியடையும் நிலையிலிருந்து அல்லவா தப்பித்துக்கொண்டேன். பகவானே என்னைக் காத்தருளினார். பகவான் எனக்கு அப்படிச் சொல்லிப் புரிய வைத்தார், இப்படிக் கூறினார்" என்றெல்லாம் அவர் எங்களிடம் சொல்வார். இதைக் கேட்டு நான் அவரிடம், "மகாராஜ் அவர்களே! பகவான் என்ன நம்மைப்போல் பேசுவாரா? உரையாடவெல்லாம் செய்வாரா என்ன?" என்று கேட்பேன். அதற்கு அவர், "ஆம்! ஆம்!! நானும் நீயும் உரையாடுவதைப் போன்றே பகவானும் உரையாடுவார். தொடர்ச்சி அறுந்து போகாமல் மணிக்கணக்காக அப்படியே பேசிக் கொண்டிருப்பார்" என்று பதில் கூறுவார். இதைக் கேட்டு நான், "பகவான் எப்படிப் பேசுவார்? இது மிகவும் புதிய விஷயமாகவும் கேள்விப்படாத ஒன்றாகவும் அல்லவா இருக்கிறது" என்று எண்ணி ஒருபுறம் வருத்தமாகவும் மறுபுறம் வியப்பாகவும் உணர்ந்தபடியே அப்படியே உட்கார்ந்து இருப்பேன். சிறிதுநேரம் கழித்து குருமகாராஜ், "எதற்குக் கவலைப்படுகிறாய்? உன்னுடனும் அவர் பேசுவார்" என்று கூறுவார். அவரது கூற்று நூற்றுக்கு நூறு உண்மையாகும். இதுவே நட்புணர்வு என்பது. அவர் ஒரு நல்ல நண்பராக இருந்து கெடுதல்களில் இருந்தெல்லாம் தடுத்தாட் கொண்டு வந்தால் மட்டுமே, இந்த இழப்பை அடைந்து போகும் நிலையில் இருந்து மீண்டு சாதகனால் கரை சேர முடியும் இதுவரை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், ஏதேனும் ஒரு மகாபுருஷரின் மூலமாக யோகத்தின் ஆரம்பம், அதில் உண்டாகும் தடைகள், அவைகளைக் கடக்கும் வழிமுறைகள் ஆகியவற்றைப் பற்றிக் கூறினார். இதுபற்றி அர்ஜுனன் கேள்வி கேட்டான்.—

**அர்ஜுன உவாச**
**அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத:**
**கதமேதத்விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி (4)**

பகவானே! உங்களுடைய பிறவியோ **'அபரம்'** இப்போதுதான் உண்டானது, மேலும் எனக்குள்ளே சுவாசத்தின் (சுரா) இயக்கமோ மிகவும். பழைமையானது. அப்படி இருக்கும்போது இந்த யோகத்தை இறைவழிபாட்டின் ஆரம்பத்தில் நீங்கள்தான் கூறினீர்கள் என்பதை எப்படி நான் ஒப்புக் கொள்வது? இதுபற்றி யோகேஷ்வரரான ஸ்ரீகிருஷ்ண மஹராஜ் கூறினார்.

**ஸ்ரீபகவானுவாச**
**பஹுனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன**
**தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப (5)**

அர்ஜுனா! எனக்கும் உனக்கும் எத்தனையோ பிறவிகள் கழிந்து விட்டன. பெருந்தவத்தை உடையவனே! பரந்தபா! அவை அனைத்தையும் நீ அறிய மாட்டாய். ஆனால் நான் அறிவேன். சாதகன் அறிய மாட்டான், ஆன்மாவில் நிலைபெற்ற மகாபுருஷர் அறிவார். புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட இறைவனில் ஒன்று கலந்து நிற்பவர் அறிவார். நீங்கள் என்ன அனைவரையும் போலவே பிறக்கிறீர்களா?" ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, "இல்லை, ஆன்ம வடிவத்தை அடைதல் என்பது உடலை அடைவதில் இருந்து வேறுபட்டது. எனது பிறவியை ஊனக்கண்கள் கொண்டு பார்க்க முடியாது. நான் பிறப்பற்றவனாக, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்டவனாக, நிலையானவனாக இருந்த போதிலும் இந்த உடலையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறேன்" என்கிறார்.

**'அவது ஜீவத் மே கர் ஆஸா, முயே முக்தி குரு கஹே ஸ்வார்த்தீ,**
**ஜூட்டா தே விஸ்வாஸா'**

('சாதுவே! உயிருடன் வாழும்போதே முக்தி அடைய ஆசைப்படு. இறந்த பிறகு முக்தி கிடைக்கும் என்று சொல்கின்ற குரு சுயநலவாதி ஆவான். அவன் பொய்யான நம்பிக்கையை ஊட்டுகிறான்')

இந்த உடலில் உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும் போதுதான் அந்தப் பரம தத்துவ பரமாத்மாவில் நுழைவு பெறமுடியும். சாதனையில் இம்மியளவு பாக்கி இருந்தாலும் கூட மீண்டும் பிறவியெடுக்க வேண்டியிருக்கும். இதுவரைக்கும் அர்ஜுனன் தன்னைப் போன்றே ஸ்ரீகிருஷ்ணரையும் உடல் தரித்த ஒருவராகவே புரிந்து வைத்திருந்தான். அவன் அந்தரங்கமானக் கேள்வியைக் கேட்கிறான் – உங்களுடைய பிறவியானது மற்றவர்களைப் போன்றேதான் இருக்கிறதா என்ன? நீங்கள் இந்த உடல்களைப் போன்றேதான் பிறக்கிறீர்களா? அதற்கு ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**அஜோபி ஸன்னவ்யயாத்மா பூதானாமீஷ்வரோபி ஸன்**
**ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா (6)**

நான் அழிவற்றவனாகவும், பிறப்பற்றவனாகவும், மற்றும், மனிதர் உட்பட ஒட்டு மொத்த ஜீவராசிகளின் சுவாசத்தில் (ஸ்வரம்) சஞ்சாரம் செய்து கொண்டிருந்த பிறகும் என்னுடைய மாயையைக் கட்டுப்படுத்தி ஆன்ம மாயையால் என்னை வெளிப்படுத்திக் கொள்கிறேன். மாயையில் ஒருவகை அவித்யா மாயை எனப்படும். அது இயற்கையில் அல்லது படைப்பில் நம்பிக்கையை ஏற்படுத்துகிறது; தாழ்ந்த மற்றும் கீழ்த்தரமான பிறவிகளுக்குக் காரணமாக அமைகிறது. மாயையில்

மற்றொரு வகையோ ஆன்ம மாயை எனப்படும். அது ஆன்மாவில் நுழைவு பெற்றுத் தருகிறது; ஆன்ம வடிவத்தின் பிறப்பிற்குக் காரணமாக அமைகிறது. இதையே யோகமாயை என்றும் கூறுகிறோம். நாம் எதிலிருந்து விலகிப் போயிருந்தோமோ, அந்த, என்றும் நிலையான, ஆன்ம வடிவத்துடன் மீண்டும் நம்மை இணைத்து வைக்கிறது; சேர்த்து வைக்கிறது. அந்த ஆன்மீகச் செயல்முறையின் மூலம் நான் என்னுடைய மூன்று குணங்களுடன் கூடிய இயற்கையை (திரிகுணமயி பிரகிருதி) வசப்படுத்திக் கொண்டு என்னை வெளிப்படுத்திக் கொள்கிறேன்.

பெரும்பாலோர், “பகவான் அவதாரம் எடுப்பார். நாம் அவரைக் காண்போம்” என்று கூறுகின்றனர். ஸ்ரீகிருஷ்ணரோ, “அனைவரும் பார்க்கும்படியாக அப்படி ஒன்றும் நேருவதில்லை” என்கிறார். ஆன்ம வடிவத்தின் பிறப்பு பிண்ட உருவத்தில் நிகழ்வதில்லை. ஸ்ரீகிருஷ்ணர், “யோக சாதனையின் மூலமாகவும், ஆன்ம மாயையின் மூலமாகவும், என்னுடைய மூன்று குணங்களுடன் கூடிய படைப்பினைத் தன்வயப்படுத்திக் கொண்டு நான் படிப்படியாக என்னை வெளிப்படுத்திக் கொள்கிறேன்” என்கிறார். ஆனால் எத்தகைய சூழ்நிலைகளில்?

**யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்ப்பவதி பாரத**
**அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம் யஹம் (7)**

அர்ஜுனா! எப்பொழுதெல்லாம் பரமதர்ம பரமாத்மாவிற்காக இதயம் வேதனையால் நிரம்பி வழிகிறதோ, எப்பொழுது அதர்மம் அதிகரித்து, பக்தன் அவற்றைக் கடந்து செல்ல முடியாமல் தவிக்கிறானோ, அப்பொழுதெல்லாம் நான் எனது ஆன்மாவைப் படைத்தருள்கிறேன். இத்தகைய இதய வேதனை மனுவிற்கும் உண்டானது.

**ஹ்ருதய் பஹுத் துக் லாக், ஜனம் கயவு ஹரி பகதி பினு**
**(ராமசரித மானஸ் 1/142)**

(‘இதயம் மிகுந்த வேதனை கொண்டுள்ளது. ஹரி பக்தியின்றி வாழ்க்கை வீணாகப் போய்விட்டது.’)

எப்பொழுது உங்களுடைய இதயம் அனுராகத்தால் (இறைப்பற்றினால்) பூரிப்படைந்து, அந்த நிலையான தர்மத்திற்காக (இறைவனுக்காக) **‘கத்கத் கிரா நயன் பஹ் நீரா’** கத கதவென்று கண்களில் இருந்து ஆனந்தக் கண்ணீர்ப் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கும் நிலை வருகிறதோ, எவ்வளவோ முயற்சி செய்தும் கூட அனுராகம் (அன்பு) நிறைந்த பக்தனால் அதர்மத்தைக் கடந்து செல்ல முடியவில்லையோ, அத்தகைய சூழ்நிலையில் நான் எனது வடிவத்தைப் படைக்கிறேன். அதாவது பகவான் தோன்றியருளும் நிகழ்வு உண்மை அன்பு

கொண்டவனுக்காக, அனுராகிக்காக மட்டுமே ஆகும் – **'ஸோ கேவல் பகதன் ஹித் லாகி'** (ராமசரித மானஸ் 1/12/5) – ('பக்தனுடைய நன்மையைக் கருதி மட்டுமே இது நிகழ்கிறது.')

இந்த அவதாரம் ஏதேனும் ஒரு பாக்கியவானாகிய சாதகனின் ஆழ் மனத்தில் நிகழ்கிறது. நீங்கள் இவ்வாறு உங்களை வெளிப்படுத்திக் கொண்டு என்ன செய்கிறீர்கள்?

**பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம்**
**தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே (8)**

அர்ஜுனா! **'ஸாதூனாம் பரித்ராணாய'** – அடையத் தகுந்தவர் பரமாத்மா ஒருவரே. அவரை அடைந்த பிறகு வேறு எந்த சாதனையும் எஞ்சியிருப்பதில்லை. அந்த அடையத் தகுந்தவருள் நுழைவு பெற்றுத் தரவல்ல விவேகம், வைராக்கியம், புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு முதலான தெய்வீகச் செல்வங்களை தடையின்றி பெருகச் செய்வதற்கும் மற்றும் **துஷ்க்ருதாம்** – தாழ்ந்த, இழிவான காரியங்களை செய்யத் தூண்டும் காமம், கோபம், விருப்பு, வெறுப்பு முதலான முரண்பாடான தீய எண்ணங்களை வேருடன் அழிப்பதற்காகவும், தர்மத்தை மிகவும் நல்லமுறையில் நிலைநாட்டி உறுதியுடன் இயங்கச் செய்வதற்காகவும் நான் யுகம் யுகந்தோறும் என்னை வெளிப்படுத்திக் கொள்கிறேன்.

யுகம் என்பதற்கு சத்தியயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் என்பதல்ல பொருள். யுகதர்மங்களின் ஏற்றமும் தாழ்வும் மனிதர்களின் சுபாவத்தைப் பொறுத்ததாகும். யுகதர்மங்கள் எப்போதுமே இருக்கின்றன. ராமசரித மானஸில் இதைப் பற்றிய குறிப்பு உள்ளது.

**'நித ஜுக் தர்ம் ஹோஹீம் ஸப் கேரே**
**ஹ்ருதய் ராம் மாயா கே ப்ரேரே' (ராமசரித மானஸ் 7/103க/1)**

யுகதர்மங்கள் எல்லோருடைய இதயத்திலும் எப்போதும் இருந்தே வந்துள்ளன. அவித்யையால் அன்று, மாறாக, வித்யையால், ராம மாயையின் தூண்டுதலால் இதயத்தில் இவை விழிப்புறுகின்றன. இந்த சுலோகத்தில் 'ஆத்மமாயை' என்று கூறப்படுவதே 'ராம மாயை' ஆகும். இதயத்தில் ராம நிலையைப் பெற்றுத் தரவல்ல, ராமரின் தூண்டுதலால் விழிப்புறும் வித்யையாகும் இது. இப்போது எந்த யுகம் நடந்து கொண்டு இருக்கிறது என்பதை எப்படித் தெரிந்து கொள்வது?

**ஸுத்த ஸத்வ ஸமதா விக்யானா**
**க்ருத ப்ரபாவ் ப்ரஸன்ன மன் ஜானா' (ராமசரித மானஸ்7/103க/2)**

'எப்பொழுது இதயத்தில் தூய்மையான சத்துவ குணம் செயல்படுகின்ற நிலையில் உள்ளதோ, ராஜஸீகம், மற்றும், தாமஸீகம் ஆகிய இரண்டு குணங்களும் அமைதியடைந்து விட்டதோ, பாகுபாட்டு உணர்வுகள் அனைத்தும் அழிந்து விட்டதோ, யாரிடமும் வெறுப்புணர்வு என்பதேயில்லையோ, விஞ்ஞானம் அதாவது இஷ்ட தெய்வத்திடமிருந்து (ஸத்குரு – இறைவன்) கட்டளைகளைப் பெறுவதற்கும் மற்றும், அவற்றையெல்லாம் நிறைவேற்றுவதற்கும் அகத்திறன்பாடு வந்து விட்டதோ, மனத்தில் முழுமையான மகிழ்ச்சி பொங்கி வழிகிறதோ, – இத்தகைய தகுதிகள் அனைத்தும் வந்து விட்டால் சத்திய யுகத்தில் நுழைவு கிடைத்து விட்டது என்று பொருள். இதேமுறையில் மற்ற இரண்டு குணங்களைப் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளது. இறுதியாக,

**'தாமஸ பஹுத் ரஜோ குண தோரா**
**கலி ப்ரபாவ் விரோத் சஹும் ஓரா' (ராம சரித மானஸ்7/103க/5)**

–தாமஸீக குணம் அதிகமாகவும், அதில் கொஞ்சம் ராஜஸீக குணமும் கலந்து இருந்தால், நான்கு திசைகளிலும் பகைமை மற்றும் விரோதம் இருந்தால், அத்தகையவன் 'கலியுகவாசி' ஆவான். எப்பொழுது தாமஸீக குணம் செயல்படுநிலையில் உள்ளதோ, அப்பொழுது மனிதர்களிடம் சோம்பேறித்தனம், உறக்கம், கவனமின்மை ஆகியவை அதிகமாகக் காணப்படும். அவர்கள் கடமையை நன்குணர்ந்து இருந்தபோதிலும் அதில் ஈடுபட முடியாமல் இருப்பார்கள். மேலும் செய்யத் தகாத, தடை செய்யப்பட்டுள்ள, கர்மங்களைப் பற்றி அறிந்த போதிலும், அவற்றிலிருந்து விடுபட முடியாமல் திணறிக் கொண்டிருப்பார்கள். இந்த முறையில் யுக தர்மங்களின் ஏற்றத்தாழ்வுகள் மனிதர்களுடைய அகவியல்புத் தகுதிகளையே முழுவதுமாகச் சார்ந்துள்ளன. சிலர் இந்த அகவியல்புத் தகுதிகளையே 'நான்கு யுகங்கள்' என்றால், இன்னும் சிலரோ 'நான்கு வர்ணங்கள்' என்று பெயரிடுகின்றனர். மற்றவர்களோ இவற்றையே மிகவும் உயர்ந்தது, உயர்ந்தது, நடுத்தரம், மற்றும் தாழ்ந்தது ஆகிய 'நான்கு பிரிவுகளைச் சேர்ந்த சாதகர்கள்' என்று ஒழுங்குமுறைப்படுத்தி சொல்கின்றனர். ஒவ்வொரு யுகத்திலும் இஷ்ட தெய்வம் (ஸத்குரு–இறைவன்) துணை புரிகிறது. ஆம்! உயர்நிலைப்பிரிவில் உறுதுணை அதிகமாகக் கிடைப்பது போலவும் கீழ்நிலை யுகங்களில் குறைவாகக் கிடைப்பது போலவும் தோன்றுகிறது.

ஸ்ரீகிருஷ்ணர் சுருக்கமாக, அடையத் தகுதி படைத்த இறைவனைப் பெற்றுத் தரவல்ல விவேகம், வைராக்கியம், முதலான தெய்வீகக் குணங்களைத்

தடையில்லாமல் பெருகச் செய்யவும், மற்றும், கீழ்த்தரமான செயல்களுக்குக் காரணமாக அமையும் காமம், கோபம், விருப்பு, வெறுப்பு முதலானவற்றை முழுவதுமாக அழிப்பதற்கும், பரம தர்மமாகிய பரமாத்மாவில் உறுதியாக நிலைபெறச் செய்யவும் நான் யுகம் யுகம் தோறும் அதாவது ஒவ்வொரு சூழ்நிலையிலும் ஒவ்வொரு சாதனைப் பிரிவிலும் ஒவ்வொரு தகுதி நிலையிலும் என்னை வெளிப்படுத்திக் கொள்கிறேன்" என்கிறார். இது தீமையிலிருந்து விடுபட எண்ணி மனத்துயரம் கொள்பவர்களுக்கு மட்டும் தான் இஷ்ட தெய்வம் (ஸத்குரு, இறைவன்) கைகொடுத்து துணைசெய்யாதவரை உங்களால் புலன் நுகர்ச்சி ஆசைகள் (விகாரங்கள்) முழுவதையும் அழிக்க முடிந்ததா? மற்றும் இன்னும் எவ்வளவு மீதம் உள்ளன? என்பதையெல்லாம் அறிந்து கொள்ளமுடியாது. இறைவனுள் நுழையும் காலம் முதல் உச்ச நிலையாகிய இறுதி எல்லை வரைக்கும் இஷ்ட தெய்வம் (ஸத்குரு) ஒவ்வொரு சாதனைப் பிரிவிலும் ஒவ்வொரு தகுதி நிலையிலும் கூடவே வந்து கொண்டிருக்கிறார். அவருடைய வெளிப்பாடு பக்தனின் இதயத்தில் நிகழ்கிறது. பகவான் வெளிப்படுகிறார் என்றால் அனைவராலும் அவரைப் பார்க்க முடியும்தானே? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, 'இல்லை' என்று பதில் கூறுகிறார்.

**ஜன்ம கர்ம ச மே திவ்ய மேவம் யோ வேத்தி தத்வத :**
**த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம நைதி மாமேதி ஸோர்ஜுன: (9)**

அர்ஜுனா! எனது அந்தப் பிறவி அதாவது பக்தனின் இதயம் வேதனை அடைந்ததால் எனது ஆன்ம வடிவத்தின் படைப்பு, மற்றும், எனது கர்மம், அதாவது, தீய செயல்களுக்கான காரணங்களை அழித்தல், அடையத் தகுந்த இறைவனைப் பெற்றுத் தரவல்ல ஆன்மத் திறன்பாடுகளை குறைவின்றிப் பெருக்கோடச் செய்தல், தர்மத்தை நிலைபெறச் செய்தல் முதலான என்னுடைய இந்தக் கர்மம், மற்றும், பிறவி ஆகியவை தெய்வீகமானவை, அதாவது, உலகியலுக்கு எல்லாம் அப்பாற்பட்டவை. உலகியல் சார்ந்தவை அல்ல. இந்த ஊனக் கண்களைக் கொண்டு அதைப் பார்க்க முடியாது. மனம், மற்றும் புத்தியால் அதனை அளவிடவும் முடியாது. இவ்வளவு தூரம் இரகசியமாக இருக்கும் இதனை யார் பார்க்கிறார்கள்? **'யோ வேத்தி தத்வத'–** தத்துவ தரிசியால் மட்டுமே எனது இந்தப் பிறவி, கர்மம் ஆகியவற்றைப் பார்க்க முடியும். மேலும் அவர் எனது நேரடிதரிசனத்தைப் பெற்று, புனர் ஜன்மம் எனப்படும் மறுபிறவியை அடைவதில்லை. மாறாக, என்னையே அடைகிறார்.

தத்துவ தரிசி மகாபுருஷர் மட்டுமே பகவானுடைய பிறவி, மற்றும், காரியம் ஆகியவற்றைப் பார்க்கிறார் என்றால் உலகம் முழுவதும் மக்கள் இலட்சக்கணக்கில் கூட்டத்தைக் கூட்டிக் கொண்டு, 'அவதாரம் நிகழ்ந்தால் நாமும் அவரைத்

தரிசனம் செய்யலாம்' என்றெல்லாம் சொல்கிறார்களே அது ஏன்? நீங்கள் என்ன தத்துவ தரிசியா? மகாத்மாக்களின் வேடம் அணிந்து கொண்டு, இன்றும்கூட, பல்வேறு வழிகளில், முக்கியமாக சாது, மகாத்மாக்களின் வேடங்களில் மறைந்து கொண்டு, அவர்களே தம்மை, அவருடைய ஆட்களின்மூலமாக அவதாரம்' என்று குறிப்பிட்டு, பிரச்சாரம் செய்து கொண்டு இங்குமங்கும் திரிகின்றனர். இதைக்கேட்டு அப்பாவி மக்களும் அந்த அவதாரங்களையெல்லாம் காண்பதற்கு செம்மறியாட்டு மந்தைகளைப் போன்று இங்குமங்கும் கூட்டம் கூடுகின்றனர். ஆனால் ஸ்ரீகிருஷ்ணரோ, 'தத்துவ தரிசியால் மட்டுமே பார்க்க முடியும்" என்று கூறுகிறார். இங்கே யாரைத் தத்துவ தரிசி என்கிறார்?

இரண்டாவது அத்தியாயத்தில் உண்மை உண்மையற்றது (ஸத்—அஸத்) ஆகியவற்றை நிர்ணயிக்கும் வகையில் ஸ்ரீகிருஷ்ணர், ''அர்ஜுனா! உண்மையற்ற (அஸத்) பொருளுக்கு நிலைத்தன்மை என்பதேகிடையாது. மேலும், உண்மைப் (ஸத்) பொருளுக்கோ மூன்று காலங்களிலும் எத்தகைய குறைவும் இல்லை" என்கிறார்.

"நீங்கள்தான் இப்படிக் கூறுகிறீர்களா?" அதற்கு அவர், "இல்லை, தத்துவ தரிசிகள் இதைப் பார்த்துள்ளனர்,'' என்கிறார். மொழிவல்லுநர்களோ, செல்வந்தர்களோ இதைப் பார்க்கவில்லை. இங்கே இதையே மீண்டும் வலியுறுத்தும் விதமாக, "எனது இந்த தெய்வீக வெளிப்பாடு என்னவோ நிகழவே செய்கிறது. ஆனால் அதை தத்துவ தரிசிகள் மட்டுமே பார்க்க முடியும்" என்று கூறுகிறார்.

இப்போது 'தத்துவ தரிசி' என்பது ஒரு கேள்விக் குறியாகிறது. தத்துவ தரிசி என்பவர் யார்? ஐந்து தத்துவம் அல்லது இருபத்தி ஐந்து தத்துவம் – இவற்றின் எண்ணிக்கையைக் கற்றுக் கொண்டு விட்டால் தத்துவ தரிசி ஆகிவிடலாமா? ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, "ஆன்மாவே மேலான தத்துவம்" என்று கூறியுள்ளார். ஆன்மா மேலான பொருளில் (பரம்) ஒன்றிணைந்து பரமாத்மாவாகி விடுகிறது. ஆன்மாவை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரத்துடன் அறிந்து கொள்பவரே இந்த இறைவெளிப்பாட்டினைப் புரிந்து கொள்கிறார். இதிலிருந்து இறை அவதாரம் என்பது இறைவனுக்காகப் பிரிவாற்றாமையுடன் தவிக்கின்ற பக்தனின் இதய தேசத்தில் நிகழ்கிறது. என்பது தெளிவாகிறது. அவனால் ஆரம்பநிலையில், 'தனக்கு யார் கட்டளையிடுகிறார்? தன்னை யார் ஆன்மீகப் பாதையில் வழி நடத்துகிறார்?' என்பதைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. ஆனால், பரம தத்துவ பரமாத்மாவை தரிசனம் செய்ததுடன் சேர்த்துதான் அவனால் இறைவனைப் பார்க்க முடிகிறது, அவரை முழுவதுமாகப் புரிந்து கொள்ள முடிகிறது. அதற்குப்பிறகு அவன் உடலைத் துறந்து புனர் ஜன்மம் எனப்படும் மறுபிறவியை அடைவதில்லை.

ஸ்ரீகிருஷ்ணர், "எனது பிறவி தெய்வீகமானது. இதைப் பார்ப்பவர் மட்டுமே என்னை அடைகிறார்" என்கிறார். ஆனால் மக்களோ அவருக்கே சிலை செய்து, பூஜைசெய்ய ஆரம்பித்ததுடன் ஆகாயத்தில் எங்கோ அவரது இருப்பிடத்தையும் கற்பனை செய்து கொண்டனர். ஆனால், அப்படியெல்லாம் ஒன்றுமே கிடையாது. அந்த மஹாபுருஷர் சொல்ல விரும்புவது இவ்வளவுதான்: "ஒருவேளை இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்தால், நீங்களும் தெய்வீகமானவர்களே என்பதை அறிந்து கொள்வீர்கள். நீங்கள் எதுவாக ஆகப்போகிறீர்களோ, நானும் ஏற்கனவே அதுவாகவே ஆகி விட்டேன். நான் உங்களுடைய எதிர்பார்ப்பாகவும், எதிர்காலமாகவும் இருக்கிறேன்." உங்கள் அகத்தில் என்றைக்கு அத்தகைய பூரணத்துவநிலையை அடைகிறீர்களோ, அப்போதே நீங்களும் ஸ்ரீகிருஷ்ணர் எவரோ அவராகவே ஆகி விடுவீர்கள். எது ஸ்ரீகிருஷ்ணருடைய உண்மையான ஆன்மவடிவமோ அதுவே உங்களுடையதுமாகி விடும். இறை அவதாரம் வெளியில் எங்கும் நிகழ்வதில்லை. ஆம்! ஒருவேளை நீங்கள் பக்திநிறைந்து உள்ளப்பூரிப்புடன் கூடிய இதயம் உள்ளவர் (அனுராகம்) என்றால், உங்களுடைய அகத்தில்தான் இறை அவதாரம் பற்றிய அனுபூதி (அனுபவம்) சம்பவிக்கும். ஸ்ரீகிருஷ்ணர் உங்களையெல்லாம் உற்சாகப்படுத்தும் வகையில், "எண்ணற்றோர் இந்தப் பாதையில் பயணம் செய்து என்னுடைய வடிவத்தை அடைந்துள்ளனர்" என்கிறார்.

**வீதராகபயக்ரோதா மன்மயா மாமுபாஸ்ரிதா:**
**பஹவோ ஜ்ஞானதபஸா பூதா மத்பாவமாகதா: (10)**

விருப்பு **(ராகம்)** மற்றும் விருப்பற்ற நிலை **(விராகம்)** ஆகிய இரண்டு நிலைகளையும் கடந்து, மிகவும் உயர்ந்த நிலையில் அடையப் பெற்ற பற்றற்ற தன்மை **(வீதராகம்)** மற்றும் பயம்–பயமின்மை கோபம்–கோபமின்மை ஆகிய இரண்டையும் கடந்து, நிலைத்த உணர்வுடன் அதாவது, அகங்காரத்தைத் தவிர்த்து என்னுடைய சரணத்தை அடைந்து எண்ணற்றோர் ஞானம் என்னும் தவத்தால் புனிதமடைந்து என்னுடைய ஆன்ம வடிவத்தை அடையப் பெற்றுள்ளனர். இப்போதுதான் இது போன்று எல்லாம் நடக்கிறது என்பதல்ல பேச்சு. இந்த வழி முறை எப்போதுமே இருந்து வருகிறது. எவ்வாறான முறை? எவரெவருடைய இதயமெல்லாம் அதர்மத்தின் வளர்ச்சியைக் கண்டு, பரமாத்மாவிற்காக வேதனையால் நிறைகிறதோ, அந்நிலையில் நானே என்னுடைய ஆன்ம வடிவத்தைப் படைக்கிறேன். அவர்கள் என்னுடைய ஆன்ம வடிவத்தையே அடைகிறார்கள். ஸ்ரீகிருஷ்ணர் எதனை 'தத்துவ தரிசனம்' என்று கூறினாரோ, அதையேதான் இப்போது 'ஞானம்' என்று குறிப்பிடுகிறார். பரமாத்மாவே பரம தத்துவம் ஆவார். அவரை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதே ஞானம் எனப்படும். அவ்வாறு அறிந்து கொண்ட ஞானி என்னுடைய ஆன்ம வடிவத்தையே

அடைகிறார். இத்துடன் கேள்வியானது நிறைவடைகிறது. இப்போது அவர் தகுதி நிலைகளை ஆதாரமாகக் கொண்டு இறைவழிபாட்டில் ஈடுபடுபவர்களின் சாதனைப் பிரிவுகளை வகைப்படுத்துகிறார்.

**யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்**
**மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வஷ : (11)**

பார்த்தனே! யாரெல்லாம் என்னை எவ்வளவு பிடிப்புணர்வுடன் வழிபடுகிறார்களோ, நானும் அவர்களை அவ்வளவு தூரம் வழிபடுகிறேன். அத்தனை அளவு உறுதுணையாக இருக்கிறேன். சாதகனுடைய நம்பிக்கையே அவனுக்கு இறையருளாகத் திரும்பக் கிடைக்கிறது. இந்த இரகசியத்தை அறிந்து கொண்டு நல்லறிவாளர்கள் முழுமையான உணர்வுடன் என்னுடைய பாதைக்கு ஏற்றவாறு நடந்து கொள்கின்றனர். நான் எவ்வாறு நடந்து கொள்கிறேனோ, எனக்கு எது பிரியமோ, அவ்வாறே நடந்து கொள்கின்றனர். நான் எதைச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேனோ அவர்களும் அதையே செய்கின்றனர்.

பகவான் எவ்வாறு வழிபடுகிறார்? அவர் ஆன்மாவில் ஒன்று கலந்து சாரதியாக நிற்கிறார், கூடவே வருகிறார். இதுவே அவருடைய வழிபாடு ஆகும். எவற்றில் இருந்தெல்லாம் தீமைகள் பிறக்கும் வாய்ப்புள்ளதோ, அவற்றையெல்லாம் அழித்துப் போடுவதற்காகவே அவர் வரிந்து கட்டிக்கொண்டு நிற்கிறார். உண்மையில் நுழைவு பெற்றுத் தரவல்ல சத்துவ (நற்) குணங்களைப் பாதுகாக்கும் முனைப்புடன் அவர் எழுந்து நிற்கிறார். எதுவரை இஷ்டதெய்வம் (ஸத்குரு– இறைவன்) இதயத்தில் முழுமையான அளவில் ஒன்று கலந்து நிற்கவில்லையோ, மற்றும் ஒவ்வொரு அடியிலும் எச்சரிக்கை செய்யவில்லையோ, அதுவரை எவ்வளவுதான் இறைவழிபாட்டுப் பிரியராக இருந்தாலும் சரி, இலட்சக் கணக்கான முறை கண்களை மூடிக் கொள்ளட்டும், இலட்சக் கணக்கான முயற்சிகளை வேண்டுமானால் மேற்கொள்ளட்டும், அவரால் இந்த இயற்கை அல்லது படைப்பின் போராட்டங்களில் இருந்து தப்பிக் கரை சேரமுடியாது. அவரால், 'நாம் எவ்வளவு தூரம் கடந்து விட்டோம்! இன்னும் எவ்வளவு மீதமிருக்கிறது?' என்பதை எல்லாம் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்? இஷ்டதெய்வமே (ஸத்குரு – இறைவன்) ஆன்மாவில் இரண்டறக் கலந்து நின்று கொள்கிறார். மேலும் சாதகனை ஆன்மீகப் பாதையில் வழிநடத்தும் விதமாக, 'நீ இப்போது இங்கே இருக்கிறாய். இவ்வாறு செய். இப்படிப் போ' என்று அழைத்துச் செல்கிறார். இந்தமுறையில் இயற்கை அல்லது படைப்பின் (தனிமனித இயல்பின்) மேடு பள்ளங்களை எல்லாம் நிரப்பியபடியே கொஞ்சம் கொஞ்சமாக அவனை முன்னேற்றிக் கொண்டு சென்று ஆன்ம வடிவத்தில் நுழைவு பெற்று விடச் செய்கிறார். சாதகன்தான் இறை வழிபாட்டினைச் செய்ய வேண்டும். ஆனால் அவன் மூலமாக இந்தப் பாதையில்

எவ்வளவு தூரம் கடக்கப்படுகிறதோ, அது இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு–இறைவன்) திருக்கொடை ஆகும். இவ்வாறு அறிந்து கொண்ட எல்லா மனிதர்களும் முழுமையான ஈடுபாட்டுடன் என்னைப் பின்பற்றுகின்றனர். அவர்கள் எவ்வாறு பின்பற்றி நடக்கிறார்கள்?

**காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா:**
**க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர்பவதி கர்மஜா (12)**

அத்தகையோர் இந்த உடலில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே கர்மங்களின் சித்தியை அடைய விரும்பி தேவதைகளை வழிபடுகின்றனர். எந்தக் கர்மம்? ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! நீ நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்!" என்கிறார். எது நியமிக்கப்பட்டுள்ள கர்மம்? வேள்வியின் செயல்முறையே கர்மம் எனப்படும். வேள்வி என்பது யாது? ஆன்மீக சாதனையின் சிறப்பு விதிமுறைகள். அதில், உள்மூச்சு–வெளிமூச்சில் ஆன்ம சிந்தனை, புலன்களின் வெளிமுகப்பிரவாகத்தைக் கட்டுப்பாடு என்னும் அக்கினியில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பித்தல் ஆகியவை அடங்கும். இந்த வேள்வியின் விளைவாக பரமாத்மா அடையப்படுகிறார். கர்மத்தின் தூய்மையான பொருள் ஆராதனை எனப்படும். இதனுடைய முழுவடிவமும் இதே அத்தியாயத்தில் இனிவரும் பகுதியில் விளக்கப்பட உள்ளது. இந்த ஆராதனையின் விளைவு என்ன? **'ஸம்ஸித்திம்'**– பரம ஸித்தியாகிய பரமாத்மா, **'யாந்தி ப்ரஹ்ம ஸனாதனம்'** – என்றும் நிலையான, மாறாத பிரம்மத்தில் நுழைவு பெறுதல்தான் 'பரம நைஷ்கர்ம்யம்' என்னும் நிலையாகும். ஸ்ரீகிருஷ்ணர், "எனக்கு ஏற்றவாறு பின்பற்றி நடப்பவர்கள் இந்த மானுட உலகில் கர்மத்தின் இறுதி விளைவாகிய **பரம நைஷ்கர்ம்ய ஸித்தியை** அடைய வேண்டி தேவதைகளை வழிபடுகின்றனர். அதாவது, தெய்வீகச் செல்வங்களை வலுப்படுத்துகின்றனர்.

மூன்றாவது அத்தியாயத்தில் அவர், "இந்த வேள்வியின் மூலமாக நீ தேவதைகளை வளப்படுத்து, தெய்வீகச் செல்வங்களைப் பெருக்கு" என்று கூறினார். எவ்வளவுக்கு எவ்வளவு இதய தேசத்தில் தெய்வீகச் செல்வங்கள் உயர்வடைகின்றனவோ, அவ்வளவுக்கு அவ்வளவு உன்னுடைய உயர்வும் அமையும். இந்த முறையில் ஒருவருக்கொருவர் முன்னேற்றமடையச் செய்து கொண்டே மேலான, உயர்ந்த இறைவனை அடைவீர்களாகுக! இது இறுதிவரை இவ்வாறு உயர்வடையச் செய்து கொண்டே போவதற்கான அகச் செயல்முறையாகும். இதை வலியுறுத்தும் வகையில் ஸ்ரீகிருஷ்ணர், "எனக்கு அனுகூலமான முறையில் பின்பற்றி நடப்பவர்கள் இந்த மனித உடலில், உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே, கர்மங்களின் சித்தியை அடையும் விருப்பத்துடன் தெய்வீகச் செல்வங்களைப் பலப்படுத்துகின்றனர். அதன் மூலம்

அவர்களுக்கு **நைஷ்கர்ம்ய ஸித்தி** சீக்கிரமே கிடைத்து விடுகிறது. அவர்கள் தோல்வி அடைவதே இல்லை. வெற்றிமேல் வெற்றி கண்டு கொண்டே செல்வர். இங்கே சீக்கிரமே என்பதற்கு என்ன பொருள்? 'கர்மத்தில் ஈடுபட ஆரம்பித்த உடனேயே, அடுத்தக் கணமே, இந்தப் பரம ஸித்தி கிடைத்து விடும்' என்று பொருளா? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, "இல்லை, இந்த உயர்நிலையை ஒவ்வொரு படியாக ஏறிக் கடந்து செல்வதற்கே வழிவகை உள்ளது. யாரும் தடாலெனத் தாவிக் குதித்து 'உணர்வு கடந்த தியானநிலை' என்றெல்லாம் அதிசயங்கள் எதையும் நிகழ்த்தி விட முடியாது" என்கிறார். இது பற்றிப் பார்க்கலாம்.

**சாதுர் வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகஷ:**
**தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்யகர்த்தாரமவ்யயம் (13)**

அர்ஜுனா! **'சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்'**– நான்கு வர்ணங்களையும் நானே உருவாக்கினேன். அப்படியென்றால் மனிதர்களை நான்கு பாகங்களாகப் பிரித்துப் போட்டாரா என்ன? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, 'இல்லை' என்று பதில் அளிக்கிறார். **'குணகர்ம விபாகச'**– குணங்களின் அடிப்படையில் கர்மத்தையே நான்கு பிரிவுகளில் வகைப்படுத்தியுள்ளேன். குணம் ஒரு அளவுகோல், அளவுக் குறியீடு ஆகும். தாமஸீக குணம் இருந்தால் சோம்பேறித்தனம், உறக்கம், கவனமின்மை, கர்மத்தில் ஈடுபடும் விருப்பமில்லாத சுபாவம், நன்றாக அறிந்தும் கூடச் செய்யக் கூடாதவற்றில் இருந்து விடுபட முடியாத இக்கட்டான சூழ்நிலை ஆகியவை இருக்கும். இந்நிலையில் சாதனையை எவ்வாறு ஆரம்பிக்க வேண்டும்? நீங்கள் இரண்டு மணிநேரம் இறை ஆராதனையில் அமர்கிறீர்கள். அந்தக் கர்மத்தில் ஈடுபடும் முயற்சியுடையவராக மாற விரும்புகிறீர்கள். ஆனால், பத்து நிமிடங்கள் கூட உங்களால் நீங்கள் நினைத்தபடி நடந்து கொள்ள முடிவதில்லை. உடல் என்னவோ கண்டிப்பாக உட்கார்ந்து இருக்கிறது. ஆனால் எந்த மனத்தை உட்கார வைக்க வேண்டுமோ, அது காற்றுடன் பேசிக் கொண்டிருக்கிறது, குதர்க்க வலையைப் பின்னிக்கொண்டிருக்கிறது. எண்ணங்கள் அலைஅலையாக மோதிக் கொண்டிருக்கின்றன. பிறகு ஏன் நீங்கள் இவ்வாறு உட்கார்ந்து இருக்க வேண்டும்? நேரத்தை ஏன் வீணாக்கிக் கொண்டிருக்க வேண்டும்? அந்தச் சமயத்தில், **'பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்'**– புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட, பரமாத்ம நிலையில் ஒன்றியிருக்கும், அழிவற்ற தத்துவத்தில் நிலைபெற்று விளங்கும் அத்தகைய மஹாபுருஷருக்கும், மற்றும், அந்த ஆன்மீகப்பாதையில் வெகுவிரைவாக முன்னேறிப் போய்க் கொண்டிருக்கும் நம்மைவிட உயர்நிலையை அடைந்துள்ள நல்லல சாதகர்களுக்கும் சேவை செய்யும், பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். இதன்மூலம் தீய வினைகள் கொஞ்சம் கொஞ்சமாக அழியத் தொடங்கும், ஆன்மீக சாதனையில் நுழைவு பெற்றுத் தருகின்ற நல்ல குணாதிசயங்கள் வலுப்பெற்று செயல்பட ஆரம்பிக்கும்.

படிப்படியாக, தாமஸீக குணம் நலிவடைய ஆரம்பித்தபிறகு, ராஜஸீக குணம் மேலோங்குதல், மற்றும், சத்துவ குணத்தின் சிறிதளவு சஞ்சாரம் ஆகியவை கிடைத்ததுடன் சேர்த்து சாதகனுடைய கர்மத்திறன் வைசியன் எனும் சாதனைப் பிரிவினை எட்டிவிடும். அந்தச் சமயத்தில் அதே சாதகன் புலன் அடக்கம், மனக் கட்டுப்பாடு, ஆன்மீகச் செல்வங்களைச் சேகரித்தல், ஆகியவற்றை இயல்பாகவே பழக ஆரம்பித்து விடுவான். கர்மத்தை தொடர்ந்து செய்து கொண்டே போனால் அதே சாதகனிடம் ஸாத்வீக குணங்கள் மேலோங்கத் தொடங்கிவிடும். ராஜஸீக குணம் குறைந்து போய்விடும். தாமஸீக குணம் அமைதியடைந்து விடும். அந்தச் சமயத்தில் அதே சாதகன் சத்திரிய சாதனைப் பிரிவிற்குள் நுழைவு பெற்று விடுகிறான். வீரம், கர்மத்தில் தொடர்ந்து ஈடுபடும் திறன், அதிலிருந்து பின்வாங்காத சுபாவம், அனைத்து தெய்வீக உணர்வுகளின் மீதும் ஆளுமை, இயற்கை அல்லது, மனித சுபாவத்தில் அமைந்துள்ள மூன்று குணங்களையும் வெட்டியெறியும் வல்லமை, ஆகியவை அவனது சுபாவத்தில் இயல்பாகவே பதிந்துவிடும். அதே கர்மம் இன்னும் நுட்பமாகிவிட்டால், சாத்வீக குணம் மட்டுமே செயல்படுகின்ற நிலை வந்தபிறகு மனக் கட்டுப்பாடு, புலன் அடக்கம், மனஒருமைப்பாடு, எளிமை, தியானம், ஸமாதி, இறைவனின் கட்டளைகள், இறைநம்பிக்கை முதலான பிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தரவல்ல அக இயல்புத் திறன்களுடன் சேர்ந்து அந்த சாதகன் பிராம்மண சாதனைப் பிரிவினுள் நுழைவு பெறுகிறான். இதுவே பிராம்மண சாதனைப் பிரிவில் அடங்கிய கர்மத்தின் குறைந்தபட்ச எல்லைக்கோடு ஆகும். எப்பொழுது அதே சாதகன் பிரம்மத்தில் நிலைபெற்று விடுகிறானோ, அந்த இறுதி எல்லையில் அவனது தனித்தன்மையில் (சுயத்தில்) பிராம்மணனும் இல்லை, க்ஷத்திரியனும் இல்லை, வைசியனும் இல்லை, சூத்திரனும் இல்லை. ஆனால் மற்றவர்களுக்கு ஆன்மீகப் பாதையில் வழிகாட்டுவதன் காரணமாக அவன் பிராம்மணன் எனப்படுகிறான். கர்மம் என்னவோ ஒன்றுதான் – நியமிக்கப்பட்டுள்ள கர்மம், இறை ஆராதனை. நிலை வேறுபாடுகளால் இதே கர்மமானது உயர்ந்தது, தாழ்ந்தது என்று நான்கு படிநிலைகளாகப் பிரித்து ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டுள்ளது. யார் அவற்றைப் பிரித்து ஒழுங்குமுறைப்படுத்தியது? யாரேனும் ஒரு யோகேஷ்வரர் அவ்வாறு ஒழுங்குமுறைப்படுத்தினார். புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட, இறைவனில் நிலைபெற்ற மஹாபுருஷர் வகைப்படுத்தினார். அதன் கர்த்தாவாகிய, அழிவற்ற இறைவனாகிய என்னை, அகர்த்தா (எதுவும் செய்யாதவன்) என்றே அறிந்து கொள் ஏன்?–

**ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மஃபலே ஸ்ப்ருஹா**
**இதி மாம் யோபிஜானாதி கர்மபிர்ந ச பத்யதே (14)**

ஏனெனில் கர்மங்களின் பலனில் எனக்கு ஆசை கிடையாது. கர்மங்களின் பலன் என்ன? ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே கூறியதுபோல், "வேள்வி எதனால் நிறைவு பெறுகிறதோ, அந்தக் கிரியையின் பெயரே கர்மம் ஆகும். மேலும், நிறைவு பெறும் காலத்தில் வேள்வியானது எதனைப் படைக்கிறதோ, அந்த ஞானாமிருதத்தைப் பருகுகின்றவன் என்றும் நிலையான, மாறாத பழைமையான பிரம்மத்தில் நுழைவு பெற்று விடுகிறான். அந்தப் பரமாத்மாவின் மீதான விருப்பமும் கூட இப்போது எனக்கு இல்லை. ஏனெனில் அவர் என்னிலிருந்து வேறுபட்டவரல்லர். நான் புலன் உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட ஆன்ம வடிவம் ஆவேன். அதில் நிலைபெற்றவன் நான். இதற்குமேல் உயர்வான வேறொரு நிலை ஒன்றும் இல்லை எனும்போது, எதற்காக இந்தக் காரியத்தில் (கர்மம்) நட்புக் கொண்டிருக்க வேண்டும். எனவேதான் கர்மம் என்னைக் கட்டுப்படுத்துவதில்லை. மேலும், இதே நிலையில் யார் என்னை அறிந்து கொள்கிறார்களோ, அதாவது எவரொருவர் கர்மத்தின் இறுதிவிளைவாகிய பரமாத்மாவை அடைந்து விடுகிறாரோ, அவரையும் கர்மம் கட்டுப்படுத்துவதில்லை. ஸ்ரீகிருஷ்ணர் எவ்வாறோ, அவ்வாறே அதே நிலையை அடைந்த மஹாபுருஷரும் ஆகிவிடுகிறார்.

**ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி:**
**குரு கர்மைவ தஸ்மாத்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் (15)**

அர்ஜுனா! இதற்கு முந்தைய காலத்தில் தோன்றிய மோட்சத்தை விரும்பிய புருஷர்கள் மூலமாகவும் இதைத் தெரிந்துகொண்டுதான் கர்மம் செய்யப்பட்டது. எதைத் தெரிந்து கொண்டு? அதாவது, 'கர்மத்தின் இறுதி விளைவாகிய பரமாத்மா தன்னில் வேறுபட்டவராக இல்லாமல், கர்மத்தின் இறுதி விளைவாகிய பரமாத்மாவை அடைய வேண்டும் என்ற ஆசை நிறைவேறிய நிலையில், அந்த மனிதனைக் கர்மம் கட்டுப்படுத்துவதில்லை' என்பதைத் தெரிந்து கொண்டு! ஸ்ரீகிருஷ்ணரும் இந்த உயர்நிலையை அடையப் பெற்றவர். எனவேதான் அவர் கர்மத்தில் ஒட்டிக் கொள்வதில்லை. மேலும் அதே நிலையை நாமும் அடைந்தால் நம்மிடமும் கர்மம் ஒட்டிக் கொள்வதில்லை. ஸ்ரீகிருஷ்ணர் எந்த உயர் ஆன்மீக நிலையில் உள்ளவரோ, அதே உயர் நிலைக்குச் சென்று எவர் அறிந்து கொண்டாலும் அவரும் அவ்வாறே கர்ம பந்தங்களில் இருந்து விடுபட்டு முக்தனாகி விடுகிறார். இப்பொழுது ஸ்ரீகிருஷ்ணரானவர் "பகவான்," "மஹாத்மா", புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்டவராக, யோகேஷ்வரராக, அல்லது, மஹா யோகேஷ்வரராக, என்று யாராக வேண்டுமானால் இருக்கட்டும், அந்த ஆன்ம வடிவம் அனைவருக்கும் பொதுவானதுதான். இதைப் புரிந்து கொண்டுதான் முந்தைய காலத்தில் இருந்தே முமுட்சு புருஷர்கள், அதாவது மோட்சத்தில் விருப்பமுள்ள புருஷர்கள், கர்மப் பாதையில் அடியெடுத்து வைத்தனர்.

எனவேதான் அர்ஜுனா! நீயும் முன்னோர்களின் மூலமாக, எப்போதுமே கடைப்பிடிக்கப்பட்டு வந்த, இதே கர்மத்தையே செய். இதுவே நன்மைதரவல்ல ஒரே வழிமுறையாகும்.

இதுவரை யோகேஷ்வரரான ஸ்ரீகிருஷ்ணர் கர்மம் செய்வதை மட்டும் வலியுறுத்திக் கூறினார். ஆனால், இன்னும் 'கர்மம் என்றால் என்ன?' என்பதைப் பற்றித் தெளிவாகக் கூறவில்லை. இரண்டாவது அத்தியாயத்தில் அவர் 'கர்மம்' என்ற சொல்லை மட்டுமே பிரயோகித்து "இப்போது இதையே நீ (பற்றற்ற) நிஷ்காம கர்மத்தின் விஷயமாகக் கேள்" என்று கூறினார். அந்தக் கர்மத்தின் சிறப்புத் தன்மைகளை விளக்கும் போது, "இந்தக் கர்மம் பிறப்பு–இறப்பு என்னும் மாபெரும் பயத்தில் இருந்து காப்பாற்றும் வல்லமை உடையது" என்றார். கர்மத்தைச் செய்யும் நேரத்தில் கவனத்தில் கொள்ள வேண்டிய முன் எச்சரிக்கைகளை பற்றி விளக்கினார். ஆனால் கர்மம் என்றால் என்ன? என்பதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. மூன்றாவது அத்தியாயத்தில் அவர், "ஞானமார்க்கம் பிடித்திருந்தாலும்சரி, நிஷ்காம கர்ம மார்க்கம் (பற்றற்ற கர்மயோகம்) பிடித்திருந்தாலும், சரி, இரண்டிலுமே கர்மத்தை என்னவோ கண்டிப்பாகச் செய்துதான் ஆக வேண்டும். கர்மத்தைத் துறந்து விடுவதால் எவனும் ஞானியாக மாட்டான். மேலும் கர்மத்தை ஆரம்பிக்காமல் இருப்பதால் மட்டுமே எவனும் நிஷ்கர்மியாகி கர்மம் விடுபட்ட நிலையை அடைந்து விடமாட்டான். எவனொருவன் பிடிவாதத்துடன் கர்மம் செய்யாமல் இருக்கிறானோ, அவன் சந்தர்ப்பவாதி மட்டுமே ஆவான். எனவே, மனம் மற்றும் புலன்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு இந்தக் கர்மத்தைச் செய். எந்தக் கர்மத்தைச் செய்ய வேண்டும்? நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய். இனி, இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் எது? என்ற கேள்விக்கு, "வேள்வியின் செயல்முறையே நியமிக்கப்பட்டுள்ள கர்மம் எனப்படுகிறது" என்று கூறினார். இங்கே, "எதைச் செய்தால் கர்மம் ஆகிறதோ, அந்த வேள்வி என்றால் என்ன?" என்றொரு புதிய கேள்வியைத் தருகிறார். மேலும் வேள்வி எங்கிருந்து உற்பத்தி ஆகிறது? அதன் சிறப்புத் தன்மைகள் யாவை? ஆகியவற்றை விளக்கினார், ஆனால், எதன் மூலம், கர்மம் என்றால் என்ன? என்பது புரிந்து கொள்ள முடியுமோ, அந்த வேள்வியைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. இதுவரை கர்மம் என்றால் என்ன? என்பது முழுமையாகத் தெளிவுபடுத்தப்படவில்லை. அடுத்ததாக அவர், "அர்ஜுனா! எது கர்மம்? எது அகர்மம்? என்ற விஷயத்தில் பெரிய பெரிய வித்வான்கள்கூட குழப்பத்தில் (தெளிவான அறிவின்றி) உள்ளனர். அதை நல்லமுறையில் அறிந்து கொள்ள வேண்டியது அவசியம்" என்கிறார்.

**கிம் கர்ம கிமகர்மேதி கவயோப்யத்ர மோஹிதா :**
**தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேஃபாத் (16)**

எது கர்மம்? எது அகர்மம்? என்ற விஷயத்தில் பெரிய அறிவாளிகளும்கூட குழப்பத்தில் (தெளிவான அறிவின்றியே) உள்ளனர். எனவேதான் நான் அந்தக் கர்மத்தைப் பற்றி உனக்குச் சரியான முறையில் சொல்கிறேன். அதை அறிந்து கொண்டு நீ **'அசுபாத் மோக்ஷ்யஸே'–** தீமைகள் அதாவது, உலக பந்தங்களிலிருந்து நல்லமுறையில் விடுதலை பெற்று விடுவாய். கர்மம் என்பது உலகத் தளைகளிலிருந்து முக்தி பெற்றுத் தரும் வல்லமை உடையது. இந்தக் கர்மத்தை நன்கு அறிந்து கொள்ள வேண்டும் என்று ஸ்ரீகிருஷ்ணர் மீண்டும் ஒருமுறை வலியுறுத்திக் கூறுகிறார்.

**கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண :**
**அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதி: (17)**

கர்மத்தின் முழுமையான வடிவம், அகர்மத்தின் முழுமையான வடிவம், மற்றும், 'விகர்மம்', அதாவது, 'ஆசைகள் என்ற தடுமாற்றம் இல்லாமல் சிறப்பான முறையில் மகா புருஷர்கள் மூலமாகச் செய்யப்படும் கர்மம்' ஆகியவற்றை எல்லாம் அறிந்து கொள்வது அவசியம். ஏனெனில் கர்மத்தின் போக்கு மிகவும் ஆழமானது. ஒரு சிலர் இந்த விகர்மம் என்பதற்கு, 'புறக்கணிக்கப்பட வேண்டிய கர்மம், மனத்தால் செய்யப்படும் கர்மம்' என்றெல்லாம் பொருள் கூறுகின்றனர். உண்மையில் இந்த 'வி' என்னும் முன்னெழுத்து சிறப்பு அடைமொழியாகும். இறைவனை அடைந்து முக்தி நிலையைப் பெற்றபிறகு மஹாபுருஷர்களுடைய கர்மம் ஆசைகள் நீங்கப் பெற்றதாக உள்ளன. ஆன்மாவில் நிலைபெற்ற, ஆன்மாவில் மட்டுமே திருப்தி அடைகின்ற, **ஆப்த காம** (ஆசைகள் அனைத்தும் நிறைவேறியவர்) மஹாபுருஷர்களுக்குக் கர்மம் செய்வதால் எந்தவொரு இலாபமும் இல்லை, கர்மத்தைச் செய்யாமல் விட்டு விடுவதாலும் எந்தவொரு பாதிப்பும் இல்லை. அப்படி இருந்தும் கூடப் பின்வரும் சமுதாயத்தினரின் ஆன்ம நலனுக்காகவும் நெறிமுறையைச் சீர்படுத்துவதற்காகவும் அவர்கள் தொடர்ந்து கர்மத்தைச் செய்து வருகின்றனர். அத்தகைய கர்மம் ஆசைகள் நீங்கப் பெற்றதாகவும் சிறந்த முறையில் தூய்மை செய்யப்பட்டதாகவும் இருக்கிறது. இந்தக் கர்மமே 'விகர்மம்' எனப்படுகிறது.

உதாரணத்திற்கு, கீதையில் எங்கெல்லாம், எந்தக் காரியத்திற்கெல்லாம் 'வி' என்னும் முன்னெழுத்து சேர்க்கப்பட்டுள்ளதோ, அங்கெல்லாம் அதன் சிறப்பை வெளிப்படுத்தும் அடைமொழியாகக் கையாளப்பட்டுள்ளதே தவிர, தாழ்ந்த பொருளைத் தருவதாக அமையவில்லை எடுத்துக்காட்டாக, **'யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: (கீதை 5/7)**– 'எவர் யோகம் கைகூடப் பெற்றவரோ, அவர் மிகவும் சிறந்தமுறையில் தூய்மையாக்கப்பட்ட ஆன்மாவை உடையவர்; மிகவும் சிறந்தமுறையில் வெற்றி கொள்ளப்பட்ட ஆழ்மனதை

(அந்தகாரணத்தை) உடையவர் என்பது போன்றவை உயர்ந்த பொருளைத் தரும் வகையில்தான் கையாளப்பட்டுள்ளன. இம்முறையில் கீதையில் பல்வேறு இடங்களில் 'வி' என்னும் எழுத்து, 'மிகவும் சிறப்பான முறையில் முழுமை பெற்ற தன்மையைக்' குறிப்பிடும் வகையில்தான் பிரயோகிக்கப்பட்டு உள்ளது. இம்முறையில், 'விகர்மம்' என்பதும் 'மிகவும் சிறப்பான முறையில் நிகழ்த்தப்படுகின்ற உயர்நிலைக் கர்மம்' என்ற பொருளையே தருகிறது. இது இறைவனை அடைந்தபிறகு முக்தி நிலைபெற்ற மஹாபுருஷர்கள் மூலமாக இயக்குவிக்கப்படுகிறது. மஹாபுருஷருக்குள் நல்ல, கெட்ட வினைகளைத் தோற்றுவிக்க முடியாது. இப்போது நீங்கள் 'விகர்மம்' என்றால் என்ன? என்று பார்த்தீர்கள். மீதம் இருப்பவை கர்மம், அகர்மம் இரண்டு மட்டும்தான். அவற்றை அடுத்து வரும் சுலோகத்தில் புரிந்து கொள்ள முயற்சியுங்கள், ஒருவேளை இந்த இடத்தில் கர்மம் மற்றும் அகர்மம் ஆகியவற்றிற்கு இடையில் உள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ளவில்லையென்றால் ஒருபோதும் அதைப் புரிந்து கொள்ளவே முடியாது.

**கர்மண்யகர்ம ய: பச்யேதகர்மணி ச கர்ம ய :**
**ஸ புத்திமான்மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்னகர்மக்ருத் (18)**

எவனொருவன் கர்மத்தில் அகர்மத்தைக் காண்கிறானோ, 'கர்மம் என்றால் ஆராதனை' அதாவது இறை ஆராதனையும் செய்ய வேண்டும் அதேசமயம் செய்பவன் நான் அல்ல, மாறாக, குணங்களின் வெவ்வேறு நிலைகளே நம்மை இறைச் சிந்தனையில் ஈடுபடுத்துகிறது, 'நான் இஷ்டதெய்வத்தின் (ஸத்குரு இறைவன்) மூலமாக இயக்கப்படுகின்றேன்' என்றும் உணர வேண்டும். மேலும் எப்பொழுது இந்த முறையில் அகர்மத்தைப் பார்ப்பதற்குத் திறமை வந்துவிட்டதோ, மற்றும், தங்குதடையின்றிக் கர்மம் நிகழத் தொடங்கி விட்டதோ, அப்பொழுதுதான் கர்மம் சரியான திசையில் போகிறது என்று புரிந்து கொள்ளவேண்டும். அத்தகையவரே மனிதருள் அறிவாளியாவார், மனிதருள் யோகியாவார், யோகத்துடன் இணைந்த புத்தியை உடையவராவார். மேலும், அவரே எல்லாக் கர்மங்களையும் செய்பவரும் ஆவார். அவர் மூலமாகச் செய்யப்படும் கர்மத்தில் இம்மியளவுகூடத் தவறு நேர்வதில்லை.

சாராம்சம் இதுதான்: "இறை ஆராதனையே கர்மம் (செயல்) ஆகும். அந்தக் கர்மத்தையே செய்ய வேண்டும். மேலும் அதைச் செய்துகொண்டே, (செயலற்ற நிலையையும்) அகர்மத்தையும் காண வேண்டும். அதாவது, 'நான் வெறும் இயந்திரம் மட்டும்தான், இயக்குபவர் இஷ்ட தெய்வமே (ஸத்குரு) ஆவார்'. மேலும் நான் குணங்களால் தோன்றும் வெவ்வேறு நிலைகளுக்கு ஏற்பவே செயல்படுகிறேன்" என்பதைக் காண வேண்டும். எப்பொழுது அகர்மத்தை இவ்வாறு காண்கின்ற திறமை வந்து விட்டதோ, மற்றும் தங்குதடையின்றிக்

கர்மம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறதோ அப்பொழுதுதான் மேலான நன்மையைப் பெற்றுத் தரவல்லதாக இந்தக் கர்மம் அமையும். 'பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள்' பின்வருமாறு கூறுவதுண்டு: "எதுவரை இஷ்ட தெய்வம் (ஸத்குரு) ஆன்மாவில் இரண்டறக் கலந்து நிற்கவில்லையோ, ஆன்மாவைத் தடுத்தாட் கொள்ளவில்லையோ, அதுவரை சரியான அளவில் சாதனை ஆரம்பமாவது கூட இல்லை". இதற்கு முன்பு செய்யப்படுவது எல்லாம் அந்தக் கர்மத்திற்குள் நுழைவு பெறுவதற்காக மேற்கொள்ளப்படும் முயற்சியே தவிர, அதற்கு அதிகமாக வேறொன்றுமில்லை. கலப்பையின் முழுப்பாரமும் எருதுகளின் முதுகில்தான் இருக்கிறது. அப்படி இருந்தும்கூட நிலத்தை உழுவது என்னவோ உழவனின் திறமையால்தான். இதேபோன்றுதான் சாதனையின் முழுப்பாரமும் சாதகனின் மீதே உள்ளது. ஆனால், உண்மையான சாதகர் என்னவோ, அந்த சாதகனைப் பின்னால் இருந்து இயக்கிக் கொண்டு இருக்கின்ற, அவனை ஆன்மீகப் பாதையில் வழி நடத்திச் சென்று கொண்டிருக்கின்ற இஷ்ட தெய்வமே (ஸத்குரு) ஆவார். எதுவரை இஷ்ட தெய்வம் (ஸத்குரு) நிர்ணயம் தரவில்லையோ, அதுவரை நம் மூலமாக நடந்தது என்ன? என்பதை நீங்கள் எவ்வாறு அறிந்து கொள்வீர்கள்? நாம் இயற்கை அல்லது படைப்பில் வழி தவறிச் சென்று கொண்டிருக்கிறோமா? அல்லது, பரமாத்மாவை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறோமா? இம்முறையில் இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு) வழிகாட்டுதலுக்கு ஏற்ப எந்தவொரு சாதகர் ஆன்மீகப் பாதையில் தீவிரமாக முன்னேறிச் செல்கிறாரோ, தம்மை அகர்த்தா (செயலற்றவன்) என்று எண்ணிக்கொண்டு தங்குதடையின்றி தொடர்ச்சியாகக் கர்மத்தைச் செய்து வருகிறாரோ, அவரே அறிவாளி, அவருடைய புரிந்து கொள்ளலே யதார்த்தமானது, அவரே யோகியும் ஆவார். கர்மத்தைச் செய்து கொண்டேதான் இருக்க வேண்டுமா? அல்லது, கர்மம் செய்வதில் இருந்து எப்போதாவது விடுதலையும் கிடைக்குமா? என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வம் கிளம்புவது இயல்பானதுதான். இதுபற்றி யோகேஷ்வரர் கூறுகிறார்.

ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், எதையாவது செய்துவிட்டால் கர்மம் ஆகிவிடாது. கர்மம் என்பது ஒரு நிச்சயிக்கப்பட்டுள்ள கிரியை (செயல்) ஆகும். '**நியதம் குருகர்மத்வம்** அர்ஜுனா! நீ நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே செய். எது நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம்? என்று கேட்டால் அதற்கு அவர், '**யஜ்ஞார்த்தாத் கர்மணோஅன்யத்ர லோகோஅயம் கர்ம பந்தன**' – "வேள்விக்குச் செயல் வடிவம் தருவதே கர்மம்" என்று கூறினார். எனில், இதைத் தவிர, வேறு எதைச் செய்தாலும் அவையெல்லாம் கர்மம் இல்லையா? ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, '**அன்யத்ர லோகோஅயம் கர்மபந்தன:**' – "இந்த வேள்விக்குச் செயல்வடிவம் தருவதைத் தவிர, வேறு எதைச் செய்தாலும், அவையெல்லாம் இதே உலகில் பந்தத்தை

ஏற்படுத்துபவையே தவிர, கர்மம் ஆகாது” என்று கூறினார். **‘ததர்த்தம் கர்ம’** – “அர்ஜுனா! அந்த வேள்வி முழுமையாக நிறைவேறும் வகையில், நல்ல முறையில் கர்மத்தை அனுசரித்து வா” என்றும் கூறினார். மேலும், வேள்வியின் முழு வடிவத்தையும் விளக்கும்போது, “வேள்வி என்பது தூய்மையான முறையில் வடிவமைக்கப்பட்ட, ஆராதனைக்குரிய தெய்வத்திடம் (ஸத்குரு) கொண்டு போய்ச் சேர்த்து, அவரிலேயே ஒன்று கலக்கச் செய்கின்ற, ஆராதனையின் சிறப்பு விதிமுறை ஆகும்” என்றார்.

இந்த வேள்வியில், புலனடக்கம், மனக் கட்டுப்பாடு, தெய்வீகச் செல்வங்களைப் பெருக்குதல் முதலானவைகளைப் பற்றியெல்லாம் கூறி விட்டுக் கடைசியாகக் கூறுகிறார்: “நிறைய யோகிகள் பிராணன் (உள்மூச்சு) மற்றும் அபானன் (வெளிமூச்சு) ஆகியவற்றின் வேகத்தைக் கட்டுப்படுத்தி (பிராணாயாம முகமாகி) பிராணாயாமத்தையே சார்ந்து நிற்கின்றனர். அப்போது உள்ளே இருந்து (அகம்) எந்தவொரு சங்கல்பமும் எழுவதுமில்லை. மற்றும் வெளிப்புறச் சூழ்நிலையிலிருந்து (புறம்) எந்தவொரு சங்கல்பமும் மனத்திற்குள் நுழைவதும் இல்லை. இந்நிலையில் சித்தம் முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு, அவ்வாறு கட்டுப்படுத்தப்பட்ட சித்தமும் முழுமையாக மறைந்து போகின்ற காலத்தில் அந்த மனிதர் **‘யாந்தி ப்ரஹ்ம ஸனாதனம்’** – என்றும் நிலையான, மாறாத அனாதியான பிரம்மத்தில் நுழைவு பெற்று விடுகிறார். இவை அனைத்துமே வேள்வி எனப்படுகிறது. அதற்குச் செயல்வடிவம் தருவதற்குப் பெயரே கர்மம் ஆகும். எனவே, கர்மத்தின் தூய்மையான பொருளே ‘ஆராதனை’ எனப்படும். கர்மம் என்றால் இறைவழிபாடு. கர்மம் என்றால் யோக சாதனையை நல்லமுறையில் நமக்குள் இயங்கச் செய்தலாகும். இதைப் பற்றிய விரிவான விளக்கம் இதே அத்தியாயத்தில் இனிவருகின்ற பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. இங்கே கர்மம், அகர்மம் ஆகியவற்றிற்கு இடையில் உள்ள வேறுபாடு மட்டுமே சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அதன்மூலம் கர்மத்தைச் செய்யும் சமயத்தில் அதற்குச் சரியான திசையை அளிக்கவும், அதைத் தொடர்ந்து செல்லவும் முடியும்.

**யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா:**
**ஜ்ஞானாக்னிதக்தகர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா: (19)**

அர்ஜுனா! **‘யஸ்ய ஸர்வே ஸமாரம்பா:’** – எவர் மூலமாக முழுமையான அளவில் ஆரம்பிக்கப்பட்ட கிரியை (முந்தைய சுலோகத்தில் கூறப்பட்டுள்ளதைப் போன்று, அகர்மத்தைக் காண்கின்ற திறமை வந்து விட்டபிறகு, கர்மத்தில் தொடர்ந்து ஈடுபடுகின்ற மனிதர், எல்லாக் கர்மங்களையும் செய்ய வல்லவர் ஆவார். அவர் மூலமாகச் செய்யப்படும் கர்மத்தில் கொஞ்சம் கூடக் குறைபாடு

ஏற்படுவதில்லை) **'காமஸங்கல்பவர்ஜிதா:'**– படிப்படியாக உயர்ந்து கொண்டே சென்று, வாசனைகள் மற்றும் மனத்தின் ஸங்கல்ப – விகல்பங்களில் இருந்து விடுபட்டு மேலே சென்றுவிடுமளவு நுட்பமாகிவிடுகிறது. (ஆசைகள் மற்றும் சங்கல்பங்கள் அனைத்தும் அழிவுறுவதே மனத்தை வெற்றி கொள்ளும் நிலையாகும். எனவே கர்மம் என்பது, இந்த மனத்தின் ஆசைகள், மற்றும், சங்கல்ப – விகல்பங்களில் இருந்து நம்மை விடுவித்து மேலே உயர்த்தும் வல்லமை பெற்றது) அந்தச் சமயத்தில் **'ஜ்ஞானாக்னிதக்த கர்மாணம்'**– கடைசி சங்கல்பமும் அழிந்துவிட்ட பிறகு, இதுவரை யாரை நாம் அறியவில்லையோ, யாரை அறிவதற்காக நாம் விருப்பம் கொண்டிருந்தோமோ, அந்த பரமாத்மாவின் நேரடி தரிசனம் கிடைத்து விடுகிறது. ஆன்மக் கிரியைப் பாதையில் சென்று பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் எனப்படும். அந்த ஞானம் கிடைத்த உடனே **'தக்த கர்மாணம்'** – கர்மம் என்றென்றைக்குமாக எரிந்து விடுகிறது. எதை அடைய வேண்டுமோ, அதை அடைந்தாகிவிட்டது. அதைவிட உயர்ந்த நிலை ஒன்றுமில்லை எனில் எதைப் போய்த் தேடுவது? எனவே, கர்மத்தைச் செய்து யாரைத் தேடுவது? இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்டதுடன் சேர்த்து கர்மத்தின் அவசியமும் இல்லாமல் போய்விடுகிறது. அத்தகைய உயர்நிலையை அடைந்தவர்களையே இறைப்பேரறிவின் மொத்த உருவமாகத் திகழும் மஹாபுருஷர்கள் 'பண்டிதர்' என்று பெருமையுடன் அழைக்கிறார்கள். அவருடைய ஞானமே முழுமையானது. அத்தகைய உயர் நிலையை எட்டிய மஹாபுருஷர் என்ன செய்கிறார்? எப்படி வாழ்கிறார்? அவருடைய வாழ்வியலைப் பற்றி ஸ்ரீகிருஷ்ணர் விளக்குகிறார்.

**த்யக்த்வா கர்ம ஃபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராஸ்ரய:**
**கர்மண்யபிப்ரவ்ருத்தோஅபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: (20)**

அர்ஜுனா! அந்த மனிதர் உலகியலைச் சார்ந்த தொடர்புகளிலிருந்து, முழுமையாகத் தம்மை விடுவித்துக்கொண்டு, நித்தியப் பொருளாகிய பரமாத்மாவிலேயே திருப்தி அடைந்தவராக, கர்மங்களின் பலனாகிய பரமாத்மாவின் மீதான பற்றினையும் துறந்தவராக (ஏனெனில் பரமாத்மாவும் இப்போது அவரிடமிருந்து வேறுபட்டவரல்லர்) கர்மத்தை நல்ல முறையில் செய்து வந்த போதும் ஒன்றும் செய்யாதவராகிறார்.

**நிராஷிர்யத சித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ:**
**சாரீரம் கேவலம் கர்ம குர்வன்னாப்னோதி கில்பிஷம் (21)**

எவரொருவர் அந்தகரணம், (உள்மனம்) மற்றும், உடலை வென்று

விடுகிறாரோ, உலகியல் இன்பங்களைத் தருகின்ற எல்லாப் பொருட்களையும் துறந்து விடுகிறாரோ அத்தகைய ஆசைகளற்ற மனிதருடைய (மஹாபுருஷர்) உடல் மட்டும்தான் கர்மம் செய்வதைப் போன்று தென்படுகிறது. உண்மையில், அவர் எதையும் செய்வதும் இல்லை, செய்விப்பதும் இல்லை. எனவே பாவத்திற்கு ஆளாவதும் இல்லை. அவர் பூரணத்துவத்தை அடைந்தவராதலால் பிறப்பு – இறப்புச் சக்கரத்தில் சிக்குவதும் இல்லை.

**யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர:**
**ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே (22)**

தமக்கென்று கிடைத்தது எதுவாக இருந்தாலும் அதில் மட்டுமே மகிழ்ச்சி அடைந்து, சுகம்–துக்கம், விருப்பு–வெறுப்பு, இன்பம்–துன்பம் முதலான இருமைகளை எல்லாம் (வேற்றுமையான உணர்வு நிலைகள்) கடந்தவராக, **'விமத்ஸர:'** – பொறாமை உணர்வு இல்லாதவராக, வெற்றி, தோல்வியில் சமமான உணர்வுடைய அவர் கர்மங்களைச் செய்தபோதும்கூட, அவற்றால் பந்தத்திற்கு ஆளாவதில்லை. சித்தி, அதாவது எதைப் பெறவேண்டுமோ அது. இப்போது தன்னில் இருந்து வேறுபட்டில்லை. மேலும், அது இனிமேல் எப்போதும் தம்மை விட்டுப் பிரிந்து போகப் போவதும் இல்லை. எனவே அசித்தி, அதாவது, பெறாததைப் பற்றிய பயமும் இல்லை. இந்தமுறையில் வெற்றி – தோல்வியில் சமமான உணர்வுடையவர் கர்மத்தைச் செய்தபோதும்கூட அவற்றால் பந்தத்திற்கு ஆளாவது இல்லை. அவர் எந்தக் கர்மத்தைச் செய்கிறார்? அதே நியமிக்கப்பட்டுள்ள கர்மமாகிய வேள்வியின் செயல்முறையையே செய்கிறார். இதையே மறுபடியும் வலியுறுத்திக் கூறுகிறார் அவர்.

**கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞானாவஸ்திதசேதஸ:**
**யஜ்ஞாயாசரத : கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே (23)**

அர்ஜுனா! **'யஸ்ஞாயாசரத கர்ம'** – வேள்வியைக் கடைப்பிடிப்பதே கர்மம் ஆகும். மேலும் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதன் பெயரே ஞானம் ஆகும். இந்த வேள்வியைக் கடைப்பிடித்து இறைவனை நேரடியாக தரிசனம் செய்து, அத்துடன் சேர்த்துக் கிடைக்கின்ற ஞானத்தில் நிலைபெற்று, சேர்க்கை தோஷம், மற்றும், பற்றுதல் நீங்கப் பெற்று விளங்கும் முக்த புருஷருடைய எல்லாக் கர்மங்களும் நல்லமுறையில் அந்த இறைவனிலேயே ஒன்று கலந்து மறைந்து விடுகின்றன. அந்தக் கர்மம் எந்தவொரு விளைவையும் அவருக்குள் உண்டாக்குவதில்லை. ஏனெனில், கர்மங்களின் பலனாகிய பரமாத்மா இப்போது அவரிலிருந்து வேறுபட்டவரல்லர். இதற்குமேல் வேறு எந்த உயர்வான பலன் கிடைக்கப்போகிறது? எனவே அந்த முக்த

புருஷருக்கு, அவரைப் பொறுத்தவரையில் கர்மத்திற்கான அவசியம் முடிவுக்கு வந்துவிட்டது. அப்படி இருந்தும்கூட பின்வரும் சமுதாய நன்மைக்காகவும், உலக ஒற்றுமைக்காகவும், அவர் கர்மத்தைச் செய்து வருகிறார். மேலும், அவ்வாறு கர்மத்தில் ஈடுபட்டபோதும் அவற்றால் பிணைக்கப்படுவது இல்லை. கர்மத்தைச் செய்கிறார் எனும்போது அதனால் பிணைக்கப்படுவதில்லையே, என்ன காரணம்? இது பற்றிக் கூறுகிறார்.

**ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம ஹவிர்ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம்**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதினா (24)**

அத்தகைய மஹாபுருஷருடைய சமர்ப்பணம் பிரம்மமே ஆகும். வேள்விப் பொருளும் பிரம்மம்தான், அக்னியும் பிரம்மமேதான். அதாவது பிரம்மம் என்னும் அக்னியில் பிரம்மமாகிய கர்த்தா மூலமாக, எந்த வேள்வியானது செய்யப்படுகிறதோ, அதுவும் பிரம்மம்தான். **'ப்ரஹ்மகர்ம ஸமாதினா'** – எவருடைய கர்மம் பிரம்மத்தைத் தொட்டுணர்ந்து அதிலேயே சமத்துவம் அடைந்து நிலைபெற்று விட்டதோ, அதிலேயே ஒன்று கலந்து மறைந்து விட்டதோ, அத்தகைய மஹாபுருஷருக்கு, எது அடையத் தகுதி உடையதோ, அதுவும், பிரம்மமேதான். அவர் எதையும் செய்வதும், செய்விப்பதும் இல்லை. அவர் உலக நன்மைக்காக மட்டுமே கர்மத்தில் ஈடுபடுகிறார். இதுவே இறைவனை தரிசனம் செய்து முக்திநிலை அடைந்த மகாபுருஷருடைய இலட்சணம் ஆகும். ஆனால், கர்மத்தில் இப்போதுதான் நுழைந்துள்ள, ஆரம்ப நிலையில் உள்ள சாதகன் எந்த மாதிரியான வேள்வியைச் செய்கிறான்?

இதற்கு முந்தைய அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! கர்மம் செய்!" என்று கூறினார். 'எந்தக்கர்மத்தைச் செய்ய வேண்டும்?' என்ற கேள்விக்கு அவர், **'நியதம் குரு கர்ம:** – "நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்" என்று பதில் கூறினார். "எது நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம்?" அதற்கு அவர், **'யஜ்ஞார்த்தாத் கர்மணோஅன்யத்ர லோகோஅயம் கர்ம பந்தன: (3/9)**'– "அர்ஜுனா! வேள்வியின் செயல்முறையே கர்மம் ஆகும். இந்த வேள்வியைத் தவிர, வேறு எதைச் செய்தாலும் அவையெல்லாம் இதே உலகில் பந்தப்படுத்துபவையே தவிர, கர்மம் ஆகாது" என்று கூறினார். எனவே, கர்மம் என்பது உலக பந்தங்களில் இருந்து முக்தி பெற்றுத் தரவல்லது. எனவே, **'ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க : ஸமாசர'** – "அந்த வேள்வியை முழுமையாக நிறைவேற்றி முடிக்கும் எண்ணத்துடன் சேர்க்கைதோஷங்களில் இருந்து விலகித் தனியாக இருந்து கொண்டு, மிகவும் நல்லமுறையில் வேள்வியை கடைப்பிடித்து வா" என்கிறார். இவ்விடத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "எதைச் செய்வதால், நம் மூலமாகக் கர்மம் செய்து

முடிக்கப்பட்டதாக அமையுமோ, அந்த வேள்வி என்றால் என்ன?” என்றொரு புதிய கேள்வியைத் தருகிறார். அவர் கர்மத்தின் சிறப்புத் தன்மைகளை வலியுறுத்திக் கூறினார். அந்த வேள்வி எங்கிருந்து வந்தது? என்பதைப் பற்றிக் கூறினார். வேள்வி என்ன தருகிறது? அதன் சிறப்புத் தன்மைகளை விளக்கினார். ஆனால் இதுவரைக்கும், ‘அந்த வேள்வி என்றால் என்ன?’ என்பதைப் பற்றி ஒன்றும் கூறுவில்லை.

இப்போதுதான், அவர் அந்த வேள்வியை இங்கே நன்கு விளக்கப் போகிறார்.

**தைவமேவாபரே யஜ்ஞம் யோகின: பர்யுபாஸதே**
**ப்ரஹ்மாக்னாவபரே யஜ்ஞம் யஜ்ஞேனைவோபஜீஹ்வதி (25)**

கடந்த சுலோகத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், பரமாத்மாவில் நிலைபெற்றுள்ள மஹாபுருஷர் மூலமாகச் செய்யப்படும் வேள்வியைப்பற்றித் திட்டவட்டமாக விளக்கிக்கூறினார். ஆனால், அவரைத் தவிர, மற்ற யோகிகள், அதாவது, இன்னும் ஆத்ம தத்துவத்தில் நிலைபெறாத, ஆன்மக் கிரியையில் இப்போதுதான் நுழைந்துள்ள சாதகர்கள், இந்த வேள்வியை எங்கிருந்து ஆரம்பிக்க வேண்டும்? இதுபற்றி அவர் கூறுகிறார்: “மற்ற யோகிகள், **‘தைவம் யஜ்ஞம்’**– அதாவது, அவர்கள் தங்கள் இதயத்தில் தெய்வீகச் செல்வங்களைப் (குணங்களை) பலப்படுத்துகின்றனர்.” இதற்காகவேதான் பிரம்மாவின் திருக்கட்டளையும் பிறப்பிக்கப்பட்டுள்ளது. அதன்படி, இந்த வேள்வியின் மூலமாக, நீங்கள் தேவதைகளை உன்னதமடையச் செய்யுங்கள். எவ்வளவுக்கு எவ்வளவு இதய தேசத்தில் தெய்வீகச் செல்வம் பெருகுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு உங்களுடைய ஆன்மீக முன்னேற்றமும் அமையும். மேலும் படிப்படியாக ஒருவரையொருவர் உன்னதமடையச் செய்து கொண்டே மேலான, உயர்ந்த இறைவனை அடைவீர்களாகுக! தெய்வீகச் செல்வத்தை இதய தேசத்தில் பலப்படுத்துவதே ஆரம்ப நிலையில் உள்ள யோகிகள் செய்கின்ற வேள்வியாகும்.

அந்த தெய்வீகச் செல்வம் பற்றி பதினாறாவது அத்தியாயத்தின் முதல் மூன்று சுலோகங்களில் விவரிக்கப்பட்டு உள்ளது. இந்த தெய்வீகச் செல்வம் அனைவருக்குள்ளேயும் இருக்கின்றன. அவற்றை விழிப்புறச் செய்வதே நமது மகத்துவம் வாய்ந்த கடமை என்று உணர்ந்து அதில் ஈடுபட வேண்டும், அவ்வளவுதான். இதையே குறிப்பால் உணர்த்தும் விதமாக யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், “அர்ஜுனா! நீ வருத்தப்படாதே! ஏனெனில், நீ தெய்வீகச் செல்வத்தை அடையப்பெற்றுள்ளாய். நீ என்னில் வாழ்வாய். என்னுடைய என்றும் நிலையான, மாறாத, ஆன்ம வடிவத்தை அடைவாய். ஏனெனில் இந்த தெய்வீகச்

செல்வம் மேலான நன்மையைப் பெற்றுத் தருவதற்காகவே அமைந்து உள்ளது. மேலும், இதற்கு விபரீதமான அசுர குணங்களோ, அதாவது, அசுரச் செல்வமோ தாழ்ந்த, மற்றும், இழிவான பிறவிகளுக்கே காரணமாக அமைகின்றன. இந்த அசுரச் செல்வங்களே கொஞ்சம் கொஞ்சமாக நம்மை விட்டு அழியத் தொடங்குகின்றன. எனவேதான் இதனை 'வேள்வி' என்கிறோம். மேலும், இங்கிருந்துதான் வேள்வியும் ஆரம்பிக்கிறது.

மற்ற யோகிகளோ **"ப்ரம்மாக்னௌ"** பரப்ரம்ம பரமாத்மா என்னும் அக்கினியில் வேள்வியைச் செய்வதன் மூலமாகவே, இந்த வேள்வியை ஆரம்பிக்கிறார்கள், ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் இனிவரும் பகுதியில், "இந்த உடலில் 'அதியக்ஞன்' நானே! வேள்விகளின் தலைவன், அதாவது, வேள்வி எங்கே சென்று ஒன்று கலந்து மறைகிறதோ, அந்தப் பரம புருஷர் நானே!" என்கிறார். ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியும், சத்குருவும் ஆவார். இந்தமுறையில், மற்ற யோகிகள் 'பிரம்மம் என்னும் அக்கினியில் வேள்வி', அதாவது, 'வேள்வியின் வடிவமாகவே விளங்கும் சத்குருவையே தங்களின் இலட்சியமாக' வரித்துக் கொண்டு வேள்வியைக் கடைப்பிடித்து வருகிறார்கள். சுருக்கமாகச் சொல்வதென்றால், அவர்கள் சத்குருவின் வடிவத்தை தியானம் செய்கின்றனர்.

**ஸ்ரோத்ராதீனிந்த்ரியாண்யன்யே ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி**
**சப்தாதீன்விஷயான்அன்ய இந்த்ரியாக்னிஷுஜுஹ்வதி (26)**

மற்றும் சில யோகிகள் செவி முதலான (காது, கண், தோல், நாக்கு, மூக்கு) எல்லாப் புலன்களையும் 'கட்டுப்பாடு' என்னும் அக்கினியில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். அதாவது, புலன்களை அவற்றின் செயல்களில் இருந்து விலக்கிக் கட்டுப்படுத்துகின்றனர். இங்கே நெருப்பு ஒன்றும் எரிவதில்லை. எவ்வாறு நெருப்பில் போடப்படும் எல்லாப் பொருட்களும் எரிந்து சாம்பலாகி விடுகின்றனவோ, அதேபோன்று புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு என்பதும் ஒரு அக்கினியாகும். அது புலன்களின் ஒட்டு மொத்தமான புறமுகப் பிரவாகத்தையும் எரித்து விடுகின்றது. மற்றும் சில யோகிகள் கேட்பது முதலான (கேட்டல், தொடுதல், காண்தல், சுவைத்தல், நுகர்தல் அதாவது சப்தம், ஸ்பர்ஷம், ரூபம், ரஸம், கந்தம்) செயல்களைப் 'புலன்கள்' என்னும் அக்கினியில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். அதாவது, புலன்களின் மூலமாகக் கிரகிக்கப்படும் உலகியலைச் சார்ந்த விஷயங்களின் அர்த்தத்தை, ஆன்மீக சாதனைக்குத் தொடர்புடையதாக மாற்றியமைத்துக் கொள்கின்றனர்.

சாதகனுக்கு இந்த உலகில் இருந்து கொண்டுதான் இறைவழிபாடு செய்தாக வேண்டும். உலகியலில் உழல்கின்ற மக்களின் நல்லதும் கெட்டதும்

கலந்த பேச்சுகள் அவனுடைய காதில் வந்து மோதிக் கொண்டுதான் இருக்கும். சிற்றின்பங்களின் பக்கமாக இழுத்துச் செல்கின்ற அத்தகைய வார்த்தைகளைக் கேட்ட உடனே, அவற்றில் உள்ள இழிவான அர்த்தத்தை மாற்றி, யோகம், வைராக்கியம் ஆகியவற்றைப் பழக உதவுகின்ற, வைராக்கியம் நிறைந்த உணர்வுகளாக மாற்றிக் கொண்டு, அவற்றைப் புலன்கள் என்னும் அக்கினியில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். இதுபோன்றுதான் ஒருமுறை அர்ஜூனன் ஆன்மீக சிந்தனையில் மூழ்கியிருந்தான். அப்போது திடீரென்று அவனது காதுகளில் சங்கீத அலைகள் எங்கிருந்தோ வந்து மோதின. அவன் தலையை உயர்த்திப் பார்த்தபோது ஊர்வசி என்பவள் நின்று கொண்டிருந்தாள். அவள் ஒரு தாசியாவாள். எல்லோரும் அவளுடைய அழகிய உருவத்தைப் பார்த்து மதிமயங்கிப் போய்த் தள்ளாடிக் கொண்டிருந்தனர். ஆனால் அர்ஜூனனோ அவளை "அன்பு நிறைந்த அன்னை" என்ற பாவனையுடன் பார்த்தான். அந்தக் கேட்டல் (சப்தம்) காண்தல் (ரூபம்) மூலமாக உண்டாகும் வாய்ப்புள்ள தீயஎண்ணங்கள் (விகாரங்கள்) மறைந்து போய்விட்டன. அவை புலன்களின் அடியாழத்திலேயே இரண்டறக்கலந்து மறைந்து விட்டன.

இங்கே புலன்களே அக்கினி ஆகும். அக்கினியில் போடப்படும் பொருட்கள் எவ்விதம் எரிந்து சாம்பலாகிப் போகின்றனவோ, அதேபோன்றுதான் விஷய இன்ப விருப்பத்தை மாற்றி, இஷ்ட தெய்வத்திற்குச் (ஸத்குரு – இறைவன்) சாதகமாக அமைத்துக் கொள்வதால் விஷய இன்பங்களைக் தூண்டுகின்ற காண்தல், சுவைத்தல், நுகர்தல், தொடுதல் மற்றும் கேட்டல் தொடர்பான அனைத்தும் எரிந்து சாம்பலாகி விடுகின்றன, மற்றும், அவைகளால், சாதகனின் மனதில் தீயவிளைவுகளை ஏற்படுத்த முடிவதில்லை. சாதகன் அவற்றை விரும்புவதும் இல்லை, உள்வாங்குவதுமில்லை.

இந்த இரண்டு சுலோகங்களில், **'அபரே', 'அன்யே'** என்று பயன்படுத்தப்பட்டுள்ள இரண்டு சொற்களுமே ஒரே சாதகனின் உயர்ந்த மற்றும் தாழ்ந்த நிலைகளையே குறிப்பதாகும். வேள்வியில் ஈடுபடுகின்ற அந்த ஒருவரின் உயர்ந்த – தாழ்ந்த நிலைகளைக் குறிப்பதாகுமே தவிர, 'அபரே' மற்றும் 'அன்யே', என்று கூறப்பட்டதால் ஏதோ தனித்தனியான வேள்விகளை அன்று.

**ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே**
**ஆத்மஸம்யமயோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞானதீபிதே (27)**

இதுவரைக்கும் யோகேஷ்வரர் எந்த வேள்வியைப் பற்றி விவாதித்தாரோ, அதில், 'படிப்படியாக தெய்வீகச் செல்வங்கள், அதாவது, தெய்வீக குணங்களைப் பெருகச் செய்தல், புலன்களின் எல்லாவிதமான செயல்பாடுகளையும்

கட்டுப்படுத்துதல், பலவந்தமாகப் புலன் இன்ப விஷயங்களை நோக்கி இழுத்துச் செல்கின்ற கேட்டல் (சப்தம்) முதலானவை நம்முடன் மோதும்போதுகூட அவற்றின் விருப்பத்தை மாற்றியமைத்துக் கொண்டு, அவற்றில் இருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்தல்' ஆகியவை கூறப்பட்டன. இதைவிட உன்னதமான நிலையை அடைந்தபிறகு, மற்ற யோகிகள், எல்லாப் புலன்களின் செயல்பாடுகள், மற்றும், பிராணனின் (உயிரின்) இயக்கம் ஆகியவற்றை, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்ட ஞானத்தால் பிரகாசிக்கும் பரமாத்ம நிலை என்ற யோக அக்கினியில், வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். எப்பொழுது புலன் அடக்கம், மனக் கட்டுப்பாடு ஆகியவற்றின் பிடியானது ஆன்மாவுடன் சேர்ந்து அதையொத்த நிலைக்கு வந்து விடுகின்றனவோ, அப்பொழுதே (உயிர்) பிராணன் மற்றும் புலன்களின் இயக்கமும் அமைதியடைந்து விடுகின்றன. அந்தச் சமயத்தில் புலனின்ப நாட்டத்தைத் தூண்டும் தீயஎண்ணங்களின் ஓட்டம், மற்றும், இஷ்ட தெய்வத்தை நோக்கிச் செலுத்துகின்ற நல்ல எண்ணங்களின் ஓட்டம் ஆகிய இரண்டு எண்ணவோட்டங்களுமே ஆன்மாவில் இரண்டறக் கலந்து நின்று விடுகின்றன. பரமாத்மாவில் நிலைபெறல் கிடைத்து விடுகிறது. வேள்வியின் இறுதி விளைவு வெளிப்படுகிறது. இதுவே வேள்வியின் உச்ச வரம்பு நிலை ஆகும். எந்த பரமாத்மாவைப் பெறவேண்டுமோ, அதிலேயே நிலைப்பாடு கிடைத்து விட்டதென்றால் எஞ்சியிருப்பதுதான் என்ன? யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மறுபடியும் வேள்வியைப் பற்றி நல்லமுறையில் விளக்குகிறார்.

**த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்ததாபரே**
**ஸ்வாத்தயாய ஜ்ஞான யஜ்ஞாஸ்ச யதய: ஸம்சித வ்ரதா: (28)**

பெரும்பாலோர் செல்வத்தைக் கொண்டு பொருள் வேள்வி **(திரவிய யக்ஞம்)** செய்கின்றனர். அதாவது, ஆன்மீகப்பாதையில் மகாபுருஷர்களின் சேவையில் இலைகள், பூக்கள், பழங்கள் முதலான பொருட்களைச் சமர்ப்பிக்கின்றனர். அவர்கள் சமர்ப்பண உணர்வுடன் கூடியவர்களாக, மகாபுருஷர்களின் சேவையில் பொருட்களை அர்ப்பணிக்கின்றனர். ஸ்ரீகிருஷ்ணர் கீதையில், இனிவரும் பகுதியில், “பக்தி உணர்வுடன் இலைகள், பூக்கள், பழங்கள், தண்ணீர் என்று என்னிடம் அர்ப்பணிக்கின்றவற்றை நான் உண்கிறேன். மேலும் அவர்களுக்கு மேலான நன்மையை உருவாக்கித் தரவல்லவனாகவும் இருக்கிறேன்” என்கிறார். இதுவும் ஒரு வேள்விதான். ஒவ்வொரு ஆன்மாவிற்கும் சேவை செய்தல், பாதை மாறிப் போனவர்களை மீண்டும் ஆன்மீகப் பாதைக்கு அழைத்து வருதல் என்பதும் பொருள் வேள்வி (திரவிய யக்ஞம்) தான். ஏனெனில், இது நம்முடைய இயல்பு சார்ந்த முன்வினைகளை (சம்ஸ்காரங்களை) அழிக்கும் திறன் படைத்தது.

இதே முறையில் இன்னும் சிலர் **'தபோயஜ்ஞா:'**– சுயதர்மத்தைக் கடைப்பிடிக்கும் வகையில், புலன்களை அடக்குகின்றனர். அதாவது, மனித சுபாவத்தில் இருந்து தோன்றிய திறன்பாட்டிற்கு ஏற்ப வேள்வியின் தாழ்ந்த, மற்றும், உயர்ந்த நிலைகளுக்கு இடையில் புலன்களை அடக்கிப் பழகுகின்றனர். இந்த ஆன்மீகப் பாதையில் குறைவான அறிவுடைய ஆரம்பநிலைப்பிரிவைச் சேர்ந்த சாதகன், அதாவது, சூத்திர சாதனைப் பிரிவின் சாதகன் சேவையின் மூலமாகவும், வைசியன் தெய்வீகச் செல்வங்களைத் திரட்டுவதன் மூலமாகவும், சத்திரியன் காமம் – குரோதம் முதலானவற்றை வேருடன் அழித்தெறிதலின் மூலமாகவும், மற்றும் பிராம்மணன் பிரம்மத்திற்குள் நுழைவு பெறுகின்ற தகுதியை அடைந்த நிலையில் இருந்து கொண்டும், புலன்களை அடக்கிப் பழகுகின்றனர். அனைவருக்குமே ஒரேமாதிரியாகத்தான் கடுமையான முயற்சியினை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. உண்மையில் வேள்வி என்னவோ ஒன்றேதான். அந்தந்த நிலைகளுக்கு ஏற்ப சாதனையில் உயர்ந்த தாழ்ந்த நிலைகள் மாறிமாறி வந்து கொண்டேயிருக்கின்றன.

'பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ்' அவர்கள் பின்வருமாறு கூறுவார்: ''மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்கள் மற்றும் உடல் ஆகியவற்றை இலட்சியத்தை அடைவதற்கு ஏற்றவாறு அடக்குவதே 'தவம்' எனப்படுகிறது. அவை இலட்சியத்தில் இருந்து விலகி வெகுதூரம் ஓடிப் போய்க் கொண்டேயிருக்கும். அவற்றைத் தடுத்து அடக்கி இலட்சியத்தை நோக்கியே மறுபடியும் மறுபடியும் செலுத்து.''

பெரும்பாலோர் **'யோகயக்ஞம்'** – யோக வேள்வியைக் கடைப்பிடிக்கின்றனர். இயற்கை, அல்லது, படைப்பில் அலைந்து, திரிந்து கொண்டிருக்கும் ஆன்மாவை, இயற்கைக்கு அப்பால் உள்ள பரமாத்மாவுடன் ஒன்றிணையச் செய்வதையே 'யோகம்' என்கிறோம். யோகத்தின் விளக்கவுரை அத்தியாயம் **(6/23)**–ல் அழகாகப் படம்பிடித்துக் காட்டப்பட்டு உள்ளது. பொதுவாகச் சொல்லப் போனால், இரண்டு பொருள்களின் ஒன்றிணைவு யோகம் எனப்படுகிறது. காகிதத்துடன் பேனா இணைவதும், தட்டுடன் மேஜை இணைவதும் யோகமாகி விடுமா என்ன? இல்லை, ஏனெனில் இவையெல்லாம் பஞ்ச பூதங்களால் உருவான பொருள்கள் ஆகும். அவை ஒன்றேதான். இரண்டு மாறான பொருள்கள் இல்லை. இயற்கையும் (படைப்பு) தெய்வமும். இரண்டும் வெவ்வேறானவையே. இயற்கை, அல்லது, படைப்பில் நிலைபெற்றுள்ள ஆத்மா, தன்னுடைய என்றென்றும் நிலையான, மாறாத ஆன்ம வடிவமான பரமாத்மாவில் நுழைவு பெற்று விடுகிறது. இந்நிலையில் பிரகிருதியானது, புருஷனில் ஒன்று கலந்து மறைந்து விடுகிறது. இதையே 'யோகம்' என்கிறோம். எனவே, நிறையபேர்

இந்த 'மாபெரும் ஒன்றிணைவை' ஏற்படுத்துவதில் உதவிபுரிகின்ற புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு முதலான நியமங்களை நல்லமுறையில் கடைப்பிடித்து வருகின்றனர். யோக வேள்வியைச் செய்பவர்கள், மற்றும், அஹிம்சை முதலான கடுமையான விரதங்களுடன் கூடிய, முயற்சியுடையவர்கள் **'ஸ்வாத்யாய ஞான யஜ்ஞாஸ்ச்ச'–** சுயத்தை ஆராய்ந்து கற்றல், தன்னுடைய சொந்த, மற்றும், உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தைக் கற்பவர்களே ஞான வேள்வி **(ஜ்ஞான யஜ்ஞம்)** யைச் செய்பவர்கள் ஆவர். இங்கே யோகத்தின் எட்டு அங்கங்களாகிய (இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, தியானம் மற்றும் சமாதி) அஹிம்சை முதலான கடுமையான விரதங்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. நிறையபேர் 'ஸ்வாத்யாயனம்' (தன்னை அறிதல்) செய்கின்றனர். புத்தகங்களைப் படிப்பது மூலமாக தன்னை அறிவது (ஸ்வாத்யாயனம்) ஆரம்பநிலை மட்டுமே ஆகும். மிகவும் உயர்ந்த, தூய்மையான 'ஸ்வாத்யாயம்' என்பது எதன் மூலமாக ஆன்ம வடிவம் அடையப்படுகிறதோ, எதனுடைய இறுதி விளைவு ஞானமோ, அதாவது, இறைவனை அனுபவ பூர்வமாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதோ (சாட்சாத்காரம்) அந்த தனித்துவத்தை நமது சொந்த, மற்றும் உண்மை இயல்பாகிய 'ஆன்மாவில் அறிதல்', 'ஆன்மாவின் வழிநடத்தல்' என்பதாகும். வேள்வியின் அடுத்தக் கட்டம் என்னவென்று கூறுகிறார்.

**அபானே ஜீஹ்வதி ப்ராணம் ப்ராணேஅபானம் ததாபரே**
**ப்ராணாஅபானகதி ருத்வா ப்ராணாயாமபராயணா :(29)**

நிறைய யோகிகள் வெளி மூச்சில் (அபான வாயு) உள்மூச்சை (பிராண வாயு) வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். மேலும் பலர் அதே முறையில் உள்மூச்சில் (பிராணவாயு) வெளி மூச்சை (அபான வாயு) வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். இதைவிட நுட்பமான நிலையை அடைந்தபிறகு, மற்ற யோகிகள் உள்மூச்சு (பிராணன்), வெளிமூச்சு (அபானன்) ஆகிய இரண்டின் வேகத்தினைக் கட்டுப்படுத்தி பிராணாயாமத்தை சார்ந்து நிற்கின்றனர். (பிரணாயாம முகமாகி விடுகின்றனர்.

எதனை ஸ்ரீகிருஷ்ணர் பிராணன், அபானன் என்று கூறுகிறாரோ, அதையேதான் மஹாத்மா புத்தர் **'அனாபான்'** என்கிறார். இதையே அவர் உள்சுவாசம் –வெளிசுவாசம் என்றும் கூறுகிறார். **'பிராணன்'** என்பது நீங்கள் உள்ளே இழுக்கும் மூச்சைக் குறிக்கிறது. **'அபானன்'** என்பது நீங்கள் வெளியே விடும் மூச்சைக் குறிக்கிறது. யோகிகள் அனுபூதியில் உணர்ந்தது என்னவென்றால், நீங்கள் மூச்சை உள்ளே இழுக்கும்போது அத்துடன் சேர்த்து வெளியில் உள்ள வாயு மண்டலத்தில் இருந்து சங்கல்பங்களையும் (எண்ணங்கள்) உள்வாங்குகிறீர்கள். மேலும், அதேபோன்று மூச்சை வெளியில் விடும்போது

அத்துடன் சேர்த்து உங்கள் அகத்தில் நிறைந்து இருக்கும் நல்ல கெட்ட சங்கல்பங்களையும் (எண்ணங்கள்) அலையலையாக வெளியில் தள்ளிக் கொண்டே இருக்கிறீர்கள். வெளிவாயு மண்டலத்தில் இருந்து எந்தவொரு சங்கல்பத்தையும் உள்வாங்காமல் இருப்பதே 'பிராணனில் செய்யப்படும் வேள்வி' ஆகும். மற்றும், அகத்தில் இருந்து எந்தவொரு சங்கல்பத்தையும் எழவிடாமல் பார்த்துக் கொள்வதே 'அபானனில் செய்யப்படும் வேள்வி' ஆகும். அகத்தில் எந்தவொரு சங்கல்பமும் கிளர்ந்தெழக்கூடாது. மேலும், வெளி உலகில் நடைபெறும் எந்தவொரு உலகியல் சிந்தனையும் அகத்தில் நுழைந்து சஞ்சலத்தைத் தோற்றுவிக்கக் கூடாது. இந்த முறையில், பிராணன் மற்றும் அபானன் ஆகிய இரண்டின் வேகங்கள் சமமான பிறகு 'பிராணாயாமம்' அதாவது உள்மூச்சு, வெளிமூச்சு ஆகியவற்றில் விரவிக்கிடக்கின்ற சங்கல்பங்கள் அனைத்தும் கட்டுப்படுத்தப்பட்டு அழிக்கப்படுகின்றன. இதுவே **'பிராணாயாமம்'** எனப்படும். இதுவே மனமானது முழுவதுமாக வெற்றி கொள்ளப்பட்டு விட்ட நிலையாகும். பிராணன் அபானனின் வேகத்தைத் தடுத்து நிறுத்துதல் மற்றும் மனத்தின் போக்கைத் தடுத்து நிறுத்துதல் இரண்டுமே ஒன்றுதான்.

ஒவ்வொரு மகாபுருஷரும் இந்தச் செயல்முறையைப் பற்றிக் கூறியுள்ளனர். வேதங்களிலும் இந்த முறையைப் பற்றிய குறிப்பு உள்ளது. **'சத்வாரி வாக் பரிமிதா பதானி'** (ருக் வேதம் –1/164/45 அதர்வ வேதம் 9/15/27) இதையேதான் பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களும் பின்வருமாறு கூறுவார்.

''ஆம்! ஒரே இறை நாமம்தான் நான்கு வகுப்புகளில் ஜபம் செய்யப்படுகிறது. அவை **பைக்கரி, மத்யமா, பஸ்யந்தி** மற்றும் **பரா** எனப்படும். எது வெளியில் உச்சரிக்கப்படுகிறதோ அதுவே **'பைக்கரி'** எனப்படும். இந்த வகுப்பில், இறைவனின் திருநாமமானது, உங்களுக்குக் கேட்கும்படியாகவும், அருகில் யாரேனும் உட்கார்ந்து இருந்தால் அவர்களுக்கும் கேட்கும்படியாகவும் கொஞ்சம் உரத்த குரலில் உச்சரிக்கப்படுகிறது. அடுத்தது **'மத்யமா'** அதாவது மத்திமக் குரலில் இறைவனின் திருநாமமானது ஜபம் செய்யப்படுகிறது. இதில், உங்களுக்கு மட்டுமே கேட்கும்படியாகவும், அருகில் யாரேனும் உட்கார்ந்து இருந்தால் அவர்களுக்குக் கேட்காதவாறும் சன்னமான குரலில் இறைவனின் திருநாமமானது ஜபம் செய்யப்படுகிறது. இந்த உச்சரிப்பு தொண்டைக் குழியில் இருந்து எழுவதாகும். கொஞ்சம் கொஞ்சமாக நாமமானது சீரான இசைவடிவம் பெற ஆரம்பித்த உடனே, மனமானது அதிலேயே இலயிக்கத் தொடங்கிவிடுகிறது. சாதனை இன்னும் சிறிதளவு நுட்பமடைந்து விட்டால், பிறகு **'பஸ்யந்தி'** அதாவது 'இறைவனின் திருநாமத்தைக் கவனித்துப் பார்ப்பதற்க்கான திறமை' வந்து விடுகிறது. இதற்குப் பிறகு இறை நாமத்தை நாமாக முயற்சி செய்து ஜபிக்க

வேண்டியதில்லை. இதே இறைநாமம் நமது சுவாசத்தில் கரைந்து கிடைக்க ஆரம்பிக்கிறது. மனத்தைப் பார்வையாளனாக நிறுத்தி, சுவாசம் என்ன சொல்கிறது? சுவாசம் எப்போது வருகிறது? சுவாசம் எப்போது வெளியேறுகிறது? என்ன சொல்கிறது? என்பதைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான். மஹாபுருஷர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால், 'இந்த சுவாசமானது இறை நாமத்தைத் தவிர வேறொன்றும் சொல்வதில்லை.' சாதகன் இறைநாமத்தை ஜபம் செய்வதில்லை. அவன் வெறுமனே சுவாசத்தில் இருந்து எழுகின்ற 'நாம ஒலியை'(இசையை) மட்டுமே கேட்கிறான். சுவாசத்தைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறான். எனவேதான், இதனை **'பஸ்யந்தி'** என்கிறோம்.

**பஸ்யந்தியில்** மனத்தைப் பார்வையாளராக நிறுத்தி வைக்க வேண்டியுள்ளது. ஆனால், சாதனை இன்னும் உன்னதமடைந்துவிட்ட பிறகு, நாம ஒலியை இறைநாமத்தைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டிய அவசியமும் இல்லாமல் போய்விடுகிறது. ஒருமுறை மனத்தின் கவனப்பார்வையை (ஸூரத்) நிலைநிறுத்தி விட்டால் போதும். இறைநாமமானது தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருக்கும். **'ஜபை ந ஜபாவை, அபனே ஸே ஆவை'** – நாமாக முயன்று ஜபம் செய்ய வேண்டியதுமில்லை. மனத்தையும் வலுக்கட்டாயமாக நிறுத்தி இறைநாமத்தைக் கேட்க வைக்க வேண்டியதுமில்லை. நாம ஜபம் தானாகவே தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு இருக்கும். இதற்குப் பெயரே **'அஜபா'** ஆகும். மாறாக நாமஜபத்தை ஆரம்பிக்கவே இல்லை, அஜபா வந்துவிட்டது என்பதெல்லாம் நடக்காத காரியம். எவனொருவன் இறைநாம ஜபத்தை ஆரம்பிக்கவே இல்லையோ, அவனிடம், **அஜபா** என்னும் பெயரில் ஒரு பொருளும் இருக்கப் போவதில்லை. **'அஜபா'** என்பதற்கு அர்த்தம் என்னவென்றால், நாமாக ஜபம் செய்வதில்லை, ஆனால் ஜபம் நம்மை விட்டு விலகுவதில்லை. ஒருமுறை மனத்தின் கவனப்பார்வையை (ஸூரத்) நிலைநிறுத்தி வைத்து விட்டால் போதும், இறை நாம ஒலி பெருக்கெடுத்து ஓடத் தொடங்கிவிடும். மேலும் தொடர்ச்சியாக எந்நேரமும் நிகழ்ந்து கொண்டே இருக்கும். இந்த, இயல்பாகவே நிகழ்கின்ற இறைநாம ஜபத்திற்குப் பெயரே **'அஜபா'** ஆகும். மேலும் இதுவே **'பரா வாணியின் ஜபம்'** என்றும் சொல்லப்படும். அதாவது இது இயற்கை என்னும் படைப்பிற்கெல்லாம் அப்பாற்பட்ட பரம தத்துவமாகிய பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தருகிறது. இதற்குப் பிறகு வாணியில் (வாக்கினால்) அதாவது இறைவனின் குரலில் வேறு எந்த மாற்றமும் நிகழ்வதில்லை. **'பரம்'** எனப்படும் மேலான, உயர்ந்த இறைவனை தரிசனம் செய்வித்து, அவரிலேயே இரண்டறக் கலந்து மறைந்து விடுகிறது. எனவேதான் இதனை **'பரா'** என்கிறோம்.

இந்த சுலோகத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் வெறுமனே சுவாசத்தின்மீது மட்டுமே கவனத்தை வைக்குமாறு கூறினார். அதேபோன்று கீதையில் இனிவரும் பகுதியில் தாமே முன்னின்று, 'ஓம்' என்ற இறைவனின் திருநாமத்தை ஜபம் செய்ய வேண்டும்' என்று வலியுறுத்திக் கூறுகிறார். கௌதம புத்தரும் **'அனாபான் ஸதியில்** உள்சுவாசம்—வெளிசுவாசம் ஆகியவற்றைப் பற்றி விவாதித்து உள்ளார். இறுதியாக அந்த மகாபுருஷர் என்னதான் சொல்ல விரும்புகிறார்? உண்மையில், ஆரம்பநிலையில் **பைக்கரி**, அதற்குப் பிறகு **மத்யமா,** அதையும் விட உன்னதமடைந்தபிறகு இறைநாம ஜபமானது **பஸ்யந்தி** என்னும் நிலையை அடையும்போது, சுவாசம் பிடிக்குள் வந்து விடுகிறது. அந்தச் சமயத்தில், இறைநாம ஜபமானது நமது சுவாசத்தில் நன்றாகக் கரைந்த நிலையில் நமக்குக் கிடைக்க ஆரம்பித்து விடும். பிறகு எதை ஜபிப்பது? அந்நிலையில் வெறுமனே சுவாசத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் மட்டுமே போதுமானது. எனவேதான் அவர் (கௌதம புத்தர்) உள்மூச்சு —வெளிமூச்சு என்று மட்டும் கூறினார். 'நாமத்தை ஜபியுங்கள்' என்று தனியாகக் கூறவில்லை. காரணம் என்னவென்றால் கூறவேண்டிய அவசியம் இல்லை என்பதுதான். ஒருவேளை அப்படிக் கூறினால், சாதகர்கள் தாழ்ந்த சாதனைப் பிரிவுகளிலேயே சுற்றி வந்து கொண்டு, வழி தெரியாமல் தவறிப்போய்விடக் கூடும். மஹாத்மா புத்தர், பூஜ்ய ஸ்ரீ பகவான் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் (குருதேவர்) மற்றும் ஒவ்வொரு மகாபுருஷரும், இதே வழியில் சென்றுள்ளனர். அனைவருமே ஒரே கருத்தினையே கூறுகிறார்கள். **பைக்கரி** மற்றும் **மத்யமா** இறை நாம ஜபத்தின் நுழைவாயில் மட்டுமே ஆகும். **பஸ்யந்தியில்** இருந்துதான் இறைநாம ஜபத்திற்குள் நுழைவே கிடைக்கிறது. **'பரா'** என்ற சாதனை வகுப்பில் இறைநாமம் தங்குதடையின்றிப் பெருக்கெடுத்து ஓடும். இதில் இறைநாமஜபம் நம்மை விட்டு விலகுவதில்லை.

மனமானது சுவாசத்துடன் நேரடியாக இணைக்கப்பட்டுள்ளது. எப்பொழுது நமது பார்வை சுவாசத்தில் நிலைத்திருக்கிறதோ, இறைநாமமானது சுவாசத்தில் நன்கு கரைந்து கிடைக்க ஆரம்பித்து விட்டதோ, அகத்தில் இருந்து எந்த சங்கல்பமும் எழவில்லையோ! மற்றும், வெளியில் உள்ள வாயு மண்டலத்தில் இருந்து எந்தவொரு சங்கல்பமும் அகத்தில் நுழைவதில்லை என்னும் நிலை வந்து விட்டதோ, இதுவே மனத்தின் மீது வெற்றி கொள்ளப்படுகின்ற நிலையாகும். இத்துடன் சேர்ந்தே வேள்வியின் இறுதிவிளைவு வெளிப்படுகிறது.

**அபரே நியதாஹாரா: ப்ராணான்ப்ராணேஷு ஜுஹ்வதி**
**ஸர்வேஅப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபிதகல்மஷா : (30)**

உணவுக்கட்டுப்பாடுடைய மற்ற யோகிகள் உள் சுவாசத்தை (பிராணனை) உள்சுவாசத்திலேயே (பிராணனிலேயே) வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர்.

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் பின்வருமாறு கூறுவது உண்டு: "யோகிக்கு உணவு, ஆசனம், உறக்கம் மூன்றும் திடமாக இருக்க வேண்டும்." உணவு உடல் உழைப்பு, ஓய்வு ஆகியவற்றில் கட்டுப்பாடு மிகவும் அவசியம் ஆகும். அத்தகைய கட்டுப்பாடுடைய எண்ணற்ற யோகிகள் பிராணனை பிராணனிலேயே சுவாசத்திலேயே வேள்விப் பொருளாகச் சமர்ப்பிக்கின்றனர். அதாவது, சுவாசத்தை உள்ளே வாங்கும் போது மட்டுமே, கவனத்தை ஒருமுகப்படுத்துகின்றனர். சுவாசத்தை வெளியே விடும்போது, கவனம் செலுத்துவது இல்லை. சுவாசம் உள்ளே வரும்போது 'ஓம்' என்ற இறைவனின் திருநாமத்தைக் கேட்பது, மீண்டும் சுவாசம் உள்ளே வரும்போது 'ஓம்' என்ற இறைவனின் திருநாமத்தைக் கேட்பது, – இவ்வாறு தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள். இந்தமுறையில் வேள்விகளின் மூலமாகப் பாவங்களை எல்லாம் அழித்துவிட்ட அனைவருமே வேள்வியை அறிந்தவர் ஆவர். இந்தப் பரிந்துரை செய்யப்பட்டுள்ள விதிமுறைகளின்படி எந்நிலையிலிருந்து கொண்டு ஈடுபட்டாலும், அவர்கள் அனைவருமே வேள்வியை அறிந்தவர்கள்தாம். அடுத்து வேள்வியின் இறுதிவிளைவு என்ன? என்பதைப் பற்றிக் கூறுகிறார்.

**யஜ்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம்**
**நாயம் லோகோஅஸ்த்யயஜ்ஞஸ்ய குதோன்ய குருஸத்தம (31)**

குருவம்சத்தில் சிறந்தவனே! அர்ஜுனா! **யஜ்ஞ சிஷ்டாம்ருத புஜோ'** – வேள்வி எதைப் படைக்கிறதோ, வேள்வியின் இறுதியில் எஞ்சுவது எதுவோ, அதுவே 'அமிர்தம்' எனப்படுகிறது. அதனை நேருக்கு நேராக அறிதலே ஞானம் ஆகும். எந்த ஞானாமிருதத்தை பருகி அனுபவிப்பவனும் மற்றும், அதனை அடைகின்ற யோகிகளும் **'யாந்தி பரஹ்ம ஸநாதனம்'** – என்றும் நிலையான, மேலான, பரபிரம்மத்தை அடைகிறார்கள். வேள்வி என்பது, நிறைவுபெற்ற உடனேயே, என்றென்றும் நிலையான, பழைமையான பரபிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தருகிறது. இந்த வேள்வியைச் செய்யவில்லை என்றால் என்ன நேரிடும்? என்ற கேள்விக்கு ஸ்ரீகிருஷ்ணர், "வேள்வியில் ஈடுபடாதவர்களுக்கு மறுபடியும் இந்த மானுட உலகம் அதாவது, மனித உடல் கிடைப்பதுகூடச் சுலபமில்லை". என்று கூறுகிறார். இவ்வாறு இருக்கும்போது, மற்ற உலகங்கள் அவர்களுக்கு எவ்வாறு நன்மை அளிப்பதாக அமையும்? மேலும் அவர்களுக்காக, தாழ்நிலை உயிரினங்களின் பிறவிகளே பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளனவே தவிர, அதற்குமேல் ஒன்றும் கிடைக்கப் போவதில்லை" என்று கூறுகிறார். எனவே, வேள்வியைச் செய்வது மனிதர்களைப் பொறுத்தவரையில் மிகவும் இன்றியமையாததாகும்.

**ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே**
**கர்மஜான்வித்தி தான் ஸர்வானேவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே (32)**

இந்த முறையில், மேலேகூறப்பட்டு உள்ள, பல்வேறு வகையான வேள்விகள் வேதத்தின் உரைகளால் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. பிரம்மத்தின் திருவாக்கின் மூலமாக விரிவாக்கம் செய்யப்பட்டு உள்ளன. இறைவனை அடைந்து முக்திநிலை பெற்றதற்குப் பிறகு மகாபுருஷர்களுடைய உடலை பரபிரம்மமே ஏற்றுக் கொண்டு விடுகிறது. பிரம்மத்தில் இரண்டறக் கலந்து விட்ட அந்த மகாபுருஷர்களுடைய புத்தியானது வெறும் இயந்திரத்தை போல் ஆகிவிடுகிறது. அவர் மூலமாக அந்த இறைவனே பேசுகிறார். அவருடைய திருவாக்குகளின் மூலமாகவே இந்த வேள்விகள் அனைத்துமே விரிவாக்கம் செய்யப்பட்டு உள்ளன.

இந்த எல்லா வேள்விகளையும் நீ **'கர்மஜான் வித்தி'** – கர்மத்திலிருந்து தோன்றியவை என்றே அறிந்து கொள். இது ஏற்கனவே கூறப்பட்டதுதான். **'யஜ்ஞ கர்மஸமுத்பவ:' (3/14)** அதனை இந்தமுறையில், செயல்முறைப்பாதையில் சென்று அறிந்து கொண்டபிறகு, (இப்போதுதான் கூறியதுபோல், 'வேள்வியைச் செய்து எவருடைய பாவங்கள் அழிந்து விட்டனவோ, அவரே இந்த வேள்வியை உள்ளது உள்ளபடியாக அறிந்தவர் ஆவார்') அர்ஜுனா! நீ **'விமோக்ஷ்யஸே'** – உலக பந்தங்களில் இருந்து முழுவதுமாக விடுதலை பெற்று விடுவாய். இங்கே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கர்மத்தை நன்றாகத் தெளிவுபடுத்தி விட்டார். எதன்மூலம் மேலேகூறப்பட்டுள்ள வேள்வியானது முழுமையாக நிறைவேற்றப்படுகிறதோ, அதுவே கடைப்பிடிக்கப்பட வேண்டிய கர்மம் ஆகும்.

அதற்குப் பிறகும் ஒருவேளை, தெய்வீகச் செல்வங்களைப் பெருக்குதல், சத்குருவை தியானித்தல், புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு, உள்சுவாசத்தை வெளிசுவாசத்தில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பித்தல், வெளி சுவாசத்தை உள்சுவாசத்தில் வேள்விப் பொருளாகச் சமர்ப்பித்தல், பிராணன் – அபானன் ஆகியவற்றின் வேகத்தைக் கட்டுப்படுத்துதல் ஆகியவை அனைத்தும் விவசாயம் செய்வதாலோ, வியாபாரம் மற்றும் வேலை செய்வதாலோ, அரசியலில் ஈடுபடுவதாலோ நடைபெறும் என்றால் நீங்கள் வேண்டுமானால் முயன்றுதான் பாருங்களேன்! வேள்வி என்பது, நிறைவடைந்த அடுத்தக்கணமே பரபிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தரும் வல்லமை படைத்த கிரியை ஆகும். வெளிஉலகில் செய்யப்படும் எந்தவொரு காரியத்தின் மூலமாகவும், இந்தப் பரபிரம்மத்தில் அடுத்தக்கணமே நுழைவு பெற்றுவிட முடியும் என்று நீங்கள் நினைத்தால், செய்துதான் பாருங்களேன்!

உண்மையில், இந்த எல்லா வேள்விகளுமே ஆன்ம சிந்தனை தொடர்பான அகச் செயல்பாடுகள் ஆகும்; ஆராதனையின் விளக்கமாகும். இதன்மூலம் ஆராதிக்கப்படுகின்ற தெய்வம் (ஸத்குரு—இறைவன்) அறியப்படுகிறார். வேள்வி என்பது அந்த ஆராதனைக்குரிய இறைவன் வரையிலான இடைவெளியைக் கடக்க உதவுகின்ற நிச்சயிக்கப்பட்டு உள்ள சிறப்பான செயல்முறைவிதியாகும். இந்த வேள்வியானது, உள்மூச்சில் இறைச்சிந்தனை, பிராணாயாமம் முதலான, எந்தக்கிரியையின் மூலமாக முழுமையடைகிறதோ அந்தக் காரியச் செயல்முறையின் பெயரே கர்மம் ஆகும். கர்மத்தின் தூய்மையான பொருள் 'ஆன்மீகச் சிந்தனை', 'ஆன்மீக வழிபாடு' என்பதாகும்.

பெரும்பாலோர் கூறுவது என்னவென்றால் 'வெளிஉலகில் செய்யப்படுபவை அனைத்துமே கர்மம்தான். ஆசைகள் இன்றி எதையாவது செய்து கொண்டே போவதுதான் நிஷ்காம (பற்றற்ற) கர்மயோகம்.' இன்னும் சிலரோ, "அதிகமான இலாபத்தை எதிர்பார்த்து வெளிநாட்டு ஆடைகளை விற்றீர்களானால், நீங்கள் 'ஆசையுடன் கர்மம் செய்பவர்' அதாவது **'ஸகாமி'.** (பற்றுள்ளவர்) தேச சேவைக்காக உள்நாட்டு ஆடைகளை விற்றீர்களானால், நீங்கள் 'ஆசையின்றிக் கர்மம் செய்பவர்' அதாவது (நிஷ்காம) **'பற்றற்ற கர்மயோகி'** எனப்படுவீர்கள். நீங்கள் மிகுந்த மனஈடுபாட்டுடன் வேலை செய்யுங்கள், இலாப—நஷ்டத்தைப் பற்றிய எண்ணத்தை அறவே விடுத்து வியாபாரம் செய்யுங்கள், அதுவே (நிஷ்காமகர்ம) **பற்றற்ற யோகம்,** வெற்றி—தோல்வி பற்றிய பாவனையில் இருந்து விடுபட்டு வியாபாரம் செய்யுங்கள், தேர்தலில் மோதுங்கள் போதும், நிஷ்காம கர்மியாகி விடுவீர்கள். ஒருவேளை செத்துப் போய்விட்டால் முக்தி கிடைத்து விடும்" என்கிறார்கள். உண்மையில், மேலே சொல்லப்பட்ட எண்ணங்களோடு செய்யப்பட்ட அனைத்துமே கர்மங்கள் ஆகாது. யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தெளிவான வார்த்தைகளில், "இந்த நிஷ்காம கர்மத்தில், நிச்சயிக்கப்பட்டுள்ள செயல் ஒன்றுதான் — **'வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தன'** — அர்ஜூனா! நீ நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே செய்! வேள்வியின் செயல்முறையே கர்மம் ஆகும்" என்கிறார். வேள்வி என்றால் என்ன? "உள்சுவாசம்—வெளிசுவாசத்தில் இறைச் சிந்தனை, புலனடக்கம், மனக்கட்டுப்பாடு, வேள்வியின் வடிவமாகவே விளங்கும் மகாபுருஷருடைய — திருவுருவத் தியானம், பிராணாயாமம் — உள், வெளி சுவாசங்களின் வேகத்தினைக் கட்டுப்படுத்துதல்" இதுவே மனத்தின் மீது வெற்றி கொள்ளப்பட்ட நிலையாகும். மனத்தின் விரிவே உலகம் ஆகும். ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளில் சொல்வதென்றால், **'இஹைவ தைர்ஜித : ஸர்க்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன:'** (5/19) "எவருடைய மனமானது சமத்துவத்தில் நிலைபெற்று உள்ளதோ, அந்த மஹாபுருஷர்கள் மூலமாக இந்த அசைவன, அசையாதவை எல்லாம் அடங்கிய ஒட்டுமொத்த

உலகமும் இவ்விடத்திலேயே தெள்ளத் தெளிவாக வெல்லப்பட்டு விட்டது." மனத்தின் சமத்துவநிலைக்கும் இந்த ஒட்டு மொத்த உலகமும் வெற்றி கொள்ளப்படுவதற்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்? ஒருவேளை ஒட்டு மொத்த உலகத்தையும் வென்று விட்டாரென்றால் அதன்பிறகு அவர் எங்கே நின்று கொண்டிருக்கிறார்? இதற்கு ஸ்ரீகிருஷ்ணர், "அந்த பிரம்மம் களங்கமற்றது, மற்றும், சமமானது. இங்கே மஹாபுருஷரின் மனமும் களங்கமற்றது மற்றும், சமத்துவநிலைக்கு உயர்ந்து விட்டது. எனவே அவர் பிரம்மத்தில் நிலைபெற்று விடுகிறார்.

சாராம்சம் இதுதான்: மனத்தின் விரிவே உலகம் எனப்படுகிறது. அசைவன, அசையாதவை எல்லாம் அடங்கிய ஒட்டு மொத்த உலகமும் வேள்விப் பொருளின் **(ஸாமக்ரி)** வடிவில் உள்ளது. மனமானது முழுவதுமாகக் கட்டுப்பாட்டிற்குள் வந்து விட்டாலே, உலகமும் கட்டுப்பாட்டிற்குள் வந்து விடுகிறது. மனமானது முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு அழிக்கப்படுவதுடன் சேர்த்தே வேள்வியின் இறுதிவிளைவு (பரிணாமம்) வெளிப்படுகிறது. வேள்வி எதனைப் படைக்கிறதோ, அந்த ஞானாமிருதத்தைப் பருகுகின்ற மகாபுருஷர் என்றும் நிலையான, மாறாத சனாதன பிரம்மத்தில் நிலைபெற்று விடுகிறார். இந்த அனைத்து வேள்விகளுமே பிரம்மத்தில் நிலைபெற்ற மகாபுருஷர்களின் திருவாக்குகளின் மூலமாகவே சொல்லப்பட்டு உள்ளன. வெவ்வேறு மதச் சம்பிரதாயங்களைச் சேர்ந்த சாதகர்கள் தனித் தனியான முறைகளில் வேள்வியைச் செய்கிறார்கள் என்பதல்ல பொருள். மாறாக, இந்த எல்லா வேள்விகளுமே ஒரே சாதகருடைய உயர்ந்த – தாழ்ந்த நிலைகளாகும். இந்த வேள்வியானது எதனால் நிகழ்த்தப்படுகிறதோ, அந்தக் கிரியைக்குப் பெயரே கர்மம் ஆகும். கீதை முழுவதும் ஒருசுலோகம்கூட, உலகியல் ரீதியான காரியங்கள், வியாபாரங்கள் முதலானவற்றை ஆதரிப்பது போன்று அமையவில்லை. தற்காலத்தில், பெரும்பாலோர், வேள்வி என்ற பெயரைக் கேட்டவுடனே அனைவரும் வெளியில் ஒரு யாகக் குண்டத்தை அமைத்து அதில் எள், நெல்முதலான தானியங்கள் ஆகியவற்றைப் போட்டு **'ஸ்வாஹா'** என்று சொல்லியபடியே வேள்வியைச் செய்யத் தொடங்கி விடுகின்றனர். இதுவொரு போலித்தனமான, ஏமாற்று வேலையாகும். பொருள் வேள்வி (திரவிய யக்ஞம்) என்பது வேறு. அதைப்பற்றி ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே பலமுறை விளக்கியுள்ளார். ஆனால் மிருகபலி, பொருட்களை நெருப்பில் இட்டு எரித்தல் முதலானவற்றிற்கும் உண்மையான பொருள் வேள்விக்கும் (திரவிய யக்ஞம்) எந்தவொரு சம்பந்தமும் இல்லை.

**ஸ்ரேயான் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞான யஜ்ஞ: பரந்தப**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞானே பரிஸமாப்யதே (33)**

அர்ஜுனா! உலகியல் செல்வங்களால் நிறைவேற்றப்படுகின்ற வேள்வியுடன் ஒப்பிடும்போது ஞானவேள்வியே (எதனுடைய இறுதிவிளைவு இறைவனை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரத்துடன் சேர்த்து அறிந்து கொள்வதாகிய ஞானமோ, வேள்வியானது எதனைப் படைக்கிறதோ, அந்த அமிருத தத்துவத்தை அறிந்து தெளிவதற்குப் பெயரே ஞானமாகும். அத்தகைய வேள்வி) உயர்வானதும் மேலான நன்மையைத்தரவல்லதும் ஆகும். பார்த்தா! எல்லாக் கர்மங்களுமே ஞானத்தில் முடிகின்றன. **'பரிஸமாப்யதே'**– மிகவும் நல்லமுறையில் ஒன்று கலந்து மறைந்து விடுகின்றன. ஞானம் வேள்வியின் உச்ச நிலையாகும். அதற்குப் பிறகு, கர்மம் செய்வதால் எந்த இலாபமும் இல்லை மற்றும் கர்மத்தைச் செய்யாமல் விட்டு விடுவதால் அந்த மஹாபுருஷருக்கு எந்த பாதிப்பும் இல்லை.

இந்த முறையில், உலகியல் சார்ந்த பொருட்களைக் கொண்டு செய்யப்படுகின்ற வேள்வியும்கூட வேள்விதான். ஆனால், எதனுடைய இறுதிவிளைவு இறைவனை நேரடியாக தரிசனம் செய்து (சாட்சாத்காரம்) அறிந்து கொள்வதோ அந்த ஞானவேள்வியுடன் ஒப்பிட்டு நோக்கும்போது மிகவும் சாதாரணமானது. நீங்கள் கோடானு கோடி யாகம் செய்யுங்கள், நூற்றுக்கணக்கான வேள்விக் குண்டங்களை அமையுங்கள். சத்தியப் பாதையில் செல்வத்தை அள்ளிக் கொட்டுங்கள். சாதுக்கள் – மஹாத்மாக்கள் – மஹாபுருஷர்களுடைய சேவையில் செல்வத்தை அள்ளிக் கொட்டுங்கள். ஆனால் இந்த ஞான வேள்வியுடன் ஒப்பிடும்போது அவையெல்லாம் மிகவும் அற்பமானவையே. உண்மையில், வேள்வி என்பது ஸ்ரீகிருஷ்ணர் கூறியுள்ளதுபோல் உள்சுவாசம், வெளிசுவாசத்தில் இறைச் சிந்தனைக்கானது ஆகும். புலன்களைக் கட்டுப்படுத்துவதற்கானது, மற்றும் மனத்தைக் கட்டுப்படுத்தி முழுவதுமாக அழிப்பதற்கானது. இந்த வேள்வியை எங்கிருந்து அடைவது? அதற்கான விதியை எங்கிருந்து கற்றுக் கொள்வது? கோயில்களிலோ, மசூதிகளிலோ, அல்லது தேவாலயங்களிலோ இதைப் பற்றிய அறிவு கிடைக்குமா? அல்லது, ஏதேனும் புத்தகங்களிலா? புனிதப் பயணங்களில் கிடைக்குமா? அல்லது, புண்ணிய நதிகளில் நீராடுவதால் கிடைக்குமா? அதற்கு ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்: "இல்லை, தத்துவ தரிசியாகிய மகாபுருஷர் மட்டுமே இதை அறிந்து கொள்வதற்கான ஒரே (மூலம்) வழியாவார்."

**தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா**
**உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞானினஸ்தத்வதரிசின: (34)**

எனவே அர்ஜுனா! நீ தத்துவதரிசியாகிய மகாபுருஷரிடம் சென்று, நல்லமுறையில் அவரை வணங்கி, (நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்க வேண்டும். அகங்காரத்தைத் துறந்து, அவரை முழுமையாக சரணடைந்து) மிகவும் நல்லமுறையில் அவருக்குச் சேவைகள் புரிந்து, கபடமில்லாத, தூய்மையான

உள்ளத்துடன் அவரிடம் கேள்விகள் கேட்டு நீ இந்த ஞானத்தை அறிந்து கொள். அந்த ஆன்ம தத்துவத்தை அறிந்த ஞானிகள் உனக்காக அந்த ஞானத்தை உபதேசம் செய்வார்கள்; ஆன்மீக சாதனைப்பாதையில் உன்னை வழிநடத்தியும் செல்வார்கள். சமர்ப்பண உணர்வுடன் சேவைகள் பல ஆற்றிய பிறகே இந்த ஞானத்தைக் கற்றுக் கொள்ளும் திறமையே வருகிறது. தத்துவதரிசி மகாபுருஷர்கள் பரம தத்துவமாகிய பரமாத்மாவை நேருக்குநேராக தரிசனம் செய்து அறிந்தவர்கள். அவர்கள் வேள்வியின் சிறப்பான விதிமுறைகளை எல்லாம் அறிந்தவர்கள். மேலும், அவர்களே உனக்கு அவற்றையெல்லாம் கற்றுக் கொடுப்பார்கள். ஒருவேளை வேறுவிதமான வேள்விகளும் உண்டென்றிருந்தால், ஞானிகள் மற்றும் தத்துவதரிசி மஹாபுருஷரிடம் செல்ல வேண்டிய அவசியம்தான் என்ன?

அர்ஜுனன் சாட்சாத் ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு எதிரில் நின்று கொண்டு இருந்தான். அப்படி இருக்கும்போது, பகவான் அவனை ஏன் தத்துவதரிசியிடம் போகச் சொல்லி அனுப்பி வைக்கிறார்? உண்மையில் ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார். அவருடைய விருப்பம் என்னவென்றால், 'இன்று இந்த இறைப்பற்றுடையவனான (அனுராகி) அர்ஜுனன் எனக்கு எதிரில் இருக்கிறான், ஆனால், எதிர்காலத்தில், அவனைப் போன்ற பக்தர்களுக்கு, ஸ்ரீகிருஷ்ணர்தான் போய்விட்டாரே, இப்போது நாம் யாருடைய சரணத்திற்குப் போவது? என்ற மனக் குழப்பம் வந்து விடக்கூடாது' என்பதால்தான். அவர், 'தத்துவதரிசி மஹாபுருஷரிடம் போ! அந்த ஞானிகள் உனக்கு உபதேசம் செய்வார்கள்' என்று தெளிவுபடுத்துகிறார். மேலும்.

**யஜ்ஜாத்வா ந புனர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ**
**யேன பூதான்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மன்யதோ மயி (35)**

அந்த ஞானத்தை அவர் மூலமாக அறிந்து கொண்ட, நீ இந்தமுறையில் மீண்டும் ஒருபோதும் மோகத்திற்கு ஆளாக மாட்டாய். அவர் மூலமாகத் தரப்பட்ட ஞானஉபதேசத்தின் வாயிலாக, அதைப் பின்பற்றிச் சென்று, நீ உனது ஆத்மாவிற்குள்ளேயே மனிதர் உட்பட எல்லா ஜீவராசிகளும் அடங்கியிருப்பதைக் காண்பாய். அதாவது, மனிதர் உட்பட எல்லா ஜீவராசிகளிலும் இந்த ஆத்மாவே விரிந்து பரவியிருப்பதைக் காண்பாய். எப்பொழுது எங்கும் ஒரே ஆன்மாவின் விரிவைக் காண்கின்ற ஆற்றல் வந்து விடுகிறதோ, அதற்குப் பிறகு நீ என்னுள் நுழைவு பெற்று விடுவாய். எனவே, அந்த பரமாத்மாவை அடைவதற்கான வழிமுறை தத்துவதரிசி மகாபுருஷரின் மூலமாகவே கிடைக்கிறது. ஞானம் தொடர்பான, தர்மம் மற்றும் என்றும் நிலையான, மாறாத உண்மை தொடர்பான விளக்கங்கள்

அனைத்தையும், ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், ஏதேனும் ஒரு பூரணத்துவ நிலையை அடைந்த தத்துவதரிசியிடம் போய்க் கேட்பதற்கே விதிமுறை உள்ளது.

**அபி சேதஸி பாபேப்ய : ஸர்வேப்ய : பாபக்ருத்தம :**
**ஸர்வம் ஜ்ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி (36)**

ஒருவேளை நீ எல்லாப் பாவிகளையும் விட அதிகம் பாவம் செய்பவனாக இருந்தாலும்கூட ஞானம் என்னும் படகின் மூலமாக, எல்லாப் பாவங்களில் இருந்தும் சந்தேகமே இல்லாமல், மிகவும் சிறந்தமுறையில் விடுபட்டுக் கரைசேர்ந்து விடுவாய். இப்படிச் சொல்வதன் நோக்கம், 'அதிகத்திலும் அதிகமாகப் பாவம் செய்தபிறகும் கூட நாம் கரைசேர்ந்துவிடலாம்' என்று நீங்கள் எடுத்துக் கொள்ளக்கூடாது. ஸ்ரீகிருஷ்ணர் இதன் மூலமாகச் சொல்ல விரும்புவது என்னவென்றால், "நீங்கள் ஒருவேளை, 'நாம் மிகப் பெரிய பாவி! நம்மால் கரை சேர முடியாது' – என்றெல்லாம் எண்ணிக் கொண்டு மனக் குழப்பத்திற்கு ஆளாகி விடக்கூடாது'' என்பதற்காகத்தான். ஸ்ரீகிருஷ்ணர் உங்களை உற்சாகப்படுத்தும் விதமாக, ஆறுதல்படுத்தும் விதமாக, "எல்லாப் பாவிகளும் இவ்வகையில் செய்த பாவங்களின் ஒட்டு மொத்த எண்ணிக்கையை விடவும், அதிகமான பாவங்களைச் செய்பவராகவே இருந்தாலும்கூட, தத்துவதரிசிகள் மூலமாகக் கிடைத்த ஞானம் என்னும் படகின் மூலமாக, நீங்கள் சந்தேகமே இல்லாமல், எல்லாப் பாவங்களில் இருந்தும் மிகவும் நல்லமுறையில் விடுபட்டுக் கரை கடந்து விடுவீர்கள்" என்று வாக்குறுதி அளிக்கிறார். எந்த முறையில்?

**யதைதாம்ஸி ஸமித்தோக்னிர்பஸ்மஸாத்குருதேர்ஜுன**
**ஜ்ஞானாக்னி : ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா (37)**

அர்ஜுனா! எந்தமுறையில் கொழுந்துவிட்டெரியும் நெருப்பானது விறகுகளை எல்லாம் எரித்துச் சாம்பலாக்கி விடுகிறதோ, இதேபோன்றுதான் ஞானம் என்னும் அக்கினியானது எல்லாப் பாவ, புண்ணிய கர்மங்களையும் எரித்துச் சாம்பலாக்கி விடுகிறது. இது, எங்கிருந்து வேள்வியில் நுழைவு கிடைக்கிறதோ, அந்த, ஞானத்தின் ஆரம்ப நிலையைப் பற்றியது அல்ல. மாறாக, இந்த 'ஞானம்' அதாவது, 'இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்கின்ற' அனுபவரீதியான உச்ச நிலையைப் பற்றிய வர்ணனையாகும். இதில், முதலில், முரண்பாடான தீய எண்ணவோட்டங்கள் அல்லது தீயகர்மங்கள் எரிந்து சாம்பலாகின்றன. மேலும், அதற்குப்பிறகு, இறைவனை தரிசித்து முக்திநிலையைப் பெற்றதுடன் சேர்த்து ஆன்ம சிந்தனை – கர்மமும்கூட அவரிலேயே ஒன்று கலந்து மறைந்து விடுகின்றன. எதை அடைய வேண்டுமோ, அதை அடைந்தாகி விட்டது. இனி, இதற்குமேல் ஆன்ம சிந்தனையை

மேற்கொண்டு யாரைத் தேடுவது? அத்தகைய, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்ட (சாட்சாத்காரம்) ஞானி ஒட்டு மொத்தமான, நல்ல மற்றும் தீய கர்மங்களையும் அழித்து விடுகிறார். அந்த இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வது' எனப்படும் 'சாட்சாத்காரம்' எங்கே நிகழ்கிறது? புறத்திலா அல்லது அகத்திலா? இதுபற்றிக் கூறுகிறார்.

**ந ஹி ஜ்ஞானேன ஸத்ருஷம் பவித்ரமிஹ வித்யதே**
**தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேனாத்மனி விந்ததி (38)**

இந்த உலகத்தில் ஞானத்திற்குச் சமமாகப் பரிசுத்தமாக்கும் தன்மை சந்தேகமே இல்லாமல் வேறெதற்கும் இல்லை. இந்த ஞானத்தை (இறைவனை நேரடியாக தரிசனம் செய்தல் அதாவது சாட்சாத்காரம்) நீயே (வேறு யாரோ அல்ல) யோகத்தின் பரிபக்குவநிலையில் (ஆரம்பநிலையில் அல்ல) உன்னுடைய ஆத்மாவிற்குள் அடங்கியதாக, இதய தேசத்திலேயே அனுபூதியில் அறிந்து கொள்வாய். வெளியில் அல்ல. இந்த ஞானத்தை அடைவதற்கு எதிர்பார்க்கப்படும் தகுதி என்ன? யோகேஷ்வரரின் வார்த்தைகளில் –

**ஸ்ரத்தாவான்லபதே ஜ்ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய:**
**ஜ்ஞானம் லப்த்வா பராம் சாந்திமசிரேணாதிகச்சதி (39)**

சிரத்தையுடைய, (நம்பிக்கை) முயற்சியுடைய, புலன்களைக் கட்டுப்படுத்தியவனால் மட்டுமே இந்த ஞானத்தைப் பெறமுடியும். உணர்வுப்பூர்வமான ஆர்வம் இல்லையென்றால், தத்துவதரிசிகளின் சரணத்தை அடைந்தபிறகும்கூட இந்த ஞானத்தைப் பெறமுடியாது. எனவே வெறும் சிரத்தை மட்டுமே போதுமானதன்று. சிரத்தையுடையவன் குறைந்த அளவு முயற்சியுடையவனாகக் கூட இருந்து விடலாம். எனவே, மகாபுருஷர்கள் மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள இந்த ஆன்மீகப் பாதையில் கடும் முயற்சியுடன் முன்னேறிச் செல்வதற்கு இஷ்ட தெய்வத்தின்மீது (ஸத்குரு–இறைவன்) உணர்வுப் பூர்வமான பிடிப்பு இருக்க வேண்டியது மிகவும் அவசியமாகிறது. அத்துடன் சேர்த்து, அனைத்துப் புலன்களையும் கட்டுப்படுத்துவதும் தவிர்க்க முடியாத ஒன்றாகும். எவனொருவன் புலனின்ப வாசனைகளிலிருந்து விரக்தி (வெறுப்புணர்வு) அடையவில்லையோ, அவனுக்கு இறைவனை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரம் அடைவது (ஞானம் பெறல்) மிகவும் கடினமான காரியம் ஆகும். சிரத்தையுடைய, முயற்சியுடைய, புலன்களைக் கட்டுப்படுத்தியவனே இந்த ஞானத்தை அடையப் பெறுகிறான். ஞானமடைந்த மறுகணமே மேலான அமைதியைப் பெற்று விடுகிறான். இதற்குப் பிறகு அடையத் தகுந்தது எதுவுமே எஞ்சியிருப்பதில்லை. இதுவே இறுதி அமைதியாகும். இதன்பிறகு அவன்

ஒருபோதும் அமைதியை இழப்பதில்லை. ஆனால் எங்கே நம்பிக்கை (சிரத்தை) இல்லையோ அந்த

**அஜ்ஞஸ்சாஸ்ரத்தானஸ்ச்ச ஸம்சயாத்மா விநஷ்யதி**
**நாயம் லோகோஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மன : (40)**

அஞ்ஞானி, அதாவது வேள்வியின் சிறப்பு விதிமுறைகளைப் பற்றி ஒன்றுமறியாத, மற்றும் நம்பிக்கையில்லாத, சந்தேகத்துடன் கூடியவன் இந்தப் பரமார்த்தப் பாதையில் இருந்து வழிதவறிப் போய் விடுகிறான். அதையும்விட, சந்தேகத்துடன் கூடியவனுக்கோ எந்த சுகமும் இல்லை, மீண்டும் மனித உடலும் கிடைப்பதில்லை, இறைவனும் கிடைக்கமாட்டார். ஆகவே, தத்துவதரிசி மகாபுருஷரிடம் சென்று இந்த ஆன்மீகப்பாதையில் உள்ள சந்தேகங்களை நீக்கிக் கொள்ள வேண்டியது அவசியம். இல்லையென்றால், ஆன்மாவைப் பற்றிய அறிமுகம் கிடைக்காமலேயே போய்விடும். யாருக்கு இந்த ஞானம் கிடைக்கிறது?

**யோகஸன்ன்யஸ்தகர்மாணம் ஜ்ஞானஸம்சின்னஸம்சயம்**
**ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய (41)**

எவருடைய கர்மமானது யோகத்தின் மூலமாக பகவானிடம் ஒன்று கலந்து விட்டதோ, எவருடைய எல்லா சந்தேகங்களும் பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்ததன் மூலமாக அழிந்து விட்டதோ, பரமாத்மாவுடன் இணைந்து விட்ட அத்தகைய மஹாபுருஷரை கர்மம் பிணைப்பதில்லை. யோகத்தின் மூலமாகவே கர்மங்கள் முடிவுக்கு வருகின்றன. ஞானத்தால் மட்டுமே சந்தேகங்கள் அழிகின்றன. எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**தஸ்மாதஜ்ஞானஸம்பூதம் ஹ்ருத்ஸ்த்தம் ஜ்ஞானாஸினாத்மன:**
**ச்சித்வைனம் ஸம்சயம் யோகமாதிஷ்ட்டோத்திஷ்ட்ட பாரத (42)**

ஆகவே, பரதகுலத் தோன்றலே! அர்ஜீனா! நீ யோகத்தில் நிலைபெறுவாயாக! மேலும், அஞ்ஞானத்தால் தோன்றிய, இதய தேசத்தில் குடிகொண்டுள்ள, இந்த சந்தேகத்தை ஞானம் என்னும் வாள்கொண்டு வெட்டி வீழ்த்து. யுத்தம் செய்வதற்காகத் தயாராகி நில்! இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அனுபவத்தை அடைவதற்குப் பெரிய தடையாக இருக்கும் இந்த சந்தேகம் என்னும் எதிரி மனத்தின் உள்ளே இருக்கும்போது, வெளியில் யார், யாருடன், எதற்காகச் சண்டை போட வேண்டும்? உண்மையில், எப்பொழுது நீங்கள் ஆன்மீகச் சிந்தனைப் பாதையில் தீவிரமாக முன்னேறிச் செல்ல ஆரம்பிக்கிறீர்களோ, அப்பொழுது சந்தேகத்தில் இருந்து தோன்றிய, புறமுக எண்ணவோட்டங்கள் பெருந்தடையாக எழுந்து நிற்பது இயல்பானதுதான். அவை

எதிரியின் உருவத்தில் வந்து சூழ்ந்து கொண்டு பயங்கரமாகத் தாக்குதல் செய்கின்றன. புலன் அடக்கம் மற்றும் மனக்கட்டுப்பாட்டுடன் சேர்த்து வேள்வியின் சிறப்பு விதிமுறைகளைக் கடைப்பிடித்துக் கொண்டே சென்று இந்த புலன்நுகர்வு எண்ணங்களை (விகாரங்கள்) வென்று, அவற்றைக் கடந்து செல்வதே 'யுத்தம்' எனப்படும். இதனுடைய இறுதிவிளைவு மேலான அமைதியாகும். இதுவே தனக்குப் பின்னால் தோல்வி என்பதே இல்லாத இறுதி வெற்றியாகும்.

**முடிவுரை:–**

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் யோகேஷ்வரரகிய ஸ்ரீகிருஷ்ணர், "இந்த யோகத்தை ஆரம்பத்தில் நானே சூரியனிடம் கூறினேன். சூரியன், மனுவிடமும், மனு, இக்ஷ்வாகுவிடமும் கூறினார், மற்றும் அதன் பிறகு ராஜரிஷிகளும் அறிந்தனர்'' என்கிறார். 'நானே' அதாவது 'புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட ஆன்மாவில் நிலைபெற்றுள்ள மஹாபுருஷரே' கூறினார். மஹாபுருஷரும் புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றவரே ஆவார். இந்த உடலானது அவரைப் பொறுத்தவரையில் வெறும் தங்கும் அறை மட்டும்தான். அத்தகைய மஹாபுருஷருடைய சொற்களின் மூலமாகப் பரமாத்மாவே வெளிப்படுகிறார். அத்தகையதொரு மஹாபுருஷர் மூலமாகவே இந்தயோகம் சூரியனின் வாயிலாக உயிர் பெறுகிறது. அந்த மேலான, தெய்வீக ஒளிவடிவத்தின் விரிவு சுவாசத்தின் (சுரா) அடியாழத்தில் இயக்குவிக்கப்படுகிறது. எனவேதான் 'சூரியனிடம் கூறினேன்' என்பதாகும். சுவாசத்தில் (சுரா) இயக்கம் பெற்று இந்த யோகம் சமஸ்காரத்தின் வடிவத்தில் வந்து விட்டது. சுவாசத்தில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த பிறகு, சமயம் வந்த உடனே, அதுவே, மனத்தில் சங்கல்பமாக உருவெடுத்து விடுகிறது. அதனுடைய மகத்துவத்தை உணர்ந்து கொண்டபிறகு, மனத்தில் அந்த வாக்கியத்தின்மீது இச்சை அல்லது விருப்பம் விழிப்படைகிறது. மேலும் யோகமானது செயல்வடிவம் பெற்று விடுகிறது. இந்த யோகம் படிப்படியாக உன்னதமடைந்து கொண்டே சென்று ரித்திகளும் சித்திகளும் தோன்றுகின்ற 'ராஜ ரிஷித்துவம்' என்ற நிலைவரைக்கும் உயர்ந்து விட்டபிறகு, அழிவு நிலையை சென்றடைகிறது. ஆனால், எவன் பிரியமான பக்தனோ, இணைபிரியாத தோழனோ, அவனை மகாபுருஷர்கள் அழிவிலிருந்து காப்பாற்றியருள்கின்றனர்.

'உங்களுடைய பிறப்பு இப்போதுதான் நிகழ்ந்தது' என்று அர்ஜுனன் எழுப்பிய கேள்விக்கு யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணர் "புலன் உணர்வுகளை எல்லாம் கடந்தவனாக, அழிவற்றவனாக, பிறப்பற்றவனாக, மற்றும், மனிதர் உட்பட ஒட்டு மொத்த உயிரினங்களில் எல்லாம் நீக்கமற நிறைந்து நின்றபிறகும் நான் ஆத்மமாயா, எனும் யோகக் கிரியை மூலமாக, என்னுடைய, மூன்று

குணங்கள் அடங்கிய இயற்கையை வசப்படுத்திக் கொண்டு என்னை நானே வெளிப்படுத்திக் கொள்கிறேன்' என்று கூறினார். நீங்கள் அவ்வாறு உங்களை வெளிப்படுத்திக் கொண்டு என்ன செய்கிறீர்கள்? 'அடையத் தகுதியுடைய தெய்வீகச் செல்வங்களைப் பாதுகாக்கவும், மற்றும், எதனால் தீயவை உருவாகின்றனவோ அவற்றை அழித்துப் போடவும், பரம தர்ம பரமாத்மாவில் நிலைபெறச் செய்யவும் ஆரம்பம் முதல் முடிவுவரை நான் பிறவி எடுத்துக் கொண்டே இருக்கிறேன். என்னுடைய அந்தப் பிறவி, மற்றும், கர்மம் அற்புதமானவை அதை தத்துவ தரிசியால் மட்டுமே அறிய முடியும்'. பகவானுடைய 'வெளிப்பாடு' அல்லது 'தோற்றம்' கலியுகம் என்ற சாதனை நிலையிலேயே நிகழவே செய்கிறது, ஒருவேளை உறுதியான பிடிப்புணர்வு இருந்தால்! ஆனால், ஆரம்பநிலையில் உள்ள சாதகனால், "பகவான் பேசுகிறாரா? அல்லது வேறு எங்கிருந்தாவது சங்கேதம் கிடைக்கிறதா? ஆகாயத்தில் இருந்து பேசுவது யார்?" என்பதைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள், "எப்பொழுது பகவான் கருணை புரிய ஆரம்பிக்கிறாரோ, அப்பொழுது அவர் ஆன்மாவில் இரண்டறக் கலந்து நின்று கொள்கிறார். மேலும், அவர் தூணிலிருந்தும் மரத்திலிருந்தும், மரத்தின் இலைகளில் இருந்தும், ஆகாயத்திலிருந்தும் (சூன்யம்) இங்கிங்கெனாதபடிக்கு எல்லா இடங்களில் இருந்தும் பேசுகிறார். கை கொடுத்துக் காப்பாற்றவும் செய்கிறார்" என்று கூறியருள்வார். சாதனை கொஞ்சம் கொஞ்சமாக உன்னதமடைந்து கொண்டே சென்று பரம தத்துவ பரமாத்மா அறியப்பட்ட பிறகு, அவரைத் தொட்டுணர்ந்து அறிந்தபிறகே அவன் இதையெல்லாம் தெளிவாகப் புரிந்து கொள்கிறான். எனவே 'அர்ஜுனா! என்னுடைய அந்த ஆன்ம வடிவத்தை தத்துவதரிசிகள் கண்டுள்ளனர். மேலும் என்னை அறிந்து கொண்டு, அடுத்தக் கணமே என்னிலேயே நிலைபெற்று விடுகின்றனர். அங்கிருந்து அவர்கள் மீண்டும் பிறப்பு இறப்புச் சுழலில் சிக்கிக் கொள்வதில்லை.'

இந்தமுறையில், அவர் பகவானுடைய அவதாரம் (தோற்றம்) பற்றிய விதி முறைகளைக் கூறினார் அதன்படி, இறைவனுடைய அவதாரம் ஏதேனும் ஒரு அனுராகி பக்தனின் இதயத்தில் நிகழ்கிறது. ஒருபோதும் வெளியில் இல்லை. ஸ்ரீகிருஷ்ணர், "என்னைக் கர்மம் பந்தப்படுத்துவது இல்லை. மேலும் இதே நிலையை அடைந்து எவர் அறிந்து கொள்கிறாரோ, அவரையும் கர்மம் பந்தப்படுத்துவது இல்லை. இதை நன்றாகப் புரிந்து கொண்டுதான் (முமுக்ஷூ) முக்தியில் விருப்பமுடையவர்கள் கர்மத்தைச் செய்யவே ஆரம்பித்தனர்" என்கிறார். அதாவது, அந்த நிலையை அடைந்து ஸ்ரீகிருஷ்ணர் எவரென்று அறிந்து கொண்டால், அவ்வாறே அந்த நிலையை அடைந்து அறிந்து கொண்ட, (முமுக்ஷூ) முக்தியில் விருப்பமுடைய புருஷரும் ஆகிவிடுகிறார். மேலும், அவ்வாறு அறிந்து

கொண்டபிறகு, ''ஸ்ரீகிருஷ்ணர் எவரோ, அவரேதான், அந்த முமுக்ஷு அர்ஜுனனும்!, ஒருவேளை வேள்வியைச் செய்து வந்தால், இந்த நிலையைப் பெறுவது உறுதி. அவர், வேள்வியின் முழு உருவத்தையும் விளக்கிக் கூறினார். வேள்வியின் இறுதிவிளைவு பரம தத்துவம், பரம அமைதி என்றும் கூறினார். இந்த ஞானத்தை எங்கிருந்து பெற்றுக் கொள்வது? இதற்கு அவர், "ஏதேனும் ஒரு தத்துவ தரிசி மஹாபுருஷரிடம் செல். அந்த மஹாபுருஷர் உன்னிடம் அனுகூலமாக நடந்து கொள்ளும் விதமாக, விதிமுறைகளின்படி அணுக வேண்டும்" என்றும் கூறினார்.

யோகேஷ்வரர், 'அந்த ஞானத்தை நீ சுயமாக முயன்றுதான் அடைய முடியுமே தவிர, வேறொருவரின் முயற்சியால் உனக்கு அது கிடைக்கப் போவதில்லை" என்றும் கூறினார். அதுவும் யோகம் கைகூடும் காலத்தில் மட்டுமே அடையப்படுகிறதே தவிர, ஆரம்ப நிலையில் அல்ல. அந்த ஞானம் (சாட்சாத்காரம்) இதய தேசத்தில்தான் அடையப் பெறுகிறதே தவிர, வெளியில் அன்று, மேலும் சிரத்தையுடையவனும், முயற்சியுடையவனும், புலனடக்கம், மனக்கட்டுப்பாட்டைப் பழகுபவனும் மற்றும் சந்தேகம் இல்லாதவனே, இதனை அடைகிறான். எனவே இதயத்தில் நிலைபெற்றுள்ள உனது சந்தேகத்தை வைராக்கியம் என்னும் வாள் கொண்டு வெட்டி வீழ்த்து. இது இதய தேசத்தில் நடைபெறும் யுத்தமாகும். வெளி உலகில் நடைபெறும் யுத்தத்துடன் கீதையில் உபதேசிக்கப்பட்டுள்ள யுத்தத்திற்கு எந்தவொரு பயனும் இல்லை.

இந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மிகவும் முக்கியமாக, வேள்வியின் உண்மையான உருவத்தைத் தெள்ளத் தெளிவாக விளக்கியருளினார். அவர், ''வேள்வி எதன்மூலமாக முழுமையாக நிறைவுபெறுகிறதோ, அதைச் (காரியச் செயல்முறை) செயல்முறைப்படுத்துவதற்குப் பெயரே கர்மம்" என்றார். கர்மத்தைச் சிறந்தமுறையில் இந்த அத்தியாயத்தில்தான் தெளிவுபடுத்தியுள்ளார். அத்துடன்.

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸுபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுனஸம்வாதே 'யஜ்ஞகர்மஸ்பஷ்டீகரணம்' நாம சதுர்த்தோத்யாய:**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'யஜ்ஞ கர்ம ஸ்பஷ்டீகரணம்' அதாவது 'வேள்வி, கர்ம விளக்கம்' என்ற பெயருடைய நான்காவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத்பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்தக்ருதே ஸ்ரீமத்பகவத்கீதாயா: 'யதார்த்தகீதா' பாஷ்யே 'யஜ்ஞகர்ம ஸ்பஷ்டி கரணம்' நாம சதுர்த்தோத்யாய:**
**ஹரி: ஓம் தத் ஸத்**

இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'யஜ்ஞகர்ம ஸ்பஷ்டீகரணம்' அதாவது 'வேள்வி, கர்ம விளக்கம்' என்ற பெயருடைய நான்காவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

## ஓம் ஸ்ரீ பரமாத்மனேநம
## ஐந்தாவது அத்தியாயம்

மூன்றாவது அத்தியாயத்தில் அர்ஜூனன், "பகவானே! ஞானயோகமே உங்களுக்குச் சிறந்ததாகப்படும்போது என்னை மட்டும் ஏன் நீங்கள் இந்தப் பயங்கரமான கர்மங்களில் ஈடுபடுத்துகிறீர்கள்?" என்று கேள்வி எழுப்பினான். அர்ஜூனனுக்கு (பற்றற்ற) நிஷ்காம கர்மயோகத்தை விட ஞான யோகமே கொஞ்சம் எளிமையாகத் தோன்றியது. ஏனெனில் ஞானயோகத்தில் தோற்றுப் போனாலும் **'தேவத்துவம்'** மற்றும் வெற்றி பெற்று விட்டாலோ **'மஹாமஹீம்'** (மகோன்னதநிலை) நிலை, என்று இரண்டு சூழ்நிலைகளிலுமே இலாபத்திற்கு மேல் இலாபமே தென்பட்டது. ஆனால், இப்போது உள்ள நிலையிலோ அர்ஜூனன், 'இரண்டு வழிகளிலுமே கர்மத்தைச் செய்துதான் ஆகவேண்டும்' என்பதை நன்கு தெரிந்து கொண்டான் (யோகேஷ்வரர் அவனைச் சந்தேகங்களை எல்லாம் உதறித் தள்ளிவிட்டு தத்துவதரிசி மகாபுருஷரின் சரணத்தை அடையுமாறும் ஊக்கப்படுத்தினார். ஏனெனில், 'அறிந்து கொள்வதற்கென்று' அவர் ஒருவரே இலக்கு ஆவார்.) ஆகவே, இரண்டு வழிகளிலும் இருந்து ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் முன்பு அர்ஜூனன் பின்வருமாறு வேண்டிக் கொண்டான்.

**அர்ஜூன உவாச்ச**
**ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புனர்யோகம் ச ஸம்ஸஸி**
**யச்ச்ரேய ஏதயோரேகம் தன்மே ப்ரூஹி ஸுநிஸ்ச்சிதம் (1)**

ஹே! கிருஷ்ணா! நீங்கள் சிலசமயம் சந்நியாசத்தின் மூலமாகச் செய்யப்படும் கர்மத்தையும் மற்றொரு சமயம் பற்றற்ற உணர்வுடன் (கர்மத்தின் பலனில் பற்றில்லாமல்) செய்யப்படும் கர்மத்தையும் புகழ்ந்து கூறுகிறீர்கள். இவை இரண்டில் இருந்து ஏதேனும் ஒன்றை மட்டும், அதாவது மிகவும் நல்லமுறையில் உங்களால் நிச்சயிக்கப்பட்டதும், மேலான நன்மையைப் பெற்றுத் தரவல்லதுமானதை எனக்காகக் கூறுங்கள். எங்காவது ஒரு இடத்திற்குப் போவதற்காக உங்களிடம் இரண்டு பாதைகள் சொல்லப்படுமேயானால், நீங்கள் வசதியாகப் போய்ச் சேரும் பாதை எது? என்று அவசியம் கேட்பீர்கள். ஒருவேளை அப்படிக் கேட்கவில்லையென்றால், நீங்கள் அந்த இடத்திற்குப் போக விரும்புபவர் அல்ல என்பது உறுதியாகிறது. இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**ஸந்ந்யாஸ: கர்மயோகஸ்ச்ச நிஸ்ரேயஸகராவுபௌ**
**தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத்கர்மயோகோ விசிஷ்யதே (2)**

அர்ஜூனா! சந்நியாசத்தின் மூலமாகச் செய்யப்படும் கர்மம், அதாவது,

ஞானமார்க்கத்தின் மூலமாகச் செய்யப்படும் கர்மம் மற்றும் **'கர்ம யோக':–** பற்றற்ற உணர்வுடன் செய்யப்படும் கர்மம் – இந்த இரண்டுமே மிகவும் மேலானவற்றைக் கொடுக்க வல்லவை. ஆனால், இந்த இரண்டு வழிகளிலுமே சந்நியாசம், அதாவது, ஞானக் கண்ணோட்டத்துடன் செய்யப்படும் கர்மத்தை விடவும் பற்றற்ற கர்ம யோகமே மேன்மையானது. எதனால்? என்ற கேள்வி எழுவது இயல்பானதுதான்.

**ஜ்ஞேய : நித்யஸந்ந்யாஸீ யோநத்வேஷ்டி ந காங்க்ஷதி**
**நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே (3)**

பெருந்தோள்களை உடையவனே! அர்ஜுனா! எவன் யாரிடமும் வெறுப்புக் காட்டாமலும், யாரிடமும் விருப்பம் கொண்டிராமலும் இருக்கிறானோ அவன் எப்போதுமே சந்நியாசியாகவே கருதப்படும் தகுதியுடையவனாகிறான். அவன் ஞான மார்க்கத்தையோ அல்லது (பற்றற்ற) நிஷ்காம கர்மமார்க்கத்தையோ பின்பற்றுபவனாக, இருந்து விட்டுப் போகட்டும். விருப்பு, வெறுப்பு முதலான இருமைகளில் இருந்து விடுபட்ட அவன் மிகவும் சுகமாக இந்த உலக பந்தத்தில் இருந்து விடுபட்டு விடுவான்.

**ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா : ப்ரவதந்தி ந பண்டிதா:**
**ஏகமப்யாஸ்த்தித: ஸம்யகுபயோர்விந்ததே ஃபலம் (4)**

எவர் (பற்றற்ற) நிஷ்காம கர்மயோகம் மற்றும் ஞானயோகம் ஆகிய இரண்டையும் தனித்தனியாகக் கூறுகிறாரோ, அவருடைய புரிந்து கொள்ளும் திறன் இந்தப் பாதையில் மிகவும் சிறிதளவே ஆகும். இந்தப் பாதையை முழுமையாக அறிந்துள்ள பூரண ஞானிகளான 'பண்டிதர்கள்' அவ்வாறு கூறமாட்டார்கள். ஏனெனில், இரண்டு பாதைகளில் இருந்து ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதிலேயே நல்லமுறையில் உறுதியாக நிலைநிற்கின்றவர்கள் அவ்விரு பாதைகளின் நற்பலனாகிய பரமாத்மாவையே அடைகிறார்கள். இரண்டு பாதைகளிலுமே பலன் ஒன்றுதான். எனவேதான் இரண்டுமே சமமானவை எனப்படுகின்றன.

**யத்ஸாங்க்யை : ப்ராப்யதே ஸ்தானம் தத்யோகைரபி கம்யதே**
**ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய : பஷ்யதி ஸ பஷ்யதி (5)**

எங்கே ஞானயோகக் கண்ணோட்டத்துடன் (ஸாங்க்ய த்ருஷ்டி) கர்மம் செய்பவன் போய்ச் சேருகிறானோ, அங்கேதான் பற்றற்ற உணர்வுடன் கர்மம் செய்பவனும் போய்ச்சேருகிறான். எனவே, இரண்டு பாதைகளிலுமே பலன் ஒன்றுதான் என்னும் கண்ணோட்டத்துடன் பார்ப்பவனே உள்ளதை உள்ளபடிக்கு (யதார்த்தம்) அறிந்தவன் ஆவான், இரண்டு பாதைகளுமே ஒரே இடத்திற்குத்தான்

போய்ச் சேருகின்றன எனும்போது பற்றற்ற கர்ம யோகம் மட்டும் ஏன் சிறந்தது என்று சொல்லப்படுகிறது? ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ துக்கமாப்துமயோகத:**
**யோகயுக்தோ முனிர்ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி (6)**

அர்ஜுனா! பற்றற்ற கர்மயோகத்தைக் கடைப்பிடிக்காமல் **'ஸந்ந்யாஸ:'**– அதாவது, எல்லாவற்றையும் துறப்பது என்பது மிகவும் கடினமானது. இந்நிலையில் 'யோகத்தைப் பயில்தல்' (கடைப்பிடித்தல்) என்பதையே இன்னும் ஆரம்பிக்கவில்லை எனும் நிலையில் இது கைகூடும் சாத்தியமே இல்லை. எனவேதான் பகவத் வடிவத்தை மனனம் (தியானம்) செய்யும் முனிவர்கள் அதாவது யாருடைய மனம், மற்றும், புலன்கள் மௌனம் அடைந்துள்ளதோ, அவர்கள் பற்றற்ற கர்ம யோகத்தைப் பயின்று வெகுசீக்கிரமே பரபிரம்ம பரமாத்மாவை அடைந்து விடுகின்றனர்.

இதிலிருந்து, ஞான யோகத்திலும்கூட (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தையே பின்பற்றுகிறோம். ஏனெனில், கிரியை இரண்டிலும் ஒன்றேதான். அதுவே வேள்வியின் செயல்முறை எனப்படுகிறது. அதன் தூய்மையான பொருள் 'ஆராதனை' என்பதாகும். இரண்டு வழிகளிலும் உள்ள வேறுபாடு, யோகத்தைச் செய்பவனின் கண்ணோட்டத்தில் மட்டுமே இருக்கிறது. ஒருவன் தனது சக்தியைப் புரிந்து கொண்டு, இலாபம்—நஷ்டம் ஆகியவற்றைப் பரிசீலனை செய்தபடியே இந்தக் கர்மத்தில் ஈடுபடுகிறான். ஆனால் மற்றொருவனோ, அதாவது (பற்றற்ற) நிஷ்காம கர்மயோகியோ இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு—இறைவன்) மீது பாரத்தைப் போட்டு விட்டு இதே யோகக் கிரியையில் ஈடுபடுகிறான். உதாரணத்திற்கு, ஒருவன் பிரைவேட்டாகப் படிக்கிறான். மற்றொருவன், நாமினேட்டாகப் (சத்குருவின் துணையில்) படிக்கிறான். இருவருடைய பாடத் திட்டமும் ஒன்றேதான். தேர்வும் ஒன்றேதான். தேர்வை நடத்துபவரும், தேர்வின் பார்வையாளரும் இரண்டு பேருக்கும் ஒருவரேதான். இதேபோன்று இருவருக்கும் சத்குருவானவர் தத்துவ தரிசியாகிய மஹாபுருஷர் ஒருவரே ஆவார். மேலும், அவர்கள் பெறுகின்ற பட்டமும் ஒன்றேதான். ஆனால், இருவரும் படிக்கின்ற கண்ணோட்டம் மட்டுமே வேறுபடுகிறது. ஆம், ஸத்குருவின் நிர்வாகத்தின் கீழ் பயில்கின்ற மாணவனுக்குப் படிக்கின்ற வசதிகள் அதிகமாகவே கிடைக்கின்றன என்பது என்னவோ மறுக்க முடியாத உண்மை.

ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, "காமம் மற்றும் கோபம் ஆகியவை வெல்வதற்கரிய எதிரிகள் ஆவர்" என்று கூறியுள்ளார். "அர்ஜுனா! அவைகளைக் கொல்!" என்று கட்டளையும் பிறப்பித்து உள்ளார். அர்ஜுனனுக்கோ இது

மிகவும் கடினமாகத் தோன்றியது. ஆனால் ஸ்ரீகிருஷ்ணரோ, "இல்லை, உடலை விட வலிமையானது புலன்கள்; புலன்களை விட வலிமையானது மனம்; மனத்தை விட வலிமையானது புத்தி; புத்தியை விட வலிமையானது உன்னுடைய ஆன்ம வடிவம் (அதாவது, ஒவ்வொரு மனிதனின் உண்மை இயல்பாகிய ஆத்மா என்னும் வடிவம்) நீ அதிலிருந்து தூண்டுணர்ச்சியைப் பெற்றுச் செயல்படு" என்று அறிவுறுத்துகிறார். இந்த முறையில் தன்னுடைய, என்றும் நிலையான இருப்புணர்வைப் புரிந்து கொண்டு, தன்னுடைய சொந்த ஆற்றலை முன்னிறுத்தி, தன்னில் நம்பிக்கை உடையவனாகக் கர்மத்தில் ஈடுபடுவதே 'ஞானயோகம்' எனப்படுகிறது. ஸ்ரீகிருஷ்ணர், "சித்தத்தை தியானத்தில் நிலைநிறுத்தி, கர்மங்களை எல்லாம் என்னிடமே சமர்ப்பணம் செய்து, ஆசைகள், பாசங்கள் மற்றும் மனக்கலக்கமின்றி யுத்தம் செய்" என்கிறார். சமர்ப்பண உணர்வுடன் கூடியவனாக இஷ்ட தெய்வத்தையே (ஸத்குரு–இறைவன்) முழுமையாகச் சார்ந்து கொண்டு, அதே கர்மத்தில் ஈடுபடுவதையே '(பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகம்' என்கிறோம். இரண்டிலுமே கிரியை (செயல்) ஒன்றுதான்; அதன் இறுதி விளைவும் ஒன்றுதான்.

இதனை வலியுறுத்தும் வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இங்கேயும், "யோகத்தைக் கடைப்பிடிக்காமல் 'சந்நியாசம்' அதாவது, நல்ல, தீய கர்மங்களின் முடிவு என்னும் நிலையை அடைவதென்பது நடக்காத காரியம்" என்று கூறுகிறார். ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், கைமேல் கைவைத்துக் கொண்டு, ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்தபடியே, "நான் பரமாத்மா ஆவேன், தூய்மையானவன் ஆவேன், பேரறிவின் வடிவே நான்; எனக்கென்று எந்தக் கர்மமும் இல்லை, எந்த பந்தமும் இல்லை. நான் நல்லது–கெட்டது என்றெல்லாம் ஏதோ செய்வதுபோல் தென்படுகிறதே ஒழிய, எனது புலன்கள் அதனதன் வேலைகளைச் செய்கின்றன, அவ்வளவுதான்" என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கும்படியான எந்த யோகமும் இல்லை. இத்தகைய போலித்தனமான கோட்பாடுகள் ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளில் இல்லவே இல்லை. சாட்சாத், யோகேஷ்வரரேகூட தம்முடைய இணைபிரியாத நண்பனாகிய அர்ஜுனனுக்கு, கர்மத்தைச் செய்யாமலேயே உயர்ந்த நிலையைத் தரமுடியவில்லை. ஒருவேளை அவர் அப்படிச் செய்திருப்பாரேயானால் கீதையைச் சொல்ல வேண்டிய அவசியம்தான் என்ன? கர்மத்தை மட்டும் கண்டிப்பாகச் செய்துதான் ஆகவேண்டும். கர்மத்தைச் செய்து கொண்டே போய்த்தான் 'சந்நியாசம்' என்ற நிலையை அடைய முடியும். மேலும், யோகத்துடன் கூடியவனே வெகு சீக்கிரமாக பரமாத்மாவை அடைகிறான் யோகத்துடன் கூடிய மனிதனின் இலட்சணங்கள் யாவை? இதுபற்றிக் கூறுகிறார்.

**யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய:**
**ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே (7)**

**'விஜிதாத்மா'** – மிகவும் சிறந்த முறையில் எவருடைய உடல் பற்றுகள் அனைத்தும் வெற்றி கொள்ளப்பட்டுள்ளதோ, **'ஜிதேந்த்ரிய:'**–மிகவும் சிறந்த முறையில் எவருடைய புலன்கள் அனைத்தும் வெற்றி கொள்ளப்பட்டுள்ளதோ, **'விசுத்தாத்மா'** – மிகவும் சிறந்தமுறையில் பரிசுத்தமான அந்தகரணத்தை (உள் மனத்தை) உடையவர் எவரோ, அவரே **'ஸர்வ பூதாத்ம பூதாத்மா'**– மனிதர் உட்பட, எல்லா ஜீவராசிகளுடைய ஆத்மாவின் மூலஊற்றுக் கண்ணாகத் திகழும் பரமாத்மாவில் ஒரே உணர்வைப் பெற்ற, யோகத்துடன் கூடியவர் ஆவார். அவர் கர்மத்தைச் செய்தபோதும் கூட அதனால் அவர் பந்தப்படுத்தப்படுவதில்லை. எனில், அவர் எதற்காகக் கர்மத்தைச் செய்கிறார்? அவர் பின்வரும் சமுதாயத்தினருக்கு, மேலான நன்மையைத் தரவல்ல ஆன்மீக விதைகளைத் தூவி, அவற்றைப் பல்கிப் பெருகி வளரச் செய்வதற்காகவே கர்மத்தைச் செய்கிறார். அவர் கர்மத்தால் பந்தப்படுத்தப்படுவதில்லையே, அது எப்படி? ஏனெனில், மனிதர் உட்பட, ஒட்டுமொத்த ஜீவராசிகளின் மூலஊற்றுக் கண்ணாகிய, பரம தத்துவம் என்னும் பெயருடைய, அந்த இறைத் தத்துவத்தில் அவர் நிலைபெற்று விட்டார். அதற்கு மேல் தேடிப் போய் அடைவதற்கு எந்த உயர்வான நிலையும் இல்லை. இறைவனைத் தவிர, மற்றவை அனைத்தும் மதிப்பற்ற பொருட்களாகப் போய்விட்டன, எனும்போது, எதன்மீது பற்றுக் கொள்வது? ஆகவே, அவர் கர்மங்களால் சூழப்படுவதில்லை. இதுவே யோகம் கைகூடப் பெற்ற இறுதி எல்லைக் கோட்டின் வர்ணனை ஆகும். அவர் மறுபடியும் யோகம் கைகூடப் பெற்ற மஹாபுருஷரின் வாழ்வியலைத் தெளிவுபடுத்தும் விதமாக, 'அவர் ஏன் கர்மத்தில் ஈடுபட்டபோதும் அவற்றால் பிணைக்கப்படுவதில்லை?' என்பதை விரிவாக விளக்குகிறார்.

**நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித்**
**பஶ்யன்ஞ்ஸ்ருண்வன்ஸ்ப்ருஷன்ஜிக்ரன்னஶ்நன்கச்சன்ஸ்வபன் ஷ்வஸன் (8)**

**ப்ரலபன்விஸ்ருஜன்க்ருண்ஹன்உன்மிஷன்நிமிஷன்னபி**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் (9)**

பரம தத்துவமாகிய பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரத்துடன் சேர்ந்து அறிந்து கொள்கின்ற யோகம் கைகூடப் பெற்றவருக்கு இந்த மாதிரியான மனநிலை, அதாவது, நான் கொஞ்சம் கூட எதையும் செய்வதில்லை என்னும் அனுபூதி வாய்க்கிறது. இது அவருடைய வெறும் கற்பனை அன்று, மாறாக, இந்த உயர் அனுபூதி நிலையை அவர் கர்மம் செய்து அடைந்துள்ளார். அதன்படி **'யுக்தோ மன்யேத'** – இப்போது இறைவனை அடைந்து முக்தி நிலைபெற்ற பிறகு, அவர் எல்லாவற்றையும் பார்த்தவாறு, கேட்டவாறு, தொட்டுணர்ந்தவாறு, நுகர்ந்தவாறு, பேசியவாறு, மூச்சை

உள்வாங்கியவாறு, மூச்சை வெளிவிட்டவாறு, கண்களை மூடியவாறு, திறந்தவாறு, எப்படி இருந்த போதிலும்கூட 'புலன்கள் அதனதன் வேலையைச் செய்து கொண்டிருக்கின்றன' என்று அனுபூதியில் உணர்ந்திருக்கிறார். பரமாத்மாவை விட மேலான ஒன்றும் இல்லை எனும்போது, அந்த பரமாத்மாவிலேயே அவர் நிலைபெற்று விட்ட பிறகு, அதை விடுத்து, வேறு எந்த இன்பத்தையாவது அடைய வேண்டும் என்ற ஆசையுடன் அவர் எதையேனும் தொட்டுணர்வது முதலான செயல்களில் ஈடுபடுவாரா என்ன? ஒருவேளை, ஏதேனும் உயர்வான பொருள் அருகில் இருந்தால் கண்டிப்பாக அதன்மீது பற்றுதல் (ஆசை) ஏற்படுவது இயல்பே. ஆனால் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்திநிலை பெற்று விட்டபிறகு, இனி அதற்கும் அப்பால் எங்கே செல்வது? மற்றும் அதற்குப் பின்பு எதைத் துறப்பது? எனவேதான் யோகம் கைகூடப் பெற்றவர் கர்மத்தால் பந்தப்படுத்தப்படுவது இல்லை. இதையே அவர் ஒரு உதாரணம் மூலமாக விளக்குகிறார்.

**ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய:**
**லிப்யதே ந ஸ பாபேன பத்ம பத்ர மிவாம்பஸா (10)**

தாமரை சேற்றில்தான் உண்டாகிறது. அதன் இலை தண்ணீருக்கு மேலே மிதக்கிறது. நீரின் அலைகள் இராப்பகலாக அதன்மீது மோதுகின்றன. ஆனால், அதன் இலைகளைப் பாருங்கள், எப்போதும் உலர்ந்தே காணப்படுகின்றன. நீரின் ஒரு துளிகூட அதன் இலைகளின்மீது ஒட்டி நிற்க முடிவதில்லை. சேற்றிலும் தண்ணீரிலும் இருந்தபோதும்கூட, அவற்றில் அது ஒட்டிக் கொள்வதில்லை. சரியாக, இதேபோன்றுதான், எவர் ஒருவர் எல்லாக் கர்மங்களையும் பரமாத்மாவில் ஒன்று கலக்கச் செய்து, (இறைவனை நேரடியாக தரிசனம் செய்த உடனேயே கர்மங்கள் அவரில் கலந்து மறைகின்றன, அதற்கு முன்பு அல்ல. பற்றுதலை எல்லாம் துறந்து, (இனி, அதற்கும் மேல் வேறு பொருள் எதுவும் இல்லை. எனவே அவற்றின்மீது பற்றுதலும் இருப்பதில்லை. ஆகவே, பற்றுதலை எல்லாம் துறந்து) கர்மத்தைச் செய்கிறாரோ அவரும் இதேமுறையில் கர்மங்களில் ஒட்டிக்கொள்வதில்லை. அவர் பிறகு ஏன் இந்தக் கர்மத்தைச் செய்கிறார்? உங்களுக்காகச் செய்கிறார். ஒழுங்கு விதிமுறைகளை சீர்படுத்தி, பின்வரும் சமுதாயத்தின் நன்மைக்கு வழிவகுப்பதற்காகச் செய்கிறார். ஆன்மீகப் பாதையில் வழிநடத்திச் செல்வதற்காகச் செய்கிறார். இதையே மீண்டும் வலியுறுத்தும் வகையில் அவர் கூறுகிறார்.

**காயேன மனஸா புத்தயா கேவலைரிந்த்ரியைரபி**
**யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மசுத்தயே (11)**

யோகிகள் வெறும் புலன்கள், மனம், புத்தி ஆகியவற்றின் மூலமாகவும் பற்றுதலைத் துறந்தவர்களாக ஆத்ம தூய்மையை வேண்டிக் கர்மத்தைச் செய்கின்றனர். எப்பொழுது கர்மமானது பிரம்மத்தில் ஒன்று கலந்து மறைந்துவிட்டதோ, அதற்குப் பிறகும் கூடவா இந்த ஆன்மா தூய்மையற்று இருக்கிறது? இல்லை, அவர்கள் **'ஸர்வ பூதாத்ம பூதாத்மா'** (மனிதர் உட்பட ஒட்டு மொத்த ஜீவராசிகளுடைய ஆன்மாவின் மூலஊற்றுக் கண்ணாகத் திகழும் பரமாத்மா) ஆகிவிட்டனர். மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிலும் அவர்கள் தமது ஆன்மாவே விரிந்தும் பரந்தும் இருப்பதைக் காண்கிறார்கள். அந்த அனைத்து உயிரினங்களின் ஆத்ம தூய்மையை வேண்டியும் உங்கள் அனைவரையும் ஆன்மீகப் பாதையில் வழிநடத்துவதற்காகவும் அவர்கள் கர்மத்தைச் சரிவரக் கடைப்பிடித்து வருகின்றனர். உடல், மனம், புத்தி மற்றும் வெறும் புலன்களால் அவர்கள் கர்மத்தைச் செய்கின்றனர். ஆன்ம வடிவம் என்ற அளவில் பார்த்தால் அவர்கள் ஒன்றும் செய்வதில்லை. எப்போதும் ஆன்மாவிலேயே நிலைத்து நிற்கின்றனர். வெளிப்பார்வைக்கு அவர்கள் ஏதோ செய்து கொண்டிருப்பதைப்போலத் தோன்றுகிறது, அவ்வளவுதான். ஆனால் அகத்தளவில் அவர்கள் எல்லையற்ற அமைதியில் திளைத்த வண்ணம் இருக்கின்றனர். கயிறு எரிந்துவிட்டது. அதன் உருவம் மட்டுமே எஞ்சியுள்ளது. அதை வைத்து இனிமேல் கட்ட முடியாது.

**யுக்த : கர்மஃபலம் த்யக்த்வா சாந்திமாப்னோதி நைஷ்டிகீம்**
**அயுக்த: காமகாரேண ஃபலே ஸக்தோ நிபத்யதே (12)**

**'யோகயுக்த'** – அதாவது யோகத்தின் இறுதிவிளைவை அடைந்தவர், மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் ஆத்மாவின் மூலஊற்றுக் கண்ணாக விளங்கும் பரமாத்மாவில் நிலைபெற்ற அத்தகைய யோகியானவர் கர்மத்தின் பலனைத் துறந்து (கர்மங்களின் பலனாகிய பரமாத்மா அவரிலிருந்து வேறுபட்டவரல்லர். எனவேதான் இப்போது கர்மத்தின் பலனைத் துறந்து) **'நைஷ்டிகீம் சாந்திம் ஆப்னோதி'**–அமைதியின் இறுதி நிலையை அடையப் பெறுகிறார். இதற்கும் மேலே அடைய வேண்டிய எந்த அமைதியும் எஞ்சியிருப்பதில்லை. எனவே இதற்குப்பிறகு அவர் ஒருபோதும் அமைதியை இழப்பதில்லை. ஆனால் **'அயுக்த' புருஷன்** அதாவது, யோகத்தின் இறுதி விளைவை இன்னும் அடையப் பெறாத, இன்னும் இந்த ஆன்மீகப் பாதையில் பயணம் செய்து கொண்டிருக்கும் சாதகனானவன் பலனில் பற்றுக் கொண்டு (கர்மத்தின் பலன் பரமாத்மா என்பதால், அதில் அவனுக்குப் பற்று இருக்க வேண்டியது அவசியமாகிறது. எனவே பலனில் பற்று வைத்திருந்த பிறகும்கூட) **'காம காரேண நிபத்யதே'**– புலன் இன்ப ஆசைகளை உண்டாக்கிக் கொண்டு அவற்றில் சிக்கிக் கொள்கிறான். அதாவது, சாதனை முடிவுபெறுகின்ற காலம்வரை, இந்தப் புலன் இன்ப ஆசைகள் தோன்றவே

செய்கின்றன. எனவே சாதகன் ஆன்ம சாதனையானது முடிவுபெறுகின்ற காலம் வரைக்கும் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். பூஜ்ய பகவான் ஸ்ரீ பரமஹம்ச பரமானந்த மஹராஜ் அவர்கள் பின்வருமாறு கூறுவார்: "ஓ! எதுவரை நாம் வேறு, இறைவன் வேறு என்ற நிலை இருக்கிறதோ, அதுவரை மாயை வெற்றி பெறும் வாய்ப்பு உள்ளது," நாளை இறைவனை அடையும் நிலை கிடைக்கப் போகிறது என்றிருந்தாலும் கூட இன்றைய நிலையில் அவன் என்னவோ அஞ்ஞானிதான். எனவே, சாதனை முடிவு பெறுகின்ற காலம்வரைக்கும் சாதகன் எச்சரிக்கை உணர்வின்றி இருக்கக் கூடாது. இதுபற்றி மேலும் பார்க்கலாம்.

**ஸர்வகர்மாணி மனஸா ஸந்ந்யஸ்யாஸ்தே சுகம் வஷீ**
**நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வன்ன காரயன் (13)**

எவர் முழுமையான முறையில் தம்மை சுயத்தை வசப்படுத்தியவரோ, எவர் உடல், மனம், புத்தி மற்றும் பிரகிருதி அல்லது படைப்பு ஆகிய அனைத்தையும் தாண்டிய **'சுயத்தில்'** (ஆன்மா) நிலைபெற்றுள்ளவரோ அத்தகைய தம்முடைய அனைத்து ஆசைகள், இச்சைகளைக் கட்டுப்படுத்திய **வஷீ** புருஷர் சந்தேகமே இல்லாமல் எதையும் செய்வதும் இல்லை, எதையும் செய்விப்பதும் இல்லை. தம்மைப் பின்பற்றுபவர்கள் மூலமாகச் செய்விப்பதும்கூட அவருடைய அகத்தில் நிலைத்திருக்கும் அமைதியைக் குலைப்பதில்லை. அத்தகைய ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றவர் கேட்டல் (சப்தம்) முதலான விஷயங்களை உள்வாங்குகின்ற ஒன்பது துவாரங்களை அல்லது, வாசல்களை, (இரண்டு காதுகள், இரண்டு கண்கள், இரண்டு மூக்குத் துவாரங்கள், ஒருவாய், மலத் துவாரம், பிறப்புறுப்பு) உடைய உடல் என்னும் வீட்டில் எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்தவராக, ஆன்ம வடிவ ஆனந்தத்திலேயே நிலைத்து இருக்கிறார். உள்ளதை உள்ளபடிக்குச் சொல்ல வேண்டுமென்றால், அவர் ஒன்றும் செய்வதும் இல்லை; ஒன்றும் செய்விப்பதும் இல்லை.

இதையே மறுபடியும் ஸ்ரீகிருஷ்ணர் வேறுவார்த்தைகளில், "அந்த பிரபு ஒன்றும் செய்வதும் இல்லை; ஒன்றும் செய்விப்பதும் இல்லை" என்று கூறுகிறார். சத்குரு, பகவான், பிரபு, ஆன்ம வடிவத்தில் நிலைத்த மகாபுருஷர், யோகம் கைகூடப் பெற்றவர் (யுக்தர்) முதலானவை அனைத்தும் ஒரேபொருளை உணர்த்துகின்ற வேறுவேறு சொற்கள் மட்டும்தான். இதைத்தவிர, ஏதோவொரு பகவான், எதையோ செய்வதற்காக, எங்கிருந்தோ அவதாரம் எடுத்துக் கொண்டு வருவதில்லை. இறைவன் தாம் செய்ய விரும்புவதையெல்லாம் இந்த ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றுள்ள இஷ்ட தெய்வமாக விளங்கும் சத்குருவின் மூலமாகவே செய்கிறார். மகாபுருஷரைப் பொறுத்தவரையில் இந்த உடல் என்பது

வெறும் தங்கும் அறை மட்டும்தான். எனவே, பரமாத்மா செய்வது மற்றும் மகாபுருஷர் செய்வது, இரண்டும் ஒன்றேதான். ஏனெனில் இறைவன்தான் மகாபுருஷர் மூலமாகச் செய்கிறார். சரியாகச் சொல்வதென்றால் அந்த மகாபுருஷர் எதைச் செய்தாலும் எதையும் செய்யவில்லை என்பதே உண்மை. இதுபற்றிக் கூறும் அடுத்த சுலோகத்தைப் பாருங்கள் –

**ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு:**
**ந கர்மஃபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே (14)**

அந்த பிரபு, மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களின் கர்த்தா என்னும் தன்மையையோ (செய்பவன் நான் என்று உணரும் தன்மை) அவற்றின் கர்மங்களையோ, மற்றும், கர்மங்களுக்கான பலனையோ இணைத்து வைப்பதில்லை. மாறாக, சுபாவத்தில் நிலைத்த இயற்கையின் தூண்டுதலுக்கு ஏற்பவே அனைவரும் செயல்புரிகின்றனர். யாருக்கு எவ்விதமான இயல்பான குணங்கள் – சாத்வீகம், ராஜஸீகம், அல்லது தாமஸீகம் என்று அமைந்துள்ளதோ, அந்தந்த குணங்களுக்கு ஏற்பவே செயல்புரிகின்றனர். இயற்கையோ பரந்தும், விரிந்தும் உள்ளது. ஆனால் உங்களுடைய சுபாவம் எத்தனை அளவு உருமாறி, உருக்குலைந்து போய் உள்ளதோ, மற்றும் எவ்வளவு தூரம் பரவலாக மலர்ந்து உள்ளதோ அவ்வளவு மட்டுமே மாயையும் உங்கள் மீது தனது ஆளுமையைக் காட்டுகிறது.

பெரும்பாலோர், "செய்பவரும், செய்விப்பவரும் அந்த பகவானேதான். நாமெல்லாம் வெறும் இயந்திரம் மட்டும்தான். நம்மூலமாக அவர் நல்லதைச் செய்ய வேண்டுமானால் செய்யட்டும். அல்லது, தீயதைச் செய்ய வேண்டுமானால் செய்யட்டும்" என்றெல்லாம் சொல்லிக் கொள்கின்றனர். ஆனால் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரோ, "அந்த பிரபு தாமும் எதையும் செய்வதும் இல்லை, பிறரையும் எதையும் செய்விப்பதுமில்லை. மேலும் அவர் கர்த்தா, கர்மம், கர்மபலன் ஆகியவற்றை இணைத்து வைப்பதும் இல்லை" என்று திட்டவட்டமாகக் கூறுகிறார். மக்கள் அனைவரும் தத்தமது சுபாவத்தில் நிலைபெற்றுள்ள பிரகிருதி (இயல்பு)க்கு ஏற்றவாறு நடந்து கொள்கின்றனர், தன்னிச்சையாகச் செயல்படுகின்றனர். அவர்கள் தங்களுடைய பழக்க தோஷங்களுக்குக் கட்டுப்பட்டுக் காரியங்களைச் செய்கின்றனரே தவிர, பகவான் ஒன்றும் செய்வதில்லை. அப்படியென்றால் பிறகு ஏன் மக்கள் அனைவரும் பகவான் செய்கிறார், செய்விக்கிறார் என்றெல்லாம் கூறுகின்றனர். இதுபற்றி யோகேஷ்வரர் கூறுகிறார்.

**நாதத்தே கஸ்யசித்பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு:**
**அஞ்ஞானேனாவ்ருதம் ஜ்ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ : (15)**

முந்தைய சுலோகத்தில் யாரை **'பிரபு'** என்று கூறினாரோ அவரையே இங்கே **'விபு'** என்று குறிப்பிடுகிறார். ஏனெனில், அவர் எல்லா வைபவங்களோடும்

(தெய்வீக மகிமைகள்) கூடியவர். சர்வ வல்லமை எனப்படும் பிரபுத்துவம் மற்றும் வைபவம் ஆகியவற்றுடன் கூடியிருக்கும் அந்த பரமாத்மா, எவருடைய பாவகர்மத்தையோ அல்லது புண்ணிய கர்மத்தையோ ஏற்றுக் கொள்வதில்லை. அப்படியிருந்தும் மக்கள் ஏன் அவ்வாறு கூறுகிறார்கள்? ஏனெனில் அஞ்ஞானத்தின் மூலமாக அவர்களுடைய ஞானம் மூடப்பட்டு உள்ளது. அவர்களுக்கு இன்னமும் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்ளுதலாகிய சாட்சாத்காரத்துடன் சேர்ந்து கிடைக்கும் அனுபவத்துடன் கூடிய அறிவு ஏற்படவில்லை. இப்போதுள்ள நிலையில் அவர்கள் வெறும் ஜந்துக்களே (சாதாரணமாக உண்டு, உறங்கி இனப்பெருக்கம் செய்து வாழும் உயிரினங்கள்) ஆவர். மோகவசத்தால் அவர்கள் எதை வேண்டுமானால் சொல்வார்கள். ஞானத்தினால் என்ன கிடைக்கிறது? என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

**ஜ்ஞானேன து தத்ஜ்ஞானம் யேஷாம் நாசிதமாத்மன:**
**தேஷாமாதித்யவஜ்ஞானம் ப்ரகாசயதி தத்பரம் (16)**

எவருடைய (உள் மனத்தில்) அந்தகரணத்தில் உள்ள அந்த அஞ்ஞானம் (எது ஞானத்தை மூடி மறைத்து வைத்திருந்ததோ) ஆன்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்தல் எனப்படும் சாட்சாத்காரத்தின் மூலமாக அழிந்து விட்டதோ, மற்றும் இந்த முறையில் எவரொருவர் ஞானத்தைப்பெற்று விட்டாரோ, அவருடைய அந்த ஞானம் சூரியனுக்கு ஒப்பாக அந்தப் பரம தத்துவ பரமாத்மாவை நன்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. அப்படியென்றால் அந்த பரமாத்மா என்பவர் ஏதோ ஆழ்ந்த இருளின் பெயரா என்ன? இல்லை, அவர் **'ஸ்வயம் ப்ரகாச ரூப் தின் ராதி'** – இரவிலும் பகலிலும் தன்னில்தானே ஒளியுடன் திகழும் சுயம்பிரகாச வடிவினர் ஆவார். இருக்கட்டும்! ஆனால் நமது பயன்பாட்டிற்குக் கிடைப்பதில்லையே, நமக்குத் தென்படுவது இல்லையே! எப்பொழுது அறிவின் மூலமாக அஞ்ஞானத்தின் திரை விலக்கப்படுகிறதோ, அப்பொழுது அவருக்கு அந்த ஞானம் சூரியனுக்கு ஒப்பான பரமாத்மாவைத் தன்னுள் பெருகச் செய்துவிடுகிறது. அதற்குப்பிறகு, அவருக்கென்று எங்கும் அந்தகாரம் (ஆழ்ந்த இருட்டு) என்பதே இருப்பதில்லை. அந்த ஞானத்தின் முழுஉருவம் என்ன?

**தத்புத்தயஸ்ததாத்மானஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா**
**கச்சந்த்யபுனராவ்ருத்திம் ஜ்ஞானநிர்தூதகல்மஷா: (17)**

எப்பொழுது அந்த பரம தத்துவ பரமாத்மாவுடன் இணைந்து புத்தி செயல்படுகிறதோ, தத்துவமான இறைவனுக்கு அனுகூலமாக பெருக்கெடுத்து

ஓடுகிறதோ, பரம தத்துவ பரமாத்மாவிலேயே ஒருமைப்பட்டுள்ள உணர்வுடன் கூடிய நிலையில் உள்ளாரோ, மேலும் அவரையேச் சார்ந்தும் உள்ளாரோ அதற்குப் பெயர்தான் ஞானம் ஆகும். அதை விடுத்து வீண் பேச்சுகள் அல்லது வெட்டித்தனமான வாத விவாதங்களுக்குப் பெயர் ஞானம் அல்ல. அத்தகைய ஞானத்தின் மூலமாக எல்லாப் பாவங்களையும் அழித்து விட்டவரே பிறப்பு, இறப்பு நீங்கப்பெற்று பரம பதத்தை அடைகிறார். பரம பதத்தை அடைந்த, முழுமையான ஞானத்துடன் கூடியவரே **'பண்டிதர்'** என்றழைக்கப்படுகிறார். மேலும் பார்க்கலாம்.

**வித்யா விநய ஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி**
**சுனி சைவ ஸ்வபாகே ச பண்டிதா: ஸமதர்சின : (18)**

ஞானத்தின் மூலமாக எவருடைய பாவம் அழிந்து போய்விட்டதோ, எவருக்கு **'அபுனராவர்த்தி பரம்கதிம்'** – பிறப்பு–இறப்பு நீங்கிய பரமபதம் கிடைத்துவிட்டதோ, அத்தகைய ஞானிகள் அறிவும் அடக்கமும் உடைய பிராம்மணர், மற்றும், சண்டாளன், பசு, நாய், யானை ஆகிய எல்லாப் பிராணிகளிடமும் சமமான பார்வையுடையவர்களாக இருக்கின்றனர். அவர்களுடைய பார்வையில் அறிவும், அடக்கமும் உடைய பிராம்மணர் தனிப்பட்ட சிறப்பைப் பெறுவதில்லை, சண்டாளனைத் தாழ்ந்த கண்ணோட்டத்திலும் நோக்குவதில்லை. அவர்களைப் பொறுத்தவரையில் பசு தர்மத்தின் சின்னமாகவோ, நாய் அதர்மத்தின் சின்னமாகவோ இருப்பதில்லை. யானை விசாலமாகவும் தெரிவதில்லை. அத்தகைய அறிஞர் சமமான பார்வை உடையவராகவும், சமமான நடத்தை உடையவராகவும் இருக்கின்றனர். அவருடைய பார்வை சருமத்தில் விழுவதில்லை. மாறாக, ஆன்மாவில் விழுகிறது. வித்தியாசம் இவ்வளவுதான். அறிவும், அடக்கமும் உடையவர் ஆன்ம வடிவத்திற்கு (அவர்களின் உண்மை இயல்பாகிய ஆன்மா) அருகிலும் மற்றவர்கள் கொஞ்சம் தொலைவிலும் இருக்கிறார்கள். சிலர் யாத்திரையில் முன்னேறிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். இன்னும் சிலரோ கூடாரத்தில் இளைப்பாறிக் கொண்டு இருக்கிறார்கள், அவ்வளவே. உடல் என்பது வெறும் ஆடை மட்டும்தான். அவர்களுடைய பார்வை ஆடைக்கு மதிப்புத் தருவதில்லை. மாறாக, இதயத்தில் நிலைத்திருக்கும் ஆன்மாவின் மீதேபடுகிறது. எனவேதான் எந்தப் பாகுபாடும் கொள்வதில்லை.

ஸ்ரீகிருஷ்ணர் போதுமான அளவு பசுக்களுக்கு சேவை செய்துள்ளார். அத்தகையவர், பசுக்களைப் பற்றிக் கௌரவம் நிறைந்த வார்த்தைகளில் பெருமைப்படுத்திக் கூறியிருக்க வேண்டும். ஆனால், அவரோ, அதுபோன்று ஒன்றுமே சொல்லவில்லை. ஸ்ரீகிருஷ்ணர் பசுக்களுக்குத் தர்மத்தில் எந்த இடமும் தரவில்லை. அவர், 'மற்ற ஜீவாத்மாக்களைப் போன்று பசுக்களுக்கும் ஆத்மா

உண்டு' என்று மட்டும்தான் சொல்லியுள்ளார். பசுக்களின் பொருளாதார மகத்துவம் எவ்வளவு வேண்டுமானால் இருக்கட்டும். ஆனால், அவற்றிற்கு தர்மத்தில் சிறப்பான இடத்தை அளித்தது என்னவோ பிற்காலத்தவர்களின் வேலையாகும். ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, "விவேகமற்றவர்களின் அறிவு எண்ணற்ற கிளைகளை உடையதாக இருக்கிறது. எனவேதான் அவர்கள் எண்ணற்ற கிரியைகளை விரிவுபடுத்திக் கொண்டே செல்கின்றனர். அதுமட்டுமின்றி அவர்கள் போலித்தனமான, ஆடம்பரம் நிறைந்த, அலங்கார வார்த்தைகளால் அவற்றை வெளிப்படுத்தவும் செய்கின்றனர். அவர்களுடைய இந்த வார்த்தைகளின் தாக்கம் எவரெவருடைய சித்தத்தில் எல்லாம் படுகிறதோ, அத்தகையோரின் புத்தியும் பாதிப்பிற்குள்ளாகிறது. அவர்கள் எதையும் அடைவதில்லை, மாறாக இழக்கின்றனர். ஆனால், (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தில், அர்ஜுனா! நிச்சயிக்கப்பட்டுள்ள செயல் ஒன்றுதான். அதுவே வேள்வியின் செயல்முறை எனப்படும் 'இறை ஆராதனை' ஆகும்" என்று கூறியுள்ளார். பசு, நாய், யானை, அரச மரம், நதி ஆகியவற்றிற்கு எல்லாம் தர்மத்தில் பெருமை மிகுந்த இடங்களைக் கொடுத்தது இந்த விவேகமற்ற அறிவிலிகளின் வேலையாகும். ஒருவேளை இவற்றிற்கு தெய்வீக நிலை எனும் தகுதி இருந்திருந்தால், ஸ்ரீகிருஷ்ணர் அதைப்பற்றி அவசியம் சொல்லி இருப்பார். ஆம்! கோயில்கள், மசூதிகள் முதலான வழிபாட்டுத் தலங்கள் எல்லாம் ஆரம்ப காலகட்டத்தில் அவசியம் தேவைதான். அங்கெல்லாம் ஆன்மீக ஈடுபாட்டுணர்வை வளர்க்கவல்ல உபதேசங்கள் சமுதாயக் கூட்டங்களில் அளிக்கப்படுமேயானால், அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம். அவைகள் எல்லாம் தர்ம உபதேசக் கேந்திரங்கள் ஆகும்.

இந்த சுலோகத்தில் இரண்டு பண்டிதர்கள் பற்றிய விவாதம் இடம் பெற்று உள்ளது. ஒரு பண்டிதரோ பூரண ஞானத்தைப் பெற்றவர். மற்றொருவரோ கல்வி, அறிவும் அடக்கமும் கொண்டவர். அவர்கள் இருவராக எப்படி இருக்க முடியும்? உண்மையில், சரியாகச் சொல்வதென்றால் ஒவ்வொரு சாதனைப் பிரிவிற்கும் இரண்டு எல்லைகள் உண்டு – ஒன்று, இறுதி எல்லை, அல்லது, உச்சநிலை எனப்படுவது. இரண்டாவது, ஆரம்பநிலை அல்லது தாழ்ந்த நிலை எனப்படுவது. உதாரணமாக, பக்தியின் ஆரம்ப நிலையை எடுத்துக் கொண்டால், எங்கிருந்து பக்தி ஆரம்பிக்கப்படுகிறதோ, அதுவே தாழ்ந்த நிலையாகும் அதேபோன்று அங்கே விவேகம், வைராக்கியம் மற்றும் இறைவன் மீது பிடிப்புணர்வுடன் 'வழிபாடு' செய்யப்படுகிறது. அதேசமயம், பக்தியின் உச்ச நிலையிலோ, பக்தி அதனுடைய இறுதி விளைவாகிய இறைவனைப் பெற்றுத் தரும் நிலையை அடைந்து விடுகிறது. இதேபோன்றுதான், பிராம்மண சாதனைப் பிரிவு என்பதும் எப்பொழுது பிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தரவல்ல உயர் ஆன்மீகத் திறன்பாடுகள் வந்து விட்டதோ, அங்கே கல்வி அறிவும் அடக்கமும்

இருக்கிறது. மனக் கட்டுப்பாடு, புலனடக்கம், இறைவன் (சத்குரு) மூலமாகக் கிடைக்கும் ஆன்மீக அனுபவங்களின் சஞ்சாரம், தங்குதடையின்றி தொடர்ச்சியாக நிகழும் ஆன்ம சிந்தனை, தியானம் மற்றும் சமாதி முதலான பிரம்மத்தில் நுழைவுபெற்றுத் தரவல்ல அனைத்து தகுதிகளும் அவருடைய அகத்தில் இயல்பாகவே செயல்படுகின்றன. இது பிராம்மணத்துவ நிலையின் தாழ்ந்த நிலையாகும். அதேபோன்று, உச்சவரம்பு நிலை எப்பொழுது வருகிறதென்றால், படிப்படியாக ஆன்ம சாதனை உன்னதமடைந்து கொண்டே சென்று அவர் பிரம்மத்தை நேரடியாக தரிசனம் செய்து, அவரிலேயே ஒன்று கலந்து விடுகிறாரோ அப்பொழுதுதான் வருகிறது. எவரை அறிய வேண்டுமோ, அவரை அறிந்தாகி விட்டது. அவரே முழுமையாக அறிந்தவர் ஆவார். பிறப்பு – இறப்பு நீங்கப்பெற்ற அத்தகைய மகாபுருஷரே கல்வி அறிவும், அடக்கமும் உடைய பிராம்மணர். சண்டாளன், நாய், யானை மற்றும் பசு என்று எல்லாவற்றின் மீதும் சமமான பார்வை உடையவராக விளங்குகிறார். ஏனெனில் அவருடைய பார்வை நேராக இதயத்தில் வீற்றிருக்கும் ஆத்ம வடிவத்தில் விழுகிறது. அத்தகைய மகாபுருஷருக்கு பரம பதம் வாயிலாக என்ன கிடைத்தது? எப்படிக் கிடைத்தது? இதை நன்கு விளக்கும் வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மேலும் கூறுகிறார்.

**இஹைவ தைர்ஜித: ஸர்க்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன:**
**நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத்ப்ரஹ்மணி தே ஸ்திதா: (19)**

இந்த மகாபுருஷர்கள் மூலமாக, உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும் காலகட்டத்திலேயே ஒட்டு மொத்த உலகமும் வெற்றி கொள்ளப்பட்டுவிட்டது. அவர்களின் மனமானது சமத்துவத்தில் நிலைபெற்று உள்ளது. மனத்தின் சமத்துவம், மற்றும், ஒட்டு மொத்த உலகமும் வெல்லப்படுவது ஆகியவற்றிற்கும் என்ன சம்பந்தம்? உலகமே அழிந்து விட்டபிறகு அவர்கள் எங்கே எஞ்சி இருக்கிறார்கள்? அதற்கு ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்: **'நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம'** அந்த பிரம்மம் தன்னில் எந்தக் குறையும் இல்லாதது, மற்றும் சமமானது. இங்கே, மஹாபுருஷர்களின் மனமும் அதேபோன்று எந்தக் குறையும் இல்லாமல் சமத்துவத்தில் நிலைபெற்று உள்ளது. **'தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா:'**– எனவேதான் அவர்கள் அந்த பிரம்மத்தில் நிலைபெற்று விடுகின்றனர். இதற்குப் பெயர்தான் பிறப்பு–இறப்பு நீங்கப்பெற்ற பரம கதி ஆகும். இது எப்பொழுது கிடைக்கிறது? எப்பொழுது சம்சாரம் (உலகம்) என்னும் எதிரி வெல்லப்பட்டு விடுகிறானோ அப்பொழுதுதான் கிடைக்கிறது. எப்பொழுது சம்சாரம் அல்லது உலகம் வெல்லப்படுகிறது? எப்பொழுது மனமானது முழுமையான கட்டுப்பாட்டிற்குள் வந்து, சமத்துவ உணர்வுக்குள் நுழைவு பெற்று விடுகிறதோ, (ஏனெனில் மனத்தின் விரிவே உலகம் எனப்படுகிறது) எப்பொழுது அவர்

பிரம்மத்தில் நிலைபெற்று விடுகிறாரோ அப்பொழுது பிரம்மவித் என்பவருடை இலட்சணம் என்ன**?** மேலும் அவருடைய வாழ்வியல் நடைமுறைகளைப்பற்றி தெளிவுபடுத்திக் கூறுகிறார்**.**

**ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராய சாப்ரியம்**
**ஸ்திர புத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்தித: (20)**

அவருக்கு யார் மீதும் பிரியமோ, வெறுப்போ இருப்பதில்லை**.** எனவேதான் அனைவரும் எதைப் பிரியமானது என்று கருதுகிறார்களோ, அதைப் பெற்றாலும் அவர் மிகுந்த மகிழ்ச்சி எதுவும் அடைவதில்லை**.** அதேபோன்று அனைவரும் எதை வெறுப்புடன் பார்க்கிறார்களோ (தர்மத்தைக் கடைப்பிடிப்பவர்கள் தங்களின் விருப்பத்திற்கு ஏற்ப அடையாளச் சின்னங்களைத் தரித்துக் கொள்வது போன்ற செயல்கள்) அதைப் பெற்ற பிறகு அவர்கள் மனச்சலனம் அடைவதும் இல்லை**.** அத்தகைய உறுதியான புத்தியை உடைய **'அஸம்மூட:'** – சந்தேகங்கள் நீங்கப் பெற்ற, **'ப்ரஹ்மவித்'** – பிரம்மத்தில் ஒன்றிணைந்த, பிரம்மத்தை அடைந்தவர் **(பிரம்ம வேத்தா) 'ப்ரஹ்மணி ஸ்தித:'** எல்லாம் வல்ல பிரம்மத்திலேயே எப்பொழுதும் நிலைத்து இருக்கிறார்**.**

**பாஹ்யஸ்பர்ஷேஷ்வ ஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம்**
**ஸ ப்ரஹ்மயோக யுக்தாத்மா ஸுகமக்ஷயமஷ்னுதே (21)**

வெளி உலக விஷய இன்பங்களில் பற்றற்றவர் அந்தராத்மாவில் நிலையாக விளங்கும் சுகத்தைப் பெறுகிறார்**.** அவர் **'ப்ரஹ்ம யோக யுக்தாத்மா'–** பரபிரம்ம பரமாத்மாவுடன் இணைவுற்றுத் திளைக்கும் ஆன்மாவை உடையவராதலால் அழிவற்ற ஆனந்தத்தை அனுபவிக்கிறார்**.** இந்த ஆனந்தத்திற்கு ஒருபோதும் அழிவு ஏற்படுவது இல்லை**.** இந்த ஆனந்தத்தை எவரால் அனுபவிக்க முடியும்**?** வெளிஉலக விஷய இன்பங்களில் பற்றற்றவர் எவரோ, அவரே அனுபவிக்க முடியும்**.** அப்படி என்றால் வெளிஉலக விஷய இன்பம் என்பது பெரிய பாதகமா**?** பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்**.** –

**யே ஹி ஸம்ஸ்பர்ஷஜா போகா: துக்கயோனய ஏவ தே**
**ஆத்யந்தவந்த : கௌந்தேய ந தேஷு ரமதே புத: (22)**

வெறும் தோல் மட்டுமே தொடுதல் உணர்ச்சியைப் பெற்றிருக்கவில்லை**.** எல்லாப் புலன்களுமே தொட்டு உணரும் திறனைக் கொண்டிருக்கின்றன**.** பார்த்தலே கண்களின் தொடுதல் உணர்ச்சியாகும்**.** கேட்பது காதுகளின் தொடுதல் உணர்ச்சியாகும்**.** இந்த முறையில் புலன்கள் மற்றும் விஷயங்கள் ஆகியவற்றின் இணைப்பினால் உண்டாகக் கூடிய எல்லா இன்பங்களுமே அனுபவிக்கும்போது

இன்பமளிப்பதைப் போன்றுதான் தெரிகிறது. ஆனால், சந்தேகமேயில்லாமல் அவை அனைத்துமே **'துக்க: யோனய:'** – துயரத்தைத் தரவல்ல பிறவிகளுக்கே காரணமாக அமைகின்றன. இந்தப் புலன் இன்பங்களே பிறவிகளுக்குக் காரணம் ஆகும். இது மட்டுமல்ல, அந்தப் புலன் இன்பங்களுமே தோன்றுவதும் மறைவதுமாக இருப்பவை, அழியும் தன்மை உடையவை. எனவேதான் குந்தியின் மகனே! விவேகம் உடையவன் இவற்றில் சிக்கிக் கொள்வதில்லை. புலன்களின் இந்தத் தொடுதல் உணர்ச்சிகளில் இருப்பதுதான் என்ன? காமம் மற்றும் கோபம் (ராகம் மற்றும் துவேஷம்) விருப்பு மற்றும் வெறுப்பு, இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ஷக்னோதீஹைவ ய: ஸோடும் ப்ராக்சரீரவிமோக்ஷணாத்**
**காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: (23)**

எனவேதான் எவனொருவன் இந்த மனித உடல் அழிந்து போவதற்கு முன்பே காமம் மற்றும் குரோதம் ஆகியவை மூலம் பிறக்கின்ற வேகத்தைத் தடுத்து நிறுத்துகின்ற (அழிக்கின்ற) திறனைப் பெற்று விடுகிறானோ, அவனே **'நர:'** – 'நரன்' எனப்படுகிறான். (நரன் என்றால் புலன் இன்ப நாட்டத்தை முழுவதுமாகக் கட்டுப்படுத்தியவன், அவற்றில் ஈடுபடாதவன் என்று பொருள்,) அவனே இந்த உலகில் யோகம் கைகூடப் பெற்றவன் ஆவான்; அவன் மட்டுமே சுகத்தை அனுபவிப்பவன் ஆவான். எதற்குப் பின்னால் துக்கம் என்பதே இல்லையோ அத்தகைய சுகத்தில், அதாவது, பரமாத்மாவில் நிலைத்து இருப்பவன் ஆவான். உயிருடன் வாழ்ந்து கொண்டு இருக்கும்போதேதான் இந்த நிலையை அடைவதற்கான வழிவகை உள்ளதே தவிர, மரணத்திற்குப் பிறகு அல்ல. ஸந்த் கபீர்தாஸரும் இதையே தெளிவுபடுத்துகிறார். **'அவதூ! ஜீவத் மே கர் ஆஸா'** '(சாதுவே! வாழும்போது இறைவனை அடைய ஆசைப்படு! )' அப்படியென்றால் இறந்ததற்குப் பிறகு முக்தி கிடைப்பதில்லையா? அவர் மேலும் கூறுகிறார்: **'முயே முக்தி குரு கஹே ஸ்வார்த்தீ, ஜூட்டா தே விஸ்வாஸா'**–'(மரணத்திற்குப் பிறகு முக்தி கிடைக்கும் என்று கூறும் குரு சுயநலவாதி, தவறான நம்பிக்கையை ஊட்டுபவன்)'. இதுவேதான் ஸ்ரீகிருஷ்ணர் கூறவிரும்புவதும்.: "சரீரம் இருக்கும்போதே, மரணம் வருவதற்கு முன்பே, எவன் ஒருவன் காமம், கோபம் ஆகிவற்றில் இருந்து தோன்றும் வேகத்தைக் கட்டுப்படுத்தும் திறனைப் பெற்று விடுகின்றானோ அவனே இந்த உலகத்தில் யோகியாவான், அவனே சுகமானவனும்கூட. காமம், கோபம் முதலிய புலன்நுகர்ச்சி விஷயங்களைப் புலன்கள் மூலமாகத் தொட்டுணர்ந்து அனுபவித்தல், இவைகள் எல்லாம்தான் எதிரிகள். நீங்கள் இவர்களையே வெல்ல வேண்டும். அத்தகையவரின் இலட்சணங்கள் பற்றி மேலும் கூறுகிறார்

**யோந்த: ஸுகோந்தராராமஸ்ததாந்தர்ஜ்யோதிரேவ ய:**
**ஸ யோகி ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோதிகச்சதி (24)**

எவனொருவன் அந்தராத்மாவிலேயே சுகத்தைக் காண்கிறானோ, **'அந்தராராம'** அந்தராத்மாவிலேயே ஓய்வு காண்கிறானோ, மற்றும், அந்தராத்மாவிலேயே பிரகாசத்தைப் (இறைவனை நேரடியாக அறிந்து தெளிதல் எனப்படும் சாட்சாத்காரம்) பெற்றுள்ளவனோ அந்த யோகி **'ப்ரஹ்மபூத:'–** பிரம்மத்தில் ஐக்கியமாகி **'ப்ரஹ்ம நிர்வாணம்'–** வாக்கிற்கு (வாணி) அப்பாற்ப்பட்ட பிரம்மம், என்றும் நிலையான, மாறாததாகிய பிரம்மத்தை அடைகிறார். அதாவது, முதலில் காமம், கோபம் முதலான தீய வினைகள் (விகாரங்கள்) அழிகின்றன; அதன் பிறகு இறைவனின் தரிசனம் கிடைக்கிறது. அதற்குப் பிறகு இறைவனுள் நுழைவு பெற்று விடுகிறான். மேலும் பார்க்கலாம்.–

**லபந்தே ப்ரஹ்மநிர்வாணம்ருஷய: க்ஷீணகல்மஷா:**
**ச்சின்னத்வைதா யா தாத்மான: ஸர்வபூதஹிதே ரதா: (25)**

பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து, சாட்சாத்காரம் அடைந்ததால் எவருடைய பாவங்கள் எல்லாம் அழிந்து விட்டனவோ, எவருடைய இருமைகள் எனப்படும் வேற்றுமை உணர்வுகள் அனைத்தும் ஒழிந்து விட்டனவோ, எல்லாப் பிராணிகளின் (மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களின்) நன்மையைக் கருதிச் செயல்படுபவர் எவரோ, (இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து முக்திநிலையை பெற்றவர் மட்டுமே அத்தகைய பிறர் நலம் விரும்பியாகச் செயல்பட முடியும். தானே குழியில் விழுந்து கிடக்கும் எவனும் மற்றவரை எங்கிருந்து வெளியில் எடுத்துக் காப்பாற்றுவான்? எனவேதான் கருணை என்பது மகாபுருஷர்களின் இயல்பான குணமாகவே இருக்கிறது.) மேலும் **'யதாத்மான:'** புலன்களை வென்று பிரம்மத்தை அடைந்தவரே, அமைதியின் வடிவான பரபிரம்மத்தைப் பெறுகிறார். அதே மகாபுருஷரின் ஆன்மநிலை பற்றி மேலும் விளக்கமாக எடுத்துரைக்கிறார்.

**காமக்ரோதவியுக்தானாம் யதீனாம் யகசேதஸாம்**
**அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனாம் (26)**

காமம் மற்றும் கோபம் நீங்கப் பெற்றவராக, வெற்றி கொள்ளப்பட்ட சித்தத்தை உடைய, பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்ட (சாட்சாத்காரம்) ஞானிகளாகிய மகாபுருஷருக்கு எல்லாவிதத்திலும் எல்லாப் பக்கத்திலும் இருந்து அமைதியே வடிவான பரபிரம்மமே கிடைக்கிறது. யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணர் மீண்டும் மீண்டும் அத்தகைய மகாபுருஷரின் உயர் ஆன்மீக வாழ்வியலை வலியுறுத்திக் கூறுவதன் நோக்கம் அதிலிருந்து நமக்கெல்லாம் தூண்டுணர்வு கிடைக்கட்டும் என்பதற்காகத்தான். கேள்வி ஏறத்தாழ

முடிவுக்கு வந்து விட்டது. இப்பொழுது அவர் மீண்டும், இந்த இறைநிலையை அடைவதற்கு அவசியமான அங்கமாக 'உள்மூச்சு—வெளிமூச்சில் ஆன்மீகச் சிந்தனையை' வலியுறுத்திக் கூறுகிறார். வேள்வியின் செயல்முறையாகிய 'பிராணவாயுவை அபானனிலும் அபானவாயுவை பிராணவாயுவிலும் வேள்விப் பொருளாகச் சமர்ப்பித்தல்; பிராணன், அபானன் ஆகியவற்றின் வேகத்தை கட்டுப்படுத்துதல்' ஆகியவற்றைப் பற்றியும் கூறினார். அதையே மேலும் தெளிவுபடுத்துகிறார்.

**ஸ்பர்ஷான்க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஸ் சக்ஷுஸ்சைவாந்தரே ப்ருவோ:**
**ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ (27)**
**யதேந்த்ரியமனோபுத்திர்முனிர்மோக்ஷபராயண:**
**விகதேச்சாபயக்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: (28)**

அர்ஜுனா! வெளிஉலக விஷயங்கள், காட்சிகள் ஆகிவற்றைப் பற்றி எல்லாம் சிந்திக்காமல், அவற்றையெல்லாம் தியாகம் செய்து விட்டு, கண்களின் பார்வையைப் புருவங்களுக்கு மத்தியில் நிலைநிறுத்த வேண்டும், **'ப்ருவோ: அந்தரே'** – (புருவங்களுக்கு மத்தியில்) அதாவது, இதற்குக் 'கண்களுக்கு மத்தியில்' அல்லது 'கண் இமைகளுக்கு மத்தியில்' பார்க்கும் எண்ணத்துடன் பார்வையை நிலைநிறுத்த வேண்டும் என்று அர்த்தம் எடுத்துக் கொள்ளக் கூடாது. 'புருவங்களுக்கு மத்தியில்' என்பதற்குச் சரியான அர்த்தம் இவ்வளவுதான். அதாவது, நேராக நிமிர்ந்து உட்கார்ந்தபிறகு, பார்வையானது, புருவங்களுக்கு மத்தியில் இருந்து முன்னே விழவேண்டும். இடப்பக்கமோ, அல்லது வலப்பக்கமோ, இங்கேயோ அல்லது அங்கேயோ சுற்றுமுற்றும் பார்வையை அலைபாய விடக்கூடாது. மூக்கின் தண்டுப்பகுதியில் இருந்து பார்வையானது நேராக முன்னே விழுமாறு நிலைநிறுத்த வேண்டும். (இதைவிடுத்து, மூக்கையே பார்க்கின்ற முயற்சியில் இறங்கிவிடக்கூடாது.) மூக்குத் துவாரங்களின் உள்ளே இயங்கிக் கொண்டு இருக்கும் பிராணன் (உள்மூச்சு) மற்றும் அபானன் (வெளிமூச்சு) வாயுவைச் (காற்றினை) சமப்படுத்தி, அதாவது, பார்வையை முன்னே நிலைநிறுத்தி, மற்றும், மனத்தின் கவனப் பார்வையை **(ஸுரத்)** சுவாசத்தில் நிலைநிறுத்தி, எப்பொழுது சுவாசம் உள்ளே சென்றது? எவ்வளவு நேரம் நின்றது? ( ஏறத்தாழ அரை நொடிப் பொழுது நிற்கும். நாமாக முயற்சி செய்து அதனை நிறுத்தக் கூடாது) எப்பொழுது சுவாசம் வெளியில் சென்றது? எவ்வளவு நேரம் வெளியில் நின்றது? என்பதைப் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும். அப்போது சுவாசத்தில் இருந்து எழுகின்ற நாமத்வனி கேட்டுக் கொண்டே இருக்கும் என்பதைத் தனியாகச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இந்த முறையில்

உள்மூச்சு–வெளிமூச்சு ஆகியவற்றில் 'மனத்தின் கவனப்பார்வை' **(ஸுரத்)** நிலைத்து விட்டால் போதும், கொஞ்சம் கொஞ்சமாக சுவாசம் அசையாமல், உறுதியாக நிற்கும், சமமாகிவிடும். உள்ளே இருந்து எந்த சங்கல்பமும் (எண்ணமும்) எழாது. மற்றும் வெளியில் இருந்தும் எந்த சங்கல்பமும் அகத்தில் நுழைந்து எந்த சலனத்தையும் ஏற்படுத்தாது. வெளிஉலகில் உள்ள விஷய இன்பங்களைப் பற்றிய சிந்தனையை வெளியிலேயே தியாகம் செய்தாகிவிட்டது. அகத்திலும் எந்தவொரு சங்கல்பமும் (எண்ணங்கள்) விழிப்புறுவதில்லை. மனத்தின் கவனப் பார்வை **(ஸுரத்)** உறுதியாக, எண்ணெய் ஒழுக்கைப் போன்று நிற்கிறது. எண்ணெய் விழுவது தண்ணீர் விழுவதைப் போன்று ஒழுங்கற்று தபதபவென்று விழுவதில்லை. எண்ணெய் விழும் வரைக்கும் ஒரே சீராக, ஒழுக்கமான ஓட்டத்தில்தான் விழுகிறது. இந்த முறையில் பிராணன் மற்றும் அபானன் ஆகியவற்றின் இயக்கம் ஒரே சீராகவும், சமமாகவும், உறுதியாகவும் இருக்குமாறு வைத்துக் கொண்டு புலன்கள், மனம், மற்றும் புத்தி ஆகியவற்றை எவர் வென்று விடுகிறாரோ, இச்சை அல்லது விருப்பம், பயம் மற்றும், கோபம் ஆகியவை முழுமையாக நீங்கப்பெற்று, ஆன்ம சிந்தனையின் உச்சக்கட்ட நிலையை அடைந்துவிட்ட, மோட்சத்தையே எப்போதும் நாடுகின்ற முனிவர் சதாசர்வகாலமும், முக்தனாகவே இருக்கிறார். முக்தியை அடைந்தபிறகு அவர் எங்கே போகிறார்? எதைப் பெறுகிறார்? இதுபற்றிக் கூறுகிறார்.

**போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஷ்வரம்**
**ஸுஹ்ருதம் ஸர்வபூதானம் ஜ்ஞாத்வா மாம் சாந்திம்ருச்சதி (29)**

அந்த முக்த புருஷர் என்னை, வேள்வி, மற்றும் தவங்களை எல்லாம் அனுபவிப்பவராக, எல்லா உலகங்களின் ஈஸ்வரர்களுக்கெல்லாம் ஈஸ்வரராக, மனிதர்உட்பட எல்லா உயிரினங்களின் சுயநலமில்லாத நன்மை விரும்பியாக, நேரடி தரிசனத்துடன் அறிந்து கொண்டு அமைதியைப் பெற்று விடுகிறார். ஸ்ரீகிருஷ்ணர் இங்கே, அந்த முக்த புருஷருடைய உள்மூச்சு வெளிமூச்சு ஆகியவற்றில் செய்யப்படும் வேள்வி மற்றும் தவம் ஆகியவற்றை அனுபவிப்பவன் நானே. வேள்வியும் தவமும் கடைசியில் எங்கே போய் முடிகிறதோ அவரே நான். அந்த முக்த புருஷர் என்னையே அடைகிறார். வேள்வியின் இறுதியில் கிடைக்கும் அமைதி என்று கூறப்படுவது, என்னுடைய ஆன்ம வடிவமே ஆகும். அந்த முக்த புருஷர் என்னை அறிகிறார். மேலும் என்னை அறிந்து என்னையே அடைந்தும் விடுகிறார். இதற்குப் பெயரே அமைதி எனப்படுகிறது. நான் எப்படி ஈஸ்வரர்களுக்கு எல்லாம் ஈஸ்வரரோ அவ்வாறே அந்த முக்த புருஷரும் ஆகிவிடுகிறார் என்று கூறுகிறார்.

**முடிவுரை : -**

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன்" ஒரு சமயம் நீங்கள் (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தைப் புகழ்ந்து கூறுகிறீர்கள். மற்றொரு சமயம் சந்நியாச மார்க்கத்தின் மூலம் செய்யப்படும் கர்மத்தைப் புகழ்ந்து கூறுகிறீர்கள். ஆகவே, 'இரண்டில் இருந்து ஏதேனும் ஒன்றை, உங்களால் சிறந்தது என்று நிச்சயிக்கப்பட்டுள்ளது எதுவோ, பரம நன்மையைத் தரவல்லது எதுவோ, அந்த ஒன்றைக் கூறுங்கள்' என்று கேட்டான். ஸ்ரீகிருஷ்ணரும் அதற்கு, அர்ஜுனா! பரம நன்மை என்பது இரண்டு மார்க்கங்களிலுமே உள்ளது. இரண்டிலுமே அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் (வேள்வி) எனப்படும் வேள்வியின் செயல்முறையே செய்யப்படுகிறது. அப்படியிருந்த பிறகும்கூட (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகமே உயர்ந்தது. அதைச் செய்யாமலேயே சந்நியாசம் (நல்ல மற்றும் தீய கர்மங்களின் முடிவு) கிடைப்பது இல்லை. சந்நியாசம் என்பது ஒரு பாதையன்று; அடையப்போகின்ற லட்சியத்தின் பெயராகும். யோகம் கைகூடப் பெற்றவரே சந்நியாசி ஆவார் என்கிறார். யோகம் கைகூடப் பெற்றவரின் இலட்சணத்தைப் பற்றிக் கூறும்போது அவரையே 'பிரபு' என்று குறிப்பிடுகிறார். அவர் எதுவும் செய்வதும் இல்லை; செய்விப்பதும் இல்லை. மாறாக, சுபாவத்தில் உள்ள இயற்கையான குணங்களின் அழுத்தத்திற்கு ஏற்ப மக்கள் தத்தமது செயல்களில் மூழ்கிக் கிடக்கிறார்கள். எவர் என்னை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்கிறாரோ, அவரே அறிந்தவர்; அவரே பண்டிதர் ஆவார். வேள்வியின் இறுதி விளைவாக, அனைவரும் என்னை அறிந்து கொள்கிறார்கள். உள்மூச்சு – வெளிமூச்சு ஆகியவற்றில் இறைநாம ஜபம், மற்றும் வேள்வி – தவம் ஆகியவை எவருள் கலந்துவிடுகிறதோ அவரே நான். வேள்வியின் இறுதி விளைவாகிய, ஆன்ம வடிவமாகிய என்னை அறிபவர் எந்த அமைதியைப் பெறுகிறாரோ அதுவும் நானே! அதாவது ஸ்ரீகிருஷ்ணரைப் போலவே, மகாபுருஷரைப் போலவே, ஆன்ம வடிவமானது, அந்த இறைவனை அடைந்து முக்திநிலை பெற்றவருக்கும் வாய்க்கிறது. அவரும் ஈஸ்வரருக்கெல்லாம் ஈஸ்வரராக, ஆன்மாவிற்கெல்லாம் ஆன்மாவாக, ஆன்ம வடிவமாகவே ஆகிவிடுகிறார். அந்த பரமாத்மாவுடன் சேர்ந்து ஒன்றிணைந்த இறை உணர்வைப் பெற்று விடுகிறார். (இவ்வாறு இறைவனுடன் ஒன்றாவதற்கு எத்தனை பிறவிகள் ஆனாலும் சரிதான்.) இந்த அத்தியாயத்தில், 'வேள்வி தவங்களை அனுபவிப்பவர், மகாபுருஷருக்குள் வீற்றிருக்கும் சக்தியாகிய மஹேஷ்வரர் ஆவார்' என்பதைத் தெளிவுப்படுத்தி விட்டார். அத்துடன் –

**ஓம் தத் ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே யஜ்ஞபோக்தா மஹாபுருஷஸ்த்த மஹேஷ்வர : நாம பஞ்சமோத்யாய:**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'யஜ்ஞபோக்தா மஹாபுருஷஸ்த்த மஹேஷ்வரர்' அதாவது 'வேள்வியை அனுபவிக்கும் மஹாபுருஷரில் நிலைத்திருக்கும் மஹேஷ்வரர்' என்ற பெயருடைய ஐந்தாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா : 'யதார்த்த கீதா' பாஷ்யே 'யஜ்ஞபோக்தா மஹாபுருஷஸ்த்த மஹேஷ்வர' நாம பஞ்ச மோத்யாய :**

– இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'யஜ்ஞ போக்தா மஹாபுருஷஸ்த்த மஹேஷ்வரர்' அதாவது, 'வேள்வியை அனுபவிக்கும் மஹாபுருஷரில் நிலைத்திருக்கும் மஹேஷ்வரர்' என்ற பெயருடைய ஐந்தாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

ஓம் ஸ்ரீபரமாத்மனே நம :

# ஆறாவது அத்தியாயம்

உலகில் தர்மத்தின் பெயரால் நடைமுறைப் பழக்கவழக்கங்கள், பூஜை விதிமுறைகள், பற்பல மதங்களின் ஆதிக்கம் ஆகியவற்றின் கரங்கள் வலுப்பெற்றிருக்கும் கால கட்டத்தில் அத்தகைய நெறிகள் அனைத்தையும் அழித்து, 'ஏக இறைவன்' என்ற கொள்கையை நிலைநிறுத்தவும், அவரை அடைவதற்கான ஆன்மீகச் செயல்முறை விதிகளைப் பறைசாற்றுவதற்கும் ஏதேனும் ஒரு மகாபுருஷர் தோன்றுகிறார். ஆராதனை செயல்களை எல்லாம் புறக்கணித்து விட்டு, பேசாமல் உட்கார்ந்து கொண்டு ஞானிகள் என்று கூறித் திரிந்தவர்களின் கூட்டம் ஸ்ரீகிருஷ்ணரின் காலத்திலும் மிகவும் பிரபலமாகவே இருந்து வந்திருக்கிறது. எனவேதான் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணர் இந்தக் கேள்வியை நான்காவது முறையாக மீண்டும் தாமே எழுப்பி, 'ஞான யோகமாக இருந்தாலும் சரி, கர்ம யோகமாக இருந்தாலும் சரி, இரண்டு வழிகளிலுமே அவற்றிற்கு ஏற்பக் கர்மத்தைச் செய்துதான் ஆகவேண்டும்' என்கிறார்.

இரண்டாவது அத்தியாயத்தில் அவர், "அர்ஜுனா! சத்திரியருக்கென்று யுத்தத்திற்கும் மேலாக, மேலான நன்மையை அளிக்கவல்ல வழி வேறு ஒன்றும் இல்லை. இந்த யுத்தத்தில் தோற்றாலும் **தேவத்துவம்** (தேவர்களின் நிலை) வெற்றி பெற்றாலோ **மஹாமஹிம்** என்னும் இறைநிலை கிடைக்கும் என்பதைப் புரிந்து கொண்டு யுத்தம் செய். அர்ஜுனா! இந்த புத்தி உனக்காக ஞான யோகம் என்ற பெயரில் கூறப்பட்டது. எத்தகைய புத்தி? அதுதான் யுத்தம் செய் என்னும் புத்தி" என்று கூறினார். கைமேல் கை வைத்துக் கொண்டு பேசாமல் உட்கார்ந்து இருப்பதற்குப் பெயர் ஞானயோகம் இல்லை. தனது சொந்த இலாப, நஷ்டங்களை சுயமாக அலசி ஆராய்ந்து, சுயபலத்தைப் புரிந்து கொண்டு கர்மத்தில் ஈடுபட்ட வண்ணம் ஆன்மீகப் பாதையில் முன்னேறிக் கொண்டே போவதுதான் ஞான யோகம் ஆகும். ஞான யோகத்தில் ஈடுபடுபவர்களுக்கும் வழி காட்டியாகத் திகழ்பவர் என்னவோ மஹாபுருஷர்தான். ஞானயோகத்திலும் யுத்தம் தவிர்க்க முடியாத ஒன்று.

மூன்றாவது அத்தியாயத்தில் அர்ஜுனன், "பகவானே! (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்துடன் ஒப்பிடுகையில் ஞானயோகமே உங்களைப் பொறுத்தவரையில் உயர்ந்தது என்றால், என்னை மட்டும் ஏன் நீங்கள் இந்தப் பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்கள்?" என்று கேட்டான். அர்ஜுனனுக்கு (பற்றற்ற) நிஷ்காம கர்மயோகம் மிகவும் கடினமானது என்று தோன்றியது. இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இரண்டு பாதைகளுமே என்மூலமாகத்தான் சொல்லப்பட்டுள்ளன.

ஆனால், எந்தவொரு பாதையாக இருந்தாலும், அதற்கேற்றவாறு கர்மத்தைத் துறந்து விட்டு முன்னேறிச் செல்வதற்கான வழிவகை எதுவும் இல்லை. அதுமட்டுமின்றிக் கர்மத்தை ஆரம்பிக்காமலேயே யாரும் 'பரம நைஷ்கர்ம்யம்' (கர்மம் விடுபட்ட நிலை) எனும் சித்தியை அடைவதுமில்லை. அல்லது ஆரம்பித்த கர்மத்தை துறந்து விடுவதாலும் எவரும் பரம ஸித்தியைப் பெறுவதும் இல்லை. இரண்டு மார்க்கங்களிலுமே நியமிக்கப்பட்டுள்ள கர்மம், அதாவது, வேள்வியின் செயல்முறைகளை கடைப்பிடித்துதான் ஆக வேண்டும்.

இப்போது அர்ஜுனன் மிகவும் நல்லமுறையில் 'ஞானமார்க்கம் பிடித்திருந்தாலும் சரி, பற்றற்ற கர்ம மார்க்கம் பிடித்திருந்தாலும் சரி, இரண்டு கண்ணோட்டங்களிலுமே கர்மத்தை மட்டும் செய்தேயாக வேண்டும்' என்பதைப் புரிந்து கொண்டான். அதற்குப் பிறகும்கூட அவன் ஐந்தாவது அத்தியாயத்தில் "பலன் என்ற கண்ணோட்டத்தில் வைத்துப் பார்க்கும்போது எந்தப் பாதை உயர்வானது? எந்தப் பாதை வசதியானது?" என்று கேட்டான். ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, "அர்ஜுனா! இரண்டு பாதைகளுமே மிகவும் உயர்வானதையே (மேலானவையே) தரவல்லவை. இரண்டுமே ஒரே இடத்திற்குத்தான் கொண்டு போய்ச்சேர்க்கின்றன. அப்படி இருந்தாலும்கூட ஞானமார்க்கத்தைவிட (ஸாங்க்ய யோகம்,) பற்றற்ற கர்ம யோகமே உயர்வானது. ஏனெனில், பற்றற்ற கர்மத்தைக் கடைப்பிடிக்காமல் யாரும் சந்நியாஸி ஆகிவிடமுடியாது. இரண்டிலுமே கர்மம் ஒன்றுதான்" என்று பதில் கூறினார். ஆகவே, எவரும் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்யாமல் சந்நியாஸி ஆகிவிடுவதும் இல்லை. எவரும் யோகியாகவும் மாறிவிடுவதில்லை. ஏற்கனவே கூறப்பட்டுள்ளதுபோல், இந்தப் பாதையில் செல்லும் சாதகர்களின் 'கர்மத்தில் ஈடுபடுவதற்கான கண்ணோட்டம்' மட்டும் இருவகைப் படுகிறது.

**ஸ்ரீபகவானுவாச**

**அனாஸ்ரித : கர்மஃபலம் கார்யம் கர்ம கரோதி ய :**
**ஸ ஸந்நியாஸீ ச யோகீ ச ந நிரக்னிர்ந சாக்ரிய : (1)**

ஸ்ரீகிருஷ்ண மஹராஜ் கூறுகிறார்: "அர்ஜுனா! கர்ம பலனைச் சார்ந்திராமல் அதாவது, கர்மத்தைச் செய்யும் சமயத்தில் எந்த வகையான ஆசைகளையும் வைத்துக் கொள்ளாமல் எவரொருவர் **கார்யம் கர்மம்** – செய்யத் தகுதியுடைய வேள்வியின் சிறப்புச் செயல்முறைவிதிகளைக் கடைப்பிடித்து வருகிறாரோ, அவரே சந்நியாசி அதாவது அவரே யோகியாவர். அதை விடுத்து, நெருப்பைத் தொடமாட்டேன் என்று தியாகம் செய்பவனும், வேள்வி செயல்களைத் தியாகம் செய்பவனும் சந்நியாசியும் அல்ல, யோகியும் அல்ல. (செயல்கள்) கிரியைகள் என்ற பெயரில் எண்ணற்றவை உள்ளன. அவற்றில் இருந்து '**கார்யம் கர்ம**'

செய்யத் தகுந்த கர்மம் (வேள்விக் கிரியை) **நியத கர்ம** – நிச்சயிக்கப்பட்டுள்ள ஒன்றான கர்மம் அதாவது வேள்வியின் செயல் முறை எனப்படுகிறது. இதனுடைய தூய்மையான பொருளே ஆராதனை எனப்படும். அதாவது, ஆராதிக்கும் தெய்வத்துள் (ஸத்குரு) நுழைவு பெற்றுத் தரவல்ல வேள்வியின் சிறப்புச் செயல்முறை விதியாகும். இதற்குச் செயல்வடிவம் தருவதையே கர்மம் என்கிறோம். எவர் இதைச் செய்கிறாரோ, அவரே சந்நியாசி, அவரே யோகியாகிறார். அதை விடுத்து அக்கினியைத் தியாகம் செய்பவன், அதாவது, 'நாங்கள் இனிமேல் நெருப்பைத் தொடமாட்டோம்' என்று உறுதிமொழி எடுத்துக் கொள்பவனும், அல்லது, கர்மத்தைத் தியாகம் செய்பவனும், அதாவது 'எனக்கென்று எந்தக் கர்மமும் இல்லை, நான் ஆத்மஞானியாவேன்' என்று வெறுமனே சொல்லிக் கொண்டு கர்மத்தையே செய்ய ஆரம்பிக்காதவனும் செய்யத் தகுதியுடைய வேள்வியின் சிறப்புச் செயல்முறை விதியைச் செய்யாதவனும் சந்நியாசியும் கிடையாது. யோகியும் இல்லை. இதுபற்றி மேலும் பார்க்கலாம்.

**யம் ஸந்ந்யாஸமிதி ப்ராஹுர்யோகம் தம் வித்தி பாண்டவ**
**நஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஸ்சன (2)**

அர்ஜுனா! எதனை சந்நியாசம் என்று கூறுகிறார்களோ, அதையே நீ யோகம் என்று அறிந்து கொள். ஏனெனில் சங்கல்பங்களைத் தியாகம் செய்யாமல் யாருமே யோகியாக முடியாது. அதாவது, (பலனை) ஆசைகளைத் துறப்பது இரண்டு பாதைகளைப் பின்பற்றுபவர்களுக்குமே மிகவும் இன்றியமையாததாகும். 'அப்படி என்றால் மிகவும் எளிதாகப் போய்விட்டது. நாம் சங்கல்பமே செய்யவில்லை; என்று கூறிவிடலாம். யோகியாகி விடுவோம் சந்நியாசியாகி விடுவோம், என்று நாம் ஒருவேளை நினைக்கலாம். ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, 'அப்படி ஒருபோதும் நடக்காது' என்று கூறுகிறார்.

**ஆருருக்ஷோர்முனேர்யோகம் கர்ம காரணமுச்யதே**
**யோகாரூடஸ்ய தஸ்யைவ சம : காரணமுச்யதே (3)**

யோகத்தின் பாதையில் முன்னேறிச் செல்வதற்கு விரும்பும் தியானத்தில் தொடர்ந்து ஈடுபாடு உடையவருக்கு, யோகம் கைகூட வேண்டுமானால், 'கர்மம் செய்ய வேண்டும்' என்பதே காரணமாகிறது. மேலும், யோகத்தைக் கடைப்பிடித்துக் கொண்டே சென்று, அது இறுதி விளைவினைத் தருகின்ற நிலைக்கு வந்து விட்ட பிறகு, அந்த யோகம் கைகூடப் பெறுவதில் **சம காரணம் உச்யதே** – 'ஒட்டு மொத்த சங்கல்பங்களின் அழிவு' என்பது காரணமாகிறது. இதற்கு முன்பு சங்கல்பம் நம்மை விட்டுவிடுவது இல்லை. மேலும் –

**யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்ம ஸ்வனுஷஜ்ஜதே**
**ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகாரூடஸ்ததோச்யதே (4)**

எந்தக் காலத்தில் ஒருவர் புலனின்ப விஷயங்களில் பற்றில்லாதவராக ஆகிறாரோ, மேலும் கர்மங்களிலும் பற்றில்லாதவராக ஆகிறாரோ (யோகத்தின் பரிபக்குவநிலைக்கு வந்து இறைவனை அடைந்து விட்ட பிறகு, அதற்கும் மேல் கர்மத்தைச் செய்து யாரைத் தேடுவது? ஆகவே நிச்சயிக்கப்பட்ட கர்மமான ஆராதனைக்கு அவசியமில்லாமல் போகிறது எனவேதான், அவருக்குக் கர்மங்களில் பற்றில்லை) அந்தக் காலத்தில்தான் **ஸர்வ ஸங்கல்ப ஸந்ந்யாஸி** – எல்லா சங்கல்பங்களும் அழிகின்றன. அவரே சந்நியாசியும், அவரே யோகம் கைகூடப் பெற்றவர் ஆவார். இதுதவிர ஆன்மீகப் பாதையில் பயணம் செய்து கொண்டிருக்கும் வழியில் சந்நியாசம் என்ற பெயரில் ஒரு பொருளும் இல்லை. இந்த யோகம் கைகூடப் பெறுவதால் கிடைக்கும் இலாபம்தான் என்ன?

**உத்தரேதாத்மனாத்மானம் நாத்மானமவஸாதயேத்**
**ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மன : (5)**

அர்ஜுனா! மனிதராகப் பிறந்தவர்கள் அனைவருமே, தங்கள் மூலமாகவே தங்களை உயர்த்திக் கொள்ள முயற்சிக்க வேண்டும். தங்களுடைய ஆன்மாவை அதோகதிக்குத் தள்ளிவிடக் கூடாது. ஏனெனில், இந்த ஜீவாத்மாதான் தனக்குத்தானே நண்பனாகவும் தனக்குத்தானே எதிரியாகவும் இருக்கிறது. இது எப்பொழுது எதிரியாகிறது? இது எப்பொழுது நண்பனாகிறது? இது பற்றிக் கூறுகிறார்.

**பந்துராத்மாத்மனஸ்தஸ்ய யேனாத்மைவாத்மனா ஜித :**
**அனாத்மனஸ்து சத்ருத்வே வர்த்தேதாத்மைவ சத்ருவத் (6)**

எந்த ஜீவாத்மாவின் மூலமாக மனம் மற்றும் புலன்களுடன் சேர்த்து இந்த உடலானது வெற்றி கொள்ளப்பட்டு விட்டதோ, அவருக்கு, அவருடைய ஜீவாத்மா நண்பனாகும். மேலும் எந்த ஜீவாத்மாவின் மூலமாக மனம் மற்றும் புலன்களுடன் சேர்த்து இந்த உடலானது வெற்றி கொள்ளப்படவில்லையோ, அவனுக்கு அவனுடைய ஜீவாத்மாவே பகைவனாகும்.

இந்த இரண்டு சுலோகங்களிலுமே ஸ்ரீகிருஷ்ணர் ஒரே கருத்தைத்தான் சொல்ல வருகிறார். அதாவது, உன் மூலமாகவே உனது ஆத்மாவை உயர்த்திக் கொள். அதை அதோ கதிக்குத் தள்ளி விடாதே. ஏனெனில், ஆன்மாவே நண்பன்; ஆவான் படைப்பில் இதைத் தவிர, வேறு எந்தப் பகைவனும் இல்லை, வேறு எந்த நண்பனும் இல்லை. எந்த முறையில்? எவர் மூலமாக மனத்துடன்

சேர்த்து அனைத்துப் புலன்களும் வெல்லப்பட்டு விட்டதோ, அவரைப் பொறுத்தவரையில் அவருடைய ஆத்மா நண்பனாக இருந்து நட்புடன் வழிநடத்துகிறது. மேலான நன்மையைப் பெற்றுத் தருகிறது. மேலும், எவர் மூலமாக மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களும் வெல்லப்படவில்லையோ, அவரைப் பொறுத்தவரையில் அவருடைய ஆன்மா பகைவனாக மாறிப் பகைமையுடன் நடந்து கொள்கின்றது. எண்ணற்ற பிறவிகளையும் வேதனைகளையும் உண்டாக்கும் வழிக்குக் கொண்டு சென்று விடுகிறது. பெரும்பாலோர், 'நான் ஆத்மா ஆவேன்' என்றெல்லாம் சொல்லிக் கொள்கின்றனர். மேலும் 'இந்த ஆன்மாவை ஆயுதத்தால் வெட்ட முடியாது, நெருப்பால் எரிக்க இயலாது, காற்றினால் உலர்த்த முடியாது. இது நித்தியமானது, அமிருத வடிவமானது (மரணமற்றது) மாறுதல் அடையாதது, என்றும் நிலையானது, மாற்றம் இல்லாதது மற்றும் அந்த ஆன்மா என்னுள் உள்ளது' என்று கீதையில் சொல்லப்பட்டு இருப்பதை அவர்கள் மேற்கோள் காட்டுகின்றனர். ஆனால், அவர்கள் கீதையின் இந்த வரிகளான, 'ஆன்மா அதோகதிக்கும் போகிறது' என்பதில் மட்டும் ஏனோ கவனம் செலுத்துவது கிடையாது. ஆன்மாவிற்கு மீட்சியும் உண்டு. அதற்கு **கார்யம் கர்மம்** செய்யத் தகுதியுடைய வேள்வியின் சிறப்புச் செயல்முறைவிதியைக் கடைப்பிடிப்பதன் மூலமாகவே வாய்ப்பு இருப்பதாகவும் சொல்லப்பட்டு உள்ளது. இப்போது சாதகமாகச் செயல்படுகின்ற ஆன்மாவின் இலட்சணம் என்ன? என்று பார்ப்போம். –

**ஜிதாத்மன : ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித :**
**சீதோஷ்ணஸுகதுக்கேஷு ததா மானாபமானயோ: (7)**

குளிர், வெப்பம், சுகம், துக்கம் மற்றும் மானம், அவமானம் ஆகியவற்றில் கூட எவருடைய ஆழ் மனத்தில் உள்ள எண்ணங்கள் மிகவும் நல்ல முறையில் அமைதியுடன் இருக்கின்றனவோ, அத்தகைய தன்வயப்பட்ட ஆன்மாவை உடையவரிடம் பரமாத்மா எப்போதும் நிலைபெற்று இருக்கிறார். அதிலிருந்து ஒருபோதும் அவர் விலகுவதில்லை. **ஜிதாத்மா** அதாவது, எவரொருவர் மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் வென்று விட்டாரோ அவருடைய மன எண்ணங்களின் செயல்பாடுகள் அனைத்தும் மேலான அமைதியில் ஒன்று கூடிக் கலந்து விடுகின்றன. (இதுவே ஆன்மாவிற்கு விடுதலை (மீட்சி) கிடைக்கின்ற நிலையாகும்.) மேலும் கூறுகிறார்.

**ஜ்ஞானவிஜ்ஞானத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய :**
**யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஷ்மகாஞ்சன : (8)**

எவருடைய (உள் மனம்) அந்தகரணம் ஞானம், விஞ்ஞானம் ஆகியவற்றால்

திருப்தி அடைந்து விட்டதோ, எவருடைய நிலைப்பாடு அசையாததாக உறுதியுடனும், புலன்நுகர்வு எண்ணங்கள் (விகாரங்கள்) இல்லாமலும் இருக்கிறதோ, எவருடைய புலன்கள் சிறப்பான முறையில் வெல்லப்பட்டுவிட்டதோ, எவருடைய பார்வையில் மண்ணும், கல்லும், தங்கமும், ஒரே மாதிரியான மதிப்புடையதாகி விட்டதோ, அத்தகைய யோகியே **யுக்தன்** – அதாவது 'யோகம் கைகூடப் பெற்றவர்' எனப்படுகிறார். இது யோகத்தின் உச்ச வரம்பு நிலையாகும். இதையே யோகேஷ்வரர் ஐந்தாவது அத்தியாயத்தில் ஏழாவது சுலோகத்தில் இருந்து பன்னிரண்டாவது சுலோகம் வரைக்கும் விவரித்து வந்துள்ளார். 'பரமதத்துவ பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்தல் எனப்படும் சாட்சாத்காரம் மற்றும் அனுபவத்துடன் கூடிய அறிதலுக்குப் பெயரே ஞானம்' ஆகும். நாம் இஷ்ட தெய்வத்திடம் (சத்குரு) இருந்து ஒரு அங்குலம் தொலைவில் இருந்தாலும் எதுவரை அவரை அறிவதற்கான விருப்பமும் இருந்து கொண்டேதான் இருக்கிறதோ. அதுவரை நாம் அஞ்ஞானிகள் தான். அந்த வழிகாட்டுபவர் அல்லது தூண்டுணர்த்துபவர் எவ்வாறு எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறார்? அவர் எவ்வாறு வழிகாட்டுகிறார் அல்லது தூண்டுணர்த்துகிறார்? அவர் எவ்வாறு எல்லா ஆன்மாக்களையும் ஒரே சமயத்தில் ஆன்மீகப் பாதையில் வழிநடத்திச் செல்கிறார்? அவர் எவ்வாறு இறந்த காலம், எதிர்காலம், மற்றும் நிகழ்காலம் ஆகியவற்றை அறிந்து இருக்கிறார்? அந்த வழிகாட்டுபவரும் தூண்டுணர்த்துபவருமாகிய இஷ்ட தெய்வத்தின் (சத்குரு) உயர் ஆன்மீகச் செயல்பாட்டியல் பற்றிய ஞானமே 'விஞ்ஞானம்' எனப்படுகிறது. எந்நாள் முதல் இதயத்தில் இஷ்டதெய்வத்தின் (சத்குரு) அவதாரம் (வெளிப்பாடு) நிகழ்கிறதோ, அந்நாள் முதலே அவர் கட்டளைகளைப் பிறப்பிக்கத் தொடங்கி விடுகிறார். ஆனால், ஆரம்பநிலையில் உள்ள சாதகனால் இதனைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. யோகத்தின் உச்ச நிலையிலேயே யோகியானவர் இஷ்டதெய்வத்தின் (சத்குரு) அக ஆன்மீகச் செயல்பாட்டியல் முழுவதையும் பூரணமாக அறிந்து கொள்கிறார். இதுவே உயர்ஆன்மீக அறிவாகிய விஞ்ஞானம் எனப்படுகிறது. யோகம் கைகூடப் பெற்றவர் அல்லது யுத்த புருஷருடைய அந்த கரணம் (உள் மனம்) ஞானம் மற்றும் விஞ்ஞானத்தால் திருப்தியடைந்த நிலையில் உள்ளது. இதே முறையில் யோகம் கைகூடப்பெற்ற மகாபுருஷரின் நிலையை நிரூபணம் செய்யும் வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மறுபடியும் கூறுகிறார்.

**ஸுஹ்ருன்மித்ரார்யுதாஸீநமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு**
**ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்விசிஷ்யதே (9)**

இறைவனை நேரடியாக (தத்ரூபமாக) தரிசனம் செய்து முக்திநிலை பெற்றபிறகு மகாபுருஷர் சமமான பார்வையும் சமமான நடத்தையும் உடையவராகி

விடுகிறார். இதற்குக் கொஞ்சம் முன்பு வந்த சுலோகத்தில் (5/17) அவர், “அந்த பூரண ஞானம் பெற்றவர், அல்லது பண்டிதர், அறிவும் அடக்கமும் உடைய பிராம்மணர், சண்டாளன், பசு, நாய், யானை ஆகிய எல்லாவற்றின் மீதும் சமமான பார்வை உடையவராக இருக்கிறார்” என்று கூறினார். இந்த சுலோகமும் அந்தக் கூற்றையே முழுமையாக்குகிறது. அந்த இதயபூர்வமாக மற்றவர்களுக்கு உதவி புரிகின்ற நல்லிதயம் கொண்டவரும், நண்பர், பகைவர், விருப்பு, வெறுப்பு அற்றவரும், உதாசீனர், சொந்தபந்தங்கள், தர்மாத்மா மற்றும் பாவிகளிடமும் சமமான பார்வையுடையவருமான அந்த யோகம் கைகூடப்பெற்ற மகாபுருஷர் மிகவும் சிறந்தவர் ஆவார். அவர் மற்றவர்களுடைய காரியங்களின் மீது தமது பார்வையைச் செலுத்துவதில்லை. அதற்கு மாறாக, அவர்களது அகத்தில் நிலைத்திருக்கும் ஆன்மாவின் சஞ்சாரத்தில் மட்டுமே தமது பார்வையை வைத்திருக்கிறார். அவர்கள் அனைவரிடமும் அவருக்குத் தெரிகின்ற வித்தியாசம் இவ்வளவுதான். கொஞ்சம் பேர் தாழ்ந்த சாதனைப் பிரிவு நிலையில் உள்ளனர் என்றால் கொஞ்சம் பேர் அகத் தூய்மையின் சமீபத்தை எட்டிவிட்டனர். ஆனால் இந்தத் திறன் அனைவருக்குள்ளேயும் இருக்கிறது. இங்கே மீண்டும் ஒருமுறை யோகம் கைகூடப் பெற்றவரின் இலட்சணம் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

யோகம் கைகூடப்பெற்றவர் எவ்வாறு உருவாக்கப்படுகிறார்? அவர் எவ்வாறு வேள்வி செய்கிறார்? வேள்வி செய்யும் இடம் எவ்வாறு இருக்க வேண்டும்? ஆசனம் எவ்வாறு அமைந்திருக்க வேண்டும்? வேள்வியைச் செய்யும் போது எப்படி உட்கார வேண்டும்? வேள்வியைச் செய்பவர் மூலமாகப் பின்பற்றப்பட வேண்டிய நியமம், உணவுக் கட்டுப்பாடு – உடல்உழைப்பு, உறக்கம் – விழித்திருத்தல் ஆகியவற்றில் உள்ள கட்டுப்பாடுகள், மற்றும் கர்மத்தில் ஈடுபடும் போது உடல் அங்க அசைவுகள், அல்லது செயல்பாடுகள் எவ்விதம் இருக்க வேண்டும்? முதலானவை பற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அடுத்து வரப்போகின்ற ஐந்து சுலோகங்களில் தெள்ளத் தெளிவாக விளக்குகிறார். அதையறிந்து நீங்களும் அந்த வேள்வியில் ஈடுபட்டு அதனை வெற்றிகரமாக முடிக்க முடியும்.

மூன்றாவது அத்தியாயத்தில் அவர் வேள்வியின் பெயரை மட்டுமே உச்சரித்து ‘வேள்வியின் செயல்முறையே அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் ஆகும்’ என்றும் கூறினார். நான்காவது அத்தியாயத்தில் அவர் வேள்வியின் முழுஉருவத்தையும் விரிவாக எடுத்துரைத்தார். அதில், பிராணனை (உள்மூச்சு) அபானனில் (வெளிமூச்சு). ஹோமம் செய்கிறார்கள். அபானனை (வெளிமூச்சு) பிராணனில் (உள்மூச்சு) ஹோமம் செய்கிறார்கள். பிராணன் – அபானன் ஆகியவற்றின் வேகத்தைக் கட்டுப்படுத்தி, மனத்தை தடுத்து நிறுத்துதல்

முதலானவை செய்யப்படுகின்றன. இவை அனைத்தையும் சேர்த்து, வேள்வியின் தூய்மையான பொருளே ஆராதனை மற்றும் அந்த ஆராதிக்கும் தெய்வமாகிய பரமாத்மா வரைக்கும் கொண்டு போய்ச் சேர்க்கும் வல்லமை கொண்ட செயல்முறை ஆகும். இதைப்பற்றி ஐந்தாவது அத்தியாயத்திலும் சொல்லப்படுகிறது. ஆனால், அந்த வேள்வியைச் செய்வதற்கான ஆசனம், இடம், செயல்விதிமுறை, முதலானவை பற்றிய விளக்கம் மீதம் இருக்கிறது அல்லவா! இப்போது யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அதைப் பற்றியெல்லாம் விளக்கப் போகிறார்.

**யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம் ரஹஸி ஸ்த்தித :**
**ஏகாகீ யதசித்தாத்மா நிராசீரபரிக்ரஹ : (10)**

சித்தத்தை வெல்லும் முயற்சியில் ஈடுபட்டுள்ள யோகி மனம், புலன்கள், மற்றும் உடல் ஆகியவற்றை வசப்படுத்திக் கொண்டு, புலனின்ப எண்ணங்களைத் (வாசனை) தவிர்த்து, புலனின்ப விஷயங்களைப் பற்றி மேலும் சிந்தித்து அதன் மூலமாகப் புதிய சம்ஸ்காரங்களை (வினைகளை) உருவாக்கிக் கொண்டு அவற்றை எல்லாம் சேகரித்து வைத்துக் கொண்டிராமல் (அபரிக்ரஹம்) ஏகாந்தமான இடத்தைத் தேர்ந்தெடுத்து, தன்னந்தனியாக அமர்ந்து சித்தத்தை (ஆன்மாவைப் பெற்றுத் தரவல்ல) வேள்வியின் செயல்முறையில் ஈடுபடுத்திய வண்ணம் இருக்க வேண்டும். அதற்கான இடம் எப்படி இருக்க வேண்டும்? ஆசனம் எப்படி இருக்க வேண்டும்?

**சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸனமாத்மன :**
**நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜினகுஷோத்தரம் (11)**

சுத்தமான இடத்தில் தர்ப்பையினால் ஆன பாய், மான்தோல், துணி அல்லது அதையொத்த (பட்டுத்துணி, கம்பளி, பலகை ஆசனம் போன்றவை) ஏதாவது ஒன்றை விரித்து, அதிக உயரம் இல்லாமலும், மிகவும் தாழ்வாக அமையாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஆசனத்தைத் தயார் செய்து கொள்ளவும். ‘சுத்தமான இடம்’ என்பதற்கு, நன்றாகப் பெருக்கித் துடைத்துச் சுத்தம் செய்யப்பட்ட இடம் என்று பொருள். தரையில் ஏதாவது விரிப்பு இருப்பது அவசியம். அது மான்தோலாகவோ, பாயாகவோ ஏதேனும் ஒரு சுத்தமான துணியாகவோ, பலகையாகவோ எது நம்மிடம் உள்ளதோ, அதில் ஏதேனும் ஒன்றை விரித்து வைத்துக் கொள்ள வேண்டும். ஆசனம் அங்குமிங்கும் ஆடுவதாகவோ அசைவதாகவோ அமைந்து இருக்கக் கூடாது. தரையிலிருந்து மிகுந்த உயரத்திலோ, அல்லது மிகவும் தாழ்ந்தோ இருக்கலாகாது. பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் ஏறத்தாழ ஐந்து அங்குல உயரமுள்ள ஆசனத்தில் அமர்வார். ஒருமுறை பக்தர்கள் ஏறத்தாழ ஒரு அடி உயரமுள்ள,

பளிங்கினால் செய்யப்பட்ட ஆசனம் ஒன்றை வாங்கி வந்து விட்டனர். குருதேவ பகவான் அவர்கள், ஒருநாள் மட்டுமே அதில் அமர்ந்தார். அவர் பிறகு, “என்னால் முடியாது. இது மிகவும் உயரமாகி விட்டது. சாது உயரமான ஆசனத்தில் உட்காரக் கூடாது. அது கர்வத்தையே உண்டாக்கும். மிகவும் தாழ்வான ஆசனத்திலும் உட்காரக் கூடாது. அது தாழ்வு மனப்பான்மையை வளர்த்து விடும். மேலும் தன்மேல் வெறுப்பு ஏற்பட்டு விடும்” என்று கூறினார். அவ்வளவுதான், அந்த ஆசனம் அங்கிருந்து உடனே அகற்றப்பட்டுக் காட்டில் இருந்த ஒரு தோட்டத்தில் கொண்டு போய் வைக்கப்பட்டது. அந்த இடத்திற்கு மஹராஜ் அவர்களும் போவது இல்லை, மற்றவர்களும் போவதில்லை. இதுவே அந்த மஹாபுருஷரின் செயல்முறை போதனையாகும். இந்த வகையில் சாதகர்களுக்கு மிகவும் உயரமான ஆசனம் இருக்கக் கூடாது. இல்லையென்றால், இறைவழிபாடு, ஆன்மீகச் சிந்தனை வருவதற்கு முன்பே, ஆணவம் அதில் ஏறி உட்கார்ந்து கொள்ளும். இதற்குப் பிறகு

**தத்ரைகாக்ரம் மன : க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய :**
**உபவிஷ்யாஸனே யுஞ்ஜ்யாத்யோகமாத்மவிசுத்தயே (12)**

அந்த ஆசனத்தில் அமர்ந்து (உட்கார்ந்து கொண்டுதான் தியானம் செய்ய வேண்டும் என்பது விதிமுறை) மனத்தை ஒருமுகப்படுத்தி, சித்தம், மற்றும் புலன்களின் செயல்களைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்து (உள்மனத்தின்) அந்தகரணத்தின் தூய்மைக்காக யோகப் பயிற்சியில் ஈடுபட வேண்டும். இனி, உட்காரும் முறை பற்றிக் கூறுகிறார்.

**ஸமம் காயசிரோக்ரீவம் தாரயன்னசலம் ஸ்திர :**
**ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசஸ்சானவலோகயன் (13)**

உடல், கழுத்து, மற்றும் தலை ஆகியவற்றை நேராக, அசையாமல் உறுதியாக வைத்துக் கொள்ள வேண்டும். (அதாவது நேராக அமைந்திருக்கும் ஒரு பலகையை நிறுத்தி வைத்தால் எப்படி இருக்குமோ, அது போன்று அமர்ந்து கொள்ள வேண்டும்) இம்முறையில் நேராகவும் உறுதியாகவும் அமர்ந்து கொண்ட பிறகு, மூக்கின் முன்பாகத்தில் பார்வை விழுமாறு பார்த்துக் கொண்டு, (மூக்கின் நுனியைப் பார்க்கும்படிக்குக் கட்டளை இல்லை. நேரடியாகவும் நிமிர்ந்தும் உட்கார்ந்த பிறகு, மூக்கின் முன்பு, சமீபமாக, பார்வை விழுகின்ற இடத்தில் பார்வையை நிலைநிறுத்த வேண்டும். அதற்கு இடப்பக்கமாகவோ, வலப்பக்கமாகவோ பார்க்கும் எண்ணம் இருக்கக் கூடாது). வேறு எந்தத் திசையிலும் பார்வையைச் செலுத்தாமல் உறுதியாக அமர்ந்து கொள்ள வேண்டும்.

**ப்ரசாந்தாத்மா விகதபீர்ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்த்தித :
மன : ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர : (14)**

பிரம்மச்சரிய விரதத்தில் நிலையாக நின்று (தற்காலத்தில் பெரும்பாலோர் பிறப்புறுப்புகளைக் கட்டுப்படுத்துவதுதான் பிரம்மச்சரியம் என்கின்றனர். ஆனால், மகாபுருஷர்களின் அனுபூதி என்னவென்றால், மனத்தால் உலகியல் விஷயங்களைச் சிந்தித்துக் கொண்டு, கண்களால் அத்தகைய காட்சிகளைப் பார்த்துக் கொண்டு, சருமத்தால் தொட்டுணர்ந்து கொண்டு, காதுகளால் புலனின்ப விஷயங்களைத் தூண்டுகின்ற வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு, பிறப்புறுப்புகளைக் கட்டுப்படுத்துவது என்பது இயலாத காரியம். பிரம்மச்சாரி என்பதற்கு உண்மையான பொருள் என்னவென்றால் **ப்ரஹ்ம ஆசரதி ஸ ப்ரஹ்மசாரி** – பிரம்மத்தைப் பின்பற்றி நடத்தல், அதாவது, நியமிக்கப்பட்டு உள்ள கர்மத்தைக் கடைப்பிடித்தல், வேள்வியின் செயல்முறையைக் கடைப்பிடித்தல் என்று பொருள். அவற்றைச் செய்பவரே **யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம்** என்றென்றும் நிலையான, மாறாத சனாதன பிரம்மத்தில் நுழைவு பெற்று விடுகிறார். இதைச் செய்யும் போது, **ஸ்பர்சான் க்ருத்வா பஹிர்பாஹ்யான்** – வெளி உலகியல் விஷயங்களைப் பற்றிய தொடுவுணர்வு, மனம், மற்றும் எல்லாப் புலன்களின் தொடுவுணர்வு, ஆகியவற்றை வெளியிலேயே தியாகம் செய்துவிட்டு, சித்தத்தை (மனத்தை) பிரம்ம சிந்தனையில், உள்மூச்சு – வெளிமூச்சில், தியானத்தில் ஈடுபடுத்த வேண்டும். மனமானது முழுமையாக பிரம்மத்தில் ஈடுபட்டிருக்கும்போது வெளிஉலக விஷயங்களைப் பற்றிய சிந்தனையை யார் செய்வது? ஒருவேளை வெளிஉலக விஷயங்களைப் பற்றிய சிந்தனை வருகிறது என்றால் மனமானது பிரம்ம சிந்தனையில் எங்கே ஈடுபட்டிருக்கிறது? புலன்நுகர்வு ஆசைகள் (விகாரங்கள்) உடலில் அன்று, மாறாக, மனத்தின் எண்ண அலைகளில் இருக்கின்றன. மனமானது பிரம்மத்தில் முழுமையாக ஈடுபட ஆரம்பித்து விட்டால், பிறப்புறுப்புகள் மட்டுமல்ல, அனைத்துப் புலன்களுமே கட்டுப்பாட்டிற்குள் இயல்பாகவே வந்து விடுகின்றன. எனவே பிரம்மத்தில் முழுமையாக ஈடுபடுவதில் நிலையாக இருந்து) பயம் இல்லாமல், நல்ல முறையில் அமைதியான உள்மனதுடன் (அந்தகரணம்) மனத்தைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொண்டு, என்னில் மட்டுமே ஈடுபட்டுக் கொண்டு இருக்கும் சித்தமுடையவனாக, என்னையே முழுவதுமாகச் சார்ந்து உறுதியாக நின்று கொள். அவ்வாறு செய்வதால் ஏற்படும் இறுதிவிளைவு என்னவாக இருக்க முடியும்?

**யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ நியதமானஸ :
சாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்த்தாமதிகச்சதி (15)**

இந்த முறையில், தன்னைத்தானே எப்பொழுதும் நிரந்தரமாக ஒரே ஆன்ம

சிந்தனையில் ஈடுபடுத்திக் கொண்டிருக்கும், மனக் கட்டுப்பாடு உடைய யோகியானவன் என்னில் நிலைகொண்டுள்ள சாதனையின் உச்ச நிலையில் கிடைக்கின்ற அமைதியை அடையப் பெற்று விடுகிறான். எனவேதான் உங்களை நீங்களே நிரந்தரமாகக் கர்மத்தில் ஈடுபடுத்துங்கள். இவ்விடத்தில் இந்தக் கேள்வி முழுமையாக நிறைவு பெறுகிறது. அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில் அவர், பரமானந்தத்தை அளிக்கின்ற அமைதியைப் பெறுவதற்காக உடல்கட்டுப்பாடு, உணவுக் கட்டுப்பாடு, மிதமான உடல் உழைப்பு ஆகியவை அனைத்தும் அவசியம்' என்று கூறுகிறார். —

**நாத்யஷ்னஸ்து யோகோஅஸ்தி ந சைகாந்தமனஷ்னத:**
**ந சாத்தி ஸ்வப்னஷீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன (16)**

அர்ஜுனா! இந்த யோகமானது அதிகமாக உண்பவர்களுக்கோ, அல்லது உண்ணாமல் இருப்பவர்களுக்கோ கைகூடி வருவதில்லை. அதே போன்று அதிகமாக உறங்குபவர்களுக்கோ அல்லது உறங்காது இருப்பவர்களுக்கோ கைகூடி வருவதில்லை. பின்பு எவருக்கு இது கைகூடி வருகிறது?

**யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு**
**யுக்தஸ்வப்னாவபோதஸ்ய யோகோ பவதி துக்கஹா : (17)**

அர்ஜுனா! துக்கங்கள் அனைத்தையும் அழித்து விடும் வல்லமை கொண்ட இந்த யோகம், தகுந்த உணவு — உடல் உழைப்பு, கர்மங்களுக்குத் தகுந்த செயல்பாடு, மற்றும் உரிய முறையில் உறக்கம் மற்றும் விழிப்புடன் இருப்பவனுக்கே கைகூடுகிறது. அதிகமாக உணவு உட்கொள்வதால் சோம்பேறித்தனம், உறக்கம், கவனக்குறைவு ஆகியவை சூழ்ந்து கொள்ளும். பிறகு சாதனை செய்ய முடியாது. உணவு உட்கொள்வதை அறவே விட்டுவிட ஆரம்பித்தால் புலன்கள் பலவீனமடைந்து விடுகின்றன. பிறகு, ஆடாமல், அசையாமல், நேராக அமர்வதற்குக்கூட வலிமை இல்லாமல் போய்விடும். பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள், 'தினசரி உணவிலிருந்து ஒன்றரை அல்லது இரண்டு ரொட்டிகள் குறைத்துச் சாப்பிட்டுப் பழக வேண்டும்' என்று கூறுவார். உடல்உழைப்பு அதாவது சாதனைக்குச் சாதகமாக இருக்குமளவு கொஞ்சதூரம் நடந்து போய் வருவது, கொஞ்சம் உடலுக்கு உழைப்புத் தருவதும் அவசியமாகும். அதற்கேற்றவாறு ஏதேனும் ஒரு காரியத்தைத் தேடிப் பார்த்துச் செய்து கொள்ள வேண்டும். அப்படி இல்லையென்றால், இரத்த ஓட்டம் குறைந்து, ஏதேனும் வியாதிகள் வந்து சேர்ந்து விடும். ஆயுளானது உறக்கம், விழிப்பு, உணவு மற்றும் பயிற்சியின் மூலமாகக் குறையவோ நீடிக்கவோ செய்கிறது. பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள், 'யோகி நான்கு மணிநேரம்

உறங்க வேண்டும். மேலும் அனவரதமும் ஆன்ம சிந்தனையில் ஈடுபட்டுக்கொண்டிருக்கவேண்டும் மற்றும் பிடிவாதமாக உறங்காமல் இருப்பவன் சீக்கிரமே பைத்தியமாகி விடுவான்' என்று கூறுவார். கர்மங்களுக்கு ஏற்ற வகையிலான செயல்பாடுகள் இருக்க வேண்டும். அதாவது, நியமிக்கப்பட்டு உள்ள கர்மமாகிய ஆராதனைக்காகவே நிரந்தரமாக முயற்சி செய்பவராக இருக்க வேண்டும். வெளியுலக விஷயங்களைப் பற்றிச் சிந்திக்காமல் எப்போதும் இறை ஆராதனையிலேயே ஈடுபடுபவனுக்குத்தான் இந்த யோகம் கைகூடுகிறது. அத்துடன் சேர்த்து –

**யதா விநியதம் சித்தமாத்மன்யேவாவதிஷ்ட்டதே**
**நிஸ்ப்ருஹ : ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா (18)**

இந்த முறையில் யோகத்தைப் பயிற்சி செய்ததன் மூலம் மிகவும் சிறப்பான முறையில் வசப்படுத்தப்பட்ட சித்தமானது எந்தக் காலத்தில் பரமாத்மாவில் நல்லமுறையில் நிலைபெற்று விடுகிறதோ, அவரிலேயே ஒன்றிக் கலந்து விடுகிறதோ, அந்தக் காலத்தில், எல்லா ஆசைகளும் நீங்கப் பெற்றவரையே 'யோக யுக்தர்' அதாவது 'யோகம் கைகூடப் பெற்றவர்' என்று அழைக்கிறோம். இப்பொழுது மிகவும் சிறப்பான முறையில் வெற்றி கொள்ளப்பட்ட சித்தத்தின் இலட்சணம் என்ன?

**யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா:**
**யோகினோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மன : (19)**

எந்த முறையில் காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட விளக்கின் சுடரானது ஆடாமல், அசையாமல் இருக்கிறதோ, அதாவது, அதன் சுடரானது நேராக மேல்நோக்கிச் செல்கிறது. அதில் கொஞ்சம்கூட நடுக்கம் என்பதே இருப்பதில்லை. இந்த எடுத்துக்காட்டே பரமாத்மாவை தியானம் செய்வதில் ஈடுபட்டிருக்கும் யோகியின் வெற்றி கொள்ளப்பட்ட சித்தத்திற்கும் கூறப்படுகிறது. விளக்குச் சுடர் (தீபம்) வெறும் உதாரணம் மட்டுமே ஆகும். இந்நாட்களில் எண்ணெய் விளக்கின் உபயோகம் குறைந்து போய்விட்டது. ஒருவேளை காற்று வேகமாக அடிக்காவிட்டால், ஊதுபத்தியைக் கொளுத்திய உடனே, புகையானது நேராக எழும்புகிறது. இது யோகியின் வெற்றி கொள்ளப்பட்ட சித்தத்திற்கான உதாரணம் மட்டுமே ஆகும். இப்பொழுது சித்தமானது வெற்றி கொள்ளப்பட்டு விட்டது, கட்டுப்பாட்டிற்குள் வந்து விட்டது என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் சித்தம் இன்னும் இருக்கவே செய்கிறது. எப்பொழுது அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட சித்தமும் இறைவனில் ஒன்றி இரண்டறக் கலந்து மறைந்து விடுகிறதோ, அப்பொழுது எந்தமாதிரியான தெய்வீக மகிமை (விபூதி) கிடைக்கிறது? அதுபற்றிப் பார்ப்போம் –

**யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா**
**யத்ர சைவாத்மனாத்மானம் பச்யன்னாத்மனி துஷ்யதி (20)**

எந்த நிலையில் யோகப் பயிற்சியின் மூலம் கட்டுப்படுத்தப்பட்ட சித்தமும் இறைவனில் இரண்டறக் கலந்து விடுகிறதோ, மறைந்து விடுகிறதோ அந்த நிலையில், **ஆத்மனா** – தன்னுடைய ஆன்மாவின் மூலம் **ஆத்மானம்** – பரமாத்மாவை தரிசித்துக் கொண்டு **ஆத்மனிஏவ** தன்னுடைய ஆன்மாவிலேயே (திருப்தியுடன்) மகிழ்ச்சியுடன் இருக்கிறான். அவன் தரிசிப்பது என்னவோ பரமாத்மாவைத்தான்; ஆனால் அவனுக்கு மகிழ்ச்சி (திருப்தி) தன்னுடைய ஆன்மாவிலேயே கிடைக்கிறது. ஏனெனில், இறைவனை நேரடியாக தரிசனம் செய்து, முக்தி நிலை பெறும் காலத்தில்தான் பரமாத்மாவின் நேரடி தரிசனம் எனப்படும் சாட்சாத்காரம் கிடைக்கிறது. ஆனால், அடுத்த கணமே அவன் தன்னுடைய ஆன்மாவிலேயே அந்த பரமாத்மாவின் அனைத்து நிலையான தெய்வீக மகிமைகளும் நிறைக்கப்பட்டு இருப்பதைக் காண்கிறான். பிரம்மம் பிறப்பற்றது, இறப்பற்றது, என்றும்நிலையானது, மாறாதது, புலன் உணர்வுக்கு அப்பாற்பட்டது, மற்றும் அமிர்த வடிவமானது (மரணமற்றது) என்றால் இங்கே ஆன்மாவும் பிறப்பற்றதாக, இறப்பற்றதாக, என்றும் நிலையானதாக, மாறாததாக, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்டதாக மற்றும் அமிர்த வடிவமாக (மரணம் அற்றது) இருக்கிறது. இருக்கலாம். ஆனால் சிந்தனைக்கு எல்லாம் அப்பாற்ப்பட்டதாக இருக்கிறது. எதுவரை சித்தமும், சித்தத்தின் அலைகளும் இருக்கின்றனவோ, அதுவரைக்கும் அது உங்களுடைய (உபயோகத்திற்கு) அனுபவத்திற்காக இல்லை. சித்தம் கட்டுப்படுத்தப்பட்டு அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட சித்தமும் மறைகின்ற காலத்தில்தான் பரமாத்மாவின் நேரடி தரிசனம் (சாட்சாத்காரம்) கிடைக்கிறது. மேலும், அவ்வாறு தரிசனம் கிடைத்த பிறகு, மறுகணமே அந்த பரமாத்மாவின் அனைத்து தெய்வீக மகிமைகளுடன் அலங்கரிக்கப்பட்டுள்ள தன்னுடைய ஆத்மாவைப் பெற்று விடுகிறான். எனவேதான், அவன் தன்னுடைய ஆத்மாவிலேயே மகிழ்ச்சியுடன் இருக்கிறான். இதுவே அவனுடைய உண்மை வடிவம் எனப்படுகிறது. இதுவே உச்சக்கட்ட நிலை ஆகும். இதனை நிறைவு செய்ய வரும் அடுத்த சுலோகத்தைக் காண்போம்.

**ஸுகமாத்யந்திகம் யத்தத்புத்திக்ராஹ்யமதீந்த்ரியம்**
**வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதஸ்சலதி தத்வத : (21)**

ஆகவே, புலன்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட, முழுமையாகத் தூய்மையடைந்து விட்ட, சூட்சுமமான புத்தியின் மூலமாகக் கிரகிக்கப்படுவதற்குத் தகுதி படைத்த, எல்லையில்லாத ஆனந்தம் எனப்படுவதை, எந்த நிலையில் இருந்து அனுபவத்தில் பெறுகிறாரோ, மேலும் அந்த நிலையில் உறுதியாக

நிலைபெற்று இருக்கும் யோகி பகவானின் வடிவத்தை தத்துவமாக அறிந்து விட்ட பிறகு அதனின்று விலகிப் போவதில்லை. எப்போதும் அதிலேயே வேரூன்றி நிலைத்து விடுகிறார். ஆகவே –

**யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத :**
**யஸ்மின்ஸ்த்திதோ ந துக்கேன குருணாபி விசால்யதே (22)**

'பரமேஷ்வரரை' அடைதல் என்கின்ற அந்த இலாபத்தை, அதாவது இறுதியில் கிடைக்கும் உச்சக்கட்ட அமைதியைப் பெற்றுவிட்ட பிறகு, அதற்குமேல் அதிகமாக வேறு எந்த இலாபத்தையும் விரும்பாத, மேலும், பகவானை அடைதல் என்கின்ற அந்த உயர் ஆன்மீக நிலையில் உறுதியாக நிலைத்து விட்ட யோகி மிகப் பெரிய துக்கத்தினால் கூடத் துவண்டு போக மாட்டான். துக்கத்தை அவன் உணர்வது கூட இல்லை. ஏனெனில், அவற்றையெல்லாம் உணர்கின்ற (மனமே) சித்தமே மறைந்து போய்விட்டது. இது போன்று –

**தம் வித்யாத்துக்கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம்**
**ஸ நிஸ்சயேன யோக்தவ்யோ யோகோநிர்விண்ணசேதஸா (23)**

இந்த உலகத்தின் சேர்க்கை, மற்றும் பிரிவு ஆகியவற்றில் இருந்து முற்றிலுமாக விலகி இருப்பதன் பெயரே யோகம் எனப்படும். எது அளவு கடந்த சுகமோ, அத்துடன் இணைவதற்குப் பெயரே யோகம் ஆகும். எவரை, பரம தத்துவ பரமாத்மா என்று கூறுகிறோமோ, அவரை அடைவதற்குப் பெயரே யோகம் என்கிறோம். அந்த யோகத்தைக் கொஞ்சம் கூடச் சோர்வடைந்து துவண்டு போகாமல் சித்தத்தால் நிச்சயப்பூர்வமாக உறுதியெடுத்துக் கொண்டு செய்வதே கடமை ஆகும். இதில் தைரியத்துடன் ஈடுபடுபவனே இந்த யோகத்தில் வெற்றி பெறுகிறான்.

**ஸங்கல்பப்ரபவான்காமான்ஸ்த்யக்த்வா ஸர்வான ஷேஷத :**
**மனஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமன்தத : (24)**

ஆகவே ஒவ்வொருவரும் செய்ய வேண்டியது என்னவென்றால் சங்கல்பங்களில் இருந்து தோன்றும் எல்லா ஆசைகளையும் அவற்றின் மீது உண்டாகும் மோகம் மற்றும் பற்றுதல் ஆகிய அனைத்தையும் முழுமையாகத் துறந்து விட்டு, மனத்தின் மூலமாகப் புலன்களின் சமுதாயத்தை எல்லாப் பக்கங்களில் இருந்தும் நல்ல முறையில் வசப்படுத்திக் கொண்டே

**ஷனை : ஷனை ருபரமேத்புத்த்யா த்ருதிக்ருஹீதயா**
**ஆத்ம ஸம்ஸ்த்தம் மன : க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் (25)**

படிப்படியாக யோகத்தைப் பயின்று கொண்டே சென்று உயர்நிலையை அடைந்து விட வேண்டும். சித்தம் முழுவதுமாக அழிந்து, வரிசைக் கிரமமாக இறைவனில் ஒன்று கலந்து விட்டதற்குப் பிறகு, அந்த தைரியம் அடைந்த புத்தியின் மூலமாக மனத்தைப் பரமாத்மாவிலேயே நிலைநிறுத்தி, வேறு எதைப்பற்றியும் சிந்தனை செய்யக் கூடாது. நிரந்தரமாக இதைப் பயிற்சி செய்தே அடைய முடியும் என்பது விதிமுறை. ஆனால், ஆரம்பத்தில் மனம் இதில் ஈடுபாடு காட்டுவதில்லை. இதுபற்றி யோகேஷ்வரர் கூறுகிறார். –

**யதோ யதோ நிஸ்சரதி மனஸ்சஞ்சலமஸ்த்திரம்**
**ததஸ்ததோ நியம்யைததாத்மன்யேவ வஷம் நயேத் (26)**

இந்த, ஒரு நிலையில் அடங்காமல் சஞ்சலத்துடன் செயல்படும் இந்த மனமானது, எந்தெந்த காரணங்களால் உலகியல் பொருட்களின் மீது நாட்டம் கொண்டு அலைபாய்கிறதோ, அவற்றில் இருந்தெல்லாம் அதனை மீட்டுக் கொண்டு வந்து மறுபடியும் மறுபடியும் அந்தராத்மாவிலேயே கட்டுப்படுத்தி வைக்கவும். பெரும்பாலோர், 'மனம் எங்கெல்லாம் செல்கிறதோ, செல்லட்டும். இயற்கை அல்லது படைப்பிற்குத்தானே செல்லும். மேலும், அந்த இயற்கை அல்லது படைப்பும் பிரம்மத்தில் தானே அடக்கம். எனவே இயற்கையில் சுற்றித் திரிவதும் பிரம்மத்தை விட்டு வெளியில் இல்லையே என்கின்றனர். ஆனால், ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் இது மிகவும் தவறானது. கீதையில் இது போன்ற கருத்துகளுக்குக் கொஞ்சமும் இடமில்லை. ஸ்ரீகிருஷ்ணர் சொல்வது என்னவென்றால், மனம் எங்கெல்லாம் போகின்றதோ, எந்தெந்த வழிகளில் எல்லாம் போகின்றதோ, அந்தந்த வழிகளில் இருந்து எல்லாம் தடுத்து அதனைப் பரமாத்மாவிலேயே ஈடுபடுத்த வேண்டும். மனத்தைக் கட்டுப்படுத்துவது என்பது முடிகின்ற காரியம்தான் என்கிறார். மனத்தைக் கட்டுப்படுத்துவதால் ஏற்படும் இறுதி விளைவு என்ன? –

**ப்ரசாந்தமனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம்**
**உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் (27)**

எவருடைய மனமானது முழுமையான வடிவில் அமைதியடைந்து உள்ளதோ, எவர் பாவங்கள் நீங்கப் பெற்றவரோ, எவருடைய ரஜோ குணமானது அமைதியுற்று விட்டதோ, அத்தகைய பிரம்மத்துடன் ஒன்றிணைந்த உணர்வைப் பெற்றுள்ள யோகிக்கு எல்லாவிதத்திலும் மேன்மையான ஆனந்தம் கிடைக்கிறது. அதைவிட மேலானது வேறொன்றும் இல்லை. இதைப் பற்றி மேலும் வலியுறுத்தியவாறு –

**யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ :**
**ஸுகேன ப்ரஹ்மஸம்ஸ்பர்ஷமத்யந்தம் ஸுகமச்னுதே (28)**

பாவங்கள் நீங்கப்பெற்ற யோகி இம்முறையில் ஆன்மாவை நிரந்தரமாக பரமாத்மாவில் ஈடுபடுத்திக் கொண்டே, நல்ல முறையில் பரப்பிரம்ம பரமாத்மாவை அடைவதால் கிடைக்கும் அளவுகடந்த ஆனந்தத்தை அனுபூதியில் உணர்கிறான். அவன் **ப்ரஹ்ம ஸம்ஸ்பர்ஷ** – அதாவது, பிரம்மத்தைத் தொட்டுணர்ந்து, மேலும் அதில் நுழைவு பெறுவதுடன் சேர்த்து அளவில்லா ஆனந்தத்தை அனுபவிக்கிறான். எனவே இறைவழிபாடு இன்றியமையாத ஒன்றாகும். இதுபற்றி மேலும் கூறுகிறார். –

**ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி**
**ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: (29)**

யோகத்தின் இறுதி விளைவினை அடையப் பெற்ற ஆன்மாவை உடையவரும், எல்லோரையும் சமமான உணர்வுடன் பார்க்கின்ற யோகி, ஆன்மாவே மனிதர் உட்பட, எல்லா ஜீவராசிகளிலும் நிறைந்து இருப்பதைக் காண்கிறார். மேலும், எல்லா உயிரினங்களுமே ஆன்மாவிலிருந்தே பெருக்கெடுப்பதைக் காண்கிறார். இம்முறையில் காண்பதால் என்ன இலாபம்?

**யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பச்யதி**
**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி (30)**

எவரொருவர் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிலுமே பரமாத்மாவாகிய என்னைக் காண்கிறாரோ, எங்கும் விரிந்தும் பரந்தும் இருப்பதைக் காண்கிறாரோ மேலும் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களையும் பரமாத்மாவாகிய எனக்குள் அடங்கியவைகளாகக் காண்கிறாரோ, அத்தகையவருக்காக நான் ஒருபோதும் புலப்படாதவனாக இருப்பதில்லை. அதேபோன்று, எனக்காக அவரும் ஒருபோதும் புலப்படாமல் போவதில்லை. இதுவே, அகத்தில் இருந்து வழிநடத்துபவரும் தூண்டுபவருமாகிய இறைவனை நேருக்கு நேராக தரிசனம் செய்கின்ற நிலையாகும். இதுவே நட்புணர்வு (சக்ய பாவம்) ஆகும்; **ஸாமீப்ய முக்தி** நெருங்கியமுக்தி எனப்படுவதும் இதுதான்.

**ஸர்வபூதஸ்த்திதம் யோ மாம் பஜத் யேகத்வ மாஸ்த்தித :**
**ஸர்வதா வர்த்தமானோபி ஸ யோகீ மயி வர்த்ததே (31)**

எவரொருவர் பன்மைகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட, மேலே கூறப்பட்டுள்ள ஒருமைஉணர்வுடன் கூடியவராக பரமாத்மாவாகிய என்னை வழிபடுகிறாரோ,

அந்த யோகி, எல்லாவிதமான காரியங்களில் ஈடுபட்டு இருந்த போதிலும்கூட என்னிலேயே இயங்கிக் கொண்டிருக்கிறார். ஏனெனில், என்னை விடுத்து, அவருக்கென்று வேறொன்றும் எஞ்சியிருக்கவில்லை. அவருக்கு என்று எல்லாமே அழிந்து போய்விட்டது. எனவேதான், அவர் இனிமேல் எழுந்தாலும், உட்கார்ந்தாலும், எதைச் செய்தாலும் என்னுடைய சங்கல்பத்தாலேயே செய்கிறார். –

**ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பஷ்யதி யோர்ஜுன**
**ஸுகம் வா யதி வா துக்கம் ஸ யோகீ பரமோ மத : (32)**

அர்ஜுனா! எந்த யோகி தம்மைப் போன்றே மனிதர் உட்பட எல்லா உயிரினங்களையும் சமமாகப் பார்க்கிறாரோ, அனைத்திலும் சுகத்தையும் துக்கத்தையும் சமமாகப் பார்க்கிறாரோ, அந்த யோகியே (எவருடைய வேற்றுமையுணர்வு அழிந்து போய்விட்டதோ) மிகவும் உயர்ந்தவராகக் கருதப்படுகிறார். கேள்வி நிறைவடைகிறது. இதுபற்றி அர்ஜுனன் கேள்வி எழுப்பினான். –

**அர்ஜுன உவாச்ச**
**யோயம் யோகஸ்த்வயா ப்ரோக்த : ஸாம்யேன மதுஸூதன**
**ஏதஸ்யாஹம் ந பஷ்யாமி சஞ்சலத்வாத் ஸ்த்திதீம் ஸ்த்திராம் (33)**

மதுசூதனா! இந்த யோகத்தில் 'சமத்துவ உணர்வுப் பார்வை' கிடைக்கிறது என்றுதான் நீங்கள் முன்பிருந்தே கூறிவருகிறீர்கள். ஆனால், மனத்தின் அலைபாயும் தன்மையின் காரணமாகப் பெரும்பாலான நேரம்வரை இறைநிலையில் நிலைபெற்று நிற்கத்தக்கவனாக நான் என்னைக் காண முடியவில்லை.

**சஞ்சலம் ஹி மன : க்ருஷ்ண ப்ரமாதி பலவத்த்ருடம்**
**தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் (34)**

கிருஷ்ணா! இந்த மனம் மிகவும் அலைபாயும் தன்மை உடையது, துன்பம் விளைவிக்கும் இயல்பு கொண்டது. (ப்ரமதன் அதாவது மற்றவர்களைத் துன்பத்திற்கு உள்ளாக்கும் இயல்பு உடையது என்று அர்த்தம்) பிடிவாதம் உடையது மற்றும் பலம் பொருந்தியதும் ஆகும். எனவேதான், இதைக் கட்டுப்படுத்துவது என்பது, காற்றை வசப்படுத்துவதைப் போலவே மிகவும் கடினமானது என்றே கருதுகிறேன். சூறைக் காற்றை நிறுத்துவதும் மனத்தைக் கட்டுப்படுத்துவதும் இரண்டும் ஒன்றுதான். இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். –

**ஸ்ரீபகவானுவாச்ச**
**அஸம்ஷயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம்**
**அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே (35)**

மாபெரும் காரியத்தைச் செய்யும் முயற்சியுடையவனே! அதாவது பெருந் தோள்களை உடையவனே அர்ஜுனா! மனம் அலைபாயும் தன்மை உடையது, கடும் முயற்சிக்குப் பிறகே கட்டுப்பாட்டிற்குள் வருவது என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால், குந்தியின் மகனே! இந்த மனம் இடைவிடாத பயிற்சி மற்றும் வைராக்கியத்தின் மூலமாக வசப்படுகிறது. எங்கே சித்தத்தை நிலைநிறுத்த வேண்டுமோ அங்கேயே அதனை உறுதியாக நிலைபெறச் செய்வதற்காகத் திரும்பத் திரும்பத் செய்யும் முயற்சிக்குப் பெயரே, இடைவிடாத பயிற்சி எனப்படும். மேலும், காண்கின்ற, கேட்கின்ற உலகியல் விஷயங்களில் உள்ள விருப்பம் அதாவது பற்றுதலைத் துறப்பதே வைராக்கியம் எனப்படும். ஸ்ரீகிருஷ்ணர், மனத்தைக் கட்டுப்படுத்துவது கடினம்தான். ஆனால் இடைவிடாத பயிற்சி மற்றும் வைராக்கியம் மூலமாக அந்த மனத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்கிறார்.

**அஸம்யதாத்மனா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி :**
**வச்யாத்மனா து யததா சக்யோவாப்து முபாயத : (36)**

அர்ஜுனா! மனத்தை வசப்படுத்த முடியாதவனுக்கு யோகம் கைகூடுதல் என்பது மிகவும் கடினமான காரியம்தான். ஆனால் சுயக்கட்டுப்பாடு உள்ள மனமுடைய, மற்றும் முயற்சியுடையவனுக்கோ யோகம் மிகவும் சுலபமாகவும் இயல்பாகவும் கைகூடுகிறது என்பதே என்னுடைய சொந்தக் கருத்தாகும். நீ எவ்வளவு கடினம் என்று நினைத்துக் கொண்டு உட்கார்ந்து இருக்கிறாயோ, உண்மையில் அது அவ்வளவு கடினமானது அன்று. எனவே இதனை மிகவும் கடினமானதென்று நினைத்துப் பயிற்சி செய்யாமல் மட்டும் விட்டு விடாதே. முயற்சியுடையவனாக இதில் தொடர்ந்து ஈடுபட்டு இந்த யோகத்தை அடைந்து விடு. ஏனெனில், மனத்தைக் கட்டுப்படுத்திய பிறகுதான் யோகமே சாத்தியமாகிறது. இதுபற்றி அர்ஜுனன் கேள்வி கேட்டான்.

**அர்ஜுன உவாச :**
**அயதி : ச்ரத்தயோபேதோ யோகாச்சலிதமானஸ :**
**அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி (37)**

யோகத்தைச் செய்து கொண்டு இருக்கும் போது, ஒருவேளை, எவருடைய மனமாவது அதிலிருந்து விலகிப் போய்விட்டால் ஆனால் அதேசமயம் யோகத்தைக் கடைபிடிப்பதில் இன்னமும் சிரத்தை இருக்கிறது எனும்போது அத்தகையவர் பகவத் சித்தியை (இறைநிலை) அடையாமல் எந்த கதியை அடைகிறார்?

**கச்சின்னோபயவிப்ரஷ்ட்டஸ்சின்னாப்ப்ரமிவநஷ்யதி**
**அப்ரதிஷ்ட்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண : பதி (38)**

பெருந்தோள்களை உடையவரே ஸ்ரீகிருஷ்ணா! 'பகவானை அடைதல்' என்ற மார்க்கத்தில் இருந்து விலகிப் போய்விட்ட அந்த மோகவசப்பட்ட பக்தர் சின்னா பின்னமாகச் சிதறிப் போய்விடுகின்ற மேகத்தைப் போல இருதரப்பிலும் இழப்பையும் பாதிப்பையும் அடைந்து விடமாட்டாரே? சின்னஞ்சிறிய மேகமானது ஆகாயத்தில் உருவாகிறது. ஆனால், அதனால் மழையையும் பெய்விக்க முடியவில்லை, மீண்டும் திரும்பிச் சென்று மேகங்களின் கூட்டத்திலும் சேர முடியவில்லை. மாறாக காற்றினால் இங்குமங்கும் அடித்துச் செல்லப்பட்டுக் கண்ணெதிரிலேயேக் கலைந்து போய்விடுகிறது. இதேபோன்று குறைந்த முயற்சியுடையவன், கொஞ்ச காலத்திற்கு மட்டுமே சாதனையில் ஈடுபட்டு, மனம் துவண்டுபோய் அதனை விட்டு விலகிப் போய்விட்டால் முழுவதுமாக அழிவடைந்து போய்விடமாட்டானா? அவனால் உங்களுக்குள்ளும் நுழைவு பெறமுடியவில்லை. உலகியல் இன்பங்களையும் அனுபவிக்க முடியவில்லை. அத்தகையவனுக்கு என்ன கதி ஏற்படுகிறது?

**ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்ய சேஷத :**
**த்வதன்ய : ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே (39)**

ஸ்ரீகிருஷ்ணா! என்னுடைய இந்த சந்தேகத்தை முழுவதுமாகத் தீர்த்து வைக்க உங்களால் மட்டும்தான் முடியும். உங்களைத் தவிர, வேறு யாரேனும், இந்த சந்தேகத்தைத் தீர்த்து வைக்கும் வல்லமை படைத்தவர் கிடைப்பது சாத்தியமில்லை. இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். –

**ஸ்ரீபகவானுவாச**
**பார்த்த நைவேஹ நாமுத்ர விநாஷஸ்தஸ்ய வித்யதே**
**ந ஹி கல்யாணக்ருத்கஸ்ச்சித்துர்க்கதிம் தாத கச்சதி (40)**

அழியும் உடலையே இரதமாக்கி இலட்சியத்தை நோக்கி முன்னேறுபவனே! அர்ஜுனா! அந்த மனிதருக்கு இந்த உலகத்திலும் சரி, பரலோகத்திலும் சரி, அழிவு ஏற்படுவது இல்லை. ஏனெனில் நண்பனே! அந்த மேலான நன்மையைத் தரவல்ல நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்பவன் அவலநிலையை (துர்க்கதி) அடைவதில்லை. அவனுக்கு என்ன நேர்கிறது?

**ப்ராப்ய புண்ய க்ருதாம் லோகானுஷித்வா சாஷ்வதீ : ஸமா :**
**சுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ப்ரஷ்டோபிஜாயதே (41)**

மனத் தடுமாற்றத்தால் யோகத்தில் இருந்து தவறிய **(யோகப்ப்ரஷ்ட)** அந்த சாதகன் புண்ணியம் நிறைந்தவர்களின் உலகத்தில் விஷய இன்ப வாசனைகளை (இச்சைகளை) அனுபவித்த பிறகு, (எந்த வாசனைகளை வளர்த்துக்

கொண்டு அவன் யோகத்தில் இருந்து தவறினானோ, இறைவன் அவற்றை எல்லாம் கொஞ்ச காலத்திற்கு உள்ளாகவே, பார்க்க வைத்தும் கேட்கச் செய்தும் விடுகிறார். அவற்றை அனுபவித்த பிறகு) அவன் **சுசீனாம் ஸ்ரீமதாம் –** தூய்மையான பழக்க வழக்கங்கள் உடைய ஸ்ரீமான் வீட்டில் பிறக்கிறான். (எவர் தூய்மையான பழக்க வழக்கங்கள் உடையவரோ, அவரே ஸ்ரீமான் எனப்படுகிறார்).

**அதவா யோகினாமேவ குலே பவதி தீமதாம்**
**ஏதத்தி துர்பலதரம் லோகே ஜன்ம யதீத்ருசம் (42)**

ஒருவேளை அவன் அங்கே பிறக்காவிட்டாலும் கூட உறுதியான நிலையான ஆன்மீக அறிவுடைய யோகிகளின் குலத்தில் நுழைவு பெறுகிறான். ஸ்ரீமான்களின் வீட்டில் குழந்தைப் பருவம் முதலே புனிதமான சம்ஸ்காரங்கள் அவனுக்குக் கிடைக்க ஆரம்பித்து விடுகின்றன. ஆனால், ஒருவேளை அவனால் அங்கே பிறக்க முடியாவிட்டால், யோகிகளின் குலத்தில் (வீட்டில் அல்ல) சீடப் பரம்பரையில் நுழைவு பெறுகிறான். கபீர், துளஸீதாஸர், ரைதாஸ், வால்மீகி போன்றோருக்குத் தூய்மையான பழக்கவழக்கங்கள் கொண்ட ஸ்ரீமான்களின் வீட்டில் அல்லாமல், யோகிகளின் குலத்தில் நுழைவு கிட்டியது. ஸத்குருவின் குலத்தில் நுழைவு கிட்டியது. ஸத்குருவின் குலத்தில், சம்ஸ்காரங்களில் உயர்ஆன்மீக மாற்றம் ஏற்படுவதும் ஒருவகைப் பிறப்புதான். மேலும், அத்தகைய பிறப்பு இவ்வுலகில் கிடைப்பது என்பது சந்தேகமேயில்லாமல் மிகவும் அரிதான ஒன்றாகும். யோகிகளின் குலத்தில் பிறப்பது என்பதற்கு அர்த்தம், அவர்களுக்கு உடலளவில் மகனாகப் பிறப்பது என்பதல்ல. இல்லறத்தைத் துறப்பதற்கு முன்பு, அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் மோகவசத்தால் மகாபுருஷரையும் தந்தையாகவே கருதுகின்றனர். ஆனால், மகாபுருஷருக்கோ தம்முடைய குடும்பத்தினர் என்ற பெயரில் ஒருவரும் இருப்பதில்லை. எந்த சீடன் அவருடைய மரியாதையைக் காப்பாற்றும் வகையில் அவர் வழி நடந்து ஒழுகுகின்றானோ, அவனுடைய மகத்துவம் பிள்ளைகளை விடப் பன்மடங்கு உயர்வானதாகப் போற்றப்படுகிறது. அவனே அவருடைய உண்மையான பிள்ளை ஆவான்.

எவர் யோக சம்ஸ்காரமெதுவும் இல்லாதவரோ, அவரை மகாபுருஷர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் ஒருவேளை சாதுக்களை உருவாக்க நினைத்திருப்பாரேயானால், ஆயிரமாயிரம் துறவிகள் (விரக்தர்) அவருக்குச் சீடர்கள் ஆகியிருப்பர். ஆனால், அவரோ, சிலருக்கு வழிச் செலவிற்குப் பணம் கொடுத்தும், சிலருக்கு வீட்டிற்கு ஆளனுப்பித் தகவல் தெரிவித்தும், கடிதம் எழுதி அனுப்பியும், அறிவுரை கூறிப் புரிய வைத்தும், அவர்களையெல்லாம் அவரவர் வீட்டிற்கு அனுப்பி வைத்து விட்டார். பெரும்பாலோர், பிடிவாதம் பிடிக்க ஆரம்பித்தனர். ஆனால் சுவாமிகளுக்கோ

இறைவனிடமிருந்து கெட்ட சகுணம் கிடைக்கத் தொடங்கியது. அவருடைய அகத்தில் இருந்து இறைவன், 'அத்தகையோரிடம் சாது ஆவதற்கான எந்த இலட்சணமும் இல்லையென்று கூறிவிட்டார். அவர்களை எல்லாம் வைத்துக் கொள்வதால் எந்தப் பயனும் இல்லை, அவர்கள் ஆன்மீகப் பாதையில் கரை கடக்க மாட்டார்கள்' என்றும் இறைவன் கூறி விட்டார். ஆசை நிறைவேறாத காரணத்தால் அவர்களில் ஒன்றிரண்டு பேர் மலையுச்சியில் இருந்து குதித்துத் தங்களின் உயிரையும் மாய்த்துக் கொண்டனர். ஆனால், மஹராஜ் அவர்களோ அவர்களைத் தம்மிடம் வைத்துக் கொள்ளவில்லை. பின்பு விஷயம் தெரிய வந்தபோது அவர், அவர்களுடைய மனஏக்கத்தை நான் அறிவேன். ஆனால், உண்மையிலேயே "இப்படி இறந்து போவார்கள் என்று தெரிந்து இருந்தால் அவர்களை வைத்துக் கொண்டிருந்திருப்பேன். அவர்கள் கடைத் தேறமுடியாதவர்களாக இருந்திருப்பர். வேறென்ன ஆகிவிடப் போகிறது" என்றார். சுவாமிகளுக்கு அவர்கள் மீது தனிப்பட்ட முறையில் மிகுந்த இரக்கம் இருக்கவே செய்தது. அப்படி இருந்தும் கூட அவர்களை அவர் வைத்துக் கொள்ளவில்லை. ஆறு, ஏழுபேர்களை மட்டும், அதாவது இறைவன் யாரையெல்லாம் வைத்துக் கொள்ளுமாறு கட்டளை பிறப்பித்தாரோ, அவர்களை மட்டுமே சுவாமிகள் தம்மிடம் வைத்துக் கொண்டார். 'இன்று ஒரு யோகத்தில் இருந்து தவறியவன் **(யோக ப்ரஷ்ட:)** வருகிறான்; பிறவி, பிறவியாக வழிதெரியாமல் அலைந்து கொண்டிருப்பவன் வருகிறான்; இந்தப் பெயர் கொண்ட, இந்த உருவமுடைய ஒருவன் வரப் போகிறான். அவனை வைத்துக் கொள். அவனுக்கு பிரம்ம வித்யையை உபதேசம் செய். அவனை ஆன்மீகத்தில் உயர்த்து' என்றெல்லாம் இறைவன் யார் யாரைக் குறிப்பிட்டு ஆணைகள் பிறப்பித்தாரோ, அவர்களை மட்டுமே சுவாமிகள் வைத்துக் கொண்டார். அத்தகையவர்களில் ஒரு மகாபுருஷர் தாராகுண்டத்தில் இருக்கிறார்; மற்றொருவர் அனுசூயியாவில் இருக்கிறார். இன்னும் இரண்டு, மூன்று பேர்களும் கூட ஆங்காங்கே இருக்கின்றனர். அவர்களுக்கு எல்லாம் சத்குருவின் குலத்தில் நுழைவு கிடைத்தது. அத்தகைய மகாபுருஷர்களைப் பெறுவது மிகவும் அரிதாகும்.

**தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம்**
**யததே ச ததோ பூய : ஸம்ஸித்தௌ குருநந்தன (43)**

அங்கே அவர்கள் உடல் மூலமாக சாதனை செய்து அடைந்த ஆன்மீக அறிவை மீண்டும் கைவரப் பெற்று விடுகின்றனர். அதாவது, முற்பிறவிகளில் செய்த ஆன்மீக சாதனை சம்ஸ்காரங்களை தங்குதடையின்றியே சுலபமாகத் திரும்பவும் பெற்று விடுகின்றனர். மேலும், குருவம்சத்தவனே! அவ்வாறு மீண்டும் கைவரப் பெற்ற ஆன்மீக அறிவின் ஆளுமையால் அவர்கள் பிறகு, **ஸம்ஸித்தௌ –** 'பகவானை அடைதல்' என்ற 'பரம சித்தியைப்' பெற வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் முயற்சியில் இறங்கி விடுகின்றனர்.

**பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவசோபி ஸ :**
**ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்த்ததே (44)**

ஸ்ரீமான்களின் வீட்டு விஷயங்களில் ஈடுபட்டிருந்த போதிலும் அவர்கள் முற்பிறவிகளில் செய்த ஆன்மீகப் பயிற்சியின் பலனாக இறைப் பாதையில் இன்னும் அதிகமாக ஈர்க்கப்பட்டு விடுகின்றனர். மேலும், யோகத்தில் குறைவான முயற்சியுடைய அந்த ஆன்மீக ஆர்வம் கொண்டவரும் கூட மனம், வாக்கிற்கு அப்பாற்பட்ட (நிர்வாணம்) இறைநிலையை அடைந்து விடுகின்றனர். அவர்களுக்கு இறைப் பேற்று நிலை (முக்தி) கிடைப்பதற்கு இதுவொன்றே வழியாகும். எவரும் ஒரே பிறவியில் இந்நிலையை அடைவது இல்லை.

**ப்ரயத்னாத்யதமானஸ்து யோகீ ஸம்சுத்த கில்பிஷ:**
**அனேக ஜன்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம் (45)**

எண்ணற்ற பிறவிகளில் முயற்சி செய்கின்ற யோகியே, பரம சித்தி எனப்படும் இறைநிலையைப் பெறுகிறார். தீவிர முயற்சியுடன் பயிற்சி செய்கின்ற யோகி, எல்லாப் பாவங்களில் இருந்தும் நல்ல முறையில் தூய்மையடைந்து பரம கதியை அடைகிறார். இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலையைப் பெறுவதற்கு இது ஒன்றே வழியாகும். ஆரம்பத்தில் அவன் குறைந்த முயற்சியுடன்தான் யோகத்தைத் தொடங்குகிறான். மனம் தடம் புரண்டதால் பிறவி எடுக்கிறான். சத்குருவின் குலத்தில் நுழைவு பெறுகிறான். மேலும், ஒவ்வொரு பிறவியிலும் யோகத்தை விடாமல் பயிற்சி செய்து கொண்டே வந்து, குறிப்பிட்ட ஒரு பிறவியில் எதனைப் 'பரம கதி' என்றும் 'பரம பதம்' என்றும் அழைக்கிறோமோ அந்த இறைநிலையைச் சென்றடைகிறான். இந்த யோகத்தில் 'விதைக்கு அழிவில்லை' என்று ஏற்கனவே ஸ்ரீகிருஷ்ணர் கூறியுள்ளார். நீங்கள் இந்தப் பாதையில் இரண்டு அடி எடுத்து வைத்து விட்டால் போதும், அந்த சாதனையானது ஒரு போதும் அழிவு அடைவது இல்லை. எத்தகைய சூழ்நிலையில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் எல்லோராலும் இந்த சாதனையை மேற்கொள்ள முடியும். ஏனெனில், சிறிதளவு சாதனை என்பது சூழ்நிலைகளால் தவறிப் போகின்றவர்கள் செய்வதுதான். ஏனெனில், அவர்களிடம் நேரம் இருப்பது இல்லை. நீங்கள் கறுப்போ, சிவப்போ, அல்லது வேறு யாராக வேண்டுமானாலும் இருக்கலாம். கீதை அனைவருக்காகவும்தான். நீங்கள் மனிதப்பிறவி என்றால் உங்களுக்காகவும்தான். கடும் முயற்சியுடையவராக இருப்பவரோ, அல்லது குறைந்த முயற்சியுடையவராக இருப்பவரோ, நீங்கள் யாராக இருந்தாலும் சரி, ஆக, குறைந்த முயற்சியுடையவர்கள் பெரும்பாலும் கிரகஸ்தர்களே! (இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டு உள்ளவர்கள்) கீதை, இல்லறத்தார் – துறவிகள், படித்தவர் – பாமரர், சர்வ சாதாரணமான எல்லா மனிதர்களுக்கும் பொதுவான ஒன்றாகுமே

தவிர ஏதோ ஒரு சாது என்ற பெயர் கொண்ட விசித்திரமான பிராணிக்கு மட்டுமே கீதை சொந்தமானது அல்ல. இறுதியாக யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அறுதியிட்டுக் கூறுகிறார். –

**தபஸ்விப்யோதிகோ யோகீ ஜ்ஞானிப்யோபி மதோதிக:**
**கர்மிப்யஸ்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுன (46)**

தபஸ்விகளை விட யோகி சிறந்தவன் அவன் ஞானிகளை விடச் சிறந்தவனாகக் கருதப்படுகிறான். கர்மம் செய்பவனை (கர்மி) விடவும் யோகி உயர்ந்தவன் ஆவான். ஆகவே, அர்ஜுனா! நீ யோகியாக மாறு! **தபஸ்வியானவன்** அதாவது தவம் செய்பவன் மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் இந்த யோகத்தில் ஈடுபடுத்துவதற்காக வாட்டுகிறான். இன்னும் அவை யோகத்தில் முழுமையாக ஈடுபடவில்லை.

**கர்மி** – கர்மத்தைச் செய்பவனோ அந்த நியமிக்கப்பட்டுள்ள கர்மமாகிய வேள்வியின் செயல்முறை விதிகளை நன்கு புரிந்து கொண்டு, அதில் ஈடுபடுகிறான். அவன் தன்னுடைய சொந்த வலிமையை முன்னிறுத்தியோ அல்லது, அவன் தன்னை முழுவதுமாக சத்குருவின் சரணத்தில் சமர்ப்பணம் செய்து கொண்டோ இதில் ஈடுபடவில்லை. அவன் வெறுமனே கர்மத்தை மட்டும் செய்கிறான். அவ்வளவுதான்.

**ஞானி** – ஞான மார்க்கத்தைப் பின்பற்றுபவன் இந்த நியமிக்கப்பட்டுள்ள கர்மமாகிய வேள்வியின் செயல்முறை விதிகளை நன்கு புரிந்து கொண்டு, தன்னுடைய சொந்த வலிமையை முன்னிறுத்தி அதில் ஈடுபடுகிறான். அவனது இலாப, நஷ்டத்திற்கு அவனே பொறுப்பாளி ஆகிறான். அதில் கவனத்தை வைத்தபடியே முன்னேறுகிறான்.

**யோகி** – நிஷ்காம கர்மயோகி இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடமே தன்னுடைய பொறுப்பு முழுவதையும் ஒப்படைத்து விட்டு, அவரை மட்டுமே சார்ந்து நின்று, முழு சமர்ப்பண உணர்வுடன் கூடியவனாக, அதே நியமிக்கப்பட்டுள்ள கர்மம் எனப்படும் யோக சாதனையில் ஈடுபடுகிறான். அவனுடைய யோக நலத்திற்கான (யோகக்ஷேமம்) அனைத்துப் பொறுப்புகளையும் பகவான், அதாவது யோகேஷ்வரரே ஏற்றுக் கொள்கிறார். யோகத்தில் இருந்து வழி தவறிப் போய்விடக் கூடிய சூழ்நிலைகள் ஏற்பட்டாலும் கூட அவனுக்கு எங்கே நாமும் வீழ்ச்சியடைந்து விடுவோமோ என்ற பயம் உண்டாவதில்லை. ஏனெனில் எந்தப் பரம தத்துவத்தை விரும்புகிறானோ, அவரே அவனைக் காப்பாற்றிக் கரை சேர்க்கின்ற பொறுப்பை முழுவதும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

தபஸ்வி இன்னும் யோகத்தில் ஆழ்ந்து போவதற்கான முயற்சியில்தான் ஈடுபட்டு உள்ளார். கர்மத்தில் ஈடுபடுபவரோ (கர்மி) கர்மத்தை மட்டும் புரிந்து கொண்டு வெறுமனே அதைச் செய்து வருகிறார். இவர்கள் தவறிக் கீழே விழுந்துவிடவும் செய்வார்கள். ஏனெனில், இவர்கள் இருவரிடமும் சமர்ப்பணமும் இல்லை, சொந்த இலாப – நஷ்டத்தைக் கணிக்கின்ற திறனும் இல்லை. ஆனால், ஞானியோ, யோகத்தின் அடுத்தடுத்து மாறும் சூழ்நிலைகளைப் பற்றி அறிவார், தமது சொந்த பலமும் அவருக்குத் தெரியும், அவருடைய பொறுப்பு முழுவதும் அவர்மீதே உள்ளது. நிஷ்காம கர்ம யோகியோ இஷ்ட தெய்வமாகிய சத்குருவின் மீதே தமது பொறுப்பு முழுவதையும் போட்டு விட்டார். எனவே, அவரை இஷ்ட தெய்வமாகிய சத்குருவே காப்பாற்றியருள்வார். மேலான நன்மையைத் தரவல்ல இந்த ஆன்மீகப் பாதையில் இவ்விருவரும் (ஞான யோகி, (பற்றற்ற) நிஷ்காம கர்மயோகி) சரியாகச் செல்கின்றனர். ஆனால், எவருடைய பாரத்தை இஷ்ட தெய்வமாகிய சத்குரு ஏற்றுக் கொண்டு காப்பாற்றியருள்கிறாரோ, அவரே இவர்கள் அனைவரிலும் சிறந்தவர் ஆவார். ஏனெனில் பிரபு அவரைத் தம்முடையவராக ஏற்றுக் கொண்டு விட்டார். அவருடைய இலாப நஷ்டங்களை பிரபு பார்த்துக் கொள்வார். எனவேதான் யோகியே (நிஷ்காம கர்மயோகி) உயர்ந்தவர் எனப்படுகிறார். எனவே, 'அர்ஜுனா! நீ யோகியாக மாறு! சமர்ப்பண உணர்வுடன் கூடியவனாகி நீ யோகத்தைக் கடைப்பிடி!'

யோகி சிறந்தவன்தான். ஆனால், அந்தராத்மாவினால் வழிபடுபவனே அந்த யோகியையும் விடத் தலைசிறந்தவன். இதுபற்றிக் கூறுகிறார்.

**யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா**
**ச்ரத்தாவான்பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத : (47)**

எல்லா (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகிகளையும் விட மிகுந்த சிரத்தையுடன் அந்தராத்மாவினால், அகத்தில் இடையறாத ஆன்ம சிந்தனையினால் என்னை நிரந்தரமாக வழிபாடு செய்கின்ற அந்த யோகியே என்னைப் பொறுத்தவரையில் தலைசிறந்தவனாகக் கருதப்படுகிறான். இறைவழிபாடு (தியானம்) என்பது மற்றவர்களுக்கெல்லாம் காட்டியபடியே செய்யப்படுகின்ற காட்சிப் பொருளன்று. இதனால் சமுதாயம் ஒருவேளை நமக்கு அனுகூலமாகச் செயல்படலாம். ஆனால், பிரபு (இறைவன்) பிரதிகூலமாகி விடுவார். இறைவழிபாடு மிகவும் இரகசியமாகச் செய்யப்படுவது. அது உள்மனதால் (அந்தகரணத்தால்) செய்யப்படுவது. இறைவழிபாட்டின் ஏற்றத் தாழ்வுகள் ஆழ்மனத்தில் ஏற்படுகிறது.

**முடிவுரை :** –

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "பலன் மீதுள்ள ஆசையைத் துறந்தவராக, **கார்யம் கர்மம்** அதாவது செய்யத் தகுதியுடைய வேள்வியின் சிறப்புச் செயல்முறை விதிகளைக் கடைப்பிடிப்பவர் எவரோ, அவரே சந்நியாசி ஆவார். மேலும் அதே கர்மத்தைச் செய்பவரே யோகியும் ஆவார். அதை விடுத்து, செயல்பாடுகளையும் நெருப்பையும் துறப்பவன் யோகியாகவோ சந்நியாசியாகவோ ஆவதில்லை. சங்கல்பங்களைத் துறக்காமல் எவராலும் யோகியாகவோ, சந்நியாசியாகவோ ஆக முடியாது. நாங்கள் சங்கல்பமே செய்வது இல்லை என்று வெறுமனே சொல்லிக் கொண்டு இருப்பதால் மட்டுமே சங்கல்பங்கள் நம்மை விட்டு விடுவதில்லை. யோகத்தில் முன்னேறும் விருப்பமுடையவர்கள் இந்தக் **கார்யம் கர்மம்** எனப்படும் செய்யத் தகுதியுடைய கர்மத்தைச் செய்யட்டும். கர்மத்தைச் செய்து கொண்டே சென்று யோகத்தில் கைதேர்ந்தவராக ஆனபிறகுதான் அனைத்துச் சங்கல்பங்களுமே அழிந்து போகின்றன. அதற்கு முன்பு அல்ல. எல்லா சங்கல்பங்களும் அழிந்து போகின்ற நிலைக்குப் பெயர்தான் சந்நியாசம் ஆகும்," என்று கூறினார்.

யோகேஷ்வரர் மறுபடியும் இதுபற்றி, 'ஆன்மா அதோகதிக்கும் போகிறது. அதுபோன்றே ஆன்மாவிற்கு விடுதலையும் (மீட்சி) உண்டு. எவர் மூலமாக மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களும் வெற்றி கொள்ளப்பட்டு விட்டதோ, அவருக்கு, அவருடைய ஆன்மா நண்பராக இருந்து நட்புணர்வுடன் வழி நடத்துகிறது. பரம நன்மையைச் செய்யவல்லதாக அமைகிறது. எவர் மூலமாக மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களும் வெற்றி கொள்ளப்படவில்லையோ, அவருக்கு அவருடைய ஆன்மாவே பகைவனாக மாறி பகைமையுணர்வுடன் நடந்து கொள்கிறது, பெருந்துயரங்களுக்குக் காரணமாக அமைகிறது. எனவேதான், மனிதர்கள் அனைவருமே தங்களுடைய ஆன்மாவை அதோகதிக்குத் தள்ளாமல் தங்களால் தங்களின் ஆன்மாவை உயர் நிலைக்குக் கொண்டு செல்லும் முயற்சியைச் செய்ய வேண்டியது அவசியமாகிறது' என்கிறார்.

ஸ்ரீகிருஷ்ணர், இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலை பெற்ற யோகியின் வாழ்வியலைப் பற்றி எடுத்துரைத்தார். வேள்வி செய்யும் இடம் (யக்ஞ ஸ்தலம்) ஆசனம், (உட்காரும்முறை) ஆகியவற்றைப் பற்றிக் கூறும் போது, 'ஏகாந்தமான இடத்தில் அமரவேண்டும், இடம் சுத்தமாக இருக்க வேண்டும். சுத்தமான துணி, மான்தோல், அல்லது தர்ப்பையினால் செய்யப்பட்டதொரு ஆசனத்தை விரித்துக் கொள்ள வேண்டும்' என்று கூறினார். எப்பொழுதும் கர்மத்தில் ஈடுபடுவதற்கு உகந்ததாக நமது செயல்பாடுகள்

அனைத்தும் அமைந்து இருக்க வேண்டும். உணவுக் கட்டுப்பாடு — மிதமான உடல் உழைப்பு, உறக்கம் — விழிப்பு ஆகியவற்றில் கட்டுப்பாடு முதலானவற்றை மிகவும் வலியுறுத்திக் கூறினார். யோகியின் கட்டுப்படுத்தப்பட்ட சித்தத்திற்கு, காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்டுள்ள எண்ணெய் விளக்குச் சுடரின் நடுக்கமற்று மேல்நோக்கி எரியும் தன்மையை உதாரணமாகக் காட்டி விளக்கினார். மேலும், இந்த முறையில் அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட சித்தமும் மறைந்து போகின்ற நிலையில், அந்த யோகி, யோகத்தின் உச்சவரம்பாகிய முடிவில்லாத ஆனந்தத்தைப் பெற்று விடுகிறார். இந்த உலகத்தின் சேர்க்கை, பிரிவு ஆகியவை நீங்கப் பெற்ற எல்லையில்லாத சுகத்தின் பெயரே மோட்சம் ஆகும். அத்துடன் இணைவதற்குப் பெயரே யோகம், வீடுபேறு ஆகும். எந்த யோகி இதற்குள் நுழைவு பெறுகின்றாரோ அவர், மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிடமும் சமமான பார்வை உடையவராகி விடுகின்றார். அவர் எவ்விதமாகத் தமது ஆன்மாவைக் காண்கிறாரோ, அவ்விதமாகவே எல்லா உயிரினங்களின் ஆன்மாவையும் காண்கிறார். அவர் அனைத்திற்கும் மேலான, உச்சக்கட்ட நிலையில் கிடைக்கும் அமைதியை அடைந்து விடுகிறார். ஆகவே, யோகம் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். மனம் எங்கெல்லாம் செல்கிறதோ, அங்கிருந்தெல்லாம் அதனை மீட்டுக் கொண்டு வந்து மீண்டும் மீண்டும் அதனை அந்தராத்மாவிலேயே ஒன்றச் செய்ய வேண்டும். 'மனத்தைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவது மிகவும் கடினமான காரியம்தான்' என்பதை ஸ்ரீகிருஷ்ணரும் ஒப்புக் கொள்கிறார். ஆனால், மனம் கட்டுப்படவும் செய்கிறது. அது இடைவிடாத பயிற்சி, வைராக்கியத்தின் மூலமாகக் கட்டுப்பாட்டிற்குள் வருகிறது. குறைவான முயற்சியுடையவன் கூட எண்ணற்ற பிறவிகளில் செய்கின்ற பயிற்சியின் மூலமாக பரமகதி, பரமபதம் என்றெல்லாம் சொல்லப்படுகின்ற இறைநிலையை அடைகின்றான். தபஸ்விகள், ஞானமார்க்கத்தைப் பின்பற்றுபவர்கள், கர்மத்தில் மட்டும் ஈடுபடுபவர்கள் (கர்மி) ஆகிய அனைவரையும் விட யோகியே (பற்றற்ற கர்மயோகி) மிகவும் சிறந்தவன் ஆவான். எனவேதான் அர்ஜுனா! நீ யோகியாக மாறு! சமர்ப்பண உணர்வுடன் இணைந்து, ஆழ்மனத்தால் யோகத்தைக் கடைப்பிடி. இந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மிகவும் முக்கியமான வடிவில், 'யோகத்தை அடைவதற்காக இடைவிடாத பயிற்சி அவசியம்' என்பதை வலியுறுத்திக் கூறியுள்ளார். அத்துடன் —

**ஓம் தத் ஸதிதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே அப்யாஸ யோகோ நாம ஷஷ்டோத்த்யாய :**

இம்முறையில் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம

வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'அப்யாஸ யோகம்' அதாவது 'பயிற்சி யோகம்' என்ற பெயருடைய ஆறாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஹ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா: யதார்த்த கீதா பாஷ்யே அப்யாஸ யோகோ நாம ஷஷ்டோத்த்யாய :**

இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் யதார்த்த கீதை என்ற உரையில் 'அப்யாஸ யோகம்' அதாவது, 'பயிற்சி யோகம்' என்ற பெயருடைய ஆறாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

**ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :**

## ஏழாவது அத்தியாயம்

கடந்த அத்தியாயங்களில் கீதையின் பெரும்பாலான, முக்கியமான கேள்விகள் அனைத்தும் நிறைவடைந்து விட்டன. நிஷ்காம கர்மயோகம், ஞான யோகம், கர்மம் மற்றும் வேள்வி ஆகியவற்றின் முழுவடிவம், மேலும், அவற்றின் விதிமுறைகள், யோகத்தின் உண்மையான வடிவம், மற்றும் அதன் இறுதி விளைவு, அவதாரம், வர்ண கலப்பு சனாதனம் (என்றென்றும் நிலையான, மாறாத தர்மம்) உலக நன்மையைக் கருதி, ஆன்மாவில் நிலைபெற்றுள்ள மஹாபுருஷர்கள் கர்மத்தில் தொடர்ந்து ஈடுபடுவதற்கான பரிந்துரை, யுத்தம் முதலானவை பற்றிய விரிவான விவாதங்கள் இடம் பெற்றுள்ளன. கடந்த அத்தியாயத்தில் (ஆறாவது அத்தியாயம்) யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இவற்றுடன் தொடர்புடைய ஒன்றையொன்று நிறைவேற்றுகின்ற, எண்ணற்ற கேள்விகளைக் கையாண்டிருக்கிறார். அவற்றிற்கான பதில்களும், நடைமுறையில் கடைப்பிடிப்பதற்காகச் சொல்லப்பட்ட விதிமுறைகளும் இறை ஆராதனையில் முழுமையான வெற்றியடைவதற்கு உதவியாக அமைகின்றன.

ஆறாவது அத்தியாயத்தில் கடைசி சுலோகத்தில் யோகேஷ்வரர், "எந்தவொரு யோகியானவர், **மத்கதேனாந்தராத்மனா** – என்னில் மிகவும் நல்ல முறையில் நிலைபெற்றுள்ள அந்தகரணத்தை (உள்மனதை) உடையவரோ, அவரையே நான் அதிசயமான, தலைசிறந்த யோகியாகக் கருதுகிறேன்" என்று கூறித் தாமே ஒரு புதிய கேள்வித் தொடர் உருவாவதற்கான விதையை விதைத்து விட்டார். பரமாத்மாவில் மிகவும் நல்ல முறையில் நிலை பெற்றிருத்தல் என்றால் என்ன? பெரும்பாலான யோகிகள் பரமாத்மாவை அடைவதென்னவோ உண்மைதான். அதற்குப் பிறகும் கூட அவர்களுக்குள்ளே ஏதோவொரு குறைபாடு என்னவோ இடித்துக் கொண்டே தான் இருக்கிறது. சிறிதளவுகூடக் குறைபாடு என்பதே இல்லை என்றொரு நிலை எப்பொழுது வருகிறது? முழுமையான அளவில் பரமாத்மாவைப் பற்றிய பரிபூரண ஞானம் எப்பொழுது வருகிறது? எப்பொழுது நிகழ்கிறது? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார் –

**ஸ்ரீபகவானுவாச**
**மய்யாஸக்தமனா: பார்த்த யோகம் யுஞ்ஜன் மதாச்ரய :**
**அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்ச்ருணு (1)**
**ஸ்ரீபகவான் கூறுகிறார் :**

பார்த்தா! நீ என்னிடமே பற்றுடைய மனத்தைக் கொண்டவனாக வெளிஉலகில் (புறத்தில்) அன்று, மாறாக **மதாச்ரய** : – அதாவது என்னையே முழுவதுமாகச் சார்ந்தவனாக, யோகத்தைக் கடைப்பிடித்துக் கொண்டே (யோகம்

செய்வதை விட்டு விட்டு அல்ல) என்னை எந்த முறையில் சந்தேகத்திற்குச் சிறிதும் இடமின்றி முழுமையாக அறிந்து கொள்ள முடியும் என்பதைப் பற்றிக் கேள். அதை அறிந்து கொண்டதற்குப் பிறகு, சிறிதளவுகூடச் சந்தேகம் என்பதே இல்லாமல் போய்விடும். தெய்வீக மகிமைகளைப் பற்றிய அந்தப் பரிபூரண ஞானத்தையே மறுபடியும் வலியுறுத்திக் கூறுகிறார்.

**ஜ்ஞானம் தேஹும் சவிஜ்ஞானம் இதம்வக்ஷ்யாம்யசேஷத:**
**யஜ்ஞாத்வா நேஹ பூயோந்யஜ்ஞாதவ்யமவசிஷ்யதே (2)**

நான் உனக்காக இந்த விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தை முழுவதுமாகக் கூறுகிறேன். வேள்வியானது நிறைவு பெறுகின்ற காலத்தில் எதைப் படைக்கிறதோ, அந்த அமிர்த தத்துவத்தைப் பெறுவதுடன் சேர்த்துக் கிடைக்கும் ஆன்மீக உயர்நிலை அறிவிற்குப் பெயரே ஞானம் ஆகும். பரம தத்துவமாகிய பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் ஆகும். மஹாபுருஷருக்கு ஒரே சமயத்தில் எல்லா இடங்களிலும் செயல்புரிவதற்கான வல்லமை கிடைக்கிறது அல்லவா! அதற்குப் பெயரே விஞ்ஞானம் ஆகும். அந்த இறைவன் (பிரபு) ஒரே சமயத்தில் அனைவரின் இதயங்களிலும் எவ்வாறு செயல்படுகின்றார்? எந்த முறையில் அவர் எழுப்புகிறார்? உட்கார வைக்கிறார்? மற்றும், அவர் எந்த முறையில் இந்த இயற்கை அல்லது படைப்பின் மோதல்களில் இருந்து சாதகனை விடுவித்து, ஆன்ம வடிவம் (ஸ்வரூபம்) வரைக்கும் உள்ள இடைவெளியினைக் கடக்க வைக்கிறார்? – அவருடைய இந்த உயர் ஆன்மீகக் காரியச் செயல்முறைக்குப் பெயரே விஞ்ஞானம் ஆகும். இந்த விஞ்ஞானத்துடன் கூடிய ஞானத்தை முழுவதுமாகக் கூறுகிறேன் கேள். அதை அறிந்து கொண்ட பிறகு (அந்த ஞானத்தைப் பற்றி வெறுமனே கேட்டுக் கொண்ட பிறகு அல்ல) இவ்வுலகில் அறிந்து கொள்வதற்கு வேறெதுவும் தகுதியுடையதாகத் தோன்றாது. இந்த ஞானத்தை அறிந்து கொண்டவர்களின் எண்ணிக்கை மிகவும் சிறிதளவே ஆகும்.

**மனுஷ்யாணாம் ஸஹஸ்த்ரேஷு கஸ்சித்யததி ஸித்தயே**
**யததாமபி ஸித்தானாம் கஸ்ச்சின்மாம் வேத்தி தத்வத : (3)**

ஆயிரக்கணக்கானவர்களில் யாரோ ஒரு சிலர் மட்டுமே என்னை அடைவதற்காக முயற்சிக்கிறார்கள். மேலும், அவ்வாறு முயற்சி செய்கின்ற யோகிகளில் யாரோ ஒருசிலர் மட்டுமே என்னைத் தத்துவத்துடன் (நேரடியாக தரிசனம் செய்து அறிதல் அல்லது சாட்சாத்காரம்) சேர்த்து அறிந்து கொள்கிறார்கள். அந்தப் அனைத்துத் தத்துவங்களும் எங்கே இருக்கிறது? ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஸ்தூல வடிவத்தில் (பிண்ட உருவம்) இருக்கிறதா? அல்லது, எங்கும்

விரிந்தும் பரந்தும் வியாபித்தும் இருக்கிறதா? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார் —

**பூமிராபோநலோ வாயு : கம் மனோ புத்திரேவ ச**
**அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதிரஷ்டதா (4)**

அர்ஜுனா! பூமி, நீர், நெருப்பு, காற்று, மற்றும் ஆகாயம் அத்துடன் சேர்த்து மனம், புத்தி, அகங்காரம் — என்று எட்டு வகையான வேறுபட்ட பொருட்களால் ஆனதுதான் என்னுடைய பிரகிருதி (இயற்கை) ஆகும். இதுவே **அஷ்டதா மூலப் பிரகிருதி** எனப்படுகிறது.

**அபரேய மிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்**
**ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் (5)**

**இயமம்** அதாவது, இந்த எட்டு வகையான வேறுபட்ட பொருட்களால் ஆனது என்னுடைய **அபரா பிரகிருதி** அதாவது **ஜடப் பிரகிருதி** (உயிர் உணர்வு அற்றது) எனப்படும். பெருந்தோள்களை உடையவனே அர்ஜுனா! இதை விட வேறான ஒன்றுதான், உயிர் உணர்வுடைய **பரா பிரகிருதி** அதாவது உயிர் உணர்வுடைய பிரகிருதி (சேதனா பிரகிருதி) என்பதை அறிந்து கொள். இதன் மூலமாக ஒட்டு மொத்த உலகமும் தாங்கப்பட்டுள்ளது. இதையேதான் ஜீவாத்மா என்றும் சொல்கிறோம். ஜீவாத்மாவும் பிரகிருதியின் தொடர்பிலேயே வாழ்ந்து வருவதன் காரணமாக அதுவும் பிரகிருதி என்றே கருதப்படுகிறது.

**ஏதத்யோனீனி பூதானி ஸர்வாணீத்யுபதாரய**
**அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத : ப்ரபவ : ப்ரலயஸ்ததா (6)**

அர்ஜுனா! எனவே மனிதர் உட்பட எல்லா உயிரினங்களுமே **ஏதத் யோனீனி** — இந்த மஹா பிரகிருதிகளில் இருந்து அதாவது பரா மற்றும் அபரா பிரகிருதிகளில் இருந்துதான் உற்பத்தியாகின்றன என்று அறிந்து கொள். இவை இரண்டும் சேர்ந்ததே யோனி எனப்படுகிறது. நான் ஒட்டு மொத்த உலகத்தின் தோற்றம், மற்றும் அழிவின் வடிவம் ஆவேன். அதாவது இவ்வனைத்துக்கும் மூலமும் நானே. என்னிலிருந்தே உலகம் தோன்றவும் செய்கிறது. என்னிலேயே (பிரளயம்) கலந்தும் விடுகிறது. எதுவரை பிரகிருதி உயிருடன் இருக்கிறதோ, அதுவரை நானே அதனுடைய உற்பத்திக்குக் காரணமாக இருக்கிறேன். அதே போன்று, எப்பொழுது ஏதேனும் ஒரு மகாபுருஷர் இந்தப் பிரகிருதியைக் கடக்கிறாரோ. அப்பொழுது நானே மகா பிரளயமாகவும் (உலகின் மாபெரும் அழிவு அல்லது ஊழிக்காலம்) இருக்கிறேன். இது ஆன்மீக அனுபவத்தால் உணரப்படுகிறது.

உலகின் தோற்றம், மற்றும் மறைவு – இந்த இரண்டு கேள்விகளையும் மனித சமுதாயம் எப்போதும் ஆவலுடன் எதிர்பார்த்து வருகிறது. உலகம் முழுவதும் பல்வேறு சாஸ்திரங்களில் இவற்றை எத்தனையோ முறைகளில் எல்லாம் புரிய வைக்கின்ற முயற்சிகள் இன்றுவரை தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. சிலர் 'பிரளயத்தின்போது உலகம் முழுவதும் கடலில் மூழ்கி விடும்' என்று கூறினால் இன்னும் சிலரைப் பொறுத்தவரையில், 'சூரியன் மிகவும் நெருக்கமாக இறங்கி வந்து பூமியை எரித்து விடுகிறது' என்கிறார்கள். சிலர் இதனை **கயாமத்** (இறைவனானவர் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் பாவ, புண்ணியங்களை எல்லாம் விசாரித்து நியாயத்தீர்ப்பு வழங்கும் நாள்) என்கிறார்கள். 'அந்நாளில் அனைவருடைய வழக்குகளும் விசாரிக்கப்படும்' என்றெல்லாம் சொல்கிறார்கள். சிலரோ, நித்தியப் பிரளயம், நிமித்தமான பிரளயம் என்றெல்லாம் கணிப்பதில் மூழ்கிக் கிடக்கின்றனர். ஆனால், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், 'பிரகிருதி அதாவது படைப்பு என்பது தொடக்கம் அற்றது; மாறிக் கொண்டே இருக்கும் ஒன்று; ஆனால் ஒருபோதும் இது அழிந்து போவதில்லை' என்கிறார்.

பாரதீய தர்ம நூல்களைப் பொறுத்த வரையில் **மனு,** பிரளயத்தைப் பார்த்திருக்கிறார். அத்துடன் அவரும் பதினோரு ரிஷிகளும் திமிங்கலத்தின் கொம்பில் படகைக் கட்டிக் கொண்டு இமயமலையில் உள்ளதொரு உயரமான சிகரத்தை அடைந்து தங்களைக் காப்பாற்றிக் கொண்டனர். லீலாவினோதரான ஸ்ரீகிருஷ்ணரின் உபதேசங்கள் மற்றும் வாழ்க்கை வரலாறு தொடர்பாக இயற்றப்பட்டுள்ள, அவருடைய சமகாலத்தைச் சேர்ந்த சாஸ்திரமாகிய பாகவதத்தில் **மிருகண்டு** முனிவரின் மகனாகிய **மார்க்கண்டேயர்** நேரடியாக பிரளயத்தைக் கண்டதை அவரே வர்ணிப்பது போன்றதொரு பகுதி இடம் பெற்று உள்ளது. அவர் இமாலயத்தின் வடக்குப் பகுதியில் **புஷ்பபத்திரா** என்ற நதிக்கரையில் வாழ்ந்து வந்தார்.

பாகவதத்தின் பன்னிரண்டாவது ஸ்கந்தத்தின் (பாகம்) எட்டாவது, ஒன்பதாவது அத்தியாயத்தின்படி, **சௌனகர்** முதலான ரிஷிகள் சூத முனிவரிடம் பின்வருமாறு கேட்டனர்:

"மார்க்கண்டேய முனிவர் மஹா பிரளயத்தின் போது, ஆலமரத்தின் இலையில் பகவான் பால முகுந்தர் வீற்றிருப்பதை தரிசனம் செய்தார் என்று சொல்லப்படுகிறது. ஆனால், அவரோ நம்முடைய வம்சத்தைச் சேர்ந்தவராக இருந்ததுடன் நமக்குக் கொஞ்ச காலம் முன்புதான் வாழ்ந்து வந்திருக்கிறார். அவருடைய பிறப்பிற்குப் பின்னால் எந்தப் பிரளயமும் ஏற்படவில்லை. மேலும், இந்தப் படைப்பும் கடலில் அமிழ்ந்து போகவில்லை. அனைத்தும் உள்ளது

உள்ளபடியாகவேதான் இருக்கிறது. எனில் அவர் எங்ஙனம் பிரளயத்தைக் கண்டார்?"

இதற்கு சூத முனிவர் பின்வருமாறு பதில் அளித்தார் :

"மார்க்கண்டேய முனிவரின் பிரார்த்தனையினால் மகிழ்ச்சியடைந்த **நரநாராயணர்** அவருக்குக் காட்சியளித்தார். மார்க்கண்டேயர் அவரிடம், 'நான், இந்த ஆன்மாவானது எந்த மாயையினால் உந்தப்பட்டு, எண்ணற்ற பிறவிகளில் சுற்றியலைந்து கொண்டிருக்கிறதோ, அந்த, உங்களுடைய மாயையைக் காண விரும்புகிறேன்' என்று வேண்டினார். பகவான் அவருடைய வேண்டுதலை ஏற்றுக் கொண்டார். ஒரு நாள் அந்த முனிவர் தமது ஆசிரமத்தில் பகவானுடைய சிந்தனையில் ஆழ்ந்து இருந்தபோது அவருக்குப் பின்வரும் ஆன்மீகக் காட்சி தெரிந்தது :

"அதன்படி, நான்கு திசைகளில் இருந்தும் கடலானது பொங்கி எழுந்து அவரை மூழ்கடிக்க வந்தது. அதில், முதலைகள் குதித்தெழுந்து வந்து கொண்டிருந்தன. அவற்றின் தாக்குதலுக்கு உள்ளான மார்க்கண்டேய முனிவரும் தண்ணீரின் வேகத்துடன் அடித்துக் கொண்டு வரப்பட்டார். அவை இங்குமங்கும் தப்பியோடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தன. ஆகாயமும், சூரியன், பூமி, சந்திரன், சொர்க்கம், சூரிய மண்டலம் அனைத்தும் அந்தக் கடலிலேயே மூழ்கிவிட்டன. இதற்கிடையில், மார்க்கண்டேய முனிவருக்கு ஆலிலையில் வீற்றிருந்த குழந்தை ஒன்று கண்களுக்கு புலப்பட்டது. அந்தக் குழந்தையின் உள்மூச்சு வழியாக மார்க்கண்டேய முனிவர் அதன் வயிற்றுக்குள் போய்விட்டார். அங்கே அவர் தமது ஆசிரமும், சூரியமண்டலத்துடன் சேர்த்து மொத்த உலகமும் உயிருடன் இயங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். அவர் மீண்டும் அந்தக் குழந்தையின் வெளி மூச்சு வழியாக, அதன் வயிற்றிலிருந்து வெளியே வந்து விட்டார். அவர் கண்களைத் திறந்து பார்த்தபோது, தம்முடைய ஆசிரமத்தில், தம்முடைய இருக்கையில் அப்படியே அமர்ந்திருப்பதைக் கண்டார்".

கோடிக்கணக்கான வருடங்கள் இறைவழிபாடு செய்ததற்குப் பிறகு அந்த முனிவர் மேற்கண்ட தெய்வீகக் காட்சியைத் தம்முடைய இதயத்தில் கண்டார்; தம்முடைய அனுபவத்தில் உணர்ந்தார் என்பது இதிலிருந்து தெரிகிறது. வெளிஉலகில் எல்லாம் இருந்தது இருந்தபடியேதான் இருந்தன. ஆகவே, பிரளயம் என்பது யோகியின் இதயத்தில், இறைவனால் உணர்த்தப்படுகின்ற உயர் ஆன்மீக அனுபூதியாகும். இறைவழிபாடு நிறைவடையும் காலத்தில், யோகியின் இதயத்தில் உலகியல் பெருக்கு என்பது முழுமையாக அழிந்து, புலன் உணர்வுகளைக் கடந்த பரமாத்மா மட்டுமே எஞ்சியிருக்கிறார். இதுவே பிரளயம் ஆகும். வெளியில் பிரளயம்

உண்டாவது இல்லை. 'மஹா பிரளயம்' என்பது இந்த உடலில் உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே அடையப்படும் 'அத்வைத நிலையின் வரையறைக்கு அப்பாற்பட்ட இறைநிலை' ஆகும். இது முழுக்க முழுக்க ஆன்மீகச் செயல்முறையின் அனுபவப் பகுதியாகும். வெறும் அறிவைக் கொண்டு முடிவு செய்பவர்கள் மனக் குழப்பத்திற்கே வழிவகுக்கின்றனர். இது நானாகவோ அல்லது தாங்களாகவோ யாராக இருந்தாலும் சரிதான். இதுபற்றி மேலும் காணலாம். –

**மத்த பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய**
**மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ (7)**

தனஞ்ஜயனே! என்னைத் தவிர, எள்ளளவும் வேறு எந்தப் பொருளும் இல்லை. இந்தப் படைப்பு முழுவதும் ஒரே நூலில் கட்டப்பட்ட மணிகளைப் போன்று என்னிலேயே கோர்க்கப்பட்டுள்ளன. உண்மைதான்! ஆனால் இதை அறிந்து கொள்வது எப்போது? எப்பொழுது, (இந்த அத்தியாயத்தின் முதலாவது சுலோகத்திற்கு ஏற்ப) என்னைத் தவிர வேறு எதையும் விரும்பாமல் என்னிடம் மட்டுமே பற்றுணர்வு (பக்தி) கொண்டு, என்னை மட்டுமே சார்ந்தவனாக, யோகத்திலும் அதே முறையில் ஈடுபடுகிறாயோ அப்பொழுதான் இந்த உண்மையை அறிந்து கொள்வாய். யோகத்தைச் செய்யாமல் முடியாது. எனவே யோகத்தில் முழுமையாக ஈடுபடுவது அவசியமாகும்.

**ரஸோஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிசூர்யயோ:**
**ப்ரணவ : ஸர்வ வேதேஷு சப்த : கே பௌருஷம் ந்ருஷு (8)**

குந்தியின் மைந்தனே! நீரில் நானே "சுவையாவேன்". சந்திரன் மற்றும், சூரியனில் "ஒளியாவேன்" (பிரகாசம்). அனைத்து வேதங்களிலும் "ஓங்காரம்" நானே ஆவேன். (ஓ + அஹம் + கார்) நானே சுயத்தின் "அமைப்பும்" ஆவேன். ஆகாசத்தில் "ஓசையாவேன்", ஆண்களில் "ஆண்மையும்" ஆவேன். மேலும் நானே –

**புண்யோ கந்த : ப்ருதிவ்யாம் ச தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ**
**ஜீவனம் ஸர்வபூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு (9)**

பூமியின் புனிதமான "மணமும்" ஆவேன். அக்கினியில் (நெருப்பு) எரியும் "பிழம்பின் தன்மையும்" ஆவேன். மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிலும் அவற்றின் "வாழ்வும்" நானே ஆவேன். மற்றும் தபஸ்விகளில் அவர்களின் "தவமும்" நானே ஆவேன்.

**பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸநாதனம்**
**புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்வினாமஹம் (10)**

பார்த்தனே! நீ மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் ஆதியான (சனாதன) காரணம் அதாவது, "மூலவிதை" நான் என்று அறிந்து கொள். நான் அறிவாளிகளின் "அறிவாவேன்". மற்றும் தேஜஸ்விகளின் "தேஜஸும்" (பிரகாசமும்) நானேயாவேன். இந்த வரிசையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மேலும் கூறுகிறார் –

**பலம் பலவதாம் சாஹம் காமராகவிவர்ஜிதம்**
**தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப (11)**

பரத குலத்தில் சிறந்தவனே அர்ஜுனா! நான் பலசாலிகளின் ஆசைகள் மற்றும் பற்றுதல் இல்லாத "ஆன்மபலம்" ஆவேன். இந்த உலகில் எல்லோருமே பலசாலிகளாகவே தங்களை உருவாக்கிக் கொள்ள முயற்சிக்கின்றனர். சிலர் உடற்பயிற்சி செய்கின்றனர். இன்னும் சிலரோ அணுஆயுதச் சேகரிப்பில் இறங்குகின்றனர். ஆனால் ஸ்ரீகிருஷ்ணர் இவற்றையெல்லாம் பலம் என்று கூறவில்லை. மாறாக ஆசை (காமம்) மற்றும் விருப்பம் (ராகம்) ஆகியவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட "ஆன்மபலம்" எதுவோ, அதுவே நானாவேன். அதுவே உண்மையான பலமும் ஆகும். மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிலும் தோன்றும் தர்மத்திற்குச் சாதகமான "நல் ஆசைகள்" நானாவேன். பரபிரம்ம பரமாத்மா ஒருவரே உள்ளதொரு "தர்மம்" ஆவார். அவரே அனைவரையும் தாங்கிக் கொண்டுள்ளார். எது என்றும் நிலையான, மாறாத, நிரந்தரமான ஆன்மாவோ அதுவே தர்மம் ஆகும். அதற்கு விரோதமில்லாத நல் ஆசைகள் நானாவேன். இதற்கு முன்பும் கூட ஸ்ரீகிருஷ்ணர், 'அர்ஜுனா! என்னை அடைய வேண்டும் என்று ஆசைப்படு' என்று கூறியுள்ளார். எல்லா ஆசைகளுமே தவிர்க்கப்பட வேண்டியவை ஆகும். ஆனால், அந்த பரமாத்மாவைப் பெற வேண்டும் என்ற ஆசையோ மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். அந்த ஆசை மட்டும் இல்லையென்றால் நீங்கள் இந்த ஆன்மீக சாதனை என்று சொல்லப்படுகின்ற நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தில் ஈடுபடவே முடியாது. அவ்வாறு இறைவனை அடைய வேண்டும் என்ற ஆசையும் கூட என்னுடைய வரமே ஆகும்.

**யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ்தாமஸாஸ்ச யே**
**மத்த ஏவேதி தான்வித்தி ந த்வஹம் தேஷு தே மயி (12)**

மேலும், ஸத்துவ குணத்தில் இருந்து உற்பத்தியாகும் உணர்வு, ரஜோ குணம் மற்றும் தமோ குணத்தில் இருந்து உற்பத்தியாகும் உணர்வு – இவை அனைத்தும் என்னிலிருந்தே உற்பத்தியாகின்றன என்று அறிந்து கொள். ஆனால், சரியாகச் சொல்வதென்றால், நான் அவற்றிலோ அல்லது அவைகள் என்னிலோ

இல்லை. ஏனெனில், நானும் அவற்றில் மூழ்கிப் போவதில்லை, மற்றும் அவைகளும் என்னுள் நுழைய முடியாது. ஏனென்றால் எனக்குக் கர்மத்தில் பற்று இல்லை. நான் எதிலும் ஒட்டாதவன், புனிதமானவன். இவற்றில் இருந்து நான் பெறுவது ஒன்றும் இல்லை. எனவேதான் இவற்றால் எனக்குள் பிரவேசிக்க முடிவதில்லை. அவ்வாறு இருந்த பிறகும் கூட –

எவ்விதமாக ஆன்மா இருப்பதாலேயே உடலுக்குப் பசியும் தாகமும் உண்டாகிறது என்றிருந்தாலும் கூட அந்த ஆன்மாவிற்கு உணவு மற்றும் தண்ணீரினால் எந்தப் பயனும் இல்லையோ அதுபோன்றே, இயற்கையானது பரமாத்மா இருப்பதால்தான் தன்னுடைய காரியத்தைச் செய்ய முடிகிறது. ஆனால் பரமாத்மாவோ இயற்கையின் குணம் மற்றும் செயல்களில் எந்தத் தொடர்பும் இல்லாமல் புனிதமானவராகவே இருக்கிறார்.

**த்ரிபிர்குணமயைர்பாவைரேபி : ஸர்வமிதம் ஜகத்**
**மோஹிதம் நாபிஜானாதி மாமேப்ய : பரமவ்யயம் (13)**

ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் – இந்த மூன்று குணங்களின் செயல்பாட்டு உணர்வுகளால் இந்த ஒட்டு மொத்த உலகமுமே மோகத்தில் ஆழ்ந்து இருக்கிறது. எனவேதான் உலகம் இந்த மூன்று குணங்களுக்கும் அப்பாற்ப்பட்டவனாகிய அழிவற்றவனாகிய என்னை, தத்துவமாக, நல்ல முறையில் அறிந்து கொள்வது இல்லை. நான் இந்த மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவன் ஆவேன். அதாவது எதுவரைக்கும் குறைந்த அம்சத்தில் கூட இந்தக் குணங்களின் திரையானது மூடியுள்ளதோ, அதுவரைக்கும் எவராலும் என்னை அறிந்து கொள்ளவே முடியாது. அத்தகையவன் இன்னும் முன்னேறிச் செல்ல வேண்டியுள்ளது. அவன் இன்னும் ஆன்மீகப்பாதையில் வெறும் பயணிதான். மேலும்

**தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா**
**மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே (14)**

இந்த மூன்று குணங்களால் ஆன என்னுடைய அற்புதமான மாயை கடப்பதற்கு அரியது. ஆனால், எவர் என்னை நிரந்தமாக இறைவழிபாடு செய்கிறாரோ, அவரே இந்த மாயையைக் கடந்து செல்ல முடியும். இந்த மாயையானது தெய்வீகமானதுதான். ஆனால் அதற்காக ஊதுபத்திகளை எல்லாம் கொளுத்தி வைத்துக் கொண்டு அதையே பூஜை செய்யத் தொடங்கி விடக்கூடாது. அதைக் கடந்து செல்ல வேண்டும்.

**ந மாம் துஷ்க்ருதினோ மூடா : ப்ரபத்யந்தே நராதமா :**
**மாயயாபஹ்ருதஜ்ஞானா ஆஸுரம் பாவமாஸ்ரிதா (15)**

எவர் என்னை நிரந்தரமாக இடைவிடாது வழிபடுகிறாரோ அவரே என்னை அறிகிறார். அவ்வாறு இருந்தும் கூட மக்கள் என்னை வழிபடுவது இல்லை. ஏனெனில் மாயையின் மூலமாக எவருடைய ஞானம் அபகரிக்கப்பட்டு விட்டதோ, அசுர சுபாவத்தைப் பெற்றுள்ள, மனிதர்களிலேயே மிகவும் இழிவான, காமம், கோபம் முதலான இழிவான செயல்களைச் செய்கின்ற, அறிவற்ற மூடர்களும் என்னை வழிபடுவது இல்லை. அப்படியென்றால் யார் வழிபடுகிறார்கள்?

**சதுர்விதா பஜந்தே மாம் ஜனா : ஸுக்ருதினோர் ஜுன**
**ஆர்த்தோ ஜிஞ்ஞாஸுரர்த்தார்த்தி ஜ்ஞானீ ச பரதர்ஷப (16)**

பரத குலத்தில் சிறந்தவனே அர்ஜுனா! **ஸுக்ருதின** : – 'உத்தமம்' அதாவது நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தை (எதனுடைய இறுதி விளைவில் மேலானதும், உயர்ந்ததுமாகிய இறைவன் அடையப்படுகிறாரோ அந்தக் கர்மத்தைச்) செய்கின்றவர் **அர்த்தார்த்தி** – அதாவது ஆசைகளுடன் கர்மத்தில் ஈடுபடுபவர், **ஆர்த்த:** அதாவது துக்கத்திலிருந்து விடுபடும் விருப்பம் கொண்டவர், **ஜிஞ்ஞாஸு** அதாவது, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்ளும் விருப்பம் உடையவர், மற்றும் **ஜ்ஞானி** – அதாவது இறைவனுள் நுழைவு பெறுகின்ற நிலையில் இருப்பவர் – இந்த நான்கு வகையான பக்தர்கள் என்னை வழிபடுகின்றனர்.

'**அர்த்தம்**' என்பதற்கு 'நமது உடல் மற்றும் அது தொடர்பானவற்றை நிறைவேற்றுபவை' எதுவோ, அதுவேதான் 'அர்த்தம்', (செல்வம்) எனப்படுகிறது. ஆசைகள் அனைத்தும் முதலில் பகவான் மூலமாக நிறைவடைகின்றன. ஸ்ரீகிருஷ்ணர், 'அவற்றை எல்லாம் நானே நிறைவேற்றுகிறேன்' என்று கூறுகிறார். ஆனால் இதுமட்டுமே முழுமையான அர்த்தம் (செல்வம்) என்றாகி விடாது. ஆன்மீகச் செல்வமே நிலையானது. அதுவே உண்மையான அர்த்தம் ஆகும்.

உலகியல் சார்புடைய அர்த்தத்தைக் (செல்வம்) கொஞ்சம் கொஞ்சமாக நிறைவேற்றியபடியே, பகவான் உண்மையான அர்த்தமாகிய ஆன்மீகச் செல்வங்களை நோக்கி நம்முடைய கவனத்தை உயர்த்துகிறார். ஏனெனில், வெறுமனே உலகியல் ஆசைகளை நிறைவேற்றிக் கொண்டே செல்வதால் மட்டுமே எனது பக்தன் முழுமையான சுகத்தைப் பெற்று விடமாட்டான் என்பது பகவான் அறிந்ததே. எனவேதான் அவர் ஆன்மீகச் செல்வத்தையும் (தெய்வீக குணங்கள்) அவனுக்குத் தர ஆரம்பிக்கிறார். **லோக் லாஹு பரலோக் நிபாஹு** –

இகவுலகத்திலும் இலாபம், பரலோகத்திலும் நிர்வாகம் – இவை இரண்டும் பகவானிடம் இருந்து கிடைக்கும் பொருட்களாகும். அவர் தமது பக்தர்கள் யாரையும் வெறும் கையுடன் நிர்க்கதியாக விடுவது இல்லை.

**ஆர்த்த** : – துக்கத்தில் இருப்பவர், **ஜிஞ்ஞாஸு** : பூரணமான முறையில் என்னை அறிந்து கொள்ளும் விருப்பமுடைய, ஆன்மீக ஆர்வம் மிகுந்தவரும் என்னை வழிபடுகின்றனர். ஆன்மீக சாதனையின் முதிர்ச்சியடைந்த, பரிபக்குவ நிலையில் என்னை நேரடியாக தரிசனம் (பிரத்யட்ச தரிசனம்; கண்கூடாக) செய்து அறிந்து கொள்ளும் நிலையில் உள்ள **ஞானியும்** என்னை வழிபடுகிறார். இம்முறையில், நான்கு வகையான பக்தர்கள் என்னை வழிபடுகிறார்கள். இவர்களில் ஞானியே மிகவும் சிறந்தவர் ஆவார். அதாவது ஞானியும் பக்தரே. இவர்கள் அனைவரிலும் கூட –

**தேஷாம் ஜ்ஞானீ நித்யயுக்த ஏகபக்திர்விஷிஷ்யதே**
**ப்ரியோ ஹி ஜ்ஞானினோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய : (17)**

அர்ஜுனா! அவர்களை விடவும், எப்பொழுதும் என்னிலேயே ஒன்றுபட்ட உணர்வில் நிலைத்தவராக, என்னைத் தவிர வேறு எதன் மீதும் விருப்பம் இல்லாதவராக, என்னிடம் மட்டுமே பக்தியுடைய **(அனன்ய பக்தி)** ஞானியே மிகவும் உயர்ந்தவர் ஆவார். ஏனெனில், என்னை நேரடியாக தரிசனம் செய்து (சாட்சாத்காரத்துடன்) அறிந்து கொண்ட ஞானிக்கு நான் மிகவும் பிரியமானவன் ஆவேன். அதே போன்று, அந்த ஞானியும் எனக்கு மிகவும் பிரியமானவர் ஆவார். அந்த ஞானி என்னுடைய ஸ்வரூபமே ஆவார்.

**உதாரா : ஸர்வ ஏவைதே ஜ்ஞானீ த்வாத்மைவமே மதம்**
**ஆஸ்த்தித : ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம் (18)**

எது எப்படி இருந்தாலும் இந்த நான்கு வகையான பக்தர்களுமே தாராளமான குணம் உடையவர்கள்தான். (எந்த வகையில் அவர்கள் உதார குணத்துடன் தாராளமாக நடந்து கொண்டு விட்டனர்? நீங்கள் பக்தி செய்ததன் மூலமாக இறைவனுக்கு ஏதேனும் கிடைத்து விட்டதா என்ன? பகவானிடம் ஏதோ குறைவாக இருந்தது, என்று நீங்கள் அதனை முழுமையாக்கி விட்டீர்களா என்ன? அப்படி எதுவும் இல்லை. உண்மையில் யார் உதார குணம் உடையவர் என்றால், யார் தன்னுடைய ஆன்மாவை அதோகதிக்குத் தள்ளாமல், அதனை உயர்நிலைக்கு முன்னேற்றுவதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறாரோ, அவரே ஆவார். இந்த முறையில் இவர்கள் அனைவருமே (தாராளகுணம்) உதார குணம் உடையவர்கள்தான்.) ஆனால், ஞானியோ சாட்சாத் என்னுடைய ஸ்வரூபமே ஆவார். இதுவே

என்னுடைய உறுதியான கருத்தாகும். ஏனெனில், அந்த நிலையான, உறுதியான புத்தியையுடைய ஞானியாகிய பக்தரோ என்றும் உத்தமமான இயல்பு வடிவமாகிய என்னிலேயே நிலை பெற்றுவிட்டார். அதாவது, அவரே நான்; அவர் இருக்கிறார், எனக்கும் அவருக்கும் இடையில் எந்த வேறுபாடும் இடைவெளியும் இல்லை. இதையே மீண்டும் வலியுறுத்தியபடியே –

**பஹூனாம் ஜன்மனாமந்தே ஜ்ஞானவான்மாம் ப்ரபத்யதே**
**வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப : (19)**

ஆன்மீகப் பயிற்சியை இடைவிடாமல் செய்து கொண்டே சென்று, எண்ணற்ற பிறவிகளுக்குப் பிறகு, கடைசிப் பிறவியில், அதாவது, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்திநிலை பெறுகின்ற பிறவியில், சாட்சாத்காரமடைந்த ஞானியானவர், அனைத்தும் வாசுதேவரே! என்ற உணர்வுடன் என்னை வழிபடுகிறார். அப்படிப்பட்ட மஹாத்மா கிடைப்பது மிகவும் அரிதான ஒன்றாகும். அவர் ஏதோவொரு வாசுதேவரின் சிலையை வடித்துக் கொண்டு, அதற்குமுன் நின்று தொழுது கொண்டிருப்பதில்லை. மாறாக, தம்முடைய அகத்திலேயே அந்தப் பரம தெய்வம் வாசம் செய்வதைப் பார்க்கிறார். அந்த ஞானியாகிய மஹாத்மாவையே ஸ்ரீகிருஷ்ணர் தத்துவதரிசி என்ற பெயரிலும் அழைக்கிறார். இத்தகைய மஹாபுருஷர்களால் மட்டுமே வெளியுலகச் சமுதாயத்திற்கு நன்மை உண்டாகும் வாய்ப்பு உள்ளது. இந்த வகையிலான, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்ட தத்துவதரிசி மஹாபுருஷர் கிடைப்பது என்பது ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளில் சொல்லப் போனால் மிகவும் அரிதான ஒன்றாகும்.

ஆன்மீக வாழ்க்கை **(ச்ரேய)**, உலகியல் இன்பங்கள் **(ப்ரேய)** அதாவது முக்தி மற்றும் உலகியல் போகம் ஆகிய இரண்டுமே பகவானிடமிருந்துதான் கிடைக்கிறது எனும்பொழுது எல்லோருமே ஒன்றுபோல் அந்த பகவானைத்தானே வழிபாடு செய்ய வேண்டும்? அவ்வாறு இருந்தும் கூட மக்கள் அந்த பகவானை வழிபடுவது இல்லையே? ஏன்? ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளில் சொல்லப்போனால் –

**காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞானா: ப்ரபத்யந்தேன்யதேவதா:**
**தம்-தம் நியமமாஸ்த்தாய ப்ரக்ருத்யா நியதா : ஸ்வயா (20)**

'அந்த தத்துவதரிசி மஹாத்மா அல்லது பரமாத்மாவே எல்லாம்' என்பதை மக்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. ஏனெனில், உலகியல் இன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசைகளின் மூலமாக அவர்களுடைய விவேகம் அபகரிக்கப்பட்டுள்ளது. எனவேதான், அவர்கள் தங்களுடைய இயற்கை குணங்கள்,

அதாவது, பிறவி பிறவிகளாகச் சேகரித்து வைத்துள்ள வினைகளின் (சம்ஸ்காரங்கள்) மூலமாக உண்டான சுபாவத்தால் தூண்டப்பட்டு பரமாத்மாவாகிய என்னிலிருந்து வேறுபட்ட மற்றபிற தெய்வங்கள் (தேவதைகள்) மற்றும் அவைகளை வழிபடுவதற்காகச் சொல்லப்பட்டிருக்கும், வழக்கத்தில் நிலவி வருகின்ற, எண்ணற்ற பூஜைவிதிமுறை நியமங்களின் சரணத்தை ஏற்றுக் கொள்கின்றனர். இங்கே மற்றபிற தெய்வங்கள் (அன்ய தேவதை) பற்றிய பேச்சு முதன் முறையாக இடம் பெற்றுள்ளது.

**யோ யோ யாம் யாம் தனும் பக்த ச்ரத்தயார்ச்சிதுமிச்சதி**
**தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் (21)**

உலகியல் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகக் கர்மத்தில் ஈடுபடுகின்ற (பலனை விரும்பும்) எந்தெந்த பக்தர்கள் எந்தெந்த தெய்வங்களின் (தேவதைகளின்) உருவங்களை நம்பிக்கையுடன் பூஜிக்க விரும்புகிறார்களோ, அந்தந்த தெய்வங்களின் மீது அந்தந்த பக்தர்களுடைய நம்பிக்கையை நானே நிலைக்கச் செய்கிறேன்.

'நானே நிலைக்கச் செய்கிறேன்'; ஏனெனில் தேவதை என்று ஒரு பொருள் ஏதேனும் இருந்தால்தானே அந்த தேவதை தன்மீது நம்பிக்கையை (சிரத்தையை) நிலைக்கச் செய்திருக்கும்!

**ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ்தஸ்யாராதனமீஹதே**
**லபதே ச தத: காமான்மயைவ விஹிதான்ஹி தான் (22)**

அந்த மனிதனும் அந்த நம்பிக்கையுடன் கூடியவனாக அந்த தெய்வ விக்கிரஹத்தைப் (சிலைகளை) பூஜை செய்வதில் மூழ்கிப் போய்விடுகிறான். மேலும், அந்த தேவதையின் பெயரால், என் மூலமாக படைக்கப்படுகின்ற, அவன் ஆசைப்பட்ட உலகியல் இன்பங்களையும் அவன் சந்தேகமேயில்லாமல் பெற்று அனுபவிக்கவும் செய்கிறான். இந்த உலகியல் இன்பங்களைத் தருவது யார்? 'நானேதான் தருகிறேன்'. அவனுடைய சிரத்தையின் (நம்பிக்கையின்) விளைவாகத்தான் அவனுக்கு அந்த உலகியல் இன்பங்கள் அனுபவிக்கக் கிடைக்கின்றனவே தவிர, ஏதோவொரு தெய்வம் கொடுத்த வரத்தால் அன்று; சரி, அவனுக்குத்தான் பலன் என்னவோ கிடைத்து விட்டது. பிறகு இதில் என்ன கெடுதல் இருக்கிறது? அதுபற்றிக் கூறுகிறார் –

**அந்தவத்து ஃபலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்**
**தேவான்தேவயஜோ யாந்தி மத்பக்த்தா யாந்தி மாமபி (23)**

ஆனால் அந்தத் தாழ்ந்த அறிவுடையவர்களுக்குக் கிடைக்கின்ற அந்தப் பலன் அழிந்து போகும் தன்மை உடையது. இன்று அந்தப் பலன் கிடைத்தாலும் அதை அனுபவிக்க, அனுபவிக்க அழிந்து போய்விடுகிறது. எனவேதான் அழிந்து போகும் தன்மை உடையது எனப்படுகிறது. தெய்வங்களை வழிபடுபவர்கள் தெய்வங்களையே அடைகிறார்கள். அதாவது, தெய்வங்களுமே அழிந்து போகும் தன்மை உடையவைகள்தாம். தெய்வங்கள் (தேவதைகள்) முதல் இந்த ஒட்டு மொத்த உலகமும் மாற்றத்திற்கு உட்பட்டவைகள் தாம்; அவைகள் அனைத்தும் மரணத்தின் ஆளுமைக்குள்ளேதான் இருக்கின்றன. என்னுடைய பக்தனோ என்னையே அடைகிறான்; புலன் உணர்வுக்கு அப்பாற்பட்டதாகிய, ஆத்மார்த்தமான பரம அமைதியைப் பெறுகிறான்.

மூன்றாவது அத்தியாயத்தில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "இந்த வேள்வியின் மூலமாக நீங்கள் தேவதைகளை, தெய்வீகச் செல்வங்களைப் (தெய்வீகக் குணங்கள்) பெருகச் செய்யுங்கள். எவ்வளவுக்கு எவ்வளவு தெய்வீகச் செல்வங்கள் பெருகுகின்றனவோ, அவ்வளவுக்கு அவ்வளவு நீங்கள் ஆன்மீகத்தில் முன்னேறுவீர்கள். படிப்படியாக உன்னதமடைந்து கொண்டே சென்று மிகவும் உயர்ந்ததாகிய இறைநிலையைப் பெற்று விடுங்கள்" என்று கூறினார்.

இங்கே தேவதை என்று குறிப்பிடப்படுவது தெய்வீகச் செல்வங்களின் (தெய்வீகக் குணங்கள்) சமூகம் ஆகும். அவற்றின் மூலமாக பரம தெய்வமாகிய பரமாத்மாவின் தேவத்துவம் அடையப் பெறுகிறது. தெய்வீகச் செல்வங்கள் மோட்சத்திற்கு வழிவகுக்கின்றன. அவற்றில் மொத்தம் இருபத்தி நான்கு இலட்சணங்களைப் பற்றிய நிரூபணம் கீதையின் பதினாறாவது அத்தியாயத்தில் விரிவாக எடுத்து உரைக்கப்பட்டுள்ளன.

'தேவதை' என்பது இதயத்தின் அடியாழத்தில் பரம தெய்வமாகிய பரமாத்மாவின் தேவத்துவத்தைப் பெற்றுத்தரவல்ல நற்குணங்களின் (ஆன்மீக குணநலன்கள்) பெயராகும். இதுமுழுக்க முழுக்க, அகம் சம்பந்தப்பட்ட விஷயமாக இருந்தாலும், காலப்போக்கில் மக்கள் அனைவரும் அகம் தொடர்பான இவற்றைப் புறத்தில் (வெளியுலகில்) காணும் முயற்சியில் ஈடுபடத் தொடங்கிவிட்டனர். சிலைகளை வடிக்க ஆரம்பித்தனர். கர்ம காண்டங்களை (பல்வேறு விதமான யாகங்கள், பூஜைகள் பற்றிய விதிமுறைகள்) உருவாக்கினர். அதுமட்டுமின்றி உண்மையிலிருந்து வெகுதூரம் விலகியும் போய்விட்டனர். ஸ்ரீகிருஷ்ணர் இந்த மனக் குழப்பங்களையெல்லாம் நீக்குவதற்குத் தேவையான சரியான விளக்கங்களை நான்கு சுலோகங்களில் தந்தருளியுள்ளார். கீதையில் முதன்முறையாக மற்றபிற தெய்வங்கள் (அன்ய தேவதைகள் – அதாவது பரம்பொருளாகிய ஏக இறைவனைத் தவிர மற்ற கடவுள்கள்) என்ற பெயரைக் குறிப்பிட்டு, அதுபோன்ற தெய்வங்கள்

இல்லவே இல்லை என்று ஆணித்தரமாக எடுத்துரைக்கிறார். “மக்களின் நம்பிக்கை எங்கெல்லாம் வளைந்து கிடக்கின்றதோ, அங்கெல்லாம் நானே முன்னின்று அவர்களின் நம்பிக்கையை’ (சிரத்தையை) வலுப்படுத்துகிறேன். மேலும், நானேதான் அவர்களுக்குப் பலனையும் அளிக்கிறேன். அந்தப் பலன் நிலையற்றது; அழியும் தன்மை உடையது. பலனும் அழிந்து போகிறது. அந்த தேவதையும் அழிந்து போகிறது. அந்த தேவதைகளை வழிபட்டவனும் அழிந்து தான் போய் விடுகிறான். எவருடைய விவேக அறிவு மழுங்கிப் போய் உள்ளதோ, அத்தகைய மூட அறிவினர்தான் மற்ற பிற தெய்வங்களை வழிபடுகின்றனர். ஏக இறைவனைத் தவிர, மற்றபிற தெய்வங்களை வழிபடுகின்ற வழிமுறையே உண்மைக்குப் புறம்பான பொருத்தமற்ற செயலாகும் என்பது வரைக்கும் ஸ்ரீகிருஷ்ணர் கூறியருள்கிறார். (மேலும் பார்க்கவும் அத்தியாயம் **9/23**)

**அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய :**
**பரம் பாவமஜானந்தோ மமாவ்யயமனுத்தமம் (24)**

எது எப்படி இருந்தாலும், தெய்வங்களின் பெயரால், ஒரு பொருளும் இல்லவே இல்லை என்ற போதிலும், கிடைக்கின்ற பலனும் அழிந்து போகக் கூடியது என்றிருக்கும் போதும் கூட மக்கள் அனைவரும் என்னை வழிபடுவதில்லை. ஏனெனில், புத்தி இழந்த மனிதர்கள் (முந்தைய சுலோகத்தில் கூறப்பட்டுள்ளதுபோல் உலகியல் ஆசைகளால் எவர்களுடைய ஞானம் அபகரிக்கப்பட்டுவிட்டதோ அத்தகையோர்) என்னுடைய, அனைத்தையும் விட உத்தமமான, அழிவற்ற, மேலான ஆளுமையை நல்ல முறையில் அறிந்து கொள்வதில்லை. எனவேதான் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட பரமபுருஷராகிய என்னைப் புலன்களுக்குத் தென்படுகின்ற சாதாரண உணர்வைப் பெற்றுள்ளவராகவே கருதுகின்றனர். சாதாரண மனிதர் என்றே நினைக்கின்றனர். அதாவது ஸ்ரீகிருஷ்ணரும் மனித உடல் தரித்திருந்த, யோகியாகவும் இருந்தார்; யோகேஷ்வரராகவும் இருந்தார். எவர் தாமும் யோகியாகவும் மற்றவர்களுக்குள்ளும் யோகத்தை விழிப்புணர்த்துகின்ற தெய்வீக வல்லமையும் கொண்டிருக்கிறாரோ அவரே யோகேஷ்வரர் என்று அழைக்கப்படுகிறார். ஆன்மீக சாதனையின் சரியான வழியில் சென்று படிப்படியாக உயர்வடைந்து கொண்டே போகும் மஹாபுருஷரும் அதே இறைப் பேருணர்வில் (பரம பாவம்) நிலை பெற்று விடுகிறார். அவர் உடல் கொண்டிருப்பவராக இருந்த போதிலும் கூட, புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட ஆன்ம ஸ்வரூபத்தில் நிலைத்திருக்கிறார். அப்படியிருந்தும் கூட உலகியல் ஆசைகளால் கட்டுண்டிருக்கும் மந்த புத்திக்காரர்கள் அவரை சாதாரண மனிதராகவே கருதுகின்றனர். அவர்கள், இவரும் நம்மைப் போலவேதான் பிறந்து இருக்கிறார். அப்படிப்பட்ட ஒருவர் எப்படி பகவானாக இருக்க முடியும்? என்றே

எண்ணுகின்றனர். இதில் அந்தப் பரிதாபத்திற்குரிய மனிதர்களின் தவறுதான் என்னவாக இருக்க முடியும்? கண்களைக் கொண்டு பார்க்கும் போது, அவர்களுக்கு மஹாபுருஷர்களின் ஸ்தூல சரீரம் தானே (உடல்) தென்படுகிறது. அவர்களால் மஹாபுருஷர்களின் உண்மையான ஆன்ம ஸ்வரூபத்தைக் காண முடிவதில்லையே ஏன்? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் மூலமாகவே கேட்போம். –

**நாஹம் ப்ரகாச : ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத :**
**மூடோயம் நாபிஜானாதி லோகோ மாமஜமவ்யயம் (25)**

சாதாரண மனிதர்களுக்கு மாயை ஒரு திரையாகும். அதன் மூலமாகப் பரமாத்மா முழுவதுமாக மறைக்கப்பட்டு உள்ளார். யோக சாதனையைப் புரிந்து கொண்டு அவர்கள் அதில் ஈடுபடத் தொடங்குகிறார்கள். இதற்குப் பிறகு, 'யோகமாயை' அதாவது 'யோகக் கிரியையும்' கூட ஒரு திரைதான். யோகத்தைக் கடைப்பிடித்துக் கொண்டே சென்று, அதனுடைய உச்சக்கட்ட நிலையான, யோகம் கைகூடுகின்ற சமயம் வந்த பிறகு, திரை மறைவாக இருந்த பரமாத்மா அறியப்படுகிறார். யோகேஷ்வரர் "நான் என்னுடைய யோக மாயையால் என்னை மறைத்துக் கொண்டு இருக்கிறேன். யோகத்தின் பரிபக்குவமான நிலையை அடைந்தவர்தான் என்னை உள்ளது உள்ளபடிக்கு தரிசனம் செய்து அறிந்து கொள்ள முடியும். நான் அனைவருக்கும் வெட்ட வெளிச்சமாகத் தெரிவது கிடையாது. எனவேதான் இந்த அஞ்ஞானம் நிறைந்த மனிதர்கள் என்னுடைய பிறப்பற்ற (அவருக்கு எப்பொழுதுமே பிறவியெடுக்க வேண்டியதில்லை) அழிவற்ற, (அவருக்கு ஒருபோதும் அழிவு என்பதே கிடையாது) புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட ஆன்ம ஸ்வரூபத்தை (அவருக்கு மீண்டும் புலன் உணர்வு நிலைக்கு இறங்கிவர வேண்டியதில்லை) அறிந்து கொள்வது கிடையாது. அர்ஜுனனும் கூட ஸ்ரீகிருஷ்ணரைத் தம்மைப் போன்றதொரு சாதாரண மனிதராகவே முதலில் எண்ணியிருந்தான். ஸ்ரீகிருஷ்ணர் மூலமாக தெய்வீகப் பார்வை (திவ்ய த்ருஷ்டி) கிடைத்த பிறகு அதே அர்ஜுனன் நடுநடுங்கியவாறு பிரார்த்தனை செய்யலானான். சரியாகச் சொல்வதென்றால், 'புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட ஆன்ம ஸ்வரூபத்தில் நிலைபெற்றுள்ள மஹாபுருஷரை அடையாளம் கண்டு கொள்வதில் நாமெல்லோருமே குருடர்கள் தான்' என்றால் அது மிகையாகாது. மேலும் கூறுகிறார்.

**வேதாஹம் ஸமதீதானி வர்த்தமானானி சார்ஜுன**
**பவிஷ்யாணி ச பூதானி மாம் து வேத ந கஸ்ச்சன (26)**

அர்ஜுனா! நான் இறந்த காலம், நிகழ்காலம், மற்றும் எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் உள்ள மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களையும்

அறிவேன். ஆனால் என்னை யாரும் அறியார். அவர்களால் ஏன் அறிந்து கொள்ள முடியவில்லை? –

**இச்சாத்வேஷஸமுத்தேன த்வந்த்வமோஹேன பாரத**
**ஸர்வ பூதானி ஸம்மோஹம் ஸர்க்கே யாந்தி பரந்தப (27)**

பரத குலத்தவனே அர்ஜுனா! விருப்பம் மற்றும் வெறுப்பு அதாவது ராகம் (விருப்பு) மற்றும் துவேஷம் ஆகிய இருமைகளின் (ஒன்றுக்கொன்று வேறுபட்ட உணர்வுகள்) மீதுள்ள மோகத்தால் ஆட்கொள்ளப்பட்டு இவ்வுலகில் வாழும் மனிதர்உட்பட எல்லா உயிரினங்களும் கட்டுக்கடங்காத மோகத்தால் ஆட்கொள்ளப்படுகின்றன. எனவேதான் அவற்றால் என்னை அறிந்து கொள்ள முடிவது இல்லை. சரி, இவ்வாறானால் யாராவது அறிந்து கொள்ள முடியுமா? அல்லது முடியவே முடியாதா? யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார் –

**யேஷாம் த்வந்தகதம்பாபம் ஜனானாம் புண்யகர்மணாம்**
**தே த்வந்த்வமோஹநிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதா : (28)**

ஆனால் 'புண்ணிய கர்மம்' (எந்தக் கர்மம் பிறப்பு – இறப்பை முடிவிற்குக் கொண்டு வரும் வல்லமை கொண்டதோ, எந்தக் கர்மத்திற்குச் செய்யத் தகுதியுடைய கர்மம் (கார்யம் கர்மம்) நியமிக்கப்பட்டுள்ள கர்மம் (நியத கர்மம்) வேள்வியின் செயல்முறை என்றெல்லாம் ஒன்றுக்குப் பலமுறை குறிப்பிடப்பட்டு விளக்கம் தரப்பட்டுள்ளதோ அந்தக் கர்மம்) செய்பவராகிய, எந்த பக்தருடைய எல்லாப் பாவங்களும் அழிந்து போய்விட்டதோ, அவர், விருப்பம் – வெறுப்பு ஆகிய இருமைகளின் மீதுள்ள மோகத்தில் இருந்து மிகவும் சிறந்த முறையில் தம்மை விடுவித்துக் கொண்டு, தாம் மேற்கொண்டுள்ள விரதத்தில் திடமாக நிலைத்து நின்று என்னை வழிபடுகிறார். எதற்காக வழிபடுகிறார்?

**ஜராமரணமோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே**
**தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்னம்அத்யாத்மம் கர்ம சாகிலம் (29)**

எவர் என்னைச் சரணமடைந்து பிறப்பு மற்றும் இறப்பிலிருந்து முக்தியடையும் முயற்சியை மேற்கொள்கிறாரோ, அவரே அந்த பிரம்மத்தை, முழுமையான ஆன்மீகத்தை, முழுமையான கர்மத்தை அறிந்து கொள்கிறார். மேலும் இதே வரிசையில் –

**சாதி பூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யே-விது :**
**ப்ரயாணகாலேபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ (30)**

எவர் **அதிபூதம், அதிதைவம்,** மற்றும் **அதியக்ஞம்** ஆகியவற்றுடன் சேர்த்து என்னை அறிந்து கொள்கிறாரோ, என்னிலேயே ஒன்று கலந்து விட்ட

சித்தத்தை உடைய அவர் கடைசிக் காலத்திலும் கூட என்னையேதான் அறிகின்றார். என்னிலேயேதான் நிலைத்து இருக்கிறார், எப்போதும் என்னையேதான் அடைகிறார். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் இருபத்திஆறு மற்றும் இருபத்தி ஏழாவது சுலோகங்களில், “என்னை யாரும் அறியார். ஏனெனில், அவர்கள் மோகத்தால் பீடிக்கப்பட்டவர்கள்” என்று கூறினார் அல்லவா! ஆனால், எவர் அந்த மோகத்தில் இருந்து விடுபடுவதற்கான முயற்சியுடையவரோ அவர்

**1. ஸம்பூர்ண பிரம்மம் 2. ஸம்பூர்ண ஆன்மீகம் 3. ஸம்பூர்ண கர்மம் 4. ஸம்பூர்ண அதிபூதம் 5. ஸம்பூர்ண அதிதைவம்** மற்றும் **6. ஸம்பூர்ண அதியக்ஞத்துடன்** சேர்த்து என்னை அறிந்து கொள்கிறார். அதாவது, “ இவை அனைத்தின் இறுதிவிளைவும் நானே (ஸத்குரு) ஆவேன், என என்னை அறிந்து கொள்கிறார்! ஆகவே, என்னை யாருமே அறிந்து கொள்ள முடியாது என்பதன்று பேச்சு.”

**முடிவுரை :** –

இந்த ஏழாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், “என்னைத் தவிர வேறு எதையும் விரும்பாமல், என்னை மட்டுமே விரும்புகின்ற (அனன்ய பாவம்) உணர்வு பூர்வமாக, என்னிடமே சமர்ப்பணமாகி, என்னை மட்டுமே சார்ந்து கொண்டு, எவர் யோகத்தில் ஈடுபடுகிறாரோ அவரே என்னைப் பரிபூரணமான வடிவில் முழுவதுமாக அறிந்து கொள்கிறார்” என்று கூறினார். என்னை அறிந்து கொள்வதற்காக ஆயிரக்கணக்கான மனிதர்களில் யாரோ ஒரு சிலரே முயற்சிக்கின்றனர். மேலும், அவ்வாறு முயற்சி செய்பவர்களிலும் யாரேனும் ஒருசிலர் மட்டுமே என்னை அறிந்து கொள்கிறார்கள். அத்தகையவர் என்னை வெறும் ஸ்தூல உடலில் (பிண்டரூபம்) இருப்பவராக, எல்லைக்கு உட்பட்டவராகப் பார்க்காமல், எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவராகக் காண்கிறார். எட்டுவகையான வேறுபாடுகளைக் கொண்டதுதான் என்னுடைய ஜடப் பிரகிருதி ஆகும். மேலும், அதன் அடியாழத்தில் உயிர் வடிவாகத் (ஜீவரூபம்) திகழ்வதுதான் என்னுடைய உயிர் உணர்வுடைய சேதனா பிரகிருதி ஆகும். இவ்விரண்டு வகையான பிரகிருதிகளின் சேர்க்கையால்தான் ஒட்டு மொத்த உலகமும் உருவாக்கப்பட்டு நிலைநிறுத்தப்பட்டுள்ளது. என் மூலமாகத்தான் **தேஜஸும்** (பலமும்) கிடைக்கிறது. விருப்பம் மற்றும் கீழ்த்தரமான புலன் இன்ப ஆசைகள் (காமம்) இல்லாத ஆன்ம பலம் மற்றும் தர்மத்திற்குச் சாதகமான நல்லாசைகள் ஆகியவையும் நானே ஆவேன். எப்படியென்றால் எல்லா ஆசைகளுமே தவிர்க்கப்பட வேண்டியவைகளாகும். ஆனால் என்னை அடைய வேண்டும் என்று மட்டுமே ஆசைப்படு. அப்படியொரு ஆசை உதயமாவதே என்னுடைய வரத்தினால்தான். பரமாத்மாவை அடைய வேண்டும் என்ற ஆசை ஒன்றுதான் தர்மத்திற்குச் சாதகமான ஆசையாகும்.

ஸ்ரீகிருஷ்ணர், ‘‘நான் மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவன். இறைவனைத் தொட்டுணர்ந்து இறைப் பேருணர்வில் நிலைபெற்றவன். ஆனால், உலகியல் இன்பங்களில் கட்டுண்டிருக்கும் மூடர்கள் என்னை நேரடியாக வழிபடாமல் மற்ற பிற தெய்வங்களை வழிபடுகின்றனர். ஏனெனில் அங்கே தேவதை என்ற பெயரில் ஒரு பொருளும் இல்லை. கல், நீர், மரம் என்று எதையெல்லாம் அவர்கள் வழிபட விரும்புகிறார்களோ அங்கெல்லாம் அவர்களின் நம்பிக்கையை நானேதான் நிலைநிறுத்தி வளப்படுத்துகிறேன். மற்றும் நானே அவற்றிற்குப் பின்னால் நின்று கொண்டு அவைகளுக்கான பலன்களையும் தருகிறேன். ஏனெனில், அங்கே தெய்வம் என்ற பெயரில் எவரும் கிடையாது. எந்தவொரு தேவதையிடமும் உலகியல் ஆசைகளை நிறைவேற்றித் தருவதற்கான போகங்களும் கிடையாது. உலகம் என்னைச் சாதாரண மனிதனாக எண்ணிக் கொண்டு என்னை வழிபடுவது இல்லை; ஏனென்றால் நான் யோகமாயை, அல்லது யோகச் செயல்முறையின் மூலமாக என்னை மறைத்துக் கொண்டிருக்கிறேன். கொஞ்சம் கொஞ்சமாகப் பயிற்சி செய்து கொண்டே போய் இந்த யோக மாயையால் ஏற்பட்டு உள்ள மறைப்பைத் (திரையை) தாண்டிச் செல்பவர் மட்டுமே உடல் தரித்தவராகத் தோன்றும் என்னை, புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்பட்டு ஆன்ம ஸ்வரூபத்தில் நிலைத்திருப்பவராக அறிந்து கொள்கிறார். மற்ற பிற வழிகளின் மூலம் என்னை அறிந்து கொள்ள முடியாது.

என்னுடைய பக்தர்கள் மொத்தம் நான்கு வகைப்படுவர் – **அர்த்தார்த்தி, ஆர்த்தன், ஜிஞ்ஞாஸு** மற்றும் **ஞானி** ஆன்மீகச் சிந்தனையைத் தொடர்ந்து செய்து கொண்டே சென்று பல்வேறு பிறவிகளைக் கடந்த பிறகு, கடைசிப்பிறவியாக, இறைவனைப் பெறுகின்ற நிலையை அடைந்த விட்ட ஞானி என்னுடைய ஸ்வரூபமே ஆவார். அதாவது, எண்ணற்ற பிறவிகளில் ஆன்மீகச் சிந்தனையை மேற்கொண்டு தான் அந்த பகவத் ஸ்வரூபத்தை அடைய முடியும். விருப்பம், வெறுப்பு ஆகியவற்றின் மீதுள்ள மோகத்தால் சூழப்பட்டுள்ள மனிதர்களால் என்னை ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது. ஆனால், விருப்பம் மற்றும் வெறுப்பு ஆகியவற்றின் மீதுள்ள மோகத்தில் இருந்து விடுபட்டு நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தை (அதாவது சுருக்கமாக ஆராதனை என்று குறிப்பிடப்படுகின்ற) ஆன்மீகச் சிந்தனைப் பாதையை நிறைவேற்றியபடியே, பிறப்பு – இறப்பு ஆகியவற்றில் இருந்து விடுதலை பெறுவதற்காக முயற்சிக்கின்றவரே, ஒட்டு மொத்த உருவில் என்னை முழுவதுமாக அறிந்து கொள்கிறார். அவர், ஸம்பூர்ண பிரம்மம், ஸம்பூர்ண ஆன்மீகம், ஸம்பூர்ண அதி தெய்வம், ஸம்பூர்ண கர்மம், மற்றும் ஸம்பூர்ண வேள்வி ஆகியவற்றுடன் சேர்த்து என்னை அறிந்து கொள்கின்றார். அவர் என்னில் நுழைவு பெற்றும் விடுகிறார். மேலும், இறுதிக் காலத்திலும் கூட

என்னையே அறிகிறார். அதாவது, இதற்குப் பிறகு ஒருபோதும் அவர் மறந்து போவதில்லை.

இந்த அத்தியாயத்தில் பரமாத்மாவைப் பற்றிய 'பரிபூரண ஞானம்' தெள்ளத் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது. அத்துடன் –

ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே ஸமக்ரபோத : நாம ஸப்தமோத்தயாய:

இம்முறையில் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'ஸமக்ர போதம்' அதாவது 'பரிபூரண ஞானம்' என்ற பெயருடைய ஏழாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய
ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா :
யதார்த்த கீதா பாஷ்யே ஸமக்ர போத : நாம ஸப்த மோத்த்யாய :

ஹரி : ஓம் தத்ஸத்

இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'ஸமக்ர போதம்' அதாவது 'பரிபூரண ஞானம்' என்ற பெயருடைய ஏழாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :

## எட்டாவது அத்தியாயம்

ஏழாவது அத்தியாயத்தின் முடிவில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுவதாவது: புண்ணியக் கர்மத்தைச் (நியமிக்கப்பட்டுள்ள கர்மம், இறை ஆராதனை) செய்கின்ற யோகி எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுபட்டு, அந்த எங்கும் விரிந்தும் பரந்தும் உள்ள பிரம்மத்தை அறிகிறார். அதாவது, கர்மம் என்பது எங்கும் வியாபித்து இருக்கின்ற பிரம்மத்தை அறிந்து கொள்ளச் செய்யும் வல்லமை படைத்த ஒன்றாகும். அந்தக் கர்மத்தைச் செய்பவரே, எங்கும் வியாபித்து இருக்கின்ற பிரம்மத்தையும், ஸம்பூர்ண கர்மம், ஸம்பூர்ண அத்யாத்மம், ஸம்பூர்ண அதிதைவம், அதிபூதம் மற்றும் அதியக்ஞுத்துடன் சேர்த்து என்னை அறிந்து கொள்கிறார். ஆகவே, கர்மம் என்பது இவையனைத்தையும் அறிந்து கொள்ள வைக்கின்ற வல்லமை உடையது. அவர் இறுதிக் காலத்திலும் கூட என்னையே அறிகிறார். அவருக்குக் கிடைத்து விட்ட இந்த ஆன்ம ஞானம் ஒருபோதும் மறந்துபோவதில்லை.

இதுபற்றி அர்ஜுனன், இந்த எட்டாவது அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே, அதற்கு முந்தைய அத்தியாயத்தில் (ஏழாவது அத்தியாயம்) பிரயோகிக்கப்பட்டுள்ள அதே வார்த்தைகளை மறுபடியும் உபயோகித்துக் கேள்விகள் கேட்டான். –

**அர்ஜுன உவாச :**
**கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம**
**அதிபூதஞ்சகிம் ப்ரோக்தம்அதிதைவம் கிமுச்யதே (1)**

புருஷோத்தமரே! அந்த பிரம்மம் என்றால் என்ன? அத்யாத்மம் என்றால் என்ன? கர்மம் என்றால் என்ன? அதிபூதம் மற்றும் அதிதைவம் என்று எதைச் சொல்கிறார்கள்?

**அதியஜ்ஞ: கதம் கோத்ர தேஹேஸ்மின்மதுசூதன**
**ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோஸி நியதாத்மபி : (2)**

மதுசூதனரே! இங்கே, அதியக்ஞர் என்பது யார்? மேலும், அவர் இந்த உடலில் எவ்வாறு இருக்கிறார்? 'அதியக்ஞர்' அதாவது 'வேள்வியின் தலைவர்' என்று ஒருவர் இருக்கிறார் என்பதும் அவர் இந்த மனித உடலையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறார் என்பதும் இந்தக் கேள்வியில் இருந்து தெளிவாகிறது. இறைவனில் ஒன்று கலந்து விட்ட சித்தத்தை உடைய சாதகர்கள் மூலமாக, இறுதிக் காலத்தில் தாங்கள் எந்த முறையில் அறிந்து கொள்ளப்படுகிறீர்கள்? –

இந்த ஏழு கேள்விகளுக்கும் வரிசையாக விடையளிக்கும் வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறினார் —

**ஸ்ரீ பகவானுவாச்ச**
**அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோத்யாத்மமுச்யதே**
**பூதபாவோத்பவகரோ விஸர்க்க : கர்மஸம்ஜ்ஞித : (3)**

**அக்ஷரம் ப்ரஹ்ம பரமம்** — அழிவற்றதாகிய, அதாவது எதற்கு அழிவு என்பதே இல்லையோ, அதுவே பரபிரம்மம் எனப்படுகிறது. **ஸ்வபாவ : அத்யாத்மம் உச்யதே** — சுயத்தில் நிலை பெற்றுள்ள உணர்வே 'அத்யாத்மம்' எனப்படுகிறது. அதாவது, 'அத்யாத்மம்' என்றால் 'ஆன்மாவின் ஆதிக்கத்தில் நிலைபெறல்' என்று பொருள். இதற்கு முன்பு, அனைவருமே மாயையின் ஆதிக்கத்தில் தான் இருக்கின்றனர். ஆனால், எப்பொழுது **'ஸ்வபாவம்'** — அதாவது ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றுள்ள உறுதியான உணர்வு (தன்னில் நிலைபெற்ற உணர்வு) கிடைத்து விடுகிறதோ, அப்பொழுதே ஆன்மாவின் ஆதிக்கம் அவருக்குள் பெருகிவழிகிறது. இதுவே 'அத்யாத்மம்' ஆகும். அத்யாத்மத்தின் உச்ச வரம்பு நிலையும் இதுவேதான். **பூதபாவோத்பவகர** : — உயிர்களின் உணர்வில் இருந்து உருவாகுகின்ற சங்கல்பங்களால் சேகரித்துவைக்கப்பட்ட நல்ல மற்றும் தீய வினைகள் எப்பொழுது முழுமையாக அழிவு பெறுகிறதோ அதுவே கர்மத்தின் உச்சக்கட்ட நிலையாகும். இதுவே 'ஸம்பூர்ண கர்மம்' ஆகும். இதைக் குறிப்பிட்டுத்தான் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், 'அவர் ஸம்பூர்ண கர்மத்தை அறிந்து கொள்கிறார்' என்று கூறினார். அத்துடன் கர்மம் நிறைவடைந்து விடுகிறது. அதற்குமேல் அந்தக் கர்மத்திற்கு எந்த அவசியமும் இல்லாமல் போகிறது. நியமிக்கப்பட்டுள்ள கர்மம் (நியத கர்மம்) இந்த உயர்நிலையை அடைந்துள்ளபோது, உயிர்களின் எந்த ஜீவ உணர்வானது எவ்வெவைகளை உருவாக்கிக் கொண்டே இருக்கிறதோ, நல்ல மற்றும் தீய வினைகளைச் சேகரித்துக் கொண்டும் உருவாக்கிக் கொண்டும் இருக்கிறதோ, அவைகளனைத்தும் முழுக்க முழுக்க அமைதியடைந்து விடுகிறது. இதுவே கர்மம் முழுமை பெறுகின்ற நிலையாகும். இதற்குமேல் கர்மம் செய்வதற்கு எந்த அவசியமும் இல்லை. ஆகவே, கர்மம் என்பது, அனைத்து உயிர்களின் ஜீவ உணர்விலிருந்து தோன்றும் எல்லா சங்கல்பங்களையும் அதாவது எந்த சங்கல்பங்களின் மூலமாக நல்லவை, தீயவை என்று ஏதேனும் வினைகள் தோன்றுகின்றனவோ அவற்றையெல்லாம் முழுவதுமாக அழிக்கும் வல்லமை உடையதாகும். கர்மம் என்பதற்கு இறைஆராதனை, ஆன்மீகச் சிந்தனை என்று அர்த்தம் ஆகும். இதுவே வேள்வியின் செயல்முறை என்றும் சொல்லப்படுகிறது.

**அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஸ்சாதிதைவதம்**
**அதியஜ்ஞோஹமேவாத்ர தேஹே தேஹேப்ருதாம் வர (4)**

எதுவரை அழிவற்ற இறைஉணர்வு (அக்ஷய பாவம்) கிடைக்கவில்லையோ, அதுவரை அழியும் தன்மையுடைய அனைத்து அழிவுறும் ஜீவஉணர்வுகள்தான் (க்ஷர பாவம்) 'அதிபூதம்' ஆகும். அதாவது, மனிதர் உட்பட அனைத்து ஜீவ உணர்வுடைய உயிர்களின் இருப்பிடம் ஆகும். அதுவே உயிர்களின் உற்பத்திக்கும் காரணம் ஆகும். **புருஷ : ச அதிதைவதம்** இயற்கை அல்லது படைப்பிற்கு அப்பாற்ப்பட்ட பரம புருஷரே 'அதிதைவம்' ஆவார். அதாவது, அனைத்து தேவதைகளின் (தெய்வீகச் செல்வங்கள் எனப்படும் தெய்வீகக் குணங்கள்) தலைவர் ஆவார். தெய்வீகச் செல்வம் எனப்படும் தெய்வீகக் குணங்கள் அனைத்தும் அந்தப் பரம தெய்வத்துள் சென்று இரண்டறக் கலந்து விடுகின்றன. உடல் தரித்தவர்களில் சிறந்தவனே அர்ஜுனா! இந்த மனித உடலில் நான்தான் 'அதியக்ஞர்' ஆவேன். அதாவது 'வேள்விகளின் தலைவர்' ஆவேன். எனவே, மனித உடல் கொண்டுள்ள, அதேசமயம் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றுள்ள மகாபுருஷர்தான் அதியக்ஞர் அதாவது, வேள்விகளின் தலைவர் ஆவார். ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாக இருந்தார். எவர் அனைத்து வேள்விகளையும் அனுபவிக்கிறாரோ, இறுதியில் அந்த வேள்விகள் அனைத்துமே அவருக்குள் நுழைந்து விடுகின்றன. அப்போதுதான் பரம தெய்வ வடிவம் அடையப் பெறுகிறது. இம்முறையில் அர்ஜுனனுடைய ஆறு கேள்விகளுக்கு விடையளிக்கப்பட்டு விட்டது. இப்போது கடைசிக் கேள்வியாக, 'இறுதிக் காலத்தில் மீண்டும் ஒருபோதும் மறந்து போகாத வண்ணம் நீங்கள் எவ்வாறு அறிந்து கொள்ளப்படுகிறீர்கள்?' என்பதற்கு ஸ்ரீகிருஷ்ணர் விடையளிக்க வருகிறார்.

**அந்தகாலே ச மாமேவ ஸ்மரன்முக்த்வா கலேவரம்**
**ய : ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சய (5)**

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "எவரொருவர் இறுதிக் காலத்தில் அதாவது மனம் முழுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு, அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக்கலந்து மறையும் காலத்தில், என்னை மட்டுமே நினைத்தபடியே உடலுடன் கொண்டிருக்கும் அனைத்துத் தொடர்புகளையும் துண்டித்துக்கொண்டு தம்மைத் தனியாக விலக்கிக் கொள்கிறாரோ அவர் '**மத்பாவம்**' – சாட்சாத் என்னுடைய ஆன்ம வடிவத்தையே பெற்று விடுகிறார். இதில் எந்த சந்தேகமும் கிடையாது" என்று கூறுகிறார்.

உடல் மரணம் அடைவது உண்மையான இறுதிக்காலம் அன்று. மரணம்

அடைந்த பிறகும் கூட இன்னும் எடுக்கப்பட வேண்டிய உடல்களின் வரிசைத் தொடர் என்னவோ அனைவரையும் பின்தொடரவே செய்கிறது. சேமித்து வைத்துள்ள வினைகளின் (சஞ்சித சமஸ்காரங்கள்) தொடர்பைத் துண்டித்துக் கொண்டதுடன் சேர்த்துதான் மனமானது முழுவதுமாகக் கட்டுப்பாட்டிற்குள் வருகிறது. மேலும், அவ்வாறு கட்டுப்படுத்தப்பட்ட மனமும் எப்பொழுது இறைவனில் இரண்டறக் கலந்து மறைந்து விடுகிறதோ, அதுதான் 'இறுதிக் காலம்' எனப்படுகிறது. இதற்குப் பிறகு, உடல் எடுக்க வேண்டியிருக்காது. இது முழுக்க முழுக்க செயல்முறைப் பகுதியாகும். இதெல்லாம் வெறுமனே சொல்வதாலோ, வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போவதாலோ எல்லாம் புரிந்து கொள்ள முடியாது. எதுவரைக்கும் ஆடைகளை மாற்றிக் கொள்வதுபோல உடல்களின் பரிமாற்றங்கள் நடந்து கொண்டிருக்கின்றனவோ அதுவரைக்கும் எங்கிருந்து இந்த உடல்களுக்கு முடிவு என்ற ஒன்று உண்டாகப் போகிறது? மனமானது முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக் கலக்கும் காலத்தில், இந்த உடலில் உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, உடல் சம்பந்தமான அனைத்துத் தொடர்புகளும் துண்டிக்கப்பட்டு விடுகின்றன. ஒருவேளை, மரணம் அடைந்ததற்குப் பிறகுதான் இந்நிலை கிடைக்கும் என்றிருந்தால் ஸ்ரீகிருஷ்ணரும் கூட முழுமை அடைந்தவர் இல்லை என்றாகிவிடும். "எண்ணற்ற பிறவிகளாகப் பயிற்சி செய்து இறைவனைப் பெறும் நிலையை அடைந்து விட்ட ஞானி சாட்சாத் என்னுடைய வடிவமே ஆவார். நானே அவர்; அவரே நான். அவருக்கும் எனக்கும் இடையில் கொஞ்சம்கூட வேற்றுமை (இடைவெளி) என்பதே கிடையாது" என்று ஸ்ரீகிருஷ்ணரே கூறியுள்ளார். இது உடலில் உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே அடையப்படுகின்ற நிலையாகும். இதற்குப் பிறகு, ஒருபோதும் உடல் எடுக்க வேண்டிய அவசியம் இல்லை. இதுவே உடல்களின் இறுதிக்காலம் ஆகும்.

உண்மையான உடல்களின் இறுதிக் காலம் பற்றிய வர்ணனை இதுவே ஆகும். இதற்குப் பிறகு, பிறவி எடுக்க வேண்டிய அவசியம் இல்லை. மற்றொரு வகையான, 'உடல்களின் முடிவு' என்பது 'மரணம்' என்றழைக்கப்படுகிறது. இதுவே உலகில் பெரும்பாலும் நடைமுறையில் காணப்படுவதாகும். ஆனால், இந்த வகையான உடல்களின் முடிவுக்குப் பிறகும்கூட மீண்டும் பிறவியெடுக்க, உடல் எடுக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

**யம் யம் வாபி ஸ்மரன்பாவம் த்யஜத்யந்தே கலேவரம்**
**தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித : (6)**

"குந்தி மகனே! மரணம் அடையும் சமயத்தில் மனிதர்கள் எந்தெந்த

மாதிரியான உணர்வுகளை நினைத்துக் கொண்டு இந்த உடலைத் துறக்கிறார்களோ, அந்தந்த மாதிரியானவைகளையே அடைகிறார்கள். அடடா! அப்படியென்றால், மிகவும் சுலபமாகப் போயிற்று! வாழும் காலம் வரை மனம் போனபோக்கில் உல்லாசமாக வாழ்வோம்; மரணம் அடையும் சமயத்தில் பகவானை நினைத்துக் கொள்ளலாம்" என்று ஒருவேளை அனைவரும் எண்ணலாம். ஆனால், ஸ்ரீகிருஷ்ணரோ, 'அப்படி ஒருபோதும் நடப்பதில்லை என்று கூறுகிறார். அதன்படி, **ஸதா தத்பாவ பாவித** :– வாழும் காலம் முழுவதும் எந்தமாதிரியான உணர்வினை அதிக அளவில் நினைத்துக் கொண்டிருந்தார்களோ, அந்த உணர்வைத்தான் அவர்களால் இறுதி மூச்சை விடுகின்ற கடைசிக் காலகட்டத்திலும் சிந்திக்க முடியும். வாழ்நாள் முழுவதும் எந்த வகையான சிந்தனையை அதிக அளவில் பயிற்சி செய்து வந்தானோ, அதே சிந்தனைதான் வலுக்கட்டாயமாக நினைவில் வந்து நிற்கிறது. அதைத் தவிர வேறு புதிதாக ஒன்றையும் அவனால் சிந்திக்க முடியாது. எனவே எப்போதும் இறைவனைப் பற்றிய சிந்தனையையே பயிற்சி செய்து வரவேண்டும். இல்லையென்றால் இறுதி மூச்சை விடுகின்ற கடைசிக் காலத்தில் இறைவனைப் பற்றிய சிந்தனை வராது. அத்துடன் –

**தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச**
**மய்யர்ப்பிதமனோபுத்திர்மாமேவைஷ்யஸ்யஸம்சயம் (7)**

ஆகவே அர்ஜுனா! நீ எந்நேரமும் என்னையே நினைத்துக் கொண்டே யுத்தம் செய். அதன்விளைவாக என்னிடமே சமர்ப்பிக்கப்பட்ட மனம், மற்றும் புத்தியுடன் இணைந்து நீ எந்த சந்தேகமும் இல்லாமல் என்னையே அடைவாய். நிரந்தரமான ஆன்ம சிந்தனை மற்றும் யுத்தம் – இவையிரண்டும் ஒரே சமயத்தில் எப்படி சாத்தியம் ஆகும்? ஒருவேளை கண்ணனுக்கு ஜே! பகவானுக்கு ஜே! என்று வெற்றி முழக்கம் எழுப்பிக் கொண்டே அம்புகளைச் சரமாரியாகத் தொடுத்துக் கொண்டிருக்கவேண்டுமா? என்ன? ஆக, இதுவே நிரந்தரமான ஆன்ம சிந்தனை மற்றும் யுத்தம் ஆகியவற்றின் உண்மையான வடிவமாக இருக்குமோ? இல்லவே இல்லை ஆனால், இறைவனை நினைத்தல் என்பதன் உண்மையான வடிவத்தை அடுத்து வருகின்ற சுலோகத்தில் தெளிவுபடுத்தும் வகையில் யோகேஷ்வரர் கூறுகிறார். –

**அப்யாஸயோகயுக்தேன சேதஸா நான்யகாமினா**
**பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் (8)**

பார்த்தனே! இந்த இறைவனை நினைத்தல் எனப்படும் யோகப் பயிற்சியில் கூடிநின்று (என்னைப் பற்றிய ஆன்ம சிந்தனை மற்றும் யோகப் பயிற்சி ஆகிய

இரண்டும் ஒரே பொருளைத்தான் கொண்டுள்ளன.) என்னைத் தவிர வேறு எதையும் நோக்கிச் செல்லாத சித்தத்துடன் நிரந்தரமாக ஆன்ம சிந்தனையை மேற்கொள்பவர் பரம பிரகாச வடிவமாக விளங்கும் திவ்விய புருஷரை, அதாவது பரமாத்மாவை அடைந்து விடுகிறார். உதாரணத்திற்கு, இந்த பென்சில் பகவான் என்று வைத்துக் கொள்வோம். எனில், இதைத் தவிர மற்ற எந்தப் பொருளைப் பற்றிய சிந்தனையும் நினைவிற்கு வரக்கூடாது. இதற்கு அக்கம் பக்கத்தில் உள்ள புத்தகம் தென்பட்டாலோ, அல்லது வேறு ஏதாவது தட்டுப்பட்டாலோ உங்களுடைய இறைநினைவு தவறிப் போய்விட்டது என்றாகிறது. இறை நினைவும் எவ்வளவு நுட்பமாக நடைபெறவேண்டும் இஷ்ட தெய்வத்தைத் (ஸத்குரு) தவிர, மற்ற எந்தப் பொருளைப் பற்றிய நினைப்பும் இருக்கக் கூடாது. மனத்திலும் எந்த எண்ண அலைகளும் எழாமல் இருக்க வேண்டும். இந்நிலையில் இறைநினைவு மற்றும் யுத்தம் ஆகிய இரண்டும் ஒரேசமயத்தில் எப்படி நடைபெறும்? உண்மையில் நீங்கள் எப்பொழுது உங்களுடைய சித்தத்தை எல்லாப் பக்கங்களில் இருந்தும் விடுவித்துக் கொண்டு, உங்களுடைய ஆராதனைக்குரியவரின் (ஸத்குரு) நினைவில் ஈடுபட நினைக்கிறீர்களோ, அப்பொழுதுதான் மாயையிலிருந்து தோன்றும் புலன் நுகர்வு எண்ணங்களாகிய காமம், கோபம், விருப்பு, வெறுப்பு ஆகியவை அனைத்தும் தடையை ஏற்படுத்தும் முனைப்புடன் உங்கள் முன்னால் வெளிப்படத் தொடங்கி விடும். நீங்கள் இறை நினைவில்தான் ஈடுபட்டு இருப்பீர்கள். ஆனால், அவைகள் உங்கள் அகத்தில் கிளர்ச்சியை உண்டாக்கும். உங்களுடைய மனமானது இறை நினைவில் இருந்து நழுவத் துடிக்கும். எனவே இந்த புறமுகமாகச் செயல்படும் தீய எண்ணங்களை முழுவதுமாக வெற்றி கொண்டு அவற்றையெல்லாம் கடந்து போவதுதான் யுத்தம் எனப்படுகிறது. நிரந்தரமான ஆன்ம சிந்தனையில்தான் யுத்தம் சம்பவிக்கிறது. கீதையின் ஒரு சுலோகம் கூடப் புறஉலகத்தில் நடைபெறும் வெட்டு, குத்து, கொலை ஆகியவற்றை ஆதரிக்கவில்லை. எவரைச் சிந்தனை செய்ய வேண்டும்? என்பது பற்றிக் கூறுகிறார் –

**கவிம் புராணமனுஷாஸிதார மணோரணீயாம்ஸமனுஸ்மரேத்ய:**
**ஸர்வஸ்யதாதாரமசிந்த்யரூப மாதித்யவர்ணம் தமஸ : பரஸ்தாத் (9)**

இந்த யுத்தத்தில் ஈடுபட்டுக் கொண்டே அவர் அனைத்தும் அறிந்தவரும், தொடக்கம் இல்லாதவரும், அனைத்தையும் ஆட்சி செய்பவரும், சூட்சுமத்திலும் அதிசூட்சுமம் ஆனவரும், அனைத்தையும் தாங்குபவரும், பேணிப் பாதுகாப்பவரும், ஆனால், அதேசமயம் சிந்தனைக்கெல்லாம் அப்பாற்பட்டவரும் (எதுவரை சித்தமும், சித்தத்தில் இருந்து எழுகின்ற எண்ண அலைகளும் இருக்கின்றனவோ, அதுவரை இறைவன் நமது தரிசனத்திற்குத் தென்படுவது இல்லை. சித்தத்தின் முழுமையான

கட்டுப்பாடு, மற்றும் அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட சித்தமும் இறைவனில் இரண்டறக் கலந்து மறைந்து போகின்ற காலத்தில்தான் அவர் அறிந்து கொள்ளப்படுகிறார்) நித்திய ஒளிவடிவானவரும், அறியாமைக்கு அப்பாற்ப்பட்டவருமாகிய அந்தப் பரமாத்மாவை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கிறார். இதற்கு முன்பு வந்த சுலோகத்தில், 'என்னுடைய சிந்தனையைச் செய்கிறார்' என்றார். இந்த சுலோகத்தில், 'பரமாத்மாவைச் சிந்தனை செய்கிறார்' என்கிறார். ஆகவே, அந்தப் பரமாத்மாவைச் சிந்தனை செய்வதற்காக தத்துவதரிசி மகாபுருஷர் ஒருவரே மூலமாகத் திகழ்கிறார். இதன் தொடர்ச்சியாக –

**ப்ரயாணகாலே மனஸாசலேன**
**பக்த்யா யுக்தோ யோக பலேன சைவ**
**ப்ருவோர்மத்யே ப்ராணமாவேஷ ஸம்யக்**
**ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம் (10)**

எவர் நிரந்தரமாக (இடைவிடாமல்) அந்தப் பரமாத்மாவை நினைத்தபடியே இருக்கிறாரோ, அந்த பக்தி கைகூடப் பெற்றவர் **ப்ரயாணகாலே** – மனமானது இறைவனில் இரண்டறக் கலந்து மறைகின்ற காலத்தில் யோக பலத்தால், அதாவது, அதே நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைக் கடைப்பிடித்து வருவதன் மூலம், புருவங்களுக்கு மத்தியில் பிராணனைச் சரியான முறையில் நிலைநிறுத்தி (பிராணன் – அபானன் ஆகியவற்றைச் சரியான முறையில் சமநிலைப்படுத்தி, அகத்தில் இருந்து எந்த கிளர்ச்சியும் எழாமல், புறத்தில் இருந்து எந்தச் சங்கல்பமும் உள்ளே நுழையாமல் பார்த்துக் கொண்டு, ஸத்துவ, ரஜோ, தாமஸ குணங்கள் அனைத்தையும் சரியான முறையில் அமைதிப்படுத்தி, மனத்தின் கவனப் பார்வையானது (ஸூரத்) இஷ்ட தெய்வத்தில் (ஸத்குருவின் திவ்ய வடிவத்தில்) உறுதியாக நிலைநிறுத்துகின்ற காலத்தில்) அந்த அசைவில்லாமல் நின்று விட்ட மனத்தையுடைய அதாவது உறுதியான நிலைப்பாட்டை அடைந்த புத்தியுடன் கூடிய புருஷர் அந்த திவ்விய புருஷராகிய பரமாத்மாவை அடையப் பெறுகிறார். எனவே அந்தப் பரமாத்மாவை அடைவதற்கான ஒரே வழி யோகம்தான் என்பதை எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அதற்காக நியமிக்கப்பட்டுள்ள செயலில் (கிரியையில்) ஈடுபடுவதுதான் யோகக் கிரியை எனப்படுகிறது. அதைப் பற்றிய விரிவான வர்ணனையை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் நான்காவது, ஆறாவது அத்தியாயங்களில் விவரித்து உள்ளார். இப்போது அவர், 'இடைவிடாது என்னுடைய சிந்தனையில் ஈடுபடு' என்கிறார். இதை எப்படிச் செய்வது? என்று கேட்டால், 'இந்த யோகக் கிரியையை நன்கு தெளிவாக அறிந்து கொண்டு தீர்மானமான உறுதியுடன் மனத்தால் யோகத்தை வரித்துக் கொண்டு அதிலேயே நிலையாக நின்று செய்ய வேண்டும்' என்பதே பதிலாகும். அவ்வாறு செய்பவர்தான் திவ்விய புருஷராகிய பரமாத்மாவை அடையப்

பெறுகிறார். அதற்குப் பிறகு, அவ்வாறு அடையப் பெற்ற இறை நினைவு ஒருபோதும் மறந்து போவதில்லை. இங்கே, “பிரயாண காலத்தில் (மனம் ஒடுங்கிய காலத்தில்) நீங்கள் எந்த முறையில் அறிந்து கொள்ளப்படுகிறீர்கள்?” என்ற கேள்விக்கான விடை கிடைத்து விட்டது. இனி கீதையில், பல்வேறு இடங்களில் காணப்படுகின்ற, அடைவதற்குத் தகுதியுடைய பரமபதத்தைப் பற்றிய வர்ணனையைக் காண்போம்.

**யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி –யத்யதயோ வீதராகா:**
**யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யஞ் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே (11)**

**‘வேதவித்’** அதாவது அறிந்து கொள்ளப்படாமல் இருக்கின்ற தத்துவத்தை அனுபவப்பூர்வமாக அறிந்து கொள்பவர்கள் எந்தப் பரம பதத்தை **(அக்ஷரம்)** அழிவற்றது என்று அழைக்கிறார்களோ மற்றும், தீவிர வைராக்கியமுடைய மகாத்மாக்கள் எதில் நுழைவு பெறுவதற்காக முயற்சியுடையவர்களாக இருக்கின்றனரோ, எந்தப் பரம பதத்தை அடைய வேண்டும் என்ற விருப்பத்துடன் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து வருகின்றனரோ, (பிரம்மச்சரியம் என்பதற்குப் பிறப்புறுப்புகளைக் கட்டுப்படுத்துதல் என்று மட்டும் பொருள் கொள்ளக் கூடாது மாறாக **ப்ரஹ்ம ஆசரதி ஸ ப்ரஹ்மச்சாரி** வெளி உலகத் தொடு உணர்வுகள் (வெளிவிவகாரங்கள்) அனைத்தையும் மனத்தால் துறந்து, பிரம்மத்தை நிரந்தரமாகச் சிந்தனை செய்தலும், மற்றும் நினைத்தலுமே பிரம்மச்சரியம் எனப்படுகிறது. இது பிரம்மத்தை தரிசிக்கச் செய்து, அதிலேயே நிலைப்பெறச் செய்து, அதிலேயே இரண்டறக் கலந்து அமைதியாகி விடுகிறது. இதை அனுசரிப்பதால் வெறும் ஜனனேந்திரியங்கள் மட்டுமல்லாமல் அனைத்துப் புலன்களும் இயல்பாகவே கட்டுப்பாட்டிற்குள் வந்து விடுகின்றன. இந்த முறையில், எவர்கள் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து வருகின்றனரோ), இதயத்தில் பெருகச் செய்வதற்கு தகுதியுடையது எதுவோ, இதயத்தில் வரித்துக் கொள்வதற்குத் தகுதியுடையது எதுவோ, அந்தப் பரமபதத்தைப் பற்றி நான் உனக்காகக் கூறுகிறேன். அந்தப் பரம பதம் என்றால் என்ன? அதை எப்படி அடைவது? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். –

**ஸர்வ த்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்த்ய ச**
**மூர்தன்யாதாயாத்மன : ப்ராணமாஸ்த்திதோ யோகதாரணாம் (12)**

எல்லாப் புலன்களின் வாசல்களையும் அடைத்து, அதாவது, வாசனைகளில் (புலன் இன்ப ஆசைகள்) இருந்து விலகி நின்று, மனத்தை இதயத்தில் நிலைநிறுத்தி (இதயத்தில் தான் தியானம் செய்யப்படுகிறது. வெளியில் அல்ல.

பூஜை, அல்லது, இறைவழிபாடு என்பது வெளியில் செய்யப்படுவது அல்ல.) பிராணன் அதாவது, உள் மனத்தின் செயல்பாடுகளை புத்தியால் தடுத்தாட்கொண்டு, யோகதாரணையில் நின்று (யோகத்தை மனத்தில் முழுமையாக வரித்துக் கொண்டு, அதிலேயே நிலைத்து நிற்க வேண்டுமே தவிர வேறு உபாயம் ஒன்றும் இல்லை.) இம்முறையில் நிலைபெற்றவராக –

**ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன்மாமனுஸ்மரன்**
**ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் (13)**

எவர் ஒருவர் **ஓம் இதி** – ஓம் – என்பதை மட்டுமே, அதாவது, அழிவற்ற பிரம்மத்தை அறிமுகப்படுத்தவல்ல, ஓம் என்ற மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே என்னைச் சிந்தித்தவாறே உடலைத் துறக்கிறாரோ, அவர் பரம கதியை அடைகிறார்.

ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகேஷ்வரரும் பரம தத்துவத்தில் நிலைபெற்றிருந்த மகாபுருஷரும் சத்குருவுமாக இருந்தார். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "**ஓம்** அதாவது அழிவற்ற பிரம்மத்தை அறிமுகப்படுத்தவல்ல திருநாமத்தை ஜபம் செய்; மற்றும் என்னையே தியானம் செய்" என்றும் கூறுகிறார். இறைவனை அடைந்த பிறகு முக்தி நிலை பெற்ற ஒவ்வொரு மகாபுருஷரும், அவர்கள் எந்த இறைவனை அடைந்துள்ளனரோ, அவருடைய திருநாமத்தையே தங்களுடைய திருப்பெயராகவும் பெற்று விடுகின்றனர். அந்த பிரம்மத்திலேயே அவர்கள் ஒன்று கலந்தும் இருக்கின்றனர். எனவேதான், "ஓம் என்னும் இறைத் திருநாமத்தை ஜபிக்க வேண்டும் என்றும் தம்முடைய திருவுருவத்தையே தியானம் செய்ய வேண்டும்" என்றும் சொல்கிறார். யோகேஷ்வரர் 'கிருஷ்ணா' 'கிருஷ்ணா' என்று ஜபம் செய்வதற்காக உத்தரவு பிறப்பிக்கவில்லை. காலப்போக்கில், பக்தர்கள் அவருடைய பெயரையும் ஜபம் செய்யத் தொடங்கி விட்டனர். மேலும், தங்களுடைய நம்பிக்கைக்கு ஏற்ப அதற்கான பலனையும் பெற்றுக் கொள்கிறார்கள். "மனிதர்களின் நம்பிக்கை எங்கெல்லாம் நிலைக்கிறதோ அங்கெல்லாம் அவர்களுடைய நம்பிக்கையை நிலைபெறச் செய்து, மேம்படுத்துவதுடன் நானே அவர்களுக்குப் பலனையும் அளிக்கிறேன்" என்று ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே கூறியிருக்கிறார்.

சிவபெருமான் 'ராம்' என்ற மந்திரத்தை ஜபிக்கும்படி வலியுறுத்துகிறார். '**ரமந்தே யோகினோ யஸ்மின் ஸ ராம : ரா அவுர் ம கே பீச் மே கபீரா ரஹா லுகாய்**' – யோகிகள் தங்களுடைய இதய தேசத்தில் விரும்பி ஈடுபடுத்துகின்ற அந்த இறைவனுக்குப் பெயரே 'ராம்'; '**ரா**' மற்றும் '**ம**' என்ற இரண்டு எழுத்துக்களுக்கு இடைவெளியில் எனது மனத்தை நிலைநிறுத்துவதில்

கைதேர்ந்து விட்டேன்' என்கிறார் கபீர்.

ஸ்ரீகிருஷ்ணர் 'ஓம்' என்ற மந்திரத்தை ஜபிக்கும்படி வலியுறுத்துகிறார். '**ஓ அஹம் ஸ ஓம்**' அதாவது 'அந்த இறைநிலை எனது அகத்தில் உள்ளது' என்பதே இதற்குப் பொருள். அவரை வெளியில் எங்கேயும் தேடத் தொடங்கி விடக்கூடாது. இந்த 'ஓம்' என்ற திருநாமமும் அந்தப் பரம்பொருளை அறிமுகம் செய்து வைத்து விட்டு அதிலேயே ஒன்று கலந்து அமைதியாகி விடுகிறது. உண்மையைச் சொல்வதென்றால் அந்தப் பிரபுவிற்கு எண்ணிக்கையில் அடங்காத திருநாமங்கள் உண்டு. ஆனால், ஜபம் செய்வதற்கு மிகச் சிறிய பெயரே வசதியாக இருக்கிறது. அதுவே நம்முடைய சுவாசத்தில் எளிமையாகக் கரைந்து, அந்தப் பரமாத்மாவை அறியச் செய்யவல்லது. இதை விடுத்து, எண்ணற்ற தேவி, தேவதைகளைப் பற்றிய, பகுத்தறிவுக்கு ஒவ்வாத பல்வேறு கற்பனைகளில் உழன்று கொண்டு இலட்சியத்திலிருந்து பார்வையைச் சிதறவிட்டு விடக் கூடாது.

பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் பின்வருமாறு கூறியருள்கிறார்: "என்னுடைய திருவுருவத்தை நினைத்துக் கொள். மேலும், உன்னுடைய நம்பிக்கைக்கு ஏற்ப, இரண்டு அல்லது இரண்டரை எழுத்து அளவுள்ள 'ஓம், ராம், சிவ', ஆகியவற்றில் ஏதேனும் ஒரு திருநாமத்தை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொள். அதனையே ஆன்ம சிந்தனை செய். மேலும், அந்த மந்திரத்தின் அர்த்த வடிவமாக விளங்கும் இஷ்ட தெய்வத்தின் (ஸத்குருவின் திருவுருவம்) வடிவத்தை தியானம் செய். தியானம் சத்குருவின் திருவுருவத்தின் மீதுதான் செய்யப்பட வேண்டும்". நீங்கள் ராமர், கிருஷ்ணர் அல்லது **வீதராக விஷயம் வா சித்தம்** – ஆன்மீகப் பாதையில் தீவிர வைராக்கியம் உடைய மஹாத்மாக்கள் அல்லது **யதாபிமதத்யானாத்வா** (பதஞ்ஜலி யோக தரிசனம் 1/37–39) **அபிமத** – அதாவது, யோகத்திற்கு ஏற்புடைய சாதகமான, எவராவது ஒருவருடைய திருவுருவத்தை நீங்களாகவே விரும்பித் தேர்ந்து எடுத்துக் கொண்டு, தியானத்தில் சிந்தித்து வாருங்கள். அவர் உங்களுடைய அனுபவத்தில் வந்து, நிகழ்காலத்தில், அதாவது, உங்களுடைய சமகாலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஏதேனும் ஒரு சத்குருவிடம் செல்லுமாறு வழி நடத்துவார். அதற்குப் பிறகு, அந்த சத்குருவை அடைந்து, அவருடைய ஆன்மீக வழிகாட்டலுக்கு ஏற்ப நீங்கள் சாதனை செய்து கொஞ்சம் கொஞ்சமாக இயற்கை அல்லது, படைப்பின் வரம்பில் (க்ஷேத்திரத்தில்) இருந்து கரை கடந்து போகத் தொடங்கி விடுவீர்கள். நானும் (யதார்த்த கீதையின் உரையாசிரியரும் பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகளின் சீடருமான பூஜ்ய ஸ்ரீ பரமஹம்சசுவாமி அட்கடானந்தர்) ஆரம்பத்தில் ஒரு தெய்வத்தின் (பெரும்பாலும் வழக்கத்தில் காணக் கிடைக்கின்ற பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் விஸ்வரூபத்தை

வெளிப்படுத்தும் வரையோவியம்) சித்திரத்தையே தியானம் செய்து வந்தேன். ஆனால், பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் எனது அனுபவத்தில் வந்து தெளிவுணர்த்திய பிறகு அந்தப் பழக்கத்தை விட்டு விட்டேன்.

ஆரம்ப நிலையில் சாதகர்கள் நாமத்தை என்னவோ உச்சரிக்கிறார்கள். ஆனால், மகாபுருஷர்களின் திரு வடிவத்தை தியானம் செய்வதற்கு மட்டும் ஏனோ தயங்குகிறார்கள். அவர்களால் பரம்பரைப் பழக்கவழக்கங்கள், தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றி வருகின்ற கொள்கைகள், கோட்பாடுகள் ஆகியவற்றையெல்லாம் அவ்வளவு எளிதாக விட்டு விட முடிவதில்லை. அவர்கள் ஸ்ரீகிருஷ்ணரால் தடைசெய்யப்பட்டுள்ள மற்றபிற தேவதைகளின் உருவங்களை தியானம் செய்கின்றனர். ஆகவே, முழுமையான சமர்ப்பண உணர்வுடன், இறைவனை அனுபவத்தில் உணர்ந்த, ஏதேனும் ஒரு மகாபுருஷரின் சரணத்தை நாடுவது நல்லது. புண்ணிய புருஷார்த்தம் வலுவடைய ஆரம்பித்ததுமே, மனத்தில் தோன்றிக் கொண்டே இருக்கும் குதர்க்கங்கள் (தேவையற்ற விவாதங்கள்) அழியத் தொடங்கி விடும். மேலும், யதார்த்தமான கிரியையில் நுழைவும் கிடைத்து விடும். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் கருத்துப்படி, இந்த முறையில் 'ஓம்' என்ற திருநாமத்தை ஜபித்தல், மற்றும் பரமாத்ம வடிவமாக விளங்கும், சத்குருவின் ஸ்வரூபத்தை நிரந்தரமாக நினைத்தல் ஆகியவற்றில் ஈடுபட்டு வந்தால் மனமானது கட்டுப்பட்டு, அந்தக் கட்டுப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக் கலந்து மறைந்து விடும். மேலும், அடுத்த கணமே உடலுடன் கொண்டிருக்கும் தொடர்புகள் அனைத்தும் அறுந்து போய்விடும். இதை விடுத்து வெறுமனே மரணம் அடைவதால் உடல் எடுக்கும் படலம் முடிவு பெறாமல் பின்தொடரவே செய்கிறது.

**அனன்ய சேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஷ :**
**தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகின (14)**

"என்னைத் தவிர வேறு எதுவும் சித்தத்தில் இல்லவே இல்லை" – அதாவது வேறுயாரையும் சிந்திக்காமல் அதாவது, இடையறாத (அனன்ய) சித்தத்துடன் உறுதிப்பாடுடையவராக, எந்நேரமும் என்னையே நினைக்கின்ற, எப்பொழுதுமே என்னுடன் கூடியிருக்கும் அந்த யோகியால் நான் மிகவும் சுலபமாக அடையப் படுகிறேன். நீங்கள் சுலபமாக அடையப்படுவதால் என்ன கிடைக்கிறது?

**மாமுபேத்ய புனர்ஜன்ம துக்காலயமசாஸ்வதம்**
**நாப்னுவந்தி மஹாத்மான : ஸம்ஸித்திம் பரமாம் கதா: (15)**

என்னை அடைந்து அவர் துக்கங்களின் இருப்பிடமாகிய, நிலையற்ற மறுபிறவி என்ற புனர்ஜன்மத்திற்கு ஆளாவதில்லை. அதற்கு மாறாக அவர்,

**பரம சித்தி** எனப்படுகின்ற இறைநிலையை அடைகிறார். அதாவது, 'என்னை அடைகிறார்' என்பதும் 'இறைநிலையை அடைகிறார்' என்பதும் ஒன்றுதான். மேலும் எவரை அடைந்த பிறகு மறுபிறவி எடுக்க வேண்டியதில்லையோ, அத்தகையவர் பகவானைத் தவிர வேறு யாரும் இல்லை. அப்படியென்றால், 'மறுபிறவியின் எல்லை' எதுவரை உள்ளது?

**ஆப்ரஹ்மபுவனால்லோகா: புனராவர்த்தினோர்ஜுன**
**மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே (16)**

அர்ஜுனா! பிரம்மாவிலிருந்து புழு, பூச்சிகள் வரையிலான எல்லா உலகங்களுமே மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும் கொண்டிருப்பவைகள்தான் . பிறப்பது, மற்றும் இறப்பது என்று மறுபடியும் மறுபடியும் இதே வரிசைக் கிரமத்தில் சென்று கொண்டு இருப்பவைகள்தான். ஆனால், குந்தியின் மைந்தனே! என்னை அடைந்து முக்திநிலை பெற்றவனுக்கோ மீண்டும் புனர்ஜன்மம் என்கின்ற மறுபிறவி ஏற்படுவது இல்லை.

தர்ம நூல்களில் வர்ணிக்கப்பட்டுள்ள பல்வேறு உலகங்களைப் பற்றிய கற்பனைக் கோட்பாடுகள் அனைத்துமே இறைப் பாதையின் தெய்வீக மகிமைகளைப் பற்றி அறிவுறுத்துவதற்கான அகம் சார்ந்த ஆன்மீக அனுபவங்கள் அல்லது அவற்றின் உருவகம் மட்டுமேயாகும். அது தவிர வானவெளியில் நாம் நரகம் என்று சொல்லிக் கொள்வதைப் போன்று எந்தப் படுகுழியும் இல்லை; அங்கே விஷப்பூச்சிகள் கொட்டிக் கொண்டிருப்பதும் இல்லை. அதேபோன்று நாம் சொர்க்கம் என்று சொல்லிக் கொள்வதைப் போன்று சகல வசதிகளுடன் கூடிய மாடமாளிகைகள் எதுவும் இல்லை. தெய்வீகச் செல்வங்களுடன் கூடியவர்கள் தேவதைகள் மற்றும் அசுரச் செல்வங்களுடன் கூடியவர்கள் அசுரர்கள் எனப்படுவர். ஸ்ரீகிருஷ்ணருடைய நெருங்கிய சொந்தக்காரர்களாகிய **கம்சன்** ராட்சதனாகவும் **பாணாசுரன்** தைத்யனாகவும் (அரக்கன்) இருந்திருக்கிறார்கள். தேவ, மானுட, தாழ்நிலை உயிரினங்கள் முதலானவைகளே பல்வேறு வகையான வேறுபட்ட உலகங்கள் ஆகும். ஸ்ரீகிருஷ்ணருடைய கருத்துப்படி, ஜீவாத்மாவானது மனத்துடன் சேர்த்து ஐம்புலன்களின் வாயிலாகப் பிறவி பிறவியாகச் சேமித்து வைத்திருக்கும் வினைகளுக்கு ஏற்றபடி புதிய உடலை ஏற்றுக் கொள்கிறது.

'அமரர்கள்' என்றழைக்கப்படும் தேவதைகளும் கூட மரணத்தின் ஆளுமைக்கு உட்பட்டவர்கள்தான். **க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி** – புண்ணியம் அழிவுற்றபிறகு இந்த மரணம் ஆட்சி புரிகின்ற சாதாரண உலகத்திற்குத் தள்ளப்படுகிறார்கள். இதை விடப் பெரிய இழப்பு வேறு என்னவாக

இருக்க முடியும்? ஏற்கனவே, சேமித்து வைத்திருந்த புண்ணியங்களையும் (சஞ்சித புண்ணியம்) சேர்த்து அழித்து விடுகின்ற அந்த தேவ உடலால்தான் என்ன பயன்? தேவலோகம், மிருக லோகம், புழு – பூச்சிலோகம் எல்லாமே நாம் மனித உடலில் இருக்கும்போது செய்கின்ற நல்ல மற்றும் தீய கர்மங்களின் பலன்களை அனுபவிப்பதற்கான லோகங்கள் (பல்வேறு வகையான உடல்கள்) மட்டுமே ஆகும். மனிதன் மட்டுமே கர்மங்களைச் செய்வதன் மூலமாக பரமாத்மாவை அடைய முடிந்தவன். அங்கிருந்து அவன் மீண்டும் பிறப்பு – இறப்புச் சூழலில் வந்து மாட்டிக் கொள்வதில்லை. யதார்த்த கர்மத்தைக் கடைப்பிடித்து மனிதன் தேவதைகளாகலாம், பிரம்மாவின் பதவியைக் கூடப் பெற்று விடலாம். ஆனால், எதுவரை மனமானது முழுவதுமாகக் கட்டுப்படுத்தப்பட்டு, அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக் கலந்து மறைந்து, அத்துடன் சேர்த்து, பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து, அந்த இறைப் பேருணர்வைப் **(பரம பாவம்)** பெறவில்லையோ, அதுவரை அவனால் தன்னை மறுபிறவி எடுப்பதிலிருந்து காப்பாற்றிக் கொள்ளவே முடியாது. உபநிஷதங்களும் கூட இந்த உண்மையையே தெரிவிக்கின்றன. உதாரணத்திற்கு,

**யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேஸ்ய ஹ்ருதிஸ்த்திதா :**
**அத மர்த்யோம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஷ்னுதே**
**(கடோஉபநிஷதம் 2/3/14)**

எப்பொழுது இதயத்தில் நிலைத்திருந்த எல்லா ஆசைகளும் வேருடன் அழிந்து போகிறதோ, அப்பொழுதுதான் மரணத்தின் ஆளுமைக்கு உட்பட்ட மனிதன் அதிலிருந்து விடுபட்டு அமரன் (மரணமற்றவன்) ஆகிறான். மேலும், இங்கேயே இந்த உலகிலேயே, இந்த மனித உடலில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, பரபிரம்மத்தை நேரடியாகத் தெளிவுடன் அனுபவத்தில் அறிந்தும் கொள்கிறான்.

இங்கே, பிரம்மாவும் மரணத்தின் ஆளுமைக்கு உட்பட்டவர்தானா? என்றொரு கேள்வி எழுகிறது. மூன்றாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் **பிரஜாபதி பிரம்மா** சம்பந்தமாகக் கூறும்போது, 'இறைவனை அடைந்து முக்திநிலை பெற்ற பிறகு, அந்த மஹாபுருஷருடைய புத்தி இறைவனுடைய கைகளில் வெறும் இயந்திரமாகச் செயல்படத் தொடங்கி விடுகிறது. அவர் மூலமாகப் பரமாத்மாவே வெளிப்படுகிறார். அத்தகைய மஹாபுருஷர்கள் மூலமாகவே வேள்வியானது உருவேற்றப்படுகிறது' என்று கூறினார். மேலும் இங்கோ அவர், 'பிரம்மாவின் நிலையை அடைந்தவரேயாயினும் மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும் போகின்ற நிலையில்தான் இருக்கிறார்' என்கிறார். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் என்னதான் சொல்ல விரும்புகிறார்?

சரியாகச் சொல்வதென்றால், எந்த மகாபுருஷரின் மூலமாக பரமாத்மா வெளிப்படுகிறாரோ, அந்த மகாபுருஷருடைய புத்தியும் கூட பிரம்மா இல்லை. ஆனால், உலக மக்களுக்கு உபதேசம் செய்கின்ற காரணத்தாலும், உலக நன்மைக்குப் பாதை வகுத்துக் கொடுக்கின்ற காரணத்தாலும், பிரம்மா என்று அழைக்கப்படுகிறார். சுயத்தைப் (உண்மையான அக இயல்பு) பொறுத்தவரையில் அவர் பிரம்மாவும் இல்லை. அவரிடம் தம்முடையது என்று எந்த புத்தியும் இருப்பதில்லை. ஆனால், இதற்கு முன்பு (இறைவனை அடைவதற்கு முன்பு) சாதனைக் காலத்தில் அவரிடம் இருக்கின்ற புத்தியே பிரம்மா என்றழைக்கப்படுகிறது **அஹங்கார் சிவ் புத்தி அஜ், மன் ஸஸி சித்த மஹான் (ராமசரித மானஸ் 6/15க)**

சாதாரண மனிதர்களுடைய புத்தி (அறிவு) பிரம்மா அன்று. எப்பொழுது புத்தியானது இஷ்ட தெய்வத்துள் (சத்குருவிற்குள்) நுழைவு பெற ஆரம்பிக்கிறதோ, அப்போதிலிருந்தே புத்தியில் பிரம்மாவின் தன்மை உருவேறத் தொடங்குகிறது. இதனை மொத்தம் நான்கு படிகளைக் கொண்ட புத்திநிலைகள் (உயர் ஆன்மீக அறிவு நிலைகள்) என்று மகான்கள் குறிப்பிடுகிறார்கள். இதுபற்றி ஏற்கனவே மூன்றாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. அதையே மீண்டும் ஒருமுறை நன்கு நினைவுபடுத்திக் கொள்வதற்காக இங்கேயும் சொல்லப்படுகிறது. அவைகள் முறையே **பிரம்மவித், பிரம்ம வித்வர், பிரம்ம வித்வரீயான், பிரம்மவித்வரிஷ்டர்** என்பவை ஆகும். பிரம்ம வித்யையுடன் இணைந்து இருக்கின்ற புத்தி எதுவோ, அதுவே, **பிரம்ம வித்** எனப்படுகிறது. பிரம்ம வித்யையில் கைதேர்ந்து விட்ட புத்தி எதுவோ, அதுவே **பிரம்ம வித்வர்** எனப்படுகிறது. பிரம்ம வித்யையில் நிபுணத்துவம் மட்டுமல்லாமல் அதன்மீது முழுமையான ஆதிக்கம் செலுத்துகின்ற வல்லமையும் அதனைத் தம்முடைய விருப்பத்திற்கேற்ப இயக்குவிக்கின்ற திறனும் பெற்று விடுகின்ற புத்தி எதுவோ, அதுவே, **பிரம்ம வித்வரீயான்** எனப்படுகிறது. கடைசியாக, இஷ்ட தெய்வம் (ஸத்குரு – இறைவன்) மட்டுமே பெருக்கெடுத்து ஓடுகின்றவாறு அமைந்து விட்டதும் புத்தியின் உச்ச வரம்புநிலையும் எதுவோ, அதுவே **பிரம்ம வித்வரிஷ்டர்** எனப்படுகிறது. இதுவரையிலும் புத்தியின் நிலைத்தன்மை என்பது இருக்கவே செய்கிறது. ஏனெனில் பெருக்கெடுத்து ஓடுகின்ற இஷ்ட தெய்வம் (சத்குருவின் திவ்ய வடிவம்) தனியாகவும் அதனை கிரகிக்கின்ற (உள்வாங்கிக் கொள்கின்ற) புத்தி தனியாகவும் உணரப்படுகிறது. இப்போதுள்ள நிலைவரை அந்த புத்தியானது இயற்கை அல்லது படைப்பின் எல்லைக்குள்ளேதான் இருக்கிறது. அந்நிலையில் தன்னில்தானே பிரகாச வடிவமான இயல்பில் புத்தி இருக்கும்போது, விழிப்புணர்வுடன் செயல்படும்போது, எல்லா உயிர் உணர்வுகளும் (ஸம்பூர்ண பூத உணர்வு) விழித்திருக்கின்றன. அதாவது, ஆன்ம சிந்தனை பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருக்கும். எப்பொழுது

அதே புத்தியானது அவித்யையில் (அஞ்ஞானத்தில்) இருக்கிறதோ, அப்போது விழிப்புணர்வற்று, சுயஉணர்வின்றி உறங்கிக் கொண்டிருக்கிறது. புத்தியின் இந்த இரு வேறு நிலைகளைத்தான் பிரகாசம் (வெளிச்சம்), இருட்டு, என்றும் பகல் மற்றும் இரவு என்றும் குறிப்பிடப்பட்டு விளக்கப்படுகிறது. மேலும் பார்க்கலாம். –

பிரம்மா, அதாவது, '**பிரம்ம வித் வேத்தா**' என்ற அந்நிலையில் அதாவது, புத்தியில் இஷ்ட தெய்வம் (ஸத்குரு) மட்டுமே பெருக்கெடுத்து ஓடுகின்றது என்று சொல்லப்பட்டது அல்லவா, அந்நிலையை அடையப் பெற்ற, புத்தியின் நான்கு படிநிலைகளிலுமே மிகவும் உயர்நிலைப் பிரிவைச் சேர்ந்த, தலைசிறந்ததாகக் கருதப்படுகின்ற, அந்த புத்தியில் கூட வித்யா (தன்னில் தானே பிரகாச வடிவமான இயல்புடைய இறைவனுடன் இணைத்து வைக்கின்றது) எனும் பகல் மற்றும் அவித்யா எனும் இரவு; பிரகாசம் மற்றும் இருட்டு ஆகியவற்றின் வரிசைக் கிரமம் தொடர்ந்து வந்து கொண்டுதான் இருக்கின்றன. இந்த நிலை வரையிலும் சாதகரின் மீது மாயை வெற்றி கொள்கின்ற வாய்ப்பு இருக்கவே செய்கிறது. பிரகாசம் என்ற காலத்தில் விழிப்புணர்வற்று, சுயஉணர்வின்றி ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கின்ற உயிர் உணர்வுகள் அனைத்தும் விழிப்புணர்வு பெற்று விடுகின்றன. அந்நிலையில் இலட்சியமாகிய பரமாத்மா புலப்பட ஆரம்பிக்கிறது, மற்றும் புத்தியின் அடியாழத்தில் **அவித்யை** (அஞ்ஞானம்) என்னும் இரவுக் காலம் நுழையும் பொழுதோ அனைத்து உயிர் உணர்வுகளும் விழிப்புணர்வு இழந்து, சுயஉணர்வின்றி ஆழ்ந்த உறக்க நிலைக்குப் போய்விடுகின்றன. இத்தகைய நிலையில் உள்ள புத்தியால் எதையும் தீர்மானம் செய்ய முடிவதில்லை. ஆன்ம வடிவத்தை நோக்கி முன்னேறுவது தடைப்படுகிறது. இதுவே, 'பிரம்மாவின் பகல்' மற்றும் 'பிரம்மாவின் இரவு' எனப்படுகிறது. பிரம்மாவின் பகல் என்ற நிலையில் உள்ளபோது புத்தியின் ஆயிரக்கணக்கான எண்ணவோட்டங்களில் பரம்பொருளின் பிரகாசம் நிறைந்திருக்கிறது. மேலும், அவித்யை என்னும் இரவில் ஆயிரம் மடங்கு உணர்வற்ற நிலையின் (அஞ்ஞானம்) இருள் சூழ்ந்து கொள்கிறது.

நல்லவை மற்றும் தீயவை (சுபம் மற்றும் அசுபம்); வித்யை மற்றும் அவித்யை – இந்த இரண்டு எண்ணவோட்டங்களும் முழுவதுமாக அமைதியடைந்து விட்ட பிறகு, அதாவது, உணர்வற்ற உறக்க நிலை மற்றும் சுய உணர்வுள்ள விழிப்பு நிலை; இரவில் மறைதல் மற்றும் பகலில் தோன்றுதல் என்பதாக இருக்கும் இரண்டு வகையான உணர்வு நிலைகளில் இருந்தும் (சங்கல்பங்களின் பிரவாகம்) விடுபட்ட பிறகு, அந்தப் புலன் உணர்வுக்கும் அப்பாற்ப்பட்ட (அவ்யக்தம்) புத்தியை விடவும் மிகவும் மேலான, என்றும் நிலையான, புலன் உணர்வு கடந்த, இறைப்

பேருணர்வு (அவ்யக்த பாவம்) கிடைத்து விடுகிறது. இதற்குப் பிறகு, அந்த உணர்வு ஒருபோதும் அழிந்து போவதில்லை. அனைத்து ஜீவ உணர்வுகளின் உறக்க நிலை, மற்றும் விழிப்பு நிலை ஆகிய இரண்டு வெவ்வேறுபட்ட நிலைகளில் இருந்தும் விடுபட்ட பிறகுதான் அந்த ஆதியானதும் என்றும் நிலைத்துள்ளதும் மாறாததுமான இறைப் பேருணர்வு **(சனாதன பாவம்)** அடையப் பெறுகிறது.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள புத்தியின் நான்கு படிநிலைகளையும் தாண்டிச் சென்றவரைத்தான் மகாபுருஷர் என்கிறோம். அவருடைய அகத்தில் மேலே குறிப்பிடப்பட்டுள்ள நான்கு படிநிலைகளையும் சார்ந்த எந்த புத்தியும் இருப்பது இல்லை. பரமாத்மாவின் கைகளில் அவரது புத்தி ஒரு இயந்திரமாக, ஒரு கருவியாக மாறிவிடுகிறது. ஆனால், உலக மக்களுக்கு உபதேசம் செய்வதாலும் நிச்சயமான முறையில் ஆன்மீகத் தூண்டுணர்வுகளை ஏற்படுத்துவதாலும் அந்த மகாபுருஷரிடமும் புத்தி என்ற ஒன்று இருப்பது போலவும், செயல்படுவது போலவும் வெறுமனே தோன்றுகிறது, அவ்வளவுதான், ஆனால் அவரோ புத்தி என்ற நிலையை எல்லாம் தாண்டியவராகத் திகழ்கிறார். அவர் புலன் உணர்வுகள் அனைத்திற்கும் அப்பாற்ப்பட்ட பரம உணர்வு எனப்படும், இறைப் பேருணர்வில் நிலைபெற்று இருக்கிறார். அவருக்கு மறுபிறவி எடுக்க வேண்டியது இல்லை. ஆனால், இந்தப் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வு நிலையில் நிலைபெறுவதற்கு முன்பு, எதுவரை அவரிடம் தம்முடையது என்று புத்தி (நான்கு படிநிலைகளில் வகைப்படுத்தப்பட்டுள்ள புத்திகளில் எந்த வகையைச் சேர்ந்த புத்தியாக இருந்தாலும்) இருந்து கொண்டிருக்கிறதோ, அதுவரை, அவர் பிரம்மா என்ற நிலையில்தான் இருக்கிறார். அத்தகையவர், மறுபிறவி எனப்படும் புனர்ஜன்மம் என்ற வட்டத்திற்குள்தான் இருக்கிறார். புத்தி சம்பந்தப்பட்ட இந்த உண்மையான கோட்பாடுகளின் மீது விளக்கமளித்தவாறே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மேலும் கூறுகிறார் –

**ஸஹஸ்த்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது:**
**ராத்ரிம் யுகஸஹஸ்த்ராந்தாம் தேஹோராத்ரவிதோ ஜனா : (17)**

எவர் ஆயிரம் சதுர்யுகங்கள் அடங்கியதுதான் 'பிரம்மாவின் ஒரு இரவு' என்றும் ஆயிரம் சதுர்யுகங்கள் அடங்கியதுதான் 'பிரம்மாவின் ஒரு பகல்' என்றும் நேரடியாக (இறைவனை) தரிசனம் செய்து அறிந்து கொள்கிறாரோ அவரே காலத்தின் தத்துவத்தை உள்ளது உள்ளபடிக்கு அறிந்து கொள்கிறார்.

இந்த சுலோகத்தில் பகல், மற்றும் இரவு என்று குறிப்பிடப்படுபவை வித்யா மற்றும் அவித்யாவின் உருவகங்கள் ஆகும். பிரம்ம வித்யையுடன் இணைந்து இருக்கின்ற புத்தி எதுவோ, அதாவது, 'பிரம்ம வித்' என்றழைக்கப்படும் புத்தியே

'பிரம்மா' என்பதன் ஆரம்ப நிலையாகும். மேலும், 'பிரம்ம வித்வரிஷ்டர்' என்றழைக்கப்படும் புத்தியே 'பிரம்மா' என்பதன் உச்சநிலையாகும். வித்யையுடன் இணைந்து இருக்கும் புத்தியே 'பிரம்மாவின் பகல்' எனப்படுகிறது. எப்பொழுது வித்யை இயக்க நிலையில் இருக்கிறதோ, அந்தச் சமயத்தில் யோகியானவர் இறைவடிவத்தை நோக்கித் தீவிரமாக முன்னேறிச் செல்கிறார். அவருடைய உள்மனத்தில் இருந்து எழுகின்ற ஆயிரமாயிரம் கிரணங்களில் (எண்ண அலைகளில்) இறைவனின் மகிமைகளுடன் பொருந்திய தெய்வீகப் பிரகாசம் முழுமையாகக் கிளம்புகின்றன. இதே முறையில், அவித்யையுடன் புத்தியானது இணையும் பொழுது அதுவே, 'அவித்யையின் இரவு' அல்லது 'பிரம்மாவின் இரவு' எனப்படுகிறது. அந்தச் சமயத்தில் அவரது உள்மனத்தில் இருந்து எழுகின்ற ஆயிரமாயிரம் எண்ண அலைகளில் 'மாயையின் இருள்' அல்லது 'ஒன்றுக்கொன்று முரண்பட்ட எண்ணவோட்டம்' பெருக்கெடுத்து ஓடத் தொடங்கி விடுகின்றன. பிரகாசம் (வெளிச்சம்) மற்றும், இருட்டு ஆகியவற்றின் எல்லை இதுவரை உள்ளது. இதற்கு அப்பால் அவித்யையும் இருப்பதில்லை, வித்யையும் இருப்பதில்லை. அந்தப் பரமதத்துவமாகிய பரமாத்மா அறியப்பட்டு விடுகிறார். எவர் இந்தத் தத்துவமாகிய இறைவனைச் சிறந்த முறையில் அறிந்து கொள்கிறாரோ, அந்த யோகியே எப்பொழுது அவித்யாவின் இரவு வருகிறது? என்பதையும் எப்பொழுது வித்யாவின் பகல் வருகிறது? காலத்தின் ஆளுமை எதுவரை உள்ளது? மற்றும், காலம் எதுவரை நம்மைப் பின்தொடர்கிறது? என்கின்ற விஷயங்கள் அனைத்தும் அடங்கிய காலத்தின் தத்துவத்தை அறிந்தவர் ஆகிறார்.

ஆரம்ப காலங்களில் மகான்கள் உள்மனதை (அந்தகரணம்) சித்தம் என்ற வார்த்தையாலும் அவ்வப்போது 'புத்தி' என்ற வார்த்தையாலும் குறிப்பிட்டு விளக்கம் அளித்து வந்துள்ளனர். காலப் போக்கில் உள்மனத்தைப் (அந்தகரணம்) பிரித்துப் பொருள்விளக்கம் தரும் நோக்கத்துடன் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு முக்கியமான நிலைகளில் வகைப்படுத்தியுள்ளனர். உள்மனத்தின் எண்ணவோட்டமோ எண்ணிலடங்காதவை. புத்தியின் அடியாழத்தில்தான் அவித்யையின் இரவு தோன்றுகிறது. மேலும், அதே புத்தியில்தான் வித்யையின் பகலும் உதயமாகிறது. இதுவே 'பிரம்மாவின் இரவு' மற்றும் 'பிரம்மாவின் பகல்' எனப்படுகிறது. உலகம் என்னும் இரவில் மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களும் ஆன்ம உணர்வற்று (சுயஉணர்வு) ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கின்றன. இயற்கை அல்லது படைப்பில் சுற்றியலைந்து கொண்டிருக்கும் அவற்றின் புத்தியால் அந்தப் பரம்பொருளின் பிரகாச வடிவதைக் காண முடிவதில்லை. ஆனால், யோகத்தைப் பயின்று வருகின்ற யோகியோ உலகம் என்னும் இரவில் இருந்து விழித்துக் கொள்கிறான். அவன் வடிவத்தை நோக்கித் தீவிரமாக முன்னேறிச் செல்கிறான். துளஸிதாஸ கோஸ்வாமி அவர்கள்

ராமசரித மானஸ் என்ற நூலில் எழுதியருப்பதைப் போல,

**கபஹூம் திவஸ் மஹும் நிபிடதம், கபஹூம்க ப்ரகட் பதங்க பினஸயி உபஜயி ஜ்ஞான் ஜிமி, பாய் குஸங்க் ஸூஸங்க் (ராமசரித மானஸ் 4/15க)**

வித்யையுடன் இணைந்து இருக்கும் புத்தியானது தீய எண்ணங்களுடன் (**குஸங்க்** – தீயவர் சேர்க்கை) சேர்ந்து அவித்யையாகப் பரிணமிக்கிறது. (மாறுதலுக்கு உட்படுகிறது) மீண்டும், நல்லெண்ணங்களுடன் சேர்ந்த (**ஸூஸங்க்** – மகான்களின் சரணம்) உடனே அதே புத்தியில் வித்யையின் சஞ்சாரம் (இயக்கநிலை) தோன்றி விடுகிறது. இந்த ஏற்றத் தாழ்வுகள் இறுதிக்காலம் (சாதனை நிறைவடையும் காலம்) வரைக்கும் தொடர்கின்றன. சாதனை முழுமையடைந்து விட்ட பிறகு புத்தியும் இல்லை; பிரம்மாவும் இல்லை. இரவும் இல்லை; பகலும் இல்லை. இதுவே பிரம்மாவின் பகல் – இரவு ஆகியவற்றின் உருவகங்கள் ஆகும். இதல்லாமல் ஆயிரம் வருடங்களுக்கு நீண்டிருக்கும் இரவும் இல்லை, ஆயிரம் சதுர்யுகங்களுக்கு நீண்டிருக்கும் பகலும் இல்லை. அதே போன்று, நான்கு முகங்களுடன் கூடிய பிரம்மா என்றும் எவரும் கிடையாது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள 'புத்தியின் நான்கு வரிசைக் கிரமமான படிநிலைகள்'தான் 'பிரம்மாவின் நான்கு முகங்கள்' எனப்படுகிறது. மேலும், 'ஆழ்மனத்தில் நான்கு முக்கியமான, வெவ்வேறு நிலைகள்தான் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்)' 'பிரம்மாவின் நான்கு யுகங்கள்' அல்லது 'சதுர்யுகங்கள்' எனப்படுகிறது. இரவும் பகலும் இந்த உள்மனத்தின் நான்கு வெவ்வேறு நிலைகளில் இருந்து எழுகின்ற எண்ணவோட்டங்களில்தான் உண்டாகின்றன. எவர் இவற்றின் வேறுபாட்டை தத்துவரீதியாக (அனுபவரீதியாக) அறிந்து கொள்கிறார்களோ, அந்த யோகிகள் காலத்தின் வேறுபட்ட நிலைகளான, காலம் எதுவரை பின்தொடர்கிறது? எவரால் காலத்தை கடந்து செல்ல முடியும்? என்பதையெல்லாம் அறிந்து கொள்கிறார்கள். இரவு மற்றும் பகல்; அவித்யை மற்றும் வித்யை ஆகியவற்றில் நடைபெறும் காரியங்களைப் பற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தெளிவாக விளக்குகிறார்.

**அவ்யக்தாத்வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹராகமே
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே (18)**

'பிரம்மாவின் பகல்' என்ற நிலைக்குள் நுழைவு பெறுகின்ற காலத்தில் அதாவது 'வித்யை' (தெய்வீக குணங்கள்) க்குள் நுழைவு பெறும் காலத்தில், மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களுமே, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட புத்தியில் (அவ்யக்த புத்தி) விழிப்புணர்வு பெற்று விடுகின்றன. மேலும்,

'பிரம்மாவின் இரவு' என்ற நிலைக்குள் நுழைவு பெறுகின்ற காலத்தில் அதாவது 'அவித்யை' (அசுர குணங்கள்) – க்குள் நுழைவு பெறும் காலத்திலோ அதே புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட புத்தியில், கண்களுக்குப் புலப்படாத புத்தியில், விழிப்பு நிலையிலிருந்த சூட்சுமமான (நுட்பமான) தத்துவம் உறக்க நிலைக்குச் சென்று விடுகிறது. அந்நிலையில் இருக்கும்போது உயிரினங்களால் அவித்யை என்னும் இரவில் ஆன்ம வடிவத்தைத் தெளிவாகக் காண முடிவதில்லை. ஆனால், ஆன்ம வடிவம் என்னவோ இருக்கத்தான் செய்கிறது. மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களிலும் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்டதாக இருக்கின்ற, கண்ணிற்குப் புலப்படாமல் இருக்கின்ற இந்த புத்தியின் மூலமே விழிப்புணர்வு பெறுவதும் உறக்க நிலைக்குப் போவதும் நிகழ்கிறது.

**பூதக்ராம : ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே**
**ராத்ரயாகமேவஷ : பார்த்த ப்ரபவத்யஹராகமே (19)**

பார்த்தனே! மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களுமே இம்முறையில் விழிப்புணர்வு அடைவதும் இயற்கை அல்லது படைப்பினால் உந்தப்பட்டு, அவித்யை என்னும் இரவு வந்த உடனே உறக்க நிலைக்குப் போவதுமாக இருக்கின்றன. அவற்றினால் நம்முடைய இலட்சியம் என்ன? என்பதையெல்லாம் பார்க்க முடிவதில்லை. வித்யை என்னும் பகல் உதயமாகத் தொடங்கிய உடனே அவைகள் எல்லாம் மீண்டும் விழிப்புணர்வு அடைந்து விடுகின்றன. எதுவரைக்கும் புத்தி இருக்கிறதோ, அதுவரைக்கும் அந்த புத்தியின் அடியாழத்தில் வித்யை மற்றும் அவித்யை ஆகியவற்றின் வரிசைக் கிரமம் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கிறது. இந்நிலை நீடிக்கும் வரைக்கும் அத்தகையவர் சாதகரே தவிர, மகாபுருஷர் அல்லர்

**பரஸ்தஸ்மாத்து பாவோன்யோவ்யக்தோவ்யக்தாத்ஸனாதன :**
**ய : ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி (20)**

'பிரம்மா' அதாவது 'புத்தி புலன் உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்ப்பட்டது' என்பது ஒன்று. புலன்களால் அதனைக் காண முடிவதில்லை. மேலும், இதை விட மேலானதும் உயர்வானதும் என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வு **(சனாதன அவ்யக்த பாவம்)** என்பது மற்றொன்று. அந்த இறைப் பேருணர்வு என்பது அனைத்து ஜீவ உயிர்உணர்வுகளும் அழிந்து போனபிறகும் கூட அழிந்து போவதில்லை. அதாவது, வித்யையில் விழிப்புணர்வு அடைதல், அவித்யையில் உறக்க நிலையை அடைதல்; பகலில் தோன்றுதல், இரவில் மறைதல் என்ற இருவேறு உணர்வுத் தளங்களில் செயல்படுகின்ற, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட புத்தி (பிரம்மா)

யில் இருந்தும் விடுபட்டு அதையும் விட மேலான, அனைத்திலும் உயர்வான, என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வு **(சனாதன அவ்யக்த பாவம்)** அடையப் பெற்று விடுகிறது. இந்த இறைப் பேருணர்வு ஒருபோதும் அழிவுறுவதில்லை; புத்தியில் உண்டாவதாக, மேலே சொல்லப்படுகின்ற இரண்டு விதமான ஏற்றத் தாழ்வுகளும் (விழிப்புணர்வு – உறக்கநிலை) எப்பொழுது முழுவதுமாக அழிந்து விடுகின்றனவோ அப்பொழுதே என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட இறைப் பேருணர்வு அடையப் பெற்று விடுகிறது. அதுவே என்னுடைய பரமபதம் (வீடுபேறு) எனப்படுகிறது. எப்பொழுது என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வு கிடைத்து விட்டதோ, புத்தியும் அதே இறைப் பேருணர்வில் இரண்டறக் கலந்து அதன் தன்மை முழுவதையும் ஏற்றுக் கொண்டு விடுகிறது. அதே இறைப்பேருணர்வினைத் தன்னில் வரித்துக் கொண்டும் விடுகிறது. எனவேதான், அந்த புத்தியானது தானாகவே அழிந்து விடுகிறது. மேலும் அதனுடைய இடத்தில் என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வு (சனாதன அவ்யக்த பாவம்) வந்து நிரம்பிக் கொள்கிறது; இதற்குப் பிறகு இந்த இறைப் பேருணர்வு மட்டுமே எஞ்சி நிற்கிறது.

**அவ்யக்தோக்ஷர இத்யுக்தஸ்தமாஹு : பரமாம் கதிம்**
**யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம (21)**

அந்த என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட, இறைப் பேருணர்வை, அழிவற்றது அதாவது என்றும் அழியாதது என்று கூறப்படுகிறது. இதையேதான் பரமகதி (இறைப்பேறுநிலை) என்றும் சொல்கிறார்கள். இதுதான் என்னுடைய பரமபதம் (வீடுபேறு) ஆகும். இதனை அடைந்த பிறகு யாரும் மீண்டும் இவ்வுலகிற்கு வருவதில்லை. அத்தகையவருக்கு மறுபிறவி, ஏற்படுவதும் இல்லை. இந்த என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வை அடைவதற்கான வழிமுறையைப் பற்றி எடுத்துக் கூறுகிறார்.

**புருஷ : ஸ பர : பார்த்த பக்த்யா லப்யஸ்த்வனன்யயா**
**யஸ்யாந்த : ஸ்த்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம் (22)**

பார்த்தா! எந்த பரமாத்மாவின் ஆதிக்கத்திற்குள்ளே மனிதர் உட்பட, அனைத்து உயிரினங்களும் இருக்கின்றனவோ, எவர் இந்த ஒட்டு மொத்த உலகம் முழுவதும் இங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கிலும் விரிந்தும் பரந்தும் விரவியும் உள்ளாரோ, அந்த என்றும் நிலையாக உள்ள, புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வுடைய மஹாபுருஷர் நிலைத்த (அனன்ய)

பக்தியின் மூலமாகத்தான் அடைவதற்குத் தகுதியானவர் ஆவார். நிலைத்த (அனன்ய) பக்தி என்பதற்கு என்ன அர்த்தம் என்றால் பரமாத்மாவைத் தவிர வேறு எதைப் பற்றிய நினைப்பும் இல்லாமல் எப்போதும் அவரிடமே இணைந்திருத்தல் என்பதாகும். அத்தகைய நிலைத்த உணர்வுடன் இறை ஆராதனையில் ஈடுபடுபவரும், எதுவரைக்கும் மறுபிறவியின் எல்லைக்குள் இருக்கிறார்? மற்றும், எப்பொழுது அவர் மறுபிறவியின் எல்லையைக் கடந்து செல்கிறார்? இதுபற்றி யோகேஷ்வரர் கூறுகிறார்.

**யத்ர காலே த்வனாவ்ருத்திம்ஆவ்ருத்திஞ் சைவ யோகின :**
**ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப (23)**

அர்ஜுனா! எந்தக் காலத்தில் உடலைத் துறந்து விட்டுச் செல்கின்ற யோகிகள் மறுபிறவி என்ற புனர் ஜன்மத்தை அடைவது இல்லையோ மேலும், எந்தக் காலத்தில் உடலைத் துறந்தால் மறுபிறவி என்ற புனர் ஜன்மத்தைப் பெறுகின்றனரோ, அந்தக் காலத்தைப் பற்றிக் கேள். நான் வர்ணிக்கிறேன்.

**அக்னிர்ஜ்யோதிரஹ : சுக்ல : ஷண்மாஸா உத்தராயணம்**
**தத்ர ப்ரயாதா கச்சந்தி பிரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜனா : (24)**

உடல் சம்பந்தமான தொடர்புகள் அனைத்தையும் துறக்கின்ற சமயத்தில் எவருக்கு முன்னால் ஜோதிமயமான அக்கினி எரிந்து கொண்டிருக்கிறதோ, பகலின் வெளிச்சம் பரவியிருக்கிறதோ, சூரியன் ஜொலித்துக் கொண்டிருக்கிறதோ, சுக்ல பட்சத்தில் சந்திரன் வளர்பிறைக் காலத்தில் இருக்கிறதோ, உத்தராயணப் பாதையில் மேகங்களற்ற, தெளிவான, ஆகாசம் இருக்கிறதோ, அந்தக் காலத்தில் பிரயாணம் செய்கின்ற ‘பிரம்ம வேத்தா’ என்றழைக்கப்படும் யோகிகள் பிரம்மத்தை அடைகிறார்கள்.

‘அக்கினி’ என்பது ‘பிரம்ம தேஜஸின்’ உருவகம் ஆகும். ‘பகல்’ என்பது வித்யையின் வெளிச்சம் ஆகும். சுக்ல பட்சம் என்பது நிர்மலமான, புனிதத் தன்மைக்குச் சொல்லப்படுகின்ற உதாரணம் ஆகும். விவேகம், வைராக்கியம், மனக் கட்டுப்பாடு **(சமம்)**, புலன் அடக்கம் **(தமம்)**, தேஜஸ் மற்றும் இறைப் பேரறிவு **(ப்ரக்ஞா)** ஆகிய ஆறு தெய்வீக மகிமைகள்தான் **ஷண்மாஸா** (ஆறு மாதங்கள்) ஆகும். மேல் நோக்கிச் செல்கின்ற நிலைதான் (ஊர்த்வரேதா) உத்தராயணம் ஆகும். இயற்கை அல்லது படைப்பில் இருந்து என்றென்றைக்குமாக வெகுதொலைவில் இருக்கின்ற மேலான இறைநிலைக்குச் செல்கின்ற பிரம்ம வேத்தா என்ற யோகிகளே பிரம்மத்தை அடையப் பெறுகிறார்கள். அவர்களுக்கு புனர்ஜன்மம் என்ற மறுபிறவி எடுக்க வேண்டியதில்லை. ஆனால், நிலைத்த சித்தத்துடன் (சித்தத்தில் என்னைத் தவிர வேறு எதைப் பற்றியும் எண்ணாமல்)

இறை ஆராதனையில் ஈடுபட்டுள்ள மற்ற யோகிகள் ஒருவேளை இந்த உலகத்திற்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட **(ஆலோக்)** இறைவனை அடையமுடியவில்லை என்ற நிலையில், அதாவது சாதனை இன்னும் நிறைவு பெறாத நிலையில் இருக்கும் யோகிகள் எந்த கதியை அடைகிறார்கள்? இதுபற்றிக் கூறுகிறார்.

**தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண ஷண்மாஸா தக்ஷிணாயனம்**
**தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்த்ததே (25)**

எவருடைய பிரயாண காலத்தில் புகை சூழ்ந்திருக்கிறதோ, யோக அக்கினி இருக்கிறதோ (இங்கே அக்கினி எனப்படுவது வேள்வியின் செயல்முறையின்போது அடையப்படுகின்ற அக்கினியின் உருவமாகும்) ஆனால், புகையினால் மறைக்கப்பட்டிருக்கிறதோ, அவித்யையின் இரவாக இருக்கிறதோ, இருளாக இருக்கிறதோ, கிருஷ்ண பட்சத்தில் சந்திரன் தேய்பிறைக் காலத்தில் உள்ளதோ, அதில் கருமை அதிகமாகப் படர்ந்துள்ளதோ, ஆறு விகாரங்களுடன் புலன் நுழைவு ஆசைகள் எனப்படும் காமம், கோபம் , லோபம், மோகம், மதம் மற்றும் ஆணவம்) கூடிய தட்சிணாயனம் அதாவது, வெளிமுகமாக இருக்கிறதோ (பரமாத்மாவிற்குள் நுழைவு பெறும் நிலையிலிருந்து இன்னும் வெளியில்தான் இருக்கிறது) அந்த யோகிக்கு மீண்டும் பிறவி எடுக்க வேண்டியிருக்கும். அப்படியென்றால் அந்த உடலிலேயே அந்த யோகியின் சாதனை அழிந்து போய் விடுகிறதா என்ன? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத : சாஸ்வதே மதே**
**ஏகயா யாத்யனாவ்ருத்திமன்யயாவர்த்ததே புன : (26)**

மேலே கூறப்பட்டுள்ள **'சுக்ல பட்சம்'** மற்றும் **'கிருஷ்ண பட்சம்'** ஆகிய இரண்டு வகையான 'கதிகள்' (நிலைகள்) இவ்வுலகில் எப்போதுமே நிரந்தரமாக உள்ளன. அதாவது, சாதனை ஒருபோதும் அழிந்து போவது இல்லை. 'சுக்ல பட்சம்' என்ற நிலையில் பிரயாணம் செய்பவர் மீண்டும் இவ்வுலகத்திற்குத் திரும்ப வர வேண்டியிருக்காத, பிறவி எடுக்க வேண்டியிருக்காத பரமகதியை (இறைப் பேறுநிலை) அடைகிறார். மற்றொரு வகையான, 'கிருஷ்ண பட்சம்' என்ற நிலையில், அதாவது குறைந்த அளவு வெளிச்சம் மற்றும் இன்னும் கருமை படர்ந்திருக்கும் நிலையில் பிரயாணம் செய்பவர் மீண்டும் இவ்வுலகிற்குத் திரும்ப வருகிறார்; பிறவி எடுக்கிறார். எதுவரை முழுமையான பிரகாசம் (வெளிச்சம்) கிடைக்கவில்லையோ, அதுவரை அவர் இறைவழிபாட்டினைச் செய்தாக வேண்டும். கேள்வி நிறைவடைகிறது. இப்பொழுது, இதற்காக, சாதனை செய்ய வேண்டிய அவசியத்தை மீண்டும் வலியுறுத்தும் வகையில்

**நைதே ஸ்ருதி பார்த்த ஜானன்யோகீ முஹ்யதி கஸ்ச்சன**
**தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுன (27)**

பார்த்தனே! இம்முறையில் இந்த இரண்டு பாதைகளையும் அறிந்து கொண்ட யோகிகள் எவரும் மோகவசப்படுவதில்லை. அவருக்கு முழுமையாக பிரகாசம் கிடைத்த உடனே பிரம்மத்தை அடைந்து விட முடியும் என்பதும் மேலும், குறைந்த அளவு பிரகாசம்தான் இந்தப் பிறவியில் அடைய முடிந்தது என்றாலும் கூட அடுத்த பிறவியிலும் சாதனை மட்டும் அழிந்து போவதில்லை என்பதும் நன்றாகத் தெரியும். இந்த இரண்டு நிலைகளும் எப்போதும் நிலைத்து இருக்கின்றன. ஆகவே, அர்ஜுனா! நீ எல்லாக் காலத்திலும் யோகத்திலேயே கூடியவனாக இரு! அதாவது, நிரந்தரமாக சாதனையில் ஈடுபடு!

**வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ**
**தானேஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம்**
**அத்யேதி தத்ஸர்வமிதம் விதித்வா**
**யோகீ பரம் ஸ்த்தானமுபைதி சாத்யம் (28)**

இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து (வெறுமனே ஒப்புக் கொண்டு அல்ல) யோகியானவன், வேதம், வேள்வி, தவம் மற்றும் தானம் ஆகியவற்றின் புண்ணிய பலன்கள் அனைத்தையும் எந்த சந்தேகமும் இல்லாமல் கடந்து சென்று விடுகின்றான். அத்துடன் என்றும் நிலையாக உள்ள பரம பதத்தையும் அடைந்து விடுகிறான். அறியப்பட முடியாமல் இருந்த பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ‘வேதம்’ எனப்படுகிறது. அந்த அறியப்பட முடியாமல் இருந்த பரமாத்மா அறியப்பட்டு விட்டபிறகு இனிமேல் யார், எதனை அறிந்து கொள்வது எனவேதான், இறைவன் அறியப்பட்டதற்குப் பிறகு வேதங்களின் உபயோகமும் கூட முடிவிற்கு வந்து விடுகிறது. ஏனெனில், அறிந்துகொள்பவன் இப்பொழுது அறியப்பட வேண்டியதில் (பரமாத்மா) இருந்து வேறுபட்டு இருக்கவில்லை. ‘வேள்வி’ அதாவது, இறை ஆராதனையின் நியமிக்கப்பட்டுள்ள கிரியைக்கு (செயலுக்கு) அவசியம் இருந்தது. ஆனால், எப்பொழுது, அந்த தத்துவம் அறியப்பட்டு விட்டதோ, இனிமேல் எதனை அறிந்து கொள்வதற்காக இறைவழிபாடு செய்ய வேண்டும்? மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் இலட்சியத்தை அடைவதற்கு ஏற்ப அடக்குதலே ‘தவம்’ எனப்படுகிறது. அந்த இலட்சியமே அடையப்பட்டு விட்டபிறகு இனிமேல் எதற்காகத் தவம் செய்வது? மனம், வாக்கு, மற்றும் செயல் ஆகியவற்றை ஒருமித்த உணர்வுடன் இஷ்ட தெய்வத்திடம் (ஸத்குரு – இறைவன்) சமர்ப்பணம் செய்வதற்குப் பெயரே ‘தானம்’ எனப்படுகிறது. இவை அனைத்தின் புண்ணிய பலனே பரமாத்மாவை பெறுதல் என்பதாகும். அந்தப் பலனும் இப்போது கிடைத்து

விட்டது. தனித்து இருக்கவில்லை எனவேதான் இவை அனைத்திற்கும் இப்பொழுது எந்த அவசியமும் இல்லாமல் போய்விட்டது. அந்த யோகியே, அதாவது, பரமாத்மாவில் நிலைபெற்று விட்ட அந்த யோகியே வேள்வி, வேதம், தவம், தானம் முதலானவற்றின் புண்ணிய பலனை எல்லாம் கடந்து விடுகிறான். அவனே பரம பதத்தினை (இறைப் பேறுநிலை அல்லது வீடுபேறு) அடைகிறான்.

**முடிவுரை :-**

இந்த அத்தியாயத்தில் ஐந்து முக்கியமான கருத்துகள் பற்றி ஆராயப்பட்டது. இதற்கு முந்தைய அத்தியாயமாகிய ஏழாவது அத்தியாயத்தின் முடிவில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மூலமாக விதைக்கப்பட்ட கேள்விகளை எல்லாம் தெளிவாகப் புரிந்து கொள்ளும் ஆர்வத்துடன் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் மொத்தம் ஏழு கேள்விகள் கேட்டான் – பகவானே! நீங்கள் கூறிய, அந்த பிரம்மம் என்றால் என்ன? அந்த அத்யாத்மம் என்றால் என்ன? அந்த ஸம்பூர்ண கர்மம் என்பது எது? அதிதைவம், அதிபூதம், மற்றும் அதியக்ஞம் எது? மேலும், இறுதிக் காலத்தில், நீங்கள் எந்த முறையில், ஒருபோதும் மறந்து போகாத வகையில் அறிந்து கொள்ளப்படுகிறீர்கள்? யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அதற்கு, எதற்கு அழிவு என்பதே இல்லையோ, அதுவே பரபிரம்மம் என்று கூறினார். தமது உண்மை இயல்பாகிய சுயத்தில் (ஆன்ம வடிவம்) நிலைபெற்று மேலான இறையுணர்வில் திகழ்வதே அத்யாத்மம் ஆகும். இந்நிலையில் ஜீவாத்மாவானது மாயையின் ஆதிக்கத்தில் இருந்து விடுபட்டு ஆன்மாவின் ஏகாதிபத்தியத்திற்குள் வந்து விடுகிறது. இதுவே, **அத்யாத்மம்** ஆகும். மேலும், மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களின் எந்த ஜீவ உணர்வானது நல்லவை, மற்றும் தீயவை என்று வினைகளை உற்பத்தி செய்கின்றதோ, அந்த உணர்வுகள் அனைத்தும் நின்று போதல், **விஸர்க்க** : அந்த உணர்வுகளினின்று விடுபடுதலே கர்மத்தின் முழுமை பெறல் அதாவது ஸம்பூர்ண கர்மம் எனப்படும். இதற்குப் பிறகு, கர்மம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. எனவே, கர்மம் என்பது வினைகளின் (சம்ஸ்காரம்) ஊற்றுக் கண் எனப்படும் ஜீவ உணர்வில் இருந்து விடுவிக்கும் வல்லமை உடையது.

இதே போன்று, அழிவுறும் இயல்புடைய ஜீவ உணர்வே **அதிபூதம்** ஆகும். அதாவது அழிவுறும் இயல்புடைய ஜீவ உணர்வுதான் எல்லா உயிர்களின் உற்பத்திக்கும் காரணமாகும். இதுவே அதிபூதம் எனப்படும். அதுவே எல்லா உயிர்களுக்கும் தலைவன் ஆகும். பரம புருஷரே (பரமாத்மா) **அதிதைவம்** ஆவார். அவருக்குள்ளேதான் அனைத்து தெய்வீகக் குணங்களும் (தெய்வீகச் செல்வங்கள்) இரண்டறக் கலந்து ஒடுங்குகின்றன. இந்த சரீரம் எனப்படும் உடலில் **அதியக்ஞர்** நானே ஆவேன். அதாவது, யாருக்குள் வேள்வியானது

இரண்டறக் கலந்து மறைகிறதோ அவரே நான்! நானே வேள்வியின் தலைவன் ஆவேன். வேள்வியானது முடிவுறும் தறுவாயில், வேள்வியில் ஈடுபட்டிருந்தவர் என்னுடைய ஆன்ம வடிவத்தையே அடைகிறார். அதாவது, ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார் என்பதே இதற்கு அர்த்தம். **அதியக்ஞர்** எனக் குறிப்பிடப்படுபவர் இந்த உடலில்தான் வீற்றிருக்கிறார், வெளியில் அன்று. கடைசிக் கேள்வியாக, 'இறுதிக் காலத்தில் ஒருபோதும் மறந்து போகாத வண்ணம் நீங்கள் எவ்வாறு அறிந்து கொள்ளப்படுகிறீர்?' என்று கேட்டான். அதற்கு ஸ்ரீகிருஷ்ணர், "யார் என்னை நிரந்தரமாக நினைக்கிறார்களோ, என்னைத் தவிர, வேறு எந்தவொரு விஷயத்தைப் பற்றிய சிந்தனைக்கும் இடம் தராமல் உடலுடன் தாம் கொண்டிருந்த அனைத்து தொடர்புகளையும் துறக்கிறாரோ, அத்தகையவர் சாட்சாத், என்னையே நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்டு, என்னுடைய ஆன்ம வடிவத்தையே அடைந்து விடுகிறார். இறுதிக் காலத்திலும் அவர் அதே ஆன்ம வடிவத்தையே அடைகிறார்" என்கிறார். உடலானது மரணம் அடைந்த பிறகுதான் இந்த ஆன்ம வடிவம் கிடைக்கிறது என்பதல்ல பேச்சு. மரணத்திற்குப் பிறகு தான் ஆன்ம வடிவத்தை அடைய முடியும் என்பது உண்மையானால் ஸ்ரீகிருஷ்ணரால் முழுமையடைந்திருக்க முடியாது. மேலும், 'எண்ணற்ற பிறவிகளாக ஆன்மீகப் பயிற்சியை மேற்கொண்டே வந்து, அவரை அடைந்த ஞானிகளும் அவருடைய! ஆன்ம வடிவம் ஆவர்' என்பதும் இல்லை என்றாகிவிடும். மனமானது முழுமையாகக் கட்டுப்படுத்தப்படுவதும், அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக் கலந்து மறைகின்ற காலமே உண்மையான இறுதிக் காலம் எனப்படுகிறது. இந்நிலையில்தான், இனிமேலும் உடல்கள் எடுக்க வேண்டியதான வழிமுறைகள் அனைத்தும் முழுக்க முழுக்க அமைதியடைந்து விடுகின்றன. அந்தச் சமயத்தில் அவர் பரம (மேலான) உணர்வுக்குள் நுழைவு பெற்று விடுகிறார். அதன்பிறகு அவருக்கு மறுபிறவி என்பதே கிடையாது.

ஸ்ரீகிருஷ்ணர், இந்த இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலையைப் பெறுவதற்காக, எப்போதும் இறைநினைவில் ஒன்றி இருத்தல் பற்றிய விதிமுறைகளைக் கூறும் வகையில், 'அர்ஜுனா! நிரந்தரமாக என்னுடைய, நினைவிலேயே ஒன்றி இரு! யுத்தம் செய்!!' என்று கூறினார். இரண்டையும் ஒரே சமயத்தில் எவ்வாறு செய்ய முடியும்? இதற்கு ஒருவேளை, 'கோபாலனுக்கு ஜே! கிருஷ்ணனுக்கு ஜே!! என்று வெற்றி முழக்கமிட்டபடியே கம்புகளையும் தடிகளையும் சுழற்றிக் கொண்டு சண்டை போட வேண்டும்' என்றுதான் பொருள் கொள்ள வேண்டுமோ? அதற்கு ஸ்ரீகிருஷ்ணர், இறைநினைவு (ஸ்மரணம்) என்பதன் முழுவுருவத்தையும் தெளிவாக விளக்கும் வகையில், "யோகத்தின் விதிமுறைகளை நன்கு புரிந்து கொண்டு மனத்தால் அவற்றையெல்லாம் நன்கு உள்வாங்கிக் கொண்டு, அதிலேயே உறுதியாக நிலைத்து நின்று, என்னைத்

தவிர, மற்ற எதைப் பற்றிய நினைப்பும் இல்லாமல், நிரந்தரமாக என்னை மட்டுமே நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்” என்று கூறினார். இறைநினைவானது இவ்வளவு தூரம் சூட்சுமமான ஒன்றாக இருக்கும் நிலையில் யார் யுத்தம் செய்வது? உதாரணத்திற்கு இந்தப் புத்தகத்தை பகவான் என்று வைத்துக் கொள்வோம். எனில், அதற்கு அக்கம் பக்கத்தில் இருக்கும் பொருட்கள், எதிரில் உட்கார்ந்திருக்கும் மனிதர்கள், மற்றபிற கேட்கின்ற, பார்வைக்குத் தட்டுப்படுகின்ற பொருட்கள் எதுவும் நமது எண்ணத்தில் (சங்கல்பம்) வரவும் கூடாது, தெரியவும் கூடாது. ஒருவேளை, தென்படுகிறது என்றால் நாம் இறை நினைவில் இல்லை என்றாகிறது. அத்தகைய இறை நினைவில் யுத்தம் சம்பவிப்பது எப்படி? உண்மையில், எப்பொழுது நீங்கள் இந்த முறையில் நிரந்தரமாக இறை நினைவில் ஈடுபட முயல்கிறீர்களோ, அக்கணமே யுத்தத்தின் முழுஉருவமும் உங்கள் முன்னால் வெளிப்பட்டு வந்து நின்று கொள்ளும். அந்தச் சமயத்தில் மாயையில் இருந்து உருவாகும் புலன் நுகர்ச்சி ஆசை எனும் எண்ணங்கள் இறை நினைவில் தடையை ஏற்படுத்தும் நோக்கத்துடன் உங்கள் முன்னால் நேரடியாக வந்து நிற்கின்றன. காமம், குரோதம், விருப்பு, வெறுப்பு, ஆகிய அந்தப் புலன் நுகர்ச்சி ஆசை எனும் எண்ணங்கள்தான் வெல்வதற்கரிய, பலம் பொருந்திய எதிரிகள் ஆகும். இந்த எதிரிகள் உங்களை இறைநினைவில் ஈடுபட விடுவதில்லை. இவற்றையெல்லாம் வென்று, அவற்றைக் கடந்து செல்வதைத்தான் யுத்தம் என்கிறோம். இந்த எதிரிகளையெல்லாம் வென்று, அவற்றையெல்லாம் அழித்த பிறகுதான் ஒருவனுக்கு பரமகதி எனும் இறைப்பேறுநிலை கிடைக்கிறது.

இந்த இறைப் பேறுநிலையை அடைவதற்காக, ‘அர்ஜுனா! நீ ஓம் என்னும் திருநாமத்தை ஜபம் செய்து கொண்டே என்னை தியானம் செய்’ என்று கூறினார். அதாவது, ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார். நாம ஜபமும் மற்றும் சத்குருவின் திருவுருவத் தியானமே இறை ஆராதனையின் திறவு கோல் ஆகும்.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மறுபிறவி எனப்படும் புனர்ஜன்மம் என்றால் என்ன? மறு பிறவியை அடைபவர்கள் யார் யார்? என்ற கேள்விகளைத் தாமே எழுப்பி அவற்றிற்கு விடையளிக்கும் விதமாக, “பிரம்மாவில் இருந்து ஒட்டு மொத்த உலகமும் மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பு என்ற மாற்றத்திற்கு உட்பட்டவைகளே. மேலும் இவை அனைத்தும் அழிவுற்ற பிறகும் கூட, என்னுடைய புலன் உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வு (பரம அவ்யக்த பாவம்) மற்றும், அதில் நிலைபெறல் ஆகியவை ஒருபோதும் அழிவுறுவதில்லை” என்றார்.

இந்த யோகத்தில் நுழைவு பெற்ற யோகிகளுக்கு இரண்டு விதமான நிலைகள் (கதிகள்) உள்ளன. எவர் முழுமையான பிரகாசத்தை அடையப்

பெற்றுள்ளாரோ, ஆறு தெய்வீக மகிமைகள் பொருந்தியவரோ, மேல்நோக்கிய பயணத்தில் (ஊர்த்வரேதா) உள்ளவரோ, எவரிடம் இம்மியளவு கூட குறைபாடு என்பதே இல்லையோ, அவரே பரமகதியை (இறைப் பேறுநிலை) அடைகிறார். ஒருவேளை யோகத்தில் ஈடுபட்டுள்ள யோகியிடம் இம்மியளவு குறைபாடு இருந்தாலும் கூட, கிருஷ்ண பட்சத்தில், கருமையின் சஞ்சாரம் இருக்கின்ற சமயத்தில் உடலின் காலம் முடிவடையும் நிலைக்கு வந்து விட்டதென்றால் அந்த யோகிக்கு மீண்டும் பிறவியெடுக்க வேண்டியிருக்கும். ஆனால் அவர் சாதாரண ஜீவாத்மாக்களைப் போன்று பிறப்பு – இறப்புச் சக்கரத்திலேயே மீண்டும் மீண்டும் மாட்டிக் கொண்டு உழன்று கொண்டு இருக்க மாட்டார். அதற்கு மாறாக அடுத்த பிறவி கிடைத்த உடனே, இன்னும் எஞ்சியுள்ள சாதனையைச் செய்து முடிக்கிறார்.

இதே முறையில், அடுத்தடுத்த பிறவிகளில் அதே யோகக் கிரியையில் முன்னேறியபடியே அவரும் பரமபதம் (வீடுபேறு) என்கின்ற இறைநிலையை அடைந்து விடுவார். ஆரம்பத்தில் இருந்தே ஸ்ரீகிருஷ்ணர், "இந்த ஆன்மீக சாதனையை சிறிதளவு மேற்கொண்டாலும் கூட பிறப்பு – இறப்பு என்ற மாபெரும் பயத்தில் இருந்து நம்மை விடுவிப்பதாக அமையும்" என்றே கூறிவந்து கொண்டிருக்கிறார். எனவே, இந்த இரண்டு கதிகளும் (சுக்லபட்சம், கிருஷ்ணபட்சம்) எப்போதும் உள்ளன, அழியாதவை என்ற உண்மையை நன்கு புரிந்து கொண்டுள்ள எவருமே யோகத்தில் இருந்து வழுவிச் செல்வதில்லை. எனவே, "அர்ஜுனா நீ யோகியாக மாறு! யோகியே வேதம், வேள்வி, தவம் மற்றும் தானம் ஆகியவற்றின் புண்ணிய பலன்களையெல்லாம் மீறிச் செல்ல முடியும்; பரம கதியையும் (இறைப்பேறு) அடைய முடியும்".

இந்த அத்தியாயத்தில் பல்வேறு இடங்களில் பரமகதி (இறைப்பேறுநிலை)யைப் பற்றிய வர்ணனை இடம் பெற்றுள்ளன. அதையே, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வு நிலை (அவ்யக்த பாவம்), குறைவில்லாதது (அக்ஷய), மற்றும் அழிவற்றது (அக்ஷர) என்றெல்லாம் பல்வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது. அதற்கு ஒருபோதும் குறைவோ, அழிவோ, ஏற்படுவது இல்லை. அத்துடன் –

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸ்ம்வாதே அக்ஷர ப்ரஹ்ம யோகோ நாமாஷ்டமோத்யாய:**

இம்முறையில் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய

‘அக்ஷர ப்ரஹ்ம யோகம்’ அதாவது ‘அழிவற்ற இறை யோகம்’ என்ற பெயருடைய எட்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸபரமானந்தஸ்யசிஷ்ய**
**ஸ்வாமி அட்கடானந்தக்ருதே ஸ்ரீமத் பகவத்கீதாயா:**
**யதார்த்தகீதா பாஷ்யே அக்ஷரப்ரஹ்மயோகோ**
**நாமாஷ்டமோத்த்யாய :**
**ஹரி : ஓம் தத் ஸத்**

இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் யதார்த்த கீதை என்ற உரையில் ‘அக்ஷர ப்ரஹ்ம யோகம்’ அதாவது ‘அழிவற்ற இறையோகம்’ என்ற பெயருடைய எட்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

//ஹரி: ஓம் தத் ஸத்//

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :
## ஒன்பதாவது அத்தியாயம்

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஆறாவது அத்தியாயம் வரையிலும் யோகத்தின் வரிசைக்கிரமமான படிநிலைகளைத் தனித்தனியாகப் பிரித்து ஒவ்வொன்றையும் தெளிவாக விளக்கியுள்ளார். யோகம் என்பதன் தூய்மையான பொருள் வேள்வியின் செயல்முறை என்பதாகும். வேள்வி என்பது அந்தப் பரம்பொருளுக்குள் நுழைவு பெற்றுத் தரவல்ல இறைஆராதனை விதிமுறைகளை பற்றிய முழுவிளக்கமாகும். இந்த வேள்வியில் ஒட்டு மொத்த உலகமும் வேள்வியில் இடப்படுகின்ற பொருட்களின் (வேள்விப் பொருள்) நிலையில் இருக்கிறது. மனத்தைக் கட்டுப்படுத்துதல் மற்றும் அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் இரண்டறக் கலக்கும் காலத்தில் அந்த அமிர்த தத்துவம் (மரணமில்லாப் பெருவாழ்வு) அறியப்பட்டு விடுகிறது. நிறைவடைகின்ற காலத்தில் வேள்வியானது எதனைப் படைக்கிறதோ, அதனைப் பருகுகின்றவனே ஞானியாகிறான். மேலும் அவனே என்றும் நிலையாக உள்ள, மாறாத சனாதன பிரமத்துள் நுழைவு பெறுகிறான். அந்தப் பரப்பிரம்மத்துடன் ஒன்றிணைவதற்குப் பெயரே 'யோகம்' ஆகும். அந்த வேள்விக்குச் செயல்வடிவம் தருவதே 'கர்மம்' எனப்படுகிறது. மேலும், அவர் ஏழாவது அத்தியாயத்தில் விவரிக்கும்போது, "இந்தக் கர்மத்தைச் செய்பவர் எங்கும் விரிந்தும், பரந்தும், வியாபித்துள்ள பிரம்மம், ஸம்பூர்ண கர்மம், ஸம்பூர்ண அத்யாத்மம், ஸம்பூர்ண அதிதைவம், அதிபூதம், மற்றும் அதியக்ஞும் ஆகியவற்றுடன் சேர்த்து என்னை அறிந்து கொள்கிறார்" என்றார். எட்டாவது அத்தியாயத்தில் இதுவே பரமகதி (இறைப் பேறுநிலை), பரம பதம் (வீடுபேறு) என்றும் எடுத்துரைத்தார்.

இந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தாமாகவே, யோகம் கைகூடப் பெற்றவரின் மகிமைகள் என்ன? அவர் எங்கும் நீக்கமற நிறைந்திருந்த போதிலும் எப்படி எதனுடனும் ஒட்டாமல் தூய்மையானவராக விளங்குகிறார்? அனைத்தையும் செய்த போதும் (கர்த்தா) அவர் எந்த வகையில் எதையும் (அகர்த்தா) செய்யாதவராகக் கருதப்படுகிறார்? அந்த யோகம் கைகூடப் பெற்றவரின் ஆன்மீக அகவியல்பு (சுபாவம்) மற்றும் ஆன்மீக ஆளுமைத்திறன் (பிரபாவம்) என்ன? என்பதையெல்லாம் பற்றி விளக்கம் அளிக்கிறார். யோகத்தைச் செயல்முறைக்குக் கொண்டுவந்த பிறகு, தெய்வங்கள் (தேவதைகள்) முதலான பல்வேறு வழிகளில் இருந்து உண்டாகும், தடைகளைப் பற்றியும் கூறி எச்சரிக்கை செய்கிறார். மேலும், அந்த மகாபுருஷரின் சரணத்திற்குச் செல்லுமாறும் வலியுறுத்திக் கூறுகிறார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**இதம் து தே குஹ்யதம் ப்ரவக்ஷ்யாம்யனஸூயவே**
**ஜ்ஞானம் விஜ்ஞானஸஹிதம் யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேசுபாத் (1)**

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார் : அர்ஜுனா! குற்றம் காணும், எண்ணம் இல்லாத உனக்காக நான் இந்தப் பரம இரகசியமான மறைபொருள் ஞானத்தை விஞ்ஞானத்துடன் சேர்த்துக் கூறுகிறேன். அதாவது, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்திநிலை பெற்ற பிறகு கிடைக்கின்ற மகாபுருஷர் என்ற நிலையில் உள்ள அந்த மகாபுருஷர் எவ்வாறு எல்லா இடங்களிலும் ஒரே சமயத்தில் செயல்புரிகிறார்? அவர் எவ்வாறு மற்றவர்களுக்குள் ஆன்மீக விழிப்புணர்வை ஏற்படுத்துகிறார்? அவர் எவ்வாறு பக்தர்களின் அகத்தில் சாரதியாக எழுந்தருளி, ஆன்மாவில் கலந்து நின்று எப்பொழுதும் அவர்களை ஆன்மீகப் பாதையில் வழிநடத்துகிறார்? என்பதையெல்லாம் உனக்குக் கூறுகிறேன். **யத் ஜ்ஞாத்வா** – இதனை நேரடியாக அனுபவத்தில் அறிந்து கொண்டு நீ துக்கமே வடிவமான இவ்வுலகில் இருந்து முக்தியடைந்து விடுவாய். அந்த ஞானம் எப்படிப்பட்டது? இதுபற்றிக் கூறுகிறார். –

**ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம்**
**ப்ரத்யக்ஷாவகம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யயம் (2)**

விஞ்ஞானத்துடன் கூடிய இந்த ஞானம் எல்லா வித்தைகளுக்கும் அரசனாகும். ‘வித்யை’ என்பதற்கு மொழியறிவு என்றோ வெறும் படிப்பறிவு என்றோ பொருள் கிடையாது. **வித்யா ஹி கா ப்ரஹ்ம கதிப்ரதாயா; ஸா வித்யா யா விமுக்தயே** – யாரிடம் வந்து, அவரை உயர்த்தி பிரம்மத்தின் பாதையில் செலுத்தி, முக்தியைப் பெற்றுத் தருகிறதோ அதுவே ‘வித்யை’ எனப்படுகிறது. ஒருவேளை வழியில் ரித்திகளிலும், சித்திகளிலும் மற்றும் இயற்கையின் அதாவது படைப்பின் மாயாஜாலத்தில் சிக்கிக் கொண்டு விட்டால் அவித்யை வெற்றி பெற்று விட்டது என்பது தெளிவாகிறது. ஆகவே அது வித்யை அன்று. இந்த ராஜவித்யை என்பதோ உறுதியாக தூய்மையான நன்மையைச் செய்ய வல்லது. இதுவே எல்லா மறைபொருள் இரகசியங்களுக்கும் அரசன் ஆகும். அவித்யை மற்றும் வித்யை ஆகியவற்றின் திரையானது விலகிய பிறகு, யோகம் கைகூடப் பெற்ற நிலையில் தான் இந்த ராஜவித்யையுடன் ஒன்றிணைய முடியும். இது மிகவும் புனிதமானது, உத்தமமானது, மேலும் நேரடியான பலனைத் தரவல்லது. இங்கே செய், அங்கே பெறு” என்பது போன்ற நேரடியான பலனைத் தரவல்லது. இந்தப் பிறவியில் சாதனை செய், அடுத்த பிறவியில் அதற்கான பலனைப் பெற்றுக் கொள் என்பது போன்ற வெறும் குருட்டு நம்பிக்கையல்ல இது. இந்த வித்யை பரம தர்மமாகிய பரமாத்மாவுடன்

ஒன்றிணைந்து இருக்கின்ற ஒன்று. விஞ்ஞானத்துடன் சேர்ந்த இந்த ஞானம் செய்வதற்குச் சுலபமானது மட்டுமின்றி, ஒருபோதும் அழிவுறாத தன்மை உடையதும் ஆகும்.

இரண்டாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! இந்த யோகத்தில் விதைக்கு அழிவு என்பதே இல்லை. இதனைச் சிறிதளவு பயின்றாலும் கூட பிறப்பு – இறப்பு என்ற மாபெரும் பயத்தில் இருந்து விடுவிக்கும் வல்லமை உடையது இது" என்று கூறினார். ஆறாவது அத்தியாயத்தில் அர்ஜுனன், "பகவானே! குறைந்த முயற்சியுடைய சாதகன் இந்த சாதனையில் இருந்து, வழுவிப் போய்விடமாட்டானே?" என்று கேட்டான். அதற்கு ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! முதலில் கர்மத்தைப் புரிந்து கொள்வது மிகவும் அவசியமாகும். மேலும், அதைப் புரிந்து கொண்ட பிறகு, சிறிதளவு சாதனையின் தூரத்தைக் கடந்து விட்டாலும், அந்த குறைந்த அளவு சாதனைக்கு எந்தப் பிறவியிலும் அழிவு ஏற்படுவது இல்லை. மாறாக, அந்தச் சிறிதளவு சாதனையைப் பயின்றதன் விளைவாக, அடுத்த பிறவிகளிலும் முன்பு விட்ட இடத்திலிருந்தே சாதனையைத் தொடரச் செய்கிறான். எண்ணற்ற பிறவிகளில் சாதனையை மேற்கொண்டதன் இறுதி விளைவாக பரமகதி அதாவது, பரமாத்மாவை அடைந்தும் விடுகிறான்" என்று பதில் கூறினார். இதையேதான் ஸ்ரீகிருஷ்ணர் இங்கேயும் 'இந்த சாதனையானது செய்வதற்கு மிகவும் சுலபமானது; ஒருபோதும் அழிவுறாத தன்மை உடையது' என்று கூறுகிறார். ஆனால், இதற்கு நம்பிக்கை (சிரத்தை) மிகவும் இன்றியமையாதது ஆகும்.

**அஷ்ரத்தானா : புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப**
**அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி (3)**

பெருந் தவத்தை உடையவனே (பரந்தப) அர்ஜுனா! இந்த தர்மத்தில் (எதனைச் சிறிதளவு (சாதனை) செய்தாலும் அழிவுறுவது இல்லையோ அந்த தர்மத்தில்) நம்பிக்கையில்லாதவன் (இறைவனில் (ஸத்குருவிடம்) மனத்தை ஒரு நிலைப்படுத்தாமல் இருப்பவன்) என்னை அடையாமல் இந்த சம்சார க்ஷேத்திரத்திலேயே (பிறவிப் பெருங்கடலாகிய இவ்வுலகில்) சுற்றியலைந்து கொண்டு திரிகிறான். எனவேதான் நம்பிக்கை (சிரத்தை) மிகவும் இன்றியமையாதது எனப்படுகிறது. அப்படி என்றால் நீங்கள் (ஸ்ரீகிருஷ்ணர்) என்ன இந்த உலகத்திற்கு எல்லாம் அப்பாற்பட்டவரா? என்று கேட்கலாம். இதுபற்றிக் கூறுகிறார். –

**மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்தினா**
**மத்ஸ்த்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்த்தித : (4)**

இந்தப் புலன்உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட ஆன்ம வடிவமாகிய நான் இந்த ஒட்டு மொத்த உலகம் முழுவதும் விரிந்தும் பரந்தும் வியாபித்தும் உள்ளேன். அதாவது, நான் எந்த ஆன்ம வடிவத்தில் நிலைபெற்று இருக்கிறேனோ, அது இங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கிலும் நீக்கமற நிறைந்துள்ளது. மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களும் என்னிலேயே அடங்கியுள்ளன. ஆனால், நான் அவற்றில் எல்லாம் அடங்கியிருக்கவில்லை. ஏனெனில், நான் புலன்உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தில் நிலைபெற்று இருக்கிறேன். மகா புருஷர்கள் எந்தப் புலன் உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தில் நிலை பெற்றிருக்கிறார்களோ, அங்கிருந்துதான் (உடல் உணர்வுத் தளத்தில் இருந்து அல்லாமல், அதையெல்லாம் தாண்டிய, புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட உயர் ஆன்மீக, இறைப் பேருணர்வுத் தளத்தில் இருந்து) பேசுகிறார்கள்; மற்றும் செயல்படுகிறார்கள். இதே வரிசையில் மேலும் கூறுகிறார்.

**ந ச மத்ஸ்த்தானி பூதானி பச்ய மே யோக மைச்வரம்**
**பூதப்ருன்ன ச பூதஸ்த்தோ மமாத்மா பூதபாவன : (5)**

உண்மையைச் சொல்லப்போனால், மனிதர் உட்பட எல்லா உயிரினங்களுமே என்னில் நிலை பெற்றவை அல்ல. ஏனெனில், அவைகள் எல்லாம் மரணத்தின் ஆளுமைக்கு உட்பட்டவை. இயற்கை அல்லது படைப்பைச் சார்ந்தவைகள். ஆனாலும், என்னுடைய யோக மாயையின் மகிமையைக் கொண்டு உயிர் தரித்துள்ளவற்றை உற்பத்தி செய்தல் மற்றும் அவற்றைப் பேணிப் பாதுகாக்கின்ற என்னுடைய ஆன்மா அந்த எல்லா உயிரினங்களிலுமே அடங்கியிருக்கவில்லை என்பதைப்பார். நான் ஆன்ம வடிவம் ஆவேன். எனவேதான், நான் அந்த ஜீவஉணர்வு கொண்ட உயிரினங்களில் அடங்கியிருக்கவில்லை. இதுவே யோகத்தின் உயர் ஆன்மீக ஆளுமைத் திறன் (பிரபாவம்) ஆகும். இதனைத் தெளிவுபடுத்துவதற்காக ஸ்ரீகிருஷ்ணர் உதாரணம் தந்து விளக்குகிறார் –

**யதாகாஷஸ்த்திதோ நித்யம் வாயு : ஸர்வத்ரகோ மஹான்**
**ததா ஸர்வாணி பூதானி மத்ஸ்த்தானீத்யுபதாரய (6)**

‘எவ்வாறு ஆகாயத்திலிருந்து உண்டாகிற மாபெரும் வாயு மண்டலம் எப்போதுமே ஆகாயத்திலேயே நிலைபெற்று இருக்கிறதோ, ஆனால், அதனால் ஆகாயத்தில் எந்தவிதமான அசுத்தத்தையும் உண்டாக்க முடிவதில்லையோ, சரியாக அதே போன்றுதான் இந்த மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களும் என்னில் அடங்கியிருக்கின்றன’ என்று அறிந்து கொள். அவ்வாறே, அதாவது ஆகாயத்தைப் போலவே, நானும் எதனுடனும் ஒட்டாமல் தூய்மையானவனாக இருக்கிறேன். அவற்றால் என்னில் அசுத்தத்தை ஏற்படுத்த முடியாது. கேள்வி

நிறைவடைகிறது. இதுவே யோகத்தின் உயர் ஆன்மீக ஆளுமைத் திறன் (பிரபாவம்) ஆகும். இப்போது, யோகி என்ன செய்கிறார்? என்று பார்க்கலாம். இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**ஸர்வ பூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்**
**கல்பக்ஷயே புனஸ்த்தானி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் (7)**

அர்ஜுனா! கல்பத்தின் முடிவுக் காலத்தில் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் என்னுடைய பிரகிருதியை, அதாவது, என்னுடைய உண்மை இயல்பாகிய (ஸ்வபாவம்) ஆன்ம வடிவத்தை அடையப் பெறுகின்றன. மேலும், கல்பத்தின் ஆரம்ப காலத்தில் நானே அவற்றை (மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களையும்) மீண்டும், மீண்டும் **விஸ்ருஜாமி** – மிகவும் சிறப்பான முறையில் உருவாக்குகிறேன். அவைகள் அனைத்தும் முன்பும் இருக்கவே செய்தன. ஆனால் ஒழுங்கற்ற முறையில், உருக்குலைந்துபோன நிலையில் இருந்தன. அவைகளை எல்லாம் நல்ல முறையில் உருவேற்றுகிறேன்; ஒழுங்குமுறைப்படுத்திச் சீராக்குகிறேன். எவைகள் எல்லாம் சுயஉணர்வின்றி ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கின்றனவோ, அவற்றை எல்லாம் விழிப்புணர்வு பெறச் செய்கிறேன். கல்பத்திற்காக அவற்றையெல்லாம் தூண்டுகிறேன். கல்பம் என்பதற்கு ஆன்மீக எழுச்சி பெறுகின்ற உயர்நிலை மாற்றம் என்பதே பொருளாகும். அசுரச் செல்வங்களை (அசுர குணங்கள்) எல்லாம் அகற்றியபடியே தெய்வீகச் செல்வங்களுக்குள் (தெய்வீக குணங்கள்) நுழைவு பெறத் தொடங்கிய உடனே, அங்கிருந்தே அந்த மனிதருடைய கல்பம் ஆரம்பித்து விடுகிறது. மேலும், எப்பொழுது அவரே இறைப் பேருணர்வை (ஈஸ்வர பாவம்) அடையப் பெறுகிறாரோ, அதுவே கல்பத்தின் அழிவு (முடிவு) எனப்படுகிறது. தன்னுடைய காரியத்தை நிறைவேற்றிய பிறகு கல்பமும் இறைவனில் இரண்டறக் கலந்து மறைந்து விடுகிறது. இறைவழிபாட்டின் ஆரம்பமே கல்பத்தின் தொடக்கம் ஆகும். மேலும், இறைவழிபாட்டின் உச்சவரம்பு அதாவது, இலட்சியமாகிய இறைவன் அறியப்பட்டு விடுகின்ற நிலையே கல்பத்தின் முடிவு ஆகும். இந்த மனிதர் உட்பட ஒவ்வொரு உயிரினமும் பல்வேறு யோனிகளில் பிறப்பதற்குக் காரணமாக அமைகின்ற ஜீவ உணர்வுகளாகிய விருப்பு – வெறுப்பு முதலானவற்றில் இருந்து விடுபட்டு தங்களுடைய உண்மை இயல்பாகிய, என்றும் நிலையாக உள்ள ஆன்ம வடிவத்தில் நிலைபெற்று விடுவதையே ஸ்ரீகிருஷ்ணர், 'அத்தகையோர் என்னுடைய இயல்பை அடையப் பெறுகின்றனர்' என்று குறிப்பிடுகிறார்.

எப்பொழுது எந்தவொரு மகாபுருஷரும் இயற்கை அல்லது இயல்புநிலையை இறைவனில் இரண்டறக் கலந்து மறையச் செய்து விட்டு ஆன்ம வடிவத்திற்குள் நுழைவு பெற்று விடுகிறாரோ, அப்பொழுது எதனை அவருடைய இயல்பு நிலை

என்று சொல்வது? அவரிடம் இயல்பு நிலை என்ற பெயரில் ஏதேனும் எஞ்சியிருக்கிறதா என்ன? இல்லவே இல்லை. அத்தியாயம் 3/33 ல் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, "மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் தங்களுடைய இயல்பான குணத்தை அடைகின்றன. அவற்றின் மீது எவ்வாறு இயற்கையினின்று (இயல்பாக) தோன்றும் குணங்களின் உந்துதல் இருக்கிறதோ, அவ்வாறே அவையெல்லாம் செயல்படுகின்றன. மேலும், **ஞானவானபி** – அதேபோன்று இறைவனை நேரடியாக தரிசனம் செய்து, அத்துடன் இணைந்து பெறுகின்ற ஞானத்தை உடைய ஞானியும் தம்முடைய பிரகிருதிக்கு (இயல்பு நிலைக்கு) ஏற்பவே செயல்படுகிறார். அவர் தம்மைப் பின்பற்றுகின்ற எதிர்காலத் தலைமுறையினரின் ஆன்மீக நன்மையைக் கருதிச் செயல்புரிகிறார். முழுமையான ஞானியும் தத்துவத்தில் நிலைபெற்ற மகாபுருஷருமாகிய அவருடைய தெய்வீக வாழ்வியல்தான் அவருடைய இயல்பு நிலை ஆகும். எனவே அவர் தம்முடைய இந்த ஆன்ம இயல்பில் (ஸ்வபவம்) நிலைபெற்றுக் காரியங்களைச் செய்கிறார்" என்கிறார். கல்பத்தின் முடிவில் அனைவருக்கும் இந்த மகாபுருஷருடைய தெய்வீகப் பெருவாழ்வுதான் கிடைக்கப் பெறுகிறது. மஹாபுருஷருடைய இந்த தெய்வீகச் செயல்முறைபாடுகளின் மீது மீண்டும் வெளிச்சம் பரப்புகிறார்.

**ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புன : புன :**
**பூதக்ராமமிம் க்ருத்ஸ்நமவசம் ப்ரக்ருதேர்வசாத் (8)**

என்னுடைய இயல்பு நிலை அதாவது மகாபுருஷருடைய தெய்வீகப் பெருவாழ்வு நிலையை ஏற்றுக் கொண்டு **ப்ரக்ருதேர்வஷாத்** தத்தமது சுபாவத்தில் கட்டுண்டு, இயற்கையின் குணங்களால் ஈர்க்கப்பட்டுக் கிடக்கும், இந்த, மனிதர் உட்பட எல்லா உயிரின சமுதாயத்தையும் நான் மீண்டும் மீண்டும் **விஸ்ருஜாமி** – மிகவும் சிறப்பான முறையில் அலங்கரிக்கிறேன். அவற்றைத் தங்களுடைய உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தை நோக்கி முன்னேறிச் செல்லுமாறு தூண்டுகிறேன். அப்படியென்றால் நீங்கள் (ஸ்ரீகிருஷ்ணர், மஹாபுருஷர்) இந்தக் கர்மத்திற்குக் கட்டுப்பட்டவரா என்ன? –

**ந ச மாம் தானி கர்மாணி நிபத்நந்தி தனஞ்ஜய**
**உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு கர்மஸு (9)**

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அத்தியாயம் 4/9–ல் ஏற்கனவே, "மஹாபுருஷருடைய ஆன்மீகக் காரியச் செயல்முறையானது இந்த உலகியலுக்கு அப்பாற்ப்பட்டது" என்று கூறியுள்ளார். மேலும் அவர் அத்தியாயம் 9/4–ல் "நான் புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட (அவ்யக்த) ஆன்ம வடிவத்தில் இருந்து செயல்படுகிறேன்" என்று கூறியுள்ளார். இங்கேயும் அவர் அதையே

கூறுகிறார் : “தனஜ்ஞயா! எந்தக் கர்மங்களை எல்லாம் நான் புலன்களால் அறிந்து கொள்ள முடியாத வண்ணம், கண்களுக்குப் புலப்படாத நிலையில் இருந்து கொண்டு செய்கிறேனோ, அவற்றின் மீதெல்லாம் எனக்கு எந்தப் பற்றுதலும் இல்லை. எதன்மீதும் பற்றில்லாத (உதாஸீனம்) நிலைக்கு ஒப்பான உயர்நிலையில் உள்ள பரமாத்ம வடிவமாகிய என்னை அந்தக் கர்மங்களால் பிணைக்க முடிவதில்லை. ஏனெனில் கர்மத்தின் இறுதி விளைவாக எந்த இலட்சியம் அடையப் பெறுகிறதோ, நான் அதில் நிலைபெற்றவன் ஆவேன். எனவேதான், அந்தக் கர்மங்களைச் செய்ய வேண்டும் என்ற எந்தக் கட்டாயமும் எனக்கு இல்லை.”

இது ஆன்ம இயல்புடன் (ஸ்வபாவம்) இணைந்து ஒன்றுபட்டுள்ள குணங்களின் ஆன்ம இயல்பின் மேலான செயல்கள் அதாவது, மஹாபுருஷரின் தெய்வீக வாழ்வியல் மற்றும் அவருடைய தெய்வீக உருவாக்கவியல் தொடர்பான கேள்விகளும், அவற்றிற்கான பதில்களும் ஆகும். இப்பொழுது, என்னுடைய (தலைமையின் கீழ்) ஆளுமைக்கு உட்பட்டு இயங்கும் மாயை எதனை உருவாக்குகிறது? அது என்ன? அதுவும் ஒரு கல்பம்தான்.

**மயாத்யக்ஷேண ப்ரக்ருதி : ஸூயதே ஸசராசரம்**
**ஹேதுனானேன கௌந்தேய ஜகத்விபரிவர்த்ததே (10)**

அர்ஜுனா! என்னுடைய தலைமையின் கீழ் அதாவது என்னுடைய முன்னிலையில், இங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கிலும் நீக்கமற நிறைந்திருக்கும் என்னுடைய ஆளுமைக்கு உட்பட்டு இந்த மாயை (திரிகுணமயி பிரகிருதி, அஷ்டதா மூலப்பிரகிருதி மற்றும் சேதனா (உயிருணர்வு) பிரகிருதி ஆகிய இரண்டும்) அசையும் அசையாத இயல்புடைய அனைத்தும் அடங்கிய ஒட்டு மொத்த உலகத்தையும் படைக்கிறது. இது ஒரு தாழ்நிலை கல்பமாகும். மேலும், இந்தக் காரணத்தினால்தான் இந்த உலகம் பிறப்பு – இறப்புச் சக்கரத்தில் மாட்டிக் கொண்டு ஓயாமல் சுற்றிக் கொண்டே இருக்கிறது. இந்த இயற்கையின் காலத்தால் உருமாறிக் கொண்டிருக்கின்ற, தாழ்ந்த நிலையிலான கல்பத்தை, என்னுடைய தலைமையின் கீழ் இயங்குகின்ற இயற்கைதான் செய்கிறது. நான் செய்வதில்லை. ஆனால், ஏழாவது சுலோகத்தில் சொல்லப்படுகின்ற கல்பமாகிய இறை ஆராதனையை இயக்குவித்தல், மற்றும், அது முழுமை பெறுகின்ற இறுதிக் காலம் வரையிலான ஆன்மீக வழிகாட்டுதல் என்கின்ற கல்பத்தை மகாபுருஷர் தாமே முன்னின்று செய்கிறார். எங்கே அவர் மிகவும் சிறப்பான முறையில் உருவாக்குகிறார் எனப்படுகிறதோ, அந்தவொரு நிலையில் அவரே கர்த்தா ஆவார். ஆனால், இங்கேயோ செய்வது (கர்த்தா) இயற்கையாகும்.

அது, என்னுடைய முன்னிலையில், இந்தக் காலத்தினால் உருமாற்றமடைகின்ற படைப்பினை மேற்கொள்கிறது. இதில், உடல்களின் பரிமாற்றம், காலத்தின் பரிமாற்றம், யுகங்களின் பரிமாற்றம் ஆகியவை அடங்கும். இவ்வளவு தூரம் இங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கிலும் நீக்கமற நிறைந்துள்ள உயர் ஆன்மீக ஆளுமைத்திறன் உடையவனாக இருந்த போதிலும், மூடர்கள் என்னை அறிந்து கொள்வதில்லை. மேலும்

**அவஜானந்தி மாம் முடா மானுஷீம் தனுமாச்ரிதம்**
**பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேஷ்வரம் (11)**

மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் மகா ஈஸ்வரனாகிய என்னுடைய மேலான இறைப் பேருணர்வை (பரம பாவம்) அறிந்து கொள்ளாத மூடர்கள் என்னை மனித உடல் தரித்தவனாக, மற்றும் துச்சமாக மதிக்கின்றனர். மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களின் ஈஸ்வரர்களுக்கெல்லாம் மகா ஈஸ்வரனாக விளங்கும் அந்த இறைப் பேருணர்வு நிலையில் (பரமபாவம்) நான் நிலைபெற்று விளங்குகிறேன். ஆனால், மனித உடல் கொண்டவனாக இருக்கிறேன் அல்லவா, எனவேதான் மூடர்களால் என்னை அறிந்து கொள்ள முடிவதில்லை. அவர்கள் என்னைச் சாதாரண மனிதன் என்றே கருதி அழைக்கின்றனர். இதில், அவர்களுடைய குற்றம்தான் என்னவாக இருக்க முடியும்? அவர்களுடைய கண்பார்வைக்கு மகாபுருஷருடைய சரீரம்தானே தென்படுகிறது. நீங்கள் மகாஈஸ்வர உணர்வில் நிலைபெற்றவர் என்பதை அவர்கள் எவ்வாறு அறிந்து கொள்வது? அவர்களால் ஏன் பார்க்க முடிவதில்லை? இதுபற்றிக் கூறுகிறார்.

**மோகாஷா மோககர்மாணோ மோகஜ்ஞானா விசேதஸ :**
**ராக்ஷஸீமாஸுரீஞ் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ஸ்ரிதா : (12)**

அவர்கள் வீணான ஆசைகள் (எது எப்பொழுதுமே நிறைவடைவதில்லையோ, அத்தகைய ஆசைகள்) வீணான கர்மங்கள் (உலகியல் பந்தங்களை ஏற்படுத்தவல்ல கர்மங்கள்) வீணான ஞானம் (எது உண்மையில் அஞ்ஞானமோ) ஆகியவற்றால் **விசேதஸ** : – கடுமையான முறையில் பாதிக்கப்பட்டு சுயஉணர்வற்ற ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கின்ற ராட்சதர்கள், மற்றும் அசுரர்களின் மோகவசப்படுகின்ற சுபாவத்தை உடையவர்களாக இருக்கின்றனர். அதாவது, அசுர சுபாவம் உடையவர்களாக இருக்கின்றனர். எனவேதான் என்னைச் சாதாரண மனிதன் என்றே புரிந்து கொள்கின்றனர். அசுர, மற்றும் ராட்சத குணங்கள் மனத்தில் உள்ள ஒருவகையான சுபாவமே தவிர, ஏதோ ஒரு தனிப்பட்ட ஜாதியையோ, பிறவியையோ (யோனி) குறிப்பதல்ல. அசுர இயல்பை உடையவர்கள் என்னை அறிந்து கொள்வது இல்லை. ஆனால், மகாத்மாக்கள் என்னை அறிவார்கள்; மேலும், அவர்கள் என்னை வழிபடவும் செய்கிறார்கள் –

**மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி மாச்ரிதா :**
**பஜந்த்யனன்யமனஸோ ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம் (13)**

பார்த்தனே! தெய்வீகப் பிரகிருதி அதாவது, தெய்வீகச் செல்வங்களை (தெய்வீகக் குணங்களை) ஆதாரமாகக் கொண்ட மகாத்மாக்கள் என்னை, மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் ஆதி காரணமானவர்; புலன் உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர்; அழிவற்றவர் என்று அறிந்து கொண்டு, ஆழ்ந்த மனத்தால் அதாவது என்னைத் தவிர மனத்தில் வேறு எந்தச் சிந்தனையும் இல்லாமல் என்மீது மட்டுமே தங்களுடைய நம்பிக்கையை வைத்துக் கொண்டு இடைவிடாது (நிரந்தரமாக) என்னையே வழிபடுகின்றனர். எந்த முறையில் வழிபடுகின்றனர்? இதுபற்றிக் கூறுகிறார். —

**ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஸ்ச த்ருடவ்ரதா :**
**நமஸ்யந்தஸ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே (14)**

அவர்கள் நிரந்தரமாக (தொடர்ச்சியாக) ஆன்ம சிந்தனையில் ஈடுபடுதல் என்ற விரதத்தில் திடமாக இருந்து கொண்டு, என்னுடைய தெய்வீகக் குணங்களை முழுநம்பிக்கையுடன் சிந்தனை செய்கின்றனர். என்னை அடைந்து முக்தி நிலை பெறுவதற்கான முயற்சியில் ஈடுபடுகின்றனர். மேலும், அவர்கள் என்னை மீண்டும் மீண்டும் தொழுது வணங்கியபடியே, எப்பொழுதும் என்னிலேயே ஒன்றியிருந்து இடையறாத பக்தியுடன் அதாவது, என்னைத் தவிர வேறு எதையும், யாரையும் நினைக்காது என்னிடம் மட்டுமே பக்தியுடன் என்னையே வழிபடுகின்றனர். இதிலேயே தொடர்ச்சியாக மூழ்கி விடுகின்றனர். அவர்கள் எந்தவிதமான இறைவழிபாட்டினைச் செய்கின்றனர்? எத்தகையது இந்த கீர்த்தி கானம்? வேறு எந்த ஒரு வழிபாடுமல்ல. மாறாக வேள்வி என்ற பெயரில் விரிவாக எடுத்துரைக்கப்பட்ட அதே இறைவழிபாடே தவிர வேறொன்றுமல்ல. அதே இறை ஆராதனையைத்தான் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் சுருக்கமாகத் திரும்பவும் சொல்கிறார்.

**ஜ்ஞான யஜ்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே**
**ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோமுகம் (15)**

அவர்களில் சிலர் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவராகிய பரமாத்மாவாகிய என்னை ஞான வேள்வியின் மூலமாக வேள்வி செய்து வழிபடுகின்றனர். அதாவது, தங்களுடைய இலாப, நஷ்டங்கள், சுயபலம் ஆகியவற்றை எல்லாம் நன்கு அறிந்து கொண்டு இதே நியமிக்கப்பட்டுள்ள கர்ம வேள்வியில் ஈடுபட்டு முன்னேறுகின்றனர். இன்னும் சிலரோ, ஒன்றுபட்ட உணர்வுடன் (ஏகத்துவ பாவம்) அதாவது, நாம் இறைவனுடன் (என்னுடன்) ஒருமைப்பட்டு விடவேண்டும் என்ற

உணர்வுடன் என்னை வழிபடுகின்றனர். வேறு சிலரோ, அனைத்தையும் விளக்கி வைத்து மேலானவராகவும் ஒப்பற்றவராகவும் உள்ள என்னிடமே தங்களைச் சமர்ப்பணம் செய்து பற்றற்ற சேவை உணர்வுடன் என்னை வழிபடுகின்றனர். மேலும் இதே போன்று பல்வேறு முறைகளில் வழிபடுகின்றனர். ஏனெனில், இவை அனைத்துமே ஒரே வேள்வியைச் செய்து கொண்டு போகும்போது வருகின்ற உயர்ந்த, தாழ்ந்த நிலைகள் ஆகும். வேள்வியின் ஆரம்பம் சேவையில் இருந்துதான் துவங்குகின்றது. ஆனால் அந்த வேள்வியை அனுசரிப்பது எப்படி? யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "வேள்வியைச் செய்பவன் நான்தான்" என்கிறார். ஒருவேளை மகாபுருஷர் ஆன்மாவில் ஒன்று கலந்து நின்று, சாரதியாகி, வழி நடத்தவில்லை என்றால் வேள்வி நிறைவடைவதில்லை. அவருடைய வழிகாட்டுதலின் மூலமாகத்தான் சாதகர் இப்பொழுது எந்த நிலையில் இருக்கிறோம்? எதுவரைக் கடந்து வந்து விட்டோம்? என்பதை எல்லாம் அறிந்து கொள்ள முடியும். உண்மையில், வேள்வியைச் செய்பவர் யார்? இதுபற்றி யோகேஷ்வரர் கூறுகிறார்.—

**அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ : ஸ்வதாஹமஹமௌஷதம்**
**மந்த்ரோஹமஹமேவாஜ்யமஹமக்னிரஹம் ஹுதம் (16)**

செய்பவன் (கர்த்தா) நானே! சரியாகச் சொல்வதென்றால், வேள்வியில் ஈடுபடுபவருக்குப் பின்னால் ஊக்குவிப்பவரின் நிலையில் இருந்து கொண்டு எப்போதும் அவரை வழிநடத்திச் சென்று கொண்டிருப்பது இஷ்டதெய்வமே (ஸத்குரு) ஆவார். வேள்வியைச் செய்பவரின் (சாதகர்) மூலமாக வேள்வியானது எவ்வளவு தூரம் நிறைவடைகிறதோ அது என்னுடைய திருக்கொடையேயாகும். வேள்வியும் நானே! வேள்வி என்பது இறைஆராதனையின் சிறப்பான செயல்முறை விதியாகும். வேள்வியானது முடிவுறும் தறுவாயில் எதனைப் படைக்கிறதோ, அந்த அமிர்தத்தைப் பருகுகின்றவர் என்றென்றும் நிலையான, மாறாத பிரம்மத்தில் நுழைவு பெற்றுவிடுகிறார். **ஸ்வதாவும்** நானே! அதாவது கடந்து போன காலங்களில் சேமித்து வைத்திருக்கின்ற எண்ணிக்கையில் அடங்காத எண்ணற்ற வினைகளை அழித்து, அவற்றையெல்லாம் திருப்தியடையச் செய்து அமைதிப்படுத்துவதும் நானேதான். உலகியல் என்னும் நோயிலிருந்து விடுபடுவதற்கான **மருந்தும்** நானே! என்னை அடைந்து அனைவரும் இந்நோயில் இருந்து குணமடைந்து விடுகின்றனர். **மந்திரமும்** நானேதான்! அதாவது, மனத்தை சுவாசத்தின் அடியாழத்தில் கட்டுப்படுத்தி மறையச் செய்வதும் என்னுடைய திருக்கொடைதான். இந்த மனக் கட்டுப்பாட்டுக் கிரியையில் தீவிரத்தைக் கொண்டு வருகின்ற பொருளாகிய **ஆஜ்ய** அதாவது, நெய்யாகிய அவியும் நானே! என்னுடைய பிரகாசத்திலேயே (வெளிச்சம்) மனத்தின் அனைத்து

எண்ணவோட்டங்களும் கலந்து மறைகின்றன. மேலும் **ஹவன்** அதாவது, சமர்ப்பணமும் நானேதான்.

இங்கே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் திரும்பத் திரும்ப 'நான்தான்' என்று கூறுகிறார். அவர் இதன் மூலமாகச் சொல்ல விரும்புவது இவ்வளவுதான் : அதாவது, "நானேதான் ஊக்கப்படுத்தி வழிநடத்துபவரின் நிலையில் ஆன்மாவில் இரண்டறக் கலந்து நிற்கிறேன். மேலும், தொடர்ந்து தீர்மானித்தவாறே இருந்து கொண்டு இந்த யோகச் செயல்களை முழுமை பெறச் செய்கிறேன்" என்கிறார். இதற்குப் பெயர்தான் விஞ்ஞானம் எனப்படுகிறது. பூஜ்ய ஸ்ரீபகவான் பரமஹம்ஸ பரமானந்த மகராஜ் அவர்கள் பின்வருமாறு கூறுவார் : எதுவரைக்கும் இஷ்ட தெய்வம் (ஸத்குரு – இறைவன்) சாரதியாக நின்று உள்மூச்சு – வெளிமூச்சினைக் கட்டுப்படுத்தி, தடுத்தாட்கொள்ளவில்லையோ, அதுவரைக்கும் இறைவழிபாடு ஆரம்பமாவது கூட இல்லை. எவர் வேண்டுமானாலும் இலட்சம் முறை கண்களை மூடிக் கொண்டு இறைவழிபாடு செய்து பார்க்கட்டும், உடலைப் போட்டுத் தவம் என்ற பெயரில் வருத்திப் பார்க்கட்டும். ஆனால், எதுவரை, எந்த பரமாத்மாவை அடைய வேண்டும் என்று நாம் விருப்பம் கொண்டுள்ளோமோ, அவர், எந்த நிலையில் நாம் இருக்கிறோமோ, அந்த நிலைக்கு இறங்கி வந்து, ஆன்மாவில் இரண்டறக் கலந்து நின்று எழுந்தருளி விழிப்புணர்த்தவில்லையோ அதுவரை சரியான அளவில் இறைவழிபாட்டின் உண்மையான உருவத்தைக் கூட நம்மால் புரிந்து கொள்ள முடியாது. எனவேதான் பரம பூஜ்ய பரமஹம்ஸ ஸ்ரீபரமானந்த மகராஜ் அவர்கள், "என்னுடைய திருவுருவத்தைப் பற்றிக் கொள்; நான் அனைத்தையும் தருவேன் என்று கூறியருள்வார். ஸ்ரீகிருஷ்ணரும், '"அனைத்தும் என் மூலமாகவே நடைபெறுகின்றன" என்கிறார்.

**பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ :**
**வேத்யம் பவித்ரமோங்கார ருக்ஸாம யஜுரேவச (17)**

அர்ஜுனா! நான்தான் ஒட்டு மொத்த உலகத்தையும் **தாதா** அதாவது தாங்குபவன் ஆவேன்; **பிதா** – அதாவது போற்றிப் பேணிப் பாதுகாப்பவன் ஆவேன்; **மாதா** – அதாவது உற்பத்தி செய்பவள் ஆவேன்; **பிதாமஹ :–** அதாவது, அனைத்தும் எதற்குள் நுழைவு பெறுகின்றனவோ, அந்த மூலஊற்றுக்கண் ஆவேன்; மேலும், அறியத் தகுதியுடைய புனிதமான **ஓங்காரம்** அதாவது, **அஹம் ஆகார : இதி ஓம்கார :** – அந்த பரமாத்மா எனது ஆன்ம வடிவமே ஆகும். **ஸோஹம், தத்வமஸி** போன்றவை எல்லாம் ஒரே பொருளைத் தருபவைதான், அவ்வாறு அறியத் தகுதியுடைய வடிவம் நானேதான். **ருக் –** அதாவது எல்லா பிரார்த்தனைகளும், **ஸாம –** அதாவது, சமத்துவத்தைத் தரவல்ல ஆன்மீகச் செயல்முறையும், **யஜு –** அதாவது, வேள்வியின் சிறப்பான

செயல்முறை விதியும் நானேதான். யோகத்தை அனுசரிப்பதில் உள்ள, மேலே குறிப்பிட்டுள்ள மூன்று அவசியமான அங்கங்களுமே என்னிடமிருந்துதான் தோன்றுகின்றன.

**கதிர்ப்பர்த்தா ப்ரபு : ஸாக்ஷீ நிவாஸ : சரணம் ஸுஹ்ருத்**
**ப்ரபவ : ப்ரலய : ஸ்த்தானம் நிதானம் பீஜமவ்யயம் (18)**

அர்ஜுனா! **கதி** : – அடையத் தகுதியுடைய பரமகதியும் (வீடுபேறு), **பர்த்தா –** போற்றிப் பேணிப் பாதுகாப்பவரும், எல்லோருடைய இறைவனானவரும் (ஸ்வாமீ), **ஸாக்ஷீ** அதாவது சாட்சியின் வடிவில் இருந்து அனைத்தையும் அறிந்தவரும், அனைத்தின் இருப்பிடமும், சரணமடையத் தகுதியுடையவரும், எந்தக் காரணமுமின்றி அன்பு காட்டும் நண்பரும், உற்பத்தி மற்றும் பிரளயம் அதாவது, நல்ல மற்றும் தீய வினைகளை அழிப்பவரும் மற்றும் அழிவற்ற காரணமும் நானேதான். அதாவது இறுதியில் எதற்குள் நுழைவு கிடைக்கிறதோ, அந்த அனைத்து தெய்வீக மகிமைகளும் (விபூதி) நானேதான்.

**தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச**
**அம்ருதஞ் சைவ ம்ருத்யும்ஸ்ச ஸதஸச்சாஹமர்ஜுன (19)**

நானே சூரியனின் உருவத்தில் இருந்து கொண்டு வெப்பம் அளிக்கிறேன்; மழையை உண்டு பண்ணுகிறேன். மேலும், அதைப் பெய்விக்கவும் செய்கிறேன். மரணத்திற்கு அப்பாற்பட்ட அமிர்த தத்துவமும் நானே! மரணமும் நானே! உண்மை **(ஸத்)** மற்றும் உண்மையற்றது **(அஸத்)** அனைத்தும் நானே! அதாவது, மேலான ஒளியை **(பரம பிரகாசம்)** அளிப்பது எதுவோ, அந்த சூரியனும் நானேதான்! சிலசமயங்களில் இறைவழிபாட்டில் ஈடுபடுபவர்கள் என்னை 'இல்லாதவர்' (அஸத்) என்று எண்ணிக் கொண்டு உட்கார்ந்து விடுகின்றனர். அவர்கள் மரணத்தையே அடைகின்றனர். இந்த வகையில் அவர் மேலும் கூறுகிறார்.

**த்ரைவித்யா மாம் ஸோமபா : பூதபாபா**
**யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்க்கதிம் ப்ரார்த்தயந்தே**
**தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ர லோகம்**
**அச்னந்தி திவ்யாந்திவி தேவபோகான் (20)**

இறை ஆராதனை வித்யை மூன்று அங்கங்களைக் கொண்டது. அவை முறையே, **ருக், ஸாம** மற்றும் **யஜு,** அதாவது, பிரார்த்தனை, சமத்துவம் பெற்றுத் தரும் ஆன்மீகச் செயல்முறை மற்றும் வேள்வியின் சிறப்புச் செயல்முறைவிதி ஆகும். வேள்வியை அனுசரித்து வருகின்ற, **ஸோம** அதாவது, சந்திரனின் குறைந்த வெளிச்சத்தைப் (பிரகாசம்) பருகுகின்ற, பாவங்களில்

இருந்து முக்தியடைந்து புனிதமடைந்த மனிதர், அந்த வேள்வியின் நிச்சயிக்கப்பட்டுள்ள செயல்முறையின் மூலமாக, என்னை இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு) உருவில் வழிபட்டு சொர்க்கத்தை அடைவதற்காகப் பிரார்த்தனை செய்கிறார். இதுவே உண்மையற்றதை விரும்புவதாகும். இதனால் அவர் மரணத்தை அடைய நேரிடுகிறது. அத்தகையவருக்கு மறுபிறவி எனப்படும் புனர்ஜன்மம் உண்டாகிறது. இதைக் குறிப்பிட்டே யோகேஷ்வரர் இதற்கு முந்தைய சுலோகத்தில் கூறினார். அவர் என்னைத்தான் வழிபடுகிறார். அதே நிச்சயிக்கப்பட்டுள்ள விதிமுறைப்படிதான் வழிபடுகிறார். ஆனால், பதிலுக்கு சொர்க்கத்தை வேண்டுகிறார். அத்தகையவர் புண்ணியத்தின் பலனுருவாகிய இந்திரலோகத்தை அடைந்து சொர்க்கத்தில் தேவதைகளுக்கே உரித்தான தெய்வீக இன்பங்களை அனுபவிக்கிறார். அதாவது, அந்த இன்பங்களையும் கூட நானேதான் தருகிறேன்.

**தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம்**
**க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஷந்தி**
**ஏவம் த்ரையீதர்மமனுப்ரபன்னா**
**கதாகதம் காமகாமா லபந்தே (21)**

அவர்கள் அந்த விசாலமான சொர்க்க வாழ்வை அனுபவித்த பிறகு, புண்ணியம் குறைந்து போகின்ற நிலை வந்ததும் மரணம் ஆட்சி புரிகின்ற இந்த உலகத்திற்கு **(ம்ருத்யுலோகம்)** அதாவது, பிறப்பு – இறப்பிற்கு ஆளாகின்றனர். இம்முறையில் **த்ரையீதர்மம்** – பிரார்த்தனை, சமத்துவம் மற்றும் வேள்வி ஆகிய இம்மூன்று விதிகளுடன் நிச்சயிக்கப்பட்டுள்ள அதேயொரு வேள்வியைக் கடைப்பிடிப்பவர், என்னுடைய சரணத்தை ஏற்றுக் கொண்டிருந்த பிறகும்கூட சொர்க்கம் முதலான உலகியல் இன்பங்களை விரும்புகின்ற அத்தகையவர், மீண்டும் மீண்டும் வருவதும் போவதும், அதாவது, மறுபிறவி அல்லது புனர்ஜன்மத்தையே அடைகிறார். ஆனால், அவருடைய ஆன்மீக சாதனையின் ஆரம்பம் (மூலம்) ஒருபோதும் அழிந்து போவது இல்லை. ஏனெனில், இந்த ஆன்மீகப் பாதையில் விதைக்கப்படுகின்ற ஆன்மீக விதைக்கு அழிவு என்பதே இல்லை. ஆனால், எந்த வகையான ஆசையும் கொள்ளாதவருக்கு என்ன கிடைக்கிறது?

**அனன்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜனா : பர்யுபாஸதே**
**தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் (22)**

அனன்ய உணர்வுடன், அதாவது, என்னைத் தவிர, வேறு எதையும், யாரையும் விரும்பாத என்னிலேயே நிலைத்திருக்கும் பக்தர்கள் பரமாத்ம

வடிவமாகிய என்னையே நிரந்தரமாகச் சிந்தனை செய்கிறார்கள். **பர்யுபாஸதே** – சிறிதளவுகூட குறைபாடு எதுவும் இல்லாமல் என்னையே வழிபடுகின்றனர். அவ்வாறான எப்போதும் மாறாத ஒருணர்வாளர்களின் யோக நலனை நானே முன்னின்று பாதுகாத்து அருள்கிறேன். அதாவது, அவர்களின் யோகத்தினைப் பாதுகாப்பது முதலான அனைத்துப் பொறுப்புகளையும் என்னுடைய கையில் எடுத்துக் கொள்கிறேன். இவ்வளவு இருந்த பிறகும்கூட மக்கள் மற்றபிற தெய்வங்களையே வழிபடுகின்றனர்.

**யேப்யன்யதேவதா பக்த்தா யஜந்தே ச்ரத்தயான்விதா :**
**தேஅபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் (23)**

குந்தி மகனே! நம்பிக்கையுடன் (சிரத்தை) கூடியவர்களாக எந்தெந்த பக்தர்கள் வெவ்வேறு வகையான தெய்வங்களை வழிபடுகிறார்களோ, அவர்களும் உண்மையாகச் சொல்லப்போனால் என்னையேதான் வழிபடுகிறார்கள். ஏனெனில், அங்கே தேவதை என்ற பெயரில் எந்தப் பொருளும் இல்லவே இல்லை. ஆனால், அவர்களுடைய இந்த வழிபாடு விதிமுறைகளைத் தாண்டியதாகும்; மீறியது ஆகும். என்னை அடைந்து முக்திநிலை பெறுவதற்கான விதிமுறை இந்த வழிபாடுகளில் இல்லை.

இங்கே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மீண்டும் ஒருமுறை, தேவதைகள் (மற்ற பிறதெய்வங்கள்) என்ற தலைப்பை, விவாதத்திற்கு எடுக்கிறார். அவர் ஏழாவது அத்தியாயத்தில் இருபதில் இருந்து இருபத்தி மூன்றாவது சுலோகம் வரைக்கும், “அர்ஜுனா! (விருப்பங்கள்) ஆசைகளின் மூலமாக எவருடைய ஞானம் அபகரிக்கப்பட்டு விட்டதோ, அத்தகைய மூடபுத்தியை உடைய மனிதர்கள்தான் மற்ற பிற தெய்வங்களை வழிபடுகின்றனர். மேலும், அவர்கள் எங்கே அவ்வாறு வழிபடுகிறார்களோ, அங்கே தேவதை என்ற பெயரில் ஏற்றுக் கொள்ளத் தக்க உறுதியான எந்த ஒரு நிலையும் இல்லவே இல்லை. ஆனால், அரசமரம், கல், பூதம், பவானி, இதுபோன்று இன்னும் எத்தனை எத்தனையோ இடங்களில் அவர்களுடைய நம்பிக்கை வளர்ந்தும் தாழ்ந்தும் விடுகிறது. ஆனால், அங்கெல்லாம் எந்த தேவதையும் இல்லை. நான்தான் அங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கிலும் நீக்கமற நிறைந்திருக்கிறேன். எனவே, அந்தந்த இடங்களில் எல்லாம் நானே நின்று கொண்டு அவர்களுடைய தெய்வ நம்பிக்கைகளை அங்கெல்லாம் நிலைபெறச் செய்கிறேன். நான்தான் பலன்கள் கிடைப்பதற்கான வழிவகைகளையும் அமைத்துத் தருகிறேன். நானேதான் பலன்களையும் கொடுக்கிறேன். பலன் என்னவோ நிச்சயமாகக் கிடைக்கவே செய்கிறது. ஆனால், அதிலிருந்து கிடைக்கின்ற பலன்கள் அனைத்துமே அழியும் இயல்புடையவை. இன்று அவை கிடைக்கலாம். நாளை அவற்றை நாம் அனுபவிக்கவும்

அவையெல்லாம் அழிந்து போய் விடுகின்றன. ஆனால், என்னுடைய பக்தன் அழிவடைவதில்லை. எனவேதான், அந்த மூடபுத்தியுடைய, அதாவது, எவருடைய ஞானம் ஆசைகளால் அபகரிக்கப்பட்டு விட்டதோ, அத்தகையோரே மற்றபிற தெய்வங்களை வழிபடுகிறார்கள்" என்று கூறினார்.

இந்த ஒன்பதாவது அத்தியாயத்தில் இருபத்தி மூன்றில் இருந்து இருபத்தி ஐந்தாவது சுலோகங்கள் வரையிலும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் திரும்பவும் ஒரு முறை நினைவு படுத்தும் விதமாக, "அர்ஜுனா! எவர் சிரத்தையுடன் (நம்பிக்கையுடன்) மற்றபிற தெய்வங்களை வழிபடுகிறார்களோ, அவர்கள் உண்மையில் என்னையே வழிபடுகிறார்கள். ஆனால், அவர்களுடைய வழிபாடு விதிமுறைகளை மீறியதாக உள்ளது. அங்கே, தெய்வம் என்ற பெயரில் ஏற்றுக் கொள்ளத் தக்க எந்த ஒரு உறுதியான நிலையும் இல்லவே இல்லை. அவர்கள் என்னை அடைந்து முக்தி நிலை பெறுவதற்காக மேற்கொண்டுள்ள விதிமுறையும் தவறானது ஆகும்" என்று சொல்கிறார். இங்கே மேலும் ஒரு கேள்வி எழுகிறது. அதாவது அவர்கள் பல்வேறு விதமான வழிகளில் உங்களையே வழிபடுகிறார்கள். மேலும் அதன் மூலமாகப் பலனும் கிடைக்கிறது. அப்படி இருக்கும்போது இதில் என்ன தவறுதான்?

**அஹம் ஹி ஸர்வ யஜ்ஞானம் போக்தா ச ப்ரபுரேவ ச**
**ந து மாமபிஜானந்தி தத்வேனாஸ்ச்யவந்தி தே (24)**

எல்லா வேள்விகளையும் அனுபவிப்பவனும், அதாவது, வேள்வியானது எவருள் ஒன்று கலந்து மறைகிறதோ, வேள்வியின் இறுதி விளைவாகக் கிடைப்பது எதுவோ, அதுவும் நானேதான். மேலும், வேள்வியின் தலைவனும் (ஸ்வாமி) நான்தான் ஆனால், அவர்கள் என்னைத் தத்துவரீதியாக (நேரடியாக தரிசனம் செய்து அறிதல்) சரியான முறையில் அறிந்து கொள்வதில்லை. எனவேதான் **ச்யவந்தி** – வீழ்ச்சியடைகின்றனர். அதாவது, அவர்கள் சிலசமயம் மற்றபிற தெய்வங்கள் மீது விழுகிறார்கள். மேலும், எதுவரை தத்துவரீதியாக (அனுபவபூர்வமாக) அறிந்து கொள்வது இல்லையோ, அதுவரை ஆசைகளாலேயே வீழ்ச்சியடைகின்றனர். அவர்களுடைய நிலை என்னவாகிறது?

**யாந்தி தேவவ்ரதா தேவான்பித்ருன்யாந்தி பித்ருவ்ரதா :**
**பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜினோபிமாம் (25)**

அர்ஜுனா! தேவதைகளை வழிபடுபவர்கள் தேவதைகளையே அடைகிறார்கள். தேவதை என்பதும் மாற்றத்திற்கு உட்படுகின்ற ஒரு நிலைப்பாடுதான். அவைகள் தங்களுடைய நற்கர்மங்களுக்கு ஏற்பக் கிடைக்கின்ற வாழ்க்கையை வாழ்ந்து முடிக்கின்றன, அவ்வளவுதான். பித்ருக்களை

(இறந்துபோன மூதாதையர்கள்) வழிபடுபவர்கள் பித்ருக்களையே அடைகிறார்கள். அதாவது, கடந்த காலத்திலேயே உழன்று கொண்டு இருக்கின்றனர். பூதங்களை வழிபடுபவர்கள் பூதங்களாகின்றனர். அதாவது, உடலைப் பெறுகின்றனர். மேலும், என்னுடைய பக்தனோ என்னையே அடைகிறான். அவன், என்னுடைய சாட்சாத் ஆன்ம வடிவத்தையே அடைகிறான். அவனுக்கு அழிவு என்பதே கிடையாது. இது மட்டுமல்ல. என்னை வழிபடுவதற்கான வழிமுறையும் எளிமையானது.

**பத்ரம் புஷ்பம் ஃபலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி**
**ததஹம் பக்த்யுபஹ்ருதமஷ்னாமி ப்ரயதாத்மன : (26)**

பக்தி எங்கிருந்து தொடங்குகிறது என்றால் இலை, பூ, தண்ணீர், பழம் முதலானவற்றை யார் எனக்கு பக்திப் பூர்வமாக சமர்ப்பித்தாலும் மனத்தால் என்னை அடைய முயற்சிக்கும் அந்த பக்தரால் சமர்ப்பிக்கப்படுகின்ற அனைத்தையும் நான் உண்கிறேன். அதாவது, ஏற்றுக் கொள்கிறேன். எனவே –

**யத் கரோஷி யதஷ்னாஸி யஜ்ஜுஹோஸி ததாஸி யத்**
**யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் (27)**

அர்ஜுனா! நீ எந்தக் கர்மத்தைச் (யதார்த்த கர்மம்) செய்கிறாயோ, எதை உண்கிறாயோ, எதை வேள்வியில் வேள்விப் பொருளாக இடுகிறாயோ, சமர்ப்பிக்கிறாயோ, தானம் கொடுக்கிறாயோ, மனத்துடன் சேர்த்துப் புலன்களை எல்லாம் என்னை மட்டுமே அடையும் எண்ணத்துடன் எனக்கு ஏற்றபடி வருத்துகிறாயோ, அதாவது, 'தவம்' என்ற பெயரில் அடக்குகிறாயோ, அவை அனைத்தையும் என்னிடமே அர்ப்பணம் செய். அதாவது, என்னிடம் மட்டுமே சமர்ப்பணமாகிக் கொண்டு இவை அனைத்தையும் செய். அவ்வாறு, சமர்ப்பணம் செய்வதால் யோகத்தின் ஒட்டு மொத்தப் பொறுப்புகளையும் நான் ஏற்றுக் கொள்கிறேன்.

**சுபாசுபஃபலைரேவம் மோக்ஷயஸே கர்மபந்தனை :**
**ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி (28)**

இந்த முறையில் அனைத்தையும் துறந்து, சந்நியாச யோகத்துடன் கூடிநின்று, நீ நல்ல மற்றும் தீய பலன்களைத் தருகின்ற கர்மங்களின் பந்தத்தில் இருந்து முக்தி பெற்று என்னை அடைவாய்.

மேற்கூறிய மூன்று சுலோகங்களில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் வரிசைக் கிரமமாக சாதனை மற்றும் அதனுடைய இறுதி விளைவு ஆகியவற்றை முழுமையாக வர்ணித்துள்ளார். ஆரம்ப நிலையில் இலை, பூ, பழம், தண்ணீர்

ஆகியவற்றை முழுமையான நம்பிக்கையுடன் சமர்ப்பித்தல், அதற்குப் பிறகு இரண்டாவது நிலையில் சமர்ப்பண உணர்வை அடைந்து கர்மத்தை அனுசரித்தல், அதையடுத்து மூன்றாவது நிலையில் முழுமையான சமர்ப்பண உணர்வுடன் அனைத்தையும் துறத்தல். இதன் மூலமாக, கர்மத்தின் தளைகளிலிருந்து மிகவும் சிறப்பான முறையில் முக்தி அடைந்து விடலாம். முக்தியினால் என்ன கிடைக்கும்? என்பதற்கு 'என்னையே அடைவாய்!' என்று பதில் அளித்தார். இங்கே 'முக்தி' என்பதும் 'இறைவனை அடையப் பெறுதல்' என்பதும் ஒன்றுக்கொன்று சமமான அர்த்தத்தையே தருகின்றன. உங்களை (ஸ்ரீகிருஷ்ணர் – ஸத்குரு – இறைவன்) அடைவதே முக்தி எனப்படுகிறது. அதனால் என்ன இலாபம்? இதுபற்றிக் கூறுகிறார்.

**ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய :**
**யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் (29)**

நான், மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களிலும் சமமாக நிறைந்திருக்கிறேன். இந்தப் படைப்பில் (சிருஷ்டி) எனக்கு யார் மீதும் பிரியமோ அல்லது வெறுப்போ கிடையாது. ஆனால், என்னைத் தவிர, வேறு எதையும் யாரையும் நாடாத பக்தனுக்கு மட்டும், அவன் என்னில் இருக்கிறான்; நான் அவனுள் இருக்கிறேன். இது ஒன்று மட்டுமே என்னுடைய உறவாகும். இதிலேயே நான் முழுமையடைந்து விடுகிறேன். எனக்கும் அவனுக்கும் இடையில் எந்தவொரு இடைவெளியும் இருப்பதில்லை. அப்படியென்றால், பெரும் பாக்கியவான்கள் மட்டுமே இறைவழிபாடு செய்வார்கள், அப்படித்தானே? இறைவழிபாடு செய்வதற்கான அதிகாரம் யாருக்கு உள்ளது? இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மாமனன்யபாக்**
**ஸாதுரேவ ஸ மந்தவ்ய : ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ : (30)**

ஒருவேளை, மிகவும் கெட்ட நடத்தை உள்ளவன் கூட, நிலைத்த பாவத்துடன் (அனன்ய பாவம்) அதாவது, என்னைத் தவிர, வேறு எதையும் யாரையும் விரும்பாமல், தேவதை என்ற பெயரில் எதையும் வழிபடாமல், என்னை மட்டுமே நிரந்தரமாக வழிபடுகிறானோ, அவன் சாது என்று ஏற்றுக் கொள்ளத்தக்கவன். இப்பொழுது அவன் சாது ஆகிவிடவில்லை. ஆனால், அவன் சாதுவாகி விடுவான் என்பதில் எந்த சந்தேகமும் கிடையாது. ஏனெனில், அவன் யதார்த்தமான நிச்சயத்துடன் ஈடுபட்டுள்ளான். எனவே, நீங்கள் மனிதர்களாக இருந்தால் நீங்களும் இறைவழிபாட்டைச் செய்ய முடியும். ஏனெனில், மனிதர்கள் மட்டுமே யதார்த்தமான உறுதியும் நிச்சயமும் உடையவர்கள் ஆவர்.

கீதை பாவிகளை உய்விக்கின்றது. மேலும், அந்த ஆன்மீகப் பாதையிலுள்ள பயணி (சாதகர்) –

**க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஷஸ்வச் சாந்திம் நிகச்சதி**
**கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த : ப்ரணச்யதி (31)**

இந்த இறைவழிபாட்டின் வலிமையால் தீய நடத்தையுள்ளவன் கூட சீக்கிரமே தர்மாத்மாவாகி விடுவான். பரமதர்ம பரமாத்மாவுடன் ஒன்றிணைந்து விடுகிறான். மேலும், எப்போதும் நிலையாக உள்ள மேலான அமைதியைப் பெற்று விடுகிறான். “குந்தி மகனே! என்னுடைய பக்தன் ஒருபோதும் அழிவதில்லை” என்ற நிச்சயப்பூர்வமான உண்மையை நீ அறிந்து கொள். ஒருவேளை இந்தப் பிறவியில் கரை கடக்க முடியவில்லை என்றாலும் கூட, அடுத்த பிறவிகளில் அதே சாதனையைச் செய்து சீக்கிரமே மேலான அமைதியை (பரம சாந்தி) அடைந்து விடுகிறான். ஆகவே, நன்னடத்தை உள்ளவன், தீய நடத்தை உள்ளவன் என்று அனைவருக்குமே இறைவழிபாடு செய்வதற்கு அதிகாரம் உள்ளது. இது மட்டுமல்ல இன்னும் கேள்.

**மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்யயேபி ஸ்யு : பாபயோனய :**
**ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ராஸ்தேபி யாந்தி பராம் கதிம் (32)**

பார்த்தனே! பெண்கள், வைசியர், சூத்திரர் மற்றும் வேறு பாவ யோனிகளில் பிறந்தவர்களானாலும் அவர்கள் அனைவருமே என்னைச் சரணடைந்து பரம கதியை (இறைப் பேறுநிலை) அடையவே செய்கிறார்கள். ஆகவே, இந்த கீதை, ஒட்டு மொத்த மனித சமுதாயத்திற்கும் உரித்தானது. அவர்கள் என்ன செய்து கொண்டிருந்தாலும் சரி, எங்கே பிறந்தவர்களானாலும், சரி, கீதை அவர்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியான நன்மை பயக்கவல்ல உபதேசத்தைத் தருகிறது. கீதை உலகப் பொதுமறையாகும்

**பாவ யோனி :** –

அத்தியாயம் **16/7–21** வரையிலான சுலோகங்களில் அசுர இயல்பின் இலட்சணங்கள் என்ற தலைப்பிற்குக் கீழே பகவான், “எவரெல்லாம் சாஸ்திர விதிகளைத் துறந்து விட்டு, வெறும் பெயரளவிற்கு, அகங்காரத்துடன் வேள்வியைச் செய்கிறார்களோ, அவர்களே மனிதர்களில் மிகவும் கீழ்த்தரமானவர்கள். அவர்கள் செய்வது வேள்வியே கிடையாது. ஆனால் வேள்வி என்று பெயர் மட்டும் கொடுத்துக் கொள்கிறார்கள். மேலும், ஆணவத்துடன் அதில் ஈடுபடுகிறார்கள். அவர்களே கொடூரமான கர்மத்தைச் செய்பவர்கள் மற்றும் பாவகர்மங்களை அனுசரிப்பவர்கள், அதாவது, பாவ யோனிகள் ஆவர்.

அவர்கள் பரமாத்மாவாகிய என்னிடம் வெறுப்புக் கொண்டவர்கள் ஆவர்; அவர்களே பாவிகள்" என்கிறார். இங்கே, வைசியர், சூத்திரர் என்பதெல்லாம் ஆன்மீகப் பாதையில் உள்ள சாதனையின் படிநிலைகளாகும். பெண்கள் மீது சிலசமயம் மரியாதைப்பூர்வமான அணுகுமுறையும் சிலசமயம் தாழ்வான கண்ணோட்டமும் சமுதாயத்தில் காணப்படுகிறது. எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர் அவர்களையும் இங்கே குறிப்பிட்டுச் சொல்கிறார். யோகக் கிரியையில் பெண்களானாலும் சரி, ஆண்களானாலும் சரி, இருவருமே சமமான அளவில் நுழைவு பெறமுடியும்.

**கிம் புனர்ப்ராஹ்மணா : புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா**
**அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் (33)**

அவ்வாறு இருக்கும்போது, பிராம்மணர், ராஜரிஷி மற்றும் சத்திரிய சாதனைப் பிரிவிற்கு உயர்ந்துள்ள பக்தர்களைப் பற்றித் தனியாக என்ன சொல்ல வேண்டியிருக்கிறது? பிராம்மணர் என்பது ஆன்மீக சாதனைப் பிரிவில் மிகவும் உயர்வானதொரு நிலையாகும். இந்நிலையில்தான் பிரம்மத்திற்குள் நுழைவு பெற்றுத் தரவல்ல அனைத்து உயர் ஆன்மீகத் தகுதிகளும் அடங்கியுள்ளன. அமைதி, எளிமை, ஆன்மீக அனுபவம் பெறுதல், தியானம் மற்றும் இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு) கட்டளையை ஏற்று, அதனைச் செயல்படுத்தும் திறன் ஆகியவைதான் பிராம்மண நிலை எனப்படும். ராஜரிஷி என்ற சத்திரிய நிலையில் ரித்திகளும் – சித்திகளும் கிடைக்கின்றன. வீரம், தலைமை உணர்வு (ஸ்வாமி பாவம் – அனைத்து தெய்வீகச் செல்வம் எனப்படும் தெய்வீக குணங்களின் மீது ஆளுமைத் திறன்) இறை ஆராதனையில் இருந்து பின் வாங்காத குணம், ஆகியவை உள்ளன. இந்த யோக நிலைகளை அடைந்த யோகிகள் கரை கடப்பது உறுதி எனும்போது, அவர்களைப் பற்றித் தனியாக என்ன சொல்ல வேண்டியிருக்கிறது? எனவே, "அர்ஜுனா! நீ சுகம் என்பதே இல்லாத, நிலையற்ற அழிந்து விடும் இயல்புடைய இந்த மனித உடலைப் பெற்று, என்னையே வழிபடு! இந்த அழிந்து போகும் உடலின் மீது பற்று வைத்துக் கொண்டு, அதனைப் பேணிப் பாதுகாப்பதில் நேரத்தை வீணாக்கிக் கொண்டு இருக்காதே."

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இங்கே நான்காவது முறையாக பிராம்மணர், சத்திரியர், வைசியர், மற்றும் சூத்திரர் ஆகிய சாதனை நிலைகளைப் பற்றி விவாதிக்கிறார். இரண்டாவது அத்தியாயத்தில் அவர், "க்ஷத்திரியர்களுக்கு யுத்தத்தை விட மேலாக, நன்மையைத் தரவல்ல வேறு எந்த வழியும் இல்லை" என்று கூறினார். மூன்றாவது அத்தியாயத்தில் அவர், "சுயதர்மத்தைக் கடைப்பிடித்துக் கொண்டிருக்கும்போது மரணமே அடைய நேர்ந்தாலும் அது

உயர்வானதுதான்” என்றார். நான்காவது அத்தியாயத்தில் அவர் சுருக்கமாக, “நான்கு வர்ணங்களை (நான்கு சாதனைப் பிரிவுகள்) நானே உருவாக்கினேன்” என்றார். அப்படியென்றால், மனிதர்களை நான்கு ஜாதிகளாகப் பிரித்துத் துண்டாடினாரா என்ன? என்று கேட்டால், அதற்கு அவர், “இல்லை, **குணகர்ம விபாகச** : – குணங்களின் அடிப்படையில் கர்மத்தையே நான்கு வெவ்வேறு பிரிவுகளாகப் பிரித்தேன்'' என்று பதிலளித்தார். ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் கர்மம் ஒன்று மட்டுமே வேள்வியின் செயல்முறை எனப்படுகிறது. எனவே, இந்த வேள்வியைச் செய்பவர்களே நான்கு வகைப்படுகிறார்கள். ஆரம்ப காலத்தில் இந்த வேள்வியைச் செய்யும் போது ஒருவர் **சூத்திரர்** எனப்படுகிறார். அதாவது, குறைந்த அளவு ஞானம் உடையவர் எனப்படுகிறார். வேள்வியை இன்னும் சரியாகச் செய்வதற்கான திறன் வந்து விட்டால், ஆன்மீகச் செல்வம் (தெய்வீக குணங்கள்) பெருகத் தொடங்கி விட்ட பிறகு, வேள்வியைச் செய்கின்ற அந்த ஒருவரே **வைசியர்** எனப்படுகிறார். இந்நிலையில் இருந்து இன்னும் உயர்ந்து இயற்கையில் இருந்து தோன்றும் மூன்று குணங்களையும் அழிக்கின்ற திறன் வந்து விட்ட பிறகு, அதே சாதகர் **சத்திரிய** பிரிவினர் ஆகிவிடுகிறார். மேலும், எப்பொழுது அந்த சாதகரின் சுபாவத்தில் பிரம்மத்திற்குள் நுழைவு பெற்றுத் தரவல்ல உயர் ஆன்மீகத் தகுதிகள் நிரம்பி விடுகிறதோ, அப்போது அவரே **பிராம்மணர்** எனப்படுகிறார். வைசியர் மற்றும் சூத்திர சாதனைப் பிரிவினருடன் ஒப்பிடும்போது, சத்திரிய மற்றும் பிராம்மண நிலையின் சாதகர்கள் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலை பெறுகின்ற இடத்திற்கு மிகவும் சமீபமாக உள்ளனர். சூத்திர, வைசிய வகுப்பினரும்கூட அதே பிரம்மத்தில் நுழைவு பெற்று அமைதியை அடைகின்றனர் எனும்போது, அவற்றைவிட உயர்வான சாதனை வகுப்புகளைச் சேர்ந்த சாதகர்களைக் குறிப்பிட்டுத் தனியாக என்ன சொல்ல வேண்டியிருக்கிறது? அவர்கள் கரைகடப்பது உறுதியாகிவிட்ட ஒன்று.

கீதை எந்த உபநிஷதங்களின் சாரமாக அமைந்துள்ளதோ, அவற்றில் பிரம்மத்தில் தேர்ந்த (பிரம்ம விதூஷி) பெண்களைப் பற்றிய விபரமான குறிப்புகள் நிறைந்து கிடக்கின்றன. மேற்குறிப்பிட்டுள்ள விபரங்களில், தர்மத்தை நிர்ணயம் செய்யும் நிலையை எடுத்துக் கொண்டிருந்தவர்களும் மற்றும் பழைமைவாதிகளும் வேதங்களைக் கற்பதற்கான அதிகாரம் – அதிகாரமின்மை ஆகியவற்றைத் தீர்மானிப்பதில் மாபெரும் வாதவிவாதங்கள் செய்திருக்கின்றனர். ஆனால், யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணரின் தெளிவான முழக்கம் என்னவென்றால், ''வேள்வியைச் செயல்படுத்துகின்ற (யக்ஞார்த்த கர்மம்) கர்மத்தின் நிச்சயிக்கப்பட்டுள்ள செயல்முறையினுள், பெண்கள், ஆண்கள் என்று அனைவருமே நுழைவு பெறமுடியும்” என்பதுதான். எனவே, அவர் இறைவழிபாட்டில்

உறுதியுடன் ஈடுபடுவதற்கு உற்சாகப்படுத்துகிறார்.

**மன்மனா பவ மத்பக்த்தோ மத்த்யாஜீ மாம் நமஸ்குரு**
**மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மானம் மத்பராயண: (34)**

அர்ஜுனா! என்னிலேயே மனத்தை நிலைநிறுத்து, என்னைத் தவிர, வேறு எந்த உணர்வும் உனது மனத்தில் வராமல் பார்த்துக் கொள்! என்னுடைய (நிலைத்த) அனன்ய பக்தனாக இரு! எப்பொழுதும் ஆன்ம சிந்தனையில் மட்டும் ஈடுபட்டிரு! என்னை நம்பிக்கையுடன் கூடியவனாக தொடர்ந்து வழிபாடு செய்! மேலும், என்னையே தொழுது வணங்கு! இம்முறையில் என்னிடமே சரணடைந்து, ஆன்மாவை என்னுடன் ஒன்றிணையும் ஒருமைப்பாட்டு உணர்வுடன் என்னில் உறுதிப்படுத்து! நீ என்னையே அடையப் பெறுவாய்! அதாவது, என்னுடன் ஒன்றுபட்ட தன்மையை அடைந்து விடுவாய்.

**முடிவுரை :-**

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் ஸ்ரீகிருஷ்ணர் கூறினார் : அர்ஜுனா! உன்னைப் போன்று குற்றமற்ற பக்தனுக்காக நான் இந்த ஞானத்தை விஞ்ஞானத்துடன் சேர்த்துக் கூறுவேன், இதை அறிந்து கொண்ட பிறகு வேறு எதுவும் அறிந்து கொள்வதற்காக எஞ்சியிருக்கப் போவது இல்லை. இதை அறிந்து நீ சம்சார பந்தங்களில் இருந்து விடுதலை பெற்று விடுவாய். இந்த ஞானம் எல்லா வித்யைகளுக்கும் அரசன் ஆகும். பரபிரம்ம பரமாத்மாவில் நுழைவுபெற்றுத் தருவது எதுவோ, அதுவே வித்யை எனப்படுகிறது. இந்த ஞானமோ அந்த வித்யைக்கும் அரசனாகும். அதாவது நிச்சயமாகவே நன்மை பயக்க வல்லது ஆகும். இது அனைத்து மறைபொருள் இரகசியங்களுக்கும் அரசன் ஆகும். பரம இரகசியமான பரம்பொருளையும் நேருக்கு நேராக தரிசனம் செய்விக்க வல்லதாகும். இது நேரடியான பலனைத் தருகிறது. இந்த சாதனை, செய்வதற்கு மிகவும் எளிமையானது, ஒருபோதும் அழிவுறும் தன்மை இல்லாதது. சிறிதளவு சாதனைகூட உங்கள் மூலமாகச் செய்யப்பட்டு விட்டாலும், அந்தளவு சாதனையானது ஒருபோதும் அழிந்து போவது இல்லை. மாறாக, அந்த சாதனையின் தாக்கத்தால் அவன் மேலான உயர்நிலைவரைப் போய்ச் சேர்ந்து விடுகிறான். ஆனால், இங்கே ஒரு நிபந்தனை உள்ளது. நம்பிக்கை இல்லாதவன் பரமகதியை (இறைப் பேறுநிலை) அடையாமல் சம்சார சக்கரத்திலேயே உழன்று கொண்டு திரிகிறான்.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் யோகத்தின் மகிமை பற்றியும் விளக்கியருளினார். துக்கத்தில் உழன்று கொண்டு இருப்பதில் இருந்து

விடுபடுவதுதான் யோகம் எனப்படுகிறது. அதாவது, உலகியலின் சேர்க்கை – பிரிதல் ஆகியவற்றில் இருந்து முழுவதுமாக விலகியிருத்தல் – இதற்குப் பெயர்தான் யோகம் ஆகும். பரம தத்துவ பரமாத்மாவை அடைவதற்குப் பெயர்தான் யோகம் ஆகும். பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து முக்திநிலை பெறுவதே யோகத்தின் உச்ச நிலை எனப்படுகிறது. எவர் இது போன்று பரமாத்மாவிற்குள் நுழைவு பெற்று விடுகிறாரோ, அந்த யோகியின் வல்லமையைப் பார் – மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களின் இறைவனாக இருந்த போதிலும் உயிருள்ள அனைத்தையும் போற்றிப் பேணிப் பாதுகாப்பவராக இருந்த போதிலும் கூட என்னுடைய ஆன்மா, அந்த உயிரினங்களில் எல்லாம் அடங்கி இருக்கவில்லை. நான் ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றவன் ஆவேன். அதுவே நான்! எவ்விதமாக ஆகாசத்தில் இருந்து தோன்றி, எங்கும் இயங்கிக் கொண்டிருக்கும் வாயு மண்டலமானது, அதே ஆகாசத்தில்தான் நிலைத்திருக்கிறது. ஆனால், அதனால் ஆகாசத்தை அசுத்தம் செய்ய முடிவதில்லை அவ்விதமாகவே, மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் என்னில்தான் அடங்கியுள்ளன. ஆனால், நானோ அவற்றுடன் எல்லாம் ஒட்டாமல் எப்போதும் தூய்மையானவனாகவே இருக்கிறேன்.

அர்ஜுனா! கல்பத்தின் ஆரம்பத்தில் நானே மனிதர் உட்பட எல்லா உயிர்களையும் மிகவும் சிறப்பான முறையில் உருவாக்குகிறேன், உருவேற்றுகிறேன். மேலும், கல்பத்தின் முடிவில், மனிதர் உட்பட எல்லா உயிர்களுமே என்னுடைய இயல்பை அதாவது, யோகம் கைகூடப் பெற்ற மஹாபுருஷரின் தெய்வீக வாழ்வியலை, அவருடைய, புலன் உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வை (அவ்யக்த பாவம்) அடைகின்றன. மஹாபுருஷர், இயற்கை அதாவது படைப்பிற்கு அப்பாற்பட்டவராக இருந்த பிறகும் கூட, இறைவனை அடைந்ததற்குப் பின்னால் ஆன்ம வடிவத்தில் அதாவது, தமது உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தில், நிலைபெற்று நின்று நெறிமுறைகளை நிலைநாட்டுவதற்க்காக உலக ஒற்றுமைக்காக காரியம் செய்கிறார் அல்லவா, அதுவே, அந்த 'மகாபுருஷரின் தெய்வீக வாழ்வியல்' எனப்படுகிறது. அவருடைய அந்த தெய்வீக வாழ்வியல் மற்றும் உயர் ஆன்மீகக் காரியச் செயல்முறைகள் ஆகியவற்றையே அந்த மகாபுருஷருடைய இயல்பான குணங்கள் என்று சொல்லி விளக்கப்பட்டுள்ளது.

மனிதர் உட்பட, அனைத்து உயிர்களையும் மிகவும் சிறப்பான முறையில் உருவாக்கி மற்றும் உருவேற்றி அவற்றையெல்லாம் கல்பத்திற்காகத் தூண்டுவதன் மூலமாக, ஒருவகையில், மேலான படைப்பை நான் மேற்கொள்கிறேன். அதேபோன்று, மூன்று குணங்களுடன் கூடிய இயற்கை **(திரிகுணமயி பிரகிருதி)** என்னுடைய தலைமையின் கீழ் மற்றொரு வகையில், தாழ்நிலைப் படைப்பில்

ஈடுபடுகிறது. அதன்படி, அது அசைவன, அசையாதவை என்று அனைத்தும் அடங்கிய ஒட்டு மொத்த உலகத்துடன் சேர்த்து எல்லா ஜீவராசிகளையும் உருவாக்குகிறது. இதுவும் ஒருவகையான கல்பமே ஆகும். இதில் உடல்களின் பரிமாற்றம், சுபாவங்களின் பரிமாற்றம், மற்றும் காலத்தின் பரிமாற்றம் ஆகியவை அடங்கும். துளஸிதாஸ கோஸ்வாமி அவர்களும் இதையே கூறுகிறார். –

**ஏக் துஷ்ட் அதிசய துக் ரூபா**
**ஜா வஸ் ஜீவ் பரா பவ கூபா (ராமசரிதமானஸ் 3/14/5)**

பிரகிருதி இரண்டு வகைப்படும். ஒன்று வித்யை; மற்றொன்று அவித்யை இவற்றில் அவித்யை என்பது கீழ்த்தரமானது; துக்கமே வடிவானது. இதனால், பீடிக்கப்பட்டு ஜீவாத்மாவானது உலகம் என்னும் பாழுங்கிணற்றுக்குள் விழுந்து கிடக்கிறது. அதனால், உந்தப்பட்டு இந்த ஜீவாத்மா காலம், கர்மம், சுபாவம், மற்றும் குணங்களின் ஆதிக்கத்திற்குள் வந்து விடுகிறது. இரண்டாவது வகை வித்யா மாயா எனப்படுகிறது. இந்த, வித்யா மாயையைத்தான் ஸ்ரீகிருஷ்ணர், ‘‘நானே படைக்கிறேன்’’ என்கிறார். துளஸீதாஸ கோஸ்வாமியைப் பொறுத்தவரையில் பிரபுவாகிய இறைவன் படைப்பதும் இதைத்தான் –

**ஏக் ரசய் ஜக் குண் பஸ் ஜாகே**
**ப்ரபு ப்ரேரித் நஹி நிஜ் பல் தாகே (ராம சரித மானஸ் 3/14/6)**

குணங்களை அடிப்படையாகக் கொண்டே இந்த உலகம் படைக்கப்படுகிறது. நன்மை தரவல்ல குணங்கள் (தெய்வீக குணங்கள்) இறைவனிடம் மட்டுமே உள்ளன. இயற்கை அல்லது படைப்பு எனப்படும். அவித்யா மாயையில் குணங்கள் (தெய்வீக குணங்கள்) இல்லவே இல்லை. அது அழியும் இயல்பு உடையது. ஆனால், வித்யா மாயையில் பிரபுவாகிய அந்த இறைவனே தூண்டுபவராக முன்னின்று படைக்கிறார்.

இந்த முறையில், கல்பம் இரண்டு வகைப்படும். ஒருவகை கல்பத்தில் பௌதீகம் சார்ந்த பொருட்கள், உடல்கள், காலம் ஆகியவற்றின் பரிமாற்றங்கள் அடக்கம். ஆனால், இந்தப் பரிமாற்றங்களை என்னுடைய மேற்பார்வையின் கீழ் இயங்குகின்ற இயற்கையே (அவித்யா மாயை) படைக்கிறது. ஆனால், இதைவிட உயர்வான கல்பம், அதாவது, ஆன்மாவின் புனிதமான, நிர்மலமான வடிவத்தைப் பெற்றுத் தருகின்ற சிறப்பான கல்பத்தை மகாபுருஷரே முன்னின்று அலங்காரத்துடன் மெருகேற்றுகிறார். அவர், மோகவசப்பட்டு, சுயஉணர்விழந்து, ஆழ்ந்த உறக்க நிலையில் உள்ள மனிதர் உட்பட, அனைத்து உயிர்களையும் ஆன்மீக விழிப்புணர்வு அடையச் செய்கிறார். இறைவழிபாட்டின் ஆரம்பமே

இந்தக் கல்பத்தின் ஆரம்பமாகும். மேலும் இறைவழிபாட்டின் உச்ச நிலையே இந்தக் கல்பத்தின் முடிவாகும். எப்பொழுது, இந்தக் கல்பம் உலகம் என்னும் நோயில் இருந்து முழுமையாக குணப்படுத்தி, என்றும் நிலையாக உள்ள பிரம்மத்தினுள் நுழைவு பெற்றுத் தருகிறதோ, அந்த நுழைவு பெறும் காலத்தில் யோகியானவர் என்னுடைய தெய்வீக வாழ்வியல் மற்றும் என்னுடைய ஆன்ம வடிவத்தைப் பெற்று விடுகிறார். இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலை பெற்ற பிறகு, அந்த மகாபுருஷருடைய தெய்வீக வாழ்வியலையே அவருடைய இயல்பு என்கிறோம்.

தர்ம நூல்களில் கதை வடிவில் இந்த நான்கு யுகங்கள் கழிந்த பிறகுதான் கல்பமானது நிறைவடைகிறது; மஹா பிரளயம் உண்டாகிறது என்று சொல்லப்பட்டுள்ளது. பெரும்பாலோர் இதனுடைய யதார்த்தத்தைப் புரிந்து கொள்வதில்லை. யுகம் என்பதற்கு இரண்டு அதாவது இரண்டு வெவ்வேறு நிலைகள் என்று பொருளாகும். நீங்கள் தனியாகவும், நீங்கள் ஆராதிக்கின்ற இஷ்ட தெய்வம் (ஸத்குரு – இறைவன்) தனியாகவும் என்று இரண்டு வெவ்வேறு நிலைகள் இருக்கும் வரையில் யுகதர்மங்களும் இருக்கவே செய்கின்றன. துளஸீதாஸ கோஸ்வாமி அவர்கள் தமது படைப்பான ராம சரித மானஸத்தில் உத்தர காண்டம் என்ற பிரிவில் இந்த நான்கு யுகங்கள், யுகதர்மங்கள் ஆகியவற்றைப் பற்றி விரிவாக விளக்கியுள்ளார். எப்பொழுது தாமஸ குணம் முழுமையாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறதோ, சிறிதளவு ரஜோ குணமும் காணப்படுகிறதோ, நான்கு பக்கங்களிலும் பகைமையும் விரோதமும் உணரப்படுகிறதோ, அந்த (மனிதனே) மனநிலையில் இருப்பவனே **கலியுகவாசி** எனப்படுகிறான். அவனால் இறைவழிபாட்டில் ஈடுபட முடியாது. ஆனால், ஆன்மீக சாதனை ஆரம்பிக்கப்பட்ட உடனே யுகத்தில் பரிமாற்றம் ஏற்படுகிறது. ரஜோ குணம் மேலோங்கத் தொடங்குகிறது. தமோ குணம் பலவீனமடைந்து மறைய ஆரம்பிக்கிறது. சுபாவத்தில் சிறிதளவு ஸத்துவ குணமும் வந்து விடுகிறது. மகிழ்ச்சி, பயம் ஆகிய இரு வேறுபட்ட மனநிலைகள் மாறி மாறி உணரப்படுகின்றன. அத்தகைய நிலையில் இருக்கின்ற சாதகன் **த்வாபர யுகவாசி** எனப்படுகிறான். படிப்படியாக, ஸத்துவ குணம் வலிமை பெறத் தொடங்கிய உடனே, ரஜோ குணம் குறைந்துபோய் சிறிதளவே காணப்படுகிறது. இந்நிலையில், இறை ஆராதனைக் கர்மத்தில் முன்னேற்றம் கிடைக்கத் தொடங்கி விடுகிறது. அத்தகைய **த்ரேதாயுகத்தில்** தியாகம் செய்கின்ற தகுதிநிலையை அடைந்து விட்ட அந்த சாதகன் கீதையில் கூறப்பட்டுள்ள பல்வேறு வகையான வேள்விகளைச் செய்கிறான். அவன், **யஜ்ஞானாம் ஜபஜ்ஞயோஸ்மி** – வேள்வியில் நுழைவு பெற்று விட்ட சாதனைப் பிரிவில் மேற்கொள்ளப்படுகின்ற, உள்மூச்சு, வெளிமூச்சு, ஆகியவற்றில் நான்கு படிநிலைகளுடன் கூடிய நாம

ஜபத்தினை, முக்கியமாக, **பஸ்யந்தி** மற்றும் **பரா** எனப்படும் உயர்நிலைப் படிகளில் இருந்து கொண்டு, இறை நாம ஜபத்தினைச் செய்கின்ற திறனைப் பெற்று விடுகிறான். எப்பொழுது ஸத்துவ குணம் மட்டுமே எஞ்சியுள்ளதோ, ஒழுங்கற்ற, சீரற்ற தன்மையாகிய பாகுபாட்டுணர்வு முழுவதுமாக மறைந்து போய், இறைவனுடன் சமத்துவ உணர்வு வந்துவிட்டதோ, அப்பொழுதே அந்த சாதகன் **க்ருதயுகம்** அதாவது, ஆன்மீக சாதனையில் வெற்றி பெறுகின்ற (க்ருதார்த்தம்) யுகத்தின் அல்லது ஸத்திய யுகத்தின் ஆளுமைக்குள் வந்துவிடுகிறான். அந்தச் சமயத்தில் எல்லா, யோகிகளுமே விஞ்ஞானிகளாகி விடுகின்றனர். அதாவது, இறைவனுடன் ஒன்றிணைகின்ற நிலைக்கு வந்து விடுகின்றனர். அவர்களுக்கு இயல்பாகவே தியானத்தில் ஈடுபடுகின்ற திறன் கிடைத்து விடுகிறது.

விவேகமான அறிவுடையவர்கள் 'யுக தர்மங்களின் ஏற்றமும் தாழ்வும் மனத்தில் தான் உண்டாகின்றன' என்று சரியாகப் புரிந்து கொள்கின்றனர். மனத்தைக் கட்டுப்படுத்தி அழிப்பதற்காக, அதர்மத்தை எல்லாம் முழுமையாகத் துறந்து விட்டு, தர்மத்தைக் கடைப்பிடிப்பதில் ஆர்வத்துடன் ஈடுபடத் தொடங்கி விடுகின்றனர். அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனமும் இறைவனில் ஒன்று கலந்து மறைந்து போன பிறகு யுகங்களுடன் சேர்த்துக் கல்பமும் முடிவிற்கு வந்துவிடுகின்றது. பூரணத்துவத்தில் நுழைவு பெற்றுத் தந்துவிட்டுக் கல்பமும் அமைதியடைந்து விடுகிறது. எப்பொழுது பிரகிருதியானது (படைப்பு) புருஷனில் (இறைவன்) ஒன்று கலந்து மறைகிறதோ, அதுவே பிரளயம் எனப்படுகிறது. இதற்குப் பிறகு, மகாபுருஷர் எந்த தெய்வீக வாழ்வியலைக் கொண்டிருக்கிறாரோ, அதுவே, அவருடைய இயற்கை எனப்படுகிறது. அவருடைய நிலைப்பாடு (தமது உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தில் நிலைபெற்று இருத்தல்) எனப்படுகிறது.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்: "அர்ஜுனா! மூடர்கள் என்னை அறிவது இல்லை. ஈஸ்வரர்களுக்கெல்லாம் ஈஸ்வரனாகிய என்னைத் துச்சமாக மதிக்கின்றனர். சாதாரண மனிதனாகவே கருதுகின்றனர். ஒவ்வொரு மகாபுருஷருமே இதுபோன்ற இகழ்ச்சிகளுக்கும் நிந்தனைகளுக்கும் நடுவில்தான் வாழ்ந்து காட்டியுள்ளனர். அவர்களுடைய சமகாலத்தைச் சேர்ந்த சமூகம் அவர்களை உதாசீனப்படுத்தியே வந்துள்ளது. அவர்கள்மீது வேண்டுமென்றே குறிவைத்துப் பகைமையுணர்வு காட்டப்பட்டு வந்திருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணரும் இதற்கு விதிவிலக்கு அல்ல. நான் இறைப் பேருணர்வில் (பரமபாவம்) நிலைபெற்றுள்ளேன். ஆனால், மற்ற மனிதர்களைப் போன்றே மனித உடலில் இருக்கிறேன். எனவேதான், மூடமனிதர்கள் என்னைத் துச்சமாக மதித்து, சாதாரண மனிதன் என்றே குறிப்பிட்டு அழைக்கின்றனர். அத்தகையோர் வீணான

ஆசை உடையவர்களாக, வீணான கர்மம் செய்பவர்களாக, வீணான அறிவுடையவர்களாக இருப்பதுடன், எதையெல்லாமோ செய்வதுடன் மட்டுமல்லாமல், நாங்கள் எல்லாம் எந்த ஆசையும் இல்லாமல் கர்மம் செய்கின்ற பற்றற்ற கர்ம யோகிகள் என்று வேறு பறைசாற்றிக் கொண்டு திரிகிறார்கள். அந்த அசுர சுபாவத்தையுடையவர்கள் என்னையும் என்னுடைய தெய்வீக வல்லமையையும் நன்றாகச் சோதித்து அறிந்து கொள்வதில்லை. ஆனால், தெய்வீகச் செல்வங்களை (தெய்வீக குணங்களை) உடையவர்களோ, நிலைத்த (அனன்ய) உணர்வுடன், அதாவது, என்னைத் தவிர, வேறு எதையும், யாரையும், (மற்றபிற தேவதைகளையும்) வழிபடாமல் என்னையே ஒருமனதாகத் தியானிக்கிறார்கள். என்னுடைய தெய்வீக குணங்களையும், தெய்வீக மகிமைகளையுமே இடைவிடாமல் சிந்தனை செய்கிறார்கள்.

அனன்ய (நிலைத்த) உபாசனை அதாவது, வேள்வியில் செயல்படுத்தப்படுகின்ற கர்மத்திற்கு (யக்ஞார்த்த கர்மம்) இரண்டே இரண்டு வழிகள் மட்டுமே உள்ளன. முதலில் வருவது, ஞானவேள்வி (ஞானயோகம்) அதாவது, தன்னை மட்டுமே நம்பிக் கொண்டு, தன்னுடைய சொந்த சக்தியை மட்டுமே நன்கு அறிந்து கொண்டு, அதே நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தில் ஈடுபடுதல் ஆகும். மற்றொரு விதிமுறை, இறைவன் – சேவகன் என்ற உணர்வுடன் கூடியது. இந்த வகையில், ஸத்குருவிடம் முழுமையாகத் தங்களைச் சமர்ப்பித்துக் கொண்டு அதே நியமிக்கப்பட்டுள்ள கர்மம் செய்யப்படுகிறது. இந்த இரண்டு வேறுபட்ட கண்ணோட்டங்களுடன் மக்கள் என்னை வழிபடுகின்றனர். ஆனால், அவர்களின் மூலமாகச் செய்து முடிக்கப்படுகின்ற அந்த வேள்வி, வேள்விப் பொருள் சமர்ப்பணம், வேள்வியின் தலைவன், நம்பிக்கை, மற்றும் உலகம் என்னும் நோயில் இருந்து குணப்படுத்தவல்ல, வேள்வி படைக்கின்ற அமிருதம் எனப்படும் மரணமில்லாப் பெருவாழ்வு ஆகிய அனைத்தும் நானேதான்! இறுதியில் எந்த இறைப் பேறுநிலை (கதி) அடையப் பெறுகிறதோ, அந்த நிலையும் நானே ஆவேன்.

இதே வேள்வியை அனைவரும் **த்ரைவித்யா** – பிரார்த்தனை, வேள்வியின் செயல்முறை மற்றும் சமத்துவ உணர்வைப் பெற்றுத் தரவல்ல விதிமுறைகளைப் பின்பற்றிச் செய்து முடிக்கின்றனர். ஆனால், பதிலுக்கு சொர்க்கத்தை வேண்டுகின்றனர். நான் அவர்களுக்கு சொர்க்கத்தையும் அளிக்கிறேன். வேள்வியின் வலிமையால் அவர்கள் இந்திர பதவியையும் கூடப் பெறுகிறார்கள். நீண்ட காலம்வரை அவர்கள் அந்த சொர்க்க வாழ்வையும் அனுபவிக்கின்றனர். ஆனால், புண்ணியம் பலவீனமடைந்த உடனேயே புனர்ஜன்மத்திற்கு (மறுஜன்மம்) ஆளாகிறார்கள். அவர்களுடைய வேள்விக் கிரியை என்னவோ சரிதான். ஆனால்

சொர்க்க போக இன்பங்களின் மீது ஆசைகள் வைத்த காரணத்தால் அவர்கள் மறுபிறவி, அதாவது, புனர்ஜன்மத்தை அடைய நேரிடுகிறது. எனவேதான் சொர்க்கம் முதலான உலகியல் இன்பங்களின் மீது ஆசை வைக்கக் கூடாது என்று சொல்லப்படுகிறது. எவரெல்லாம் நிலைத்த (அனன்ய) உணர்வுடன் அதாவது என்னைத் தவிர வேறொன்றும் இல்லை என்ற ஒருமித்த உணர்வுடன் நிரந்தரமாக என்னைச் சிந்தனை செய்கிறார்களோ, கொஞ்சம் கூட குறைகளே இல்லாமல் மிகுந்த கவனத்துடன், பார்த்துக் கொண்டு என்னை வழிபடுகிறார்களோ, அத்தகைய பக்தர்களின் யோக நலனைப் பாதுகாக்கின்ற அனைத்துப் பொறுப்புகளையும் நானே என்னுடைய கைகளில் எடுத்துக் கொள்கிறேன்.

இவ்வளவு தூரம் அறிந்த பிறகும் கூட ஒரு சிலர் மற்றபிற (தெய்வங்களை) தேவதைகளை வழிபடுகின்றனர். அவர்களும் என்னையேதான் வழிபடுகிறார்கள். ஆனால் அவர்களுடைய வழிபாடுகளில் என்னை அடைவதற்காகப் பின்பற்றப்பட வேண்டிய விதிமுறைகள் இல்லை. அவர்கள், அனைத்து வேள்விகளையும் அனுபவிப்பவர் நானே! என்ற கோணத்தில் என்னைப் பற்றி முழுமையாக அறியாமல் இருக்கின்றனர். அதாவது, அவர்களுடைய இறைவழிபாட்டின் இறுதி விளைவில் நான் கிடைப்பதில்லை. எனவேதான் அவர்கள் வீழ்ச்சியடைகிறார்கள். அவர்கள் தெய்வங்கள், பூதம் மற்றும் இறந்து போன மூதாதையர்கள் (பித்ருக்கள்) போன்ற கற்பனை உலகங்களிலேயே உழன்று கொண்டு இருக்கின்றனர். ஆனால், என்னுடைய பக்தனோ சாட்சாத் என்னிலேயே வாழ்கிறான். என்னுடைய ஆன்ம வடிவத்தையே அடைகிறான்.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், “இந்த வேள்வியில் செயல்படுத்தப்படுகின்ற நியமிக்கப்பட்டுள்ள கர்மம் செய்வதற்கு மிகவும் சுலபமானது” என்று கூறினார். அதன்படி, யாரும் பழம் – பூ என்று சிரத்தையுடன் சமர்ப்பிப்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். எனவே, அர்ஜுனா! நீ செய்கின்ற இறை ஆராதனை வழிபாடுகளை எல்லாம் என்னிடமே சமர்ப்பணம் செய்! எப்பொழுது அனைத்தையும் துறக்கின்ற நிலை வந்து விடுகிறதோ (சந்நியாஸ நிலை), அப்பொழுது யோகம் கைகூடப் பெறும் நிலையை அடைந்து நீ கர்மங்களின் பந்தங்களில் இருந்து முக்தி அடைந்து விடுவாய். மேலும், இந்த முக்தியடைவது என்பதும் எனது ஆன்ம வடிவத்தை அடைவது என்பதும் ஒன்றுதான்.

இந்த உலகில் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் என்னுடையவைதான். எந்த உயிர்களிடமும் எனக்குப் பிரியமோ, வெறுப்போ கிடையாது. நான் அனைத்திற்கும் நடுநிலையானவன். ஆனால், என்னுடைய நிலைத்த (அனன்ய) பக்தனைப் பொறுத்தவரையில், அதாவது என்னைத் தவிர வேறு எதையும் யாரையும் நாடாத, மற்றபிற தெய்வங்களை வழிபடாமல் என்னிடம்

மட்டுமே பக்தி செலுத்துகின்ற அத்தகைய பக்தனைப் பொறுத்தவரையில், நான் அவனில் இருக்கிறேன். அவன் என்னில் இருக்கிறான். மிகவும் தீயநடத்தையுடையவன் மற்றும் மாபெரும் கொடிய பாவங்களைச் செய்தவன் என்று யாராக இருந்தாலும் சரி, நிலைத்த நம்பிக்கை மற்றும் ஒப்பற்ற பக்தியால் என்னை வழிபட ஆரம்பித்து விட்டானென்றால் அவன் சாது என்று ஏற்றுக் கொள்ளத் தக்கவனாகி விடுகிறான். அவனுடைய அணுகுமுறை நிச்சயப்பூர்வமாக இருக்கும் பட்சத்தில் வெகு சீக்கிரமே அவன் இறைவனுடன் ஒன்றிணைந்து விடுவது மட்டுமின்றி எப்போதும் நிலையாக உள்ள மேலான அமைதியைப் பெற்று விடுகிறான். இங்கே ஸ்ரீகிருஷ்ணர் தர்மவான் யார்? என்பதைத் தெளிவுபடுத்தி விட்டார். இவ்வுலகில் பிறந்துள்ள எந்தவொரு உயிரானது நிலைத்த (அனன்ய) உணர்வுடன் பரமாத்மாவை வழிபடுகிறதோ, மற்றும் அவரையே சிந்தனை செய்து கொண்டு இருக்கிறதோ, அதுவே வெகு சீக்கிரத்தில் தர்மவானாகிறது. எனவே, ஏக இறைவனாகிய பரமாத்மாவை இடைவிடாமல் நினைப்பவரே தர்மவான் அதாவது தர்மத்தைப் பின்பற்றுபவர் எனப்படுகிறார். இறுதியாக அவர் வாக்குறுதி அளிக்கும் விதமாக, "அர்ஜுனா! என்னுடைய பக்தன் ஒருபோதும் அழிவது இல்லை. சூத்திரராக இருந்தாலும் சரி, தாழ்ந்தவர், ஆதிவாசி, நாகரீகமானவன் அல்லது வேறு எந்தப் பெயருடையவராக இருந்தாலும் சரி, ஆண்கள், பெண்கள், மற்றும் பாவ யோனியில் பிறந்தவர்கள், தாழ்நிலை உயிரினங்களாக இருந்தாலும் சரி! என்னைச் சரணடைந்து மேலான, உயர்ந்த அந்தப் பரம்பொருளை அடைகிறார்கள். எனவேதான் அர்ஜுனா! சுகம் என்பதே இல்லாத, சிறிது காலத்திலேயே அழிந்து விடக்கூடிய, ஆனால், அடைதற்கரிய இந்த மனித உடலைப் பெற்று என்னையே வழிபடு என்கிறார்". எல்லாம் இப்படி இருக்கும்போது, பிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தரவல்ல அனைத்து தகுதிகளையும் பெற்றுள்ள பிராம்மண சாதனைப் பிரிவினர், ராஜரிஷி அதாவது க்ஷத்திரிய சாதனைப் பிரிவினை அடைந்து இறைவழிபாடு செய்து கொண்டிருக்கும் அத்தகைய யோகிகளைப் பற்றித் தனியாகக் குறிப்பிட்டுச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? அவர்கள் கரைகடப்பது உறுதியாகி விட்ட ஒன்று. எனவே, "அர்ஜுனா! எப்போதும் என்னிடமே மனத்தை நிலைநிறுத்து! எப்போதும் என்னையே தொழுது வணங்கு! இந்த முறையில் என்னைச் சரணடைந்துள்ள நீ என்னையே அடைவாய்! அங்கிருந்து திரும்பவும் இவ்வுலகில் வந்து மீண்டும் பிறக்க வேண்டியது இருக்காது."

இந்த அத்தியாயத்தில் பகவான் ஸ்ரீகிருஷ்ணரே முன்னின்று விழிப்புணர்த்துகின்ற வித்யையைப் பற்றித் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. ஒருமுறை விழிப்புணர்வு அடைந்து விட்ட பிறகு, நிச்சயமாகவே நன்மை தரும்

வல்லமை கொண்ட இதுவே 'ராஜவித்யை' எனப்படுகிறது. அத்துடன் –

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ**
**ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே**
**ராஜவித்யா ஜாக்ருதி நாம நவமோத்த்யாய :**

இம்முறையில் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'ராஜ வித்யா ஜாக்ருதி' அதாவது 'ராஜவித்யை விழிப்புறுதல்' என்ற பெயருடைய ஒன்பதாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி**
**அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா:**
**யதார்த்தகீதா பாஷ்யே ராஜ வித்யா ஜாக்ருதி நாம நவமோத்த்யாய:**

ஹரி : ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'ராஜ வித்யா ஜாக்ருதி' அதாவது 'ராஜ வித்யை விழிப்புறுதல்' என்ற பெயருடைய ஒன்பதாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

//ஹரி: ஓம் தத் ஸத்//

**ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :**

## பத்தாவது அத்தியாயம்

கடந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் உயர்வான மறைபொருள் இரகசியமான இராஜ வித்யையைப் பற்றி விரிவாக விளக்கியருளினார். இந்த வித்யை நிச்சயமாகவே நன்மை ஏற்படுத்த வல்லது. பத்தாவது அத்தியாயத்திலும் அவர், "பெருந்தோள்களை உடையவனே! அர்ஜுனா! என்னுடைய மேலான இரகசியத்துடன் கூடிய வசனத்தை மீண்டும் ஒருமுறை கேள்!" என்கிறார். இங்கே அதையே மீண்டும் ஒருமுறை கூறுவதற்கு என்ன அவசியம் இருக்கிறது? உண்மையில், சாதகருக்கு ஆன்மீக சாதனை நிறைவு பெறுகின்ற காலம் வரைக்கும் ஆபத்து விலகுவதில்லை. எவ்வளவுக்கு எவ்வளவு அவன் ஆன்ம வடிவத்தை நோக்கி முன்னேறிக் கொண்டே செல்கிறானோ, இயற்கையின் திரைமறைப்பும் நுண்மையாகிக் கொண்டே போகிறது. புதிய, புதிய இறைக் காட்சிகள் கிடைக்க ஆரம்பிக்கிறது. அந்த மாதிரியான இறைஅனுபவங்கள் பற்றிய விளக்கங்கள் மஹாபுருஷர்தான் தந்து கொண்டிருக்கிறார். அவனாகவே எதையும் அறிந்து கொள்வதில்லை. ஒருவேளை அந்த மஹாபுருஷர் ஆன்மீகக் காட்சிகளின் விளக்கங்களைக் கூறுவதை நிறுத்திவிட்டால், அந்த சாதகன் ஆன்ம வடிவத்தை அடையமுடியாமல் ஏமாற்றமடைய நேரிடும். எதுவரைக்கும் அவன் ஆன்ம வடிவத்தில் இருந்து தொலைவில் இருக்கிறானோ, அதுவரைக்கும் இயற்கை அல்லது படைப்பு (மாயை) ஏதேனும் ஒருவகையில் திரையிட்டு மறைத்துக் கொண்டிருக்கிறது என்பது தெளிவாகிறது. எனவே, வழிதவறிப் போவதற்கும், தள்ளாடி நிலைதடுமாறி விழுவதற்குமான வாய்ப்புகள் உருவாகிக் கொண்டேதான் இருக்கும். அர்ஜுனன் சரணாகதி அடைந்திருக்கும் சிஷ்யன் ஆவான். அவன் கூறுகிறான் : **சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம் –** 'பகவானே! நான் உங்களின் சிஷ்யன் ஆவேன்; உங்களையே சரணமடைந்தவன்'. என்னைக் காப்பாற்றுங்கள். எனவேதான் அவனுடைய நலம் விரும்பி என்ற முறையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மறுபடியும் கூறுகிறார்.

**ஸ்ரீபகவானுவாசச்**
**பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச :**
**யத்தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா (1)**

பெருந்தோள்களை உடையவனே! அர்ஜுனா! என்னுடைய மேலான வல்லமை பொருந்திய திருவசனத்தை மறுபடியும் கேள். அதனை நான், என்மீது பேரன்பு கொண்டிருக்கும் உன்னுடைய நலனை விரும்பிச் சொல்கிறேன்.

**ந மே விது : ஸுரகணா : ப்ரபவம் ந மஹர்ஷய**

**அஹமாதிர் ஹி தேவானாம் மஹர்ஷீணாம் ச ஸர்வச : (2)**

"அர்ஜுனா ! என்னுடைய உற்பத்தியை (பிறவியை) தேவர்களும் அறியமாட்டார்கள்; மற்றும் மஹரிஷிகளும் அறிய மாட்டார்கள்". ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, **'ஜன்ம கர்ம ச மே திவ்யம்** – என்னுடைய அந்தப் பிறவியும் மற்றும் கர்மமும் உலகியலுக்கு எல்லாம் அப்பாற்பட்டவை; தெய்வீகமானவை. அவற்றை இந்த ஊனக் கண்களால் பார்த்து அறிந்து கொள்ள முடியாது. எனவேதான், என்னுடைய அந்த தெய்வீக வெளிப்படுதலை தேவர்கள் மற்றும் மஹரிஷி நிலைவரை அடைந்துள்ளவர்களும் கூட அறிந்து கொள்வது இல்லை. நான் எல்லா வகைகளிலும் தேவர்கள் மற்றும் மஹரிஷிகளுக்கும் ஆதிகாரணம் ஆவேன்". என்று கூறி இருந்தார்.

**யோ மாமஜமனாதிஞ் ச வேத்தி லோக மஹேஷ்வரம்**
**அஸம்மூட : ஸ மர்த்யேஷு ஸர்வபாபை : ப்ரமுச்யதே (3)**

எவரொருவர், பிறப்பு – இறப்பு இல்லாதவனாகிய, ஆரம்பம் – முடிவு இல்லாதவனாகிய, அனைத்து உலகங்களுக்கும் மஹா ஈஸ்வரனாகிய என்னை (தத்துரீதியாக) தரிசனம் செய்து அனுபவத்தோடு அறிந்து கொள்கிறாரோ, அவர் மரணத்தின் ஆளுமைக்குள் அடங்கிய மனிதர்களிலேயே ஞானியாவார். அதாவது, பிறப்பற்ற ஆரம்பமே இல்லாத (அநாதி) மற்றும், அனைத்து உலகங்களுக்கு எல்லாம் மகேஸ்வரனாகிய என்னை நல்லமுறையில் அறிந்து கொள்வதே ஞானம் ஆகும். மேலும், அவ்வாறு அறிந்து கொள்பவனே அனைத்துப் பாவங்களில் இருந்தும் விடுதலை (முக்தி) பெறுகிறான். அவனே மறுபிறவியை அதாவது, புனர்ஜன்மத்தை அடைவதில்லை. ஸ்ரீகிருஷ்ணர் "இந்த விடுதலை அதாவது முக்தி நிலையை அடையப் பெறுவதும் என்னுடைய திரவருளாலேயேதான்" என்கிறார்.

**புத்திர்ஜ்ஞானமஸம்மோஹ : க்ஷமா ஸத்யம் தம : சம :**
**ஸுகம் துக்கம் பவோஅபாவோ பயம் சாபயமேவ ச (4)**

அர்ஜுனா ! நிச்சயமான ஆன்மீக அறிவு, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிதல், இலட்சியத்தை நோக்கி விவேகப் பூர்வமான முறையில் முன்னேறிச் செல்தல், மன்னித்தருளும் குணம், நிரந்தரமான உண்மை, புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு உள்மனத்தின் மகிழ்ச்சியான, இயல்பு நிலை (அகமகிழ்ச்சி) ஆன்மீகச் சிந்தனைப் பாதையின் கஷ்டங்களைச் சகித்துக் கொள்தல், பரமாத்மாவைப் பற்றிய விழிப்புணர்ச்சி, ஆன்ம வடிவத்தை அடைகின்ற காலத்தில் அனைத்தையும் இறைவனிலேயே ஒன்று கலக்கும் திறன், இஷ்ட தெய்வத்துடன்

(ஸத்குரு – இறைவன்) ஒழுங்குமுறையான பயத்துடன் கூடிய அணுகுமுறை, மற்றும் இயற்கை அல்லது படைப்பிடம் (மாயை) பயமற்ற தன்மை, மேலும் –

**அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ தானம் யஷோஅயஷ :**
**பவந்தி பாவா பூதானாம் மத்த ஏவ ப்ருதக் விதா : (5)**

அஹிம்சை, அதாவது, தன்னுடைய ஆன்மாவை அதோகதிக்குக் கொண்டு செல்லாத வண்ணம் நடந்து கொள்ளுதல், சமத்துவம், அதாவது, வேறுபாடுகள் மற்றும் பாகுபாட்டு உணர்வுகள் அனைத்தும் நீங்கிய நிலை, சந்தோஷம் (ஆத்மதிருப்தி) தவம், அதாவது மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் இலட்சியத்திற்கு ஏற்ப வருத்துதல், தானம், அதாவது, தன்னை முழுவதுமாகச் சமர்ப்பித்தல், ஆன்மீகப் பாதையில் மானம், அவமானம் ஆகியவற்றைத் தாங்கிக் கொள்ளுதல் – இம்முறையில் மேலே கூறப்பட்டுள்ள மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களின் இந்த ஆன்ம உணர்வுகள் எல்லாம் என்னிடமிருந்தே உண்டாகின்றன. இந்த அனைத்து உணர்வுகளுமே தெய்வீகச் சிந்தனை நெறிமுறைகளுக்கான இலட்சணங்கள் ஆகும். இவைகள் இல்லாமல் இருப்பதே அசுர குணங்கள் (அசுரச் செல்வம்) எனப்படுகிறது.

**மஹர்ஷய : ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்ததா**
**மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா : ப்ரஜா (6)**

ஸப்த ரிஷிகள், அதாவது, யோகத்தின் ஏழுவரிசைக் கிரமமான படிநிலைகள் **(சுபேச்சா, ஸுவிசாரணா, தனுமானஸா, ஸத்வாபத்தி, அஸம்ஸக்தி, பதார்த்த பாவனா** மற்றும் **துர்யகா)** மற்றும், அதற்கு இணையாகச் செயல்படும் அந்த (நான்கு வகையான உள்மனம்) அந்தகரண சதுஷ்டயம் (மனம், புத்தி, சித்தம், மற்றும் அகங்காரம்) மற்றும் அதற்கு ஏற்றவாறு, என்மீது மட்டுமே ஒருமித்த உணர்வு கொண்டுள்ள பற்றற்ற மனம் – இவை அனைத்தும் என்னுடைய சங்கல்பத்தால்தான் (என்னை அடைய வேண்டும் என்ற சங்கல்பத்தாலும் மற்றும் என்னுடைய தூண்டுதலாலும்தான் உண்டாகிறது. இரண்டு சொற்களுமே ஒன்று மற்றொன்றை நிறைவு செய்கின்றன) தோன்றுகின்றன. இவ்வுலகில் அவர்களனைவரும் (தெய்வீகச் செல்வங்கள்) இவர்களுடைய குடிமக்களே (பிரஜை) ஆவர். ஏனெனில், யோகத்தின் ஏழு வரிசைக் கிரமமான படிநிலைகளின் சஞ்சாரத்தில் தெய்வீகக் குணங்கள்தான் (தெய்வீகச் செல்வம்) குடி கொண்டு உள்ளனவே தவிர, வேறொன்றும் இல்லை.

**ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்வத :**
**ஸோஅவிகம்பேன யோகேன யுஜ்யதே நாத்ர ஸம்சய (7)**

எவரொருவர் யோகத்தின் மற்றும் மேலே குறிப்பிடப்பட்டுள்ள என்னுடைய தெய்வீக மகிமைகளை எல்லாம் அனுபவத்துடன் என்னையே கண்கூடாக தரிசனம் செய்து, சாட்சாத்காரத்துடன் சேர்த்து அறிந்து கொள்கிறாரோ, அவர், உறுதியான தியான யோகத்தின் மூலமாக என்னில் ஒருமித்த உணர்வுடன் நிலைபெற்று விடுகிறார். இதில் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது. எந்த முறையில் காற்றில்லாத இடத்தில் எரியும் விளக்குச் சுடரானது நேராக மேல் நோக்கி எரிகிறதோ, எந்த நடுக்கமும் இல்லாமல் இருக்கிறதோ, யோகியின் வெற்றி கொள்ளப்பட்ட சித்தத்திற்கு இதுவே நல்லதொரு விளக்கமாகும். இந்த சுலோகத்தில் உள்ள **அவி கம்பேன** என்ற சொல் மேலே கூறப்பட்டுள்ள பொருளையே குறிப்பால் உணர்த்துகின்ற நோக்கத்துடன் கையாளப்பட்டுள்ளது.

**அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த : ஸர்வ ப்ரவர்த்ததே**
**இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமன்விதா: (8)**

நான் ஒட்டு மொத்த உலகத்தின் தோற்றத்திற்கும் காரணம் ஆவேன்; இந்த மொத்த உலகமும் என்னால் தான் இயங்கிக் கொண்டுள்ளது. இந்த முறையில் நன்கு அறிந்து கொண்டு, நம்பிக்கை மற்றும் பக்தியுடன் கூடிய விவேக அறிவுடையவர்கள் இடைவிடாமல் என்னையே வழிபடுகிறார்கள். இதற்கு அர்த்தம் என்னவென்றால், யோகியின் மூலமாக என்னையே நோக்கி செயல்முறைப்படுத்தப்படுகின்ற, இறைஆராதனைக்கான முன்னேற்றச் செயல்களும் கூட, என்னால்தான் செய்யப்படுகின்றன. இதுவும் கூட என்னுடைய பிரசாதமே ஆகும். (இது எவ்வாறு என்பது பற்றி ஏற்கனவே பல்வேறு இடங்களில் சொல்லப்பட்டுள்ளது) அவர்கள் எந்தமுறையில் இடைவிடாமல் என்னை வழிபடுகிறார்கள்? இதுபற்றிக் கூறுகிறார்.

**மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த : பரஸ்பரம்**
**கதயந்தஸ்ச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச (9)**

அவர்கள் வேறு எதற்கும் இடமளிக்காமல் என்னிலேயே நிரந்தரமாகச் சித்தத்தைச் நிலைநிறுத்தி என்னையே பிராண அபாணனின் மூலமாக ஆன்ம சிந்தனை செய்துகொண்டும், எப்பொழுதுமே என்னால் சொல்லப்பட்டுள்ள வேள்வியின் செயல்முறைகளை ஒருவருக்கொருவர் போதித்துக் கொண்டும் இருக்கிறார்கள். என்னுடைய தெய்வீகக் குணங்களைப் பற்றிப் பேசுவதால் மட்டுமே மனமகிழ்ச்சி அடைகிறார்கள். மேலும், எப்போதுமே என்னுடைய நினைவிலேயே திளைத்துள்ளனர்.

**தேஷாம் ஸததயுக்தானாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம்**
**ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே (10)**

இடைவிடாமல் என்னுடைய தியானத்தில் மூழ்கி, பேரன்புடன் வழிபடுகின்ற அந்த பக்தர்களுக்கு நான் அந்த புத்தி யோகம் அதாவது, யோகத்தில் நுழைவு பெறச் செய்கின்ற புத்தியைக் கொடுக்கிறேன். அதன் மூலமாக அவர்கள் என்னை அடையப் பெறுகிறார்கள். அதாவது, யோகம் விழிப்புணர்வு அடைதல் என்பது அந்தப் பரமாத்மாவாகிய ஈஸ்வரனின் கருணைக் கொடையாகும். அந்தப் புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட இறைப் பேருணர்வில் நிலைப்பெற்றுள்ள மகாபுருஷர் யோகத்தில் நுழைவு பெற்றுத் தரவல்ல புத்தியை எப்படித் தருகிறார்?—

**தேஷாமேவானுகம்பார்த்தமஹமஜ்ஞானஜம் தம :**
**நாசயாம்யாத்மபாவஸ்த்தோ ஜ்ஞானதீபேன பாஸ்வதா (11)**

அவன் மீது முழுமையான அனுக்கிரஹம் செய்யும் வண்ணம் நான் அவனுடைய ஆன்மாவில் எழுந்தருளி, இரண்டறக் கலந்து, சாரதியின் நிலையில் நின்று கொண்டு அஞ்ஞானத்தால் தோன்றிய அந்தகாரத்தை (ஆழ்ந்த இருளை) ஞானம் என்னும் தீபத்தின் மூலமாகப் பிரகாசிக்கச் செய்து அழிக்கிறேன். உண்மையில், ஏதேனும் ஒரு **ஸ்தித ப்ரக்ஞ** யோகியின் மூலமாக எதுவரைக்கும் அந்தப் பரமாத்மாவானவர் உங்களுடைய ஆன்மாவில் எழுந்தருளி ஒவ்வொரு கணமும் செயல்படத் தொடங்கி, உங்களைத் தடுத்தாட் கொள்ளவில்லையோ, இந்த இயற்கையின் (மாயை) இருமைகளிலிருந்து விடுவித்து தாமே முன்னின்று வழி நடத்திச் செல்லவில்லையோ, அதுவரைக்கும் உண்மையான முறையில், யதார்த்தமான இறைவழிபாடு ஆரம்பமாவது கூட இல்லை. பகவான் என்னவோ எல்லா இடங்களில் இருந்தும்தான் பேசுகிறார். ஆனால், ஆரம்பநிலையில், அவர் ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றுள்ள மகாபுருஷர் மூலமாகவே பேசுகிறார். ஒருவேளை, அத்தகைய மகாபுருஷர் உங்களுக்குக் கிடைக்கவில்லையென்றால் பகவான் உங்களிடம் தெளிவாகப் பேசமாட்டார்.

இஷ்ட தெய்வம், ஸத்குரு அல்லது, பரமாத்மா, ஆன்மாவில் சாரதியாக எழுந்தருள்வது என்பது எல்லாம் ஒன்றேதான். சாதகரின் ஆன்மாவில் எழுந்தருளிய பிறகு, இறைவன் மூலமாகக் கிடைக்கும் இறையாணைகள் நான்கு வகைகளில் கிடைக்கிறது. முதலாவது, உடல் – சுவாசம் தொடர்பான அனுபவம் (ஸ்தூலஸரீரா சம்பந்தி அனுபவம்) எனப்படுகிறது. நீங்கள் ஆன்ம சிந்தனையில் உட்கார்ந்திருக்கிறீர்கள். எப்பொழுது உங்கள் மனம் ஆன்ம சிந்தனையில் ஈடுபடுகிறது? எவ்வளவு தூரம் வரை ஈடுபட்டுள்ளது? எப்பொழுது உங்கள் மனம் ஆன்ம சிந்தனையில் இருந்து விலகியோடத் தொடங்கி விட்டது? மற்றும் எப்பொழுது விலகியோடி விட்டது? இவற்றையெல்லாம் இஷ்ட தெய்வம் (ஸத்குரு) ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு நிமிடமும் உடல் அங்கத் துடிப்புகள் மூலமாகக்

குறிப்பால் உணர்த்திக் கொண்டே இருக்கிறார். உடல் அங்கங்கள் துடிப்புறுவதே உடல் – சுவாசம் தொடர்பான அனுபவம் ஆகும். அவை ஒரே சமயத்தில் இரண்டு நான்கு இடங்களில் கூட உண்டாகும். மேலும், உங்களுடைய மனத்தில் இறை ஆராதனைக்கு முரண்பாடான எண்ணங்கள் உண்டாகத் தொடங்கிய உடனே ஒவ்வொரு நிமிடமும் இந்த அங்கத் துடிப்புகள் வரத் தொடங்கும். இந்தக் குறிப்பு எப்பொழுது கிடைக்குமென்றால், இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவின் திருவுருவத்தை, அவரைத் தவிர வேறு எதையும் யாரையும் நினைக்காமல் ஒருமித்த உணர்வுடன் (அனன்ய பாவம்) இதய தேசத்தில் பிடிக்க ஆரம்பிக்கிறீர்களோ, அப்பொழுதுதான் கிடைக்கும். இதைத் தவிர, சாதாரண உயிர்களில் (மனிதர்களில்) வினைகளின் மோதல்களினால் அங்கத் துடிப்புகள் ஏற்படுவதற்கும் மேலே சொல்லப்படுகின்ற, இஷ்ட தெய்வத்தின் மூலமாகக் கிடைக்கும் இறையாணைகளுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது.

இரண்டாவது, கனவு தொடர்பான அனுபவம் (ஸ்வப்னஸூரா) எனப்படுகிறது. சாதாரண மனிதர்கள் தங்களுடைய உலகியல் ஆசைகள், புலனின்ப வாசனைகள் தொடர்புடைய கனவுகளைக் காண்கிறார்கள். ஆனால், எப்பொழுது நீங்கள் இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவின் திருவுருவத்தை இதயத்தில் நினைக்கத் தொடங்கி விடுகிறீர்களோ, அதற்குப் பிறகு, இந்தக் கனவுகளும் கூட இறைவன் மூலமாகக் கிடைக்கும் ஆணைகளாக மாறி விடுகின்றன. யோகி வெறுமனே கனவு காண்பதில்லை. அவன் இனிமேல் நடக்கப் போவதையே காண்கிறான்.

மேலே சொல்லப்பட்டுள்ள இரண்டு அனுபவங்களுமே சாதனையின் ஆரம்ப நிலையைச் சேர்ந்தவை. யாரேனும் ஒரு தத்துவத்தில் நிலைபெற்ற மஹாபுருஷரின் சரண சான்னித்தியத்தில், மனத்தில் அவர்மீது சிரத்தை வைத்த உடனேயே, அவருக்குச் சிற்சில தொண்டுகள் புரிவதன் மூலமாகவே இந்த அனுபவங்கள் விழிப்புற்று விடுகின்றன. ஆனால், இந்த இரண்டு அனுபவங்களை விடவும் அதிசூட்சுமமான, மீதமுள்ள இரண்டு அனுபவங்களும் முழுக்க முழுக்க செயல்முறைப் பகுதிகளாகும். அவற்றையெல்லாம் ஆன்மீகச் செயல்முறைப் பாதையில் சென்றுதான் அனுபவத்திற்குக் கொண்டு வரமுடியும்.

மூன்றாவது, ஆழ்உறக்கநிலை தொடர்பான அனுபவம் (ஸுஷுப்தி – ஸூரா) எனப்படுகிறது. உலகில் எல்லோரும் உறங்கத்தான் செய்கிறார்கள். மோகம் என்னும் இரவில் எல்லோரும் சுயஉணர்வற்று, ஆழ்ந்த உறக்கத்தில்தான் இருக்கிறார்கள். இரவும் பகலும் எதையெல்லாம் செய்கிறார்களோ, எல்லாமே வெறும் கனவே தவிர வேறென்ன! இங்கே ஆழ்உறக்கநிலை என்பதன் உண்மையான அர்த்தம் என்னவென்றால், எப்பொழுது, பரமாத்ம சிந்தனையில் மனமானது மிகவும் ஒன்றிப்

போய், மனத்தின் கவனப் பார்வை (ஸூரத்) ஆன்ம சிந்தனையில் ஆழ்ந்து மெய்மறந்தநிலை ஏற்படுகிறதோ அப்பொழுது, உடல்மட்டும் உட்கார்ந்திருக்கிறது, மனமோ ஆழ்உறக்க நிலைக்குப் போய்விடுகிறது. இத்தகைய நிலையில் இஷ்ட தெய்வம் ஆன்மீக அறிகுறி எதையேனும் குறிப்பால் உணர்த்துகிறார். யோகத்தின் உயர்நிலைகளுக்கு ஏற்பக் கிடைக்கின்ற இத்தகைய ஆன்மீகக் காட்சிகள் (திருசியங்கள்) சரியான வழியைக் காட்டுவதாகவும் இறந்த காலம் – எதிர்காலம் ஆகியவற்றைப் பற்றி அறிவுறுத்துவதாகவும் அமைகின்றன. பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள், "மருத்துவர்கள் எவ்வாறு நோயாளிகளுக்கு மயக்க மருந்து தந்து அவர்களை மயக்க நிலைக்குக் கொண்டுபோய், தகுந்த சிகிச்சை அளித்த பிறகு சாதாரண தன்னுணர்வு நிலைக்குக் கொண்டு வருகிறார்களோ, அவ்வாறேதான் பகவானும் அறிவுறுத்துவார்" என்று கூறுவார்.

நான்காவது மற்றும் கடைசி அனுபவம்தான் சமத்துவம் தொடர்பான அனுபவம் (ஸம் – ஸூரா) எனப்படுகிறது. எவர்மீது மனத்தின் கவனப் பார்வை (ஸூரத்) உறுதிப்பட்டிருந்ததோ, அந்த பரமாத்மாவுடன் சமத்துவம் அடையப்பட்டு விட்டது. அதற்குப் பிறகு உட்கார்ந்திருக்கும் போதும், எழுந்து நின்று கொண்டிருக்கும்போதும், போகும் போதும், வரும் போதும் என்று எல்லா நேரங்களிலும் எல்லா இடங்களிலும் அந்த இறைவனே அனுபூதியில் உணரப்படுகிறார். இந்த நிலையை அடைந்த யோகி, மூன்று காலங்களையும் அறிந்தவர் ஆகிறார். இந்த அனுபவத்தைக் கொண்டு, மூன்று காலங்களையும் தாண்டிய, புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட, இறைப் பேருணர்வில் நிலைபெற்று உள்ள மகாபுருஷர், சாதகனின் ஆன்மாவில் எழுந்தருளி, அஞ்ஞானத்தால் பிறந்த அந்தகாரத்தை (ஆழ்ந்த இருளை) இந்த ஞானம் என்னும் தீபத்தால் விலக்கி அருள்கிறார். இதுபற்றி அர்ஜுனன் கேள்வி எழுப்பினான்.

**அர்ஜுன உவாச**
**பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான்**
**புருஷம் சாஸ்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் (12)**
**ஆஹுஸ்த்வாம்ருஷய : ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா**
**அஸிதோ தேவலோ வ்யாஸ : ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே (13)**

பகவான்! நீங்கள் பரபிரம்மம், பரமபதம், மற்றும் பரம புனிதமானவர் ஆவீர். ஏனெனில், உங்களை எல்லா ரிஷிகணங்களும் என்றும் நிலையாக, மாறாமல் இருப்பவர் (ஸனாதனர்), திவ்விய புருஷர், தேவர்களுக்கெல்லாம் ஆதிதேவர், பிறப்பற்றவர், மற்றும் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர் (ஸர்வ வ்யாபி) என்று கூறுகின்றனர். பரமபுருஷர், பரமபதம் ஆகியவற்றின் பொருளையே திவ்விய புருஷர், பிறப்பற்றவர் ஆகிய சொற்களும் தருகின்றன. **தேவரிஷி**

**நாரதர், அஸிதர், தேவல், வியாஸர்** மற்றும் நீங்களும் என்னிடம் இதையேதான் கூறுகிறீர்கள். அதாவது, முற்காலத்தில் தோன்றிய மஹரிஷிகளும் கூறுகின்றனர். இப்போது நிகழ்காலத்தில் வாய்க்கப் பெற்றுள்ள மஹரிஷிகளின் நல்லுறவில் **நாரதர், தேவல், அஸிதர்** மற்றும் **வியாஸர்** ஆகியோர்களின் பெயர்களையும் குறிப்பிடுகிறான். அவர்கள் அனைவருமே அர்ஜுனனின் சமகாலத்தில் வாழ்ந்தவர்களாய் இருந்தனர். (ஸத்புருஷர்களின் ஸாதுஸங்கம் அர்ஜுனனுக்குக் கிடைத்திருந்தது. அவர்களுடன் சேர்த்து, ஸ்ரீகிருஷ்ணரைக் குறிப்பிட்டு, 'நீங்களும் அதையே கூறுகிறீர்கள்' என்கிறான். எனவே

**ஸர்வமேதத்ருதம் மன்யே யன்மான் வதஸி கேசவ**
**ந ஹி தே பகவன்வ்யக்திம் விதுர்தேவா ந தானவா : (14)**

கேசவா! எவற்றையெல்லாம் நீங்கள் எனக்காகச் சொல்கிறீர்களோ, அவற்றையெல்லாம் உண்மை என்று ஏற்றுக் கொள்கிறேன். உங்களுடைய 'ஈடுஇணையற்ற தனித்துவத்தை' தேவர்களும் அறியார், அசுரர்களும் அறியார்.

**ஸ்வயமேவாத்மனாத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம**
**பூதபாவன பூதேச தேவ தேவ ஜகத்பதே (15)**

மனிதர் உட்பட அனைத்து உயிர்களையெல்லாம் உருவாக்குபவரே! எல்லா உயிர்களுக்கும் ஈஸ்வரரே! தேவர்களுக்கெல்லாம் தேவரே! உலகத்தின் நாயகரே! புருஷர்களிலெல்லாம் உத்தமரே! நீங்கள்தான் உங்களை அறிவீர்கள்! அல்லது நீங்கள் யாருடைய ஆத்மாவில் எழுந்தருளி உங்களை அறியச் செய்கிறீர்களோ அவர் மட்டுமே அறிவார்! இதுவும் உங்கள் மூலமாகவே உங்களை அறிவதுதான். எனவே –

**வக்து மர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய :**
**யாபிர்விபூதிபிர்லோகானிமாம்ஸ்தவம் வ்யாப்ய திஷ்டஸி (16)**

நீங்களே, உங்களுடைய, எந்த தெய்வீக மகிமைகளின் மூலமாக, அனைத்து உலகங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறீர்களோ, அவற்றையெல்லாம் முழுமையான வடிவில் கொஞ்சம் கூட மீதியில்லாமல் கூற வல்லவர்.

**கதம் வித்யாமஹம் யோகின்ஸ் த்வாம் ஸதா பரிசிந்தயன்**
**கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோஸி பகவன்மயா (17)**

யோகியே! (ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார்) நான் எந்தமுறையில் இடைவிடாமல் சிந்தனை செய்து கொண்டே உங்களை அறிவது? பகவானே! நான் எந்தெந்த மாதிரியான ஆன்மீக உணர்வுகளுடன் கூடியவனாக உங்களைப்

பற்றிய இறைநினைவில் ஈடுபடுவது?

**விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்த்தன**
**பூய : கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மேஅம்ருதம் (18)**

ஜனார்த்தனா! உங்களுடைய யோகசக்தியைப் பற்றியும் யோகத்தின் மகிமைகளைப் பற்றியும் மறுபடியும் விரிவாகக் கூறுங்கள். இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் ஏற்கனவே சுருக்கமாகக கூறியிருந்தாலும் மறுபடியும் கூறுங்கள். ஏனெனில், அமிருத தத்துவமாகிய மரணமில்லாப் பெருவாழ்வைப் பெற்றுத் தரவல்ல உங்களுடைய திருவசனங்களை கேட்டபிறகும் கூட எனக்கு திருப்தி உண்டாகவில்லை.

**ராமசரித ஜே ஸுனத் அகாஹீம்**
**ரஸ விசேஷ் ஜானா தின் நாஹீம்**
**(ராமசரித மானஸ் 7/52/1)**

எதுவரை இறைவனுள் நுழைவு கிடைக்கவில்லையோ, அதுவரை அந்த அமிருத தத்துவத்தைப் (மரணமில்லாப் பெருவாழ்வு) பற்றி அறிந்து கொள்ளும் ஆவல் தீர்வதில்லை. இறைவனுக்குள் நுழைவு பெறும் முன்பே, பாதி வழியிலேயே, 'நாம் எல்லாம் அறிந்து கொண்டு விட்டோம்' என்று எண்ணிக் கொண்டு உட்கார்ந்து கொள்பவன் ஒன்றையும் அறிந்து கொள்வதில்லை. அவனுடைய பாதை தடைபடப் போகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவேதான், சாதகன் ஆன்ம சாதனை நிறைவு பெறுகின்ற வரையிலும் இஷ்ட தெய்வத்தின் மூலமாகக் கிடைக்கின்ற இறை ஆணைகளைப் பற்றிக் கொண்டே இருக்கவேண்டும். மேலும், அவற்றைச் செயல்முறைப்படுத்திக் கொண்டும் இருக்க வேண்டும். மேலே கூறப்பட்டுள்ள அர்ஜுனனின் அறிந்து கொள்ளத் துடிக்கும் ஆர்வம் பற்றி யோகேஷ்வரர் கூறினார்.

**ஸ்ரீபகவானுவாச**
**ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யத்மாவிபூதய :**
**ப்ராதான்யத : குருஸ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே (19)**

குரு வம்சத்தில் சிறந்தவனே! அர்ஜுனா! இப்பொழுது நான் என்னுடைய அந்த தெய்வீக மகிமைகளை அவற்றில் மிகவும் முக்கியமானவற்றை மட்டும் உன்னிடம் கூறுகிறேன். ஏனெனில், என்னுடைய மகிமைகளோ அளவிற்கடங்காதவை முடிவற்றவை.

**அஹமாத்மா குடாகேஷ ஸர்வபூதாஷயஸ்த்தித :**
**அஹமாதிஸ்ச மத்யஞ் ச பூதானாமந்த ஏவ ச (20)**

அர்ஜுனா! நான் மனிதர் உட்பட எல்லா உயிர்களின் இதயத்திலும் வீற்றிருக்கும் அனைவருடைய **ஆன்மா** ஆவேன். மற்றும் எல்லா உயிர்களின் முதல், இடை, கடைசியும் நானே. அதாவது, **பிறப்பு, வாழ்க்கை, இறப்பும்** நானேதான்.

**ஆதித்யானாமஹம் விஷ்ணுர்ஜ்யோதிஷாம் ரவிரம்ஷுமான்**
**மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் சசீ (21)**

நான் அதிதியின் பன்னிரண்டு புத்திரர்களில் **விஷ்ணுவாவேன்.** ஜோதிகளிலேயே ஒளி மிகுந்த **சூரியனும்** ஆவேன். காற்றின் (வாயு) பேதங்களில் நான் **மரீசி** என்னும் பெயருடைய காற்றாவேன். மற்றும், நட்சத்திரங்களில் நான் **சந்திரன்** ஆவேன்.

**வேதானாம் ஸாம வேதோஅஸ்மி தேவானாமஸ்மி வாஸவ :**
**இந்த்ரியாணம் மனஸ்சாஸ்மி பூதானாமஸ்மி சேதனா (22)**

வேதங்களில் நான் **சாமவேதம்** ஆவேன். அதாவது முழுமையான சமத்துவத்தைத் தருகின்ற பாடல் ஆவேன். தேவர்களில் நான் அவர்களுடைய அதிபதியாகிய **இந்திரன்** ஆவேன். மற்றும் புலன்களில் நான் மனம் ஆவேன். ஏனெனில், மனத்தின் ஆய்வினாலேயே பிறகே நான் அறியப்படுகிறேன். மேலும், எல்லா உயிரினங்களிலும் நானே அவற்றின் **உயிருணர்வு** (சேதனா) ஆவேன்.

**ருத்ராணாம் சங்கரஸ்சாஸ்மி வித்தேஷோ யக்ஷரக்ஷஸாம்**
**வஸுனாம் பாவகஸ்சாஸ்மி மேரு : ஷிகரிணாமஹம் (23)**

பதினோரு ருத்திரர்களில் நான் **சங்கரன்** ஆவேன். **சங்க அர : ஸ சங்கர:** – அதாவது, சந்தேகங்களுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட நிலையில் இருப்பவன். யக்ஷர்கள் மற்றும் ராக்ஷஸர்களில் நானே செல்வங்களுக்கு எல்லாம் அதிபதியாகிய **குபேரன்** ஆவேன். எட்டு வசுக்களில் நானே **அக்கினியாவேன்.** மற்றும் சிகரங்களில் நான் **ஸ்ரீமேரு** அதாவது நல்லவை அனைத்தின் ஒருங்கிணைப்பாவேன். அதுவே அனைத்திலும் உயர்ந்த சிகரம் ஆகுமே தவிர, ஏதோவொரு மலையைக் குறிப்பிடவில்லை. சரியாகச் சொல்வதென்றால் இவையனைத்தும் யோக சாதனையை விளக்கும் உருவகங்கள் ஆகும். யோகவியலில் பயன்படுத்தப்படும், உயர்வான பொருளுடைய சொற்கள் ஆகும்.

**புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம்**
**ஸேனானீனாமஹம் ஸ்கந்த : ஸரஸாமஸ்மி ஸாகர : (24)**

தெய்வீகச் செல்வம் அதாவது, தெய்வீகக் குணங்கள் ஒன்றுதிரளும் **புரம்** – அதாவது, ஸ்தூல சூட்சும், மற்றும் காரண சரீரங்களைக் காக்கின்ற புரோகிதர்களில் என்னை **பிரகஸ்பதி** என்றே அறிந்து கொள். மேலும், பார்த்தனே! சேனாதிபதிகளில் நானே சுவாமி **கார்த்திகேயன்** ஆவேன். கர்மத்தின் முடிவே (தியாகம்) கார்த்திகேயன் எனப்படுவது. அதன் மூலமாகவே அசைவன மற்றும் அசையாதவை என்று அனைத்தும் அடங்கிய ஒட்டு மொத்த உலகத்தின் (அழிவு) பிரளயம் மற்றும் இஷ்ட தெய்வத்தை அடையப் பெறுதல் ஆகியவை நிகழ்கின்றது. கர்மத்தின் தியாக நிலையே கார்த்திக் ஆகும். நீர்நிலைகளில் நான் **சமுத்திரம்** (கடல்) ஆவேன்.

**மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம்**
**யஜ்ஞானாம் ஜபயஜ்ஞோஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய : (25)**

மஹரிஷிகளில் நான் பிருகு ஆவேன். பிரம்மத்தை அறியச் செய்யும் திருவாக்கில் ஓரெழுத்தான **ஓங்காரம்** ஆவேன். எல்லாவிதமான வேள்விகளில் நானே **ஜபவேள்வி** ஆவேன். வேள்வி என்பது பரம்பொருளில் நுழைவுபெற்றுத் தருகின்ற இறைஆராதனையின் சிறப்பான விதிமுறை விளக்கமாகும். அதன் சாராம்சம் இதுவே – ஸத்குருவின் திருவுருவச் சிந்தனையும் மற்றும் நாமஜபமும். இரண்டு விதமாக நாமத்தை உச்சரிக்கின்ற (பைக்கிரி, மத்யமா) நிலைகளைக் கடந்த பிறகு, நாமமானது வேள்வி செய்யப்படுவதற்கு ஏற்ற நிலையை அடைந்துவிடுகிறது. அப்போது, நாமமானது வாயினாலோ, சிந்தனையினாலோ, அல்லது தொண்டைக்குள்ளோ உச்சரிக்கப்படுவதில்லை. மாறாக, நாமமானது, சுவாசத்தில் விழிப்புற்று விடுகிறது. அந்நிலையில் மனத்தின் கவனப் பார்வையை **(ஸுரத்)** சுவாசத்தில் நிலைப்படுத்திக் கொண்டு, மனத்தால் சுவாசத்தையே எந்நேரமும் பின் தொடர்ந்து கொண்டிருந்தால் போதும். வேள்வி செய்யப்படுவதற்கு ஏற்ற நிலையை அடைந்து விட்ட பிறகு, இறை நாம ஜபத்தின் ஏற்றத் தாழ்வுகள் சுவாசத்தையே சார்ந்து அமைகின்றன. இது முழுக்க முழுக்க செயல்முறைப் பகுதியாகும். அசையாமல் உறுதியாக நிற்பவற்றுள் நான் **இமயமலை** ஆவேன். குளிர்மை, சமத்துவம் மற்றும் அசையாத உறுதிப்பாடு உடையவர் பரமாத்மா ஒருவரே ஆவார். எப்பொழுது பிரளயம் உண்டானதோ, அப்பொழுது மனு அதன் உயரமான சிகரத்தில்தான் தம்மைக் கட்டிக் கொண்டிருந்தார். அசைவற்ற உறுதிப்பாடு உடைய, சமத்துவமான அமைதியான பிரம்மத்தில் பிரளயம் உண்டாவது இல்லை. அந்த பிரம்மத்தின் பிடியும் நானே!

**அஸ்வத்த : ஸர்வ வ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச நாரத :
கந்தர்வாணாம் சித்ரரத : ஸித்தானாம் கபிலோ முனி : (26)**

எல்லா மரங்களிலும் நான் **அரச மரம்** ஆவேன். **அஸ்வ** – நாளைவரை நிலைத்திருக்கும் என்று உறுதியாகச் சொல்ல முடியாத நிலையற்ற தன்மை உடைய, **ஊர்த்வ மூலமத : ஷாகம் அஸ்வத்தம்** (15/1) – மேல்பாகத்தில் பரமாத்மா எதனுடைய வேராகவும் கீழ்ப்பாகத்தில் பிரகிருதி எதனுடைய கிளைகளாகவும் இருக்கிறதோ அத்தகைய சம்சாரம் என்னும் இந்த உலகமே ஒரு மரமாகும். இதையே அரசமரம் என்று ஒப்புமைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. இதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், சாதாரண அரச மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து அதையே பூஜை செய்யத் தொடங்கி விடக் கூடாது. இதைக் குறிப்பிட்டுத்தான் ஸ்ரீகிருஷ்ணர் அது நான்தான் என்கிறார். மேலும், தேவரிஷிகளில் நான் **நாரதர்** ஆவேன். **நாதஸ்ய : ரந்த்த்ர : ஸ நாரத : –** தெய்வீகச் செல்வம் எனப்படும் தெய்வீக குணங்கள் மிகவும் சூட்சுமம் அடைந்த நிலையில் சுவாசத்தில் (ஸ்வரம்) எழுகின்ற நாத ஓசை (நாமத்வனி) யைப் பிடிக்கின்ற (கேட்கின்ற) திறன் கிடைத்து விடுகிறது. இத்தகைய விழிப்புணர்வும் நானேதான். கந்தர்வர்களில் நான் **சித்திர ரதன்** ஆவேன். அதாவது, ஆன்ம சிந்தனை செய்யும் உயர் ஆன்மீக எண்ணவோட்டங்களில் எப்பொழுது இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு – இறைவன்) திருவடிவமானது, தெளிவாகப் புலப்பட ஆரம்பிக்கிறதோ, அந்த உயர்ந்த, விசேஷமான ஆன்மீக நிலையும் நானேதான். சித்தர்களில் நான் **கபிலமுனிவர்** ஆவேன். இந்த உடலே கபிலர் எனப்படுகிறது. இந்த உடலுக்குள் வீற்றிருக்கும் இறைவன் மீது எப்பொழுது பேரன்பு (ஈர்ப்பு) ஏற்பட்டு விடுகிறதோ, அத்தகைய தெய்வீக மகிமை பொருந்திய புனிதமான எண்ணம் இயக்கநிலை பெறுகின்ற உயர் ஆன்மீக நிலையும் நான்தான்.

**உச்சைச்ரவஸமஷ்வானாம் வித்தி மாமம்ருதோத்பவம்
ஐராவதம் கஜேந்த்ராணாம் நராணாம் ச நராதிபம் (27)**

குதிரைகளில் நான் அமிருதத்தில் இருந்து தோன்றிய **உச்சைச்ரவா** என்னும் பெயருடைய குதிரை ஆவேன். இவ்வுலகைச் சேர்ந்த அனைத்துப் பொருட்களும் அழியும் தன்மை உடையவை. ஆன்மாவே பிறப்பற்றது – மரணம் இல்லாதது, அமிருத வடிவமானது (மரணமில்லாப் பெருவாழ்வு உடையது). அந்த அமிருத வடிவத்தில் நிலைபெற்று, அதிலிருந்து கொண்டு எதனுடைய (எவருடைய) இயக்கம் நடைபெறுகிறதோ அந்தக் குதிரை நான்தான். குதிரை வேகத்தின் உருவகம் ஆகும். ஆத்ம தத்துவத்தை உள்வாங்கிக் கிரகிப்பதில் மனமானது எப்பொழுது தீவிரமான இயக்கத்தை அதாவது, வேகம் பிடிக்கத் தொடங்கி விடுகிறதோ, அப்பொழுதே அதுவொரு குதிரையைப் போன்று செயல்பட ஆரம்பித்து

விடுகிறது. அத்தகைய உயர் ஆன்மீக இயக்கமும் (வேகம்) நானேதான். யானைகளில் **ஐராவதம்** என்னும் பெயருடைய யானையும் நான்தான். மனிதர்களில் என்னை **அரசன்** என்று அறிந்து கொள். உண்மையில் தம்மிடம் எந்தக் குறைவும் இல்லாத மகாபுருஷரே அரசர் ஆவார்.

**ஆயுதானாமஹம் வஜ்ரம் தேனூனாமஸ்மி காமதுக்**
**ப்ரஜனஷ்சாஸ்மி கந்தர்ப : ஸர்ப்பாணாமஸ்மி வாஸுகி (28)**

ஆயுதங்களில் நான் **வஜ்ராயுதம்** ஆவேன். பசுக்களில் நான் **காமதேனு** ஆவேன். காமதேனு என்பது ஏதோ மடியைக் கறந்தால் பால் கொடுப்பதைப் போன்று, மனம் விரும்பிய பதார்த்தங்களையெல்லாம் தருகின்ற பசு ஒன்றும் இல்லை. ரிஷிகளில் வசிஷ்டரிடம்தான் இந்தக் காமதேனு இருந்தது. சரியாகச் சொல்வதென்றால் **கோ** என்னும் ஒரெழுத்துச் சொல் புலன்களைக் (இந்திரியங்கள்) குறிப்பிடுகிறது. புலனடக்கம் மற்றும் மனக் கட்டுப்பாடு ஆகியவற்றை இஷ்ட தெய்வத்தை (ஸத்குரு – இறைவன்) வசப்படுத்தியவரிடமே காண முடியும். எவருடைய புலன்கள் இறைவனுக்கு இணையாக (இறைவனைக் குறித்து) உறுதிப்பாடு அடைந்து விட்டதோ, அவருக்கு அவருடைய புலன்களே காமதேனு வாகி விடுகின்றன. அதற்குப் பிறகு, **ஜோ இச்சா கரிஹவு மன் மாஹீம், ஹரி ப்ரஸாத் கச்சு துர்லப் நாஹீம் (ராம சரித மானஸ்** 7/113/4) – அத்தகையவரால் அடைவதற்கரியது என்று எதுவுமே இல்லை. உற்பத்தி செய்பவற்றுள் **(ப்ரஜனன்)** புதிய ஆன்மீக நிலைகளை வெளிப்படுத்துகின்றவன் நானே ஆவேன். **ப்ரஜனன்** – சாதாரணமாக, குழந்தைகளைப் பெற்றெடுத்தல் ஒருவகையான உற்பத்திதான். ஒட்டு மொத்த உலகிலும் இரவும் பகலும் இனப் பெருக்கம் தானே நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. எலிகளும் எறும்புகளும்கூட இரவும் பகலும் இதைத்தானே செய்து கொண்டிருக்கின்றன. இங்கே **ப்ரஜனன்** என்ற சொல், இந்தச் சாதாரணமான இனப் பெருக்கத்தைக் குறிப்பிடவில்லை. மாறாக, ஒரு ஆன்மீக நிலையில் இருந்து மற்றொரு ஆன்மீக நிலையென்று, இம்முறையில் எண்ணவோட்டங்களில், குணங்களில் பரிமாற்றங்கள் ஏற்படுகிறது அல்லவா, அந்தப் பரிமாற்றத்தை நானே செய்கிறேன். பாம்புகளில் நான் **வாசுகி** ஆவேன்.

**அனந்தஸ்சாஸ்மி நாகாணாம் வருணோ யாதஸாமஹம்**
**பித்ருணாமர்யமா சாஸ்மி யம : ஸம்யமதாமஹம் (29)**

நாகங்களில் நான் **அனந்தம்** அதாவது **சேஷ நாகம்** ஆவேன். இது நாம் நினைத்துக் கொண்டிருப்பதைப் போல் பாம்பு ஒன்றும் கிடையாது. கீதையின் சமகாலத்தைச் சேர்ந்த மற்றொரு புத்தகமான ஸ்ரீமத் பாகவதத்தில் இதனுடைய வடிவத்தைப் பற்றி விவாதிக்கப்பட்டுள்ளது. அதன்படி, பூமியில் இருந்து முப்பதாயிரம்

யோசனை தூரத்தில் பரமாத்மாவின் வைஷ்ணவீ சக்தி இருக்கிறது. அதனுடைய தலையில் இந்த பூமியானது கடுகு தானியத்தைப் போன்று பாரமில்லாமல் தங்கியுள்ளது. அந்தக் காலத்தில் 'யோசனை' என்பதற்கு எந்த அளவுக் குறியீடு வேண்டுமானால் இருந்திருக்கட்டும். எது எப்படி இருந்தாலும் இதுவொரு நீண்ட நெடிய தூரத்தையே குறிப்பிடுகிறது. உண்மையில், இது **ஈர்ப்பு** சக்தியைப் (ஆகர்ஷண சக்தி) பற்றிய வர்ணனை ஆகும். விஞ்ஞானிகள் இதனை 'ஈதர்' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். கிரகங்கள் – உபகிரகங்கள் அனைத்துமே இந்த சக்தியை ஆதாரமாகக் கொண்டுதான் இயங்கிக் கொண்டுள்ளன. ஆனால், அந்தச் சூன்யத்தில் கிரகங்களுக்கு எந்தப் பாரமும் கிடையாது. அந்த சக்தியானது பாம்பினுடைய வாலைப் போன்று அனைத்துக் கிரகங்களையும் சுற்றி வளைத்துக் கொண்டுள்ளது. பூமியைத் தாங்கி கொண்டுள்ள இதுவே, அந்த 'அனந்தம்' எனப்படுவதாகும். 'அந்த தெய்வீக மகிமை பொருந்திய சக்தியும் நான்தான்' என்று ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். நீர்நிலைகளில் அவற்றின் அதிபதியாகிய **வருணன்** ஆவேன், மற்றும் பித்ருக்களில் **அர்யமா** ஆவேன். **அஹிம்சை, ஸத்தியம், அஸ்தேயம், பிரம்மச்சரியம்** மற்றும் **அபரிக்ரஹம்** ஆகியவை ஐந்தும் **யமம்** ஆகும். அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகும்போது அதைத் தடுக்கும் வகையில் எழுகின்ற முரண்பட்ட, புலன் நுகர்வு ஆசைகளை (விகாரங்கள்) அழிப்பதுவே **அர:** (அழித்தல்) ஆகும். புலன் இன்ப ஆசைகள் எண்ணங்கள் (விகாரங்கள்) அழிவுற்றதும் **பித்ரு** அதாவது, கடந்தகால வினைகள் (இறந்தவர்கள்) அனைத்தும் திருப்தியுற்று அமைதியடைந்து விடுகின்றன; அவையெல்லாம் விடுதலை பெற்று விடுகின்றன. ஆட்சிபுரிவர்களில் (ஒழுக்க நெறிமுறைகளைக் கட்டிக் காப்பாற்றுவதில்) நான் **யமராஜன்** ஆவேன். அதாவது, மேலே கூறப்பட்டுள்ள, ஐந்து யமங்களின் மேற்பார்வையாளன் நானாவேன்.

**ப்ரஹ்லாதஷ்சாஸ்மி தைத்யானாம் கால : கலயதாமஹம்**
**ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோஅஹம் வைனதேயஷ்ச்ச பக்ஷிணாம் (30)**

நான் தைத்யர்களில் (அசுரர்களில்) **பிரஹலாதன்** ஆவேன். **(பிரஹ்லாத** – **பர** + **ஆஹ்லாத**– தன்னிலிருந்து வேறான, உயர்வான, பரம்பொருளை அடைவதில், **ஆஹ்லாத –** பெரும் பேரானந்தத்தை உணர்பவன்) 'ப்ரியம்' (பிரேமம்) அதாவது இறைவன் மீது மட்டுமே பிரியம் கொண்டிருப்பதே 'பிரஹ்லாதன்' எனப்படுகிறது. அசுர குணங்களின் ஆளுமை இருந்தபோதிலும் கூட இறைவனுக்காக, அவர்மீது ஒருவகையான ஈர்ப்பும், அவர் இன்னும் கிடைக்கவில்லையே என்ற நிலையில் ஒருவகையான ஏக்கமும் உண்டாகத் தொடங்குகிறது. இந்நிலையில் பரம பிரபுவாகிய பரமாத்மாவின் நேரடி தரிசனம் கிடைக்கிறது. இதுபோன்ற பிரேம உல்லாசம் (இறைப்பேரானந்தம்) நானேதான்.

கணக்கீடுகளில் நான் **சமயம்** (காலம்) ஆவேன். இங்கே கணக்கீடு என்பதற்கு ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று எண்ணுவதென்றோ, அல்லது, நொடி, நிமிடம், மணி, நாள், வாரம், மாதம் என்று கணக்கிடுவதென்றோ, பொருள் கொள்ளலாகாது. மாறாக, இறைவன் மீது ஆன்மீகச் சிந்தனையில் ஈடுபடுகின்ற சமயத்தையே (காலம்) குறிப்பிட்டு இவ்வாறு சொல்லப்பட்டுள்ளது. ஆன்மீகச் சிந்தனையில் **ஜாகத் மே ஸுமிரன் கரே, ஸோவத் மே லவ் லாய்** – என்று சொல்லப்பட்டிப்பதைப் போல ஈடுபடவேண்டும். (விழித்திருக்கும் போதெல்லாம் இறைநினைவு செய்யவேண்டும். உறங்கும்போது கூட இறைவன் மீதுள்ள அன்பு நிறைந்த நினைவலைகள் துண்டிக்கப்படாமல் தொடர்ந்து நடைபெற வேண்டும்.) அவ்விதமாக அனைத்துப் பொழுதும் நடைபெறும் ஆன்ம சிந்தனையில் செலவிடப்படும் நேரமும் நானாவேன். மிருகங்களில் சிங்கம் (யோகியும் கூட **ம்ருக;** அதாவது யோகமே வடிவான காட்டில் திரிந்து கொண்டிருப்பவன் ஆவான். மற்றும் பறவைகளில் **கருடன்** நானாவேன். ஞானமே கருடன். எப்பொழுது தெய்வீக மகிமைகள் அனைத்தும் அனுபவத்தில் கிடைக்க ஆரம்பித்து விடுகிறதோ, அப்பொழுது, இந்த மனமானது தன்னுடைய ஆராதனைக்குரியவரின் (ஸத்குரு) வாகனமாக மாறிவிடுகிறது. மேலும், எப்பொழுது அதே மனமானது சந்தேகத்திற்கு உட்படுகிறதோ, அப்பொழுதே பாம்பாகித் தீண்டிக் கொண்டே இருக்கிறது. எண்ணற்ற பிறவிகளில் தூக்கி எறிகிறது. கருடன் விஷ்ணுவின் வாகனம் ஆகும். எந்த இறைவன் உலகம் முழுவதும் அணுவடிவில் நீக்கமற எங்கும் நிறைந்து நின்று, இயங்கி வருகிறாரோ, அவரை, ஞானம் கைகூடப் பெற்ற மனமானது, தன்னில் வரித்துக் கொண்டு, அவருடைய வாகனமாகவும் மாறிவிடுகிறது. அவ்வாறு, "இஷ்ட தெய்வத்தைத் (ஸத்குரு – இறைவன்) தன்னில் வரித்துக் கொண்ட மனம் நான்தான்" என்று ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**பவன : பவதாமஸ்மி ராம : ஷஸ்த்ரப்ருதாமஹம்**
**ஜஷாணாம் மகரசாஸ்மி ஸ்த்ரோதஸா மஸ்மிஜாஹ்னவீ (31)**

பரிசுத்தமாக்குவதில் நான் **காற்றாவேன்.** ஆயுதம் தரித்தவர்களில் நான் 'இராமர்' ஆவேன். **ரமந்தே யோகின : யஸ்மின் ஸ ராம :** – எவரிடம் யோகிகள் விரும்பி ஈடுபடுகிறார்களோ அவரே 'இராமர்' ஆவார். யோகிகள் எவரிடம் மிகவும் விரும்பி ஈடுபடுகிறார்கள்? அவர்கள் இறைஅனுபவத்தில் விரும்பி ஈடுபடுகிறார்கள். இறைவன் இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு – இறைவன்) வடிவில் எந்தெந்த இறையாணைகளைத் தருகிறாரோ, யோகிகள் அவற்றில்தான் விரும்பி ஈடுபடுகிறார்கள். அந்த இறை அனுபவ விழிப்புணர்ச்சிக்குப் பெயர்தான் **இராம்** ஆகும். மேலும், அந்த இறைஅனுபவ விழிப்புணர்வும் நானே! மீன்களில் நான் **முதலை** ஆவேன். மற்றும் நதிகளில் நான் **கங்கையாவேன்.**

**ஸர்க்காணாமாதிரந்தஸ்ச மத்யம் சைவாஹமர்ஜுன**
**அத்யாத்மவித்யா வித்யானாம் வாத : ப்ரவதத்தாமஹம் (32)**

அர்ஜுனா! சிருஷ்டிகளின் ஆரம்பமும் முடிவும் மத்தியும் நானே ஆவேன்! வித்யைகளில் **அத்யாத்ம வித்யை** நானே! மேலும் எந்த வித்யை ஆத்மாவின் ஆதிபத்தியத்தைப் பெற்றுத் தருகிறதோ அந்த வித்யை நானேதான். மனிதர் உட்பட உலகிலுள்ள பெரும்பாலான உயிரினங்கள் மாயையின் ஆதிக்கத்திற்குள்தான் கட்டுண்டு கிடக்கின்றன; விருப்பு, வெறுப்பு, காலம், கர்மம், சுபாவம் (இயல்பு) மற்றும் குணங்களால்தான் தூண்டப்படுகின்றன. இவற்றின் ஆதிக்கத்தில் இருந்து விடுவித்து ஆத்மாவின் ஏகாதிபத்தியத்திற்குள் எடுத்துச் செல்கின்ற வித்யை நானேதான். இதைத்தான் 'அத்யாத்ம வித்யை' என்றும் சொல்கிறோம். பிரம்மத்தைப் பற்றிய சர்ச்சையில் முக்கிய அங்கமான அந்த **வார்த்தையும்** நானே! மீதமுள்ள **நிர்ணயங்களோ** உறுதி செய்யப்படாதவை ஆகும்.

**அக்ஷராணாமகாரோஅஸ்மி த்வந்த்வ ஸாமாஸிகஸ்ய ச**
**அஹமேவாக்ஷய : காலோ தாதாஹம் விஷ்வதோமுக (33)**

நான் எழுத்துகளில் முதல் எழுத்தான **அகரம்** – ஓங்காரம் மற்றும் தொடர்களில் நான் **உம்மைத் தொடர்** (த்வந்த்வ ஸமாஸம்) ஆவேன். இது ஆன்மீக சாதனையில் உன்னதமான நிலையில் மனத்தை ஒடுக்கிக் கொண்டே சென்று சாதகனும் இஷ்ட தெய்வமும் (சத்குரு – இறைவன்) மட்டும் எதிரெதிரே நிற்கின்ற நிலையாகும். இதில் வேறு எந்தவொரு சங்கல்பமும் மீதம் இருப்பதில்லை. இது சுவாமிக்கும் தொண்டருக்கும் (சேவகர்) இடையில் நடைபெறுகின்ற ஆன்மீக மோதலாகும். ஆனால் 'துவந்துவம்' என்கின்ற இந்த உயர் ஆன்ம நிலையுமே பகவானுடைய திருக்கொடையேயாகும். இத்தகைய உன்னதமான ஆன்மீக நிலையும் நானேதான். அழிவற்ற **காலமும்** நானே. காலம் எப்போதும் மாறிக் கொண்டே இருப்பது. ஆனால், அழிவற்ற பிறப்பற்ற, மரணம் என்பதேயில்லாத பரமாத்மாவினுள் நுழைவு பெற்றுத் தருகின்ற அந்த மாபெரும் தருணம் (காலம்) நானேதான். **விராட் ஸ்வரூபம்,** அதாவது, நீக்கமற எங்கும் நிறைந்திருந்து, அனைத்தையும் ஏற்று, போற்றிப் பேணிப் பாதுகாப்பவரும் நான்தான்.

**ம்ருத்யு : ஸர்வஹரஷ்சாஹமுத்பவஷ்ச பவிஷ்யதாம்**
**கீர்த்தி : ஸ்ரீர் வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி : க்ஷமா (34)**

நான் அனைத்தையும் அழிக்கின்ற **மரணம்,** மற்றும், இனிமேல் வரப்போகின்றவற்றை உற்பத்தி செய்கின்ற **காரணமும்** ஆவேன். பெண்களில் காணப்படும். **வெற்றி, சக்தி, வாக்குவன்மை, நினைவாற்றல், நல்லறிவு,**

**தைரியம்** மற்றும் **மன்னித்தருளும் குணம்** ஆகியவை அனைத்தும் நான்தான்.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், **த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஷ் சாக்ஷர ஏவ ச (அத்தியாயம் 15/16) –** மனிதர்களில் இரண்டு வகை உண்டு. **க்ஷரர்** என்பவர் ஒருவகை; **அக்ஷரர்** என்பவர் இரண்டாவது வகை. மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் தரித்துள்ள இந்தப் பிறப்பு – இறப்பிற்கு உள்ளாகின்ற உடலே **க்ஷர புருஷன்** (அழியக் கூடியவன்) எனப்படுகிறான். அவன் ஆண், பெண், அலி அல்லது வேறு யாராக வேண்டுமானால் இருந்து விட்டுப் போகட்டும். ஸ்ரீகிருஷ்ணரின் சொற்படி அவன், புருஷன் என்றே அறிந்து கொள்ளப்படுகிறான். மற்றொரு வகை, **அக்ஷர புருஷன்** எப்பொழுது சித்தம் முழுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு, அதனுடைய இயக்கம் முழுவதுமாகத் தடுத்து நிறுத்தப்பட்டு, இறைவனில் உறுதிப்படுகிறதோ, அந்தக் காலத்தில் அறியப்படுகிறான். எனவே, இந்தக் காரணத்தினால்தான் யோகப் பாதையில் பெண்கள் – ஆண்கள் என்று அனைவரிலுமே இறைவனுடன் சமமான நிலையை அடைந்த மகாபுருஷர்கள் உருவாகிக் கொண்டே வந்திருக்கிறார்கள். ஆனால், இங்கே நினைவாற்றல், சக்தி, புத்தி முதலானவை பெண்களிடம் காணப்படும் குணங்களாகக் கூறப்பட்டுள்ளதே அது என்ன? இந்த நற்குணங்களின் அவசியம் ஆண்களுக்கெல்லாம் கிடையாதா என்ன? செல்வந்தனாகவோ, புகழுடையவனாகவோ, பேச்சாற்றல் மிக்கவனாகவோ, நினைவாற்றல் உடையவனாகவோ, புத்திசாலியாகவோ, தைரியமுள்ளவனாகவோ மற்றும் மன்னிக்கும் குணமுள்ளவனாகவோ தங்களை உருவாக்கிக் கொள்ள விரும்பாத ஆண்கள் யாரேனும் உண்டோ? 'அறிவு நிலையைப் பொறுத்தவரையில் குழந்தைகளிடம் இந்தக் குணங்கள் எல்லாம் குறைந்த அளவில் இருக்கின்றன, அவற்றையெல்லாம் அதிகமாக வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன்தானே பெற்றோர்கள், பள்ளிக் கூடங்களில் கூடுதலான வசதிகளை ஏற்படுத்தித் தந்து படிக்க அனுப்பி வைக்கிறார்கள். ஆனால், இங்கேயோ, இந்த இலட்சணங்கள் எல்லாம் பெண்களிடம் மட்டுமே உள்ளதாகக் கூறப்பட்டுள்ளதே?' என்று நீங்கள் நினைக்கலாம். எனவே, இப்பொழுது நீங்களே, இங்கே பெண்கள் என்று யாரைக் குறிப்பிடுகிறார் என்பதைப் பற்றி நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். உண்மையில் உங்களுடைய இதயத்தில் இருந்து எழுகின்ற எண்ணவோட்டங்களையே (சித்த விருத்தி) இங்கே பெண்கள் (ஸ்த்ரீ) என்று உருவகப்படுத்திக் கூறப்படுகிறது. எனவே, அந்த எண்ணங்களில்தான் இந்தக் குணங்கள் எல்லாம் இயக்க நிலை பெற்றுச் செயல்பட வேண்டும். என்னால் உண்டாகின்ற இந்தக் குணங்களையெல்லாம் வளர்த்துக் கொள்வது ஆண் பெண் அனைவருக்குமே மிகவும் உபயோகமானதாகும்.

**ப்ருஹத்ஸாம ததா ஸாம்னாம் காயத்ரீ ச்சந்தஸாமஹம்**
**மாஸானாம் மார்க்கசீர்ஷோஹம்ருதூனாம் குஸுமாகர : (35)**

பாடுவதற்குத் தகுதியுடைய சுருதிகளில் நான் **ப்ருஹத்ஸாமம்** அதாவது, **(ப்ருஹத்)** சர்வ வல்லமையுடன் கூடிய சமத்துவத்தைப் பெற்றுத் தரவல்ல பாடல் ஆவேன். அதாவது, அத்தகைய ஆன்ம விழிப்புணர்வு நான் ஆவேன். சந்தங்களில் **காயத்ரீ** சந்தம் நான் ஆவேன். **காயத்ரீ** என்பது ஏதோ, அதைப் படித்த உடனேயே முக்தி தரக்கூடிய மந்திரம் அன்று, மாறாக சமர்ப்பணத்தை வெளிப்படுத்துகின்ற சந்தமாகும். மூன்று முறை ஆன்மீகப் பாதையில் இருந்து வழித்தவறிப் போய்விட்ட பிறகு, விஸ்வாமித்திர ரிஷியானவர் தமது இஷ்ட தெய்வத்திடம் தம்மை முழுவதுமாகச் சமர்ப்பணம் செய்தபடியே – **ஓம் பூர் புவ : ஸ்வ : தத் ஸவி துர்வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந : ப்ரசோதயாத்** – அதாவது, **பூ :, புவ : மற்றும் ஸ்வ :** மூன்று உலகங்களிலும் தத்துவரூபமாக நிறைந்திருக்கும் இறைவா! நீங்கள் ஒருவரே அடையத் தகுந்தவர். நாங்கள் இலட்சியத்தை அடைவதற்கு ஊக்கத்தையும் புத்தியையும் தாருங்கள்! என்று வேண்டினார். இதுவொரு பிரார்த்தனை மட்டுமே ஆகும். சாதகன் தன்னுடைய புத்தியால், நாம் எப்பொழுது சரியாகச் செயல்படுகிறோம்? எப்பொழுது தவறாகச் செயல்படுகிறோம்? என்ற யதார்த்த நிர்ணயம் செய்ய இயலாதவனாக இருக்கிறான். அவனுடைய இந்தச் சமர்ப்பண பிரார்த்தனையும் நான்தான். இதன்மூலமாக நிச்சயமாகவே நன்மை விளையும். ஏனெனில், அவன் என்னிடமே அடைக்கலமாகி விட்டான். மாதங்களில்நான் **மார்கழி** ஆவேன். மேலும், எந்தப் பருவத்தில் எப்போதும் வசந்தமோ, அத்தகைய வசந்த ருது, (பூக்கும் காலம்) அதாவது, இதயத்தில் எப்போதும் வசந்தம் பரவியிருக்கும் அந்தப் பருவமாகிய இறைப் பரவச நிலையும் நானேதான்.

**த்யுதம் ச்சலயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்வினாமஹம்**
**ஜயோஸ்மி வ்யவஸாயோஅஸ்மி ஸத்வம் ஸத்வவதாமஹம் (36)**

தேஜஸ்வீ புருஷர்களின் **தேஜ** (தெய்வீக ஒளியும்) நானே! சூதாட்டத்தில் கபடம் செய்பவர்களின் அந்தக் **கபடமும்** நானே! அப்படி என்றால் மிகவும் நல்லதாயிற்றே! சூதாடலாமே! கள்ளம் கபடம் செய்யலாமே அதுவே பகவான்! என்று நினைத்து விடாதீர்கள்! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. இந்த இயற்கை அதாவது படைப்பே ஒரு மாபெரும் சூதாட்டம் ஆகும். அதுவே ஏமாற்று மோகினியாகும். இந்தப் இயற்கையின் இருமைகளில் இருந்து விடுபடுவதற்காக வெளி ஆடம்பரங்களை எல்லாம் விடுத்து, தம்மை மற்றவர்களின் பார்வையில் இருந்து மறைத்துக் கொண்டு இரகசியமாக இறைவழிபாட்டில்

ஈடுபடுவதைத்தான், இங்கே கபடம் என்கிறார். இது வேறு யாரையும் ஏமாற்றுதல் அல்ல, ஆனால், நம்மைக் காப்பாற்றிக் கொள்ள இது மிகவும் அவசியமானது ஆகும். ஜடபரதனைப் போன்று, உன்மத்தனாய், குருடனைப் போன்று, ஊமையைப் போன்று, செவிடனைப் போன்று இதயத்தில் எல்லாம் அறிந்திருந்த போதும், வெளிப் பார்வைக்கு ஒன்றுமறியாத அஞ்ஞானியைப் போல, கேட்டும் கேட்காதவனாக, கண்டும் காணாதவனாக நடந்து கொள்ள வேண்டும். மறைவாக இருந்து கொண்டு இறைவழிபாடு செய்வதற்கே விதிமுறை உள்ளது. அப்போதுதான் சாதகன் பிரகிருதி புருஷன் ஆகியோருக்கு இடையிலான சூதாட்டத்தை வென்று கரைசேரமுடியும். வெற்றி பெற்றவர்களின் **வெற்றி** நானே! மேலும், ஆன்மீகச் செல்வத்தைப் பெருக்குபவர்களின் நிச்சயிக்கப்பட்ட (இரண்டாவது அத்தியாயத்தில் நாற்பத்தி ஒன்றாவது சுலோகத்தில் இதைப் பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது. அதன்படி, இந்த யோகத்தில் நிச்சயிக்கப்பட்ட புத்தி ஒன்றுதான். நிச்சயிக்கப்பட்ட திசையும் ஒன்றுதான்) செயல்முறை புத்தியும் நான்தான்! ஸாத்வீக புருஷர்களின் தெய்வீக ஒளியும் தெய்வீகச் சுடரும் (தேஜஸ், ஓஜஸ்) நானேதான்!

**வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோஅஸ்மி பாண்டவானாம் தனஞ்ஜய :**
**முனீனாமப்யஹம் வ்யாஸ : கவீனாமுனா கவி : (37)**

**வ்ருஷ்ணி** வம்சத்தில் நான் வாஸுதேவன் ஆவேன். அதாவது, எங்கும் வாசம் செய்யும் இறைவன் ஆவேன். பாண்டவர்களில் நான் **தனஞ்ஜயன்** ஆவேன். 'பாண்டு' என்ற சொல் 'புண்ணியம் விழிப்புறுதல்' என்ற பொருளைத் தருகிறது. மேலும், ஆன்மீகச் செல்வமே (தெய்வீக குணங்கள்) நிலையான செல்வமாகும். புண்ணியம் விழிப்புற்ற பிறகு சாதகன் அதனால் தூண்டப்பட்டு ஆன்மீகச் செல்வங்களைப் பெருக்கத் தொடங்குகிறான். இதையே, தனஞ்ஜயன் என்ற சொல் குறிக்கிறது. "தனஞ்ஜயன் நானே!" என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். முனிவர்களில் நான் **வியாஸர்** ஆவேன். பரம தத்துவத்தை வெளிப்படுத்தும் திறன் எந்த முனிவரிடம் உள்ளதோ, அந்த முனிவர் நானேதான். கவிஞர்களில் **உசனா** அதாவது, இறைவனுள் நுழைவு பெற்றுத் தரும் காவியனும் நான்தான்!

**தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம்**
**மௌனஞ் சைவாஸ்மி குஹ்யானாம் ஜ்ஞானம் ஜ்ஞானவதாமஹம் (38)**

புலன்களை அடக்குபவர்களில் புலனடக்க சக்தியும் நானே! வெற்றி பெற விரும்புவர்களின் நீதியும் நானே! இரகசியமாக வைக்கப்படும் தகுதியுடைய உணர்வுகளில் **மௌனம்** என்னும் உணர்வும் நானே! மேலும், ஞானிகளின், இறைவனை நேரடியாக தரிசனம் செய்து சாட்சாத்காரத்துடன் சேர்த்து அறிந்து கொள்ளப்படும் பரிபூரண ஞானமும் நான்தான்!

**யச்சாபி ஸர்வபூதானாம் பீஜம் தத்ஹமர்ஜுன**
**ந ததஸ்தி வினா யத்ஸ்யான்மயா பூதம் சராசரம் (39)**

அர்ஜுனா! மனிதர் உட்பட எல்லா உயிர்களின் உற்பத்திக்குக் காரணமும் நானேதான். ஏனெனில், அசைவன, அசையாதவை, நகர்வன, நகராதவை என்று பல்வேறு வகைப்பட்ட உயிரினங்களில் என்னில் அடங்காதவை என்று எதுவுமே கிடையாது. நான் இங்கிங்கெனாதபடிக்கு நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவன் ஆவேன். அனைத்தும் என்னிலிருந்தே தோன்றுகின்றன.

**நந்தோஸ்தி மம திவ்யானாம் விபூதீனாம் பரந்தப**
**ஏஷ தூத்தேஷத : ப்ரோக்தோ விபூதேர் விஸ்தரோ மயா (40)**

பெருந் தவத்தை உடையவனே! பரந்தபா! அர்ஜுனா! என்னுடைய தெய்வீக மகிமைகளுக்கு முடிவே கிடையாது. என்னுடைய அளவிற்கடங்காத தெய்வீக மகிமைகளைப் பற்றிச் சுருக்கமான வடிவில்தான் கூறியிருக்கிறேன். உண்மையில், அவைகள் அனைத்தும் எண்ணற்றவை.

இந்த அத்தியாயத்தில் தெய்வீக, மகிமைகளில் ஏதோ கொஞ்சம்தான் விளக்கப்பட்டு உள்ளன. ஏனெனில், அடுத்த அத்தியாயத்தில், அர்ஜுனன் இவற்றையெல்லாம் பார்க்க விரும்புகிறான். ஏனெனில், நேரடியாக, கண்கூடாக தரிசனம் செய்தால் மட்டுமே இந்த தெய்வீக மகிமைகளைப் பற்றி நன்கு புரிந்து கொள்ள முடியும். ஆன்ம சிந்தனையின் (தியானத்தின்) தொடரைப் புரிந்து கொள்வதற்காகவே அவற்றிலிருந்து சிறிதளவு விளக்கம் தரப்பட்டுள்ளது.

**யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா**
**தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோஅம்ச ஸம்பவம் (41)**

எவையெவை எல்லாம் பெருமையும் மகிமைகளும் கூடியதாக, கவரும்தன்மை கொண்டதாக, மற்றும் சக்தி படைத்ததாக உள்ளனவோ அந்தப் பொருட்கள் அனைத்துமே என்னுடைய இறைப் பேரொளியின் ஒரு அம்சத்திலிருந்து உண்டானவை என்று அறிந்து கொள்.

**அதவா பஹுனைதேன கிம் ஜ்ஞாதேன தவார்ஜுன**
**விஷ்டப்ப்யாஹமிதம் க்ருத்ஸ்னமேகாம்சேன ஸ்த்திதோ ஜகத் (42)**

அல்லது அர்ஜுனா! இவைகளை மிகுதியாக அறிந்து கொள்வதால் உனக்கு என்ன பயன்? நான் இந்த ஒட்டு மொத்த உலகத்தையும் ஒரு அம்சமாக மட்டுமே தரித்துக் கொண்டிருக்கிறேன்.

மேலே கூறப்பட்டுள்ள தெய்வீக மஹிமைகள் வர்ணனை செய்யப்பட்டதற்கான நோக்கம், நீங்களோ அல்லது அர்ஜுனனோ இந்தப் பொருட்களை எல்லாம் பகவான் என்று கருதிப் பூஜை செய்ய வேண்டும் என்பதற்காக அல்ல, மாறாக, ஸ்ரீகிருஷ்ணர் சொல்ல விரும்புவது இவ்வளவுதான். இவை அனைத்திலும் இருந்து உங்களுடைய நம்பிக்கையை மீட்டுக் கொண்டு வந்து அந்த அழிவற்ற பரமாத்மாவில் நிலை நிறுத்துங்கள். இதைச் செய்தாலே போதும், உங்களுடைய கடமையில் நிறைவு கிடைத்து விடும்.

**முடிவுரை :** –

இந்த அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! நான் உனக்கு மீண்டும் ஒருமுறை உபதேசம் செய்கிறேன். ஏனெனில், நீ எனக்கு மிகவும் பிரியமானவன்" என்கிறார். ஏற்கனவே கூறிவிட்டார். மறுபடியும் கூறப் போகிறார். ஏனென்றால் சாதனை நிறைவு பெறும் காலம்வரை சத்குருவிடமிருந்து கேட்பதற்கான அவசியம் இருந்து கொண்டேயிருக்கிறது. என்னுடைய உற்பத்தியை (பிறவியை) தேவர்களோ மஹரிஷிகளோ, கூட அறியமாட்டார்கள். ஏனெனில், நான் அவர்களுக்கெல்லாம் கூட ஆதிகாரணம் ஆவேன். புலன்உணர்வுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வு நிலையை அடைந்த பிறகு 'உலகின் இறைவன்' **(ஸார்வ பௌம)** என்ற மிகவும் உயர்ந்த நிலையை அடைந்தவர் மட்டுமே அறிந்து கொள்கிறார். எவர் என்னைப் பிறப்பற்றவனாக, தொடக்கமற்றவனாக, மற்றும் அனைத்து உலகங்களின் மாபெரும் கடவுளாக, நேரடியாக தரிசனம் செய்து அனுபவப்பூர்வமாக அறிகிறாரோ, அவரே ஞானி ஆவார்.

புத்தி, ஞானம், சந்தேகமற்ற தெளிவுணர்வு, புலன் கட்டுப்பாடு, மனஅடக்கம், சந்தோஷம் (ஆத்ம திருப்தி), தவம், தானம், மற்றும் புகழ் அதாவது, தெய்வீகச் செல்வங்களுடன் கூடிய இலட்சணங்கள் என்னுடைய திருக் கொடையாகும். ஏழு மஹரிஷிகள், அதாவது, யோகத்தின் ஏழுபடி நிலைகள், அதற்கு முன்பே வருகின்ற, அதையொத்த ஆழ்மனத்தின் நான்கு பிரிவுகள் **அந்தகரண சதுஷ்டயம்** மற்றும் அதற்குச் சாதகமான, தன்னில்தானே சுயம்புவாகத் தோன்றிய, தானே உருவாகின்ற மனம்—இவர்கள் அனைவரும் என்னிலேயே ஒருணர்வுடைய, என்னிலேயே பிடிப்புணர்வுடைய, மற்றும் என்னில் மட்டுமே, நம்பிக்கையுடையவர்கள் ஆவர். இவர்களுடைய இயக்கத்தால்தான் எல்லாக் குடிமக்களும் தோன்றுகின்றனர். இவர்கள் அனைவரும் என்னிடமிருந்துதான் உற்பத்தியாகின்றனர். அதாவது, சாதனை மயமான எண்ணவோட்டங்கள் அனைத்துமே என்னுடைய குடிமக்கள்தாம் (பிரஜைகள்). இவற்றின் உற்பத்தி தானாக உண்டாவதில்லை, ஸத்குருவின் மூலமாகவே உண்டாகின்றன. எவரொருவர் மேலே குறிப்பிடப்பட்டுள்ள என்னுடைய தெய்வீக

மகிமைகளை நேரடியாக உணர்ந்து கொள்கிறாரோ அவர் சந்தேகமேயில்லாமல் என்னுள், ஒருமைப்பட்ட உணர்வுடன் நுழைவு பெறும் தகுதியைப் பெற்று விடுகிறார்.

அர்ஜுனா! நான்தான் அனைத்தின் உற்பத்திக்கும் காரணம் ஆவேன் என்பதை எவர் நம்பிக்கையுடன் அறிந்து கொள்கிறாரோ, அவர் என்னைத் தவிர வேறு எதையும் விரும்பாத உணர்வுடன், என்னையே சிந்தனை செய்து கொண்டிருக்கிறார். நிரந்தரமாக என்னிலேயே மனம், புத்தி, உயிர் இம்மூன்றையும் செலுத்துபவராகிறார். மற்றவர்களிடம் என்னுடைய தெய்வீகக் குணங்களைப் பற்றி மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டும் என்னிலேயே விரும்பி ஈடுபட்டுக் கொண்டும் இருக்கிறார். அந்த, நிரந்தரமாக, என்னுடன் இணைந்துள்ளவருக்கு யோகத்தில் நுழைவு பெறுகின்ற புத்தியை (அறிவை) நான் தருகிறேன். இதுவும் என்னுடைய திருக்கொடைதான். எந்த முறையில் புத்தி யோகத்தைத் தருகிறார்? என்றால், "அர்ஜுனா! **ஆத்ம பாவஸ்த –** அவனுடைய ஆன்மாவில் எழுந்தருளி சாரதியாகிறேன். மேலும், அவனுடைய இதயத்தில் படிந்துள்ள அஞ்ஞானத்தால் தோன்றிய அந்தகாரத்தை (ஆழ்ந்த இருளை) ஞானம் என்னும் தீபத்தால் அழித்து விடுகிறேன்" என்று பதிலுரைக்கிறார்.

அர்ஜுனன் ஒரு கேள்வியை எழுப்பினான் : பகவான்! நீங்கள் பரம பவித்திரமானவர், என்றென்றும் நிலையானவர், மாறாதவர், திவ்ய புருஷர், தொடக்கம் என்பதே இல்லாதவர் மற்றும் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர் என்று பண்டைய மஹரிஷி கணங்கள் கூறுகிறார்கள். மற்றும் இக்காலத்தைய (அர்ஜுனனின் சமகாலத்தவர்) தேவரிஷி நாரதர், தேவல், வியாஸர் மற்றும் நீங்களும் கூட அதையேதான் கூறுகிறீர்கள். உங்களை தேவர்களும் தானவர்களும் (அசுரர்) அறியமாட்டார்கள் என்பது உண்மையும் கூடத்தான். நீங்கள் யாரை அறியச் செய்கிறீர்களோ, அவரே அறிந்து கொள்கிறார். நீங்கள்தான் உங்களுடைய தெய்வீக மகிமைகளைப் பற்றிக் கூறும் சாமர்த்தியம் உடையவர். எனவே, ஜனார்த்தனா, நீங்களே உங்களுடைய தெய்வீக மகிமைகளை விபரமாகக் கூறுங்கள். சாதனை முடிவுபெறும் காலம்வரை இஷ்ட தெய்வத்திடமிருந்து (ஸத்குரு) கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பும் ஆர்வமும் இருந்து கொண்டேயிருக்க வேண்டும். மேலும், இஷ்ட தெய்வத்தின் அகத்தில் என்ன இருக்கிறது என்பதைப் பற்றிச் சாதகனுக்கு என்ன தெரியும்?

இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தம்முடைய எண்பத்தியோரு தெய்வீக மகிமைகளை ஒவ்வொன்றாகச் சுருக்கமான அளவில் கூறினார். இவற்றிலிருந்து கொஞ்சம் யோக சாதனையில் நுழைவு பெற்றதுடன் சேர்த்துக் கிடைக்கின்ற அந்தரங்க தெய்வீக மகிமைகளைப் பற்றிய விளக்கமாகும். மேலும்,

மீதமுள்ளவைகளில் கொஞ்சம் சமுதாயத்தில் **ரித்திகள்** மற்றும் **சித்திகளுடன்** சேர்த்து அடையப்படுகின்ற தெய்வீக மகிமைகளைப் பற்றிய விளக்கமாகும். மேலும், அவர் கடைசியில் உறுதிப்படுத்தும் விதமாக "அர்ஜுனா! நிறைய தெரிந்து கொள்வதால் உனக்கு என்ன பயன்? இந்த உலகத்தில் எதுவெல்லாம் தெய்வீக ஒளியும், மகிமையும் பொருந்திய பொருட்களாக இருக்கின்றனவோ, அவை அனைத்தும் என்னுடைய தெய்வீக ஒளியின் வெறும் ஒரு அம்சத்திலேயே அடங்கியுள்ளன. உண்மையில், என்னுடைய தெய்வீக மகிமைகளோ எண்ணிலடங்காதவை" என்கிறார். இவ்வாறு கூறியபடியே யோகேஷ்வரர் இந்த அத்தியாயத்தை முடிவுக்குக் கொண்டு வந்தார்.

இந்த அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணரானவர் தம்முடைய தெய்வீக மகிமைகளைப் பற்றிய உலகியல் சார்ந்த விளக்கம் மட்டும் தந்தார். அதன்மூலம், அர்ஜுனனுடைய நம்பிக்கை எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு இஷ்ட தெய்வத்திடம் (ஸத்குரு) மட்டுமே நிலைபெறட்டும் என்பதே அவருடைய விருப்பமாகும். ஆனால், சகோதரர்களே! அனைத்தையும் கேட்டறிந்து கொண்ட பிறகும், நன்றாக அலசி ஆராய்ந்து வெறும் அறிவு நிலையில் புரிந்து கொண்ட பிறகும்கூட, ஆன்மீகப் பாதையில் முன்னேறிச் சென்று அவற்றையெல்லாம் சொந்த அனுபூதியில் நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வது என்னவோ அப்படியே மீதமுள்ளது. இது முழுக்க, முழுக்க செயல்முறைப் பாதையாகும்.

இந்த அத்தியாயம் முழுவதும் 'யோகேஷ்வரரின் தெய்வீக மகிமைகள்' பற்றிய வர்ணனையே இடம் பெற்றுள்ளது. அத்துடன்,

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே விபூதி வர்ணனம் நாம தசமோத்த்யாய:–**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'விபூதி வர்ணனம்' அதாவது 'யோகேஷ்வரரின் தெய்வீக மகிகைகள்' என்ற பெயருடைய பத்தாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா : யதார்த்த கீதா பாஷ்யே விபூதி வர்ணனம் நாம தசமோத்த்யாய :**

ஹரி : ஓம் தத்ஸத்

இது போன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'விபூதி வர்ணனம்' அதாவது 'யோகேஷ்வரரின் தெய்வீக மகிமைகள்' என்ற பெயருடைய பத்தாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத் ஸத்

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :
## பதினோராவது அத்தியாயம்

கடந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தம்முடைய மிகவும் முக்கியமான தெய்வீக மகிமைகளின் சுருக்கமான விபரத்தைக் கூறினார். ஆனால், அர்ஜுனனுக்கோ அதுவே மிகவும் விரிவாகக் கேட்டது போல் இருந்தது. அவன் ஸ்ரீகிருஷ்ணரிடம், "உங்களுடைய பேச்சைக் கேட்டதால் என்னுடைய அனைத்து மோகங்களும் அழிந்து விட்டது. ஆனால், நீங்கள் கூறியவற்றையெல்லாம் நான் நேரடியாகக் காண விரும்புகிறேன்" என்று வேண்டினான். கேட்பதற்கும் பார்ப்பதற்கும் கிழக்கு மற்றும் மேற்கு திசைகளுக்கு இடையில் உள்ளதைப் போன்ற வேறுபாடு உள்ளது. நேரில் சென்று பார்க்கும் போது விஷயம் (உண்மைநிலை) வேறு விதமாகக் தெரிகிறது. அர்ஜுனன் அந்த வடிவத்தை, கண்டதுமே நடுநடுங்கி விட்டான்; மன்னிப்புக் கோரலானான். ஞானி பயத்திற்கு ஆளாவானா என்ன? அவனுக்கு எதையாவது அறிந்து கொள்ளும் ஆர்வம் இருக்குமா என்ன? "இல்லை" உலகியல் வரையிலான அறிவு எப்போதுமே மங்கலாகவே இருக்கிறது. ஆம்! ஆனால், அதேதான் யதார்த்தத்தை அறிந்து கொள்வதற்கான தூண்டுணர்ச்சியையும் அவசியம் தருகிறது. எனவேதான் அர்ஜுனன் வேண்டினான்.

**அர்ஜுன உவாச்ச**
**மதனுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்மஸம்ஜ்ஞிதம்**
**யத்வயோக்தம் வசஸ்தேன மோஹோஅயம் விகதோ மம (1)**

பகவானே! எனக்கு அருள் புரிவதற்காக, உங்கள் மூலமாக எந்த மறைபொருள் இரகசியமான ஆன்மீகத்தில் நுழைவு பெற்றுத் தரவல்ல உபதேசம் சொல்லப்பட்டதோ! அதனால் என்னுடைய அஞ்ஞானம் அழிந்து விட்டது. நான் ஞானியாகி விட்டேன்.

**பவாப்யயௌ ஹி பூதானாம் ச்ருதௌ விஸ்தரஷோ மயா**
**த்வத்த : கமலபத்ராக்ஷ மஹாத்ம்யமபி சாவ்யயம் (2)**

ஏனெனில், தாமரை இதழ்களைப் போன்ற விழிகளை உடையவரே! நான் உயிர்களின் உற்பத்தி மற்றும் அவற்றின் அழிவு (பிரளயம்) பற்றி உங்கள் மூலமாக விரிவான முறையில் கேட்டுணர்ந்தேன். மேலும், உங்களின் அழிவற்ற வல்லமையைப் பற்றியும் கேட்டறிந்து கொண்டேன்.

**ஏவமேதத்யதாத்த த்வமாத்மானம் பரமேச்வர**
**த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைஷ்வரம் புருஷோத்தம (3)**

ஹே! பரமேச்வரரே! நீங்கள் உங்களைப் பற்றி எவ்வாறு கூறுகிறீர்களோ அவ்வாறேதான் இருக்கிறீர்கள். இதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால், நான் அதைக் கேட்க மட்டுமே செய்துள்ளேன். ஆகவே, புருஷோத்தமரே! அந்த தெய்வீக மகிமைகள் பொருந்திய, உங்களுடைய ஆன்ம வடிவத்தை நேருக்கு நேராக தரிசனம் செய்ய விரும்புகிறேன்.

**மன்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ**
**யோகேஷ்வர ததோ மே த்வம் தர்ஷயாத்மானமவ்யயம் (4)**

பிரபுவே! உங்களுடைய அந்த ஆன்ம வடிவத்தை என்னால் காண்பது என்பது சாத்தியம் என்று ஒருவேளை நீங்கள் கருதுவீர்களேயானால் யோகேஷ்வரரே! நீங்கள் உங்களுடைய அழிவற்ற ஆன்ம வடிவத்தை எனக்குக் காட்டியருளுங்கள். இதற்கு யோகேஷ்வரர் எந்தவிதமான எதிர்க் கருத்தும் கூறவில்லை. ஏனெனில், இதற்கு முன்பும் பல்வேறு இடங்களில் அவர் அர்ஜுனனைத் தம்முடைய நிலைத்த பக்தனாகவும் பிரியமான தோழனாகவும் அழைத்து வந்திருக்கிறார். எனவே, அவர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தவராகத் தம்முடைய ஆன்ம வடிவத்தைக் காட்டினார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**பச்ய மே பார்த்த ரூபாணி ஷதஷோஅத ஸஹஸ்த்ரஷ :**
**நானாவிதானி திவ்யானி நானாவர்ணாக்ருதீனி ச (5)**

பார்த்தனே! என்னுடைய நூற்றுக்கணக்கான மற்றும் ஆயிரக்கணக்கான, பல்வேறு வகைகள் மற்றும் பல்வேறு நிறங்கள் மற்றும் தோற்றங்களையுடைய அற்புதமான, (தெய்வீகமான) வடிவத்தைப் பார்.

**பச்யாதித்யான்வஸூன்ருத்ரானஷ்வினௌ மருதஸ்ததா**
**பஹூன்யத்ருஷ்டபூர்வாணி பஷ்யாஷ்சர்யாணி பாரத (6)**

ஹே பாரதா! அதிதியின் பன்னிரண்டு புத்திரர்கள், எட்டு வசுக்கள், பதினோரு ருத்திரர்கள், இரண்டு அஸ்வினி குமாரர்கள், மற்றும் நாற்பத்தி ஒன்பது **மருத்கணங்கள்** ஆகியோர்களைப் பார். மற்றும் இதற்கு முன்பு நீ ஒருபோதும் பார்த்திராத மற்றபிற பல்வேறு ஆச்சரியத்திற்குள்ளாக்கும் உருவங்களைப் பார்.

**இஹைகஸ்த்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பச்யாத்ய ஸச்சராசரம்**
**மம தேஹே குடாகேஷ யச்சான்யத்த்ரஷ்டுமிச்சஸி (7)**

அர்ஜுனா! இப்பொழுது என்னுடைய இந்த சரீரத்தில் ஒரே இடத்தில் அடங்கியுள்ள அசைவன, அசையாதவை, மற்றும் நகர்வன, நகராதவை, என்று

அனைத்தையும் சேர்த்து ஒட்டு மொத்த உலகத்தையும் பார். மேலும், வேறு எதையெல்லாம் பார்க்க விரும்புகிறாயோ, அவற்றையெல்லாம் பார்.

இந்த முறையில், மூன்று சுலோகங்கள் வரையிலும், பகவான் தொடர்ந்து தமது ஆன்ம வடிவத்தைக் காட்டிக் கொண்டே இருந்தார். ஆனால், அர்ஜுனனுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. அவன் கண்களைக் கசக்கிக் கொண்டிருந்தான். எனவே தமது ஆன்ம வடிவத்தைக் காட்டிக் கொண்டிருந்த பகவான் திடீரென்று நிறுத்தியபடியே கூறினார் :

**ந து மாம் ஷக்யஸே த்ரஷ்டுமனேனைவ ஸ்வசக்ஷுஷா**
**திவ்யம் ததாமி தே சக்ஷு: பஷ்ய மே யோகமைஷ்வரம் (8)**

அர்ஜுனா! நீ என்னை உன்னுடைய கண்கள் மூலமாக, அதாவது, ஊனக் கண் கொண்டு (அறிவு நிலைவரை மட்டுமே செயல்படும் உலகியல் கண்ணோட்டம்) பார்க்க முடியாது. எனவேதான், நான் உனக்கு தெய்வீக, அதாவது, தெய்வீகப் பார்வையை (உலகியலுக்கு அப்பாற்பட்ட கண்ணோட்டம்) அளிக்கிறேன். அதன்மூலமாக நீ என்னுடைய சர்வ வல்லமை மற்றும் யோக சக்தியைப் பார்.

இங்கே, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் திருவருளால் அர்ஜுனனுக்கு அதே தெய்வீகப் பார்வை கிடைத்தது. அதன்மூலம், அவன் பார்க்கத் தொடங்கினான். மேலும், அங்கே, யோகேஷ்வரர் வியாஸருடைய அருளால் அதே தெய்வீகப் பார்வை சஞ்ஜயனுக்கும் கிடைக்கப் பெற்றிருந்தது. அர்ஜுனன் எதையெல்லாம் பார்த்தானோ, அதையே சஞ்ஜயனும் பார்த்தான். மேலும், அந்த தெய்வீக காட்சியினால் கிடைத்த அருட்தாக்கத்தை உணர்ந்து தன்னைப் பெரும் பாக்கியசாலியாகவும் கருதி மகிழ்ந்தான். இதிலிருந்து, ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகிக்குச் சமமானவர் என்பது தெளிவாகிறது.

**சஞ்ஜய உவாச்ச**
**ஏவமுக்த்வா ததோ ராஜன்மஹாயோகேஷ்வரோ ஹரி :**
**தர்ஷயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் (9)**

சஞ்ஜயன் கூறினான் – ஹே ராஜனே! மஹாயோகேஷ்வரராகிய ஹரி இவ்வாறு கூறியபடியே பார்த்தனுக்குத் தம்முடைய மேலான, தெய்வீக மகிமைகள் பொருந்திய திவ்ய வடிவத்தைக் காட்டினார். எவர் தாமும் யோகியாக இருந்து கொண்டு, மற்றவர்களுக்கும் யோகத்தை அளிக்கும் திறன் உடையவரோ, யோகத்திற்கு அதிபதியோ அவரே 'யோகேஷ்வரர்' என்று அழைக்கப்படுகிறார். இதே முறையில், அனைத்தையும் அழிப்பவர் எவரோ, அவரே 'ஹரி' எனப்படுகிறார்.

ஒருவேளை துன்பங்களை மட்டும் அழித்து விட்டு, இன்பங்களை அப்படியே விட்டுவிட்டால், அவற்றால் மீண்டும் துன்பங்கள் வந்து சேர்ந்து கொள்ளும். எனவே, எல்லாப் பாவங்களையும் அழித்த பிறகு, அத்துடன் சேர்த்தே எல்லாப் புண்ணியங்களையும் அழித்து அதாவது, அனைத்தையும் அழித்து, தம்முடைய ஆன்ம வடிவத்தை அளிக்க வல்லவரே 'ஹரி' ஆவார். அவர் பார்த்தனுக்குத் தம்முடைய திவ்விய ஆன்ம வடிவத்தைக் காட்டினார். அவரும் அவனுக்கு எதிரில் தானே நின்று கொண்டிருந்தார்.

**அநேக வக்த்ர நயன மநேகாத்புத தர்சனம்**
**அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் (10)**

அநேக வாய்கள் மற்றும் கண்களுடன் கூடியவரும் அநேக அற்புதமான காட்சிகளை உடையவரும் அநேக தெய்வீகமயமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும் மற்றும் அநேக அற்புதமான ஆயுதங்களைக் கைகளில் ஏந்தியவரும் – மேலும்

**திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தானுலேபனம்**
**ஸர்வாச்சர்யமயம் தேவமனந்தம் விஷ்வதோமுகம் (11)**

அற்புதமான மாலைகள் மற்றும் ஆடைகள் அணிந்தவரும் அற்புதமான மணம் கமழும் நறுமணங்களைப் பூசியவரும் எல்லா விதத்திலும் ஆச்சரியப்படத்தக்க, எல்லையற்ற, எங்கும் பரவியிருக்கும் ஆன்ம வடிவமாகிய பரமதேவரை தெய்வீகப் பார்வை கிடைக்கப் பெற்ற அர்ஜுனன் பேருருவத்தில் (விஸ்வருபம்) கண்டான்.

**திவி ஸூர்யஸஹஸ்த்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா**
**யதி பா : ஸத்ருசீ ஸா ஸ்யாத்பாஸஸ்தஸ்ய மஹாத்மன : (12)**

(அஞ்ஞானத்தின் உருவமான திருதராஷ்டிரன்; மனஅடக்கம், புலன் கட்டுப்பாடு ஆகியவற்றின் உருவமான சஞ்ஜயன் – இதைப் பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டு உள்ளது.) சஞ்ஜயன் கூறினான் – ராஜனே! ஆகாசத்தில் ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர்கள் உதயமானால் எத்தனை பிரகாசம் உண்டாகுமோ, அதுவும்கூட, பேருருவைக் காட்டும் அந்த மகாத்மாவின் பிரகாசத்துடன் ஒப்பிட்டு நோக்குவதற்குத் தகுதியுடையதுதானோ! இங்கே, யோகேஷ்வரர் என்று அறியப்பட்ட அதே கிருஷ்ணரைத்தான் 'மகாத்மா' என்றும் அறிகிறோம்.

**தத்ரைகஸ்த்தம் ஜகத்க்ருத்ஸ்னம் ப்ரவிபக்தமனேகதா**
**அபஷ்யேத்தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா (13)**

பாண்டுவின் மைந்தனாகிய அர்ஜுனன் (புண்ணியமே பாண்டு

எனப்படுகிறது. புண்ணியமே (இறைப்பற்றையும்) ஆர்வத்தையும் பிறப்பிக்கின்றது) அந்தச் சமயத்தில் பல்வேறு முறைகளில் பிரிக்கப்பட்டுள்ள ஒட்டு மொத்த உலகத்தையும் அந்தப் பரம தெய்வத்தின் உடலில், ஒரே இடத்தில் அடங்கியிருப்பதைக் கண்டான்.

**தத : ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜய :**
**ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்சலிரபாஷத (14)**

இதற்குப் பிறகு, வியப்பு மிகுந்தவனாக, மெய்சிலிர்த்தவனாக, (மயிர்க்கூச்செரிந்தவனாக) அர்ஜுனன், பரமாத்ம தெய்வத்தை தலை வணங்கி, நமஸ்கரித்து (இதற்கு முன்பும் நமஸ்காரம் செய்துள்ளான். ஆனால், ஸ்ரீகிருஷ்ணரின் தெய்வீக வல்லமையைக் கண்ட பிறகு, நெடுஞ்சாண் கிடையாகத் தரையில் விழுந்து வணங்கி நமஸ்கரித்தான்) கைகூப்பித் தொழுதான். இங்கே அர்ஜூனன் அகத்தளவிலும் நமஸ்காரம் செய்தான் மேலும் கூறலானான்.

**அர்ஜுன உவாச்ச**
**பச்யாமி தேவான்ஸ்தவ தேவ தேஹே**
**ஸர்வான்ஸ்ததா பூதவிஶேசசங்கான்**
**ப்ரஹ்மாணமீஷம் கமலாஸனஸ்த்த**
**ம்ருஷீம்ச்ச ஸர்வானுரங்காஷ்ச்ச திவ்யான் (15)**

தேவனே! உங்களுடைய சரீரத்தில் நான் அனைத்து தெய்வங்களையும் மற்றும் மனிதர் உட்பட உயிரினங்களின் சமுதாயத்தையும், தாமரை மலராசனத்தில் அமர்ந்துள்ள பிரம்மாவை, மஹாதேவரை, எல்லா ரிஷிகளையும் மற்றும் தெய்வீகமான சர்ப்பங்களையும் காண்கிறேன். இது நேருக்கு நேராகக் கிடைத்த தரிசனம் ஆகும். எதுவும் வெற்றுக் கற்பனை இல்லை. ஆனால், இது எப்போது சாத்தியமென்றால், யோகேஷ்வரரும், பூரணத்துவ நிலையை அடையப் பெற்றவருமாகிய மகாபுருஷர், எப்பொழுது இதயத்தில் எழுந்தருளி இந்த தெய்வீகப் பார்வையை அளிக்கிறாரோ, அப்போது மட்டுமேயாகும். இது சாதனை செய்து அடையப் பெறுவதாகும்.

**அநேகபாஹுதரவக்த்ரநேத்ரம்**
**பஷ்யாமி த்வாம் ஸர்வதோஅனந்தருபம்**
**நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம்**
**பஷ்யாமி விஷ்வேஷ்வர விஷ்வரூப (16)**

உலகின் நாயகரே! நான் உங்களை பற்பல கைகள், வயிறுகள், முகங்கள் மற்றும் கண்களுடன் கூடியவராகவும் மற்றும் திரும்பிய பக்கமெல்லாம் எண்ணற்ற

உருவங்கள் தாங்கியவராகவும் காண்கிறேன். உலகவடிவே! நான் உங்களுடைய முதல், இடை, கடைசியைக் காணமுடியாதவனாக இருக்கிறேன். அதாவது, உங்களுடைய ஆரம்பம், நடுநிலை, முடிவு ஆகியவற்றை எல்லாம் தீர்மானம் செய்ய முடியாதவனாக இருக்கிறேன்.

**கிரீடினங் கதினம் சக்ரிணம் ச**
**தேஜோராஷிம் ஸர்வதோ தீப்திமந்தம்**
**பஷ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தா**
**தீப்தானலார்க்கத்யுதிம் அப்ரமேயம் (17)**

நான் உங்களை மகுடம் தரித்தவராகவும், கதை ஏந்தியவராகவும், சக்கரத்தை உடையவராகவும், திரும்பிய பக்கமெல்லாம் பிரகாசிக்கின்ற, ஒளிப் பிழம்பாக ஜொலிக்கின்ற வடிவமாகவும், கொழுந்து விட்டெரிகின்ற அக்கினி மற்றும் சூரியனுக்கு ஒப்பாகக் காண்பதற்குக் கூசுகின்ற, அதாவது, மிகவும் கடினப்பட்டுதான் காணமுடிகின்றவராகவும், மற்றும், திரும்பிய பக்கமெல்லாம் புத்தி முதலியவற்றால் உணர முடியாதவராகவும், அளவிட முடியாதவராகவும் காண்கிறேன். இம்முறையில், மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் பரிபூரணமாகச் சமர்ப்பித்து, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் இந்த வடிவத்தைக் கண்டு அர்ஜுனன் அவரைப் புகழ்ந்து பாடலானான்.

**த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்**
**த்வமஸ்ய விஷ்வஸ்ய பரம் நிதானம்**
**த்வமவ்யய : சாஷ்வததர்மகோப்தா**
**ஸனாதனஸ்த்வம் புருஷோ மதோ மே (18)**

பகவானே! நீங்கள் அறியத் தகுந்த, மிகவுயர்ந்த, அழிவற்ற புருஷர், அதாவது, குறைவற்ற, அழிவு என்பதே இல்லாத பரமாத்மா ஆவீர். நீங்களே இந்த உலகிற்கு மேலான அடைக்கலம் ஆவீர். நீங்கள்தான் என்றும் நிலையான தர்மத்தின் ரட்சகர் மற்றும் நீங்களே அழிவற்ற, என்றுமுள்ள ஸனாதன புருஷர் ஆவீர். இதுவே என்னுடைய உறுதியான கருத்தாகும். ஆன்மாவின் வடிவம் என்ன? ஆன்மா என்றும் நிலையானதும், என்றும் உள்ளதும். புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்பட்டதும், அழிவற்றதும் ஆகும். இங்கே, ஸ்ரீகிருஷ்ணருக்கு என்ன வடிவம் சொல்லப்படுகிறது? அதாவது, என்றும் நிலையானவர், என்றும் உள்ளவர், அழிவில்லாதவர், ஒருபோதும் அழிவற்றவர் எனப்படுகிறார். அதாவது, இறைவனை அடைந்த பிறகு, மகாபுருஷரும் அதே ஆன்ம உணர்வில் (ஆத்ம பாவம்) நிலைபெற்று விடுகிறார். ஆகையால்தான் பகவானும், ஆன்மாவும் ஒரே இலட்சணத்தை உடையவர்கள் என்றாகும்.

**அனாதி மத்யாந்தமனந்தவீர்ய**
**மனந்தபாஹும் ஷஷிசூர்ய நேத்ரம்**
**பஷ்யாமி த்வாம் தீப்தஹுதாசவக்த்ரம்**
**ஸ்வதேஜஸா விஷ்வமிதம் தபந்தம் (19)**

பரமாத்மனே! நான் உங்களை முதல், இடை, முடிவு ஆகியவை இல்லாதவராக எண்ணற்ற சாமர்த்தியங்களுடன் கூடியவராக, எண்ணற்ற கைகளை உடையவராக, (இதற்கு முன்பு 'ஆயிரம்' என்று சொல்லப்பட்டது. இப்போது எண்ணற்ற என்று சொல்லப்படுகிறது) சந்திரன் மற்றும் சூரியனைப் போன்ற கண்கள் உடையவராக, (அப்படியென்றால் பகவான் மாறு கண் உடையவர் என்றா இதற்குப் பொருள் கொள்வது? ஒரு கண் சந்திரனைப் போன்று குறைந்த வெளிச்சம் உடையதாகவும் மற்றொரு கண் சூரியனைப் போன்று முழுமையான வெளிச்சம் உடையதாகவும் மாறுபட்டு இருக்கிறது என்பதா இதற்குப் பொருள்? அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது. சூரியனைப் போன்று சமமான வெளிச்சம் தருவது, சந்திரனைப் போன்று குளிர்ச்சியைத் தருவது ஆகிய தெய்வீகக் குணங்கள் பகவானுக்கு உண்டு என்பதே இதற்குச் சரியான பொருள் ஆகும். ஆகவே சந்திரன், சூரியன் ஆகியவை வெறும் உருவகங்கள் மட்டுமேயாகும். அதாவது சந்திர, சூரியரைப் போன்ற பார்வையை உடையவர்). மற்றும் கொழுந்து விட்டெரியும் அக்கினியைப் போன்று முகம் உடையவராக மற்றும் உங்களுடைய தேஜஸால் (தெய்வீக ஒளியினால்) இந்த உலகத்தையே வாட்டுபவராகவே காண்கிறேன்.

**த்யாவாப்ருதிவ்யோரிதமந்தரம் ஹி**
**வ்யாப்தம் த்வயைகேன திஷஸ்ச்ச ஸர்வா :**
**த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம் லோகத்ரயம் ப்ரவ்யதிதம்**
**மஹாத்மன் (20)**

மகாத்மனே! **அந்தரிக்ஷம்** (வானவெளி) மற்றும் பூமி ஆகியவற்றிற்கு நடுவில் உள்ள ஒட்டு மொத்த ஆகாயம் மற்றும் எல்லாத் திசைகளும் உங்களிடமே பரிபூரணமாக நிறைந்துள்ளன. உங்களுடைய இந்த அற்புதமான மற்றும் தெய்வீகமான, பயங்கரமான வடிவத்தைப் பார்த்து மூன்று உலகங்களுமே பயத்தால் பெருமளவு கலக்கமுற்றுள்ளன.

**அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விசந்தி**
**கேசித்பீதா : ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி**
**ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்த ஸங்கா :**
**ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி : புஷ்கலாபி : (21)**

அந்த தேவதை மற்றும் – தெய்வங்களின் சமூகம் உங்களுக்குள் நுழைகின்றன. மற்றும் இன்னும் ஒரு சிலரோ பயத்தால் நடுநடுங்கியவாறே கைகளைக் கூப்பி வணங்கியபடியே உங்களுடைய தெய்வீக குணங்களையெல்லாம் புகழ்ந்து பாடுகின்றனர். மகரிஷி மற்றும் சித்தர்களின் சமுதாயம் வாழ்த்தும் வகையில் உரைக்கப்படும் அருள்மொழிகளை, அதாவது, வாழ்த்தொலியாக, நன்மை உண்டாவதாகுக! என்று கூறியபடியே முழுமையான துதிப் பாடல்களின் மூலமாக (ஸ்தோத்திரங்கள்) உங்களை வாழ்த்துகின்றனர்.

**ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா**
**விஷ்வேஷ்விளெள மருதஷ்ச்சோஷ்மபாஷ்ச்ச**
**கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா**
**வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஷ்ச்சைவ ஸர்வே (22)**

**ருத்ரர், ஆதித்யர், வஸு, ஸாத்யர், விச்வதேவர், அஸ்வினி குமாரர், வாயுதேவர்** மற்றும் **உஷ்மபா** – தெய்வீக மகிமையின் உஷ்ணத்தைக் கிரகிப்பவர், மற்றும் கந்தர்வர், யட்சர், ராட்சசர் மற்றும் சித்தர்களின் சமுதாயம் என்று அனைவருமே ஆச்சரியத்துடன் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அதாவது, பார்த்தபோதும் கூட உங்களைப் பற்றி அறிந்து கொள்ள முடியாமல் இருக்கிறார்கள். ஏனெனில், அவர்களிடம் அந்த தெய்வீகப் பார்வை என்பது இல்லை. ஸ்ரீகிருஷ்ணர் முன்பே கூறியது போன்று, அசுர குணங்களை இயல்பாகக் கொண்டவர்கள் என்னைத் துச்சமாக எண்ணியே அழைக்கிறார்கள். அவர்கள் என்னைச் சாதாரண மனிதன் என்றே கருதுகின்றனர். ஆனால், நானோ இறைப் பேருணர்வில் (பரமபாவம்) நிலைபெற்றவனும் பரமேச்வர வடிவத்தில் உறுதியாக நிலைத்தவனும் ஆவேன். அப்படி இருந்தபோதிலும், நான் மனித உடலையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறேன். அதைப் பற்றிய விரிவான விளக்கம்தான் இங்கே, 'அவர்கள் எல்லாம் ஆச்சரியத்துடன் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்' எனப்படுகிறது. உண்மைநிலையை அவர்களால் அறிந்து கொள்ள இயலவில்லை. அதாவது, 'பார்த்தும் பார்க்கவில்லை' என்பதே இதற்குப் பொருள்.

**ரூபம் மஹத்தே பஹுவக்த்ர நேத்ரம்**
**மஹாபாஹோ பஹுபாஹுருபாதம்**
**பஹுதரம் பஹு தம்ஷ்ட்ராகராலம்**
**த்ருஷ்ட்வா லோகா : ப்ரவ்யதிதாஸ்ததாஹம் (23)**

பெருந்தோள்களை உடையவரே! (மஹாபாஹோ) (ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜுனன் இருவருமே வலிமை மிக்க, பெருந்தோள்களை உடையவர், அதாவது, 'மஹாபாஹு'

என்று அழைக்கப்படுகிறார்கள். இயற்கை அதாவது, படைப்பிற்கு எல்லாம் அப்பாற்பட்ட மேலான, இறைவன் எனும் உயர்நிலையில் இருந்து கொண்டு காரியங்களை ஆற்றும் வல்லமை யாருக்கு இருக்கிறதோ, அவரே வலிமை மிக்க, பெருந்தோள்களை உடையவர் (மஹாபாஹூ) எனப்படுகிறார். ஸ்ரீகிருஷ்ணர் அந்த மகோன்னதமான இறைநிலையில் முழுமையாக நிலைப்பெற்றுள்ளவர்; எல்லைக் கோட்டின் இறுதி விளிம்பில் நிற்பவர். அர்ஜூனனோ அந்த எல்லைக் கோட்டின் ஆரம்பப் புள்ளியில், நுழைவு பெற்ற நிலையில் இருப்பவன். அதாவது மார்க்கத்தில், பாதையில் இருப்பவன். இறுதி விளிம்பு என்பதும் ஒருவகையில் ஆரம்பப் புள்ளியின் மற்றொரு பக்கம்தானே!) பெருந்தோள்களை உடையவரே! யோகேஷ்வரரே! உங்களை அநேக முகங்கள், கண்கள், அநேக கைகள், தொடைகள், கால்கள், வயிறுகள், அநேகக் கொடூரமான நீண்ட பற்களைக் கொண்டவருமாகிய மாபெரும் உருவத்தைப் பார்த்து அனைவரும் திகைத்துப் போயுள்ளனர். மேலும் நானும்கூட திகைத்து நிற்கிறேன். இப்போது, 'ஸ்ரீகிருஷ்ணர் எவ்வளவு பெரிய மஹான்'! என்றெண்ணியபடியே அர்ஜுனன் பயங் கொள்ளத் தொடங்குகிறான்.

**நப : ஷ்ப்ருஷம் தீப்தமனேகவர்ணம்**
**வ்யாத்தானனம் தீப்தவிஷால நேத்ரம்**
**த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா**
**த்ருதிம் ந விந்தாமி ஷமம் ச விஷ்ணோ (24)**

அகில உலகம் முழுவதும் அணு வடிவில் நீக்கமற நிறைந்துள்ளவரே! விஷ்ணுவே! ஆகாசத்தைத் தொடுமளவிற்குப் பிரகாசம் உடையவராகிய, அநேக உருவங்களை உடையவராகிய, விரிந்து, பரந்த முகங்கள் மற்றும் ஒளிமயமான அகன்ற கண்களுடன் கூடியவராகிய உங்களைப் பார்த்து இனம் புரியாத பயம் கொண்டுள்ள ஆழ்மனதை (அந்தகரணம்) உடைய நான் தைரியம் மற்றும் மனத்தின் சமாதான நிலை எனப்படும் அமைதியைப் பெற முடியாதவனாக உணர்கிறேன்.

**தம்ஸ்ட்ராகராலானி ச தே முகானி**
**த்ருஷ்டைவ காலானலஸன்னிபானி**
**திஷோ ந ஜானே ந லபே ச ஷர்ம**
**ப்ரஸீத தேவேஷ ஜகந்நிவாஸ (25)**

உங்களைக் கொடூரமான பற்களை உடையவராக மற்றும் **காலாக்னிக்குச்** சமமாகக் (காலனுக்கும் அக்கினியைப் போன்றவர்தான் பரமாத்மா) கொழுந்து விட்டெரியும் முகங்களை கண்டு நான் திசைகளை அறிந்து கொள்ள முடியாமல்

திக்குமுக்காடுகிறேன். நாலாப் பக்கங்களிலும் பரவியுள்ள வெளிச்சத்தால் திசைகளைக் கண்டு கொள்வதில் பிரமை ஏற்படுகிறது. உங்களுடைய இந்த உருவத்தைக் கண்டு எனக்கு சுகமும் ஏற்படவில்லை. தேவர்களின் ஈசனே! ஜகந்நிவாஸரே! நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள் பிரசன்னடையுங்கள்.

**அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா :**
**ஸர்வே ஸஹைவாவனிபாலஸங்கை :**
**பீஷ்மோ த்ரோண : ஸூதபுத்ரஸ்ததாஸௌ**
**ஸஹாஸ்மதியைரபி யோதமுக்யை (26)**

அவ்வனைத்து திருதராஷ்டிரரின் புத்திரர்கள், மற்ற அனைத்து அரசர்களின் சமுதாயத்துடன் சேர்த்து எல்லோருமே உங்களுக்குள் நுழைகிறார்கள். மேலும், பீஷ்ம பிதாமகர், துரோணாச்சாரியர் மற்றும் அந்த கர்ணன் (அர்ஜுனன் யாரிடம் மிகவும் பயங் கொண்டிருந்தானோ, அந்தக் கர்ணன்) மற்றும் நமது தரப்பிலுள்ள முக்கியமான போர்த் தளபதிகளுடன் சேர்த்து எல்லோருமே –

**வக்த்ராணி தே த்வரமாணா விஷந்தி**
**தம்ஸ்ட்ராகராலானி பயானகானி**
**கேசித்விலக்னா தஷனாந்தரேஷு**
**ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை : (27)**

பெரும் வேகத்துடன் உங்களுடைய கொடூரமான பற்களுடன் கூடிய, பயங்கரமான வாய்களுக்குள் நுழைகிறார்கள். மேலும், அவர்களில் பலர் உங்களுடைய பற்களுக்குள் சிதையுண்டு உருக்குலைந்த தலைகளுடன் பற்களுக்கு நடுவில் சிக்குண்டவர்களாகத் தென்படுகின்றனர். அவர்கள் எத்தனை வேகத்துடன் உங்களுக்குள் நுழைகிறார்கள்? இப்போது அவர்களுடைய வேகத்தைப் பார்ப்போம்.

**யதா நதீனாம் பஹவோம்புவேகா :**
**ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி**
**ததா தவாமி நரலோகவீரா**
**விஷந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி (28)**

எவ்வாறு நதிகள் எல்லாம் பெரும் வெள்ளப் பெருக்குடன் ஒன்றோடொன்று பயங்கரமாக மோதிக் கொண்டு கடலை நோக்கி ஓடிப் போய் அதிலேயே ஒன்று கலக்கின்றனவோ, அதே போன்றுதான் அந்தத் திறம்படைத்த போர்வீரர்களின் சமுதாயம் உங்களுடைய கொழுந்து விட்டெரியும் வாய்களுக்குள் நுழைகின்றனர். அதாவது, அவர்கள் எல்லாம் தங்களைப் பொறுத்தவரையில் திறம் படைத்த

பெரும் போர்வீரர்கள்தாம். ஆனால், நீங்களோ, மாபெரும் கடலைப் போன்றவர்! உங்களுடன் ஒப்பிடும்போது அவர்களுடைய பலம் துச்சமானது. அவர்கள் எல்லாம் எதனால் மற்றும் எந்த முறையில் நுழைகிறார்கள்? அதற்கான உதாரணம் இங்கே தரப்படுகிறது.

**யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா**
**விஷந்தி நாஷாய ஸம்ருத்தவேகா :**
**ததைவ நாஷாய விஷந்தி லோகா**
**ஸ்தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா : (29)**

எவ்வாறு விட்டில் பூச்சிகள் அழிந்து போவதற்காகவே கொழுந்து விட்டெரியும் நெருப்பை நோக்கி அதிவேகமாக வந்து விழுகின்றனவோ, அதேபோன்றுதான் எல்லாப் பிராணிகளும் தங்களுடைய அழிவிற்காகவே உங்களுடைய திருவாய்க்குள் கடுமையான, பயங்கரமான வேகத்துடன் நுழைந்து கொண்டிருக்கின்றன.

**லேலிஹ்யஸே க்ரஸமான : ஸமந்தா**
**ல்லோகான்ஸமக்ரான்வததனைர்ஜ்வலத்பி :**
**தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம்**
**பாஸஸ்த்வோக்ரா : ப்ரதபந்தி விஷ்ணோ (30)**

நீங்கள் அந்த அனைவரையும், கொழுந்து விட்டெரியும் வாய்களின் மூலமாக எல்லாப் பக்கங்களில் இருந்தும் விழுங்கிக் கொண்டும், நாவால் நக்கி சுவைத்துக் கொண்டும் இருக்கிறீர்கள். இங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரமாத்மனே! உங்களுடைய தீவிரமான வல்லமையானது எல்லா உலகங்களையும் தன்னுடைய தெய்வீக ஒளியால் (தேஜஸ்) வியாபித்த வண்ணம் அவற்றையெல்லாம் எரித்து வாட்டுகிறது. இதற்கு அர்த்தம் என்னவென்றால், முதலில் அசுரச் செல்வங்கள் எனப்படும் அசுர குணங்கள் பரமாத்மாவினுள் சென்று மறைந்து விடுகின்றன. அதற்குப் பிறகு, தெய்வீகச் செல்வங்கள் எனப்படும் தெய்வீக குணங்களின் உபயோகமும் இல்லாமல் போகிறது. எனவேதான், அவைகளும் கூட அதே ஆன்ம வடிவத்தில் சென்று மறைந்து விடுகின்றன. கௌரவர் படையினரும் அவர்களைத் தொடர்ந்து தன்னுடைய பக்கத்தைச் சேர்ந்த பாண்டவர் படையினரும் ஸ்ரீகிருஷ்ணருடைய திருவாயினுள் சென்று மறைவதை அர்ஜுனன் கண்டான். அவன் கேட்டான்.

**ஆக்யாஹி மே கோ பவானுக்ரரூபோ**
**நமோஸ்து தே தேவவர ப்ரஸீத விஞ்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம்**
**நஹி ப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம் (31)**

பயங்கரமான உருவம் கொண்ட நீங்கள் யார் என்று எனக்குக் கூறுங்கள்? தேவர்களில் சிறந்தவரே! உங்களுக்கு வணக்கம். நீங்கள் மகிழ்ச்சியுடன் இருங்கள். ஆதி வடிவமே! நான் உங்களை மிகவும் நல்லமுறையில் அறிந்து கொள்ள விரும்புகிறேன். (நீங்கள் யார்? நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள்? என்பது போன்றவற்றை) ஏனெனில், உங்களுடைய குணங்களையும் மற்றும் செயல்பாடுகளையும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இதற்கு யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு கூறினார். –

**ஸ்ரீ பகவானுவாச்ச**
**காலோஸ்மி லோககூஷயக்ருத்ப்ரவ்ருத்தோ**
**லோகான்ஸமாஹர்த்துமிஹ ப்ரவ்ருத்த:**
**ருதேஅபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே**
**யேவஅஸ்த்திதா : ப்ரத்யனீகேகூஒ யோதா : (32)**

அர்ஜுனா! நான் உலகங்களை எல்லாம் அழிக்க வந்திருக்கும் மாபெரும் காலன் (காலம்) ஆவேன். மேலும், இந்தச் சமயத்தில் இவர்களை எல்லாம் அழிப்பதற்காகவே வந்திருக்கிறேன். இரண்டு பக்கங்களிலும் நின்று கொண்டுள்ள போர்வீரர்கள் யாருமே நீயில்லையென்றாலும் கூட உயிருடன் இருக்கப் போவதில்லை. அவர்கள் எவருமே உயிருடன் தப்பிப் பிழைத்திருக்கப் போவது கிடையாது. அதற்காகவே நான் தோன்றியிருக்கிறேன்.

**தஸ்மாத்த்வமுத்திஷ்ட்ட யஷோ லபஸ்வ**
**ஜித்வா சத்ருன்புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம்**
**மயைவைதே நிஹதா : பூர்வமேவ**
**நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசின் (33)**

ஆகவே அர்ஜுனா! நீ யுத்தம் செய்வதற்குத் தயாராகிக் கொள்; வெற்றியைப் பெறுவாயாக! எதிரிகளை வெல்! செல்வங்களும் வளங்களும் கொண்ட ராஜ்ஜியத்தைப் பெற்று அவற்றையெல்லாம் அனுபவி! இந்தப் பெரும் திறம்படைத்த போர்வீரர்கள் அனைவரும் என்மூலமாக ஏற்கனவே கொல்லப்பட்டு விட்டனர். **ஸவ்யஸாசின்!** (இடது கையாலும் அம்பு தொடுக்க வல்லவன்) நீ வெறும் நிமித்த காரணமாகச் செயல்படு!

ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே பல இடங்களில், "பரமாத்மா தாமாகவும் ஒன்றும் செய்வதில்லை. பிறர் மூலமாகவும் எதையும் செய்விப்பதில்லை. மேலும் கர்த்தா கர்மம், கர்மபலன் ஆகியவற்றிற்கு இடையில் எந்த இணைப்பையும் ஏற்படுத்துவதில்லை. மோகத்தால் பீடிக்கப்பட்டுள்ள புத்தியின் காரணத்தால்தான் மக்கள் அனைவருமே பரமாத்மாவே செய்பவர் என்று கூறிக் கொள்கின்றனர்"

என்று கூறியுள்ளார். ஆனால், இங்கேயோ அவர் தாமே நேரடியாக மார்தட்டியபடியே வந்து நின்று கொண்டு, "அர்ஜுனா! செய்பவன், செய்விப்பவன், எல்லாம் நான்தான்! என் மூலமாக ஏற்கனவே இவர்கள் எல்லாம் கொல்லப்பட்டு விட்டனர். நீ வெறுமனே வந்து நில்! வெற்றியை பெற்றுக் கொள்!" என்று கூறுகிறார். ஏன் இப்படி? என்று கேட்டால், **ஸோ கேவல் பக்தன்ஹ் ஹித் லாகீ** – 'பக்தனுடைய நலனுக்காக மட்டும்தான் பகவான் செய்கிறார்'. பகவானே, நேருக்கு நேராக, மார்தட்டியபடியே உதவிக்கு வந்து நிற்கின்ற, அத்தகையதொரு நிலையை அடையப் பெற்றிருந்தான் அர்ஜுனன். இறையார்வமே (அனுராகமே) அர்ஜுனன் ஆவான். அன்பனுக்காக பகவான் எப்போதுமே உதவி செய்வதற்குத் தயாராக வந்து துணை நிற்கிறார். அவனுடைய கர்த்தாவாக சாரதியாக நின்று காக்கிறார்.

இங்கே கீதையில் மூன்றாவது முறையாக 'சாம்ராஜ்ஜியம்' பற்றிய பேச்சு எழுகிறது. ஆரம்பத்தில் அர்ஜுனன் போரிடத் தயாராக இல்லை. அவன், "இந்த பூமியில் உள்ள எல்லா தன, தானியங்களுடன் கூடிய அகண்ட சாம்ராஜ்ஜியம் மற்றும் தேவர்களின் தலைமைப் பதவி மட்டுமல்லாமல் மூவுலக ராஜ்ஜியங்கள் அனைத்தும் எனக்குக் கிடைத்தாலும் கூட என்னுடைய புலன்களை வாட்டும் இந்தச் சோகத்தை நீக்குகின்ற உபாயங்கள் எதுவும் அவற்றில் இருப்பது போல எனக்குத் தோன்றவில்லை. எனது மனத்தில் சோகம் இருந்து கொண்டேதான் இருக்குமென்றால் அவையெதுவும் எமக்கு வேண்டாம்" என்று கூறினான். யோகேஷ்வரர் அதற்கு, "இந்த யுத்தத்தில் தோற்றாலும் தேவத்துவம் மற்றும் வெற்றி பெற்றாலோ மஹாமஹிம் என்னும் மகத்தான நிலை கிடைக்கும்" என்றார். மேலும், இங்கே, இந்தப் பதினோராவது அத்தியாயத்தில் அவரே, "இந்த எதிரிகள் அனைவரும் என்மூலமாக ஏற்கனவே கொல்லப்பட்டுவிட்டனர். நீ வெறுமனே நிமித்த காரணமாக மட்டும் வந்து நின்றுகொள்! வெற்றியைப் பெற்றுக் கொள்! அத்துடன் கிடைக்கும் செல்வமும் வளமையும் கொண்ட ராஜ்ஜியத்தைப் பெற்று அவற்றை அனுபவி" என்று கூறுகிறார். எந்தப் பேச்சினைக் கேட்டு அர்ஜுனன் அதிர்ச்சி அடைந்தானோ, எதனால் தன்னுடைய மனத்தில் உள்ள சோகத்தை நீக்க முடியாது என்று கூறினானோ, அதே பேச்சுதான் இங்கே மறுபடியும் வருகிறது. இத்தனைக்குப் பிறகும்கூட ஸ்ரீகிருஷ்ணர் அதே ராஜ்ஜியத்தையா அர்ஜுனனுக்கு அளிக்க விரும்புகிறார்? இல்லை. உண்மையில் விகாரங்களின் (புலன் நுகர்ச்சி ஆசைகள்) அழிவிற்குப் பின்னர், அத்துடன் சேர்த்துக் கிடைக்கின்ற பரமாத்ம வடிவத்தில் நிலைபெறுவதே உண்மையான சொத்து ஆகும். அதுதான் நிலையான சொத்தும் கூட. அதற்கு ஒருபோதும் அழிவு என்பதே கிடையாது. இது ராஜ யோகத்தின் பரிணாமம் (இறுதி விளைவு) ஆகும்.

**த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதஞ் ச**
**கர்ணம் ததான்யானபி யோதவீரான்**
**மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்ட்டா**
**யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னான் (34)**

இந்த துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன் மற்றும் கர்ணன், மற்றும் இன்னபிற, பல்வேறு, என் மூலமாக ஏற்கனவே கொல்லப்பட்டு விட்ட, பெரும் திறம்படைத்த போர்வீரர்களைக் கொல்! பயம் கொள்ளாதே! போரில் நீ நிச்சயமாகவே எதிரிகள் அனைவரையும் வெல்வாய். எனவே யுத்தம் செய்! இங்கேயும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "இவர்கள் அனைவரும் ஏற்கனவே என் மூலமாக இறந்து போனவர்கள். இந்த ஏற்கனவே இறந்துபோனவர்களையே கொல்!" என்கிறார். இதன்மூலமாக அவர் தாமே செய்பவர் (கர்த்தா) என்பதைத் தெளிவாக அறிவிக்கிறார். ஆனால், ஐந்தாவது அத்தியாயத்தின் பதின்மூன்று, பதினான்கு மற்றும் பதினைந்தாம் சுலோகங்களில் அவரேதான், "பகவான் எதையும் செய்வதில்லை (அகர்த்தா)" என்று கூறினார். பதினெட்டாவது அத்தியாயத்திலும் கூட அவர், "நல்லவை மற்றும் தீயவை (சுபம், அசுபம்) என்று எந்தச் செயலும் நிகழ்வதற்கு மொத்தம் ஐந்து வழிகள் உள்ளன – அவை முறையே செயல் நடைபெறும் ஊடகம், செய்பவர், கருவி, செயல் (வினைகள்) தெய்வம் (அதிஷ்டானம், கர்த்தா, கரணம், சேஷ்டா, தைவம்) ஆகியவை ஆகும். இதற்கு மாறாக, கைவல்ய வடிவமாகிய பரமாத்மாவைச் செய்பவர் **(கர்த்தா)** என்று கூறுபவர்கள் விவேகமற்றவர்கள், யதார்த்தத்தை அறியாதவர்கள். அதாவது, பகவான் எதுவும் செய்வதில்லை **(அகர்த்தா)**" என்றும் கூறுகிறார். ஏன் இந்த இரண்டு முரண்பட்ட கருத்துகள்? உண்மையில், இயற்கை அதாவது படைப்பிற்கும் அந்த பரமாத்ம புருஷருக்கும் நடுவில் ஒரு எல்லைக் கோடு உள்ளது. எதுவரை இயற்கையின் பரமாணுக்களின் தாக்கம் அதிகமாக இருக்கிறதோ, அதுவரை மாயையே தூண்டுணர்ச்சியைத் தருகிறது. மேலும், எப்பொழுது சாதகன் அதிலிருந்து விடுபட்டு உயரே எழ ஆரம்பித்து விடுகிறானோ, ஈஸ்வரன் (அ) இஷ்ட தெய்வம், அதாவது சத்குருவின் காரிய க்ஷேத்திரத்திற்குள் நுழைவு பெற்று விடுகிறானோ, அதற்குப் பிறகு, சத்குருவாகிய இஷ்ட தெய்வம் (ஆன்மீகப் பாதையில் வழிநடத்துபவரின் நிலையில், தூண்டுணர்த்துபவரின் நிலையில் உள்ள சத்குரு, பரமாத்மா, இஷ்டதெய்வம், பகவான் என்பதெல்லாம் ஒரே பொருளைத்தான் தருகின்றன என்பதை நன்கு நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இவற்றில் எந்தச் சொல்லை உபயோகப்படுத்தினாலும் 'பகவான்' என்றே பொருள் கொள்ளப்பட வேண்டும்) இதயத்தில் எழுந்தருளி சாரதியாகிறார். ஆன்மாவில் எழுந்தருளி ஒன்று கலந்து நின்று கொண்டு, ஆன்மீக விழிப்புணர்வைத் தந்தபடியே அந்த அனுராகம் நிறைந்த சாதகனைத் தாமே முன்னின்று ஆன்மீகப்

பாதையில் வழிநடத்திச் செல்லும் பணியைச் செய்கிறார்.

பூஜ்ய ஸ்ரீ பகவான் பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள் பின்வருமாறு கூறுவார்: "ஆஹா! எந்த பரமாத்மாவை நாம் அடைய வேண்டும் என்று விரும்புகிறோமோ, அவரே, நாம் எந்த இடத்தில் நின்று கொண்டு, இருக்கிறோமோ, அந்த இடத்திற்குத் தாமே இறங்கி வந்து, எதுவரைக்கும் ஆன்மாவில் ஒன்று கலந்து நின்று ஆன்ம விழிப்புணர்வை ஏற்படுத்தவில்லையோ, அதுவரைக்கும் சரியான அளவில் ஆன்மீக சாதனை ஆரம்பமாவது கூட இல்லை. ஆன்மா விழிப்புணர்வு அடைந்த பிறகு சாதகர் மூலமாக எவ்வளவு தூரம் சாதனையானது நிறைவேற்றப்படுகிறதோ, அதெல்லாம் அந்த இஷ்ட தெய்வமாகிய சத்குருவின் திருக்கொடையாகும். சாதகன் வெறும் நிமித்த காரணமாக மட்டும் இருந்து கொண்டு இஷ்ட தெய்வத்திடமிருந்து (சத்குரு, இறைவன்) கிடைக்கின்ற சங்கேதங்கள் (அறிகுறிகள்) மற்றும் கட்டளைகளின்படிச் சென்று கொண்டேயிருக்கிறான். அவ்வளவுதான், சாதகனுக்குக் கிடைக்கின்ற வெற்றியானது அவருடைய இஷ்ட தெய்வத்தின் (சத்குரு, இறைவன்) திருக்கொடை மட்டுமேயாகும். அத்தகைய அன்பருக்காக கடவுள் தம்முடைய அருட்பார்வையால் காண்கிறார். பார்க்கவும் வைக்கிறார். அவனுக்குத் தம்மைக் காண்பிக்கவும் செய்கிறார். மேலும், அவர் தமது ஆன்ம வடிவத்தை அவனை அடைவிக்கவும் செய்கிறார்". இதைத்தான் ஸ்ரீகிருஷ்ணர், "என் மூலமாகக் கொல்லப்பட்ட இந்த எதிரிகளைக் கொல். நிச்சயமாகவே நீ வெற்றியடைவாய். நான் உன்னுடைய பக்கத்தில் இருக்கிறேன்" என்கிறார்.

**ஸஞ்ஜய உவாச**
**ஏதச்ச்ருத்வா வசனம் கேஶவஸ்ய**
**க்ருதாஞ்ஜலிர்வேபமான : கிரீட**
**நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்**
**ஸகத்கதம் பீத பீத : ப்ரணம்ய (35)**

சஞ்ஜயன் கூறுகிறான் : (அர்ஜுனன் எதையெல்லாம் பார்த்தானோ, அதையெல்லாம் சரியாக சஞ்ஜயனும் பார்த்தான். அஞ்ஞானத்தால் சூழப்பட்ட மனமே பிறவிக் குருடராகிய திருதராஷ்டிரர் எனப்படுகிறது. ஆனால், அதே மனமானது கட்டுப்பாட்டைப் பழகுவதன் மூலமாகச் சரியான முறையில் பார்க்கவும், கேட்கவும் மற்றும் புரிந்து கொள்ளவும் செய்கிறது) கேசவருடைய இந்த மேலே கூறப்பட்ட வசனங்களைக் கேட்டு மகுடம் தரித்திருந்த அர்ஜுனன் பயபீதியடைந்தவனாக, நடுநடுங்கியபடியே கைகளைக் கூப்பித் தொழுதவாறே ஸ்ரீகிருஷ்ணரிடம் தொண்டை அடைக்க, நடுநடுங்கியபடி தழுதழுத்த குரலில் இவ்வாறு கூறலானான். –

**அர்ஜுன உவாச**
**ஸ்த்தானே ஹ்ருஷீகேஷ தவ ப்ரகீர்த்த்யா**
**ஜகத்ப்ரஹ்ருஷ்யத்யனுரஜ்யதே ச**
**ரக்ஷாம்ஸி பீதானி திஷோ த்ரவந்தி**
**ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்க்கா (36)**

ஹே! அந்தர்யாமியாக விளங்கும் ஹ்ருஷீகேசரே! உங்களுடைய கீர்த்தியினால் (புகழினால்) உலகமே மகிழ்ச்சி அடைகிறது; அனுராகத்தைப் பெறுகிறது. உங்களுடைய மகிமையால் பயபீதியடைந்துள்ள ராக்ஷஸர்கள் திசையெங்கும் சிதறி ஓடுகிறார்கள். மேலும், எல்லா சித்தர் கணங்களின் சமுதாயமோ உங்களுடைய மகிமைகளைக் கண்டு உங்களையே வணங்குகிறார்கள்.

**கஸ்மாச்ச தே ந நமேரன்மஹாத்மன்**
**கரீயஸே ப்ரஹ்மணோப்யாதிகர்த்ரே**
**அனந்த தேவேஷ ஜகந்நிவாஸ**
**த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் (37)**

மகாத்மனே! பிரம்மாவிற்கும் ஆதிகர்த்தாவே! அனைத்தையும் விடப் பெரியவரான உங்களை அவர்களெல்லாம் எங்ஙனம் வணங்காமல் இருக்கமுடியும்? ஏனெனில், அனந்தரே! (முடிவு என்பதே இல்லாதவரே!) தேவர்களுக்கெல்லாம் ஈசனே! ஜகந்நிவாஸரே! உண்மை **(ஸத்)** உண்மையற்றவை **(அஸத்)** மற்றும் அவற்றை விடவும் அப்பாற்ப்பட்டதாகிய, அழிவற்றதாகிய **(அக்ஷர)** அதாவது, தன்னில் ஒருபோதும் குறைவென்பதே இல்லாத **(அக்ஷய)** ஆன்ம வடிவமே நீங்கள்! அர்ஜுனன் அந்த அழிவற்ற, குறைவற்ற ஆன்ம வடிவத்தையே நேரடியாக தரிசனம் செய்தான். வெறுமனே பௌதீக நிலையில் (அதாவது, அறிவு நிலை வரை மட்டுமே செயல்படுகின்ற உலகியல் என்ற கண்ணோட்டத்தில் அல்லாமல்) இருந்து கொண்டு வெறுமனே கற்பனை செய்வதால் மட்டுமோ அல்லது வெறுமனே அறிவு நிலைவரை புரிந்து கொண்டு, வாயளவில் ஏற்றுக் கொள்வதால் மட்டுமோ, அழிவற்ற, குறைவற்ற ஆன்ம வடிவம் என்ற அத்தகைய நிலை கிடைத்து விடுவதில்லை. அர்ஜுனனின் நேரடியான தரிசனம் (பிரத்யட்ச தரிசனம்) என்பது அவனுக்குக் கிடைத்த அகம் சார்ந்த ஆன்மீக அனுபவம் ஆகும். அவன் மிகுந்த பணிவுடன் வேண்டலானான்.

**த்வமாதிதேவ : புருஷ : புராணஸ்**
**த்வமஸ்ய விஷ்வஸ்ய பரம் நிதானம்**
**வேத்தாஸி வேத்யஞ் ச பரம் ச தாம**
**த்வயா ததம் விஷ்வமனந்தரூப (38)**

நீங்கள் ஆதி தேவனும் ஸனாதன புருஷரும் (என்றும் நிலையாக, மாறாமல் இருக்கும் இறைவன்) ஆவீர்கள்! நீங்களே இந்த உலகின் ஒரே உறைவிடமும் அடைக்கலமும் ஆவீர்கள். நீங்களே இந்த உலகைப் பற்றி எல்லாம் அறிந்தவரும் ஆவீர்கள். நீங்கள் ஒருவரே அறியத் தகுந்தவரும் பரமபதமும் (இறைப் பேருநிலை) ஆவீர்கள். அனந்த வடிவத்தை உடையவரே! ஒட்டு மொத்த உலகம் முழுவதும் நீக்கமற நிறைந்துள்ளவரே! நீங்களே எங்குமுள்ள இறைவன்.

**வாயுர்யமோஅக்னிர்வருண : ஷஷாங்க :**
**ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதா மஹஷ்ஸ்ச**
**நமோ நமஸ்தேஅஸ்து ஸஹஸ்த்ரக்ருத்வ :**
**புனஷ்ச்ச பூயோஅபி நமோ நமஸ்தே (39)**

நீங்கள்தான் வாயு, யமராஜன், அக்கினி, வருணன், சந்திரன் மற்றும் எல்லாக் குடிமக்களின் (பிரஜைகள்) ஸ்வாமி, பிரம்மா மற்றும் பிரம்மாவிற்கும் தந்தை ஆவீர். உங்களுக்கு ஆயிரம் முறை நமஸ்காரம். மறுபடியும் மறுபடியும் நான் உங்களை வணங்குகிறேன். ஆழ்ந்த சிரத்தை (நம்பிக்கை) மற்றும் பக்தியின் காரணமாக (ஸ்ரீகிருஷ்ணரைத் தவிர வேறு எதையும், யாரையும், மற்றபிற தேவதைகள் யாரையும் நம்பாமல், அவர்மீது மட்டுமே பக்தி கொண்டுள்ள) ஸ்ரீகிருஷ்ணரைத் திரும்பத் திரும்ப வணங்கிய பிறகும் கூட அர்ஜுனனுக்கு திருப்தி உண்டாகவில்லை. அவன் மேலும் கூறுகிறான்.

**நம : புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே**
**நமோஅஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ**
**அனந்தவீர்யாமிதவிக்ரமஸ்த்வம்**
**ஸர்வம் ஸமாப்னோஷி ததோஅஸி ஸர்வ : (40)**

அளவிடற்கரிய சாமர்த்தியம் உடையவரே! உங்களை முன்னும் பின்னுமாய் நமஸ்காரம் செய்கிறேன். அனைத்தின் ஆன்மாவே! (ஸர்வாத்மன்) உங்களை எல்லாப் பக்கங்களில் இருந்தும் நமஸ்கரிக்கிறேன். ஏனெனில், அளவிடற்கரிய பராக்கிரமம் கொண்டவரே! நீங்கள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் இந்த உலகம் முழுவதும் நீக்கமற நிறைந்து இருக்கிறீர்கள். எனவே, நீங்களே எங்கும் நிறைந்த உருவமாகவும் மற்றும் நீக்கமற எங்கும் நிறைந்தவராகவும் இருக்கிறீர்கள். இந்த முறையில் மீண்டும் மீண்டும் நமஸ்காரம் செய்தபடியே பயபீதியுடன் அர்ஜுனன் தன்னுடைய தவறுகளை மன்னிக்கும்படி வேண்டினான்.

**சகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்**
**ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹேஸகேதி**
**அஜானதா மஹிமானம் தவேதம்**
**மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி (41)**

உங்களுடைய இந்த சர்வ வல்லமையை அறியாமல் நான் உங்களை சிநேகிதர், நண்பர் என்று எண்ணிக் கொண்டு அன்புடனோ, அல்லது தவறுதலாகவோ கூட கிருஷ்ணா! யாதவா! நண்பா! என்றெல்லாம் பிடிவாதமாக அழைத்திருக்கிறேன். மேலும்,

**யச்சாவஹாஸார்த்த மஸத்க்ருதோஅஸி**
**விஹார ஷய்யாஸனபோஜனேஷு**
**ஏகோதவாப்யச்யுத தத்ஸமக்ஷம்**
**தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் (42)**

"அச்சுதரே! நான் உங்களை வேடிக்கை, விநோதம் செய்யும் வகையில், ஓய்வெடுத்துக் கொண்டிருந்த போதும் படுத்து உறங்கிக் கொண்டிருந்த போதும், உட்கார்ந்து இருந்த போதும், மற்றும் சாப்பிடும்போதும், தனியாக இருந்த சமயத்திலும் அல்லது மற்றவர்கள் எதிரிலும் அவமானப்படுத்தி இருக்கிறேன். அந்த எல்லாம் அபராதங்களையும் தவறுகளை சிந்தனைக்கெல்லாம் அப்பாற்பட்ட பேராற்றலும் பெரும் வல்லமையும் கொண்ட நீங்கள் மன்னித்தருள வேண்டும்" என்று வேண்டுகிறேன். எந்த முறையில் மன்னித்தருள வேண்டும்?

**பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யஷ்ச குருர்கரீயான்**
**ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக : குதோஅன்யோ**
**லோகத்ரயே ப்யப்ரதிமப்ரபாவ (43)**

நீங்கள் இந்த அசைவன, அசையாதவை, நகர்வன, நகராதவை என்று அனைத்தையும் உள்ளடக்கிய ஒட்டு மொத்த உலகின் தந்தை, குருவிற்கெல்லாம் பெரிய குரு மற்றும் மிகவும் பூஜிக்கத் தகுந்தவரும் ஆவீர். எவருக்கு ஈடுஇணையென்றும் நிகரானவரென்றும் எவருமே இல்லையோ, அத்தகைய தன்னிகரற்ற, ஈடுஇணையில்லாத மாபெரும் வல்லமை படைத்தவர் நீங்கள்! உங்களுக்குச் சமமாக மூன்று உலகங்களிலும் வேறு யாரும் இல்லவே இல்லை எனும் போது உங்களை விட மிஞ்சியவர் என்று யார் இருக்கப் போகிறார்? நீங்கள் நண்பரும் கூட இல்லை. ஏனெனில், நண்பர் என்று சமமானவரை அல்லவா சொல்வார்கள்!

**தஸ்மாத்ப்ரணம்ய ப்ரணிதாய காயம்**
**ப்ரஸாதயே த்வாமஹமீஷமீட்யம்**
**பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு :**
**ப்ரிய : ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் (44)**

நீங்கள் உயிருள்ள மற்றும் உயிரற்றவைகளின் தந்தை ஆவீர்கள். எனவே

தான் நான் என்னுடைய சரீரத்தை முறைப்படி உங்களுடைய சரணத்தில் வைத்து நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கி, போற்றுதலுக்குரிய கடவுளாகிய உங்களை மகிழ்விக்கும் வண்ணம் பிரார்த்தனை செய்கிறேன். தெய்வமே! தந்தை மகனையும், நண்பன் தனக்குப் பிரியமான நண்பனையும், கணவன் தன்னுடைய அன்பிற்குப் பாத்திரமான மனைவியையும் எப்படி அவர்களுடைய குற்றங்களையெல்லாம் பொறுத்து மன்னித்தருள்வார்களோ, அதேபோன்றுதான் நீங்களும் என்னுடைய தவறுகளையெல்லாம் பொறுத்தருள வேண்டும். அப்படி அவன் செய்த தவறுதான் என்ன? அவன் பலமுறை, யாதவா! நண்பா! கிருஷ்ணா! என்றெல்லாம் அவரைக் கூப்பிட்டிருந்தான். அனைவருக்கும் முன்பும் தனியாக இருக்கும் போதும் அவ்வாறு அழைத்திருந்தான். சாப்பிடும்போது மற்றும் உறங்கும் சமயத்தில் அவ்வாறெல்லாம் நடந்து கொண்டிருந்தான். 'கிருஷ்ணா!' என்று அழைப்பது குற்றமா என்ன? அவர், 'கருமையானவர்தானே! பிறகு எப்படி 'சிவந்தவரே!' என்று அழைக்க முடியும்? 'யாதவா!' என்று அழைப்பதும் கூடக் குற்றமில்லைதான். ஏனெனில், அவர் யது குலத்தில்தானே பிறந்தார்? 'நண்பா!' என்று அழைப்பதிலும் எந்தக் குற்றமும் இருப்பதாகத் தெரியவில்லையே! ஏனெனில், ஸ்ரீகிருஷ்ணர்தானே அர்ஜுனனைத் தம்முடைய நண்பராக ஏற்றுக் கொண்டிருந்தார்! கிருஷ்ணா! என்று அழைப்பது குற்றமென்றால், ஏதோ ஒருமுறை கிருஷ்ணா! என்று கூப்பிட்டதற்காக அர்ஜுனன் நடுநடுங்கியபடியே எண்ணற்ற முறை மன்னிப்புக் கேட்கிறான் என்றால், எந்தப் பெயரைத்தான் ஜபம் செய்வது? எந்தப் பெயரால் அழைத்து அவரிடம் முறையிடுவது?

உண்மையில் ஆன்ம சிந்தனையின் விதிமுறைகளை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரே முன்னின்று கூறியிருப்பதால் நீங்களும் அதையறிந்து அதே விதிமுறைகளைத்தான் பின்பற்ற வேண்டும். அவர் கடந்து சென்ற பகுதியில் ஏற்கனவே, "**ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன்** – அர்ஜுனா! **ஓம்** – இவ்வளவுதான். இதுவே அழிவற்ற, குறைவற்ற இந்த பிரம்மத்தை அறிமுகப்படுத்தி வைக்கின்ற அந்த இறைவனின் திருநாமம் ஆகும். இந்தத் திருநாமத்தை ஜபம் செய்; என்னை (சத்குருவின் திருவுருவம்) தியானம் செய்." என்று கூறியுள்ளார். ஏனெனில், அந்த இறைப் பேருணர்விற்குள் (பரம பாவம்) நுழைவு பெற்ற பிறகு, எந்தவொரு மகாபுருஷருக்குமே, புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வை அறிமுகப்படுத்தி வைக்கின்ற, அழிவற்ற, குறைவற்ற பிரம்மத்தின் திருநாமமே அவருடைய நாமமாகவும் ஆகிவிடுகிறது. ஸ்ரீகிருஷ்ணரின் தனிப்பெரும் வல்லமையைக் கண்டபிறகு அர்ஜுனன் 'ஸ்ரீகிருஷ்ணர் கருமை நிறம் கொண்டவரும் அல்ல; சிவந்த மேனியுடையவரும் அல்ல; நண்பரும் அல்ல; யாதவரும் அல்ல. அவர் அழிவற்ற குறைவற்ற பிரம்மத்தில் நிலைபெற்றுள்ள மகாத்மா ஆவார்' என்பதை அனுபூதியில் உணர்ந்து தெளிந்தான்.

கீதை முழுவதும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மொத்தம் ஏழுமுறை, "**ஓம்** என்ற திருநாமத்தை ஜபிக்க வேண்டும்" என்பதை வலியுறுத்தியுள்ளார். இப்பொழுது ஒருவேளை நீங்கள் ஜபம் செய்ய விரும்பினால் **கிருஷ்ணா – கிருஷ்ணா** என்று கூறாமல் '**ஓம்**' என்ற திருநாமத்தையே ஜபியுங்கள். பெரும்பாலும் இந்த பக்தர்கள் ஏதேதோ புதுப்புது வழிகளை எல்லாம் உருவாக்கி விடுகின்றனர். கொஞ்சம்பேர் '**ஓம்**' என்ற திருநாமத்தை ஜபம் செய்வதற்கான அதிகாரம் யாருக்கு உள்ளது? யாருக்கு இல்லை? என்பது போன்ற சர்ச்சைகளில் மாட்டிக் கொண்டு பயபீதி அடைந்து கிடக்கின்றனர் என்றால் இன்னும் சிலரோ, மகாத்மாக்களின் பெயரையே ஜபம் செய்து கொண்டிருக்கிறார்கள். மேலும் சிலபேர் ஸ்ரீகிருஷ்ணரை அழைப்பதற்கு முன்பே ராதை மற்றும் பல்வேறு கோபியர்களின் பெயர்களை எல்லாம் வரிசையாக அடுக்கிக் கொண்டே சென்றால் ஸ்ரீகிருஷ்ணரை சீக்கிரமாக மகிழ்வித்து விடலாம் என்ற பேராசையில் ஜபம் செய்கிறார்கள். மனிதன் நம்பிக்கைமயமானவன். எனவேதான் அவனுக்கு அப்படியெல்லாம் ஜபம் செய்வதே நன்றாகப்படுகிறது. ஒருவேளை நீங்கள் உண்மையாகவே இறைவன் மீது மட்டுமே விருப்பம் உடையவராக, அவருடைய பக்தராக இருந்தால் அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அதன்படி நடந்து கொள்ளுங்கள். அவர் புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வில் நிலைபெற்றிருந்த போதும் இன்றைய நிலையில் ஸ்தூல உடலுடன் நம்முடன் இல்லை. ஆனால், அவருடைய திருவாக்குகள் அனைத்தும் உங்கள் முன்பு கீதையின் வடிவில் உள்ளது. அவருடைய ஆணையை ஏற்று அதன்படி நடந்து கொள்ளுங்கள். அவ்வாறு நடக்க முடியாதென்றால் கீதையில் உங்களுடைய இடம்தான் என்னவாக இருக்கமுடியும்? ஆம்! **அத்யேஷ்யதே ச ய இமம் ச்ரத்தாவானனஸூயஷ்ச்ச ச்ருணுயாதபி யோ நர : –** (18/70,71) என்ற அளவு அவசியம் இருக்கிறது. யாரெல்லாம் கீதையைப் படிக்கிறார்களோ, (அத்யயனம்) கீதையைக் கேட்கிறார்களோ, அவர்கள் ஞானம் மற்றும் வேள்வி என்றால் என்ன? என்பதைப் பற்றி அறிந்து கொள்கிறார்கள். நல்ல உலகங்களை அடைகிறார்கள். ஆகவே கீதையை அவசியம் படியுங்கள்!

பிராணன் (உள்மூச்சு) அபானன் (வெளிமூச்சு) ஆகியவற்றின் ஆன்ம சிந்தனையில் கிருஷ்ணா என்ற வார்த்தை இலயக் கிரமத்துடன் ஒத்துப் போவதில்லை. பெரும்பாலோர் உள்ளீடற்று, வெறுமனே உணர்ச்சிவசப்பட்டவர்களாகப் பெயரளவிற்கு ராதே – ராதே என்று சொல்லத் தொடங்கி விடுகின்றனர். இன்றைய அளவில், காரியாலய அதிகாரிகளிடம் காரியம் கைகூடவில்லையென்றால் அவர்களுடைய உற்றார் – உறவினர்கள், காதலி அல்லது மனைவி ஆகியோர் மூலம் காரியங்களைச் சாதித்துக் கொள்ளும் பழக்கம் வழக்கத்தில் இருக்கிறது அல்லவா! அதே போன்றுதான், பகவானுடைய

வீட்டிலும் இருக்கும் போல! என்பதே பெரும்பாலோருடைய எண்ணமும்! எனவேதான், நிறையபேர் கிருஷ்ணா! என்று சொல்வதைக் கூட நிறுத்திவிட்டு, ராதே! ராதே!! என்று கூப்பிடத் தொடங்கிவிட்டனர். அவர்கள், ராதா! ராதா!! ஷ்யாமுடன் (ஸ்ரீகிருஷ்ணர்) என்னைச் சேர்த்து வை! என்கிறார்கள். ஒருமுறை ஸ்ரீகிருஷ்ணரை விட்டுப் பிரிந்து போனபிறகு அவரை அடையவே முடியாத ராதையால் உங்களுக்கு மட்டும் எப்படி ஷ்யாமைப் (ஸ்ரீகிருஷ்ணர்) பெற்றுத் தரமுடியம்? ஆகவே, வேறு யார் சொல்வதையும் கேட்காமல் ஸ்ரீகிருஷ்ணருடைய கட்டளையை நீங்கள் அட்சரம் பிசகாமல் ஏற்றுக் கொண்டு, 'ஓம்' என்ற திருநாமத்தையே ஜபம் செய்யுங்கள். ஆம்! ராதை ஓர் இலட்சியப் பெண்மணி ஆவாள் என்பது வரை சரிதான். அவளைப் போன்றுதான் மிகுந்த ஈடுபாட்டுடனும் பேரன்புடனும் ஆன்மீக சாதனையில் ஈடுபட வேண்டும். இறைவனை அடைய விரும்பினால், ராதையைப் போன்றுதான், காதலனைப் பிரிந்து தவிக்கும் காதலியின் பிரிவாற்றாமையுடன்கூடிய மனவேதனையுடன் (விரஹ உணர்வு) சாதனை செய்ய வேண்டும்.

இதற்குப் பிறகும் கூட அர்ஜுனன் 'கிருஷ்ணா' என்று அழைக்கவே செய்கிறான். 'கிருஷ்ணா!' என்பது அவனுக்குப் பழக்கமான பெயர் என்பதால்தான் அவ்வாறு அழைக்கிறான். ஸ்ரீகிருஷ்ணருக்கு எத்தனையோ பெயர்கள் உண்டு. 'கோபால்' என்பதும் கூட அவருடைய பெயர்களில் ஒன்றுதான். பெரும்பாலான சாதகர்களின் குரு – குரு என்றோ, குருவினுடைய வழக்கமான பெயர்களையோ அன்பு வசப்பட்டு ஜபம் செய்ய விரும்புகிறார்கள். ஆனால், இறைவனை அடைந்ததற்குப் பிறகு, ஒவ்வொரு மஹாபுருஷருக்கும் அவர் எந்தப் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வில் நிலைபெற்றிருக்கிறாரோ, அழிவற்ற, குறைவற்ற பரபிரம்மத்தின் பெயரே அவர்களுடைய பெயராகி விடுகிறது. பெரும்பாலான சிஷ்யர்கள், 'குருதேவரே! உங்களைத்தான் தியானம் செய்கிறோம். பிறகு ஏன் பழைய பெயராகிய ஓம் முதலானவற்றை ஜபம் செய்ய வேண்டும்? குரு, குரு அல்லது கிருஷ்ணா, கிருஷ்ணா என்றெல்லாம் ஏன் ஜபிக்கக் கூடாது?' என்று கேள்வி எழுப்புகின்றனர். ஆனால், இங்கே, யோகேஷ்வரர் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட இறைப் பேருணர்வில் (அவ்யக்த ஸ்வரூபம்) ஒன்று கலந்து விட்டபிறகு மகாபுருஷருக்கும், அவர் எந்த அழிவற்ற, குறைவற்ற பிரம்மத்தில் நிலைபெற்றுள்ளாரோ, அந்தப் பெயரே இயற்பெயராகி விடுகிறது என்பதை தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார். 'கிருஷ்ணா' என்பது கூப்பிடுவதற்கான பெயரே தவிர, ஜபம் செய்வதற்கான பெயர் அன்று.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரிடம், அர்ஜுனன் தன்னுடைய தவறுகளை எல்லாம் மன்னித்தருளுமாறு வேண்டுகிறான். அவன் ஸ்ரீகிருஷ்ணரிடம் இயல்பான

வடிவத்திற்குத் திரும்புமாறு பிரார்த்தனை செய்கிறான். ஸ்ரீகிருஷ்ணரும் அதை ஏற்றுக் கொண்டார். அவர் சகஜமான நிலைக்குத் திரும்பினார். அதாவது, அவர் அர்ஜுனனை மன்னித்தும் விட்டார். அர்ஜுனன் அவரை வேண்டினான்.

**அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வா**
**பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே**
**ததேவ மே தர்ஷய தேவரூபம்**
**ப்ரஸீத தேவேஷ ஜகந்நிவாஸ (45)**

இதுவரைக்கும் அர்ஜுனனுக்கு எதிரில் யோகேஷ்வரர் விச்வரூப வடிவில்தான் நின்று கொண்டிருந்தார். எனவேதான் அவன், "இதற்கு முன்பு நான் பார்த்திராத உங்களுடைய இந்த மிகவும் ஆச்சரியம் நிறைந்த திரு வடிவத்தைக் கண்டு எனக்கு ஒரு பக்கம் பெரும் மகிழ்ச்சி உண்டாகிறது. மேலும், அதே சமயம் எனது மனத்தில் இனம் புரியாத பயம் ஏற்பட்டு அதிகமான கலக்கத்தையும் அடைந்துள்ளது என்றான்". அவன் இதற்கு முன்புவரை ஸ்ரீகிருஷ்ணரைத் தன்னுடைய தோழனாகவே கருதியிருந்தான். வில்வித்தையிலோ ஸ்ரீகிருஷ்ணரை விடத் தானே கொஞ்சம் அதிகமான தேர்ச்சி பெற்றவன் என்ற அளவிற்கு எண்ணிக் கொண்டிருந்தான். ஆனால், இப்போதோ ஸ்ரீகிருஷ்ணருடைய தனிப்பெரும் வல்லமையைக் கண்டு அவன் பயபீதிக்கு ஆளாகி விட்டான். முந்தைய அத்தியாயத்தில் (பத்தாவது அத்தியாயத்தில்) ஸ்ரீகிருஷ்ணரின் தெய்வீக மகிமைகள் பொருந்திய தனிப்பெரும் வல்லமையைப் பற்றிக் கேட்டபிறகு, அவன் தன்னை ஒரு ஞானி என்று கூட எண்ணிக் கொண்டிருந்தான். ஆனால், ஞானிக்கோ எந்தவிதத்திலும், பயம் என்பதே இருப்பதில்லை. உண்மையில், நேரடி தரிசனத்தின் தாக்கம் என்பது வரையறைக்கு அப்பாற்பட்ட இனம் புரியாததொரு உணர்வை ஏற்படுத்தவல்லது. எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் கேட்ட பிறகும், எல்லாவற்றையும் அறிவுப்பூர்வமாக ஏற்றுக் கொண்ட பிறகும் கூட நேரடியாக ஆன்மீகப் பாதையில் பயணம் செய்து அனைத்தையும் அனுபவத்தில் உணர்வது முழுவதும் அப்படியே மீதமுள்ளது. அவன் கூறுகிறான். – 'இதற்கு முன்பு, நான் பார்த்திராத உங்களுடைய இந்த உருவத்தைக் கண்டு பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். அதே சமயம் எனது மனம் பயத்தால் கலக்கமடைந்துள்ளது. ஆகவே, தெய்வமே! நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள். தேவர்களுக்கெல்லாம் ஈசனே! ஜகந்நிவாஸரே! நீங்கள் எனக்கு அதே உருவத்தைக் காட்டுங்கள்! எந்த உருவத்தைக் காட்ட வேண்டும்?'

**கிரீடினம் கதினம் சக்ரஹஸ்தம்**
**மிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ**
**தேனைவ ரூபேண சதுர்புஜேன**

**ஸஹஸ்த்ரபாஹோ பவ விஷ்வமூர்த்தே (46)**

நான் தங்களை எப்போதும் போன்று, அதாவது, முன்பு நீங்கள் இருந்ததைப் போன்று தலையில் மகுடம் தரித்தவராகவும் கையில் கதையேந்தியவராகவும் மற்றும் சக்கரம் தரித்தவராகவும் காண விரும்புகிறேன். எனவேதான் விச்வரூப வடிவானவரே! ஆயிரம் கைகளை உடையவரே! நீங்கள் உங்களுடைய நான்கு கைகளைக் கொண்ட உருவத்திற்கு வந்து விடுங்கள்! அர்ஜுனன் எந்த வடிவத்தைக் காண விரும்புகிறான்? 'நான்கு கைகளுடன் கூடிய உருவத்தைக்' காண விரும்புகிறான். இப்போது, இந்த நான்கு கைகளுடன் கூடிய உருவம் என்றால் என்ன? என்பதைப் பார்க்க வேண்டும்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்**
**ரூபம் பரம் தர்சிதமாத்மயோகாத்**
**தேஜோமயம் விஷ்வமனந்தமாத்யம்**
**யன்மே த்வதன்யேன ந த்ருஷ்டபூர்வம் (47)**

இந்த முறையில் அர்ஜுனனுடைய பிரார்த்தனையைக் கேட்ட பிறகு ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு கூறினார் : "அர்ஜுனா! நான் உனக்கு அருள் செய்யும் வகையில், என்னுடைய யோக சக்தியின் தனிப்பெரும் வல்லமையால் எனது மேலான தெய்வீகப் பேரொளி (தேஜோமயமான) பொருந்திய, எல்லாவற்றிற்கும் ஆதியான எல்லையற்ற விஸ்வரூபத்தை உனக்குக் காட்டியருளினேன். அதை உன்னைத் தவிர, வேறு யாரும் இதற்கு முன்பு ஒருபோதும் கண்டதில்லை.

**ந வேத யஜ்ஞாத்த்யயனைர்நதானைர்**
**ந ச க்ரியாபிர்ன தபோபிருக்ரை :**
**ஏவம்ரூப : ஷக்ய அஹம் ந்ருலோகே**
**த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர (48)**

அர்ஜுனா! இந்த மானுட உலகத்தில் இம்முறையில் விச்வரூப வடிவினராகிய என்னை வேதத்தாலோ, வேள்வியாலோ, வேதப் படிப்பினாலோ, தானத்தாலோ, கிரியையினாலோ கடுமையான தவத்தாலோ மற்றும் உன்னைத் தவிர, வேறு யாராலுமோ காணமுடியும் என்ற சாத்தியம் இல்லவே இல்லை. அதாவது, உன்னைத் தவிர இந்த தெய்வீக உருவத்தை வேறு யாராலும் பார்க்கவே முடியாது. அப்படி என்றால் கீதையால் உங்களுக்கு ஒரு பயனும் இல்லை! பகவானை தரிசனம் செய்யும் தகுதி அர்ஜுனனுடன் நின்று போய்விட்டது. அப்படித்தானே? ஆனால்,

அவரே முன்பு ஓரிடத்தில், "அர்ஜுனா! விருப்பு, பயம் மற்றும் கோபம் (குரோதம்) ஆகியவற்றையெல்லாம் துறந்து, நிலைத்த (அனன்ய) மனத்துடன் அதாவது, என்னைத் தவிர, வேறு யாரையும், எதையும், மற்றபிற தெய்வங்களையும் மனத்தால் எண்ணாமல் என்னையே சரணமடைந்த எத்தனையோ பேர்கள் ஞானம் என்னும் தவத்தால் புனிதமடைந்து, நேரடியாக என்னை தரிசனம் செய்து அனுபவத்துடன் சேர்ந்து அறிந்ததுடன் என்னுடைய ஆன்ம வடிவத்தையும் அடையப் பெற்றிருக்கிறார்கள்" என்று கூறியிருக்கிறார். ஆனால், இங்கேயோ அவர், "உன்னைத் தவிர வேறு யாரும் இதுவரைப் பார்த்ததில்லை. எதிர்காலத்தில் பார்க்கப் போவதும் இல்லை" என்கிறார். எனவே, இந்த அர்ஜுனன் என்பவன் தான்யார்? அர்ஜுனன் எனப்படுவது, யாரோ ஒரு உடல் தரித்தவனா? அவனொரு தனிப்பட்ட மனிதனா என்ன? என்று கேட்டால் 'இல்லை' இல்லவே இல்லை' என்பதுதான் பதில், அனுராகமே (இறைப்பற்று) அர்ஜுனன் ஆவான். இறையன்பு இல்லாத எவனுமே இதுவரை இறைவனை பார்த்ததும் இல்லை, மேலும் எதிர்காலத்தில் பார்க்கப் போதும் இல்லை. எல்லாப் பக்கங்களில் இருந்தும் சித்தத்தை முழுமையாக விடுவித்துக் கொண்டு இஷ்ட தெய்வத்திடம் (ஸத்குரு) மட்டுமே விருப்பம் கொண்டிருப்பதுதான் அனுராகம் (இறைப்பற்று) எனப்படுகிறது. அத்தகையதொரு அன்புடையவனால் மட்டும்தான் இறைவனை அடையமுடியும் என்பது விதிமுறையாகும்.

**மா தே வ்யதா மா ச விமூடபாவோ**
**த்ருஷ்ட்வா ரூபங் கோரமீத்ருங்மமேதம்**
**வ்யபேதபீ : ப்ரீதமனா : புனஸ்த்வம்**
**ததேவ மே ரூபமிதம் ப்ரபஷ்ய (49)**

இந்த முறையில் எனது இந்தப் பயங்கரமான உருவத்தைக் கண்டு உனக்குக் கலக்கமும் மதிமயங்கிய மூடஉணர்வும் உண்டாக வேண்டாம்! மற்றும் இதன்காரணமாக பயந்து என்னிடமிருந்து விலகி விடாதே! இப்போது நீ பயமின்றியும் பேரன்பும் பெருமகிழ்ச்சியும் கொண்ட மனத்துடன் அதே என்னுடைய இந்த உருவத்தைப் பார். அதாவது, நான்கு கைகளுடன் கூடிய எனது உருவத்தை மறுபடியும் பார்.

**சஞ்ஜய உவாச்ச**
**இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்ததோக்த்வா**
**ஸ்வகம் ரூபம் தர்ஷயாமாஸ பூய :**
**ஆஷ்வாஸயாமாஸ ச பீதமேனம்**
**பூத்வா புன : சௌம்யவபுர்மஹாத்மா (50)**

சஞ்ஜயன் கூறினான் : "எங்கும் வாசம் செய்யும் தெய்வமாகிய அந்த வாஸுதேவர் அர்ஜுனனிடம் இவ்வாறு கூறியபிறகு தம்முடைய அதே அமைதியான உருவத்தைக் காட்டினார். அதற்குப் பிறகு மகாத்மாவாகிய ஸ்ரீகிருஷ்ணர் **சௌம்யவபு** : அதாவது, மிகவும் மகிழ்ச்சியடைந்தவராக, பயபீதியடைந்து இருந்த அர்ஜுனனுக்கு தைரியம் அளித்தருளினார். அர்ஜுனன் கூறினான்.

**அர்ஜுன உவாச்ச**
**த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ சௌம்யம் ஜனார்த்தன**
**இதானீமஸ்மி ஸம்வ்ருத்த : ஸசேதா : ப்ரக்ருதிம் கத : (51)**

ஜனார்த்தனா! உங்களுடைய இந்தப் பேரமைதியான இனிய மானுட உருவத்தைக் கண்டு இப்போது நான் தெளிவடைந்து, மகிழ்ச்சியான சித்தத்துடன் கூடிய எனது இயல்பைத் திரும்பவும் பெற்றுக் கொண்டேன். அர்ஜுனன், "பகவானே! இப்போது நீங்கள் உங்களுடைய அந்த நான்கு கைகளுடன் கூடிய சதுர்புஜ வடிவத்தை எனக்குக் காட்டியருளுங்கள்" என்று வேண்டினான். யோகேஷ்வரரும் தம்முடைய சதுர்புஜ வடிவத்தை அர்ஜுனனுக்குக் காட்டியருளினார். ஆனால், அர்ஜுனன் அதைப் பார்த்த போது என்ன பெற்றான்? அவன், '**மானுஷம் ரூபம்**' – மானுட உருவத்தைப் பார்த்தான். உண்மையில், இறைவனை அடைந்த மகாபுருஷரே **சதுர்புஜர்** மற்றும் **அனந்த புஜர்** (எண்ணற்ற கைகளை உடையவர்) என்றெல்லாம் அழைக்கப்படுகிறார். இரண்டு கைகளை உடைய, மகாபுருஷரோ அன்புடையவனுக்கு எதிரே (அனுராகி) உட்கார்ந்திருக்கிறார். ஆனால், வேறு எங்கிருந்தும் மற்றவர்கள் (மற்ற அன்பு நிறைந்த பக்தர் பெருமக்கள்) அவரை நினைத்துக் கொண்டிருந்தால் அதே மகாபுருஷர், அவரது நினைவில் ஈடுபட்டுள்ள பக்தர்களின் இதயதேசத்தில் எழுந்தருளி சாரதியாகிறார். அந்த பக்தரை ஆன்மீகப் பாதையில் வழிநடத்தியும் செல்கிறார். 'புஜம்' அதாவது 'கைகள்' காரியம், அதாவது செயலாக்கத்தின் உருவகமாகும். அவர் அகத்திலும் செயல்படுகிறார். புறத்திலும் செயல்படுகிறார். இதுவே, '**சதுர்புஜர்**' அதாவது '**நான்கு கைகளுடன் கூடிய வடிவம்**' என்பதன் பொருளாகும். அவருடைய கைகளில் உள்ள சங்கு, சக்கரம், கதை மற்றும் பத்மம் (தாமரை) ஆகியவை முறையே சத்தியத்தை அடையச் செய்யும் இலட்சிய முழக்கம், சாதனைச் சக்கரத்தினை இயக்குவித்தல் அல்லது நிர்வகித்தல், புலனடக்கம் மற்றும் மனக்கட்டுப்பாடு, புனிதம் மற்றும் தூய்மை வாய்ந்த செயல்களைப் புரியும் வல்லமை ஆகியவற்றின் உருவகங்கள் ஆகும். அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணரின், நான்கு கைகளுடன் கூடிய சதுர்புஜ வடிவத்தைப் பார்த்தபோது மானுட உருவமாக இருந்ததற்கு இதுவே காரணமாகும். சதுர்புஜம் அதாவது,

நான்கு கைகளுடன் கூடிய வடிவம் என்பது மகாபுருஷர்கள் உடலளவில் மற்றும் ஆன்ம வடிவத்தில் இருந்து கொண்டு ஆன்மீகம் சார்ந்த மேலான, உயர் காரியங்களைச் செய்வதற்கான சிறப்பு விதிமுறைகளின் பெயராகுமே தவிர, எவரோ, நான்கு கைகளுடன் இருக்கும் ஸ்ரீகிருஷ்ணர் என்று புரிந்து கொள்ளக் கூடாது.

**ஸ்ரீ பகவானுவாச்ச**
**ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவானஸி யன்மம**
**தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சனகாங்க்ஷிண : (52)**

மகாத்மா ஸ்ரீகிருஷ்ணர் கூறினார் : "அர்ஜுனா! நீ தரிசனம் செய்த என்னுடைய இந்த தெய்வீக உருவம் காண்பதற்கரியது. ஏனெனில், தேவதைகளும் கூட எப்போதும் இந்த உருவத்தையே தரிசனம் செய்ய வேண்டும் என்றே விருப்பம் கொண்டுள்ளனர். உண்மையில் அனைவராலும் சித்தரை, சாதுவை **(ஸந்த்)** அதாவது, மகாபுருஷரை அடையாளம் கண்டு கொள்ள முடியாது. **பூஜ்ய ஸ்ரீ ஸத்ஸங்கீ** மகராஜ் அவர்கள் (பூஜ்ய ஸ்ரீ பரமானந்த பரமஹம்ஸரின் குரு) சாதகரின் அகத்தில் எழுந்தருளி ஆன்மீகத் தூண்டுணர்வை ஏற்படுத்தி, ஆன்மீகப் பாதையில் வழிநடத்திச் செல்லும் வல்லமை படைத்த முழுமையானதொரு மகாபுருஷராவார். ஆனால், உலகமோ அவரைப் பைத்தியம் என்றே எண்ணிக் கொண்டிருந்தது. புண்ணிய ஆத்மாக்கள் ஒரு சிலருக்கு மட்டுமே 'அவர் ஒரு ஸத்குரு ஆவார்!' என்பது இறைவனால் (அசீரீரி வாக்கு) உணர்த்தப்பட்டது. அத்தகையோர் மட்டுமே அவரை இதயத்தில் தியானம் செய்து, அவர் நிலைபெற்றிருந்த ஆன்ம வடிவத்தை அடைந்து, மேலான பரம பதத்தைப் (வீடுபேறு அல்லது முக்தி நிலை) பெற்றனர். இதையேதான் ஸ்ரீகிருஷ்ணரும் எவருடைய இதயத்தில் தெய்வீகச் செல்வம் அதாவது தெய்வீகக் குணங்கள் விழிப்புற்று இயக்கநிலையில் உள்ளதோ, அத்தகைய தேவர்களும் கூட எப்போது எனது இந்தக் காண்பதற்கரிய தெய்வீக உருவத்தைக் காண்போம் என்று எந்நேரமும் பெரும் எதிர்பார்ப்புடன் இருக்கின்றனர். அப்படியானால், வேள்வி, தானம் மற்றும் வேதங்களைக் கற்றல் (வேத அத்யயனம்) ஆகியவற்றின் மூலமாக உங்களைக் காணமுடியுமா? என்ற கேள்விக்கு, அந்த மகாத்மா ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு பதிலளிக்கிறார்.

**நாஹம் வேதைர்ன தபஸா ந தானேன ந சேஜ்யயா**
**ஷக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா (53)**

நீ என்னைத் தரிசனம் செய்ததுபோல, வேதங்களாலோ, தவங்களாலோ, தானங்களாலோ, மற்றும் வேள்விகளாலோ எல்லாம் நான் காண்பதற்கு

சுலபமானவன் இல்லை. அப்படியென்றால், உங்களை தரிசனம் செய்வதற்கு எந்த உபாயமுமே இல்லையா என்ன? என்ற கேள்விக்கு அந்த மகாத்மா, 'ஒரேயொரு உபாயம் இருக்கிறது' என்கிறார்.

**பக்த்யா த்வனன்யயா சக்ய அஹமேவம்விதோஅர்ஜுன**
**ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப (54)**

சிறந்த தவமுடையவனே! அர்ஜுனா! நிலைத்த (அனன்ய) பக்தியின் மூலமாக, அதாவது, என்னைத் தவிர, மற்றபிற தெய்வங்களை எல்லாம் நினைக்காமல், நிலைத்த (அனன்ய) சிரத்தையுடன் அதாவது என்னைத் தவிர மற்றபிற தெய்வங்கள் மீதெல்லாம் நம்பிக்கை வைக்காமல் என்னை மட்டுமே நினைப்பது மற்றும் என்னிடம் மட்டுமே நம்பிக்கை கொண்டிருப்பதன் மூலமாக மட்டுமே நான் இந்தமுறையில் நேருக்கு நேராக தரிசனம் செய்வதற்கும், தத்துவரீதியாக அறிந்து கொள்வது, மற்றும், (என்னிலேயே) நுழைவு பெறுவதற்கும் சுலபமாகிறேன். அதாவது, இறைவனை அடைவதற்கு எளிமையான ஒரே வழி நிலைத்த (அனன்ய) பக்தி ஒன்று மட்டும்தான். ஏழாவது அத்தியாயத்தில் ஏற்கனவே தெளிவாக விளக்கப்பட்டிருப்பதைப் போலவே, கடைசியில் இந்த ஞானமும் கூட நிலைத்த பக்தியாகப் பரிணமித்து விடுகிறது. ஏற்கனவே அவர், "உன்னைத் தவிர வேறு யாரும் பார்க்கவும் இல்லை; பார்க்கப் போவதும் இல்லை" என்று கூறியுள்ளார். ஆனால், இங்கேயோ, "நிலைத்த (அனன்ய) பக்தியால் நேரடியாக என்னைத் தரிசித்து அறிந்து கொள்வதுடன், என்னிலேயே நுழைவும் பெறமுடியும் என்கிறார். அதாவது அர்ஜுனன் நிலைத்த (அனன்ய) பக்தனுடைய பெயராகும். அர்ஜுனன் என்பது ஆன்மீகத்தில் உயர்ந்ததொரு மனநிலையின் பெயராகும். இறைப்பற்றையுடைய அன்பே, அனுராகமே அர்ஜுனன் ஆவான். கடைசியில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். —

**மத்கர்மக்ருன்மத்பரமோ மத்பக்த : ஸங்கவர்ஜித :**
**நிர்வைர : ஸர்வ பூதேஷு ய : ஸ மாமேதி பாண்டவ (55)**

அர்ஜுனா! எவர் என்மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம், அதாவது, என்மூலமாகப் பரிந்துரை செய்யப்பட்டுள்ள கர்மமாகிய, வேள்வியின் செயல்முறை எனப்படுகின்ற கர்மத்தைச் (யஜ்ஞார்த்த கர்மம்) செய்கிறார்களோ, **மத்பரம : —** என்னையே சரணடைந்து, என்னிடமே அடைக்கலமாகிக் கொண்டு ஈடுபடுகிறார்களோ, என்னுடைய நிலைத்த பக்தர்களோ **ஸங்கவர்ஜித : —** (ஆனால், சங்கதோஷம் அல்லது சேர்க்கை தோஷங்களில் இருந்து கொண்டிருந்தால் அந்தக் கர்மம் நடைபெறுவதில்லை. எனவே அத்தகைய சேர்க்கை தோஷங்களில் இருந்து விலகியிருந்து கொண்டு, **நிர்வைர : ஸர்வ பூதேஷு** – மனிதர் உட்பட எல்லா

உயிரினங்களிடமும் விரோத உணர்வின்றிக் கர்மம் செய்பவரே என்னை வந்தடைகிறார். அப்படியென்றால் அர்ஜுனன் யுத்தம் செய்தானா, இல்லையா? அவன் சபதமெடுத்து ஜயத்ரதன் முதலானோர்களைக் கொன்றானா? இல்லையா? ஒருவேளை, அவன் ஜயத்ரதன் என்றொரு தனிமனிதனைக் கொன்றிருந்தால், பகவானைத் தரிசனம் செய்திருக்கவே முடியாது. ஆனால், அர்ஜுனனோ பகவானை தரிசனம் செய்திருக்கிறான். இதிலிருந்தே கீதையின் ஒரு சுலோகம் கூடப் புற உலகில் நடைபெறும் வெட்டு, குத்து, கொலைகளை ஆதரித்துப் பேசவில்லை என்பது தெளிவாகிறது. எவரொருவர் பகவானால் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மமாகிய வேள்வியின் செயல்முறையைக் கடைப்பிடித்து வருகிறாரோ, அனன்ய உணர்வுடன் இறைவனைத் தவிர வேறு எதையும் மனத்தால் கூட நினையாதிருக்கிறாரோ, உலகின் சேர்க்கை தோஷங்களிலிருந்தெல்லாம் விலகியிருக்கிறாரோ, அவரைப் பொறுத்தவரையில் யுத்தத்தின் உண்மையான உருவம் என்னவாக இருக்க முடியும்? உங்களைத் தவிர, வேறு யாருமே இல்லை எனும் போது யாருடன் நீங்கள் யுத்தம் செய்வீர்கள்? "எவருக்கு மனிதர் உட்பட எல்லா உயிரினங்களிடமும் எந்தவிதமான விரோத மனப்பான்மையும் கிடையாதோ, மனத்தால்கூட எவருக்கும் துன்பமிழைக்க வேண்டும் என்று கற்பனை கூடச் செய்யாதவரோ, அவரே என்னை வந்தடைகிறார்" என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். அப்படி இருக்கும் போது அர்ஜுனன் புறவுலகச் சண்டையில் ஈடுபட்டிருப்பானா என்ன? ஒருபோதும் இல்லை.

உண்மையில் சேர்க்கை தோஷங்களில் இருந்து விலகித் தனியாக அமர்ந்து கொண்டு நிலைத்த சிந்தனையில் ஈடுபடும்போதுதான், நிச்சயிக்கப்பட்டுள்ள வேள்வியின் செயல்முறையைச் செய்கின்ற அந்தச் சமயத்தில்தான், வழியை மறைப்பதுபோல, விருப்பு வெறுப்பு, காமம் – கோபம் முதலான வெல்வதற்கரிய எதிரிகள் தடையை ஏற்படுத்தும் நோக்கத்துடன் உங்கள் முன்வந்து நின்று கொள்கின்றன. அவற்றையெல்லாம் வென்று கடந்து செல்வதே 'யுத்தம்' எனப்படுகிறது.

**முடிவுரை :-**

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் பின்வருமாறு கூறினான்: பகவானே! உங்களுடைய தெய்வீக மகிமைகளைப் பற்றி நான் விபரமாகக் கேட்டேன். அதன் மூலமாக என்னுடைய மோகம் அழிந்து விட்டது, அஞ்ஞானம் ஒழிந்து விட்டது. ஆனால்; நான் எங்கும் நீக்கமற நிறைந்தவன் என்று நீங்களே கூறியிருப்பதை நான் நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்ள விரும்புகிறேன். ஒருவேளை, எனக்கு அந்த தெய்வீகத் திருவுருத்தைக் காட்டுவது சாத்தியமாக இருந்தால், தயை கூர்ந்து அதைக் காட்டியருளுங்கள்". அர்ஜுனன் பிரியமான

தோழனும் நிலைத்த சேவகனும் ஆவான். அதனால் தான் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் எந்தவிதமான எதிர் கருத்தும் கூறாமல் உடனே அவனுக்குத் தம்முடைய ஆன்ம வடிவத்தைக் காட்ட ஆரம்பித்தவராக, "இப்போது எனக்குள் அடங்கியிருக்கும் சப்த ரிஷிகள் மற்றும் அவர்களுக்கும் முந்தைய காலத்தைச் சேர்ந்த ரிஷிகளையும் பார். பிரம்மா மற்றும் விஷ்ணுவைப் பார். எங்கும் பரவியிருக்கும் என்னுடைய தெய்வீக ஒளியைப் பார். என்னுடைய சரீரத்திலேயே ஓரிடத்தில் நின்றுகொண்டிருக்கும், நீ அசைவன, அசையாதவை, நகர்வன, நகராதவை என்று அனைத்தும் அடங்கிய ஒட்டு மொத்த உலகத்தையும் பார்" என்றெல்லாம் கூறிக்கொண்டே போனார். ஆனால், அர்ஜுனனோ கண்களை வெறுமனே கசக்கிக் கொண்டிருந்தானே ஒழிய, அவனுக்கு ஒன்றுமே தெரியவில்லை. இம்முறையில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இரண்டு, மூன்று சுலோகங்கள் வரைக்கும் தொடர்ந்து தமது தெய்வீக வடிவத்தைக் காட்டியபடியே இருந்தார். ஆனால், அர்ஜுனனுக்கு ஒன்றும் தென்படவில்லை. அந்த சமயத்தில் யோகேஷ்வரரிடம் எல்லா தெய்வீக மகிமைகளும் இருக்கத்தான் செய்தன. ஆனால், அர்ஜுனனுக்கோ அவர் ஒரு சாதாரண மனிதராகவே தென்பட்டார். அந்நிலையில், இவ்வாறு தமது தெய்வீக வடிவத்தை காட்டிக் கொண்டிருந்த யோகேஷ்வரரர் ஸ்ரீகிருஷ்ணர் திடீரென்று அதை நிறுத்தியபடியே, பின்வருமாறு கூறினார்: "அர்ஜுனா! உன்னுடைய இந்த ஊனக் கண்களால் (உலகியல் சார்ந்த சாதாரணக் கண்ணோட்டம்) நீ என்னைப் பார்க்க முடியாது. உன்னுடைய புத்தியைக் கொண்டு (உலகியல் சார்ந்த சாதாரண அறிவு) நீ என்னை மதிப்பிடவும் முடியாது. எனவே, இப்போது நான் உனக்கு என்னைப் பார்க்க முடிகின்ற அந்த தெய்வீகப் பார்வையைத் (உலகியலுக்கு அப்பாற்பட்ட தெய்வீகக் கண்ணோட்டம் சத்குருவின் மூலமாக மட்டுமே கிடைக்க வல்லது.) தருகிறேன், பெற்றுக்கொள்." பகவான் அவனுக்கு எதிரில்தான் நின்று கொண்டிருந்தார். இப்போது அர்ஜுனன் பார்த்தான். எல்லாவற்றையும் உண்மையாகவே பார்த்தான். இந்த தெய்வீக தரிசனத்தைப் பெற்றபிறகு, அவன் தன்னுடைய சிறிய தவறுகளைக்கூட மன்னித்தருளும்படி வேண்டலானான். உண்மையில், அவைகளெல்லாம் தவறுகளே இல்லைதான். உதாரணமாக அவன், "பகவானே! நான் உங்களைப் பலமுறை கிருஷ்ணா! யாதவா! என்றும் பலமுறை நண்பா! என்றும் சொல்லியிருக்கிறேன். அதற்காக எல்லாம் நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள்!" என்று பிரார்த்தனை செய்தான். ஸ்ரீ கிருஷ்ணரும் அவனை மன்னித்து விட்டார். ஏனெனில், அர்ஜுனனின் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டதால்தான் அவர் இனிமையான, மகிழ்ச்சியான, இயல்பான வடிவத்திற்குத் திரும்பியவராக அவனைத் தைரியப்படுத்தினார்.

உண்மையில் கிருஷ்ணா! என்று அழைப்பதில் தவறு ஒன்றும் இல்லைதான்

அவர் மாநிறம் உடையவர்தானே! எங்கிருந்து பிறகு, அவரை சிவப்பானர் என்று அழைப்பது? யது வம்சத்தில்தானே பிறந்தார்! ஸ்ரீகிருஷ்ணரேதான் அர்ஜுனனைத் தம்முடைய நண்பராக ஏற்றுக் கொண்டிருந்தார்! உண்மை என்னவென்றால், ஒவ்வொரு சாதகருமே மகாபுருஷரை ஆரம்பத்தில் அவ்வாறுதான் புரிந்து கொண்டிருக்கிறார்கள். சிலர் அவருடைய உருவம், மற்றும் தோற்றத்தை வைத்து எடை போடுகிறார்கள். சிலரோ, அவருடைய வெளியுலக நடவடிக்கைகளைக் கொண்டு மதிப்பிடுகின்றனர். இன்னும் சிலரோ, அவரைத் தங்களுக்குச் சமமாகவே எண்ணிப் பழகுகின்றனர். அவருடைய யதார்த்தமான ஆன்ம வடிவத்தை யாரும் அறிவதில்லை. அவருடைய, சிந்தனைக்கெல்லாம் அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தைப் பார்த்து அர்ஜுனன், அவர் கறுப்புமல்ல, சிவப்புமல்ல, ஏதோவொரு குறிப்பிட்டதொரு குலத்தில் பிறந்தவரோ அல்லது எவருக்கும் சமமான நண்பரோ இல்லை என்பதை நன்றாகப் புரிந்து கொண்டான். அவருக்குச் சமமாக எவருமே இல்லை எனும்போது எங்கிருந்து அவர் யாருக்கும் நண்பராக இருக்க முடியும்? சரிநிகர் சமமானவர் என்றுதான் எப்படிக் கருதமுடியும்? அவர் சிந்தனைக்கு எல்லாம் அப்பாற்பட்ட ஆன்ம வடிவம் ஆவார். அதை அவர் யாருக்குக் காட்டுகிறாரோ அவரே காணமுடியும். எனவேதான் அர்ஜுனன் தனது ஆரம்ப காலத் தவறுகளுக்கெல்லாம் மன்னிப்புக் கேட்கலானான்.

கிருஷ்ணா! என்று அழைப்பது குற்றமென்றால், அவருடைய திருநாமத்தை எப்படி ஜபிப்பது? என்றொரு கேள்வி இங்கே எழுகிறது. யோகேஷ்வரர் ஸ்ரீ கிருஷ்ணர் தாமே ஜபம் செய்வது எப்படி? என்பதைத் தெளிவாக விளக்கியுள்ளார். அவர் ஜபத்திற்காகக் கூறியுள்ள விதிமுறைகளைக் கடைப்பிடித்து, அதன்படியே நீங்களும் ஆன்ம சிந்தனை மற்றும் இறை நினைவில் (தியானம்) ஈடுபடுங்கள்! அவர் கூறுகிறார்: "**ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன்** – **ஓம்** என்பதே அழிவற்ற, குறைவற்ற பிரம்மத்தின் திருநாமம் ஆகும். ஓ **அஹம்ஸ ஓம்** எங்கும் வெளிப்படையாக நீக்கமற நிறைந்துள்ளது எதுவோ, அதுவே என்னுள்ளே மறைந்திருக்கிறது. இதுவே **ஓம்** என்பதன் பொருளாகும். நீங்கள் இந்த **ஓம்** என்னும் திருநாமத்தையே ஜபம் செய்யுங்கள். என்னுடைய (ஸத்குருவின்) திருவுருத்தையே தியானம் செய்யுங்கள்". தம்முடைய திருவுருவம், ஓம் என்னும் திருநாமம் – இதுவே ஸ்ரீ கிருஷ்ணர் கூறியது.

அர்ஜுனன் பகவானிடம், நான்கு கைகளுடன் கூடிய சதுர்புஜ உருவத்தில் தரிசனம் தருமாறு பிரார்த்தனை செய்தான். ஸ்ரீகிருஷ்ணரும் மிகவும் இனிமையான, மகிழ்ச்சியான சாந்த (அமைதியான) வடிவத்தை ஏற்று அவனுக்கு தரிசனம் அளித்தார். அர்ஜுனன் கூறினான்: பகவானே! உங்களுடைய இந்த இனிமையும்

மகிழ்ச்சியும் நிறைந்த உருவத்தைப் பார்த்த பிறகுதான் நான் இயல்பு நிலைக்கு வந்தேன். அவன் கேட்டதோ **சதுர்புஜஸ்வரூப** தரிசனம். ஆனால் கிடைத்ததோ, மனித உருவ தரிசனம். உண்மை என்னவென்றால், என்றும் நிலையாக உள்ள, மாறாத இறைவனில் நுழைவு பெற்று விட்ட யோகியானவர் உடலால் ஓரிடத்தில் அமர்ந்து கொண்டு, வெளியில் தமது இரண்டு கைகளால் ஏதேனும் காரியத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தாலும்கூட ஆன்மவடிவின் மூலமாக எங்கிருந்தெல்லாம் பக்தர்கள் அவரை நினைக்கின்றார்களோ, ஒரே சமயத்தில் அவர்கள் அனைவருடைய இதயங்களில் எழுந்தருளி ஆன்மீகத் தூண்டுணர்வை ஏற்படுத்துபவராகச் செயல்படுகிறார். 'கைகள்' என்று குறிப்பிடுவது அவருடைய 'காரியம்' அதாவது செயலாக்கத்தின் உருவகமாகும். அதுவே, 'சதுர்புஜம்' எனப்படுகிறது.

ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்: "அர்ஜுனா! உன்னைத் தவிர எனது இந்த தெய்வீகத் திருவுருவத்தை யாரும் பார்த்தது இல்லை. மேலும், இனிமேல் எதிர்காலத்திலும் பார்க்கப் போவதில்லை." அப்படியென்றால் கீதையால் நமக்கு எந்தப் பயனும் இல்லையா என்ன? அப்படி ஒன்றும் இல்லை. யோகேஷ்வரர், 'ஒரு உபாயம் இருக்கிறது' என்கிறார். எவர் என்னுடைய நிலைத்த பக்தரோ, அதாவது, என்னைத் தவிர வேறு எதையும், யாரையும், மற்றபிற தெய்வங்களையும் நினைக்காமல் நிரந்தமாக என்னை மட்டுமே சிந்தனை (தியானம்) செய்கிறாரோ, அத்தகைய, அவருடைய நிலையான பக்தியின் மூலமாக மட்டுமே நான் நேரடியாக தரிசனம் செய்வதற்கும் (எவ்வாறு நீ தரிசனம் செய்தாயோ) தத்துவ ரீதியாக அறிந்து கொள்ளப்படுவதற்கும் மற்றும் என்னுள் நுழைவு பெறுவதற்கும் சுலபமாகிறேன். அதாவது, அர்ஜுனன் நிலையான பக்தன் ஆவான். பக்தியின் தூய்மையான உருவமே அன்பு அனு ராகம் (இறைப்பற்று) எனப்படுவது. அது இஷ்டதெய்வத்தின் மீது (சத்குரு – இறைவன்) மட்டுமே கொண்டிருக்கும் ஆழமான பிடிப்புணர்வு ஆகும். **மிலஹிம் ந ரகுபதி பினு அனுராகா** – (இறைப்பற்று) இல்லாதவன் எவனும் ஒருபோதும் என்னை அடைந்ததில்லை அடையப் போவதுமில்லை. அன்பு (இறைப்பற்று) அனுராகம் மட்டும் இல்லையென்றால் இலட்சம் முறை வேண்டுமானால் யோகம் பழகுங்கள்; ஜபம் செய்யுங்கள்; தவம் செய்யுங்கள் அல்லது தானம் அளியுங்கள். ஆனால் அவர் (இறைவன்) கிடைக்க மாட்டார். எனவேதான் இஷ்ட தெய்வத்திடம் (சத்குரு – இறைவன்) மட்டுமே விருப்பம், அல்லது நிலையான பக்தி மிகவும் அவசியமாகும்.

இறுதியில் ஸ்ரீ கிருஷ்ணர் கூறினார்: "அர்ஜுனா! என்மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய். என்னுடைய நிலையான பக்தனாக இருந்து கொண்டு செய். என்னைச் சரணடைந்து கர்மத்தில் ஈடுபடு. ஆனால், உலகியல் சேர்க்கை தோஷங்களில் இருந்து விலகித் தனியாக இருந்து கொண்டு

கர்மத்தைச் செய். உலகியல் சேர்க்கை தோஷங்களில் மாட்டிக் கொண்டிருந்தால் இந்தக் கர்மம் நடைபெறுவதில்லை. எனவே, சேர்க்கை தோஷம் இந்த கர்மத்தில் முன்னேறிச் செல்வதற்குப் பெருந்தடையாகும். எவர் விரோத பாவனை இல்லாமல் இருக்கிறாரோ, அவரே, என்னை அடைகிறார்". எங்கே சேர்க்கை தோஷமே இல்லையோ, நம்மைத் தவிர வேறு யாருமே இல்லையோ, மனத்தில் விரோத பாவனைக்கான எண்ணமும் இல்லையோ, அங்கே யுத்தம் எப்படி? புற உலகத்தில் மோதல்களும் சண்டைகளும் நடக்கவே செய்கின்றன. ஆனால், நிரந்தரமான வெற்றி என்பது அவற்றிலெல்லாம் வெற்றி பெற்றவர்களுக்கும் கூடக் கிடைப்பதில்லை. எளிதில் வெல்ல முடியாத உலகம் என்னும் எதிரியை வைராக்கியம் என்ற ஆயுதத்தால் வெட்டி வீழ்த்தி இறைவனுக்குள் நுழைவு பெறுவதுதான் உண்மையான வெற்றியாகும். அத்தகைய வெற்றிக்குப் பின்னால்தான் தோல்வி என்பதே கிடையாது.

இந்த அத்தியாயத்தில் முதலில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனுக்குத் தெய்வீகப் பார்வையை அளித்தார். அவர் பிறகு தம்முடைய விஸ்வரூபத்தைக் காட்டியருளினார். அத்துடன்

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே விஸ்ப ரூப தர்சன யோகோ நாமைகாதசோத்த்யாய**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'விஸ்வ ரூப தரிசன யோகம் என்ற பெயருடைய பதினோராவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா யதார்த்த கீதா பாஷ்யே விஸ்வரூப தர்சன யோகோ நாமைகாதசோத்த்யாய –**

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'விஸ்வரூப தரிசன யோகம்' என்ற பெயருடைய பதினோராவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

// ஹரி ஓம் தத்ஸத் //

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம
## பன்னிரண்டாவது அத்தியாயம்

பதினோராவது அத்தியாயத்தின் முடிவில் ஸ்ரீகிருஷ்ணர் மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கூறுவது என்னவென்றால், "அர்ஜுனா! நீ பார்த்த என்னுடைய அந்த ஆன்ம வடிவத்தை உன்னைத் தவிர, இதற்கு முன்பு எவரும் பார்த்ததும் இல்லை. எதிர்காலத்தில் யாரும் பார்க்கப் போவதும் இல்லை. நான் தவத்தாலோ, வேள்வியாலோ, தானத்தாலோ எல்லாம் பார்ப்பதற்குச் சுலபமானவன் இல்லை. ஆனால், நிலைத்த பக்தியின் மூலமாக அதாவது, என்மீது, நம்பிக்கைக் கொண்டு நிரந்தரமாக, எண்ணெய் ஒழுக்கைப் போன்று, ஒரே சீராக, என்னையே சிந்தனை செய்வதன் மூலமாக, கண்கூடாக நீ பார்த்ததைப் போன்றே, நான், நேரடியாக தரிசனம் செய்து கொள்வதற்கும் தத்துவத்துடன் சேர்த்து, அறிந்து கொள்ளப்படுவதற்கும் நுழைவு பெறுவதற்கும் சுலபமானவன் ஆவேன். எனவே, அர்ஜுனா! நிரந்தரமாக என்னையே சிந்தனை செய், பக்தனாக மாறு" என்கிறார். அவர் அந்த அத்தியாயத்தின் முடிவில், "அர்ஜுனா! நீ என் மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்! **மத்பரம: –** ஆனால், என்னையே சார்ந்து என்னையே அடைக்கலமாகிக் கொண்டு செய்! நிலைத்த பக்திதான் என்னை அடைவதற்கான ஒரேவழியாகும்" என்று கூறினார். புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட (அவ்யக்தம்) ஆன்ம வடிவத்தை வழிபாடு செய்பவர் மற்றும் உங்களுடைய திருவுருத்தை (சகுணம்) வழிபாடு செய்பவர், இவ்விரண்டு பேரில் உயர்ந்தவர் யார்? என அர்ஜுனனுக்கு இப்படியொரு கேள்வி எழுவது இயல்பானதுதானே?

இங்கே, அர்ஜுனன் இந்தக் கேள்வியை மூன்றாவது முறையாக எழுப்புகிறான். அவன் ஏற்கனவே மூன்றாவது அத்தியாயத்தில், "பகவானே! ஒருவேளை (பற்றற்ற) கர்ம யோகத்தை விட ஞான யோகமே (ஸாங்க்ய யோகம்) சிறந்தது என்று நீங்கள் கருதினால், என்னை மட்டும் ஏன் இந்தப் பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்கள்?" என்று கேட்டான். அதற்கு ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! பற்றற்ற கர்ம யோகம் பிடித்திருந்தாலும் சரி, ஞான யோகம் பிடித்திருந்தாலும் சரி, இரண்டு கண்ணோட்டங்களிலுமே கர்மத்தை செய்தேதான் ஆகவேண்டும். இவ்வளவு தூரம் இருக்கும் போது எவன் புலன்களை வலுக்கட்டாயமாக அடக்கிக் கொண்டு மனத்தால் உலகியல் விஷயங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறானோ, அவன் வெறும் தற்பெருமைக்காரனே தவிர, ஞானியல்ல. ஆகவே அர்ஜுனா! நீ கர்மத்தைச் செய்!" என்றார். எந்தக் கர்மத்தைச் செய்ய வேண்டும்? என்ற கேள்விக்கு அவர், "**நியதம் குரு கர்மத்வம் –** நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்" என்றார். எது நிச்சயிக்கப்பட்டுள்ள

கர்மம்? என்ற கேள்விக்கு "வேள்வியின் செயல்முறை ஒன்றை மட்டுமே கர்மம் என்கிறோம்" என்று பதில் தந்தார். அவர் இன்னும் விரிவாக வேள்வியின் விதிமுறைகளை விளக்கினார். அதுவே ஆராதனை, ஆன்ம சிந்தனை எனப்படுவதன் சிறப்பான விதி முறைகள் என்றும் அதுவே இறைவனில் நுழைவு பெற்றுத் தருகின்ற செயல் முறை என்றும் அறியப்படுகிறது. பற்றற்ற கர்மமார்க்கம், ஞானமார்க்கம் ஆகிய இரண்டு வழிகளிலுமே கர்மம் செய்துதான் ஆகவேண்டும். வேள்வியைச் செயல்முறைப்படுத்துகின்ற கர்மத்தைச் (யஜ்ஞார்த்த கர்மம்) செய்துதான் ஆக வேண்டும். அந்த வேள்விக்கிரியை ஒன்றுதான் என்றால் இரண்டு வழிகளுக்கும் இடையில் உள்ள வேறுபாடுதான் என்ன? பக்தன் கர்மங்களைச் சமர்ப்பணம் செய்து இஷ்ட தெய்வத்தை (ஸத்குரு – இறைவன்) முழுக்க முழுக்கச் சார்ந்து நின்று, அவரையே அடைக்கலம் புகுந்து இந்த வேள்வியை செயல்முறைப்படுத்துகின்ற யஜ்ஞார்த்த கர்மத்தில் ஈடுபடுகிறான். ஞானயோகியோ (ஸாங்க்ய யோகி) தன்னுடைய சக்தியைப் புரிந்து கொண்டு, சொந்தபலத்தைச் சார்ந்து நின்று கொண்டு அதே கர்மத்தில் கடும் முயற்சியுடன் ஈடுபடுகிறான்.

ஐந்தாவது அத்தியாயத்தில் அர்ஜுனன் மறுபடியும் கேள்வி எழுப்பினான். "பகவானே! நீங்கள் ஞான யோக (ஸாங்க்ய யோகம்) வழியில் கர்மம் செய்வதைப் பாராட்டிக் கூறுகிறீர்கள். சிலசமயம் சமர்ப்பண (நிஷ்காம கர்மம்) வழியில் கர்மம் செய்வதைப் பாராட்டிக் கூறுகிறீர்கள். – இவர்கள் இருவரில் சிறந்தவர் யார்? அர்ஜுனன் இரண்டு கண்ணோட்டங்களிலுமே கர்மத்தை மட்டும் செய்தேயாக வேண்டும் என்பது வரைக்கும் புரிந்து கொண்டு விட்டான். அதற்குப் பிறகும் கூட, இரண்டில் சிறந்தது எது? என்பதைத் தேர்ந்தெடுக்க விரும்புகிறான். ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்: அர்ஜுனா! இரண்டு கண்ணோட்டங்களிலுமே அதற்கேற்பக் கர்மத்தை மட்டும் செய்து கொண்டே முன்னேறுபவர்கள் என்னையே வந்தடைகிறார்கள். ஆனால், ஞான மார்க்கத்தை (ஸாங்க்ய யோகம்) விட (பற்றற்ற) நிஷ்காம கர்ம மார்க்கமே சிறந்ததாகும். (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தைப் பயிலாமல் யாரும் யோகியும் ஆவதில்லை, ஞானியும் ஆவதில்லை. ஞான யோகம் கடினமானது. அதில் கஷ்டங்கள் அதிகம் உள்ளன".

இங்கேயும் மூன்றாவது முறையாக அர்ஜுனன் அதே கேள்வியைத்தான் முன்வைக்கிறான்: "பகவானே! உங்களை நிலைத்த பக்தியுடன் வழிபடுபவன், புலன் உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட அழிவற்ற, குறைவற்ற பிரம்மத்தை வழிபடுபவன் (ஞானயோகி – ஸாங்க்ய யோகி) இவர்கள் இருவரில் சிறந்தவன் யார்?

**அர்ஜுன உவாச**

**ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே**
**யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா (1)**

'**ஏவம்**' அதாவது, இம்முறையில், இப்பொழுது நீங்கள் கூறியுள்ள விதிமுறைகளைச் சரியாகப் பின்பற்றி நிலைத்த பக்தியுடன், உங்களுடைய சரணத்தை அடைந்து உங்களுடனே நிரந்தரமாக எப்போதும் இணைந்தும், உங்களையே நல்ல முறையில் வழிபடுபவர்கள், மற்றும் மற்றொரு வகையினர் அதாவது, உங்களுடைய சரணத்தை அடையாமல், தன்னிச்சையுடன், தன்னை மட்டுமே முழுமையாக நம்பிக் கொண்டு, அதே அழிவற்ற, குறைவற்ற மற்றும் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தை (அவ்யக்த ஸ்வரூபம்) வழிபடுபவர்கள், அதாவது எந்தப் புலன் உணர்வுக்கு அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தில் நீங்கள் நிலைபெற்றுள்ளீர்களோ, அதையே வழிபடுபவர்கள் – இந்த இரண்டு வகையான பக்தர்களில் அதிக உயர்வான, யோகத்தில் தேர்ந்தவர் (யோக வேத்தா) யார்? இது பற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். –

**ஸ்ரீ பகவானுவாச் ச**
**மய்யாவேஷ்ய மனோ யே மாம் நித்ய யுக்தா உபாஸதே**
**ஸ்ரத்தயா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா: (2)**

அர்ஜுனா! என்னிலேயே மனத்தை ஒருமுகப்படுத்தி, நிரந்தரமாக, என்னிடமே இணைந்தவர்களாக, எந்த பக்தர்கள், மேலான பரம்பொருளுடன் மட்டுமே தொடர்பு கொள்கின்ற உயர்ந்த நம்பிக்கையுடன் கூடியவர்களாக என்னையே வழிபடுகிறார்களோ, அவர்களே யோகியருள் எல்லாம் மேன்மையான யோகிகள் என்று ஏற்றுக் கொள்ளப்படத் தக்கவர்கள் ஆவர்.

**யே த்வக்ஷரம நிர்தேஷ்யமவ்யக்தம் பர்யுபாஸதே**
**ஸர்வத்ரகமசிந்த்யம் ச கூடஸ்த்தமசலம் த்ருவம் (3)**
**ஸன்னியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய:**
**தே ப்ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: (4)**

எவரொருவர் புலன்கள் அனைத்தையும் சிறந்த முறையில் கட்டுப்படுத்தி மனம் மற்றும் புத்தி ஆகியவற்றின் சிந்தனைக்கும் வெகு அப்பால் உள்ள, எங்கும் நீக்கமற நிறைந்தவரும், விளக்கங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்ட வடிவத்தையுடையவரும், எப்போதும் நிலைமாறாதவரும், என்றும் நிலையான, அசைவற்ற, புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்பட்ட, உருவமற்ற மற்றும் அழிவில்லாத பிரம்மத்தை வழிபடுகின்ற, மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் நலனை விரும்புகின்ற மற்றும் எல்லோரிடமும் சமமான உணர்வும்

கொண்டிருக்கிறாரோ, அந்த யோகியும் என்னைத்தான் அடையப் பெறுகிறார். மேலே கூறப்பட்டுள்ள பிரம்மத்தின் சிறப்புக் குணங்கள் யாவும் என்னிலிருந்து வேறுபட்டவை அல்ல. ஆனால் –

**க்லேஷோதிகதரஸ்தேஷாமவ்யக்தாஸக்தசேதஸாம்**
**அவ்யக்தா ஹி கதிர்துக்கம் தேஹவத்பிரவாப்யதே (5)**

அந்தப் புலன் உணர்வுகளுக்கு எல்லாம் அப்பாற்ப்பட்ட **(அவ்யக்த)** பரமாத்மாவிடம் விருப்பம் கொண்ட சித்தத்தை உடையவர்களின் சாதனைகளில் வேதனை **(க்லேசம்)** நிறைந்திருக்கிறது. ஏனெனில், உடல் உணர்வு நீங்கப்படாதவர்களால், புலன் உணர்வுகளைக் கடந்திருக்கும் இறைப் பேருணர்வு நீடித்து வேதனையான வடிவில்தான் உணரப்படுகிறது. எதுவரை உடல்பற்று இருக்கிறதோ, அதுவரை புலன் உணர்வு கடந்த இறைப் பேருணர்வு நிலையினைப் பெறுவது இயலாத காரியம் ஆகும்.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஒரு சத்குரு ஆவார். புலன் உணர்வுகளுக்கு அப்பாற்ப்பட்ட பரமாத்மாவை அடைந்தவர் ஆவார். எனவேதான் அவர், "மகா புருஷருடைய சரணத்தை ஏற்காமல், எந்தவொரு சாதகர் தன்னுடைய சக்தியைப் புரிந்து கொண்டு, இப்போது நான் இந்த நிலையில் இருக்கிறேன். இதற்குப் பிறகு, இந்த நிலையை அடைவேன். நானே என்னுடைய புலன் உணர்வுகளைக் கடந்த அவ்யக்த உடலை (ஆன்ம ஸ்வரூபம்) அடையப் பெறுவேன், அதுவே என்னுடைய இயல்பாகிவிடும். நான் அதுவேதான் என்றெல்லாம் இந்த முறையில் யோசித்தபடியே இறைநிலையைப் பெறுவதற்காகப் பரிந்துரை செய்யப்பட்டுள்ள நிச்சயிக்கப்பட்டுள்ள சாதனைகளைச் செய்து கொண்டே காத்திருக்காமல், தங்களுடைய உடலையே (உடல் உணர்வையே) **ஸோ–அஹம்** "அவனேநான்" என்றெல்லாம் சொல்லிக் கொள்ளத் துவங்குகிறார்கள். இதுதான் இந்த ஆன்மீகப் பாதையில் மிகப் பெரிய தடையாகும். அவர்கள், **"துக்காலயம் அசாஸ்வதம்"** – துக்கம் நிறைந்த நிலையில்லாத, இந்த உடல் மற்றும் உடல் உணர்விற்குள்ளேயே சுற்றியலைந்து நின்று விடுகிறார்கள்" என்கிறார்.

ஆனால், எவர் என்னுடைய சரணத்தை ஏற்றுக் கொண்டு இந்த ஆன்மீகப் பாதையில் செல்கிறாரோ அவர் –

**யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸன்யஸ்ய மத்பரா:**
**அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே (6)**

"என்னை மட்டும் சார்ந்து கொண்டு, என்னிடமே அடைக்கலம் புகுந்து எல்லாக் கர்மங்களையும் அதாவது, ஆராதனைக் கர்மத்தை என்னிடமே

அர்ப்பணம் செய்து, என்னைத் தவிர, வேறு எதையும் விரும்பாத உணர்வுடன் (நிலைத்த பாவம்) யோகம், அதாவது, இறை ஆராதனைச் செயல்முறைகளின் மூலமாக நிரந்தரமாகச் சிந்தனை செய்தபடியே வழிபாடு செய்கிறாரோ, மேலும்

**தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத்**
**பவாமி நசிராத்பார்த்த மய்யாவேஷிதசேதஸாம் (7)**

"என்மீது மட்டுமே தன்னுடைய சித்தத்தை வைத்துக் கொண்டிருக்கும் அந்த பக்தர்களை நான் சீக்கிரமே மரணம் அலைமோதுகின்ற இந்த உலகம் என்னும் பெருங்கடலில் இருந்து மீட்பவனாகிறேன்" எனக் கூறினார். இம்முறையில், சித்தத்தைத் தம்மீது மட்டுமே வைப்பதற்கு ஊக்கமளித்தல் மற்றும் அதற்கான விதிமுறைகள் பற்றி யோகேஷ்வரர் விளக்கமளிக்கிறார்.

**மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேஷய**
**நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்த்வம் ந ஸம்சய: (8)**

எனவே அர்ஜுனா! நீ என்மீது மட்டுமே மனத்தை நிலைநிறுத்து; என்மீது மட்டுமே உனது புத்தியை வை! இதற்குப் பிறகு நீ என்னிலேயே வாசம் செய்வாய். இதில் சிறிதளவு கூடச் சந்தேகம் இல்லை. மனம் மற்றும் புத்தியை அவர்மீது நிலைநிறுத்த முடியவில்லை என்றால் என்ன செய்வது? ('மனத்தை நிலைநிறுத்துவது என்பது காற்றை வசப்படுத்துவதைப் போலவே மிகவும் கடினமான செயல்' என்று கருதுவதாக அர்ஜுனன் ஏற்கனவே கூறியுள்ளான்.) இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். –

**அத சித்தம் ஸமாதாதும் ந ஷக்னோஷி மயி ஸ்த்திரம்**
**அப்யாஸ யோகேன ததோ மாமிச்சாப்தும் தனஞ்ஜய (9)**

ஒருவேளை நீ மனத்தை என்மீது எந்தச் சலனமும் இல்லாமல் நிலைநிறுத்துவதில் திறமையில்லாதவனாக உணர்ந்தால் அர்ஜுனா! யோகப் பயிற்சி செய்வதன் மூலமாக என்னை அடைவதற்காக ஆசைப்படு. (எங்கெல்லாம் சித்தம் ஓடுகிறதோ, அங்கிருந்து எல்லாம் அதைத்தடுத்து விடுவித்துக் கொண்டு வந்து) அதே இறை ஆராதனை, அதாவது ஆன்மீகச் சிந்தனைக் கிரியையில் தொடர்ந்து ஈடுபடுத்துவதற்குப் பெயர்தான் யோகப் பயிற்சி எனப்படுகிறது.) ஒருவேளை இதையும் செய்ய முடியாது என்பது போல் உணர்ந்தால் அடுத்து என்ன செய்வது?

**அப்யாஸேஅப்யஸமர்த்தோஅஸி மத்கர்மபரமோ பவ**
**மதர்த்தமபி கர்மாணி குர்வன்ஸித்திமவாப்ஸ்யஸி (10)**

ஒருவேளை நீ யோகத்தைப் பயிற்சி செய்வதிலும் திறமையற்றவனாக இருந்தால், என்னை அடைவதற்காக மட்டுமே கர்மத்தைச் செய். அதாவது, இறை ஆராதனையில் ஈடுபடுவதில் விடாமுயற்சியுடையவனாக இரு! இம்முறையில், என்னை அடைவதற்காக மட்டும் கர்மங்களைச் செய்து கொண்டே நீயும் 'இறைவனை அடைதல்' என்னும் சித்தியைப் பெற்றுவிடுவாய். அதாவது, யோகப் பயிற்சியை முழுமை பெறச் செய்ய முடியவில்லை என்றால்கூட இந்தச் சாதனைப் பாதையிலேயே இருந்து கொண்டு தொடர்ந்து கர்மங்களைச் செய்து வா!

**அதைததப்யசக்தோஅஸி கர்த்தும் மத்யோகமாச்ரித:**
**ஸர்வகர்மபலத்யாகம் தத: குரு யதாத்மவான் (11)**

ஒருவேளை இதையும் செய்ய முடியவில்லையென்றால், எல்லாக் கர்மங்களின் பலனைத் துறந்து விட்டு, அதாவது, இலாப—நஷ்டம் பற்றிய சிந்தனையை துறந்துவிட்டு **"மத்யோக"** அதாவது, முழுமையான சமர்ப்பண உணர்வுடன் ஆன்ம வடிவமாக விளங்கும் மகாபுருஷரின் சரணத்தைப் பற்றிக் கொள். அவரால் ஊக்கம் அடையப் பெற்று, கர்மம் தானாகவே நிகழத் தொடங்கும். சமர்ப்பண உணர்வுடன் கர்மங்களின் பலனைத் தியாகம் செய்வதன் மகத்துவத்தைப் புகழ்ந்து யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார் —

**ச்ரேயோ ஹி ஜ்ஞானமப்யாஸாஜ்ஞானாத்த்யானம் விசிஷ்யதே**
**த்யானாத்கர்மபலத்த்யாகஸ்த்யாகாச்சாந்திரனந்தரம் (12)**

சித்தத்தைத் தடுத்து நிறுத்துகின்ற யோகப் பயிற்சியை விடவும் ஞான யோகத்தின் மூலமாகக் கர்மத்தைச் செய்து கொண்டே போவது சிறந்தது. ஞானயோகம் மூலமாகக் கர்மத்தைச் செயல்முறைப்படுத்துவதுடன் ஒப்பிடும்போது தியானம் மிகவும் சிறந்தது. ஏனெனில், தியானத்தில் இஷ்ட தெய்வம் (ஸத்குரு) திருவுருவம்) அல்லவா இருக்கிறார்! தியானத்தை விடவும் எல்லாக் கர்மங்களின் பலனையும் தியாகம் செய்வது மிகமிக உயர்ந்ததும் சிறந்ததும் ஆகும். ஏனெனில், இஷ்ட தெய்வத்திடமே (ஸத்குரு) சமர்ப்பணமாகிக் கொண்டு, யோகத்தில் கவனம் வைத்தபடியே கர்மங்களின் பலனைத் தியாகம் செய்வதால், அத்தகைய சாதகனின் யோக நலன் சம்பந்தப்பட்ட அனைத்துப் பொறுப்புகளையும் இஷ்ட தெய்வமானவர் (சத்குரு — இறைவன்) தமது கைகளில் எடுத்துக் கொள்கிறார். எனவே, இவ்வாறு தியாகம் செய்த அடுத்த கணமே அந்த சாதகன் மேலான அமைதியைப் பெற்று விடுகிறான்.

இதுவரைக்கும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், புலன் உணர்வுகளைக் கடந்து நிற்கும் (அவ்யக்த ஸ்வரூபம்) இறைப் பேருணர்வாகிய பிரம்மத்தை வழிபாடு செய்யும் ஞானயோகியை விடவும் சமர்ப்பண உணர்வுடன் கர்மம்

செய்கின்ற நிஷ்காம (பற்றற்ற) கர்ம யோகியே சிறந்தவன். இருவருமே ஒரே கர்மத்தைத்தான் செய்கிறார்கள். ஆனால், ஞான மார்க்கத்தின் பாதையில் தடைகள் அதிகம் உள்ளன. அவனுடைய யோகத்தின் இலாப, நஷ்டம் பற்றிய பொறுப்புகள் அனைத்தையும் அவனே சுமக்க வேண்டியுள்ளது. ஆனால், சமர்ப்பண உணர்வுடைய பக்தனுடைய யோக நலன் பற்றிய பொறுப்புகளை மகாபுருஷர் தாமே ஏற்றுக் கொண்டுவிடுகிறார். எனவேதான், அவன் கர்மத்தின் பலன்களைத் தியாகம் செய்வதன் மூலம் வெகுசீக்கிரமே மேலான அமைதியைப் பெற்று விடுகிறான். இப்போது அத்தகைய மேலான அமைதியை அடையப் பெற்றவரின் இலட்சணம் பற்றிக் கூறுகிறார். –

**அத்வேஷ்டா ஸர்வபூதானாம் மைத்ர: கருண ஏவச**
**நிர்மமோ நிரஹங்கார: ஸமதுக்கஸுக: க்ஷமீ (13)**

இந்த முறையில் மேலான அமைதியை அடையப் பெற்ற சாதகரானவர் மனிதர் உட்பட எல்லா உயிர்களிடமும் வெறுப்புணர்வு என்பது அறவே இல்லாதவராக, அனைவருக்கும் அன்பராக, மற்றும், சுயநலமின்றிப் பரந்த மனத்துடன் உதவுபவராக, 'நான்', 'எனது', என்ற ஆணவம் இல்லாதவராக, அகங்காரம் இல்லாதவராக, சுகம், துக்கம் ஆகியவற்றில் சமமாக நடந்து கொள்பவராக, மன்னித்தருள்பவராக, பொறுமைசாலியாக இருக்கிறார்.

**ஸந்துஷ்ட : ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஸ்ச்சய :**
**மய்யர்பிதமனோபுத்திர்யோ மத்பக்த : ஸ மே ப்ரிய : (14)**

எவரொருவர் நிரந்தரமாக யோகத்தின் உயர் நிலை கைகூடப் பெற்றவராக விளங்குகிறாரோ, இலாபம், நஷ்டத்தில் சமமான உணர்வுடன் (திருப்தியுடன்) இருக்கிறாரோ, மனத்துடன் சேர்த்துப் புலன்கள் மற்றும் உடலையும் தம்முடைய வசத்தில் கட்டுப்படுத்தியவரோ, திடமான உறுதி படைத்தவரோ, அத்தகைய, என்னிடமே அர்ப்பிக்கப்பட்ட மனத்தையும் புத்தியையும் உடைய என்னுடைய பக்தரே எனக்கு மிகமிகப் பிரியமானவர்.

**யஸ்மான்னோத்விஜதே லோகோ லோகான்னோத்விஜதே ச ய :**
**ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர்முக்தோ ய: ஸ ச மே ப்ரிய : (15)**

எவரால் எந்தவொரு உயிரும் மனத்துயரம் அடைவதில்லையோ, எவர் மற்ற உயிர்களால் தாமும் துயரம் அடைவதில்லையோ, எவர் மகிழ்ச்சி, துக்கம், பயம் மற்றும் மனத்தில் எழும் எல்லாவிதமான உணர்வு பேதலிப்புகளில் இருந்தும் விடுதலை பெற்றவரோ, அத்தகைய பக்தர் எனக்கு மிகமிகப் பிரியமானவர்.

சாதகர்களுக்கு இந்த சுலோகம் மிக்க பயனுள்ளதாகும். 'நம் மூலமாக எவருடைய மனமும் புண்பட்டு விடக் கூடாது' என்ற அளவிற்கு அவன் நடந்து கொள்ள வேண்டும். இதையெல்லாம் சாதகனால் பின்பற்றி நடக்க இயலும். ஆனால், மற்றவர்கள் இதைப் பின்பற்றி நடந்து கொள்ள மாட்டார்கள். அவர்களெல்லாம் உலகியலைப் பற்றிக் கொண்டு உழல்பவர்கள்தானே! அவர்கள் நெருப்பை அள்ளி வீசவே செய்வார்கள்; எதை வேண்டுமானாலும் சொல்வார்கள். ஆனால், சாதகனோ அவர்களுடைய தாக்குதல்களைக் கண்டுத் தன்னுடைய இதயத்தில் எந்தவிதமான சலனமோ, குழப்பமோ அடைந்து விடக் கூடாது. ஆன்ம சிந்தனையிலேயே மனத்தின் கவனப் பார்வையை (ஸுரத்) நிலைநிறுத்தி வைத்திருக்க வேண்டும். ஆன்ம சிந்தனைத் தொடர் அறுந்து விடக் கூடாது. உதாரணமாக, நீங்கள் சாலையின் ஓரமாக, சாலை விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டு வலது பக்கமாகப் போய்க் கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். திடீரென்று எவனோ ஒரு குடிகாரன் உங்கள் மீது மோத வந்தால் அவனிடமிருந்து தப்பித்துக் கொள்வது உங்கள் பொறுப்பேயாகும்.

**அனபேக்ஷ : சுசிர்தக்ஷ உதாஸீனோ கதவ்யத :**
**ஸர்வாரம்பபரித்யாகீ யோ மத்பக்த : ஸ மே ப்ரிய : (16)**

எவரொருவர் ஆசைகளையெல்லாம் துறந்தவராக எல்லாவிதத்திலும் புனிதமானவராக **தக்ஷ:–** அதாவது, ஆராதனைச் சிறப்பு விதிமுறைகளில் நன்கு தேர்ச்சி பெற்றவராக (தக்ஷ: – என்றால் 'திருடுவதில் கைதேர்ந்தவன்' என்று பொருள் அன்று. ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் கர்மம் என்பது ஒன்றுதான். அதுவே, நியமிக்கப்பட்டுள்ள கர்மம் எனப்படும் ஆராதனை – ஆன்ம சிந்தனை ஆகும். அதைச் செயல்படுத்துவதில் கைதேர்ந்தவன் என்று பொருள் கொள்ள வேண்டும்.) பாரபட்சம் அனைத்திற்கும் அப்பாற்பட்டவராக, துக்கங்களில் இருந்தெல்லாம் விடுபட்டவராக, எல்லா ஆரம்பங்களையும் துறந்தவராகத் திகழும் அந்த என்னுடைய பக்தர் எனக்குப் பிரியமாவர். அதாவது, செய்வதற்குத் தகுதியுடைய யோகக் கிரியையானது அவர் மூலமாக முழுவதுமாக நிறைவேற்றி முடிக்கப்பட்டு விட்டது. இனிமேல் அவர் மூலமாக ஆரம்பிக்கப்படுவதற்கு, கர்மத்தில் எதுவும் எஞ்சியிருக்கவில்லை என்று இதற்குப் பொருள்.

**யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஷோசதி ந காங்க்ஷதி**
**ஷுபாஷுபபரித்யாகீ பக்திமான்ய : ஸ மே ப்ரிய : (17)**

எவர் ஒருவர் ஒருபோதும் அதிகமான மகிழ்ச்சியோ (மனஎழுச்சி) வெறுப்போ (மனத்தாழ்ச்சி) அடைவது இல்லையோ, மேலும் கவலைப் படுவதும்

எதையும் விரும்புவதுமில்லையோ, எவர் நல்லவை மற்றும் தீயவை (சுபம், அசுபம்) ஆகிய அனைத்துக் கர்மங்களின் பலன்களையும் துறந்தவரோ, எவரிடம் நன்மையானது தனித்து எஞ்சி இருக்கவில்லையோ தீமையானது எஞ்சியிருக்கவுமில்லையோ, பக்தியின் இந்த உயர் நிலை கைகூடப் பெற்ற அவர் எனக்கு மிகமிகப் பிரியமானவர் ஆவார்.

**ஸம: ஷத்ரௌ ச மித்ரே ச ததா மானாபமானயோ:**
**சீதோஷ்ணஸுகதுக்கேஷு ஸம : ஸங்கவிவர்ஜித : (18)**

எவரொருவர் எதிரி மற்றும் நண்பரிடம் மானம் மற்றும் அவமானத்திலும் சமமான நிலையுடன் இருக்கிறாரோ, எவருடைய ஆழ்மனத்தில் எண்ணவோட்டங்கள் அனைத்தும் ஒரேயடியாக அமைதியடைந்து விட்டனவோ, எவர் குளிர்ச்சி, வெப்பம், சுகம், துக்கம் ஆகிய இரு வேறுபட்ட சூழ்நிலை மற்றும் உணர்வு நிலைகளிலும் (இருமைகள்) சமமாக இருக்கிறாரோ, மேலும், எந்தப் பற்றுதலும் இல்லாதவரோ – மற்றும்,

**துல்யநிந்தாஸ்துதிர்மௌனீ ஸந்துஷ்டோ யேன கேனசித்**
**அனிகேத : ஸ்த்திரமதிர்பக்திமான்மே ப்ரியோ நர : (19)**

எவரொருவர் இகழ்ச்சி மற்றும் புகழ்ச்சி ஆகியவற்றைச் சமமாக எடுத்துக் கொள்கிறாரோ, ஆழ்சிந்தனைத்திறனின் உச்சவரம்பு நிலையை அடைந்து எவருடைய மனம் மற்றும் புலன்கள் முழுக்க, முழுக்க அமைதியடைந்து விட்டதோ, எவர் எந்த முறையில் தம்முடைய உடல் சார்ந்த விஷயங்கள் நிர்வகிக்கப்பட்டாலும் எப்போதுமே திருப்தியான மனநிலையுடன் இருக்கிறாரோ, எவர் தம்முடைய வாழுமிடத்தைப் பற்றிய எந்தப் பெருமையும் பற்றுணர்வும் கர்வமும் இல்லாதவரோ பக்தியின் உயர் நிலையை அடைந்து விட்ட அந்த நிலைத்த அறிவுடைய (ஸ்திர புத்தி) பக்தர் எனக்கு மிகவும் பிரியமானவர்.

**யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே**
**ஷ்ரத்தானா மத்பரமா பக்தாஸ்தேஅதீவ மே ப்ரியா: (20)**

எவரொருவர் என்னையே சார்ந்து நின்று, என்னிடமே அடைக்கலமாகி, மகிழ்ச்சியும், சிரத்தையும் (நம்பிக்கையும்) கூடியவராக இருக்கிறாரோ, அந்த, மேலே கூறப்பட்டுள்ள தர்மமயமான அமிர்தம் போன்ற கருத்துக்களை மிகவும் நல்லமுறையில் அனுசரித்து வருகின்ற, அந்த பக்தர் எனக்கு மிகவும் பிரியமானவர் ஆவார்.

**முடிவுரை :**

கடந்த அத்தியாயத்தின் முடிவில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! நீ பார்த்ததைப் போன்று, உன்னைத் தவிர வேறு யாரும் இதற்கு முன்பும் என்னை அடைந்ததுமில்லை. இனிமேலும் அடையப்போவதுமில்லை. ஆனால், நிலைத்தபக்தி அல்லது இறைப்பற்றுடன் (அனுராகம்) யாரெல்லாம் என்னை இறைவழிபாடு செய்கிறார்களோ, அவர்களே இந்த முறையில் என்னை நேரடியாக தரிசனம் செய்யவும், தத்துவ ரீதியாக என்னை அறிந்து கொள்ளவும் முடியும். அத்துடன் மட்டுமின்றி என்னிலேயே நுழையவும் (பிரவேசிக்கவும்) முடியும். அதாவது, பரமாத்மா என்பது அடைவதற்குத் தக்கதொரு நிலைதான். எனவே அர்ஜுனா! நீ பக்தனாக மாறு!" என்றார்.

இந்த அத்தியாயத்தில் அர்ஜுனன், "பகவானே! நிலைத்த (அனன்ய) உணர்வுடன் உங்களைச் சிந்தனை செய்பவர், மற்றும் புலன் உணர்வுகளைக் கடந்த, அழிவற்ற, குறைவற்ற பிரம்மத்தை வழிபாடு செய்பவர் – இவர்கள் இருவரில் (உயர்வான யோக வேத்தா) யோகத்தில் சிறந்தவர் யார்?" என்றொரு கேள்வி கேட்டான். அதற்கு யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "இருவருமே என்னைத்தான் வந்தடைகிறார்கள். ஏனெனில், நான் புலன் உணர்வுகளைக் கடந்த இறைப் பேருணர்வு எனப்படும் ஆன்ம வடிவத்தில் (அவ்யக்தம்) நிலைபெற்றவன். ஆனால், எவர் புலன்களை எல்லாம் தமது கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொண்டு, மனத்தை எல்லாப் பக்கங்களிலிருந்தும் விடுவித்து, புலன் உணர்வுகளைக் கடந்த இறைப் பேருணர்வு என்னும் அவ்யக்த வடிவத்தை அடையும் முயற்சியில் ஈடுபடுகிறாரோ, அவருடைய சாதனைப் பாதையில் வேதனைகள் (க்லேஷம்) நிறைந்து இருக்கின்றன. எதுவரைக்கும் உடல் உணர்வு இருக்கிறதோ, அதுவரைக்கும் புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வு எனப்படும் புலப்படாத ஆன்ம வடிவத்தை அடைவதென்பது அத்தகைய சாதகரைப் பொறுத்தவரையில் வேதனை நிறைந்ததாகும். ஏனெனில், புலன் உணர்வுகளுக்கு அப்பாற்ப்பட்ட (அவ்யக்த ஸ்வரூபம்) இறைப் பேருணர்வு என்பது சித்தம் முழுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு, இறைவனில் இரண்டறக் கலந்து மறைகின்ற காலத்தில்தான் கிடைக்கிறது. அதற்கு முன்பு, அவனுடைய உடலே (உடல் உணர்வு) இதற்கு நடுவில் மிகப் பெரிய தடையாக அல்லவா நின்று கொண்டிருக்கிறது! 'நான் இருக்கிறேன், நான் அடையப் போகிறேன்' என்றெல்லாம் கூறியவாறே அவன் தன்னுடைய உடல் உணர்விலேயேதான் சிக்கிக் கொள்கிறான். இதனால் அவன் நிலை தடுமாறிப் போவதற்க்குத்தான் அதிகமான வாய்ப்புகள் உள்ளன. ஆகவே! அர்ஜுனா! நீ எல்லாக் கர்மங்களையும் என்னிடமே சமர்ப்பணம் செய். நிலைத்த (அனன்ய) பக்தியுடன் கூடியவனாக

என்னுடைய சிந்தனையில் (தியானம்) ஈடுபடு. என்னை மட்டுமே சார்ந்து, என்னிடம் மட்டுமே அடைக்கலம் புகுந்த பக்தர்கள் எல்லாக் கர்மங்களையும் என்னிலேயே அர்ப்பணம் செய்து, மனித உடலைத் தாங்கிக் கொண்டிருக்கும் என்னை, தெய்வீக குணங்களுடன் கூடிய எனது திருவுருவத்தை (சத்குருவின் திருவுருவம் – சகுண வழிபாடு) தியானத்தின் மூலமாக, ஒரே சீராகவும், இடையறாதும் விழுகின்ற எண்ணெய் ஒழுக்கைப் போன்று, நிரந்தரமாகச் சிந்தனை செய்கின்றனர். அத்தகையவர்களை நான் வெகு சீக்கிரமே இல்லறச் சூழலில் இருந்து மீட்பவனாகிறேன். எனவேதான் பக்தி மார்க்கமே உயர்ந்தது சிறந்ததும் ஆகும்.

"அர்ஜுனா! என்னிடமே மனத்தை நிலைநிறுத்து! மனம் நிலைக்க மறுத்தால் நிலைக்கச் செய்வதற்கான பயிற்சியை மேற்கொள்! எங்கெல்லாம் சித்தம் செல்கிறதோ, அங்கிருந்தெல்லாம் அதனை மீட்டுக் கொண்டு வந்து என்மீதே நிலைக்கச் செய்! இதையும் உன்னால் ஒருவேளை செய்ய முடியவில்லை என்றால் நீ என்மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்! கர்மம் ஒன்றுதான். அதுவே, வேள்வியைச் செயல்முறைப்படுத்துகின்ற கர்மமாகிய யஜ்ஞார்த்த கர்மம் எனப்படுவது. நீ செய்யத் தகுதி படைத்த அந்தக் 'கார்யம் கர்மத்தை' மட்டுமே செய்! வேறொன்றையும் செய்யவேண்டாம். முக்தி கிடைக்கிறதோ இல்லையோ, இந்தக் கர்மத்தை மட்டும் தொடர்ந்து கடைப்பிடித்து வா! இதையும் கூட ஒருவேளை உன்னால் செய்ய முடியவில்லையென்றால், நிலைத்த தன்மை உடையவரும், ஸ்திதப்ரக்ஞரும், ஆன்ம வடிவமானவரும், தத்துவத்தை அடைந்தவருமான மஹாபுருஷரின் சரணத்தை ஏற்று எல்லாக் கர்மங்களின் பலன்களையும் தியாகம் செய்! அவ்வாறு தியாகம் செய்த அடுத்த கணமே மேலான அமைதியைப் பெற்று விடுவாய்!" என்றார்.

அதையடுத்து மேலான அமைதியைப் பெற்று விடுகின்ற பக்தருடைய இலட்சணங்களைப் பற்றிக் கூறும்போது யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு விவரிக்கிறார்: "எவரொருவர் மனிதர் உட்பட எல்லா உயிர்களிடமும் வெறுப்புணர்வு என்பது அறவே இல்லாமல், கருணை உள்ளம் உடையவராகவும், பரந்த மனத்துடன் உதவுபவராகவும், கர்வம் மற்றும் அகங்காரம் இல்லாதவராகவும் இருக்கின்றாரோ, அந்த பக்தர் எனக்கு மிகவும் பிரியமானவர். தியானத்தில் – யோகத்தில் நிரந்தரமான முயற்சியுடைய, ஆன்மாவில் மட்டுமே விருப்பம் உடைய, ஆன்மாவில் மட்டுமே நிலைபெற்றுள்ள, அந்த பக்தர் எனக்குப் பிரியமானவர். யாரால் எவருமே மனத் துயரம் அடைவதில்லையோ, யார் எவராலும் மனக் கிளர்ச்சி அடைவதில்லையோ, அத்தகைய பக்தர் எனக்குப் பிரியமானவர். மேலும் எவர் புனிதமானவரோ, வேள்விச் செயல்முறைகளில் தேர்ந்தவரோ,

பாரபட்சமான நிலைகளை எல்லாம் கடந்து நடுநிலையானவரோ, எல்லா ஆரம்பங்களையும் தியாகம் செய்து கரை கடந்து விட்டவரோ, அத்தகைய பக்தர் எனக்குப் பிரியமானவர். யார் எல்லாவிதமான ஆசைகளையும் துறந்தவரோ மற்றும் நல்லவை, தீயவை (சுபம், அசுபம்) ஆகிய அனைத்தையும் கடந்தவரோ, அத்தகைய பக்தர் எனக்குப் பிரியமானவர். எவர் இகழ்ச்சி, புகழ்ச்சியில் சமமான நிலையையுடையவரோ மற்றும் மௌனத்தைக் கடைப்பிடிப்பவரோ, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் அமைதியடையப் பெற்றவரோ, எந்தவகையிலும் தம்முடைய உடல் நிர்வாகம் பேணப்பட்டாலும் அதில் மனநிறைவுடையவராக இருக்கிறாரோ, மேலும் தாம் வாழ்கின்ற, வசிக்கின்ற இடத்தைப் பற்றி எந்த வகையிலும் பெருமையோ, பற்றுதலோ கொள்ளாதவரோ, உடலைப் போற்றிக் காப்பதில் சிறிதும் விருப்பமோ, ஆசையோ இல்லாதவரோ அத்தகைய நிலைத்த, இறைப்பற்றுடைய பக்தி ததும்பிய சாதக புருஷரே! எனக்குப் பிரியமானவர் ஆவார்."

இந்த முறையில் பதினோராவது சுலோகத்தில் இருந்து பத்தொன்பதாவது சுலோகம் வரைக்கும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மேலான அமைதியைப் பெற்ற, யோகம் கைகூடப் பெற்ற, **பக்தருடைய** தெய்வீக வாழ்வியலைப் பற்றிய விரிவான விளக்கம் அளித்துள்ளார். இவையெல்லாம் சாதகர்களுக்கு மிகவும் பயனுள்ளவைகளாகும், இறுதியில் அவர் தீர்மானமாகக் கூறுகிறார்: "அர்ஜுனா! என்னை மட்டுமே சார்ந்து நின்று, என்னில் மட்டுமே அடைக்கலம் புகுந்து, நிலைத்த நம்பிக்கையுடன் கூடியவரே, மேலே கூறப்பட்டுள்ள இந்த தர்ம மயமான (அறநெறியிலான) அமிருதத்தை (மரணமில்லாப் பெருவாழ்வு) பற்றற்ற உணர்வுடன் மிகவும் சரியான முறையில் நடைமுறைப்படுத்துகின்ற அந்த பக்தரே எனக்கு மிகவும் பிரியமானவர்". எனவே சமர்ப்பணத்துடன் சேர்த்து இந்தக் கர்மத்தைச் செய்வதுதான் உயர்வானது; சிறப்பானது. ஏனெனில், அதன் இலாப நஷ்டங்களின் பொறுப்புகளை எல்லாம் அந்த இஷ்ட தெய்வமே (ஸத்குரு – இறைவன்) தமது கைகளில் எடுத்துக் கொள்கிறார். இங்கே, ஸ்ரீகிருஷ்ணர் ஆன்ம வடிவத்தில் நிலைபெற்றுள்ள மகாபுருஷரின் இலட்சணங்களை எடுத்துரைத்தார். மேலும், அவருடைய சரணத்தை அடையுமாறும் கூறினார். அதற்கும் மேலாக அவர் கடைசியில் தம்முடைய சரணத்திற்கு வருமாறு ஊக்கமளித்து, தாமும் அந்த மஹாபுருஷர்களுக்கு ஈடானவர்தாம்! என்று தம்மைப் பற்றி அறிவித்துக் கொள்கிறார். ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார்; ஸ்ரீகிருஷ்ணர் ஒரு மகாத்மா ஆவார்.

இந்த அத்தியாயத்தில் பக்தியே உயர்ந்தது எனப்படுகிறது. எனவே இந்த அத்தியாயத்திற்கு 'பக்தி யோகம்' என்று பெயர் சூட்டுவது பொருத்தமானதுதான். அத்துடன்

**ஓம் தத் ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணாளர்ஜுூன ஸம்வாதே பக்தி யோகோ நாம த்வாதசோத்த்யாய:**

**–** இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுூன உரையாடலுமாகிய 'பக்தி யோகம்' என்ற பெயருடைய பன்னிரண்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா: யதார்த்த கீதா பாஷ்யே பக்தி யோகோ நாம த்வா தசோத்த்யாய:**

ஹரி: ஓம் தத்ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹாராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'பக்தி யோகம்' என்ற பெயருடைய பன்னிரண்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத் ஸத்

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:
## பதின்மூன்றாம் அத்தியாயம்

கீதையின் ஆரம்பத்திலேயே திருதராஷ்டிரன், ''சஞ்ஜயனே! தர்ம க்ஷேத்திரமான குருக்ஷேத்திரத்தில் யுத்தம் செய்யும் விருப்பத்துடன் ஒன்று கூடியிருக்கும் என்னுடைய புத்திரர்களும் மற்றும் பாண்டுவின் புத்திரர்களும் என்ன செய்கிறார்கள்?'' என்று கேள்வி கேட்டிருந்தான். அந்த க்ஷேத்திரம் எங்கே இருக்கிறது? என்பதைப் பற்றி இதுவரை ஒன்றுமே சொல்லப்படவில்லை. ஆனால், மகாபுருஷராகிய ஸ்ரீகிருஷ்ணர், எந்த க்ஷேத்திரத்தில் யுத்தம் நடப்பதாகக் கூறினாரோ, அதைப்பற்றி இந்த அத்தியாயத்தில் தீர்மானிக்கும் வகையில், உண்மையில் அந்த க்ஷேத்திரம் எங்கே இருக்கிறது? என்பதைத் தெளிவாக விளக்கியருள்கிறார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ர மித்யபிதீயதே**
**ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: (1)**

குந்தி மகனே! இந்த உடலே ஒரு 'க்ஷேத்திரம்' ஆகும். மேலும், இதனை யார் சரியான முறையில் அறிந்து கொள்கிறாரோ அவரே 'க்ஷேத்திரக்ஞர்' எனப்படுகிறார். அவர் அதில் (உடலில்) சிக்கிக் கொண்டிருக்கவில்லை. மாறாக, அவரே அதனை இயக்குபவர் ஆவார். இவ்வாறு அந்த தத்துவத்தை அறிந்து உணர்ந்த மகாபுருஷர்கள் கூறுகிறார்கள்.

உடல் என்னவோ ஒன்றுதான். அதில் தர்ம க்ஷேத்திரம் என்றும் குருக்ஷேத்திரம் என்றும் இரண்டு க்ஷேத்திரங்கள் எவ்வாறு இருக்க முடியும்? உண்மையில் இந்த ஒரே உடலில்தான், அதன் அகத்தில் செயல்படும் அதாவது ஆழ்மனதில், ஒன்றுக்கொன்று வேறுபட்டுச் செயல்படுகின்ற இரண்டு விதமான எண்ணவோட்டங்கள் எப்போதுமே இருந்து வருகின்றன. அதில் ஒருவகை, பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்ல புண்ணியமயமான எண்ணவோட்டம் எனப்படும் தெய்வீகச் செல்வம் (தெய்வீகக் குணங்கள்) ஆகும். மற்றொரு வகை, அசுரச் செல்வம் எனப்படும் அசுர குணங்கள் ஆகும். அதாவது, குற்றம் உள்ள கண்ணோட்டத்துடன் இணைந்து செயல்புரியும் எண்ணவோட்டம் ஆகும். இது எப்போதுமே அழிந்து போகின்ற, நிலையற்ற, இந்த உலகத்தின் மீதே பற்றுதலையும் நம்பிக்கையையும் ஏற்படுத்துகிறது. எப்பொழுது, அசுரச் செல்வம் எனப்படும் அசுர குணங்கள் வலிமை பெற்று விளங்குகின்றனவோ, அப்பொழுது, இந்த உடலே குருக்ஷேத்திரமாக மாறுகிறது. மேலும், இதே உடலின் ஆழ்மனதில், தெய்வீகச் செல்வம் எனப்படும் தெய்வீக குணங்கள் வலிமை பெறத் தொடங்கி

விட்டால், இதே உடல்தான் தர்ம க்ஷேத்திரம் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த இரண்டு விதமான குணநலன்களின் ஏற்றமும் தாழ்வும் மாறிமாறி வந்து கொண்டே இருக்கின்றன. ஆனால், தத்துவதரிசி மகாபுருஷரின் சரண சான்னித்தியத்தில், அதாவது அவருடைய சரணத்தை அடைந்து, எப்பொழுது ஒருவர் நிலைத்த பக்தியின் மூலமாக இறை ஆராதனையில் ஈடுபட ஆரம்பிக்கிறாரோ, அப்பொழுதே அவரது அகத்தில் இந்த இரண்டு வேறுபட்ட எண்ணவோட்டங்களுக்கு இடையில், இறுதி வெற்றியை நிர்ணயிக்கின்ற யுத்தம் துவங்குவதற்கான வழிவகை முழுமையான அளவில் ஆரம்பித்து விடுகிறது. இந்த யுத்தத்தில், படிப்படியாக, தெய்வீகச் செல்வம் அதாவது தெய்வீக குணங்கள் வலிமை பெற்றுக் கொண்டே சென்று அசுர குணங்கள் அனைத்தும் ஒட்டு மொத்தமாக அழிக்கப்பட்டு விடுகின்றன. அசுரச் செல்வம் அதாவது அசுர குணங்கள் முழுவதுமாக அழிவுற்ற பிறகுதான் இறைவனின் நேரடிக் காட்சி எனும் நிலை வாய்க்கப் பெறுகிறது. இறைவனை கண்கூடாக தரிசித்ததுடன் சேர்த்து தெய்வீகச் செல்வம், அதாவது, தெய்வீக குணங்களுக்கும் அவசியம் இல்லாமல் போய்விடுகிறது. எனவே, அவைகளும் தாமாகவே பரமாத்மாவினுள் இரண்டறக் கலந்து மறைந்து விடுகின்றன. இறைவழிபாட்டில் ஈடுபட்டிருந்தவரும் பரமாத்மாவினுள் நுழைவு பெற்று விடுகிறார். பதினோராவது அத்தியாயத்தில் அர்ஜுனன் கௌரவர் படையினரைத் தொடர்ந்து பாண்டவர் படையின் வீரர்களும் கூட யோகேஷ்வரருக்குள் சென்று மறைந்து விட்டதைக் கண்டான். இந்த மாபெரும் அக ஆன்மீக ஐக்கியத்திற்குப் பிறகு, ஆன்ம வடிவமாக எஞ்சியிருப்பவர் எவரோ, அவரே க்ஷேத்திரக்ஞர் எனப்படுகிறார். மேலும் பார்க்கலாம்.

**க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத**
**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞானம் யத்தஜ்ஞானம் மதம் மம (2)**

அர்ஜுனா! நீ எல்லா க்ஷேத்திரங்களிலும் (உடல்களிலும்) உறைகின்ற க்ஷேத்திரக்ஞரும் நானே என்று அறிந்து கொள். அதாவது, நானும் க்ஷேத்திரக்ஞர் ஆவேன்.

'எவர் இந்த உடல் என்னும் க்ஷேத்திரத்தை நன்கறிந்தவரோ, அவரே க்ஷேத்திரக்ஞர் ஆவார்' என்பதை அந்த க்ஷேத்திரக்ஞரை நேரடியாக தரிசனம் செய்து தத்ரூபமாக அறிந்து கொண்டுள்ள மகாபுருஷர்கள் கூறுகிறார்கள். மேலும், 'நானும் க்ஷேத்திரக்ஞர் ஆவேன்!' என்று ஸ்ரீகிருஷ்ணரும் கூறுகிறார். அதாவது ஸ்ரீகிருஷ்ணரும் ஒரு யோகேஷ்வரரே ஆவார். க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்திரக்ஞர், அதாவது விகாரங்களுடன் கூடிய இயற்கை (படைப்பு) மற்றும் புருஷன் (இறைவன்) ஆகியவற்றைத் தத்துவத்துடன் சேர்ந்து அறிந்து

கொள்வதே ஞானமாகும் என்பதே என்னுடைய உறுதியான கருத்தாகும். அதாவது, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் ஆகும். அது தவிர வீணான வாத விவாதங்களுக்குப் பெயர் ஞானம் இல்லை.

**தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஷ்ச்ச யத்**
**ஸ ச யோ யத்ப்ரபாவஷ்ச்ச தத்ஸமாஸேன மே ச்ருணு (3)**

அந்த க்ஷேத்திரம் எத்தகையது? மற்றும், எத்தகைய விகாரங்களுடன் கூடியது? மற்றும் எந்த காரணத்தால் அவ்வாறு உண்டானது? மேலும், அந்த க்ஷேத்திரக்ஞர் எனப்படுபவர் யார்? அவர் எத்தகைய வல்லமை உடையவர். இவை அனைத்தையும் என்னிடமிருந்து சுருக்கமாகக் கேள். அதாவது, க்ஷேத்திரம் விகாரங்களுடன் கூடியது, ஏதோ காரணத்தால் அவ்வாறு உண்டாகி உள்ளது. ஆனால், க்ஷேத்திரக்ஞரோ இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டவராக, தனிப் பெரும் வல்லமையுடன் திகழ்பவர். இதை நான் மட்டுமே சொல்கிறேன் என்பதன்று பேச்சு. ரிஷிகளும் இதையேதான் சொல்கிறார்கள்.

**ருஷிபிர்பஹுதா கீதம் ச்சந்தோபிர்விவிதை : ப்ருதக்**
**ப்ரஹ்மஸுத்ரபதைஷ்ச்சைவ ஹேதுமத்ப்பிர்விநிஷ்ச்சிதை: (4)**

இந்த க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்திரக்ஞர் எனும் தத்துவமானது ரிஷிகளின் மூலமாகப் பல்வேறு விதங்களில் பாடப்பட்டு உள்ளது. பல்வேறு முறைகளில் வேதங்களை அலசி ஆலோசித்ததன் மூலமாகத் தனித்தனியாக பிரித்துப் பொருளுணர்த்தப்பட்டுள்ளது. மேலும், மிகவும் சிறப்பான முறைகளில் உறுதிசெய்யப்பட்டு, யுக்திகள் அடங்கப்பெற்ற பிரம்ம சூத்திர வாக்கியங்கள் மூலமாகவும் இவைகளே விளக்கப்பட்டுள்ளன. அதாவது, வேதாந்தம், மகரிஷிகள், பிரம்ம சூத்திரம் மற்றும் 'நான்' (ஸ்ரீகிருஷ்ணர்) என்று அனைவருமே ஒரே கருத்தைத்தான் சொல்ல விழைகிறோம். இவர்கள் அனைவரும் கூறியதையே ஸ்ரீகிருஷ்ணரும் கூறுகிறார். இந்த உடல் (க்ஷேத்திரம்) என்பது நம்முடைய ஊனக் கண்களுக்குத் தென்படுவதுவரை மட்டும்தானா என்ன? இதுபற்றிக் கூறுகிறார்.

**மஹாபூதான்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச**
**இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச சேந்த்ரியகோசரா (5)**

அர்ஜுனா! பஞ்ச மகாபூதங்கள் (பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்) அகங்காரம், புத்தி, மற்றும் சித்தம் (சித்தம் என்று சொல்லாமல் அதையே, 'புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட (அவ்யக்த) பரா பிரகிருதி' என்று

சொல்லப்பட்டுள்ளது. அதாவது, மூலப் பிரகிருதியின் மீது விளக்கமளிக்கப்பட்டுள்ளது. இதில், 'பராபிரகிருதியும்' அடங்கியுள்ளது. மேலே கூறப்பட்டுள்ள, எட்டும் சேர்ந்து 'அஷ்டதா மூலப் பிரகிருதி' எனப்படுகிறது). மற்றும் பத்துப் புலன்கள் (கண், காது, மூக்கு, தோல், நாக்கு, வாய், கை, கால், பிறப்புறுப்பு, மலத்துவாரம்) அத்துடன் சேர்த்து ஒரு மனம் மற்றும் ஐந்து புலன் விஷயங்கள் (உருவம், சுவை, மணம், ஓசை மற்றும் தொடுவுணர்ச்சி) (ரூபம், ரஸம், கந்தம், சப்தம், ஸ்பர்சம்) அத்துடன் –

**இச்சா : த்வேஷ ஸுகம் துக்கம் ஸங்காதஸ்சேதனா த்ருதி:**
**ஏதத்க்ஷேத்ரம் ஸமாசேன ஸவிகாரமுதாஹ்ருதம் (6)**

விருப்பம், வெறுப்பு, சுகம், – துக்கம் மற்றும் இவை அனைத்தும் கூடியுள்ள ஸ்தூல உடலாகிய இந்தப் பிண்டம், உயிருணர்வு (சேதனா உணர்வு) மற்றும் தைரியம், இந்த முறையில் இந்த உடலானது விகாரங்களுடன் கூடியதாகச் சுருக்கமான முறையில் விளக்கப்பட்டுள்ளது. இதுவே உடல் அதாவது க்ஷேத்திரம் என்பதன் சுருக்கமான வடிவமாகும். இதில், விதைக்கப்படுகின்ற நல்ல மற்றும் தீய எண்ணங்கள் எனும் விதைகள்தாம் வினைகளின் (சம்ஸ்காரம்) வடிவில் முளைத்தெழுகின்றன. இந்த உடலே க்ஷேத்திரம் எனப்படுகின்றது. இந்த உடலில் பலவகையாக சேர்க்கப்பட்டுள்ள பொருட்கள் என்ன? என்று கேட்டால், மேலே ஏற்கனவே கணக்கிட்டு சொல்லப்பட்டுள்ள அதே ஐந்து தத்துவங்கள், பத்து புலன்கள் மற்றும் மனம் முதலானவை ஆகும். இவை அனைத்தும் சேர்ந்ததே இந்த உடல் (பிண்டம்) எனப்படுகிறது. எதுவரை இந்த விகாரங்கள் எனப்படும் நல்ல மற்றும் புலன் நுகர்ச்சி ஆசைகள் உயிருடன் இருக்கின்றனவோ, அதுவரைதான் இந்த உடலும் (பிண்டமும்) இருக்கும். எனவேதான் இந்த உடல் விகாரங்களால் தோன்றியது எனப்படுகிறது. இப்போது இந்த க்ஷேத்திரத்தில் ஒட்டி இராமல், ஆனால், அதனின்று விடுபட்ட, சுதந்திரமான அந்த க்ஷேத்திரக்ஞரின் உண்மை வடிவம் என்ன? என்று பார்ப்போம் –

**அமானித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம்**
**ஆசார்யோபாஸனம் ஷௌச்சம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ: (7)**

அர்ஜுனா! மானம், அவமானம் இன்மை, தற்பெருமையின்மை, அகிம்சை (அதாவது, தன்னுடைய மற்றும் பிறருடைய ஆன்மாவிற்கு துன்பம் தராமல் இருப்பதே அகிம்சை எனப்படும் அதைவிட்டு, 'எறும்புகளைக் கொல்லாதே!' என்பது மட்டுமே அகிம்சை என்று எண்ணிக் கொள்ள வேண்டாம். 'உன்னுடைய ஆத்மாவை அதோ கதிக்குத் தள்ளி விடாதே' என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். ஆத்மாவை அதோ கதிக்குக் கொண்டு போவதுதான் ஹிம்ஸை எனப்படும்.

உன்னுடைய ஆத்மாவை அதோகதிக்குப் போக விடாமல் தடுத்து அதனை மேலானநிலைக்கு உயர்த்திக் கொண்டு போவதுதான் தூய்மையான அகிம்சை ஆகும். அத்தகையவர் மற்ற ஆன்மாக்களையும் உயர்த்துவதில்தான் முனைந்து நிற்கிறார். ஆம்! ஆரம்ப நிலையில் 'யாருக்கும் துன்பம் விளைவிக்கக் கூடாது' என்ற நிலையில்தான் பாடம் துவங்குகிறது. இது அகிம்சையின் பிரிக்க முடியாததொரு பாகமும், மறுபாகமுமாகும்). எனவே அகிம்சை, மன்னித்தருளும் குணம், மனம், வாக்கு ஆகியவற்றில் எளிமை, குரு உபாசனை, அதாவது, நம்பிக்கை மற்றும் பக்தியுடன் கூடியவனாக ஸத்குருவிற்கு சேவை செய்தல், மற்றும் அவரை வழிபடுதல், புனிதத்தன்மை, ஆழ்மனத்தின் உறுதிப்பாடு, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்கள் மற்றும் உடல் ஆகியவற்றைக் கண்காணித்தல் (கட்டுப்பாட்டிற்குள் வைத்திருத்தல்) மற்றும்

**இந்திரியார்த்தேஷு வைராக்யமனஹங்கார ஏவ ச**
**ஜன்மம்ருத்யுஜராவ்யாதி துக்கதோஷானுதர்சனம் (8)**

இகலோகம் மற்றும் பரலோகத்திலும் பார்த்ததும் கேட்பதுமான புலனின்ப நுகர்வுகளில் விருப்பமின்மை, 'நான்' என்னும் அகங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, வயோதிகம், வியாதி மற்றும் புலனின்ப நுகர்ச்சிகள் முதலானவற்றினால் ஏற்படும் துக்கம் மற்றும் குறைபாடுகளைப் பற்றி மீண்டும் மீண்டும் சிந்தனை செய்தல்.

**அஸக்திரனபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு**
**நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு (9)**

பிள்ளைகள், மனைவி, செல்வம் மற்றும் வீடு, சொத்து ஆகியவற்றில் பற்றின்மை, விரும்பியது மற்றும் விரும்பாதவை கிடைத்த போதும், எப்போதுமே சமநிலை குலையாத சித்தத்துடன் இருத்தல், (க்ஷேத்ரக்ஞர் ஆகிய பரம்பொருளை அடைய விழைகின்ற சாதனையானது மனைவி மற்றும் பிள்ளைகளுடன் இல்லறத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் சூழ்நிலைகளில்தான் ஆரம்பமாகிறது) மேலும் எவர்

**மயி சானன்யயோகேன பக்திரவ்யபிசாரிணீ**
**விவிக்த தேஷஸேவித்வமரதிர்ஜன ஸம்ஸதி (10)**

என்னிடம் (ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார். அதாவது அத்தகையதொரு மகாபுருஷரிடம்) நிலைத்த யோகத்துடன், அதாவது, யோகத்தைத் தவிர, வேறு எதைப் பற்றிய நினைப்பும் இன்றி, **அவ்யபிசாரிணீ பக்தி,** (இஷ்ட தெய்வத்தைத் தவிர, (ஸத்குரு) வேறு எந்தச் சிந்தனையும் எழக்கூடாது.) தனிமையான இடத்தில் வாழ்ந்தபடியே, மனிதர்கள் வாழும் கூட்டமான இடங்களில் வாழ வேண்டுமென்ற ஆசையில்லாமல் இருத்தல் மற்றும் –

**அத்யாத்மஜ்ஞானநித்யத்வம் தத்வஜ்ஞானார்த்ததர்சனம்**
**ஏதஜ்ஞானமிதி ப்ரோக்தமஜ்ஞானம் யததோன்யதா (11)**

ஆன்மாவின் ஆதிக்கத்தில் உள்ள ஞானத்தில் ஒரேமாதிரியான நிலைப்பாடு மற்றும் தத்துவ ஞானத்தின் அர்த்த வடிவமான பரமாத்மாவை நேருக்கு நேராக தரிசனம் செய்தல் (சாட்சாத்காரம்) இவையெல்லாம்தான் ஞானம் எனப்படும். இதனின்று விபரீதமானவை அனைத்தும் அஞ்ஞானம் என்றே கூறப்படுகிறது. அந்தப் பரமதத்துவ பரமாத்மாவை இதயத்தில் தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் ஆகும். (நான்காவது அத்தியாயத்தில் அவர், "வேள்வி நிறைவு அடையும் காலத்தில் அந்த வேள்வியானது எதைப் படைக்கிறதோ, அந்த ஞானாமிருதத்தை அருந்துகின்றவரே சனாதன பிரம்மத்தில் நுழைவு பெறுகிறார். எனவே, பிரம்மத்தை இதயத்தில் தரிசனம் செய்து அறிந்து கொள்வதே ஞானம் எனப்படும்" என்கிறார். இங்கேயும் அவர் அதையேதான் தத்துவ வடிவமான பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து (சாட்சாத்காரம்) அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் என்று மறுபடியும் கூறுகிறார்). இதனின்று வேறுபடுபவை அனைத்தும் அஞ்ஞானம் ஆகும். மானம், அவமானத்தைப் பொருட்படுத்தாத தன்மை முதலான, மேலே கூறப்பட்டுள்ள இலட்சணங்கள் அனைத்தும் இந்த ஞானத்தையே குறித்து ஒன்றையொன்று நிறைவேற்றும் சொற்கள் ஆகும். கேள்வி நிறைவடைகிறது.

**ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாம்ருதமஷ்னுதே**
**அனாதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தன்னாஸதுச்யதே (12)**

அர்ஜுனா! எவர் அறிவதற்குத் தகுதியானவரோ மற்றும் எவரை அறிந்த பிறகு மரணத்தின் ஆளுமைக்கு உட்பட்ட மனிதர்கள் அமிருத தத்துவத்தைப் (மரணமில்லாப் பெருவாழ்வு) பெற்று விடுகிறார்களோ, அதை நல்ல முறையில் விளக்கிக் கூறுகிறேன். அந்தத் தொடக்கம் என்பதே இல்லாத பரபிரம்மம் உண்மை (ஸத்) என்றோ அல்லது உண்மையற்றது (அஸத்) என்றோ அறுதியிட்டுச் சொல்லப்பட முடியாதவர். ஏனெனில், எதுவரை அவர் தனித்தவராக உணரப்படுகிறாரோ, அதுவரை அவர் 'உண்மை' அல்லது 'இருக்கிறார்' (ஸத்) எனலாம். மேலும், எப்பொழுது மனிதன் அவரிலேயே இரண்டறக் கலந்து விடுகிறானோ அப்பொழுது 'இருக்கிறார்' என்றெல்லாம் தனித்து உணர்வதற்கு அங்கே ஒருவரும் எஞ்சியிருப்பதில்லை என்னும் நிலையில் யார், யாரிடம் என்ன சொல்வது? அந்நிலையில் ஒருவராகவே இருக்கிறார். வேறு எந்த உணர்வும் இருப்பதில்லை. அத்தகைய நிலையில்தான் அந்த பிரம்மம் இருப்பது (ஸத்) அல்லது இல்லாதது (அஸத்) என்று சொல்லப்பட முடியாத ஒருவராக உணரப்படுகிறார். மாறாக எது தன்னில்தானே நிலையான இருப்பு என்னும்

இயல்புடையதோ (ஸ்வயம் ஸஹஜ்) அதுவேதான் அது.

**ஸர்வதப்பாணிபாதம் தத்ஸர்வதோஅக்ஷிசிரோமுகம்**
**ஸர்வத்ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட்டதி (13)**

இந்த பிரம்மமானது அனைத்துத்திசைகளிலும் கைகள், கால்களை உடையது. மற்றும் அனைத்து திசைகளிலும் கண்கள், தலைகள், வாய்களை உடையது. அனைத்துத் திசைகளிலும் காதுகளை உடையதும் செவிமடுக்கிறதும். ஏனெனில் அது இவ்வுலகம் முழுவதும் நீக்கமற நிறைந்து நிலை பெற்றுள்ளது.

**ஸர்வேந்த்ரியகுணாபாஸம் ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம்**
**அஸக்தம் ஸர்வப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச (14)**

அது எல்லாப் புலன்களின் விஷயங்களையும் அறிந்தது. இவ்வாறிருந்தும் கூட அது புலன்களற்றது; பற்றற்றது; குணங்களுக்கு அப்பாற்ப்பட்டதாக இருந்த பிறகும்கூட அனைத்தையும் தாங்குவதாகவும் போற்றிப் பேணிப் பாதுகாப்பதாகவும் அமைந்துள்ளது. மேலும், எல்லாக் குணங்களையும் அனுபவிப்பதுமாகும். அதாவது, எல்லாக் குணங்களையும் ஒன்றன் பின் ஒன்றாகத் தன்னிலேயே மறையச் செய்யவல்லது. ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, இதைப்பற்றி, “வேள்வி மற்றும் தவங்களை அனுபவிப்பவன் நானே! இறுதியில், எல்லாக் குணங்களும் என்னில்தான் ஒன்று கலந்து மறைகின்றன” என்று சொல்லியிருக்கிறார்.

**பஹிரந்தஸ்ச்ச பூதானாமசரம் சரமேவ ச**
**ஸூக்ஷ்மத்வாத்தத்விஜ்ஞேயம் தூரஸ்த்தம் சாந்திகே ச தத் (15)**

அந்த பிரம்மம் மனிதர் உட்பட எல்லா உயிர் தாங்கிய ஜீவராசிகளின் உள்ளும் புறமும் பரிபூரணமாக நிறைந்திருக்கிறது. அசைவன, அசையாதன எனும் வடிவங்களும் அதுவேதான். சூட்சுமமாக (மிகவும் நுட்பமாக) இருப்பதால் அது அறியப்பட முடியாமல் இருக்கிறது. அது அறிவிற்கு **(அவிஞ்ஞேயம்)** அப்பாற்பட்டது. மனம் மற்றும் புலன்களுக்கு அப்பாற்பட்டது. மேலும், மிகவும் சமீபமாக இருப்பதும், வெகு தொலைவில் இருப்பதும் அதுவேதான்.

**அவிபக்தஞ் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்த்திதம்**
**பூதபர்த்ரு ச தஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச (16)**

அது பகுக்க முடியாத ஒன்றாக இருந்த பிறகும்கூட மனிதர் உட்பட எல்லா அசையும், அசையாத, உயிரினங்களிலும் தனித்தனியாக இருப்பதைப் போலத் தோன்றுகிறது. அந்த அறிவதற்குத் தகுதி படைத்த பரமாத்மா அனைத்து

உயிரினங்களையும் உற்பத்தி செய்கிறது; போற்றிப் பேணிப் பாதுகாக்கிறது. மேலும், கடைசியில் அனைத்தையும் அழிக்கவும் செய்கிறது. இங்கே 'புறம்' மற்றும் 'அகம்' ஆகிய இரண்டு உணர்வு நிலைகளுமே கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டு குறிப்பால் உணர்த்தப்படுகிறது. புறத்தில் 'உற்பத்தி' என்று பொருள் கொண்டால் அகத்தில் 'ஆன்மீக விழிப்புணர்வு' என்று பொருள் கொள்ளவேண்டும். புறத்தில், 'போற்றிப் பேணிப் பாதுகாத்தல்' என்று பொருள் கொண்டால், அகத்தில் 'ஆன்மீக யோக நலனைப் பாதுகாத்தல்' என்று பொருள் கொள்ள வேண்டும்; புறத்தில் 'உடல்களின் அழிவு' மற்றும் 'பரிமாற்றம்' என்று பொருள் கொண்டால், அகத்தில் 'அனைத்தின் அழிவு' அதாவது, மனிதர் உட்பட அனைத்து உயிர்களின் உற்பத்திக்குக் காரணமாக அமைகின்ற, மீண்டும் மீண்டும் உடல் எடுக்கச் செய்கின்ற சங்கல்பங்களின் அழிவு, மற்றும் அந்த அழிவுடன் சேர்த்தே தனது ஆன்ம வடிவத்தை அடையப் பெறுதல்' என்று பொருள் கொள்ள வேண்டும். இவை அனைத்தும் அந்த பிரம்மத்தின் இலட்சணங்கள் ஆகும்.

**ஜ்யோதிஷாமபி தஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே**
**ஜ்ஞானம் ஜ்ஞேயம் ஜ்ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் (17)**

அந்த அறியத் தகுந்த பிரம்மம் ஜோதிகளுக்கெல்லாம் ஜோதியானது, இருளுக்கெல்லாம் அப்பாற்ப்பட்டது என்று சொல்லப்படுகிறது. அது முழுமையான ஞான (அறிவு) வடிவமானது. அனைத்தையும் முழுமையாக (பூரணமாக) அறிந்தது; அறியத் தகுந்தது; மற்றும் ஞானத்தின் மூலமாகவே அடையப்படுவது. அதை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் எனப்படுகிறது. அத்தகைய ஞானத்தின் மூலமாக மட்டுமே அந்த பிரம்மத்தை அடைவதென்பது சாத்தியமாகிறது. அது அனைவரின் இதயத்திலும் நிலை பெற்றுள்ளது. அனைவரின் இதயமே அதனுடைய வசிப்பிடம் ஆகும். வேறு எங்கே தேடினாலும் அது ஒருபோதும் கிடைக்காது. எனவே, இதய தேசத்தில் தியானம் செய்தல், மற்றும் யோகத்தை அனுசரிப்பதன் மூலமாக மட்டுமே அந்த பிரம்மத்தை அடைய வழிமுறை உள்ளது.

**இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞானம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத:**
**மத்பக்த ஏதத்விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே (18)**

அர்ஜுனா! க்ஷேத்திரம், ஞானம் மற்றும் அறியத் தகுந்த பரமாத்மாவின் வடிவம் இந்த அளவிற்கு மட்டுமே சுருக்கமான முறையில் கூறப்பட்டது. இதை அறிந்து கொண்டு என்னுடைய பக்தன் எனது தத்ரூபமான ஆன்ம வடிவத்தை அடையப் பெறுகிறான். இதுவரை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் எதனை க்ஷேத்திரம்

என்று கூறி வந்தாரோ, அதையே இயற்கை என்றும் எதனை க்ஷேத்திரக்ஞர் என்றும் கூறினாரோ, அதையே புருஷன் என்ற வார்த்தைகளாலும் இப்போது குறிப்பிடுகிறார்.

**ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யனாதீ உபாவபி**
**விகாராம்ஸ்ச குணாம்ஸ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவான் (19)**

இந்த பிரகிருதி மற்றும் புருஷன் ஆகிய இரண்டுமே (அனாதி) ஆரம்பமற்றவை என்று அறிந்து கொள். மற்றும் எல்லா விகாரங்களும் (நல்வினை—தீவினைகள்) மூன்று குணங்களுடன் கூடிய படைப்பில் (இயற்கையில்) இருந்துதான் உற்பத்தியானவை என்று அறிந்து கொள்.

**கார்யகரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே**
**புருஷ: ஸுகதுக்கானாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே (20)**

காரியம் (செயல்) மற்றும் கரணம் (கருவி) (எதன் மூலமாகக் காரியம் (செயல்) செய்யப்படுகிறதோ, அதுவே கரணம் (கருவி) எனப்படும். ஆன்மீக, இறை ஆராதனைக்கு விவேகம், வைராக்கியம் முதலான தெய்வீகக் குணங்கள் கரணம் ஆகும். மற்றும் தீமை நிறைந்த தீயசெயல்கள் நடைபெறுவதற்குக் காமம், கோபம், முதலான விகாரங்கள் அல்லது அசுர குணங்கள் கரணம் ஆகும்.) ஆகியவற்றை இயற்கையே உற்பத்தி செய்வதாகக் கூறப்படுகிறது. மேலும், இந்த மனிதன் சுகம், துக்கம் முதலானவற்றை அனுபவிப்பவதற்கு காரணமாக இருக்கிறான் என்றும் சொல்லப்படுகிறது. அவன் இதுபோன்று அனுபவித்துக் கொண்டே தான் இருக்க வேண்டுமா? அல்லது, இதனின்று விடுதலையும் கிடைக்குமா? என்றொரு கேள்வி எழுகிறது. படைப்பு மற்றும் புருஷன் இரண்டுமே தொடக்கமில்லாதவை எனும்போது ஒருவன் எவ்வாறு இதிலிருந்து விடுதலை பெறுவான்? இதுபற்றிக் கூறுகிறார். —

**புருஷ : ப்ரக்ருதிஸ்த்தோ ஹி புங்க்த்தே ப்ரக்ருதிஜான்குணான்**
**காரணம் குணஸங்கோஅஸ்ய ஸதஸத்யோனிஜன்மஸு (21)**

பிரகிருதிக்கு (படைப்பு) மத்தியில் இருக்கும் புருஷனே (இறைவனே) இந்தப் படைப்பில் இருந்து உற்பத்தியாகின்ற குணங்களின் செயல்பாடுகளினால் உண்டாகும் பொருட்களை எல்லாம் அனுபவிப்பவர் ஆவார். மேலும், இந்தக் குணங்களின் சேர்க்கையே இந்த ஜீவாத்மா உயர்ந்த மற்றும் தாழ்ந்த பிறவிகளில் (யோனிகள்) பிறவி எடுக்க காரணமாக அமைகின்றன. இந்தக் 'காரணம்' அதாவது, இயற்கையில் இருந்து தோன்றும் குணங்களின் சேர்க்கையானது முழுவதுமாக நீங்கிய பிறகுதான் பிறப்பு மற்றும் இறப்பில் இருந்து முக்தி

அல்லது விடுதலை கிடைக்கிறது. இப்போது அந்தப் புருஷரைப் (இறைவன்) பற்றியும் அவர் எவ்விதமாக இந்தப் படைப்பில் பிரகிருதியின் மீது நின்று கொண்டிருக்கிறார் என்பதையும் விளக்குகிறார்.

**உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்த்தா மஹேஸ்வர:**
**பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஅஸ்மின்புருஷ: பர: (22)**

அந்த புருஷர் (இறைவன்) சாட்சி ரூபமாக (வெறும் பார்வையாளராக— உபத்ரஷ்டா) இதய தேசத்தில் வெகு அருகாமையில், கை, கால் மனம் ஆகியவை எல்லாம் உங்களுக்கு எவ்வளவு அருகில் இருக்கிறதோ, அவற்றையெல்லாம் விடவும் மிகவும் அருகில் சாட்சி ரூபமாக, அனைத்தையும் பார்த்துக் கொண்டிருப்பவராக வீற்றிருக்கிறார். அவருடைய வெளிச்சத்தில் (பார்வையில்) நீங்கள் நல்லதைச் செய்தாலும் அல்லது தீயதைச் செய்தாலும் அவருக்கு அதனால் ஒரு பயனும் ஏற்படுவதில்லை. அவர் வெறுமனே சாட்சியாக நின்று கொண்டு இருக்கிறார், அவ்வளவுதான். சாதனையின் சரியான திசையும் வரிசைக் கிரமமும் பிடிக்குள் வந்துவிட்ட பிறகு, சாதகர் கொஞ்சம் உயர்நிலையை அடைந்து, அவரை நோக்கி முன்னேறத் தொடங்கினால் சாட்சிரூபமாக இருக்கும் அவரது நிலைப்பாடு மெதுவாக மாறத் தொடங்குகிறது. அவர் **“அனுமந்தா”** அனுமதி தர ஆரம்பிக்கிறார்; அனுபவம் தரத் தொடங்குகிறார். ஆன்ம சாதனையின் மூலமாக இன்னும் நெருங்கி வந்து விட்டால் அவரே **“பர்த்தா”** என்னும் நிலைப்பாட்டை எடுத்துக் கொண்டு, போற்றிப் பேணிப் பாதுகாப்பவராகிறார். இந்நிலையில் உங்களுடைய யோகநலனைப் பாதுகாக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறார். சாதனை இன்னும் சூட்சும நிலையை அடைந்து விட்டால் அவரே, **“போக்தா”** என்னும் நிலைப்பாட்டை எடுக்கிறார். **“போக்த்தாரம் யஜ்ஞ தபஸாம்”** வேள்வி, தவம் என்று நிறைவேற்றப்படுபவற்றை எல்லாம் ஏற்றுக் கொண்டு விடுகிறார். இதற்குப் பிறகு வருகின்ற நிலைப்பாடுதான் **‘மஹேஸ்வர’:** — சர்வ வல்லமையும் படைத்த மாபெரும் கடவுள் என்னும் வடிவத்தில் பரிணமித்து விடுகிறார்; படைப்பின் தலைவர் (ஸ்வாமி) ஆகிறார். ஆனால், இந்நிலையில் படைப்பு என்ற ஒன்று உயிருடன் இருப்பதனால்தானே அதற்குத் தலைவர் (ஸ்வாமி) என்ற நிலைப்பாடும் இருக்கிறது. இதையும் விட உன்னதமான நிலையை அடைந்ததும் அதே புருஷர் எப்போது, **பரமாத்மேதி சாப்யுக்தோ** பரம்பொருளுடன் ஒன்றிணைந்து விடுகிறாரோ, அப்போதே பரமாத்மா என அழைக்கப்படுகிறார். இந்த முறையில் உடலில் இருந்த போதிலும் இந்த புருஷராகிய ஆத்மா, **பர:—** பிரகிருதியிலிருந்து எல்லாவகையிலும் அப்பாற்ப்பட்டதாகவே உள்ளது. ஆரம்பத்தில், சாட்சிரூபமாக (த்ரஷ்டா) இருந்த இந்த ஆத்மா, படிப்படியாக உயர்ந்து கொண்டே சென்று, அனைத்திற்கும் அப்பாற்ப்பட்ட மேலான, உயர்ந்த

'பரம்' – இறைவனைத் தொட்டுணர்ந்து பரமாத்ம ரூபமாக முழுமையாகப் பரிணமிக்கிறது. இவ்வளவு தான் வேறுபாடு.

**ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை: ஸஹ**
**ஸர்வதா வர்த்தமாஅனோபி ந ச பூயோபிஅஜாயதே (23)**

இந்த முறையில் புருஷன் மற்றும் குணங்களுடன் கூடிய பிரகிருதியை எவனொருவன் இதயத்தில் தரிசனம் செய்து அறிந்து கொள்கிறானோ, அவன் எல்லா விதமான செயல்களில் ஈடுபட்டிருந்த பிறகும் கூட மறுபடியும் பிறவி எடுப்பதில்லை. அதாவது, அவனுக்கு மறுபிறவி (புனர்ஜன்மம்) கிடையாது. இதுவே முக்தி (விடுதலை) எனப்படுகிறது. இதுவரை, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் 'பிரம்மம்' மற்றும் 'பிரகிருதி' ஆகியவற்றை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதுடன் சேர்த்துக் கிடைக்கும் பரமகதி, (இறைப் பேறுநிலை) அதாவது, அவனுக்கு மறுபிறவியில் (புனர் ஜன்மம்) இருந்து விடுதலை கிடைப்பது பற்றித் தெளிவாக விளக்கியருளினார். மேலும், அவர் இப்போது எதனை வேள்வியின் செயல்முறை என்றும் இறைஆராதனை என்றும் சொல்கிறாரோ அந்த யோகத்தை வலியுறுத்திக் கூறவிழைகிறார். ஏனெனில், இந்தக் கர்மத்தைச் செயல்முறைப் படுத்தாமல் எவருமே மேற்கூறப்பட்ட பரம கதியை (இறைப் பேறுநிலை) – முக்தியை அடையவே முடியாது.

**த்யானேனாத்மனி பச்யந்தி கேசிதாத்மானமாத்மனா**
**அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே (24)**

ஹே! அர்ஜுனா! அந்த **"ஆத்மானம்"** பரமாத்மாவை எத்தனையோ மனிதர்கள் **ஆத்மனா** தங்களுடைய அகத்தினுள் ஆன்ம சிந்தனை செய்து தியானத்தின் மூலமாக, **'ஆத்மனி'** இதயதேசத்தில் பார்க்கிறார்கள். எத்தனையோ பேர் ஞான யோகத்தின் (ஸாங்க்ய யோகம்) மூலமும், (அதாவது தங்களுடைய சக்தியைப் புரிந்து கொண்டு, இலாப–நஷ்டங்களைக் கணக்குப் போட்டபடியே, அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்து கொண்டே போகிறார்கள்.) மேலும், இன்னும் எத்தனையோ பேர் (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தின் மூலமும் (அதாவது, இஷ்ட தெய்வத்திடமே (ஸத்குரு – இறைவன்) தங்களை ஒப்படைத்து அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்து கொண்டே போகிறார்கள்) அவரைப் பார்க்கிறார்கள். இந்த சுலோகத்தில் 'தியானம்' முக்கியமானதொரு சாதனையாகக் கூறப்பட்டுள்ளது. அந்த தியானத்தை கடைப்பிடிப்பதற்காக ஞான யோகம் (ஸாங்க்ய யோகம்) மற்றும் (பற்றற்ற) நிஷ்காம கர்மயோகம் ஆகிய இரண்டு சிந்தனை ஓட்டங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது.

**அன்யே த்வேவமஜானந்த: ச்ருத்வான்யேப்ய உபாஸதே**
**தேஅபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஷ்ருதிபராயணான்: (25)**

ஆனால், மற்றொரு வகையினர், அதாவது யாருக்கு ஆன்மீக சாதனையைப் பற்றி எதுவும் தெரிந்திருக்கவில்லையோ, அவர் இதையெல்லாம் முறையாக அறிந்திராத, போதிலும் '**அன்யேப்ய:**'– வேறொரு வழியில், அதாவது, தத்துவத்தை அறிந்த மகாபுருஷரின் மூலமாக, ஆன்மீக சாதனையைப் பற்றிக் கேட்டறிந்து கொண்டு இறைவழிபாட்டில் (உபாசனை) ஈடுபடுகிறார். மேலும், அவ்வாறு அவர் மூலமாகக் கேட்டறிந்து கொள்ளத் தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டுள்ளவரும் கூட மரணம் அலைமோதுகின்ற இந்த சம்சாரப் பெருங்கடலில் இருந்து எந்தவிதமான சந்தேகமும் இல்லாமல் நீந்திக் கரை சேர்ந்துவிடுகிறார். எனவேதான் சாதனையின் எந்தவொரு அங்கத்தையும் செயல்முறைப்படுத்த முடியவில்லை என்றாலும் கூட, மகாபுருஷர்களின் ஸத்ஸங்கத்தையாவது (ஆன்மீக உபதேசங்கள்) தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

**யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்வம் ஸ்தாவரஜங்கமம்**
**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்தத்வித்தி பரதர்ஷப (26)**

அர்ஜுனா! ஒட்டு மொத்த உலகிலும் எத்தனை எத்தனை அசைவன, அசையாதன, என்று அனைத்து உயிருள்ள மற்றும் உயிரற்றப் பொருட்கள் உற்பத்தியாகின்றனவோ, அவையனைத்தும் க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்திரக்ஞரின் சேர்க்கையினால் உண்டானவை என்றே நீ அறிந்து கொள். இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலை (ப்ராப்தி) பெறுவது எப்போது நடக்கிறது? இதுபற்றிக் கூறுகிறார்.

**ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஸ்வரம்**
**விநச்யத்ஸ்வவிநஷ்யந்தம் ய: பஷ்யதி ஸ பஷ்யதி (27)**

எவரொருவர் சிறந்த முறையில், அழிவுற்றுக் கொண்டேயிருக்கும் அசைவன, அசையாதன என்று அனைத்து ஜடம்மற்றும் உயிரினங்களிலும், அழிவென்பதே இல்லாமல் சமமான உணர்வுடன் வீற்றிருக்கும் பரமேச்வரரை சமநோக்கோடு காண்கிறாரோ, அவரே உள்ளதை உள்ளபடிக்குக் (யதார்த்தம்) காண்கிறார். அதாவது, இயற்க்கையானது (பிரகிருதி) மிகவும் சிறப்பான முறையில் முழுவதுமாக அழிவுற்ற பிறகுதான், அந்தப் பரமாத்ம வடிவம் காண்பதற்குக் கிடைக்கிறது. அதற்கு முன்பு அல்ல. இதையேதான் கடந்த எட்டாவது அத்தியாயத்திலும், **"பூதபாவோத்பவகரோவிஸர்க்க: கர்ம ஸம்ஜ்ஞித" –** "மனிதர் உட்பட, அனைத்து உயிரினங்களின் எண்ணங்களின்

மூலமாக உருவாகிக் கொண்டேயிருக்கும் நல்லவை மற்றும் தீயவை) வினைகளிலிருந்து விடுபடுவது ஒன்றே கர்மத்தின் உச்சக்கட்ட நிலை எனப்படுகிறது. அந்நிலையில்தான் கர்மம் முழுமையாக நிறைவு பெறுகிறது. அதையேதான் இங்கேயும், அசைவன, அதையாதவை என்று மனிதர் உட்பட அனைத்து உயிரினங்களும் அழிவுற்ற போதிலும் அவற்றிலெல்லாம் அழிவென்பதே இல்லாமல் சமமான உணர்வுடன் வீற்றிருக்கும் பரமேச்வரரைக் காண்பவர் எவரோ, அவரே உள்ளதை உள்ளபடிக்குச் (யதார்த்தம்) சரியாகக் காண்கிறார்" என்று சொல்கிறார்.

**ஸமம் பஷ்யன்ஹி ஸர்வத்ர ஸமவஸ்த்திதமீஷ்வரம்**
**ந ஹினஸ்த்யாத்மனாத்மானம் ததோ யாதி பராம் கதிம் (28)**

ஏனெனில், அவர் எங்கும் சமமான உணர்வுடன் நிலைபெற்றுள்ள பரமேச்வரரை அவர் எவ்வாறு இருக்கிறாரோ அவ்வாறே, சமமாகக் காண்கின்றபடியால் தன்மூலமாகத் தம்மை அழித்துக் கொள்வதில்லை. ஏனெனில், அவர், இறைவன் எவ்வாறு இருக்கிறாரோ, அவ்வாறே கண்டு கொண்டு விட்டார். எனவேதான் அவர் பரம கதியைப் (இறைப் பேறுநிலை அல்லது முக்தி) பெற்று விடுகிறார். இறைவனை தரிசனம் செய்து முக்தி நிலையை அடையப் பெற்றவரின் இலட்சணத்தை எடுத்துரைக்கிறார். –

**ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வச:**
**ய: பஷ்யதி ததாத்மானமகர்த்தாரம் ஸ பஷ்யதி (29)**

எவரொருவர், எல்லாக் கர்மங்களுமே எல்லா முறைகளிலும், படைப்பின் (இயற்கையின்) மூலமாகவே செய்யப்படுகின்றன என்று காண்கிறாரோ, அதாவது, எதுவரை இயற்கை உள்ளதோ, அதுவரை கர்மங்கள் நடைபெறுவதைக் காண்கிறாரோ மற்றும் ஆன்மாவை எதையும் செய்யாதது (அகர்த்தா) என்றும் காண்கிறாரோ, அவரே உள்ளதை உள்ளபடிக்குக் காண்கிறார்.

**யதா பூதப்ருதக்பாவமேகஸ்த்தமனுபஷ்யதி**
**தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா (30)**

எவரொருவர் எந்தக் காலத்தில் மனிதர் உட்பட, அனைத்து உயிரினங்களின் பல்வேறு விதமான எண்ணங்களிலும் அந்த ஒரே பரமாத்மாவே நிறைந்திருப்பதையும் நிலைபெற்றிருப்பதையும் காண்கிறாரோ, மற்றும் அந்தப் பரமாத்மாவில் இருந்தே இந்த உயிர்களனைத்துமே விரிவாக்கம் பெறுவதையும் காண்கிறாரோ, அதே சமயத்தில் அவர் அந்தப் பிரம்மத்தை அடைந்து விடுகிறார். எந்தக் கணத்தில் இந்த நிலையானது அடையப் பெற்று விடுகிறதோ, அந்தக்

கணமே அவர் பிரம்மத்தில் நிலைபெற்று விடுகிறார். இந்த இலட்சணமும் கூட ஸ்தித ப்ரக்ஞ மகா புருஷருக்கு உரியதாகும்.

**அனாதித்வான்னிர்குணத்வாத்பரமாத்மாயமவ்யய:**
**சரீரஸ்த்தோஅபி கௌந்தேய ந கரோதி நலிப்யதே (31)**

குந்தியின் மகனே! ஆரம்பமற்றவராக (அனாதியாக) இருப்பதாலும் மற்றும் குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவராக இருப்பதாலும் இந்த அழிவென்பதே இல்லாத பரமாத்மா இந்த உடலில் நிலைபெற்றிருந்த போதிலும் கூட, உண்மையில் எதையும் செய்வதும் இல்லை, எதிலும் ஒட்டுவதும் (பந்தப்படுவதும்) இல்லை, எந்தமுறையில்?

**யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாதாகாஷம் நோபலிப்யதே**
**ஸர்வத்ராவஸ்த்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே (32)**

எந்த முறையில் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஆகாயமானது சூட்சுமமாக (மிகவும் நுட்பமான நிலையில்) இருக்கின்ற காரணத்தினால் எதனுடனும் ஒட்டாமல், பந்தப்படாமல் இருக்கிறதோ, சரியாக அதே போன்று, எல்லா உடல்களிலும் நீக்கமற நிறைந்து இருந்த போதிலும் கூட ஆன்மாவானது குணங்களுக்கெல்லாம் அப்பாற்ப்பட்டதாக இருக்கின்ற காரணத்தினால் அந்த உடல்களில் உள்ள குணங்களுடன் ஒட்டிக் கொள்வதில்லை. மேலும் கூறுகிறார். –

**யதா ப்ரகாஷயத்யேக : க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி:**
**க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஷ்னம் ப்ரகாஷயதி பாரத (33)**

அர்ஜுனா! எந்த முறையில் ஒரே சூரியன் எல்லா பிரம்மாண்டங்களுக்கும் வெளிச்சம் தருகிறதோ, அதே முறையில் ஒரே ஆத்மாதான் எல்லா க்ஷேத்திரங்களுக்கும் (உடல்கள்) வெளிச்சம் தருகிறார். இறுதியாக அவர் நிர்ணயித்து கூறுவதாவது.

**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞானசக்ஷுஷா**
**பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் (34)**

இம்முறையில், க்ஷேத்திரம், மற்றும் க்ஷேத்திரக்ஞருக்கு இடையில் உள்ள வேறுபாட்டையும் மற்றும் விகாரங்களுடன் கூடிய படைப்பிலிருந்து விடுதலை பெறுகின்ற உபாயத்தையும் 'ஞானம்' என்னும் கண்கள் மூலமாகக் கண்டு விடுகின்ற மஹாத்மா பெருமக்கள் பரபிரம்மபரமாத்மாவை அடையப் பெறுகின்றனர். அதாவது, க்ஷேத்திரம் – க்ஷேத்திரக்ஞரைப் பார்க்கின்ற

பார்வைக்குப் பெயர்தான் 'ஞானம்' ஆகும். மேலும், ஞானம் என்பதும் இறைவனை நேரடியாக தரிசனம் செய்கின்ற 'சாட்சாத்காரம்' என்பதும் ஒரே பொருள் தருகின்ற நேர்ச் சொற்களாகும்; இரண்டும் ஒன்றையொன்று நிறைவேற்றுபவை ஆகும்.

**முடிவுரை :-**

கீதையின் ஆரம்பத்தில் தர்ம க்ஷேத்திரம், குருக்ஷேத்திரம் ஆகியவற்றின் பெயர்கள் சொல்லப்பட்டுள்ளன. ஆனால் அந்த க்ஷேத்திரம் உண்மையில் எங்கே இருக்கிறது? அந்த இடத்தைப் பற்றிச் சொல்வது மட்டும் எஞ்சியுள்ளது. அதை கீதையின் ஆசிரியரான ஸ்ரீகிருஷ்ணரே இந்த அத்தியாயத்தில் தெளிவுபடுத்திவிட்டார். குந்தியின் மகனே! இந்த உடல்தான் ஒரு 'க்ஷேத்திரம்' ஆகும். எவர் இதனை அறிந்தவரோ அவரே 'க்ஷேத்திரக்ஞர்' எனப்படுகிறார். அவர் இந்த உடல் என்னும் க்ஷேத்திரத்தில் சிக்கிக் கொண்டிருக்கவில்லை, மாறாக, அதனின்று தனித்தவராக, தூய்மையானவராக இருக்கிறார். அவரே அதனை இயக்குபவர் ஆவார். 'அர்ஜுனா! எல்லா க்ஷேத்திரங்களிலும் (உடல்கள்) நானே க்ஷேத்திரக்ஞர் (ஆன்ம ஸ்வரூபம்) ஆவேன். இதன்மூலம் மற்ற மகாபுருஷர்களுடன் தன்னையும் ஒப்பிட்டுக் கொள்கிறார். இதிலிருந்து ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாவார் என்பது தெளிவாகிறது. ஏனெனில், 'எவர், அவ்விதமாக அறிகிறார்களோ, அவர்களே க்ஷேத்திரக்ஞர்' என்று மகாபுருஷர்கள் கூறுகிறார்கள். நானும் க்ஷேத்திரக்ஞர் ஆவேன் அதாவது, மற்ற மஹாபுருஷர்களைப் போன்று நானும் ஒரு மஹாபுருஷர் ஆவேன்.

அவர், மேலும் க்ஷேத்திரம் எத்தகையது? எத்தனை விகாரங்களை உடையது? க்ஷேத்திரக்ஞர் எத்தகைய தனிப் பெரும் வல்லமையை உடையவர்? ஆகியவற்றையெல்லாம் விளக்கியருளினார். இதையெல்லாம் நான்தான் கூறுகிறேன் என்பதல்ல பேச்சு, மாறாக, மகரிஷிகளும் கூட இதையேதான் சொல்கிறார்கள். வேதங்களின் சந்தங்களிலும் கூட இதையேதான் தனித்தனியாகப் பிரித்துப் பொருளுணர்த்தப்பட்டுள்ளது. பிரம்ம சூத்திரங்களிலும் இதுவேதான் சொல்லப்பட்டுள்ளது.

க்ஷேத்திரம் எனப்படுகின்ற இந்த உடலானது, நமது கண்களுக்குத் தென்படுவதுவரை மட்டும்தானா என்ன? இது உருவாவதற்குப் பின்னால் மாபெரும் திட்டம் இருப்பதையும் அதில் இடம் பெறுகின்ற அனைத்தையும் எண்ணிக் கணக்கிட்டுச் சொல்லும்போது, அஷ்டதா மூலப் பிரகிருதி, அவ்யக்த பிரகிருதி, பத்து புலன்கள் (இந்திரியங்கள்) மற்றும் மனம், புலன்களின் ஐந்து விஷயங்கள், ஆசை, வேட்கை, வாசனை என்று இம்முறையில் இந்த விகாரங்களின் கலப்படமான கூட்டமே இவை அனைத்தும் சேர்ந்ததொரு

கலவைப் பொருளே இந்த சரீரம் (உடல்) எனப்படுகிறது. எதுவரை இவையெல்லாம் இருக்கின்றனவோ, அதுவரை ஏதேனும் ஒருவடிவில் உடலும் இருக்கவே செய்யும். இதுவே க்ஷேத்திரம் எனப்படுகிறது. இந்த உடல் என்கின்ற க்ஷேத்திரத்தில் விதைக்கப்படுகின்ற நல்லவை, தீயவை என்கின்ற எண்ணங்களாகிய விதைகள்தாம் சம்ஸ்காரங்கள் (வினைகள்) என்னும் வடிவத்தில் முளைத்தெழுகின்றன. எவர் இதைக் (க்ஷேத்திரம்) கடந்து செல்கிறாரோ, அவரே க்ஷேத்திரக்ஞர் ஆவார். க்ஷேத்திரத்தின் உண்மையான உருவத்தை விளக்கிக் கொண்டே அவர் தெய்வீகக் குணதர்மங்களைப் பற்றி எடுத்துக் கூறியதுடன் 'அந்த க்ஷேத்திரக்ஞரே இந்த க்ஷேத்திரத்திற்கு வெளிச்சம் தருகிறார் என்றுரைத்தார்.

அவர், சாதனை முழுமை பெறுகின்ற காலகட்டத்தில் பரம தத்துவ பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம்' என்று கூறினார். ஞானம் என்பதற்கு சாட்சாத்காரம் (இறைவனை நேரடியாக தரிசனம் செய்தறிதல்) என்று பொருள். இதனின்று வேறுபடுகின்ற அனைத்துமே அஞ்ஞானம் ஆகும். பரபிரம்மமே அறியத் தகுந்த ஒருவர். அவரை உண்மை (ஸத்) என்றோ உண்மையற்றது (அஸத்) என்றோ சொல்ல முடியாது. உண்மை (இருப்பு) மற்றும் உண்மையற்றது (இருப்பற்றது) ஆகிய இரண்டு நிலைகளுக்கும் அப்பாற்பட்டவர் அவர். அவரை அறிந்து கொள்வதற்காக அனைவரும் இதயத்தில் தியானம் செய்கிறார்கள். வெளியில் சிலைகளை வழிபடுவதால் அவரை அறியமுடியாது. பெரும்பாலோர் ஞான யோகத்தின் (ஸாங்க்ய யோகம்) மூலம் தியானம் செய்கின்றனர். மீதமுள்ளோர் (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகத்தின் மூலம் தியானம் செய்கின்றனர். இவர்கள் சமர்ப்பண உணர்வுடன் (இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு இறைவன்) சரணத்தை ஏற்றுக் கொண்டு) இறைவனை அடைவதற்காக, அவர் மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மமாகிய ஆராதனையை மேற்கொள்கின்றனர். இந்த விதிமுறைகளைப் பற்றியெல்லாம் தெரியாதவர்கள் தத்துவத்தில் நிலைபெற்றுள்ள மகாபுருஷர்கள் மூலமாகக் கேட்டறிந்து கொண்டு அதே கர்மத்தில் ஈடுபடுகின்றனர். அத்தகையவர்களும் கூட பரமநன்மையை அடைகின்றனர். எனவே, ஒன்றுமே தெரியவில்லை என்றாலும்கூட, அனைத்தும் அறிந்த மகாபுருஷருடைய ஆன்மீகச் சொற்பொழிவுகளைத் தொடர்ந்து கேட்பது அவசியம் ஆகும்.

ஸ்திதப்ரக்ஞ மகாபுருஷருடைய இலட்சணத்தைப் பற்றிக் கூறும்போது யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "எவ்விதமாக ஆகாயமானது எங்கும் நீக்கமற சமமாக நிறைந்திருந்த போதிலும் எதனோடும் ஒட்டாமல், பந்தப்படாமல் இருக்கிறதோ, எவ்விதமாக சூரியன் எங்கும் வெளிச்சம் பரப்பியபடியே

இருந்தபோதிலும் எதனோடும் ஒட்டாமல் பந்தப்படாமல் இருக்கிறதோ, இதே போன்றுதான் ஸ்திதப்ரக்ஞபுருஷரும் இருக்கிறார். எங்கும் நீக்கமற சமமான அளவில் நிறைந்திருக்கின்ற இறைவனை, அவர் எவ்வாறு இருக்கிறாரோ அவ்வாறே காண்பதற்குத் திறன் படைத்த அந்த ஸ்தித ப்ரக்ஞ புருஷர் க்ஷேத்திரம் அல்லது பிரகிருதியில் இருந்து எப்போதுமே தனித்தவராக, அத்துடன் ஒட்டாதவராகவே இருக்கிறார்," என்று கூறினார். கடைசியில் அவர், "க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்திரக்ஞர் பற்றி அறிந்து கொள்தல் என்பது ஞானம் என்னும் பார்வை மூலமாகவே (ஞானக்கண் அல்லது ஞானப்பார்வை) சாத்தியம்" என்று தீர்மானமாகக் கூறுகிறார். ஞானம் என்பது ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போல் அந்த பரமாத்மாவை நேருக்கு நேராக தரிசனம் செய்து அறிந்து கொள்வதே ஆகும். சாஸ்திரங்களை எல்லாம் நிறையப் படித்துவிட்டு, அவற்றையெல்லாம் வெறுமனே திரும்பத்திரும்ப ஒப்பித்துக் கொண்டிருப்பதற்குப் பெயர் ஞானம் அன்று. மாறாக, அதனை சாஸ்திரப்படிப்பு (அத்யயனம்) என்று வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். மேலும், மகாபுருஷர்கள் மூலமாக அந்தக் கர்மத்தைப் புரிந்து கொண்டு, அதனைச் செயல்முறைக்குக் கொண்டு வந்து, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் கட்டுப்படுத்தி, அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனத்தையும் இறைவனில் இரண்டறக் கலந்து மறையச் செய்வதுடன் அந்தப் பரம தத்துவ பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்வதற்குப் பெயரே ஞானம் எனப்படுகிறது. வேள்வியைச் செயல்முறைப்படுத்துகின்ற கிரியை மிகவும் அவசியமானது ஆகும். இந்த அத்தியாயத்தில் மிகவும் முக்கியமாக, 'க்ஷேத்திரக்ஞர்' எனப்படுபவர் இம்முறையில் மிகவும் விரிவான முறையில் விவரிக்கப்பட்டுள்ளார். சரியாகச் சொல்வதென்றால் க்ஷேத்திரத்தின் உண்மையான உருவம் இன்னும் விரிவானது ஆகும். உடல் என்று எளிதாகக் கூறிவிடலாம். ஆனால், அந்த உடலின் தொடர்புகள் எதுவரைக்கும் உள்ளன? என்று பார்த்தால், ஒட்டு மொத்த பிரம்மாண்டமும் மூலப் படைப்பின் விரிவாக்கமே ஆகும். எண்ணற்ற வானவெளிகள் (அந்தரிக்ஷம்) முழுவதும் உங்கள் உடல் விரிவாக்கம் பெற்றுள்ளது. அதனால்தான் உங்களுடைய வாழ்விற்கு உயிரோட்டம் கிடைக்கிறது. அது இல்லாமல் உங்களால் ஒரு கணம் கூட வாழமுடியாது. இந்த பூமி, ஒட்டு மொத்தப் பிரபஞ்சம், அனைத்து நாடுகள் மற்றும் காணப்படுகின்ற உங்களுடைய இந்த (ஸ்தூல) உடல் அனைத்தும் அந்தப் படைப்பின் ஒரு சிறிய துண்டு என்று கூட ஏற்றுக் கொள்ளமுடியாது. இம்முறையில் இந்த அத்தியாயத்தில், 'க்ஷேத்திரம்' எனப்படுவது விரிவான முறையில் வர்ணிக்கப்பட்டுள்ளது. அத்துடன் –

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸூப்ரஹ்ம வித்யாயாம்யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸ்ம்வாதே க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞவிபாகயோகோ நாம த்ரையோதசோத்யாய :**

இம்முறையில் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷதமும் பிரம்மவித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய **க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விபாக யோகம்** என்ற பெயருடைய பதின்மூன்றாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமிஅட்கடானந்த க்ருதேஸ்ரீமத்பகவத்கீதாயா : யதார்த்த கீதா பாஷ்யே க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாகயோகோ நாம த்ரையோ தசோத்யாய:**

ஹரி : ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விபாக யோகம்' என்ற பெயருடைய பதின்மூன்றாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

//ஹரி: ஓம் தத் ஸத்//

**ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:**

## பதினான்காவது அத்தியாயம்

கடந்த பல அத்தியாயங்களில் யோகேஷ்வரர் ஸ்ரீ கிருஷ்ணர் ஞானம் என்றால் என்ன? என்பதைத் தெளிவாக விளக்கியருளினார். நான்காவது அத்தியாயத்தில் பத்தொன்பதாவது சுலோகத்தில் அவர், "எவரொருவர் மூலமாக முழுமையான அளவில் ஆரம்பிக்கப்படுகின்ற நியமிக்கப்பட்டுள்ள கர்மமானது தொடர்ச்சியாகக் கடைப்பிடிக்கப்பட்டு படிப்படியாக உயர்நிலைகளை அடைந்து கொண்டே சென்று, எல்லா ஆசைகளும் சங்கல்பங்களும் என்றென்றைக்குமாக அழிந்து போய்விடுகின்ற அளவிற்குச் சூட்சுமமாகி விடுகின்றதோ, அந்தச் சமயத்தில், அவர் எந்த இறைவனை அறிய வேண்டும் என்ற விருப்பம் கொண்டிருந்தாரோ, அவரை நேரடியாக தரிசனம் செய்து அனுபூதியில் அறிந்து விடுகிறார். இந்த அனுபூதிக்குப் பெயர்தான் ஞானம் ஆகும்" என்கிறார். அவர் மேலும் பதின்மூன்றாம் அத்தியாயத்தில் ஞானத்தை நன்கு வரையறுக்கும் விதமாக, **அத்யாத்ம ஜ்ஞான நித்யத்வம் தத்வ ஜ்ஞானார்த்த தர்சனம் –** ஆத்ம ஞானத்தில் ஒன்றுபட்ட ஒரே மாதிரியான நிலைப்பாடு மற்றும் ஆன்ம தத்துவத்தின் பொருள் வடிவமாக விளங்கும், பரமாத்மாவை (அனுபவரீதியாக) கண்கூடாக (நேருக்கு நேராக) தரிசனம் செய்து அறிந்து கொள்வதே ஞானம் ஆகும் என்கிறார். க்ஷேத்திரம் – க்ஷேத்திரக்ஞர் ஆகியவற்றிற்கு இடையில் உள்ள வேற்றுமையை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொண்டதுடன் சேர்த்துதான் இந்த ஞானம் வாய்க்கிறது. சாஸ்திரங்களைப் படித்து விட்டு வாத விவாதங்கள் செய்வதற்குப் பெயர் ஞானம் இல்லை. அந்த சாஸ்திரங்களை வெறுமனே படித்து ஞாபகத்தில் வைத்துக் கொள்வது மட்டுமே ஞானமாகி விடாது. எங்கே அந்தப் பரம தத்துவம் அறியப்படுகிறதோ, யோகப் பயிற்சியின் அந்த உயர்வான நிலைக்குப் பெயரே ஞானம் ஆகும். பரமாத்மாவின் நேரடியான தரிசனத்துடன் (சாட்சாத்காரம்) சேர்த்துக் கிடைக்கின்ற அனுபூதிக்குப் பெயரே ஞானம் ஆகும். இத்துடன் முரண்படுகின்ற அனைத்தும் அஞ்ஞானம் எனப்படும்.

இந்த முறையில் எல்லாவற்றையும் கூறியபிறகும் கூட இந்தப் பதினான்காவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! அந்த ஞானங்கள் எல்லாவற்றையும் விட பரம மேன்மையான ஞானத்தினை (அறிவினை) நான் மறுபடியும் உனக்காகவே கூறுவேன்" என்கிறார். யோகேஷ்வரர் இதையேதான் மீண்டும் விளக்குவதற்கு முற்படுகிறார். ஏனெனில், '**சாஸ்த்ர ஸுசிந்தித புனி புனி தேகிய**' – மிகவும் நல்ல முறையில் சிந்தனை (மனனம்) செய்யப்பட்டிருந்தாலும் கூட மறுபடியும் மறுபடியும் அந்த சாஸ்திரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் பழக்கத்தை மட்டும் கைவிட்டு விடவே கூடாது. இது மட்டுமல்ல,

எவ்வளவுக்கு எவ்வளவு நீங்கள் சாதனைப் பாதையில் தீவிரமாக முன்னேறிச் சென்று கொண்டே இருக்கிறீர்களோ, எவ்வளவுக்கு எவ்வளவு அந்த இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு – இறைவன்) ஆன்ம வடிவத்திற்குள் நுழைவு பெற்றுக் கொண்டே செல்கிறீர்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு பிரம்மத்தில் இருந்து புதிய, புதிய அனுபூதிகள் (ஆன்மீக அனுபவங்கள்) கிடைத்துக் கொண்டே இருக்கும். இந்த அனுபவங்களையெல்லாம் ஸத்குருவாகிய மகாபுருஷரேதான் கொடுக்கிறார். எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர்' மறுபடியும் கூறுவேன்' என்கிறார்.

நம்முடைய நினைவுப் படலம் (ஸ்ம்ருதி படலம் அல்லது ஸூரதி படலம்) அல்லது மனத்திரையில் எப்போதுமே பல்வேறு வினைகளின் செயல்கள் பதிவாகிக் கொண்டேதான் இருக்கிறது. ஒருவேளை சாதகனுக்கு இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவின் ஆன்ம வடிவத்திற்குள் நுழைவு பெற்றுத் தருகின்ற ஆன்மீக அறிவு மங்கத் தொடங்கிவிட்டால், உடனே நினைவுப் படலம் அல்லது மனத்திரையில் இயற்கை அல்லது மாயையின் மூலமாக எழுகின்ற குணங்கள் பதிவாக ஆரம் பிக்கிறது. இதுவே அழிவிற்குக் காரணமாக அமைகிறது. எனவேதான் ஆன்மீக சாதனை முழுமை பெறுகின்ற காலம்வரை சாதகன் இஷ்ட தெய்வம் (ஸத்குரு – இறைவன்) சம்பந்தப்பட்ட ஆன்மீக அறிவைத் திரும்பத் திரும்பப் புதுப்பித்துக் கொண்டும் உருவேற்றிக் கொண்டும் இருக்க வேண்டும். இன்றைய அளவில் நினைவுப் படலம் உயிருடன் காணப்படுகிறது. ஆனால், ஆன்மீக உயர்நிலைகளை எட்டியபிறகு, இறைவனுள் நுழைவு பெற்று விட்டால் இந்நிலை மறைந்து போய் விடுகிறது. எனவேதான், பூஜ்ய பரமஹம்ஸ ஸ்ரீபரமானந்த சுவாமிகள், "பிரம்ம வித்யையை தினமும் சிந்தனை செய்,. ஒரு மாலையை தினமும் ஒருமுறை சுழற்று" என்று கூறுவது வழக்கம். இந்த மாலை ஆன்ம சிந்தனையில், அகத்தில் சுழற்றப்படுவது ஆகும். வெளியில் சுழற்றப்படுகின்ற (108 ருத்ராட்ச மணிகள் கொண்ட) ஜபமாலையைக் குறிப்பிடுவது அன்று.

இதெல்லாம் சாதகருக்காகக் கூறப்படுவது ஆகும். ஆனால் , உண்மையான ஸத்குருவானவர் எப்போதும் அந்த சாதகனுக்கு முன்னும் பின்னும் இருந்து கொண்டே இருக்கிறார். அகத்தளவில் அவனுடைய ஆன்மாவில் எழுந்தருளி சாரதியாக நின்று கொள்கிறார். வெளியிலோ, தம்முடைய உயர் ஆன்மீகக் கிரியைகள் மற்றும் காரியச் செயல்முறைகளின் மூலம், அவனுக்கு முன்பின் அறிமுகமில்லாத, எதிர்பார்க்காத சூழ்நிலைகளை எல்லாம் முன்பே உணர்த்தியருளி ஆன்மீகப் பாதையில் வழிநடத்திச் சென்று கொண்டேயிருக்கிறார். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரும் ஒரு மகாபுருஷர் ஆவார். அர்ஜுனன் சிஷ்யனுடைய நிலையில் இருந்தான். அவன் தன்னைக் காத்தருளுமாறு ஸ்ரீகிருஷ்ணரிடம் பிரார்த்தனை செய்து முறையிட்டிருந்தான். எனவேதான் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர்,

"ஞானங்கள் எல்லாவற்றையும் விடவும் அதிஉத்தமமான ஞானத்தை நான் மறுபடியும் உனக்காகக் கூறுவேன்" என்கிறார்.

**பரம் பூய : ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞானானம் ஜ்ஞான முத்தமம்**
**யஜ்ஜ்ஞாத்வா முனய : ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா : (1)**

அர்ஜுனா! ஞானங்கள் எல்லாவற்றை விடவும் அதிஉத்தமமான ஞானமாகிய பரம ஞானத்தை நான் மறுபடியும் உனக்காகக் கூறுகிறேன் (இதற்குமுன்பு எவ்வாறு கூறியிருந்தேனோ) அதை அறிந்துதான் எல்லா முனிவர்களும் இந்த உலகியலில் இருந்து விடுதலை பெற்று பரம சித்தியை அடையப் பெற்றனர். (இதற்குப் பிறகு, அடைவதற்கென்று எதுவுமே எஞ்சியிருப்பதில்லை.

**இதம் ஜ்ஞானமுபாச்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:**
**ஸர்க்கேஅபி நோபஜாயந்தே ப்ரலயே வ்யதந்தி ச (2)**

இந்த ஞானத்தின் **உபாச்ரித்ய :–** வெகுஅருகாமைவரை சென்று அதையே நன்கு பற்றிக் கொண்டு, செயல்முறைப் பாதையில் ஆன்மீகக் கிரியையைச் செய்து கொண்டே போய், அதற்கு வெகுஅருகில் வந்து, என்னுடைய ஆன்ம வடிவத்தை அடையப் பெற்றவர்கள் படைப்பின் ஆரம்பத்தில் மீண்டும் பிறப்பதில்லை. மேலும் பிரளய காலத்திலும் அதாவது, உடலானது முடிவு பெறும் தறுவாயிலும் நிலைகுலைந்து போவதில்லை. ஏனெனில், மகாபுருஷரைப் பொறுத்தவரையில் உடலின் முடிவு என்பது, எப்பொழுது அவர் ஆன்ம வடிவத்தைப் அடையப் பெறுகிறாரோ, அப்பொழுதே நிகழ்ந்து விடுகிறது. அதற்குப் பிறகு, அவருடைய உடல், அவர் குடியிருப்பதற்கான ஒரு தங்கும் அறை என்ற அளவிற்கு மட்டும்தான்! மறுபிறவி எதுவரை நிகழ்கிறது? எதுவரை அனைவரும் மறுபிறவி எடுக்க வேண்டியுள்ளது? இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். –

**மம யோனிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மின்கர்ப்பம் ததாம்யஹம்**
**ஸம்பவ : ஸர்வபூதானாம் ததோ பவதி பாரத (3)**

அர்ஜுனா! என்னுடைய **மஹத்ப்ரஹ்ம –** அதாவது, அஷ்டதா மூலப் பிரகிருதியே மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களின் பிறப்பிடமாகும். (யோனி) மேலும், அதில் நான் ஜீவ உயிருணர்வு (சேதனா) என்னும் விதையை விதைக்கிறேன். அந்த ஜடம் மற்றும் உயிருணர்வு ஆகியவற்றின் சேர்க்கையால் எல்லா உயிர்களும் உற்பத்தியாகின்றன.

**ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய : ஸம்பவந்தி யா :**
**தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம் பீஜப்ரத : பிதா (4)**

குந்தியின் மைந்தனே! எல்லாவிதமான யோனிகளிலும் (பல்வேறு வகைப்பட்ட பிறவிகளில்) எத்தனை எத்தனை உடல்கள் உற்பத்தியாகின்றனவோ, அவை அனைத்தையும் **யோனி** – கர்ப்பத்தில் தாங்குகின்ற, எட்டுவகையான வேறுபட்ட தத்துவங்களால் ஆக்கப்பட்ட மூலப் பிரகிருதியே (அஷ்டதா மூலப் பிரகிருதி) அவற்றிற்கெல்லாம் தாயாகும். மேலும், அவற்றில் ஜீவ உயிருணர்வு என்ற விதையை விதைக்கின்ற நானே தந்தையாவேன். வேறு எந்தத் தாயும், இல்லை தந்தையும் இல்லை. எதுவரைக்கும் ஜடம், ஜீவ உயிருணர்வு (சேதனா) ஆகியவற்றின் சேர்க்கை இருக்கிறதோ, அதுவரைக்கும் பிறவி கிடைத்துக் கொண்டே இருக்கும். இதற்கு நிமித்த காரணமாக யாரேனும் இருந்து கொண்டேதான் இருப்பார்கள். ஜீவஉயிருணர்வு (ஜீவாத்மா) உயிரற்ற உடலில் **(பிரகிருதியில்)** ஏன் சிறைப்படுகிறது? இதுபற்றிக் கூறுகிறார்.

**ஸத்வம் ரஜஸ்தம இதி குணா : ப்ரக்ருதிஸம்பவா:**
**நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம் (5)**

பெருந்தோள்களை உடையவனே! அர்ஜுனா! ஸத்துவ குணம், ரஜோகுணம், மற்றும் தமோ குணம் என்று இயற்கையில் இருந்து உற்பத்தியான மூன்று குணங்கள்தான் இந்த அழிவற்ற ஜீவாத்மாவை இந்த உடலில் பிணைத்து வைத்துள்ளன. எந்த முறையில்?

**தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்ப்ரகாஷகமனாமயம்**
**ஸுகஸங்கேன பத்னாதி ஜ்ஞானஸங்கேன சானக (6)**

பாவம் அற்றவனே! அர்ஜுனா! அந்த மூன்று குணங்களிலும் ஒளி வீசுகின்ற, (பிரகாசிக்கச் செய்கின்ற) விகாரங்கள் அற்றதுமாகத் திகழ்கின்ற ஸத்துவ குணமோ **நிர்மலத்வாத்** மாசற்று, நிர்மலமாக இருக்கின்ற காரணத்தால் சுகம் மற்றும் ஞானத்தின் மீது பற்று வைத்துக் கொண்டு ஆத்மாவை இந்த உடலில் பிணைத்து வைக்கிறது. ஸத்துவ குணமும் கூட ஒரு பந்தமேயாகும். இதில் வித்தியாசம் என்னவென்றால் உண்மையான ஆன்ம சுகம் பரமாத்மாவிடம் மட்டுமே உள்ளது. மேலும், அந்த இறைவனை, (பரமாத்மாவை) நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்தல் என்கின்ற சாட்சாத்காரத்திற்குப் பெயரே ஞானம் ஆகும். எதுவரைக்கும் பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்தல் என்கின்ற சாட்சாத்காரம் கிடைக்கவில்லையோ, அதுவரை இந்த ஸத்துவ குணமானவன் இந்த உடலில் பிணைக்கப்பட்டிருப்பான்.

**ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணா ஸங்கஸமுத்பவம்**
**தன்னிபத்னாதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம் : (7)**

அர்ஜீனா! ஆசைகள் உயிருடனும் விழிப்புற்றும் இருக்கின்ற நிலையே ரஜோகுணம் ஆகும். இதை நீ **கர்ம ஸங்கேன** ஆசைகள், மற்றும், பற்றுதல் ஆகியவற்றால் உற்பத்தியாகிறது என்று அறிந்து கொள். அது ஜீவாத்மாவை கர்மம் மற்றும் அதன் பலனில் பற்று வைத்துக் கொண்டு இந்த உடலில் பிணைக்கிறது. ரஜோகுணம் கர்மத்தில் ஈடுபடச் செய்கிறது.

**தமஸ்த்வஜ்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினாம்**
**ப்ரமாதாலஸ்யநித்ராபிஸ்தன்னிபத்னாதி பாரத (8)**

அர்ஜுனா! உடல் தரித்துள்ள அனைத்து உயிரினங்களையும் மோகத்தில் ஆழ்த்துகின்ற தமோ குணத்தை நீ அஞ்ஞானத்தில் இருந்து தோன்றியது என்றே அறிந்து கொள். அது இந்த ஆத்மாவை கவனக் குறைவு அதாவது வீணான செயல்கள், சோம்பல் (அதாவது நாளை செய்து கொள்ளலாம் என்று தள்ளிப் போடுவது) மற்றும் உறக்கம் ஆகியவற்றின் மூலமாக இந்த உடலில் பிணைக்கிறது. இங்கே, உறக்கம் என்பதற்கு தமோ குணத்தவன் அதிகமாகத் தூங்குவான் என்று பொருளன்று. உடல் உறங்குவதைப் பற்றியல்ல பேச்சு. **யா நிசா ஸர்வபூதானாம் தஸ்யாம்ஜாகர்தி ஸம்யமீ** – இந்த உலகமே ஒரு இரவு. தமோகுணமுடையவன் இந்த உலகம் என்னும் இரவில் இராப்பகலாக மூழ்கிக் கிடக்கிறான். ஆன்ம வடிவத்தை அடைய வேண்டும் என்ற எண்ணமேயில்லாமல் சுயநினைவின்றி ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறான். இதுவே தமோ குண உறக்கம் எனப்படுகிறது. எவன் இதில் சிக்கிக் கொண்டுள்ளானோ, அவனே உறங்கிக் கிடக்கிறான். இப்போது, மூன்று குணங்களுக்கும் இடையில் உள்ள பிணைப்பைப் பற்றிய ஒட்டு மொத்தமான வடிவத்தை வர்ணிக்கிறார். –

**ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத**
**ஜ்ஞானமாவ்ருத்ய து தம : ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத (9)**

அர்ஜுனா! ஸத்துவ குணம் சுகத்தில் ஈடுபடுத்துகிறது. என்றும் நிலையாக உள்ள, மேலான சுகமாகிய இறைச் சிந்தனையோட்டத்தில் ஈடுபட வைக்கிறது. ரஜோகுணம் கர்மத்தில் ஈடுபட வைக்கிறது மேலும், தமோ குணமோ ஞானத்தைத் திரையிட்டு மறைத்து கவனமின்மை, மூலமாக ஆழ்மனத்தை வீணான செயல்களில் ஈடுபடத் தூண்டுகிறது. குணம் என்பது ஒரே இடத்தில், ஒரே இதயத்தில்தான் இருக்கிறது எனும்போது, தனித்தனியாக எவ்வாறு பிரிந்திருக்கிறது? இது பற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.–

**ரஜஸ்தமஸ்சாபிபூய ஸத்வம் பவதி பாரத**
**ரஜ : ஸத்வம் தமஸ்சைவ தம : ஸத்வம் ரஜஸ்ததா (10)**

அர்ஜுனா! ரஜோ குணம் மற்றும் தமோ குணம் ஆகியவற்றை அடக்கி ஸத்துவ குணம் மேலெழுகிறது. அதே போன்றுதான், ஸத்துவ குணம், மற்றும் தமோ குணத்தை அடக்கி ரஜோகுணம் மேலெழுகிறது. இம்முறையில் ரஜோகுணம், மற்றும் ஸத்துவ குணம் ஆகியவற்றை அடக்கித் தமோ குணம் மேலெழுகிறது. எப்பொழுது எந்தக் குணம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதை எப்படி அறிந்து கொள்வது?

**ஸர்வத்வாரேஷு தேஹேஅஸ்மின்ப்ரகாஷ உபஜாயதே**
**ஜ்ஞானம் யதா ததா வித்யாத்விவ்ருத்தம் ஸத்வமித்யுத (11)**

எந்தக் காலத்தில் இந்த உடல் மற்றும் ஆழ்மனது மற்றும் அனைத்துப் புலன்களிலும் இறைவனின் தெய்வீக மகிமைகளுடன் கூடிய ஆன்ம வெளிச்சம் மற்றும் இறைவனை அறியும் ஆற்றல் உற்பத்தியாகிறதோ, அந்தக் காலத்தில் ஸத்துவ குணம் மேலோங்கி விட்டது, அதாவது, ஸத்துவ குணம் நிறைந்த எண்ணவோட்டம் அடையப் பெற்றுவிட்டது, என்று அறிந்து கொள்ள வேண்டும். அத்துடன் –

**லோப : ப்ரவ்ருத்திராரம்ப : கர்மணாமஷம் : ஸ்ப்ருஹா**
**ரஜஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப (12)**

அர்ஜுனா! ரஜோ குணம் நிறைந்த எண்ணவோட்டம் அதாவது ரஜோ குணம் மேலெழும்போது பேராசை, காரியத்தில் ஈடுபடும் முயற்சி, கர்மங்களைத் தொடங்குதல், அமைதியின்மை அதாவது மனச் சஞ்சலம் (அலைபாயும் மனநிலை) புலனின்ப போகங்களில் நாட்டம் இவை அனைத்தும் உற்பத்தியாகின்றன. இப்போது தமோ குணம் நிறைந்த எண்ணம் பெருகும்பொழுது என்ன ஆகிறது?

**அப்ரகாஷோஅப்ரவ்ருத்திஸ்ச்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச**
**தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன (13)**

அர்ஜுனா! தமோ குணம் மேலோங்கிய உடன் **அப்ரகாச** : பிரகாசம் (வெளிச்சம்) என்பது இங்கே பரமாத்மாவையே குறிப்பிடுகிறது) இறைவனின் தெய்வீக மகிமைகள் பொருந்திய பிரகாசத்தை நோக்கி, அதாவது ஆன்ம வடிவத்தை நோக்கி முன்னேறிச் செல்ல விரும்பாத இயல்பு, **கார்யம் கர்ம** – செய்வதற்குத் தகுதி படைத்த வேள்வியின் சிறப்பு மிக்கச் செயல்முறை எனப்படும் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வதில் பின்னடைவு, ஆழ்மனதில் வீணான

செயல்களில் ஆதிக்கம் பெருகியிருத்தல், மற்றும் இதே உலகியலில் மூழ்கடிக்கச் செய்யும் அனைத்து விதமான எண்ணங்கள் – இவை அனைத்தும் உற்பத்தியாகின்றன. இந்தக் குணங்களைப் பற்றிய அறிவால் என்ன பயன்?

**யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத்**
**ததோத்தமவிதாம் லோகானமலான்ப்ரதிபத்யதே (14)**

எப்பொழுது இந்த ஜீவாத்மாவானது ஸத்துவ குணம் மேலோங்கியிருக்கும் காலத்தில் மரணத்தைத் தழுவுகிறதோ, உடலைத் துறக்கிறதோ, அப்பொழுது மேலான, உயர்வான கர்மங்களைச் செய்பவர்கள் வாழும் அப்பழுக்கில்லாத தெய்வீக உலகங்களை அடையப் பெறுகிறது. அத்துடன்–

**ரஜஸி ப்ரளயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே**
**ததாப்ரலீன ஸ்தமஸி மூடயோனிஷு ஜாயதே (15)**

ரஜோ குணம் மேலோங்கியிருக்கும் காலத்தில் மரணத்தைத் தழுவுபவன் கர்மங்களைச் செய்வதில் பற்றுடையவர்களுக்கு மத்தியில் பிறவி எடுக்கிறான். மேலும், தமோகுணம் மேலோங்கியிருக்கும் காலத்தில் மரணத்தைத் தழுவுபவன் அறிவிலிகளின் கர்ப்பத்தில் பிறவி எடுக்கிறான். இவற்றில் புழு, பூச்சிகளின் முதலான தாழ்ந்த பிறவிகள் எனப்படும் அனைத்தும் அடங்கும். ஆகவே, குணத்தளவில் கூட மனிதர்கள் ஸத்துவகுணம் உடையவர்களாக இருக்க வேண்டும். படைப்பின் இந்த வங்கியானது உங்களால் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் குணங்கள் அனைத்தையும் நீங்கள் மரணமடைந்த பிறகும் கூட பாதுகாப்பாக வைத்திருந்து மீண்டும் உங்களுக்கே திரும்பக் கிடைக்குமாறு செய்யும் பணியைச் செவ்வனே நிறைவேற்றி வருகிறது. இதனுடைய இறுதி விளைவு (பரிணாமம்) என்ன? என்பதை இப்போது பார்க்கலாம்.

**கர்மண : ஸுக்ருதஸ்யாஹு : ஸாத்வீகம் நிர்மலம் ஃபலம்**
**ரஜஸஸ்து ஃபலம் துக்கமஜ்ஞானம் தமஸ ஃபலம் (16)**

சாத்வீக கர்மத்தின் பலன் ஸத்துவ குணம், தூய்மை, சுகம், ஞானம் மற்றும் வைராக்கியம் முதலானவை என்று சொல்லப்படுகிறது. ராஜஸ கர்மத்தின் பலன் துக்கம் மற்றும் தாமஸ கர்மத்தின் பலன் அஞ்ஞானம் என்றும் சொல்லப்படுகிறது. அத்துடன் –

**ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஞானம் ரஜஸோ லோப ஏவ ச**
**ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோஅஜ்ஞானமேவ ச (17)**

ஸத்துவ குணத்தால் ஞானம் பிறக்கிறது. (இறைவனின் தெய்வீக மகிமை பொருந்திய ஆன்ம வடிவத்தை நேரடியாக தரிசனம் செய்து அறிவது அனுபூதியில் உணர்வது ஞானம் ஆகும்).

இறைவனின் தெய்வீக மகிமைகள் அனுபூதியில் பெருக்கெடுத்து ஓடுகிறது. ரஜோ குணத்தால் சந்தேகமேயில்லாமல் லோபம் பிறக்கிறது. மற்றும் தமோ குணத்தால் கவனமின்மை, மோகம், சோம்பல் (அஞ்ஞானம்) ஆகியவை பிறக்கின்றன. இவை உற்பத்தியாகி எந்த நிலையைப் கதியைப் பெற்றுத் தருகின்றன?

**ஊர்த்த்வம் கச்சந்தி சத்வஸ்த்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா:**
**ஜகன்யகுணவ்ருத்திஸ்த்தா அதோ கச்சந்தி தாமஸா : (18)**

ஸத்துவ குணத்தில் நிலைபெற்றுள்ள மனிதன் **ஊர்த்த்வ மூலம்** – மூலப் பரம்பொருளாகிய அந்தப் பரமாத்மாவை நோக்கி முன்னேறிச் செல்கிறான். அப்பழுக்கற்ற, தூய்மையான உலகங்களை அடைகிறான். ரஜோ குணத்தில் நிலைபெற்றுள்ள மனிதன் நடுத்தரமான நிலையில் உள்ள மனிதனாகிறான். அவனிடம் 'ஸாத்வீகம்', விவேகம், வைராக்கியம் ஆகியவைகளும் இருப்பதில்லை. அதேசமயம் கீழ்த்தரமான புழு, பூச்சி யோனிகளிலும் (பிறவிகள்) பிறக்க மாட்டான். மாறாக, மறுபிறவி (அதாவது சாதாரண மனிதப்பிறவி) எடுக்கிறான். மேலும், இகழத்தக்க, நிந்தனைக்குரிய தமோ குணத்தில் நிலைபெற்றுள்ள தாமஸீக மனிதனோ **'அதோகதி',** அதாவது, மிருகங்கள், பறவைகள், புழு, பூச்சிகள் முதலான கீழ்த்தரமான தாழ்ந்த யோனிகளில் (பிறவிகள்) பிறக்கிறான். இந்த முறையில் மூன்று குணங்களுமே ஏதேனும் ஒருவழியில் பிறவி எடுக்கவே காரணமாக அமைகின்றன. எவனொருவன் குணங்களை எல்லாம் கடந்து விடுகிறானோ, அவன் பிறவி என்னும் பந்தத்தில் இருந்து விடுதலை பெற்று விடுகிறான். மேலும், அவன் என்னுடைய ஆன்ம வடிவத்தை அடையப் பெறுகிறான். இதுபற்றிக் கூறுகிறார்.

**நான்யம் குணேப்ய : கர்த்தாரம் யதா த்ரஷ்டானுபஷ்யதி**
**குணேப்யஷ்ஸ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோஅதிகச்சதி (19)**

எந்தக் காலத்தில் சாட்சிஉருவமாக **(த்ரஷ்டா)** இருக்கின்ற ஆன்மாவானது மூன்று குணங்களைத் தவிர வேறு எதையும் செய்பவராகக் **(கர்த்தா)** காண்பது இல்லையோ மற்றும் மூன்று குணங்களையெல்லாம் தாண்டி வெகு அப்பால் இருக்கின்ற பரம தத்துவத்தை **வேத்தி** – அறிந்து, தன்னில் முழுவதுமாக அதனை வரித்துக் கொண்டு விடுகிறதோ, அந்தக் காலத்தில்,

அந்த மனிதர் என்னுடைய ஆன்ம வடிவத்தை அடையப் பெறுகிறார். இது வெறுமனே அறிவு சார்ந்த நிலையில் புரிந்து கொண்டு 'குணங்கள் குணங்களிலேயே செயல்படுகின்றன' என்று வெறுமனே பேச்சளவிற்கு மட்டுமே ஏற்றுக் கொள்வதன்று. அதற்கு மாறாக, சாதனையைத் தொடர்ந்து செய்து கொண்டே சென்று, அந்தப் பரம தத்துவ பரமாத்மாவின் நேரடியான தரிசனம் வாய்க்கப் பெற்று விடுகிறபோதுதான், 'குணங்களைத் தவிர, செயல்படுவது என்று (கர்த்தா) வேறொன்றும் இல்லை' என்பது தெரியவருகிறது. அந்தச் சமயத்தில்தான் மனிதன் மூன்று குணங்களையும் தாண்டி அப்பால் சென்று விடுகிறான். இது வெறுமனே மனத்தளவில் கற்பனை செய்து ஏற்றுக் கொள்வதன்று. இதுபற்றி மேலும் கூறுகிறார்.

**குணானேதானதீத்ய த்ரீன்தேஹீ தேஹஸமுத்பவான்**
**ஜன்மம்ருத்யுஜராதுக்கைர்விமுக்தோஅம்ருதமஷ்னுதே (20)**

மனிதன் இந்த ஸ்தூல உடல்கள் உருவாவதற்குக் காரணமாக அமைகின்ற மூன்று குணங்களுக்கும் அப்பால் கடந்து சென்று பிறப்பு, இறப்பு, வயோதிகம் மற்றும் அனைத்து விதமான துக்கங்களிலிருந்தும் மிகவும் சிறப்பான முறையில் விடுதலை அடைந்து அமிருத தத்துவத்தை (மரணமில்லாப் பெருவாழ்வு) அடையப் பெறுகிறான். இதுபற்றி அர்ஜுனன் கேள்வி எழுப்பினான் –

**அர்ஜுன உவாச்ச**
**கைர்லிங்கைஸ்த்ரீன்குணானேதானதீதோ பவதி ப்ரபோ**
**கிமாசார : கதம் சைதாம்ஸ்த்ரீன்குணானதிவர்த்ததே (21)**

பிரபு! இந்த மூன்று குணங்களையும் கடந்து அப்பால் செல்கின்றவன் எந்தெந்த இலட்சணங்கள் கைகூடப் பெறுகிறான்? மற்றும், எத்தகைய முறையில் அவன் நடந்து கொள்கிறான்? மற்றும் எந்த வழியில் சென்று இந்த மூன்று குணங்களையும் கடந்து அப்பால் போகிறான்?

**ஸ்ரீ பகவானுவாச்ச**
**ப்ரகாஷம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ**
**ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி (22)**

அர்ஜுனனின் மேலே கூறப்பட்டுள்ள மூன்று கேள்விகளுக்கும் விடையளிக்கும் வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறினார் – அர்ஜுனா! எவனொருவன் ஸத்துவ குணத்தின் செயல்படுநிலையாகிய தெய்வீக மகிமை பொருந்திய ஆன்மப் பேரொளி, ரஜோ குணத்தின் செயல்படு நிலையாகிய கர்மத்தில் ஈடுபாடு, தமோ குணத்தின் செயல்படுநிலையாகிய மோகம் ஆகியவை வாய்த்த இடத்தில் வெறுப்படைவதோ, ஒழிந்த இடத்தில் விரும்புவதுமில்லையோ, அத்துடன்

**உதாஸீனவதாஸீனோ குணைர்யோ ந விசால்யதே**
**குணா வர்த்தந்த இத்யேவ யோஅவதிஷ்டதி நேங்கதே (23)**

எவனொருவன் இந்த முறையில் உதாசீனமாக, அதாவது, விருப்பு மற்றும் வெறுப்பின்றி இருப்பதற்கு ஒப்பானதொரு நிலையில் நிலைபெற்றவனாகவும், குணங்களின் மூலமாகத் தடுமாற்றம் அடையச்செய்யப்பட முடியாதவனாகவும் இருக்கிறானோ அவனே, 'குணம் குணத்திலேயே செயல்படுகிறது' என்று உள்ளதை உள்ளபடிக்கு (யதார்த்தம்) அறிந்து கொண்டு, தன்னிலையினின்று நழுவிப் போவதில்லை. அப்போதுதான் அவன் குணங்களை எல்லாம் கடந்து அப்பால் செல்கிறான்.

**ஸமதுக்கஸுக : ஸ்வஸ்த்த : ஸமலோஷ்டாஷ்மகாஞ்சன :**
**துல்யப்ரியாப்ரியோ தீரஸ்துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி : (24)**

எவனொருவன் நிரந்தரமாகத் தனித்துவத்தில் தனது (அதாவது ஒவ்வொருவரின் சொந்த, உண்மை வடிவமாகிய ஆன்மாவில்) அதாவது ஆன்ம உணர்வில் நிலைபெற்று இருக்கிறானோ, சுகம் மற்றும் துக்கத்தில் சமமாக இருக்கிறானோ, கல்லையும் மண்ணையும் பொன்பொருட்களையெல்லாம் சமமாகக் காண்கிறானோ, தைரியமானவனோ, விரும்பத் தகுந்தது, விரும்பத்தகாதது ஆகிய இரண்டையும் ஒரேமாதிரியாக ஏற்றுக் கொள்கிறானோ, புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகியவற்றை ஒரே மாதிரியாக எடுத்துக் கொள்கிறானோ, மற்றும் –

**மானாபமானயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோ**
**ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத : ஸ உச்யதே (25)**

எவனொருவன் மானம் மற்றும் அவமானத்தைச் சமமாகவும், நண்பர் பகைவரிடம் பாரபட்சம் எதுவுமின்றி நடுநிலையாகவும் இருக்கிறானோ எல்லா ஆரம்பங்களிலிருந்தும் தன்னை முழுவதுமாக விடுவித்துக் கொண்டுள்ள அவனே, குணங்களை எல்லாம் கடந்து அப்பால் சென்றவன்' (குணாதீதன்) எனப்படுகிறான். இருபத்தி இரண்டாவது சுலோகத்தில் இருந்து இருபத்திஐந்தாவது சுலோகம் வரைக்கும் 'குணங்களை எல்லாம் கடந்து அப்பால் சென்ற' குணாதீதரின் இலட்சணங்கள் மற்றும் அவருடைய நடைமுறைகள் பற்றியும் சொல்லும்போது அவர் தன்னுடைய நிலையினின்று வழுவுவதில்லை என்றும் குணங்களின் மூலமாக அவரைத் தடுமாற்றமடையச் செய்யவும் முடியாது என்றும் உறுதியான நிலைப்பாட்டை உடையவர் அவரென்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது அடுத்த சுலோகத்தில் குணங்களை எல்லாம் கடந்து அப்பால் செல்வதற்கான விதியைப் பற்றி எடுத்துரைக்கிறார்.

**மாம் ச யோஅவ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே**
**ஸ குணான்ஸமதீத்யைதான்ப்ரஹ்மபூயாய கல்பதே (26)**

எவனொருவன் **அவ்யபிசாரிணி பக்தியின்** மூலமாக அதாவது இஷ்ட தெய்வத்தைத் (ஸத்குரு – இறைவன்) தவிர, மற்றெல்லா விதமான உலகியல் நினைப்புகளில் இருந்தும் என்றென்றைக்குமாக விலகியிருந்து கொண்டு யோகத்தின் மூலமாக, அதாவது, அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தின் மூலமாக நிரந்தரமாக என்னையே வழிபாடு செய்கிறானோ, அவன், இந்த மூன்று குணங்களையும் நல்ல முறையில் தாண்டிச் சென்று, பரபிரம்மத்துடன் ஒன்றுபடும் தகுதியைப் பெற்று விடுகிறான். இதற்குப் பெயர்தான் ‘கல்பம்’ எனப்படுகிறது. பிரம்மத்துடன் இணைந்து ஒருணர்வைப் பெறுவதே ‘உண்மையான கல்பம்’ ஆகும். நிலைத்த உணர்வுடன் நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகாமல் குணங்களையெல்லாம் கடந்து அப்பால் செல்லவே முடியாது. கடைசியில், யோகேஷ்வரர் தீர்மானிக்கும் வகையில் கூறுகிறார். –

**ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச**
**ஷாஸ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச (27)**

அர்ஜுனா! அந்த அழிவற்ற பிரம்மத்திற்கும் (எதனுடன் சேர்ந்து அவன் கர்மம் செய்கிறானோ, எதில் அந்த குணாதீதன் ஒருணர்வுடன் நுழைவு பெறுகிறானோ) அமிருதத்திற்கும் (மரணமில்லாப் பெருவாழ்வு) என்றும் நிலையான, மாறாத சாஸ்வதமான தர்மத்திற்கும், அந்த அகண்ட ஓர்நிலைப்பட்ட, ஆனந்தத்திற்கும் நானே உறைவிடம் ஆவேன். அதாவது, பரமாத்மாவில் நிலைபெற்றுள்ள சத்குருவே இவை அனைத்திற்கும் உறைவிடமாவார். ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகேஷ்வரர் ஆவார். இனி ஒருவேளை உங்களுக்குப் புலன் உணர்வுக்கெல்லாம் அப்பாற்ப்பட்ட இறைப் பேருணர்வு நிலை, அழிவற்ற நிலை, பிரம்மம், என்றென்றும் நிலையாக உள்ள சாஸ்வத தர்மம், அகண்ட, ஓர்நிலைப் பட்ட ஆனந்தம் அவசியமென்றுபட்டால் எவரேனும் ஒரு தத்துவத்தில் நிலைபெற்ற, புலன் உணர்வுகளைக் கடந்து ஆன்ம வடிவத்தில் நிலைத்துள்ள, மகாபுருஷருடைய சரணத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். அத்தகைய ஒருவர் மூலமாக மட்டுமே இதை அடைவது சாத்தியமாகிறது.

**முடிவுரை :** –

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், “அர்ஜுனா! ஞானங்களில் எல்லாம் அதிஉத்தமமான பரம ஞானத்தை நான் மறுபடியும் உனக்காகக் கூறுகிறேன். இதை அறிந்து கொண்டு முனிவர்கள்

இறைவழிபாட்டின் (இறை ஆராதனை – உபாசனை) மூலமாக என்னுடைய ஆன்ம வடிவத்தை அடையப் பெற்றுள்ளனர். அதற்குப் பிறகு, அவர்கள் படைப்பின் ஆரம்பத்தில் மீண்டும் பிறவி எடுப்பதில்லை. ஆனால், உடல் என்பது ஒருநாள் அழியத்தான் போகிறது. அந்தச் சமயத்தில் அவர்கள் அதற்காக வருந்துவதில்லை. அவர்கள், சரியாகச் சொல்வதென்றால் எப்பொழுது ஆன்ம வடிவத்தை அடையப் பெறுகிறார்களோ, அப்பொழுதே தங்களுடைய உடலைத் துறந்து விடுகிறார்கள். இந்த உடலில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதுதான் இறைவன் அடையப்படுகிறார். எனவேதான் உடல் முடிவடையும் காலத்திலும் கூட அதற்காக அவர்கள் கொஞ்சமும் வருத்தப்படுவது இல்லை" என்கிறார்.

இயற்கையில் இருந்து தோன்றிய ரஜோ, ஸத்துவ மற்றும் தமோ குணங்களே இந்த ஜீவாத்மாவை உடலில் பிணைத்து வைக்கின்றன. இரண்டு குணங்களை அடக்கி மூன்றாவது குணம் மேலெழுகிறது. குணம் மாறிக் கொண்டேயிருக்கும் இயல்புடையது. இயற்கை தொடக்கமற்றது. எனவே ஒருபோதும் அழிவது இல்லை. மாறாக, குணங்கள் மூலமாகவே தன்னுடைய ஆளுமையைச் செலுத்துகிறது. குணங்கள் மனத்தில் தங்களுடைய ஆளுமையைச் செலுத்துகின்றன. எப்பொழுது ஸத்துவ குணம் மேலோங்குகிறதோ, அப்பொழுது இறைவனின் தெய்வீக மகிமைகள் பொருந்திய ஆன்மீகப் பேரொளி மற்றும் இறைவனை அறியச் செய்யும் ஆன்ம அறிவு (போத சக்தி) நிரம்பி வழிகிறது. ரஜோகுணம், பற்றுதல் உடையது. அந்தச் சமயத்தில் கர்மத்தில் ஈடுபடுவதற்கான பேராசை நிறைந்திருக்கிறது; பற்றுதல் இருக்கிறது. மற்றும் ஆழ்மனத்தில் தமோகுணம் செயல்படத் தொடங்கிவிட்டால் சோம்பல், கவனமின்மை நிரம்பி விடுகிறது. ஸத்துவ குணம் செயல்படும் நிலையில் மரணமடைபவர் மேலான அப்பழுக்கற்ற தூய்மையான உலகங்களில் பிறவி எடுக்கிறார். ரஜோ குணம் செயல்படும் நிலையில் மரணமடைபவர் மனிதப் பிறவியையே திரும்பவும் அடைகிறார்; மேலும், தமோகுணம் செயல்படும் நிலையில் மரணமடைபவர் மானுட உடலைத் துறந்து விட்டுக் (மிருகம், புழு, பூச்சி முதலான) கீழ்த்தரமான, தாழ்ந்த பிறவிகளை அடைகிறார். எனவேதான், மனிதர்கள் படிப்படியாக உன்னதமான ஸத்துவ குணத்தை நோக்கி முன்னேறிச் செல்ல வேண்டும். உண்மையைச் சொல்வதென்றால் மூன்று குணங்களுமே ஏதேனும் ஒருவகையான பிறவிக்கே (யோனி) காரணமாக அமைகின்றன. குணமே ஜீவாத்மாவை உடலில் பிணைக்கிறது. எனவேதான் குணங்களையெல்லாம் கடந்து செல்ல வேண்டியது அவசியமாகிறது.

அவன் எதிலிருந்து விடுதலை பெறுகிறானோ, அதனுடைய முழுஉருவத்தையும் விளக்கும் வகையில் யோகேஷ்வரர், "அஷ்டதா மூலப் பிரகிருதியே கர்ப்பத்தில் தாங்குகின்ற தாயாவாள். மேலும், நான்தான் அதில்

ஜீவஉயிருணர்வு (சேதனா) எனப்படும் விதையை விதைக்கின்ற தந்தையாவேன். வேறு எந்தத் தாயோ, தந்தையோ இல்லை. எதுவரை இந்த வரிசைக் கிரமம் தொடர்கிறதோ, அதுவரை இந்த அசைவன, அசையாதவை, நகர்வன, நகராதவை, இடம் பெயர்வன மற்றும் இடம் பெயராதவை என்று அனைத்தும் அடங்கிய ஒட்டு மொத்த உலகிலும் நிமித்த காரணமாக யாரேனும் தாயாகவோ, தந்தையாகவோ இருந்து கொண்டே இருப்பார்கள். ஆனால், உண்மையில், இயற்கையே தாய்; நான்தான் தந்தையாவேன்" என்கிறார்.

இதுபற்றி அர்ஜுனன் மூன்று கேள்விகள் கேட்டான். அவை முறையே, 'குணங்களை எல்லாம் கடந்த குணாதீதரின் இலட்சணம் என்ன? அவருடைய நடைமுறை யாது? மற்றும் மனிதன் எந்த வழியில் சென்று இந்த மூன்று குணங்களையும் கடந்து அப்பால் செல்கிறான்?' இம்முறையில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் குணாதீதரின் இலட்சணம், அவருடைய நடைமுறை ஆகியவற்றைப் பற்றி எடுத்துக் கூறினார். மேலும், கடைசியில் குணங்களை எல்லாம் கடந்து செல்வதற்கான உபாயத்தைக் கூறும்போது அவர், எவனொருவன் **அவ்யபிசாரிணி பக்தி** மற்றும் யோகம் மூலமாக எவனொருவன் என்னையே நிரந்தரமாக இறைவழிபாடு செய்கிறானோ, அவனே மூன்று குணங்களையும் கடந்து அப்பால் செல்கிறான் என்றார். வேறு எந்தச் சிந்தனையும் செய்யாமல், நிரந்தரமாக, இஷ்ட தெய்வத்தை (ஸத்குரு – இறைவன்) மட்டுமே சிந்தனை செய்வதையே **அவ்யபிசாரிணீ பக்தி** என்கிறார். உலகியலின் சேர்க்கை பிரிவு–ஆகியவற்றில் இருந்து என்றென்றைக்குமாக விலிகியிருப்பதையே யோகம் என்கிறோம்.அதனைச் செயல்முறைப்படுத்துகின்ற முறைக்குப் பெயரே கர்மம் ஆகும். வேள்வி எதனால் முழுமையாக நிறைவு பெறுகிறதோ, அதுவே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் ஆகும். அவ்யபிசாரிணீ பக்தியின் மூலமாக, அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகுவதன் மூலமாகவே ஒருவன் மூன்று குணங்களையும் கடந்து அப்பால் செல்ல முடியும். மற்றும் அவ்வாறு கடந்து சென்று பிரம்மத்துடன் இணைந்து ஒருணர்வு பெறுவதற்கும் முழுமையான கல்பத்தை அடைவதற்கும் உள்ள தகுதியைப் பெற்று விடுகிறான். குணம் எந்த மனத்தில் தன்னுடைய ஆளுமையைச் செலுத்துகின்றதோ, அந்த மனமே இறைவனில் இரண்டறக் கலந்து மறையும் காலத்தில்தான் பிரம்மத்துடன் இணைந்த ஒருணர்வு பெறப்படுகிறது. இதுவே உண்மையான கல்பமாகும். எனவே, இறைவழிபாடு செய்யாமல் எவரும் குணங்களை எல்லாம் கடந்து அப்பால் செல்ல முடியாது.

கடைசியில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தீர்மானமாக, "அந்த குணாதீதர் எந்த பிரம்மத்துடன் இணைந்து ஒருணர்வில் நிலைபெறுகிறாரோ, அந்த

பிரம்மத்திற்கும் அமிருத தத்துவத்திற்கும் (மரணமில்லாப் பெருவாழ்வு) என்றும் நிலையான, மாறாத தர்மத்திற்கும் மற்றும் அகண்ட, ஓர்நிலைப்பட்ட ஆனந்தத்திற்கும் நானே உறைவிடம் ஆவேன். அதாவது, அவற்றை அடையச் செய்வதில் (காரண கர்த்தா) முதன்மை அதிகாரம் படைத்தவன் ஆவேன்" என்கிறார். இப்போதைய நிலையில் ஸ்ரீகிருஷ்ணர் நம்முடன் இல்லை. அப்படியென்றால், அவருடன் சேர்த்து, அவரிடம் மட்டுமே கிடைக்கும் என்று சொல்லப்படுகின்ற உறைவிடமும் சரண சான்னித்தியமும் முதன்மை அதிகாரமும் சென்று விட்டதா என்ன? அப்படியென்றால் இதுவெல்லாம் பெரும் சந்தேகத்திற்கல்லவா இடமளிக்கிறது? அந்த அடைக்கலம் இனிமேல் எங்கே கிடைக்கப் போகிறது? ஆனால், அப்படி ஒன்றும் இல்லை, ஸ்ரீகிருஷ்ணர் தம்மைப் பற்றித் தெளிவாக அறிமுகப்படுத்திக் கொள்ளும் வகையில் "நான் ஒரு யோகியும் ஆன்ம வடிவத்தில் நிலைப்பெற்றுள்ள மஹாபுருஷரும் ஆவேன்'' என்று கூறியுள்ளாரே! **சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம்** – அர்ஜுனன், "நான் உங்களுடைய சிஷ்யன்; உங்களைச் சரணம் அடைந்தவன். என்னைக் காத்தருளுங்கள்" என்று பிரார்த்தனை செய்திருந்தான். பல்வேறு இடங்களில் ஸ்ரீகிருஷ்ணரும் தம்மைப் பற்றித் தெளிவாகவே கூறியிருக்கிறார். ஸ்தித ப்ரக்ஞ மகாபுருஷருடைய இலட்சணத்தை எடுத்துரைக்கும்போது தம்மையும் அவருடன் ஒப்பிட்டுத் 'தாமும் அதேபோன்று ஒரு மகாபுருஷரே!' என்று அறிவித்தார். ஆகவே, இதிலிருந்தே 'ஸ்ரீகிருஷ்ணர் ஒரு மகாத்மாவும் யோகியும் ஆவார்' என்பது தெளிவாகிறது. இதற்குப் பிறகு, ஒருவேளை உங்களுக்கு அகண்ட, ஓர்நிலைப்பட்ட ஆனந்தம், என்றும் நிலையான, மாறாத சாஸ்வத தர்மம், மற்றும் அமிருத தத்துவம் (மரணமில்லாப் பெருவாழ்வு) ஆகியவற்றின் அவசியம் ஏற்பட்டால், இவை அனைத்தையும் அடைவதற்கான ஒரே வழி சத்குரு மட்டுமேயாவார். நேரடியாகப் புத்தகத்தைப் படித்து விட்டு எவராலும் இவற்றையெல்லாம் பெற்றுவிட முடியாது. அந்த மகாபுருஷர் சாதகனின் ஆத்மாவில் எழுந்தருளி சாரதியாக நின்று கொண்டு, கொஞ்சம், கொஞ்சமாக அந்த பக்தி ஆர்வம் நிறைந்த பக்தனை அழைத்துக் கொண்டு போய், அவனுடைய சொந்த மற்றும் உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தில் அதாவது, எந்த ஆன்ம வடிவத்தில் அவர் நிலைபெற்றிருக்கிறாரோ, அதிலேயே சேர்த்து விடுகிறார். இந்த ஒருவழி மட்டும்தான் இருக்கிறது. இம்முறையில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், 'நானே அனைவருக்குமான புகலிடம்!' என்று எடுத்துரைத்து இந்தப் பதினான்காவது அத்தியாயத்தை நிறைவு பெறச் செய்கிறார். இந்த அத்தியாயத்தில் குணங்களின் விரிவான விளக்கம் இடம் பெற்றுள்ளது. அத்துடன்–

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே குணத்ரய விபாக யோகோ நாம சதுர்தசோத்த்யாய:**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய, ‘குணத்ரய விபாக யோகம்’ என்று பெயருடைய பதினான்காவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத்கீதாயா: யதார்த்த கீதா பாஷ்யே குணத்ரய விபாக யோகோ நாம சதுர்தசோத்த்யாய:**

ஹரி : ஓம் தத் ஸத்

இதுபோன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின் ‘யதார்த்த கீதை’ என்ற உரையில் ‘குணத்ரய விபாக யோகம்’ என்ற பெயருடைய பதினான்காவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத் ஸத்

**ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:**

**பதினைந்தாவது அத்தியாயம்**

மஹாபுருஷர்கள் இந்த உலகத்தை (சம்ஸாரம்) பல்வேறுவிதமான கண்ணோட்டங்களில் புரிய வைப்பதற்கு முயன்றுள்ளனர். சிலர் இந்த உலகத்தைப் 'பெருந்தடாகம்' என்று கூறினால் இன்னும் சிலரோ 'சம்ஸாரப் பெருங்கடல்' என்கின்றனர். பல்வேறு மாறும் நிலைகளைக் கொண்டிருப்பதால் இதையே பவநதியென்றும், பாழுங்கிணறென்றும் கூறுகிறார்கள். மேலும், சில சமயங்களில் இந்த உலகத்தை 'கோ பதம்' என்ற சொல்லுக்கு ஒப்புமைப்படுத்தியும் கூறப்படுகிறது. (கோ என்னும் சொல் இங்கே புலன்களைக் (இந்திரியங்கள்) குறிப்பிடுகிறது. அதாவது, புலன்களின் செயல்படும் எல்லை எதுவரையோ, அதுவரை மட்டுமே இவ்வுலகமும் உணரப்படுகிறது. மேலும், கடைசியில் **நாம லேத பவ ஸிந்து ஸூகாஹீ–** இறைவனின் திருநாமத்தை தொடர்ந்து உருவேற்றி வந்தால் இந்த உடல்களால் நிரம்பி வழிந்து கொண்டிருக்கும் உலகம் என்னும் பெருங்கடலும் **(பவஸிந்து)** ஒருநாள் வற்றிப் போய்விடும் என்றொரு நிலையும் வரவே செய்கிறது. இந்த உலகில் அப்படி ஏதேனும் சமுத்திரம் இருக்கிறதா என்ன? யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரும் கூட இந்த உலகத்தை 'சமுத்திரம்' மற்றும் 'பெரிய மரம்' ஆகியவற்றை உதாரணமாகக் காட்டி விளக்கியுள்ளார். பன்னிரண்டாவது அத்தியாயத்தில் அவர் கூறுகிறார்: "எவர் என்னுடைய நிலைத்த பக்தரோ நான் அவரை உலகம் என்னும் பெருங்கடலில் இருந்து சீக்கிரமே மீட்டுக் கரையேற்றுபவனாக விளங்குகிறேன்". இங்கே இந்த அத்தியாயத்திலும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் "இந்த உலகம் என்பது ஒரு பெரிய அரசமரமாகும். அதை வெட்டி எறிந்துதான் யோகிகள் அந்தப் பரம பதத்தைத் (இறைப் பேறுநிலை) தேடுகிறார்கள்" என்கிறார். மேலே பார்க்கலாம்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**ஊர்த்வமூலமத:ஷாகமஸ்வத்தம் ப்ராஹூ ரவ்யயம்**
**ச்சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ச வேதவித் (1)**

அர்ஜுனா! **ஊர்த்த்வ மூலம் –** மேல்பாகத்தில் பரமாத்மாவே எதற்கு மூலமாக (வேராக) இருக்கிறாரோ, **அதசாகம் –** கீழ்ப்பாகத்தில் இயற்கையே எதற்குக் கிளைகளாக இருக்கின்றனவோ, அந்த உலகம் என்ற அரசமரத்தை அழிவற்றது என்று கூறுகிறார்கள். (இங்கே வ்ருக்ஷம் (மரம்) என்பது 'அஸ்வ': – 'அ'+'ஸ்வ' – அதாவது, நாளை வரை இருக்குமென்று சொல்லமுடியாத, எப்பொழுது விரும்பினாலும் வெட்டியெறிந்து விட முடிகின்ற ஒன்றுதான் இந்த உலகம் என்னும் பெரிய அரசமரம். ஆனால், அழிவற்றது' எனப்படுகிறது.) ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் அழிவற்றவை இரண்டு. ஒன்று, உலகம் என்னும் இந்தப்

பெரிய அரசமரம் அழிவற்றது; மற்றொன்று, இந்த உலகத்திற்கெல்லாம் அப்பாற்பட்டு வெகுதொலைவில் உள்ள பரமாத்மாவும் அழிவற்றவர். 'வேதம்' இந்த அழிவற்ற உலகம் என்னும் மரத்தின் கிளைகளில் உள்ள இலைகள் என்று சொல்லப்படுகிறது. எவனொருவன் இந்த உலகம் என்னும் மரத்தைக் கண்கூடாகக் கண்டவாறு அறிந்து, கொள்கிறானோ, அவனே வேதத்தை அறிந்தவன் ஆவான்.

எவனொருவன் இந்த வாழ்க்கை என்னும் மரத்தை அறிந்தவனோ, அவனே வேதத்தை அறிந்தவனாகிறானே தவிர, வெறுமனே புத்தகத்தைப் படிப்பவன் அல்ல. புத்தகத்தைப் படிப்பதனால் பரமாத்மாவை நோக்கி முன்னேறிச் செல்ல வேண்டும் என்ற தூண்டுணர்ச்சி மட்டுமே கிடைக்கிறது. இலைகளின் இடத்தில் வேதங்களை உதாரணமாகச் சொல்ல வேண்டிய அவசியம்தான் என்னவாக இருக்க முடியும்? உண்மையில், சாதகன் பலமுறை வழிதவறி அலைந்து திரிந்து விழுந்து இறுதியாக ஒருமுறை துளிர் விடுகிறான், அதாவது கடைசிப் பிறவியை எடுக்கிறான். அங்கிருந்துதான் அவனுக்கு அந்த வேதத்தின், மேலான நன்மையை உருவாக்கித் தரவல்ல இறைவாக்குகள் **(சந்தஸ்)** ஊக்கமளிப்பவைகளாக அமைகின்றன. அங்கிருந்துதான் அவனுக்கு அவற்றின் உபயோகம் தொடங்குகிறது. அத்துடன் அவனுக்கும் தெரியாமல் அலைந்து திரியும் சூழ்நிலையும் முடிவுக்கு வந்து விடுகிறது. அவன் ஆன்ம வடிவத்தை நோக்கித் திரும்பி, அதை நோக்கியே முன்னேற ஆரம்பிக்கிறான். அத்துடன் –

**அதஷ்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஷாகா**
**குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாலா:**
**அதஷ்ச மூலான்யனுஸந்ததானி**
**கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே (2)**

இந்த உலகம் என்னும் மரம் மூன்று குணங்களின் மூலமாக நன்றாகச் செழிப்படைந்தும் விஷய இன்பம் மற்றும் போகங்கள் என்னும் தளிர்களால் நிரம்பியுள்ள கிளைகள் கீழும் மேலும் எங்கெங்கிலும் கிளர்ந்து படர்ந்துள்ளன. கீழ்பாகத்தில், புழு, பூச்சி உலகங்கள் முதலான தாழ்ந்த பிறவிகளும் மற்றும் மேல்பாகத்தில் தெய்வீக உணர்வுகள் நிறையப் பெற்ற உயர்பிறவிகளிலிருந்து பிரம்மாவரைக்கும், எல்லா இடங்களிலும் நீக்கமற படர்ந்து காணப்படுகின்றன. மேலும், மனிதப் பிறவியில் மட்டுமே கர்மங்களுக்கு ஏற்றாற்போல் பந்தம் தயாராகின்றது. ஆனால், அதைத் தவிர, மற்ற பிறவிகள் அனைத்துமே போகங்களை அனுபவிப்பதற்காக மட்டுமே உள்ளது. மனிதப் பிறவியில் மட்டுமே கர்மங்களுக்கு ஏற்றவாறு பந்தம் தயாராகிறது.

**ந ரூபமஸ்யேஹ ததோபலப்யதே**
**நாந்தோ ந சாதிர்ன ச ஸம்ப்ரதிஷ்டா**
**அஸ்வத்தமேனம் ஸுவிரூட மூலம்**
**அஸங்கசஸ்த்ரேண த்ருடேன ச்சித்வா (3)**

ஆனால், இந்த உலகம் என்னும் மரம் எவ்வாறு இருப்பதாகக் கூறப்படுகிறதோ, அவ்வாறு இங்கே காணக் கிடைப்பதில்லை. ஏனெனில், இதற்கு ஆரம்பமும் கிடையாது, முடிவும் இல்லை. மேலும், சொல்லிக் கொள்வது போல் நல்லமுறையில் இதற்கு நிலைத்தன்மையும் கிடையாது. (காரணம், இது மாறிக் கொண்டேயிருக்கும் இயல்புடையது). இந்தக் கடுமையான திடமுடைய வேரினைக் கொண்ட உலகம் என்னும் மரத்தை திடமான **அஸங்க சஸ்த்ரேண** (அஸங்க் என்றால் சேர்க்கை தோஷங்களில் இருந்து விலகியிருக்கும் திறன் என்று பொருள்) அதாவது, வைராக்கியம் என்னும் ஆயுதத்தின் மூலம் வெட்டியெறிய வேண்டும். (வாழ்க்கை என்னும் மரத்தையே வெட்டியெறிய வேண்டும். அதை விட்டுவிட்டு அரச மரத்தின் வேர்ப்பாகத்தில் பரமாத்மா குடியிருக்கிறார்; அரசமரத்தின் இலைகளில் வேதம் இருக்கிறது என்றெல்லாம் எண்ணிக் கொண்டு அரச மரத்திற்கே ஆரத்தி எடுத்து பூஜை செய்ய ஆரம்பித்து விடக்கூடாது)

இந்த வாழ்க்கை என்னும் மரத்தின் ஆணிவேராகப் பரமாத்மாவே விதை வடிவமாக விரிந்தும் பரந்தும் இருக்கிறார் எனும்போது அவரும் சேர்ந்தே வெட்டியெறியப்பட்டு விடுவாரா என்ன? திடமான வைராக்கியத்தின் மூலமாக இந்த இயற்கையின் அனைத்து தொடர்புகளையும் துண்டித்துக் கொள்ள வேண்டும். இதையே 'வெட்டியெறிதல்' என்கிறோம். வெட்டியெறிந்து விட்டு என்ன செய்வது?

**ததः பதம் தத்பரிமார்க்கிதவ்யம்**
**யஸ்மின்கதா ந நிவர்த்தந்தி பூய :**
**தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே**
**யதः ப்ரவ்ருத்தி : ப்ரஸ்ருதா புராணீ (4)**

திடமான வைராக்கியத்தின் மூலம் வாழ்க்கை என்னும் மரத்தை வெட்டியெறிந்த பிறகு, அந்தப் பரமபதமாகிய பரமேஸ்வரரை நல்ல முறையில் தேடிச் செல்ல வேண்டும். இவ்வாறு செல்பவன் மறுபடியும் இந்த வாழ்க்கைக்கு திரும்பி வர வேண்டியதில்லை. அதாவது, முழுமையான விடுதலையை அடையப் பெற்று விடுகிறான். ஆனால், பரமாத்மாவைத் தேடும் செயலானது எந்த முறையில் சாத்தியமாகும்? இதற்கு முழுமையான சமர்ப்பண உணர்வு மிகவும் அவசியம் என்று யோகேஷ்வரர் கூறுகிறார். எந்தப் பரமேஸ்வரரிடமிருந்து இந்தப் பழைமையான வாழ்க்கை என்னும் மரத்தின் வளர்ச்சியானது விரிவாக்கம் அடையப் பெற்றுள்ளதோ,

அதே ஆதிபுருஷராகிய பரமாத்மாவை அடைய நானே சரணமாகத் திகழ்கிறேன். (ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அவரை ஒத்த தத்துவதரிசி மகாபுருஷரின் சரணத்தை அடையாமல் இந்த மரத்தை வெட்டியெறிய முடியாது.) இப்பொழுது, சரணத்தை அடைந்த, வைராக்கியத்தில் நிலைப்பெற்றுள்ள ஒருவன், இந்த மரமானது வெட்டியெறியப்பட்டு விட்டதா, இல்லையா என்று எப்படி அறிந்து கொள்ளமுடியும்? அதற்கான அடையாளம்தான் என்ன? இதுபற்றிக் கூறுகிறார். –

**நிர்மானமோஹா ஜிதஸங்கதோஷா**
**அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா:**
**த்வந்த்வைர்விமுக்தா: ஸுகதுக்கஸம்ஞைர்**
**கச்சந்த்யமூடா: பதமவ்யயம் தத் (5)**

மேலே கூறப்பட்டுள்ளபடி, சமர்ப்பணம் செய்ததன் மூலமாக எவனுடைய மோகம் மற்றும் ஆணவம் அழிந்து விட்டதோ, பற்றின் மொத்த வடிவமாகிய உலகின் சேர்க்கை தோஷத்தினை எவன் வென்று விட்டானோ, **அத்யாத்ம நித்யா –** பரமாத்மாவின் வடிவத்தில் எவன் நிரந்தரமாக நிலைபெற்றிருக்கிறானோ, எவனுடைய ஆசைகள் அனைத்தும் மிகவும் சிறந்த முறையில் நீங்கி விட்டனவோ மற்றும் சுகம்–துக்கம் ஆகிய இருவேறுபட்ட உணர்வு நிலைகளின் (இருமைகள்) மோதல்களின் இருந்து வெகுசிறப்பான முறையில் விடுதலை அடையப் பெற்ற ஞானியர் அந்த அழிவற்ற பரமபதத்தை அடையப் பெறுகின்றனர். எதுவரைக்கும் இந்த நிலை அடையப்படவில்லையோ, அதுவரைக்கும் இந்த வாழ்க்கை என்னும் மரம் வெட்டியெறியப்படுவதில்லை. இதுவரைக்கும் வைராக்கியத்தின் அவசியம் இருக்கத்தான் செய்கிறது. இவ்வாறு நாம் அடையக்கூடிய அந்தப் பரமபதத்தின் வடிவம் என்ன?

**ந தத் பாஸயதே ஸூர்யோ ந ஷஷாங்கோ ந பாவக :**
**யத்கத்வா ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம (6)**

அந்தப் பரமபதத்தை சூரியனோ, சந்திரனோ, மற்றும் அக்கினியோ தெளிவாக வெளிப்படுத்த முடிவதில்லை. எந்தப் பரமபதத்தை (இறைப் பேறுநிலை) அடைந்த பிறகு மனிதன் திரும்பவும் வாழ்க்கைக்கு வருவதில்லையோ, அதுவே என்னுடைய பரமகதி (வீடு பேறு) ஆகும். அதாவது, அவனுக்கு மறுபிறவி (புனர் ஜன்மம்) உண்டாவதில்லை. இந்தப் பேற்றினை (பதம்) அடைவதற்கு எல்லோருக்குமே சமமான அதிகாரம் உள்ளது. இதுபற்றிக் கூறுகிறார். –

**மமைவாம்ஷோ ஜீவலோகே ஜீவபூத : ஸனாதன :**
**மன ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்த்தானி கர்ஷதி (7)**

**ஜீவலோகே –** அதாவது, இந்த உடலில் (சரீரமே ஒரு உலகமாகும்.) வாழும் இந்த ஜீவாத்மாவானது என்னுடைய சனாதன (என்றும் நிலையாக உள்ள பரம்பொருளின்) அம்சமாகும். மேலும், அதுவே இந்த மூன்று குணங்களுடன் கூடிய மாயையில் நிலைபெற்று, மனத்துடன் சேர்த்து, ஐம்புலன்களையும் தன்வசமாக ஈர்க்கிறது. இது எப்படி?

**சரீரம் யதவாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீஸ்வர:**
**க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்கந்தானிவாஷயாத் (8)**

எந்த முறையில் வாயுவானது மணத்தை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் சுமந்து கொண்டு செல்கிறதோ, அதே போன்றுதான், இந்த உடலின் தலைவனாக விளங்கும் ஜீவாத்மாவானது ஒரு உடலைத் துறந்து விட்டு, அதிலிருந்து கொண்டு மனம் மற்றும் ஐந்து ஞானேந்திரியங்களின் மூலமாக நடைபெற்ற காரியச் செயல்முறைகளையெல்லாம் (தன்வசத்தில் கவர்ந்திழுத்து, சேர்த்துக் கொண்டு) அடுத்து எந்த உடலை அடையப் பெறுகிறதோ, அதற்குள் புகுந்து கொள்கிறது? (எப்பொழுது, அடுத்த சரீரம் என்பது உடனுக்குடனே கிடைப்பது நிச்சயம் என்ற நிலையிருக்கிறதோ, அப்பொழுது, இறந்தவர்களுக்கு நாம் தருகின்ற மாவுப் பிண்டத்தை யாரிடம் கொண்டு போய்ச் சேர்ப்பது? அதை வாங்கிக் கொள்வதற்குத்தான் அங்கே யார் இருக்கப் போகிறார்கள்? எனவேதான் ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனிடம், "பிண்ட தானம் மறைந்து போய்விடுமே! என்று நீ கூறுகிறாயே, அந்த அஞ்ஞானம் உனக்கு எங்கிருந்து உருவானது?" என்று கேட்கிறார்) இவ்வாறு வேறு உடலுக்குள் புகுந்து கொள்கின்ற ஜீவாத்மாவானது அங்கே என்ன செய்கிறது? மனத்துடன் சேர்த்து இந்த ஆறு புலன்கள் என்பவை யாவை? –

**ஷ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஷனம் ச ரஸனம் க்ராணமேவ ச**
**அதிஷ்டாய மனஷ்ச்சாயம் விஷயானுபஸேவதே (9)**

அந்த உடலில் நிலைப்பெற்று, இந்த ஜீவாத்மாவானது செவி, கண், மெய், நாக்கு, மூக்கு மற்றும் மனம் ஆகியவற்றின் துணையுடன் அதாவது, இவை அனைத்தின் புலனின்ப விஷயங்களை அனுபவிக்கிறது. ஆனால், பார்க்கும்போது அப்படி ஒன்றும் தென்படுவதில்லையே? என்று கேட்டால் 'அனைவராலும் அதனைப் பார்க்க முடியாது என்பதே' பதிலாகும். இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

**உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜானம் வா குணான்விதம்**
**விமூடா நானுபஷ்யந்தி பஷ்யந்தி ஜ்ஞானசக்ஷுஷ : (10)**

உடலைத் துறந்து விட்டுப் போகின்ற, வேறு உடலில் புகுந்து கொள்கின்ற, புலனின்ப விஷயங்களை அனுபவிக்கின்ற மூன்று குணங்களுடன் கூடியுள்ள இந்த ஜீவாத்மாவை, அறிவற்ற மூட புத்தியுடைய அஞ்ஞானிகள் அறிவதில்லை. ஆனால், ஞானம் என்னும் கண்களை (ஞானப் பார்வை) உடையவர்களோ அது எவ்வாறு இருக்கிறதோ, அவ்வாறே அதை அறிவார்கள்; அதைக் காண்கிறார்கள். இனி அந்த ஞானப்பார்வையைப் (ஞானதிருஷ்டி) பெறுவது எப்படி? மேலும் பார்க்கலாம் –

**யதந்தோ யோகினஷ்சைனம் பஷ்யந்த்யாத்மன்யவஸ்த்திதம்**
**யதந்தோஅப்யக்ருதாத்மானோ நைனம் பஷ்யந்த்யசேதஸ : (11)**

யோகிகள் தங்களுடைய இதய தேசத்தில் எல்லாப் பக்கங்களிலிருந்தும் சித்தத்தை விடுவித்துக் கொண்டு இந்த ஆன்மாவிலேயே நிலைநிறுத்த முயற்சி செய்து கொண்டே அதனை நேருக்கு நேராக (பிரத்யட்சம்) தரிசனம் செய்து அறிந்து கொள்கிறார்கள். ஆனால், சித்தத்தை வெல்வதில் தோல்வியடைந்தவர்களோ, அதாவது, தூய்மையற்ற ஆழ்மனத்தை உடைய அஞ்ஞானிகளோ முயற்சி செய்தும் கூட இந்த ஆத்மாவை அறிந்து கொள்வதில்லை. (ஏனெனில், அவர்களுடைய ஆழ்மனது வெளிமுகமாக, உலகியலை நோக்கிச் செல்லும் எண்ணவோட்டங்களால் சிதறிப் போன நிலையில்தான் இன்னமும் உள்ளது.) சித்தத்தை எல்லாப் பக்கங்களிலிருந்தும் விடுவித்துக் கொண்டு, மன ஒருமைப்பாட்டினை அடையப் பெற்ற நிலையில் அந்தராத்மாவில் பரமாத்மாவை தேடுகின்ற முயற்சியில் ஈடுபடும் உணர்வுப்பூர்வமான அணுகுமுறை உடையவர்களே இதனை அடைவதற்கான தகுதியைப் பெறுகிறார்கள். எனவே, ஆழ்மனத்தில் எந்நேரமும் இறைவனின் நினைவு இருந்து கொண்டேயிருப்பது அவசியமாகும். இப்பொழுது, அந்த மகாபுருஷர்களின் திருவடிவத்தில் நிலைபெற்றுள்ள, அதனின்று நிரம்பி வழிகின்ற தெய்வீக மகிமைகள் (ஏற்கனவே இவற்றைப் பற்றி விரிவாகச் சொல்லப்பட்டு உள்ளன) மீது விளக்கம் தருகிறார்.

**யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதேஅகிலம்**
**யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ தத்தேஜோ வித்தி மாமகம் (12)**

எந்த ஒளியானது சூரியனில் நிலை கொண்டு ஒட்டு மொத்த உலகத்திற்கும் வெளிச்சம் தருகிறதோ, எந்த ஒளியானது சந்திரனில் நிலை கொண்டுள்ளதோ மற்றும் எந்த ஒளியானது அக்கினியில் உள்ளதோ அந்த ஒளியானது என்னுடையதுதான் என்று அறிந்து கொள். இப்பொழுது அந்த மகாபுருஷர் மூலமாக நடைபெறுகின்ற காரியங்கள் பற்றிக் கூறுகிறார். –

**காமாவிஷ்ய ச பூதானி தாரயாம்யஹமோஜஸா**
**புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா : ஸோமோ பூத்வா ரஸாத்மக : (13)**

நானே இந்த பூமிக்குள் நுழைந்து என்னுடைய சக்தியால் மனிதர் உட்பட எல்லா உயிரினங்கயையும் தாங்குகிறேன். மேலும், சந்திரனில் இனிமையான ரஸ வடிவில் இருந்து கொண்டு எல்லாப் பயிர்களையும் செழிப்புடன் வளரச் செய்கிறேன்.

**அஹம் வைஷ்வானரோ பூத்வா ப்ராணினாம் தேஹமாஷ்ரித :**
**ப்ராணாபானஸமாயுக்த : பசாம்யன்னம் சதுர்விதம் (14)**

நானே எல்லா உயிரினங்களின் உடலிலும் அக்கினியின் வடிவில் நிலைபெற்று பிராணன் மற்றும் அபானனுடன் கூடிய நான்கு விதமான அன்னங்களையும் ஏற்றுக் கொள்கிறேன்.

நான்காவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரானவர் இந்திரியாக்கினி, ஸம்யமாக்கினி, யோகாக்கினி, பிராண, அபானாக்கினி, பிரஹ்மாக்கினி முதலான பதின்மூன்று, பதினான்கு அக்கினிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவை அனைத்தின் இறுதி விளைவும் (பரிணாமம்) ஞானமேயாகும். ஞானமும் ஒரு அக்கினியாகும். ஸ்ரீகிருஷ்ணரும் இங்கே, ‘‘அத்தகைய அக்கினி வடிவமாக இருந்து கொண்டு பிராணன் மற்றும் அபானனுடன் இணைந்து, நான்குவிதமான விதிமுறைகளின் மூலமாக (இறைநாம ஜபமானது எப்பொழுதுமே உள்மூச்சு, வெளிமூச்சில்தான் செய்யப்படுகிறது. ஜபம் செய்வதற்கு நான்கு விதிமுறைகள் கூறப்பட்டுள்ளன. அவை முறையே, பைக்கரி, மத்யமா, பஸ்யந்தி மற்றும் பரா எனப்படும்.) தயாராகின்ற அன்னங்களை நானே ஜீரணிக்கச் செய்கிறேன்’’ என்கிறார்.

ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், ‘‘எதனால் ஆன்மாவானது முழுமையான திருப்தி அடைகிறதோ, மறுபடியும் ஒருபோதும் அதிருப்தி அடைவதில்லையோ, அந்த பிரம்மம் ஒன்று மட்டுமே ‘அன்னம்’ ஆகும். நடைமுறையில், வழக்கமாகச் சொல்லப்படுகின்ற, உடலைப் பேணிப் பாதுகாப்பதற்குத் தேவைப்படுகின்ற அன்னத்திற்கு (உணவு) யோகேஷ்வரர் ஆகாரம் என்ற சொல்லைப் பிரயோகித்தே **(யுக்தாஹார்)** குறிப்பிட்டுள்ளார். பரமாத்மாவே உண்மையான அன்னம் ஆவார். பைக்கரி, மத்யமா, பஸ்யந்தி மற்றும் பரா ஆகிய நான்கு விதிகளைக் கடந்த பிறகுதான் இந்த அன்னம் பரிபக்குவம் அடைகிறது. இவற்றையேதான் எண்ணற்ற மகாபுருஷர்களும் நாமம், ரூபம், லீலை, (வீடுபேறு) என்றும் குறிப்பிட்டுள்ளனர். ஆரம்பத்தில் இறைவனின் நாம ஜபத்தில் இருந்துதான் சாதனை தொடங்குகிறது. அதனைத் தொடர்ந்து

கொஞ்சம் கொஞ்சமாக இதய தேசத்தில் இஷ்ட தெய்வத்தின் (ஸத்குருவின் திருவுருவம்) வடிவம் தெளிவாகத் தெரிய ஆரம்பிக்கிறது. அதையடுத்து அவருடைய தெய்வீகத் திருவிளையாடலைப் பற்றிய அறிவு கிடைக்க ஆரம்பிக்கிறது. அதாவது, அந்த இறைவன் எந்த வகையில் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறார்? எந்த முறையில் அவர் ஒரே சமயத்தில் எல்லா இடங்களிலும் காரியம் செய்கிறார்? – இந்த முறையில், நமது இதயத்தில் இறைவனின் காரியச் செயல்முறைகளைப் பற்றிய தரிசனத்திற்குப் பெயர்தான் 'லீலை' அல்லது இறைவனின் திருவிளையாடலைக் காண்பது எனப்படுகிறது. (புற உலகில் நடைபெறுகின்ற ராமலீலை, ராசலீலையைக் காண்பது என்று இதற்குப் பொருள் கொள்ளலாகாது). மேலும், அந்த இறைவனின் தெய்வீக மகிமை பொருந்திய லீலை அல்லது திருவிளையாடலை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து, அனுபூதியில் உணர்ந்து தெளிந்தவாறே, எப்பொழுது, இவற்றிற்கெல்லாம் மூலகாரணமாக விளங்கும், லீலாதாரியாகிய இறைவனைத் தொட்டுணரும் அனுபவம் கிடைத்து விடுகிறதோ, அப்பொழுதுதான் தாம் அதாவது 'இறைவனில் நிலைபெறல்' என்னும் நிலை வாய்க்கப் பெறுகிறது. இறைவனை அறிந்து, சாதகன் அவரிலேயே நிலைபெற்று விடுகின்றான். இறைவனில் நிலை பெறல் என்னும் நிலை, மற்றும் பராவாணியின் பரிபக்குவ நிலையில் பரபிரம்மத்தைத் தொட்டுணர்ந்து அவரில் நிலைபெறல் ஆகிய இரண்டுமே ஒரே சமயத்தில் நடக்கிறது.

இம்முறையில் பிராணன் மற்றும் அபானன் அதாவது, உள்மூச்சு மற்றும் வெளிமூச்சு ஆகியவற்றுடன் இணைந்து, நான்கு விதிமுறைகளில் அதாவது, **வைக்கிரி, மத்யமா, பஸ்யந்தி** மற்றும் படிப்படியாக உயர்நிலையை எட்டியவாறே **பரா** நிலையின் நிறைவுக் காலத்தில் அந்த அன்னம் (எனப்படும் பிரம்மம்) பரிபக்குவம் அடைந்து விடுகிறது, கிடைக்கவும் செய்கிறது; ஜீரணிக்கப்பட்டும் விடுகிறது. மேலும், பாத்திரமாகிய சாதகனும் பரிபக்குவம் அடைந்து விடுகிறான்.

**ஸர்வஸ்ய சாஹம் ஸ்ருதி ஸன்னிவிஷ்டோ**
**மத்த : ஸ்ம்ருதிர்ஜ்ஞானமபோஹனம் ச**
**வேதைஷ்ச்ச ஸர்வைரஹமேவ வேத்யோ**
**வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம் (15)**

நான்தான் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் இதயத்திலும் அந்தர்யாமியாக வீற்றிருக்கிறேன். என்னிடம் இருந்துதான் ஆன்ம வடிவத்தைப் பற்றிய ஞாபகம் (நினைவுப் படலம் எனப்படும் ஸ்ரூதி, அல்லது ஸ்ம்ருதியில் எந்தத் தத்துவமாகிய பரமாத்மாவின் ஞாபகம் மறந்து போயுள்ளதோ, அதன் நினைவு திரும்புதல்) வருகிறது. (இது இறைவனை நேரடியாக தரிசனம் செய்து,

முக்திநிலையைப் பெறுகின்ற நிலையைப் பற்றிய வர்ணனையாகும்.) அவ்வாறு ஆன்ம வடிவத்தை பற்றிய ஞாபகம் வந்ததுடன் சேர்ந்தேதான் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து அறிதல் என்னும் ஞானம் (சாட்சாத்காரம்) மற்றும், **அபோஹனம்** அதாவது, 'அனைத்து விதமான தடைகளும் நீங்கப்பெறுவது' இஷ்ட தெய்வமாகிய (ஸத்குரு – இறைவன்) என் மூலமாகவே நடைபெறுகிறது. எல்லா வேதங்களின் மூலமாகவும் நானே அறியத் தகுந்தவன் ஆவேன். வேதாந்தத்தைப் படைப்பவனும் நான்தான்! அதாவது **வேதஸ்ய அந்த : ஸ : வேதாந்த** – (இறைவனும் நாமும் தனித்தனியாக இருந்ததால்தானே அவரை அறிதல் என்ற நிலையே வந்தது. எப்பொழுது அவர் அறியப்பட்டு, அவருடைய ஆன்ம வடித்திலேயே நிலைபெற்று விடுகின்றோமோ, அப்பொழுது யார், யாரை அறிவது?) வேதங்களின் இறுதிநிலையைப் படைப்பவனும் நானேதான்! மேலும், **வேதவித்** என்பதும் நானேதான்! அதாவது, 'வேதங்களை அறிந்தவர்' என்றே இதற்குப் பொருள். இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே அவர், "இந்த வாழ்க்கை ஒரு பெரிய மரமாகும். அதன் மேல்பாகத்தில் மூலப்பொருளாகப் பரமாத்மாவும், கீழ்ப்பாகத்தில் இயற்கையே அதன் கிளைகளாகவும் இருக்கின்றது. எவர் இந்த மூலப்பொருளாகிய பரமாத்மாவில் இருந்து இயற்கையைத் தனியாகப் பாகுபடுத்தி அறிந்து கொள்கிறாரோ, மூலப் பொருளாகிய பரமாத்மாவில் நிலைபெற்று இந்தப் படைப்பை ஆணிவேர் வரை அறிந்து கொள்கிறாரோ அவரே 'வேதவித்' எனப்படுகிறார்" என்று கூறினார். "இங்கேயோ, நான் வேதவித் ஆவேன்!" என்கிறார். எவரெல்லாம் வேதங்களை அறிந்தவர்களோ அவர்களுடன் தம்மையும் சரிசமமாக ஒப்பிட்டு, அவர்களும் வேதவித் ஆவார்கள்; நானும் 'வேதவித்' ஆவேன்" என்று கூறுகிறார். ஸ்ரீகிருஷ்ணரும் ஆன்ம தத்துவத்தை அறிந்த மகாபுருஷர் ஆவார். யோகியர் எல்லோரையும் விடத் தலைசிறந்த யோகியாகத் திகழ்ந்தவர் அவர். இங்கே, இத்துடன் கேள்வியானது நிறைவடைகிறது. இப்பொழுது அவர், உலகில் மனிதர்கள் இரண்டு விதமான தன்மையுடையவர்கள் என்று கூறுகிறார். –

**த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவ ச**
**க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்த்தோஷ்க்ஷர உச்யதே (16)**

அர்ஜுனா! இந்த உலகில் **க்ஷர** – அழியும் தன்மையுடையவர், மாற்றத்திற்கு உட்படும் இயல்புடையவர், மற்றும் **அக்ஷர** – அழிவற்றவர், மாற்றமில்லாதவர் என்று இரண்டுவிதமான புருஷர்கள் உள்ளனர். இவர்களில் மனிதர் உட்பட ஒட்டு மொத்த உயிரினங்களின் உடல்கள் அனைத்துமே அழியும் தன்மையுடையவை; **'க்ஷரபுருஷன்'** எனப்படுபவை. இன்று உள்ளன; நாளை இருப்பதில்லை. மற்றும் இரண்டாவது வகையான புருஷர், அதாவது தமது

உள்மனத்தை முழுவதுமாகக் கட்டுப்படுத்தியவராகையால் **(கூடஸ்த்தர்)** அழிவற்ற புருஷர் **(அக்ஷரபுருஷர்)** எனப்படுகிறார். ஆன்மீக சாதனையின் மூலமாக, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் கட்டுப்படுத்துதல், அதாவது, எவருடைய மனம் மற்றும் புலன்களின் சமூகம் முழுமையான கட்டுப்பாட்டில் உள்ளதோ, அவரே அழிவற்ற புருஷர் (அக்ஷரபுருஷர்) என்றழைக்கப்படுகிறார். நீங்கள் பெண்ணாக இருந்தாலும் சரி, ஆணாக இருந்தாலும் சரி, ஒருவேளை உடல் மற்றும் உடல் பிறப்பதற்குக் காரணமாக அமைகின்ற குணங்களின் தொடர் இன்னும் பின்தொடர்கிறதென்றால் அத்தகையோர் அனைவருமே அழிவுறும் புருஷர் (க்ஷரபுருஷர்) என்றே அழைக்கப்படுகிறார்கள். மேலும், எப்பொழுது, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களும் முழுக் கட்டுப்பாட்டிற்குள் வந்து விடுகின்றனவோ, அப்பொழுதே நீங்கள் அழிவற்ற புருஷர் (அக்ஷர புருஷர்) என்றழைக்கப்படுவீர்கள். ஆனால் இதுவும் கூட, மனிதருள் சிறப்பானதொரு நிலை மட்டுமேயாகும். இவ்விரண்டு புருஷர்களையும் விட, அப்பாற்பட்டவராகிய, மேலான, மற்றொரு புருஷரும் இருக்கிறார்.

**உத்தம : புருஷஸ்த்வன்ய : ப்ரமாத்மேத்யுதாஹ்ருத :**
**யோ லோகத்ரயமாவிஷ்ய பிபர்த்யவ்யய ஈஸ்வர : (17)**

அந்த இருவிதமான புருஷர்களை விடவும் வேறான, அதி உத்தமமான புருஷர் வேறு ஒருவரும் இருக்கிறார். அவரே மூன்று லோகங்களிலும் நுழைந்து அனைத்தையும் தாங்குபவராகவும் போற்றிப் பேணிப் பாதுகாப்பவராகவும் விளங்குகிறார். மேலும், அவரே அழிவற்றவர், பரமாத்மா, ஈஸ்வரன் என்றெல்லாம் சொல்லப்படுகிறார். பரமாத்மா, புலன் உணர்வுகளைக் கடந்து விளங்குபவர், அழிவற்றவர், புருஷோத்தமர் என்பவை எல்லாம் அவரையே குறிப்பிடுகின்ற சொற்களாகும். உண்மையில் அவர், இவை அனைத்திலிருந்தும் வேறுபட்ட புருஷர் ஆவார். அதாவது வரையறைக்கு உட்படாதவர் – எல்லா விளக்கங்களுக்கும் அப்பாற்பட்டவர்; வார்த்தைகளால் வர்ணனை செய்ய முடியாதவர் ஆவார். இது, அழிவுறும் (க்ஷர) அழிவற்ற (அக்ஷர) புருஷர்கள் எனப்படும் நிலைகளை எல்லாம் கடந்த, மேலான, மஹாபுருஷர்களின் இறுதி ஆன்மீக உயர்நிலையாகும். இதையே, பரமாத்மா முதலான சொற்களைக் கொண்டு குறிப்பால் உணர்த்தப்படுகிறது. ஆனால் அவரோ, இவை அனைத்தையும் விட வேறானவராக, அதாவது, எந்தவொரு வரையறைக்கும் உட்படாதவராக, எல்லா விளக்கங்களுக்கும் அப்பாற்பட்ட; வார்த்தைகளால் வர்ணிக்கப்பட முடியாத, ஒருவராகத் திகழ்கிறார். ஸ்ரீகிருஷ்ணர், 'தாமும் அத்தகையதொரு நிலையை அடையப் பெற்றவர்' என்று தம்மைப் பற்றிய தன்னிலை விளக்கம் அளிக்கிறார். உதாரணமாக,

**யஸ்மாத்க்ஷரமதீதோஹமக்ஷராதபி சோத்தம:**
**அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித : புருஷோத்தம : (18)**

நான், மேலே கூறப்பட்டுள்ள, அழிவுறுகின்ற, மாற்றங்களுக்கு உட்பட்ட க்ஷேத்திரத்தில் இருந்து என்றென்றைக்குமாக, எல்லா வகைகளிலும் வெகு தொலைவில் இருப்பவன் ஆவேன். மேலும், நான் குறைவற்ற, அழிவற்ற, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் கட்டுப்படுத்திய (கூடஸ்த்தர்) புருஷரை விடவும் அதிஉத்தமமான புருஷர் ஆவேன்.

எனவேதான், இந்த உலகத்தாலும் வேதங்களாலும், 'புருஷோத்தமர்' என்னும் பெயரால் பெரிதும் விரும்பி அழைக்கப்படுகிறேன்.

**யோ மாமேவமஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம்**
**ஸ ஸர்வவித்பஜதி மாம் ஸர்வபாவேன பாரத (19)**

ஹே பாரதா! மேலே கூறப்பட்டுள்ளதைப் போன்றே, இந்த முறையில், எந்த ஞானி புருஷர் புருஷோத்தமாராகிய என்னை நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்கிறாரோ, அந்த அனைத்தையும் அறிந்த புருஷர் (ஸர்வக்ஞர்) எல்லா வகையிலும் பரமாத்மாவாகிய என்னையே வழிபாடு செய்கிறார். அவர் என்னிலிருந்து வேறுபட்டவர் அல்ல.

**இதி குஹ்யதமம் சாஸ்த்ரமிதமுக்தம் மயானக**
**ஏதத்புத்த்வா புத்திமான்ஸ்யாத் க்ருதக்ருத்யஷ்ச்ச பாரத (20)**

பாவம் அற்றவனே! அர்ஜுனா! இந்த முறையில் இந்த மேலான, மிகவும் உயர்ந்த மறைபொருள் இரகசியமான சாஸ்திரம் என் மூலமாகச் சொல்லப்பட்டது. இதைத் தத்துவப்பூர்வமாக அறிந்து கொண்டு மனிதர்கள் பூரண அறிவையும், நிறைவையும் அடையப் பெறுகிறார்கள். எனவே, யோகேஷ்வரான ஸ்ரீகிருஷ்ணருடைய இந்த தெய்வீகத் திருவாக்குகள் அனைத்தும் தன்னில் தானே முழுமை பெற்ற, நிறைவான, ஒரே சாஸ்திரம் என்று ஏற்றுக் கொள்ளக் கூடியதாகும்.

ஸ்ரீகிருஷ்ணருடைய இந்த மறை பொருள் இரகசியம், மிகவும் இரகசியமான ஒன்றாகவே இருந்தது. அவர் இதையெல்லாம் தம்மீது ஆர்வமிக்க பக்தர்களுக்கு மட்டுமே கூறினார். இது, ஆன்மீகப் பாதையில் நுழைகின்ற தகுதி படைத்த அதிகாரிகளுக்கு மட்டுமேயாகும். அனைவருக்கானதும் அன்று. ஆனால், எப்பொழுது இதே இரகசியம் (சாஸ்திரம்) எழுத்து வடிவம் பெற்றதோ, அனைவருக்கும் முன்னால் புத்தக வடிவில் கிடைத்த காரணத்தால், ஸ்ரீகிருஷ்ணர் இதை எல்லாருக்காகவும் கூறியதாக நினைக்கத் தோன்றுகிறது. ஆனால்,

உண்மையில், இது அதிகாரிகளுக்கு மட்டுமேயாகும். ஸ்ரீகிருஷ்ணரின் இந்த வடிவமானது அனைவருக்குமானதாக இல்லவே இல்லை. சிலர் அவரை 'ராஜா' என்றும் சிலர் அவரை 'தூதர்' என்றும் இன்னும் சிலரோ அவரை 'யாதவர்' என்றுமே எண்ணியிருந்தனர். ஆனால், அர்ஜுனன் என்ற ஆன்மீகப் பாதையில் செல்லும் தகுதி படைத்த அதிகாரிக்கு மட்டும் ஸ்ரீகிருஷ்ணர் எதையும் மறைக்காமல் காட்டியருளினார். அவனோ, ஸ்ரீகிருஷ்ணர் பரம சத்தியமாகிய புருஷோத்தமரே என்பதை அறிந்து, அவரையே அடையவும் பெற்றான். ஒருவேளை, ஸ்ரீகிருஷ்ணர் அவனிடமும் தம்மை மறைத்துக் கொண்டிருந்தால் அவனுக்கு இந்தப் பரம நன்மை விளைந்திருக்காது.

இத்தகையதொரு ஆன்மீகச் சிறப்புத்தன்மை இறைவனில் நிலைபெற்ற முக்தி நிலையை அடைந்த ஒவ்வொரு மகாபுருஷரிடமும் காணப்படுகிறது. ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஒருமுறை மிகவும் மகிழ்ச்சியுடன் காணப்பட்டார். அதைக் கண்டு பக்தர்கள் அவரிடம், "இன்று நீங்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் காணப்படுகிறீர்கள்! என்ன காரணம்?" என்று கேட்டனர். அதற்கு அவர், "நான் இன்று அந்த பரமஹம்ஸராகி விட்டேன்" என்று கூறினார். அவருடைய சமகாலத்தைச் சேர்ந்த யாரோ ஒரு உயர்ந்த மஹாபுஷராகிய பரமஹம்ஸர் இருந்திருக்கிறார். அவரைக் குறிப்பிட்டே இவ்வாறு கூறினார். சிறிது நேரம் கழித்து அவர் மனம், செயல், வாக்கினால் அனைத்தையும் துறக்கின்ற விருப்பத்துடன் (விரக்தர்கள்) தம்மைப் பின்பற்றுபவர்களாகிய சாதகர்களிடம் பின்வருமாறு கூறினார்: "பாருங்கள்! இனியும் நீங்கள் சந்தேகம் கொள்ளலாகாது. நான் த்ரேதாவில் தோன்றிய அதே ராமரும் துவாபரத்தில் தோன்றிய அதே கிருஷ்ணரும் ஆவேன். நான் அவர்களின் புனிதமான ஆன்மா ஆவேன்; அதே ஆன்ம வடிவமும் ஆவேன். ஒருவேளை அதையே நீங்களும் அடைய விரும்பினால் என்னைப் பாருங்கள்."

சரி, இதே போன்றுதான் பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களும் அனைவருக்கும் (பக்தர்கள்) முன்னால், "ஆம்! நான் பகவானுடைய திருத்தூதர் ஆவேன்! எவர் உண்மையிலேயே சாதுவோ (ஸந்த்), அவர் பகவானுடைய திருத்தூதரே ஆவார். எங்கள் மூலமாகவே அந்த பகவானுடைய திருச்செய்திகள் (திருக்குறிப்புகள்) கிடைக்கின்றன" என்று கூறுவார். இயேசு கிறிஸ்துவும் கூட, "நான் பகவானுடைய புத்திரன் ஆவேன். என்னிடம் வாருங்கள். நீங்களும் இறைவனுடைய மைந்தர்கள் என்றழைக்கப்படுவீர்கள்" என்றே கூறினார். ஆகவே, அனைவருமே இறைவனுடைய பிள்ளைகள் ஆகமுடியும். ஆம்! அவரிடம் போவதென்றால், அவர் மூலமாகச் சொல்லப்படுகின்ற சாதனையை வரிசைக் கிரமமாகக் கடைப்பிடித்துச் சென்று அதனைச் செவ்வனே நிறைவு செய்து

முடிப்பது என்பதாகவே இருக்க முடியும் என்பது வேறு விஷயம். முஹம்மது பெருமகனாரும், "நான் அல்லாவின் திருத்தூதர் (ரஸூல்) ஆவேன். அவருடைய தெய்வத் திருக்கட்டளைகளை நிறைவேற்றுபவன் ஆவேன்" என்றுதான் கூறினார். பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்கள் அனைவரிடமும் இவ்வளவுதான் கூறியருள்வார்: "எவருடைய கொள்கையையும் கண்டிக்கவும் இல்லை; கொண்டாடவும் இல்லை". ஆனால், அனைத்தையும் துறந்து, விரக்தியுடன் அவரைப் பின்பற்றுகின்ற சாதகர்களிடம் மட்டும், "என்னுடைய திரு வடிவத்தை (ஸத்குருவாகிய அவர்தம் திருவுருவம்) மட்டும் பார். ஒருவேளை, உனக்கு அந்தப் பரமாத்மாவை அடைய வேண்டும் என்ற விருப்பமிருந்தால் என்னைப்பார். சந்தேகம் கொள்ளாதே" என்று கூறுவார். எவருக்கெல்லாம் சந்தேகம் தோன்றுகிறதோ, அவர்களுக்கெல்லாம் அனுபவத்தில் தம்மை உணர்த்தியருளியும் அதட்டியும் உருட்டியும் அவர்களைப் புறமுகமாக ஓடிக் கொண்டிருக்கும் எண்ணவோட்டங்களிலிருந்து தடுத்தாட் கொண்டு, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரின் வழிமுறைகளையே பின்பற்றி (அத்தியாயம் 2/ 40–43) எண்ணற்ற பூஜைவிதிமுறைகள் எல்லாம் விவேகமற்ற மூட அறிவுடையவர்களால் உருவாக்கப்பட்டவை என்பதை எல்லாம் திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்லிப் புரிய வைத்து, அவர்களைத் தம்முடைய திரு வடிவத்திலேயே (அவர்தம் தெய்வீகத் திருவுருவம்) எப்போதும் மனத்தை நிலைநிறுத்தியிருக்குமாறு பார்த்துக் கொள்வார். அவர் என்றென்றைக்குமாக மகாபுருஷர் என்னும் வடிவத்தில் நிலைத்திருப்பவர் ஆவார். இதேபோன்றுதான் ஸ்ரீகிருஷ்ணரும் தம்முடைய அந்த மகாபுருஷர் என்னும் வடிவத்தை இரகசியமாகவே வைத்திருந்தார். ஆனால், தம்முடைய அனன்ய பக்தனும் முழுமையான தகுதியும் பெற்றிருந்த அதிகாரியான, ஆர்வம் நிறைந்த அர்ஜுனனுக்கு மட்டும் அவர் தமது உண்மையான ஆன்ம நிலையை வெளிச்சம் போட்டுக் காட்டியருளினார். இதை ஒவ்வொரு பக்தராலும் அடையமுடியும் என்ற சாத்தியக் கூறுகள் இருக்கவே செய்கின்றன. மஹாபுருஷர்கள் இலட்சக்கணக்கான பக்தர்களை இதே ஆன்மீகப் பாதையில் வழி நடத்திச் செலுத்தியுமிருக்கின்றனர்.

**முடிவுரை :** –

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "இந்த வாழ்க்கை என்பது ஒரு பெரிய மரமாகும். அரச மரத்தைப் போன்று பெரிய மரமாகும் என்று கூறினார். இங்கே **அரச மரம்** என்பது வெறும் உதாரணம் மட்டுமேயாகும். மேல்பாகத்தில் வேராகிய அதன் மூலப் பொருளாகப் பரமாத்மாவே வீற்றிருக்கிறார். மேலும், கீழ்ப்பாகத்திலோ, இயற்கை முழுவதும் அதனுடைய கிளைகளாகவும் உட்கிளைகளாகவும் இருக்கிறார். எவர் இந்த உலகியல் என்னும் மரத்தை

வேராகிய மூலப் பொருளுடன் (இறைவன்) மொத்தமாக அறிந்து தம்முள் வரித்துக் கொள்கிறாரோ, அவரே வேதங்களை அறிந்த அறிஞர் எனப்படுகிறார். இந்த உலகியல் என்னும் மரத்தின் கிளைகளோ மேலும், கீழும் எங்கெங்கிலும் விரிந்தும் பரந்தும் காணப்படுகின்றன. மேலும், **மூலானி** – அதனுடைய வேர்கள் பிண்ணிப்பிணைந்து மேலும் கீழும் எங்கெங்கிலும் விரிந்தும் பரந்தும் உள்ளது. ஏனெனில் வேராகிய, அந்த மூலப்பொருளே இறைவன் ஆவார். மற்றும், அவரே விதைவடிவில் மனிதர் உட்பட ஒவ்வொரு உயிரின் இதய தேசத்திலும் வாழ்கிறார்.

புராணத்தில் இவ்வாறு ஒரு விளக்கம் இடம் பெற்றுள்ளது. ஒருமுறை தாமரை மலரில் அமர்ந்து கொண்டு பிரம்மா, 'என்னுடைய உற்பத்தி ஸ்தானம் எது? எதிலிருந்து நான் பிறந்தேன்?' என்றெல்லாம் மனத்தில் சிந்தனை செய்தபடியே, தாம் அமர்ந்திருந்த தாமரைத் தண்டின் வழியாக நுழைந்து செல்லத் தொடங்கினார். அவர் தொடர்ந்து போய்க் கொண்டுதான் இருந்தாரே ஒழிய , அவரால் தம்முடைய உற்பத்தி ஸ்தானத்தை மட்டும் காண முடியவில்லை. எனவே, அவர் மனச் சோர்வடைந்தவராக, அதே தாமரை மலரில் வந்து அமர்ந்து கொண்டார். அவர் தமது சித்தத்தைக் கட்டுப்படுத்தி, அதனை ஒழிக்கும் முயற்சியில் இறங்கிவிட்டார். மேலும், அவர் தியானத்தின் மூலமாகத் தம்முடைய உற்பத்தி ஸ்தானம் எது? என்பதையும் அறிந்து கொண்டார். அதாவது, பரம தத்துவ பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து கண்கூடாக அறியப் பெற்றார். இறைவனைப் புகழ்ந்து (ஸ்துதி) பாடத் தொடங்கினார். பரமாத்ம வடிவத்தில் இருந்து பின்வருமாறு ஆணை பிறந்தது: "நான் இங்கிங்கெனாதபடிக்கு எங்கெங்கிலும் நீக்கமற நிறைந்திருப்பவன்தான். ஆனால், என்னை அடைவதற்கான ஒரே இடம் இதய தேசம் மட்டுமேயாகும். இதயதேசத்தில் எவர் என்னை தியானம் செய்கிறாரோ, அவரே என்னை அடைகிறார்."

இங்கே பிரம்மா எனப்படுவது ஒரு உருவகச் சொல்லாகும். யோக சாதனையின் முதிர்ச்சியடைந்த, பரிபக்குவமான நிலையில்தான் இத்தகைய உயர் ஆன்மீக எண்ணவோட்டம் விழிப்புணர்வு பெறுகிறது. இறைவனை மட்டுமே நாடுகின்ற அகமுக எண்ணவோட்டம், பிரம்ம வித்யையுடன் இணைந்து செயல்படுகின்ற புத்தியே பிரம்மா எனப்படுகிறது. தாமரை சேற்று நீரில் பிறந்து, அதிலேயே இருந்த போதும் அழுக்கு நீருடன் ஒட்டாமல் எப்போதுமே தூய்மையாகவும் புனிதமாகவும் இருக்கிறது. எதுவரை புத்தியானது இங்குமங்கும் புறஉலகில் தேடியலைகிறதோ அதுவரை இறைவனை அதனால் அறிய முடிவதில்லை. ஆனால், எப்பொழுது அதே புத்தியானது புனிதம் (தூய்மை) என்னும் ஆசனத்தில் அமர்ந்து கொண்டு மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் அடக்கி, இதய தேசத்தில் கட்டுப்படுத்துகிறதோ, அவ்வாறு

கட்டுப்படுத்தப்பட்ட மனமும் கூட இறைவனில் இரண்டறக் கலந்து முழுமையாக மறைந்து போகின்ற நிலை வந்ததும் இதய தேசத்திலேயே பரமாத்மா அடையப்பெற்று விடுகிறார்.

இங்கேயும் கூட, யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், "இந்த சம்ஸாரம் என்பது ஒரு பெரிய மரமாகும். அதனுடைய வேர்களும் (மூலப்பொருளாகிய இறைவன்) எங்கும் விரிந்தும் பரந்தும் உள்ளன; அதனுடைய கிளைகளும் (பிரகிருதி) அதே போன்று எங்கும் விரிந்தும் பரந்தும் உள்ளன. **கர்மானு பந்தீனி மனுஷ்ய லோகே** – கர்மங்களுக்கு ஏற்ப, மனிதப் பிறவியில் மட்டுமே பந்தம் உருவாகிறது; பந்தத்தில் ஆழ்த்துகிறது. மற்ற பிறவிகள் அனைத்துமே மேற்கூறிய கர்மங்களின் பலன்களை அனுபவிப்பதற்காக மட்டுமே பிறவி எடுக்கின்றன. எனவே, நீ திடமான வைராக்கியம் என்னும் ஆயுதத்தைக் கொண்டு, இந்த வாழ்க்கை என்னும் அரச மரத்தை வெட்டி எறி. மற்றும், எவரைச் சென்று அடைந்த பிறகு மஹரிஷிகள் மறுபிறவியை (புனர்ஜன்மம்) அடைவதில்லையோ, அந்தப் பரம பதத்தைத் (இறைப் பேறுநிலை) தேடு" என்றே கூறுகிறார்.

உலகியல் என்னும் மரம் வெட்டி எறியப்பட்டு விட்டது என்பதை எவ்வாறு அறிந்து கொள்வது? அதற்கு, யோகேஷ்வரர், எவனொருவன் புகழ், ஆணவம், மோகம் அற்றவனோ, எவன் இந்த உலகின் சேர்க்கை தோஷங்களை எல்லாம் வென்றவனோ, எவனுடைய ஆசைகள் அனைத்தும் நீங்கி விட்டனவோ மற்றும், எவன் இருமைகளிலிருந்து விடுபட்டவனோ, அவனே அந்தப் பரம தத்துவ பரமாத்மாவை அடைகிறான். அந்தப் பரமபதத்தை சூரியனோ, சந்திரனோ, அக்கினியோ ஒளியூட்டி காட்ட முடியாது. அவர் தன்னில் தானே ஒளியுடன் திகழ்பவர். அவரை அடைந்தவர்கள் மறுபடியும் வந்து இவ்வுலகில் பிறப்பதில்லை. அதுவே என்னுடைய பரமபதமாகும். அதை அடைகின்ற அதிகாரம் அனைவருக்கும் உள்ளது. ஏனெனில், அந்த ஜீவாத்மா என்னுடைய தூய்மையான அம்சமாகும்.

உடலைத் துறக்கின்ற சமயத்தில் ஜீவாத்மாவானது மனம் மற்றும் ஐந்து ஞானேந்திரியங்கள் மூலம் நடைபெற்ற காரியச் செயல்முறைகள் அனைத்தையும் எடுத்துக் கொண்டு சென்று, வேறொரு புதிய உடலை ஏற்றுக் கொண்டு விடுகிறது. வினைகள் ஸாத்வீகமாக இருந்தால் ஸாத்வீகமான உயர்ந்த நிலைகளை அடைகிறது. ராஜஸீகமாக இருந்தாலோ நடுத்தரமான நிலைகளையும் தாமஸீகமாக இருந்து விட்டால் கீழ்த்தரமான, விரும்பத் தகாத, தாழ்ந்த பிறவி நிலைகளையும் அடைகிறது. மேலும், புலன்களின் தலைவனாகிய மனத்தின் துணையுடன் விஷயங்களைப் பார்க்கவும் அனுபவிக்கவும் செய்கிறது. ஆனால், இதெல்லாம் வெளிப்படையாக அனைவருக்கும் தெரிவதில்லை; தென்படுவதுமில்லை. இவை

அனைத்தையும் பார்ப்பதற்கு ஞானப் பார்வை (ஞான திருஷ்டி) வேண்டும். எதையாவது மனப்பாடம் செய்து விட்டால், அதற்குப் பெயர் ஞானம் என்றாகிவிடாது. யோகிகள் இதயத்தில் சித்தத்தை ஒடுக்கி, பெருமுயற்சி செய்துதான் இதை அறிந்து கொள்கிறார்கள். ஆகவே, ஞானம் என்பது சாதனையின் மூலம் அடையப்படுவது. ஆம்! சாஸ்திரங்களை ஆழ்ந்து கற்பதால் இறைவனை அடையவேண்டும் என்ற ஆர்வம் பிறப்பது என்னவோ உண்மைதான். சந்தேகத்துடன் கூடியவர்கள், சித்தத்தை முழுமையாக வெற்றி கொள்வதில் தோல்வியுற்றவர்கள், முயற்சி செய்தும்கூட இறைவனை அடைய முடிவதில்லை.

இங்கே, இறைவனை அடையப் பெற்று முக்தி நிலை அடைந்தவரைப் பற்றிய வர்ணனை இடம் பெற்றுள்ளது. எனவே, அந்த உயர் ஆன்மீக நிலையில் தெய்வீக மகிமைகள் அனைத்தும் பெருக்கெடுத்தோடுவது என்பது இயல்பான ஒன்றுதான். அதைப் பற்றி விளக்கும் வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "சூரியன் மற்றும் சந்திரனில் நானே வெளிச்சமாவேன்; அக்கினியில் நானே ஒளிப்பிழம்பாவேன். நானே கொழுந்து விட்டெரியும் அக்கினி வடிவமாக இருந்து கொண்டு நான்கு விதிமுறைகளால் பரிபக்குவமாகின்ற அன்னத்தை ஜீரணிக்கிறேன்" என்கிறார். ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளில் சொல்வதென்றால், பிரம்மம் ஒன்று மட்டுமே அன்னமாகும். – **அன்னம் ப்ரஹ்மேதி வ்யஜானாத் (தைத்திரீய உபநிஷதம் 2/1)** எதை அடைந்தபிறகு, இந்த ஆத்மாவானது என்றென்றைக்குமாக திருப்தியடைந்து விடுகிறதோ அந்த பிரம்மம் மட்டுமே அன்னம் ஆகும். பைக்கிரியில் இருந்து பரா வரைக்கும் அன்னமானது முழுமையான அளவில் பரிபக்குவமாகச் சமைக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அத்துடன் சேர்த்தே பாத்திரமாகிய அந்த சாதகரும் பரிபக்குவமடைந்து விடுகிறார். இந்த அன்னத்தை நானே ஜீரணிக்கிறேன். அதாவது, எதுவரைக்கும் ஸத்குருவானவர் சாதகனின் ஆன்மாவில் எழுந்தருளி சாரதியாக நிற்கவில்லையோ, அதுவரை இந்த அன்னம் (பிரம்மம்) நமக்குக் கிடைப்பதில்லை.

இதை வலியுறுத்தியபடியே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மறுபடியும், "மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் இதய தேசத்தில் வீற்றிருந்து நான்தான் அவற்றிற்கு என்னைப் பற்றிய நினைவை (ஸ்ம்ருதி) ஏற்படுத்துகிறேன். எந்த ஆன்ம வடிவத்தை அவை மறந்து போய்விட்டனவோ, அதை மறுபடியும் அவற்றிற்கு நினைவூட்டுகிறேன். அந்த ஆன்மா என்ற நினைவு திரும்பப் பெறப்பட்டதுடன் சேர்த்துக் கிடைக்கும் ஞானமும் நானே ஆவேன். அதை அடைவதில் வருகின்ற தடைகள் நீங்கப் பெறுவதும் என்னால்தான் நடைபெறுகிறது. நான் ஒருவனே அறியத் தகுந்தவன் ஆவேன்; மேலும், இறையுணர்வை வரித்துக் கொண்ட

பிறகு இறைவனை அறிவது என்ற ஆன்மீகச் செயல்பாட்டை முடித்து வைக்கின்றவனும் நானேதான். அதற்குப் பிறகு யார் எவரை அறிவது? நானே வேதவித் ஆவேன் என்கிறார்." இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அவர், "எவனொருவன் வாழ்க்கை என்னும் மரத்தை அதனுடைய வேருடன் (மூலப்பொருளாக விளங்கும் இறைவனுடன்) சேர்த்து அறிந்து கொள்கிறானோ, அவனே வேதவித் ஆவான்" என்று கூறினார். ஆனால் ஒன்று, அதனை வெட்டியெறிபவனே அறிந்து கொள்கிறான்!. இங்கேயோ அவர், 'நானும் வேதவித் ஆவேன்!' என்கிறார். இதன் மூலம், அவர் மற்ற வேதவித் மகாபுருஷர்களின் வரிசையில் தம்மையும் சேர்த்துக் கொள்கிறார். ஆகவே, ஸ்ரீகிருஷ்ணரும் இங்கே, 'வேதவித் புருஷோத்தமர்' என்பது தெளிவாக்கப்படுகிறது. இந்நிலையை அடைவதற்கான அதிகாரம் மனித இனம் அனைவருக்குமே கொடுக்கப்பட்டுள்ளது.

இறுதியாக அவர், "இந்த உலகத்தில் இரண்டு விதமான புருஷர்கள் இருக்கிறார்கள். மனிதர் உட்பட எல்லா உயிர்களின் உடல்களுமே அழிவுறும் தன்மை (க்ஷரபுருஷர்) உடையன. மனத்தை கட்டுப்படுத்தி நிலைநிறுத்துகின்ற (கூடஸ்த்தர்) ஆன்மீக நிலையை எட்டிவிட்ட புருஷர்கள் அழிவற்றவர்கள் (அக்ஷர புருஷர்) எனப்படுகின்றனர். ஆனால், இவர்கள் இன்னும் இருமை நிலையைத் தாண்டி விடவில்லை. மேலும், இவ்விரண்டு நிலைகளையும் தாண்டிய, மேலானவரான, அந்த பரமாத்மா, பரமேஸ்வரர், புலன் உணர்வுகளைக் கடந்துள்ளவர், மற்றும் அழிவற்றவர் என்றெல்லாம் சொல்லப்படுகின்ற ஒருவரும் இருக்கிறார். அவர், உண்மையில் இவை எல்லாவற்றையும் விட வேறானவர், தனித்தவர் ஆவார். இது அழிவுறுகின்ற (க்ஷர) – அழிவற்ற (அக்ஷர) புருஷர்கள் எனப்படும் நிலைகளை விட எல்லாம் மிகவும் உயர்வான, மேலானதொரு நிலையாகும். இதுவே பரம நிலை என்றும் சொல்லப்படுகிறது" என்கிறார். இவற்றைக் குறிப்பிட்டே அவர், "நான் அழிவுறுகின்ற (க்ஷர) – அழிவற்ற (அக்ஷர) புருஷர்கள் என்ற இரண்டு நிலைகளை விடவும் மேலான, உயர்ந்த நிலையில் இருப்பவன். எனவேதான் உலகம் என்னை புருஷோத்தமர் என்று அழைக்கிறது. இந்த முறையில், உத்தமமான புருஷரை எவர் அறிகிறாரோ, அந்த ஞானிகளாகிய பக்தர்கள் எப்போதும், எல்லா வகைகளிலும் என்னையே இறைவழிபாடு செய்கிறார்கள். அவர்களுடைய ஞானத்தில் எந்த இடைவெளியும் இல்லை. அர்ஜுனா! இந்த மாபெரும் மறைபொருள் இரகசியத்தை நான் உனக்காகக் கூறினேன்" என்கிறார். இறைநிலையை அடைந்து முக்தி பெற்ற மகாபுருஷர் அனைவருக்கும் முன்னால் இந்த இரகசியத்தை வெட்ட வெளிச்சமாகப் போட்டு உடைப்பதில்லை. ஆனால், ஆன்மீகப் பாதையில் செல்லும் தகுதியுடைய சாதகர்களிடம் (அதிகாரி) இதை

மறைப்பதும் கிடையாது, இடைவெளியும் வைப்பதில்லை. அவ்வாறு இடைவெளி வைத்திருந்தால் அவன் எங்கிருந்து இறைவனை அடைவான்?

இந்த அத்தியாயத்தில், ஆன்மாவின் மூன்று நிலைகளாக, அழிவுறுகின்ற (க்ஷர) அழிவற்ற (அக்ஷர) மற்றும் இவ்விரண்டையும் விட மேலான, உயர்ந்த, அதி உத்தமமான (புருஷோத்தமர்) புருஷர்களின் இயல்பு நிலைகள் தெளிவாக்கப்பட்டுள்ளன. இந்த மாதிரியான வகைப்படுத்தல் இதற்கு முந்தைய அத்தியாயங்கள் எவற்றிலும் இடம் பெறவில்லை. அத்துடன்

**ஓம் தத் ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ**
**ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜூன**
**ஸம்வாதே புருஷோத்தம யோகோ நாம பஞ்சதசோத்த்யாய :**

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜூன உரையாடலுமாகிய புருஷோத்தம யோகம் என்ற பெயருடைய பதினைந்தாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா: யதார்த்த கீதா பாஷ்யே புருஷோத்தம யோகோ நாம பஞ்ச தசோத்த்யாய:**

ஹரி : ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'புருஷோத்தம யோகம்' என்ற பெயருடைய பதினைந்தாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

## ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம:
## பதினாறாவது அத்தியாயம்

யோகேஷ்வரராகிய பகவான் ஸ்ரீகிருஷ்ணர் எந்தவொரு கேள்வியையுமே கையாளுகின்ற முறையில் தமக்கென்று தனியொரு பாணியைப் பின்பற்றுகிறார். அவர் முதலில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்கின்ற கருப்பொருளின் சிறப்புத் தன்மைகளை எல்லாம் ஒவ்வொன்றாகப் பட்டியலிட்டு விளக்குகின்றார். அதன் மூலம், அனைவருக்கும் அதைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஒருவிதமான ஈர்ப்பினை உண்டாக்குகிறார். அதற்குப் பிறகுதான் அவர் அந்தக் கருப் பொருளின் மையக் கருத்தைத் தெள்ளத் தெளிவாக விளக்க ஆரம்பிக்கிறார். உதாரணமாக, 'கர்மம்' என்ற கருப்பொருளை எடுத்துக் கொள்வோம். இரண்டாவது அத்தியாயத்திலேயே அவர், ''அர்ஜுனா! கர்மம் செய்!'' என்று உற்சாகப்படுத்துகிறார். மூன்றாவது அத்தியாயத்தில் அவர், ''நீ நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்!" என்று குறிப்பால் உணர்த்த மட்டும் செய்தார். நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் என்றால் என்ன? என்ற கேள்விக்கு அவர், வேள்வியின் செயல்முறையே கர்மம் என்று மட்டும் பதிலளித்தார். அதற்குப் பிறகு அவர் எடுத்த உடனே, "வேள்வி என்றால் என்ன? என்பதைப் பற்றி ஒன்றும் கூறாமல், அதற்கு முன்பு, இந்த வேள்வியானது முதலில் எங்கிருந்து வந்தது? மற்றும் இந்த வேள்வி என்ன தருகிறது?" என்பதையும் விளக்கினார். நான்காவது அத்தியாயத்தில்தான் அவர் பதின்மூன்று, பதினான்கு விதிகள் அடங்கிய வேள்வியின் உண்மையான மற்றும் முழுமையான வடிவத்தையும் தெள்ளத் தெளிவாக விளக்கியதுடன், அதைச் செய்வதையே கர்மம் என்றும் கூறியருளினார். மனம் மற்றும் புலன்களால் செயல்முறைப்படுத்தப்பட்டு நிறைவேற்றப்படுகின்றதும் யோக சிந்தனை, இறைஆராதனை என்றெல்லாம் சரியாகப் பொருள் கொண்டு அறியப்படுவதுமாகிய, இந்தக் கர்மம் இவ்விடத்தில்தான் தெளிவுபடுத்தப்படுகிறது.

இதே போன்றுதான் அவர் ஒன்பதாவது அத்தியாயத்தில் தெய்வீகச் செல்வம் (தெய்வீகக் குணங்கள்) மற்றும் அசுரச் செல்வம் (அசுரக் குணங்கள்) ஆகியவற்றின் பெயர்களை மட்டும் குறிப்பிட்டார். அவற்றின் சிறப்பியல்புகளைப் பற்றி வலியுறுத்திக் கூறும் வகையில், "அர்ஜுனா! அசுர இயல்பை உடையவர்கள் என்னைத் துச்சமாகக் கருதி ஏளனம் செய்கின்றனர். நானும் இந்த மனித உடலையே ஆதாரமாகக் கொண்டிருப்பவன்தான். ஏனெனில், மனித உடலில் வாழ்ந்து கொண்டிருக்கும் போதுதான் எனக்கு இந்த இறைப் பேருணர்வு நிலை கிடைத்தது. ஆனால், அசுர இயல்பை உடைய, மூட அறிவுடையவர்கள் என்னை வழிபாடு செய்வதில்லை. ஆனால், தெய்வீகச் செல்வங்கள் நிரம்பிய (தெய்வீக

குணங்களுடன் கூடிய) பக்தர்களோ நிலைத்த நம்பிக்கையுடன் என்னை வழிபாடு செய்கிறார்கள்" என்று கூறினார். ஆனால் இந்தச் செல்வங்களைப் பற்றி, அதாவது, தெய்வீக, அசுர குணங்கள் என்றால் என்ன? அவை யாவை? என்பதைப் பற்றியோ, அவற்றின் முழுஉருவத்தையோ இதுவரை ஒன்றும் விளக்கிக் கூறாமல் இருந்தார். இப்போதுதான், இந்தப் பதினாறாவது அத்தியாயத்தில்தான் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அவற்றின் மொத்த உருவத்தையும் தெள்ளத் தெளிவாக விளக்கப் போகிறார். அதில் முதலில் இடம் பெற்றுள்ளது, தெய்வீகச் செல்வம் எனப்படும் தெய்வீகக் குணங்களைப் பற்றிய விளக்கமாகும்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**அபயம் ஸத்வஸம்சுத்திர்ஜ்ஞானயோகவ்யவஸ்த்திதி:**
**தானம் தமஷ்ச்ச யஜ்ஞஷ்ச்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் (1)**

'**அபயம்**' எந்த வகையிலும் பயம் என்பதே சிறிதும் இல்லாத (அஞ்சாமை) குணம், **ஸத்வஸம்சுத்தி** ஆழ்மனத் தூய்மை (உள்ளத் தூய்மை) **'ஜ்ஞானயோக வ்யவஸ்த்திதி'** தத்துவ ஞானத்தை அறியும் ஒரே நோக்கத்துடன் தியானத்தில் உறுதியான நிலைப்பாடு (தியானம்) அல்லது, இஷ்ட தெய்வத்திடம் (சத்குரு – இறைவன்) நிரந்தரமான பிடிப்புணர்வு, '**தானம்**' முழுமையான சமர்ப்பணம், **'தமஸ்ச'** நல்லமுறையில் புலன்களை அடக்குதல் (புலன் கட்டுப்பாடு) **'யஜ்ஞஸ்ச'** வேள்வியை அனுசரித்தல் (அதாவது, யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணர் நான்காவது அத்தியாயத்தில் தாமே முன்னின்று விளக்கியருளியவாறே, மனக்கட்டுப்பாடு என்னும் அக்கினியில் வேள்வி செய்தல், புலனடக்கம் என்னும் அக்கினியில் வேள்வி செய்தல் பிராணவாயுவை, அபாணவாயுவில் வேள்வி செய்தல், மற்றும் கடைசியில், ஞானாக்கினியில் வேள்வி செய்தல், அதாவது, இறை ஆராதனையைச் செயல்முறைப் படுத்துதல் ஆகும். இது மனம் மற்றும் புலன்களை ஈடுபடுத்திச் செய்யப்படுகின்ற அகச் செயல்பாட்டு முறைகளின் மூலம் முழுமை பெறுகின்ற ஆன்மீகச் சாதனை முறையாகும். எள், நெல் முதலான வித்துக்களையும் வேள்விக் குண்டம் முதலான வேள்விப் பொருட்களைக் கொண்டு செய்யப்படுகின்ற யாகங்களுக்கும் கீதையில் கூறப்படுகின்ற இறை ஆராதனைச் செயல்முறையாகிய வேள்விக்கும் எந்தவொரு தொடர்பும் இல்லை. ஸ்ரீகிருஷ்ணர் இது போன்ற புறஉலகில் செய்யப்படுகின்ற சடங்கு முறைகள் எதையும் (கர்ம காண்டம்) வேள்வி என்று ஏற்றுக் கொள்ளவில்லை). **ஸ்வாத்யாய** : 'தன்னை அறிதல்' என்றால் ஒருவருடைய சொந்த மற்றும் உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தையறிதல் என்று அர்த்தம். எனவே, அந்த ஆன்ம வடிவத்தை நோக்கித் தீவிரமாக முன்னேறிச் செல்வதற்கான அனைத்து விதமான ஆயத்தங்களையும்

மேற்கொள்வதுதான், தன்னை அறிதல் **(ஸ்வாத்யாயம்)** எனப்படுகிறது. அதாவது, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் இஷ்டதெய்வத்தின் (சத்குரு – இறைவன்) விருப்பத்திற்கு ஏற்ப மாற்றி அமைத்துக் கொள்ளுதல் 'தவம்' எனப்படுகிறது. **ஆர்ஜவம்** – உடல் மற்றும் புலன்கள் அனைத்துடன் கூடிய ஆழ்மனத்தில் எளிமையான குணம் வாய்க்கப் பெற்றிருத்தல் (உடல், உள்ளத்தில் எளிமை)

**அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸத்யாக : ஷாந்தீரபைசுனம்**
**தயா பூதேஷ்வலோலுப்தவம் மார்தவம் ஹ்ரீரசாபலம் (2)**

**'அஹிம்ஸா'** – அதாவது, ஆன்மாவை உயர்நிலையை நோக்கி மீட்டுச் செல்தல் (ஆன்மாவை அதோ கதிக்குத் தள்ளுவதே ஹிம்ஸை எனப்படும். ஸ்ரீகிருஷ்ணர், "ஒருவேளை நான் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொண்டு கர்மத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து வரவில்லை என்றால் எல்லாக் குடிமக்களையும் கொல்பவனாகவும் வர்ணக் கலப்பிற்குக் காரண கர்த்தாவாகவும் ஆகிவிடுவேன்" என்கிறார். ஆன்மாவின் தூய்மையான வர்ணமே பரமாத்மா ஆகும். ஜீவான்மாவை இயற்கை அல்லது படைப்பில் அலைய விடுவதுதான் வர்ணக் கலப்பு ஏற்படுதல் எனப்படுகிறது. (இதுவே ஆன்மாவை வதைப்பது (இம்சை) ஆகும். மேலும், ஆன்மாவை மேல்நிலைப்படுத்துவதே அகிம்சை ஆகும்.) **'ஸத்யம்'** (இங்கே, உண்மை என்பதற்குப் பொருள் உள்ளதை உள்ளபடிக்கு அறிந்து தெளிதல் என்று அர்த்தம். அதற்கு மாறாக, இனிமையான வார்த்தைகளைப் பேசுதல் என்பதன்று. உதாரணமாக, 'இந்த உடை என்னுடையது' என்று நீங்கள் கூறுகிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது நீங்கள் ஏதோவொரு பெரிய உண்மையைச் சொல்லி விட்டீர்கள் என்று ஆகிவிடுமா என்ன? இதை விட மிகப்பெரிய பொய் வேறு என்னதான் இருக்க முடியும்? இந்த உடலே உங்களுடையது இல்லை என்றிருக்கும் போது, அழியக்கூடிய ஒன்றாக இருக்கும் போது, அதன்மீது மூடியிருக்கின்ற ஆடை மட்டும் எங்கிருந்து உங்களுடையதாகப் போகிறது? உண்மையில், உண்மையின் வடிவம் என்ன? என்பதை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தாமே முன்னின்று விளக்கிக் கூறுவதாவது: "அர்ஜுனா! இந்த உண்மைப் பொருள் மூன்று காலங்களிலும் இல்லாமல் இருந்ததில்லை. இந்த ஆன்மாவே உண்மைப் பொருள் ஆகும். இதுவே, மேலான உண்மையாகும் உனது பார்வை எப்போதும் அந்த ஆன்மாவின் மீதே இருக்க வேண்டும்)". **அக்ரோத** கோபமின்மை **தியாகம்** முழுமையான சமர்ப்பண உணர்வு, (கர்மத்தால் விளைகின்ற நல்லவை மற்றும் தீயவை போன்ற அனைத்துப் பலன்களையும் துறத்தல்), **'சாந்தி:** சித்தத்தின் அலைபாயும் தன்மை எல்லா வகையிலும் என்றென்றைக்குமாக அமைதியடைந்து விடுதல் (மன அமைதி)

இலட்சியத்திலிருந்து முரண்படுகின்ற, விபரீதமான பின்விளைவுகளைத் தரும் என்று கருதப்படுகின்ற தடைசெய்யப்பட்ட எந்தவொரு காரியத்தையும் செய்யாதிருத்தல், **'தயா:** மனிதர் உட்பட எல்லா உயிர்களிடமும் இரக்கம் கொள்தல் (இரக்கவுணர்வு). **'அலோலுப்த்வம்'** புலன்கள் அவற்றின் விஷயங்களுடன் இணைவு பெற்றாலும் கூட அவற்றில் எந்தவிதமான பற்றையும் ஏற்படுத்திக் கொள்ளாதிருத்தல், **'ஆர்தவம்'** மென்மையான அணுகுமுறை, **'ஹ்ரீ:'** தாம் வரித்துக் கொண்டிருக்கும் இலட்சியத்தில் இருந்து தவறிப் போகின்ற நிலையை எண்ணி வெட்கஉணர்வு கொள்தல் (கூச்ச உணர்வு) **'அசாபலம்'** வீணான செயல்களைச் செய்யாதிருத்தல், மேலும்.

**தேஜ: க்ஷமா த்ருதி : ஷௌசமத்ரோஹோ நாதிமானிதா**
**பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத (3)**

**'தேஜஸ்'** ஆன்ம ஒளி (இது இறைவனிடம் மட்டுமே உள்ளது. அந்த இறைவனிடம் மட்டுமே உள்ள ஆன்ம ஒளியையே பெற்றுச் செயல்புரிதல் ஆகும். மகாத்மா புத்தரின் பார்வை பட்டதுமே அங்குலிமால் என்ற கொலைகாரனின் மனம் மாறிவிட்டது. இது அந்த ஆன்ம ஒளியினால் ஏற்பட்ட விளைவாகும். அந்த ஆன்ம ஒளியானது மகாத்மா புத்தரிடம் இருந்ததால்தான் அதன் மூலம் அவனுக்கு நன்மை நடந்தது). 'க்ஷமா' மன்னித்தருளும் குணம், **'த்ருதி'** மன உறுதிப்பாடு, **'சௌசம்'** அகத் தூய்மை மற்றும் புறத் தூய்மை, 'அக்ரோஹம்' எவரிடமும் பகைமையுணர்வு கொள்ளாமை, 'நாதிமானிதா' தற்பெருமையின்மை, ஆகிய அனைத்துமே அர்ஜுனா! தெய்வீகச் செல்வங்கள் அதாவது தெய்வீகக் குணங்களை அடையப் பெற்றிருக்கும் சாதகருடைய தகுதிகள் ஆகும். இந்த முறையில், மொத்தம் இருபத்தி ஆறு தகுதிகள் கூறப்பட்டுள்ளன. இவை அனைத்துமே சாதனையின் பரிபக்குவநிலையை அடைந்தவரிடம் மட்டுமே காணப்படுகின்ற சாத்தியக் கூறுகள் உள்ளன. மற்றபடி இவற்றின் (அம்சங்கள்) உங்களிடமும் கண்டிப்பாக இருக்கின்றன. அது மட்டுமல்ல, அசுரச் செல்வம் எனப்படுகின்ற அசுர குணங்கள் நிறையப் பெற்ற மனிதர்களிடமும் கூட இந்த தெய்வீக குணங்கள் இருக்கவே செய்கின்றன. ஆனால், உறக்க நிலையில் இருக்கின்றன, அவ்வளவுதான். அப்படியொரு நிலை இருப்பதால்தானே பெரிய பாவிகளுக்கும் கூடப் பரம நன்மையைப் பெற்றுத் தரவல்ல ஆன்மீக வாழ்க்கையை மேற்கொள்கின்ற அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. இனி அசுரச் செல்வம் எனப்படுகின்ற அசுர குணங்களின் முக்கியமான இலட்சணங்களைப் பற்றிக் கூறுகிறார். –

**தம்போ தர்ப்போஅபிமானஷ்ஸ்ச க்ரோத : பாருஷ்யமேவ ச**
**அஞ்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதமாஸுரீம் (4)**

பார்த்தனே! பகட்டு, இறுமாப்பு, தற்பெருமை, கோபம் கடுஞ்சொற்பிரயோகம் மற்றும் அஞ்ஞானம் – இவை அனைத்தும் அசுரச் செல்வங்கள், அதாவது, அசுர குணங்களை அடையப் பெற்ற சாதகனுடைய தகுதிகளாகும். ஒன்றுக்கொன்று வேறுபட்ட இந்த இரண்டு செல்வங்களால் (குணங்கள்) நடைபெறும் காரியங்கள் யாவை?

**தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரி மதா**
**மா சுச : ஸம்பதம் தைவீமபிஜாதோஅஸி பாண்டவ (5)**

இந்த ஒன்றுக்கொன்று வேறுபட்ட இரண்டு செல்வங்களில் (குணங்கள்) தெய்வீகச் செல்வமோ **விமோக்ஷாய** – மேலானதும், சிறப்பானதுமான மோட்சத்திற்கு வழிவகுக்கின்றன. மேலும் அசுரச் செல்வமோ பந்தத்திற்குக் காரணமாக அமைபவை என்றே அறியப்படுகிறது. அர்ஜுனா! நீ வருத்தப்படாதே! ஏனெனில் நீ தெய்வீகச் செல்வத்தை (தெய்வீகக் குணங்கள்) அடையப் பெற்றுள்ளாய். மேலானதும் சிறப்பானதுமாகிய ஆன்ம விடுதலையைப் (மோட்சம்) பெறுவாய். அதாவது, நீ என்னை அடைவாய்! இந்தச் செல்வங்கள் (குணங்கள்) எங்கே குடியிருக்கின்றன?

**த்வௌ பூதஸர்க்கௌ லோகேஅஸ்மின்தைவ ஆஸுர ஏவ ச**
**தைவோ விஸ்தரஷ : ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ஷ்ருணு (6)**

அர்ஜுனா ! இந்த உலகத்தில் வாழும் மனிதர் உட்பட எல்லா உயிரினங்களின் சுபாவம் (அக இயல்பு) இரண்டு விதமான முறைகளில் அமைந்துள்ளன. தேவதைகளைப் போன்றது ஒருவகை; அசுரர்களைப் போன்றது மற்றொரு வகை. எப்பொழுது இதய தேசத்தில் தெய்வீகக் குணங்கள் இயக்க நிலை பெற்றுச் செயல்பட ஆரம்பிக்கின்றனவோ அப்பொழுது அந்த மனிதன் தேவதை என்று அறியப்படுகிறான். மேலும், எப்பொழுது அசுரக் குணங்கள் வலிமை பெற்று மேலோங்கி விடுகிறதோ, அப்பொழுது அதே மனிதன்தான் அசுரன் என்று அறியப்படுகிறான். இந்தப் படைப்பில் இந்த இரண்டு ஜாதிகள் மட்டுமே உள்ளன. அவன் ஒருவேளை அரேபியாவில் பிறந்தவனாகவோ அல்லது ஆஸ்திரேலியாவில் பிறந்தவனாகவோ அல்லது வேறு எங்கு வேண்டுமானால் பிறந்தவனாகவோ இருந்து விட்டுப் போகட்டும். இவ்விரண்டு வகைப்பாட்டிற்குள்ளேயே அடங்கி விடுகிறான். இதுவரைக்கும் தேவர்களின் சுபாவம் மட்டுமே விரிவாகச் சொல்லப்பட்டு வந்துள்ளது. இனி அசுரர்களின் சுபாவத்தைப் பற்றி என்னிடம் இருந்து விரிவான முறையில் கேள்.

**ப்ரவ்ருத்திஞ் ச நிவ்ருத்திஞ் ச ஜனா ந விதுராஸுரா :**
**ந ஷௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே (7)**

அர்ஜுனா! அசுரர்கள் எனப்படுவோர் ‘கார்யம் கர்மம்’ எனப்படுகின்ற செய்வதற்குத் தகுதியுடைய நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தில் ஈடுபடுவதையோ மற்றும் கடமை என்று ஏற்றுக் கொள்ள முடியாத வீணான செயல்களைச் செய்வதிலிருந்து விடுபடுவதையோ அறிய மாட்டார்கள். எனவேதான் அவர்களிடம் ‘அகத் தூய்மை’ என்பது காணப்படுவதில்லை; அவர்கள் வேள்வியின் செயல்முறைகளை அனுசரிப்பதும் இல்லை; மேலும், அவர்கள் உண்மைப் பொருளைப் பற்றியும் எதுவும் அறிந்திருப்பதும் இல்லை. அத்தகையோரின் சிந்தனை ஓட்டம் எப்படி இருக்கும்?

**அஸத்யமப்ரதிஷ்ட்டம் தே ஜகதாஹுரனீஸ்வரம்**
**அபரஸ்பரஸம்பூதம் கிமன்யத்காமஹைதுகம் (8)**

அந்த அசுர சுபாவத்தையுடைய மனிதர்கள், “இந்த உலகம் ஆதாரமற்றது, பொய்யானது, மற்றும் இறைவனால் உருவாக்கப்படாதது, தானாகவே, ஆண் – பெண் இனச் சேர்க்கையால் தோன்றியது. எனவேதான் அது இன்பங்களை எல்லாம் அனுபவிப்பதற்காக இருக்கிறதே தவிர வேறு எதற்காக?” என்று கூறுகின்றனர்.

**ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மானோஅளல்பபுத்தய :**
**ப்ரபவந்த்யுக்ரகர்மாண : க்ஷயாய ஜகதோஅஹிதா : (9)**

இவ்வாறு தவறான பிழையுடைய கண்ணோட்டத்தை ஆதாரமாகப் பற்றிக் கொண்டதால், எவருடைய சுபாவம் அழிவுற்று விட்டதோ, அத்தகைய மந்த அறிவுடையை, கொள்ளையடிக்கும் குணங்கள் கொண்ட, கொடூரமான செயல்களை எல்லாம் துணிந்து செய்கின்ற மனிதர்கள் இந்த உலகத்தின் அழிவிற்காகவே பிறக்கிறார்கள்.

**காமமாஸ்ரித்ய துஷ்பூரம் தம்பமானமதான்விதா:**
**மோஹாத்க்ருஹீத்வாஸத் க்ராஹான்ப்ரவர்த்தந்தே அஷுசிவ்ரதா : (10)**

அந்த மனிதர்கள் கர்வம், ஆணவம், திமிர் ஆகிய கெட்ட குணங்களுடன் கூடியவர்களாக, எந்த வகையிலும் நிறைவேறாத நெடிய ஆசைகளால் பீடிக்கப்பட்டவர்களாக, அஞ்ஞானத்தால் பல்வேறு தவறான கொள்கைகளையும் சித்தாந்தங்களையும் ஏற்றுக் கொண்டும் தீமையான நெறி தவறிச் செய்கின்ற விரதங்களை எல்லாம் கடைப்பிடித்துக் கொண்டும் இந்த உலகிலேயே உழன்று திரிகிறார்கள். அவர்கள் விரதம் என்னவோ இருக்கிறார்கள். ஆனால் ஆன்மீகப் பாதையில் இருந்து நெறி தவறியவர்கள் ஆவர்.

**சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாஷ்ரிதா:**
**காமோபபோகபரமா ஏதாவதிதி நிஷ்ச்சிதா: (11)**

அவர்கள் இறுதி மூச்சை விடும் வரைக்கும் (எண்ணற்ற சிந்தனைகளுடன்) அளவு கடந்த கவலைகளுடனும் மற்றும் உலகியல் சார்ந்த விஷயங்களை அனுபவிப்பதில் மட்டுமே முயற்சியுடையவர்களாக, 'இதுவன்றோ ஆனந்தம்!' என்று எண்ணிக் கொள்கின்றனர். 'எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவு இன்பத்தை அனுபவி. அதற்கு மேல் ஒன்றுமில்லை' என்பதே அவர்களுடைய கருத்தாகும்.

**ஆஷாபாஷஷதைர்பத்தா காமக்ரோதபராயணா:**
**ஈஹந்தே காமபோகார்த்தமன்யாயேனார்த்தஸஞ்சயான் (12)**

ஆசைகள் என்கின்ற நூற்றுக் கணக்கான தூக்குக் கயிறுகளால் (ஒரு தூக்குக் கயிற்றில் தொங்கினாலே உயிர் போய்விடுகிறது. இங்கோ, நூற்றுக்கணக்கான தூக்குக் கயிறுகள் என்று சொல்லப்படுகிறது) தூக்கப்பட்டு காமம், கோபம் ஆகியவற்றைச் சார்ந்து கொண்டு விஷய இன்பங்களை எல்லாம் நிறைவேற்றிக் கொள்வதற்காக அநியாயமான வழிகளில் எல்லாம் செல்வத்தைச் சம்பாதித்துக் குவிக்கின்ற எண்ணத்துடன் வீணான செயல்களையெல்லாம் செய்கின்றனர். எனவே, அவர்கள் பொருட் செல்வத்தைத் திரட்டுவதற்காக இரவும் பகலும் சமுதாயத்திற்குப் புறம்பாக அடியெடுத்து வைத்து தவறான வழிகளில் முன்னேறிச் செல்கின்றனர். மேலும் கூறுகிறார்.

**இதமத்ய மயா லப்தமிமம் ப்ராப்ஸ்யே மனோரதம்**
**இத மஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்த்தனம் (13)**

அவர்கள், "இன்று நான் இதை அடைந்தேன். மேலும், என்னுடைய மனத்தில் கற்பனை செய்து வைத்துள்ள அனைத்தையும் அடையப் பெறுவேன். என்னிடம் இவ்வளவு பொருட் செல்வம் உள்ளது. மேலும், ஒருநாள் அது இவ்வளவு தூரம் பெருகிவிடும்" என்றெல்லாம் மனத்தில் கணக்குப் போடுகின்றனர்.

**அஸௌ மயா ஹத : சத்ருர்ஹனிஷ்யே சாபரானபி**
**ஈஸ்வரோஅஹ மஹம் போகீ ஸித்தோஅஹம் பலவான்ஸுகீ (14)**

"இந்த எதிரி என்னால் கொல்லப்பட்டு விட்டான். மேலும், மற்ற எதிரிகளையும் நானே கொல்வேன். நானே கடவுள், மற்றும் நானே எல்லாவற்றையும் அனுபவிப்பனும் ஆவேன். நானே எல்லாக் காரியங்களையும் செய்வதில் வல்லவன், பலம் பொருந்தியவன் மற்றும் இன்பம் துய்ப்பவன் ஆவேன்.

**ஆட்யோஅபிஜனவானஸ்மி கோஅன்யோஅஸ்தி ஸத்ருசோ மயா**
**யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞானவிமோஹிதா: (15)**

“நான் பெரிய செல்வந்தனும் பெரிய குடும்பத்தை உடையவனும் ஆவேன். எனக்கு நிகரானவன் எவன் இருக்கிறான்? நான் வேள்வி செய்வேன்; நான் தானம் செய்வேன்; மகிழ்ச்சியாக இருப்பேன்”. இவ்வாறெல்லாம் அவன் அஞ்ஞான வசப்பட்டு சொல்லொணா மோகத்தில் ஆழ்ந்திருக்கிறான். வேள்வி, தானம் எல்லாம் கூடவா அஞ்ஞானம் எனப்படுகிறது? இதுபற்றி இனிவருகின்ற பதினேழாவது சுலோகத்தில் விளக்குகிறார். இவற்றுடன் எல்லாம் அவன் நின்று விடுவதில்லை. மாறாக, பல்வேறு மதிமயக்கங்களின் உச்சியில்தான் எப்போதுமே அவன் இருக்கிறான். இதுபற்றிக் கூறுகிறார். –

**அனேகசித்தவிப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா:**
**ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகேஅசுசௌ (16)**

எண்ணற்றவகையில் மன பேதலிப்பு அடைந்தவர்களாக (மோகத்தின் ஜாலத்தில்) மோக வலையில் சிக்கிக் கொண்டு, புலனின்ப விஷய அனுபவங்களில் அதிகமான பற்றுடைய அந்த அசுர இயல்புடைய மனிதர்கள், புனிதமற்ற களங்கமான நரகத்தில் விழுகிறார்கள். நரகம் என்றால் என்ன? என்பதை ஸ்ரீகிருஷ்ணர் இனிவரும் பகுதியில் தாமே முன்னின்று விளக்குவார்.

**ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்த்தா தனமானமதான்விதா:**
**யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேனாவிதிபூர்வகம் (17)**

தங்களை மட்டுமே உயர்வாகக் கருதுபவர்களாக (தற்புகழ்ச்சி) பொருட்செல்வம் மற்றும் கர்வத்தால் விளையும் திமிர் பிடித்தவர்களாக இருக்கும் அந்த ஆணவம் படைத்த மனிதர்கள் சாஸ்திர விதிகள் எதையும் பின்பற்றாமல் வெறுமனே பெயரளவிற்கு வேள்வியின் மூலமாக கர்வத்துடன் (வெளிப்பகட்டுடன்) யாகம் செய்கின்றனர். அவர்கள் என்ன, ஸ்ரீகிருஷ்ணர் கூறியுள்ள வேள்வியையா செய்கின்றனர்?

‘இல்லை’. ஸ்ரீகிருஷ்ணர் கூறியுள்ள விதிமுறைகள் அனைத்தையும் புறக்கணித்துவிட்டுச் செய்கின்றனர். ஏனெனில், வேள்வியின் செயல் முறைகளை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தாமே முன்னின்று விளக்கியிருக்கிறார். (அத்தியாயம் 4/24–33 மற்றும் 6/10–17)

**அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் ச ஸம்ஷ்ரிதா :**
**மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோஅப்ய ஸூயகா: (18)**

அந்த மற்றவர்களை எல்லாம் இகழ்வாகக் பேசுகின்ற (புறம் பேசுதல்) அகங்காரம், பலம், இறுமாப்பு, காமம், கோபம், பற்று ஆகியவை அனைத்தும் நிரம்பப் பெற்றுள்ள மனிதர்கள் தங்களின் மற்றும் பிறருடைய சரீரத்தில் வீற்றிருக்கும் அந்தர்யாமியும் பரமாத்மாவாகிய என்னிடம் பகைமையுணர்ச்சியையே கொண்டிருக்கின்றனர். சாஸ்திர விதிகளுடன் பரமாத்மாவின் நினைவில் ஈடுபடுவதே உண்மையில் வேள்வி எனப்படுகின்றது. எவரெல்லாம் இந்த விதிகளைத் துறந்து விட்டு வெறுமனே பெயரளவிற்கு வேள்வி செய்கிறார்களோ, வேள்வியின் பெயரால் எதை எதையோ செய்து கொண்டே இருக்கிறார்களோ, அவர்கள் தங்களின் மற்றும் பிறருடைய சரீரத்தில் வீற்றிருக்கும் பரமாத்மாவாகிய என்னிடம் பகைமையுணர்வையே கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இப்படியே பகைமையுணர்வைக் காட்டியபடியே இருந்து கொண்டு கடைசியில் தப்பியும் விடுகிறார்களா! என்ன! இவர்களும் கூடவா தப்பி விடுகின்றனர்? என்று கேட்டால் அதற்கு ஸ்ரீகிருஷ்ணர் 'இல்லை' என்றே பதில் கூறுகிறார்.

**தானஹம் த்விஷத : க்ரூரான்ஸம்ஸாரேஷு நராதமான்**
**க்ஷிபாம்யஜஸ்ரமசுபானாஸுரீஷ்வேவ யோனிஷு (19)**

என்னிடம் பகைமையுணர்வுடன் நடந்து கொள்கின்ற அந்தப் பாவிகளை, கொடூரர்களை, மனிதரில் கீழ்த்தரமானவர்களை, நான் இந்த உலகியலில் நிரந்தரமாக அசுரப் பிறவிகளிலேயே தள்ளுகிறேன். எவரெல்லாம் சாஸ்திர விதிகளை எல்லாம் புறக்கணித்துவிட்டு வேள்வி செய்கிறார்களோ, அவர்களே பாவிகள், அவர்களே மனிதரில் கீழ்த்தரமானவர்கள். அவர்களேயே கொடூரமான செயல்களைப் புரிபவர்கள் என்றும் சொல்கிறார்கள். வேறு கீழ்த்தரமானவர் என்று தனியாக எவரும் இல்லை. "அத்தகைய கீழ்த்தரமானவர்களை நான் நரகத்தில் தள்ளி விடுகிறேன்". என்று முன்பே கூறிவிட்டார். அதையேதான் இங்கேயும் "அவர்களை எப்போதுமே அசுரப் பிறவிகளில் (தாழ்ந்த பிறவிகளில்) தான் தள்ளி விடுகிறேன்" என்கிறார். இதுவே நரகமாகும். சாதாரணமான சிறைவாசமே பயங்கரமாகத் தெரிகிறது. மேலும், இங்கேயோ எப்போதுமே அசுரப் பிறவிகளிலேயே தள்ளப்படுகின்ற தொடர்கதையானது எத்தனை துக்ககரமானது. ஆகவே, தெய்வீகச் செல்வம், அதாவது, தெய்வீகக் குணங்களை எல்லாம் வளர்த்துக் கொள்வதில் முயற்சியுடையவர்களாக இருப்பதுதான் மிகவும் இன்றியமையாததாகும்.

**ஆஸுரீம் யோனிமாபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி**
**மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் (20)**

குந்தியின் மைந்தனே! இந்த மூர்க்க மனிதர்கள் பிறவி பிறவிகளாக அசுரப் பிறவிகளையே அடையப் பெற்று என்னை அடையாமல் முன்பை விடவும்

மிகவும் கீழான கதிகளையே அடைகின்றனர். இதற்குப் பெயரே நரகம் எனப்படுகிறது. நரகத்தின் மூலஊற்றுக் கண் எது? என்பதை இப்போது காணலாம்.

**த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஷன மாத்மன :**
**காம : க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத்தரயம் த்யஜேத் (21)**

காமம், கோபம் மற்றும் லோபம் (பேராசை) ஆகிய மூன்று நுழைவாயில்களை உடையது தான் இந்த நரகம் ஆகும். இவை, ஆன்மாவை அழிப்பதற்கானவை, ஆன்மாவை அதோ கதிக்கு இழுத்துக் கொண்டு செல்பவை. எனவே, இந்த மூன்றையும் துறக்க வேண்டியது மிகவும் அவசியம் ஆகும். இந்த மூன்றிலும் தான் அசுரச் செல்வம் அதாவது, அசுர குணங்கள் யாவும் நிலைபெற்றுள்ளன. இவற்றைத் துறப்பதால் என்ன இலாபம்?

**ஏதைர்விமுக்த : கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர்நர :**
**ஆசரத்யாத்மன : ஷ்ரேயஸ்ததோயாதி பராம் கதிம் (22)**

குந்தியின் மைந்தனே! நரகத்தின் இந்த மூன்று நுழைவாயில்களையும் துறந்து விட்டவன்தான் தனது மேலான நன்மைக்கான ஆன்மீக சாதனையைக் கடைப்பிடித்து வாழ முடியும். அதன்மூலம் அவன் பரமகதி (வீடுபேறு) அதாவது, என்னை வந்து அடைகிறான். இந்த மூன்று விகாரங்களையும் துறந்த பிறகுதான் மனிதன், எதனுடைய இறுதி விளைவானது மேலான, உயர்வான நன்மையைத் தரவல்லதோ அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே செய்ய முடியும்.

**ய : ஷாஸ்திரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத :**
**ந ஸ ஸித்திமவாப்னோதி ந ஸுகம் ந பராம் கதிம் (23)**

எவனொருவன் மேலே கூறப்பட்டுள்ள சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து விட்டுத் (அந்த சாஸ்திரம் வேறு எதுவும் இல்லை **இதி குஹ்யதமம் சாஸ்திரம் 15/20)** – கீதையே தன்னில்தானே முழுமையான சாஸ்திரம் ஆகும். எனவே, ஸ்ரீகிருஷ்ணர் தாமே முன்னின்று விளக்கமாகக் கூறியுள்ள அந்த கீதையின் விதிமுறைகளைப் புறக்கணித்து விட்டு) தன்னிச்சையாக நடந்து கொள்கிறானோ அவன் சித்தியடைவதில்லை, பரம கதியையோ, பரம சுகத்தையோ பெறுவதுமில்லை.

**தஸ்மாச்சாஸ்திரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்த்திதௌ**
**ஜ்ஞாத்வா ஷாஸ்த்ரவிதானோக்தம் கர்ம கர்த்துமிஹார்ஹஸி (24)**

எனவே அர்ஜுனா! உனக்காக, 'எது கடமை? எது கடமை இல்லை?' என்பது பற்றிய விஷயத்தில் 'நான் எதைச் செய்ய வேண்டும்? எதைச் செய்யக் கூடாது?' ஆகியவற்றை அறிந்து கொள்வதற்காக சாஸ்திரம் ஒன்று மட்டுமே

பிரமாணம் (சான்று) ஆகும். அவ்வாறு அறிந்து கொண்டு, சாஸ்திர விதிகளின்படி, இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வது, மட்டுமே உனக்குத் தகுதியானதாகும்.

மூன்றாவது அத்தியாயத்தில் கூட யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், **நியதம் குரு கர்மத்வம்** – "நீ நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்" என்றே வலியுறுத்தியுள்ளார். மேலும், அவர் "வேள்வியின் செயல்முறையே அந்தக் கர்மம் ஆகும். மற்றும், அந்த வேள்வியோ இறை ஆராதனையின் சிறப்பு விதிமுறைகளின் விளக்கமாகும். அதன்படி, மனத்தை முழுவதுமாகக் கட்டுப்படுத்துதல், மற்றும், அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனத்தையும் என்றும் நிலையான பிரம்மத்தில் இரண்டறக் கலந்து மறையச் செய்து விட்டு, அதிலேயே நுழைவு பெற வேண்டும்" என்றும் கூறினார். இங்கேயோ அவர், "காமம், கோபம், லோபம் (பேராசை) ஆகிய மூன்று நுழைவாயில்களைக் கொண்டதுதான் நரகம் எனப்படுவது. இந்த மூன்றையும் துறந்த பிறகுதான், அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை ஆரம்பிக்கவே முடியும். இந்தக் கர்மத்தைப் பற்றி நான் ஏற்கனவே பலமுறை கூறியுள்ளேன். இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் மிகவும் உயர்ந்தது, மேலான நன்மையைப் பெற்றுத் தரவல்ல ஆன்மீகச் செயல்முறைப் பயிற்சியாகும்" என்று கூறினார். புறஉலகில் பல்வேறு வகையான உலகியல் நடவடிக்கைகளில் எவ்வளவு தூரம் மூழ்கிக் கிடக்கின்றனரோ, அவர்களிடம் அவ்வளவு தூரம் அதிகமாக காமம், கோபம், மற்றும் லோபமே (பேராசை) நிரம்பி வழிகிறது. ஆனால், நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் என்பதோ இந்தக் காமம், கோபம் மற்றும் லோபம் (பேராசை) ஆகியவற்றை முழுவதுமாகத் துறந்த பிறகுதான் ஆரம்பிக்கவே முடியவல்லது. அதற்குப் பிறகுதான் கர்மத்திற்குள் நுழைவே கிடைக்கிறது. கர்மத்தை நடைமுறைக்குக் கொண்டு வருகின்ற சாத்தியமும் உள்ளது. எவரெல்லாம் (சாஸ்திரம்) கீதை கூறுகின்ற இந்த விதிமுறைகளைப் புறந்தள்ளிவிட்டுத் தன்னிச்சைப்படிக் கர்மத்தை அனுசரிக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் சுகம், சித்தி, பரமகதி என்று எதுவுமே கிடைப்பதில்லை. இனி, எது கடமை? எது கடமை இல்லை? என்பதையெல்லாம் தீர்மானம் செய்வதற்கு சாஸ்திரம் ஒன்றை மட்டுமே பிரமாணமாக (சான்று) எடுத்துக் கொள்ள வேண்டும். ஆகவே, சாஸ்திர விதிகளைப் பின்பற்றிக் கர்மம் செய்வதுதான் உனக்கும் பொருத்தமானதாகும். ஆகவே கீதையொன்றே அந்த சாஸ்திரமாகும். அத்துடன் –

**முடிவுரை :** –

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தெய்வீகச் செல்வம் (தெய்வீகக் குணங்கள்) பற்றி மிகவும் விரிவான முறையில்

விளக்கியருளினார். அதில், தியானத்தில் உறுதியான நிலைப்பாடு, முழுமையான சமர்ப்பண உணர்வு, ஆழ்மனத் தூய்மை (அகத் தூய்மை, அல்லது உள்ளத் தூய்மை) புலன்களைக் கட்டுப்படுத்துதல், மன அடக்கம், ஆன்ம வடிவத்தை நினைவூட்டுகின்ற படிப்பு, வேள்வியில் ஈடுபடும் முயற்சி, மனத்துடன் சேர்த்து அனைத்துப் புலன்களையும் அடக்குதல், கோபமின்மை, சித்தத்தில் எப்போதும் அமைதி தவழ்தல், போன்று மொத்தம் இருபத்திஆறு இலட்சணங்களை எடுத்துரைத்தார். இவை அனைத்தும் ஒரு சேர வாய்க்கப் பெற்றிருத்தல் என்பது இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு – இறைவன்) ஆன்ம வடிவத்திற்கு வெகு அருகாமை வரையிலும் போய்விட்ட, யோக சாதனையில் மிகவுயர்ந்த நிலையை அடையப் பெற்ற, சாதகரிடம் மட்டுமே காணக் கிடைக்கின்ற சாத்தியம் உள்ளது. இவற்றில் குறிப்பிட்ட சில குணாதிசயங்கள் எல்லோரிடமும் காணப்படலாம்.

அதையடுத்து அவர் அசுரச் செல்வத்தில் மிகவும் முக்கியமாகக் காணப்படும். நான்கு – ஆறு விகாரங்களின் பெயர்களைக் குறிப்பிட்டார். அதாவது, தற்பெருமை, கர்வம், கடுமையான இயல்பு (மன இறுக்கம்), அஞ்ஞானம் முதலானவை இதில் அடங்கும். இறுதியாக அவர், “அர்ஜுனா! தெய்வீகச் செல்வம், அதாவது, தெய்வீகக் குணங்கள் ‘**விமோக்ஷாய**’ முழுமையான ஆன்ம விடுதலையைப் பெற்றுத் தருவதற்கானவை. மேலான நன்மையை அடைவதற்காக வழி அமைப்பவை. மேலும், இந்த அசுரச் செல்வம் அதாவது அசுர குணங்களோ பந்தத்திற்கும் மற்றும் அதோகதிக்கும் காரணமாக அமைபவை ஆகும். அர்ஜுனா! நீ வருத்தப்பட வேண்டாம். ஏனெனில் நீ தெய்வீகச் செல்வம் எனப்படும் தெய்வீகக் குணங்களை அடையப் பெற்றுள்ளாய்” என்று கூறினார்.

இந்தச் செல்வங்கள் அல்லது குணங்கள் எங்கே இருக்கின்றன? என்றொரு கேள்வி எழுந்தது. அதற்கு அவர், “இந்த உலகத்தில் மனிதர்களுடைய சுபாவம் (அகஇயல்பு) இரண்டு விதமாக அமைந்துள்ளன. ஒன்று, தேவதைகள் எனப்படுவது; மற்றொன்று, அசுரர்கள் எனப்படுவது. எப்பொழுது, தெய்வீகச் செல்வம், அதாவது, தெய்வீகக் குணங்கள் வலிமை பெற்று மேலோங்குகின்றனவோ, அப்பொழுது மனிதர்கள் தேவதைகளைப் போன்று ஆகிவிடுகின்றனர். அதேபோல், எப்பொழுது அசுரச் செல்வம், அதாவது, அசுர குணங்கள் வலிமை பெற்று மேலோங்குகின்றனவோ அப்பொழுது அதே மனிதர்கள்தாம், அசுரர்கள் போன்று மாறி விடுகின்றனர். இந்தப் படைப்பில் (சிருஷ்டியில்) மனிதர்களில் இந்த இரண்டு ஜாதிகள் மட்டுமே உள்ளன. அவ்வளவுதான். அவர்கள் எங்கே பிறந்திருந்தாலும் சரி, எவராக இருந்தாலும் சரி.

இதற்குப் பிறகு அவர் அசுர சுபாவம் உடைய மனிதர்களின் இலட்சணங்கள் பற்றி மிகவும் விரிவான முறையில் விளக்கம் அளித்தார். அசுர சுபாவத்தை அடையப் பெற்ற மனிதர்கள் செய்யத் தகுதியுடைய, நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செயல்முறைப்படுத்துவதைப் பற்றி ஒன்றும் அறியாதவர்களாக இருக்கின்றனர். மேலும், அவர்கள் செய்யத்தகாத, கடமை என்று ஏற்றுக் கொள்ளத் தகாத, வீணான செயல்களைச் செய்வதில் இருந்து தங்களை விடுவித்துக் கொள்ள முடியாதவர்களாகவும் இருக்கின்றனர். அவர்கள் மேற்குறிப்பிட்டுள்ள கர்மத்தையே செய்ய முடியாதவர்களாக இருக்கும் போது அவர்களிடம் 'உண்மை' என்ற பெயரில் ஒன்றும் இருப்பதில்லை. அகத்தூய்மை, ஆன்ம சாதனையை அனுசரித்தல் என்று எதுவுமே காணப்படுவதில்லை. அவர்களுடைய எண்ணப்படி, இந்த உலகம் ஆதாரமற்றது, இறைவனால் அன்றி, தானாகவே ஆண், பெண் இனச் சேர்க்கையால் தோன்றியது. ஆகவே, இவ்வுலகம் வெறுமனே இன்பங்களை அனுபவிப்பதற்காக மட்டுமே இருக்கிறது. அதற்கு மேல் என்ன உள்ளது?–இத்தகைய மனநிலை ஸ்ரீகிருஷ்ணருடைய காலத்திலும் இருக்கவே செய்திருக்கிறது. எப்போதுமே இருந்து வருவது. இவற்றை எல்லாம் ஏதோ சார்வாகர்கள் (உலகாயதவாதிகள்) மட்டுமே கூறினார்கள் என்பதன்று பேச்சு. எதுவரைக்கும் மானுடத்தின் ஆழ்மனவோட்டத்தில் இந்த தெய்வீக – அசுர குணங்களின் ஏற்றமும் தாழ்வும் இருந்து கொண்டிருக்குமோ அதுவரை இத்தகைய மனநிலைகளும் இருக்கவே செய்யும். ஸ்ரீகிருஷ்ணர், "அந்த மந்த புத்தியுடைய மனிதர்கள் எல்லோருக்கும் கெடுதல் (மேலான நன்மை ஏற்படுவதைக் கெடுப்பதற்காகவே) விளைவிப்பதற்காகவே இவ்வுலகில் பிறக்கிறார்கள். அவர்கள் என்மூலமாக இந்த எதிரி கொல்லப்பட்டுவிட்டான். மேலும் இன்னொரு எதிரியையும் கொல்வேன் என்றெல்லாம் சொல்லிக் கொள்கின்றனர். இந்த வகையில் அர்ஜுனா! காமம், கோபம், பேராசை ஆகியவற்றைச் சார்ந்துள்ள இத்தகையோர் எதிரிகள் யாரையும் கொல்வது இல்லை. மாறாக, தங்களுடைய மற்றும் பிறருடைய சரீரத்தில் வீற்றிருக்கும் பரமாத்மாவாகிய என்னிடம்தான் பகைமையுணர்வைக் காட்டுகின்றனர்" என்கிறார். அப்படி என்றால் அர்ஜுனன் சபதமெடுத்து ஜயத்ரதனைக் கொன்றிருப்பானா என்ன? ஒருவேளை, அவ்வாறு கொன்றிருந்தால் அவனும் அசுர குணத்தை உடையவன் என்றாகிறது. அந்தப் பரமாத்மாவிடம் பகைமை உணர்வுடன் நடந்து கொண்டான் என்றல்லவா எண்ண வேண்டியுள்ளது. ஆனால், அதற்கு மாறாக, ஸ்ரீகிருஷ்ணரோ, "அர்ஜுனா! நீ தெய்வீகச் செல்வம் என்கின்ற தெய்வீகக் குணங்களை அடையப் பெற்றுள்ளாய். ஆகவே நீ வருத்தப்படாதே" என்று தெள்ளத் தெளிவாக அல்லவா கூறுகிறார். எனவே, இறைவன் உறையுமிடம் அனைவரின் இதய தேசம் என்பது இங்கேயும் தெளிவாகிறது. இறைவன் நம்மையெல்லாம் எப்போதும் பார்த்துக் கொண்டே இருக்கிறார் என்பதை நன்றாக

நினைவில் வைத்திருக்க வேண்டும். ஆகவே, எப்போதும் சாஸ்திரத்தால் நிர்ணயம் செய்யப்பட்டுள்ள செயல்களை மட்டுமே நடைமுறைப்படுத்த வேண்டும். இல்லையென்றால், நிச்சயம் தண்டனை உண்டு.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மறுபடியும், “அசுர சுபாவம் உடைய, கொடூரமான மனிதர்களை நான் மீண்டும் மீண்டும் நரகத்திலேயே தள்ளுகிறேன்” என்று கூறுகிறார். நரகம் என்றால் என்ன? என்ற கேள்விக்குப் பதிலளிக்கும் வகையில் அவர், “மீண்டும் மீண்டும் தாழ்ந்த கீழான பிறவிகளில் தள்ளப்படுவதும், நரகத்தில் தள்ளப்படுவதும் இரண்டும் ஒன்றுதான்” என்றார்.

இதுவே நரகத்தின் உண்மையான உருவம் ஆகும். காமம், கோபம், மற்றும் லோபம் (பேராசை) ஆகியவை இந்த நரகத்தின் மூன்று நுழைவாயில்கள் ஆகும். இந்த மூன்றிலும்தான் அசுரச் செல்வம், அதாவது, அசுரக் குணங்கள் நிலை கொண்டு இருக்கின்றன. இந்த மூன்றையும் துறந்த பிறகுதான், நான் பலமுறை கூறிவந்துள்ள இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை ஆரம்பிக்கவே முடியும். எனவே, கர்மம் எனப்படுவது, காமம், கோபம், மற்றும் லோபம் (பேராசை) ஆகியவற்றைத் துறந்த பிறகுதான் ஆரம்பமாகும் என்பது இதிலிருந்தே தெளிவாகிறது.

உலகியல் காரியங்களில் குறிப்பிடத்தக்க முறையில் சமுதாய அமைப்புகளை நிர்வகித்து வருவதில் எவரெல்லாம் எவ்வளவு தூரத்திற்கு மூழ்கியுள்ளனரோ, அவ்வளவு தூரம் காமம், கோபம் மற்றும் லோபம் (பேராசை) ஆகியவை எல்லாம் அவர்களிடம் அளவிற்கு அதிகமாகவே காணப்படுகிறது. உண்மையில், இந்த மூன்றையும் துறந்த பிறகுதான் மேலான பரம்பொருளுக்குள் நுழைவு பெற்றுத் தரவல்ல நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வதற்கான தகுதியே வருகிறது. எனவேதான், நான் என்ன செய்ய வேண்டும்? என்ன செய்யக்கூடாது?– இந்தக் கடமை என்பது எது? கடமையற்றது எது? என்பதை முடிவு செய்வதில் சாஸ்திரம் ஒன்றை மட்டுமே சான்றாக எடுத்துக் கொள்ள வேண்டும். எந்த சாஸ்திரத்தை எடுத்துக் கொள்வது? என்ற கேள்வி எழலாம். அதற்கு பதில் இதுதான். அதுவே இந்த கீதை என்னும் சாஸ்திரம். **கிமன்யை சாஸ்திர விஸ்தரை:–** (இதைத் தவிர வேறு எந்த சாஸ்திரம் வேண்டியிருக்கிறது?) எனவே, நீ இந்த சாஸ்திரம் மூலமாக நிச்சியக்கப்பட்டுள்ள சிறப்பான கர்மத்தைச் (யக்ஞார்த்த கர்மம் – வேள்வியைச் செயல் முறைப்படுத்துகின்ற கர்மம்) செய்.

இந்த அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் தெய்வீக மற்றும் அசுரச் செல்வங்கள் எனப்படும் இவ்விரண்டு செல்வங்களையும் பற்றி விரிவான முறையில் விளக்கியுள்ளார். அவற்றின் இருப்பிடமாக மனிதனின் இதய தேசத்தைச்

சுட்டிக் காட்டியருளினார். அவற்றினால் விளையும் பலன்களையும் பற்றிக் கூறினார். அத்துடன் –

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே தைவாஸுர ஸம்பத் விபாக யோகோ நாம ஷோடசோத்தயாய :**

இம்முறையில் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுன உரையாடலுமாகிய 'தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்' என்ற பெயருடைய பதினாறாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத்கீதாயா: 'யதார்த்த கீதா' பாஷ்யே 'தைவாஸுர ஸம்பத் விபாக யோகோ' நாம ஷோடசோத்யாய:**

ஹரி : ஓம் தத்ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் 'யதார்த்த கீதை' என்ற உரையில் 'தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்' என்ற பெயருடைய பதினாறாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

**ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :**

# பதினேழாவது அத்தியாயம்

பதினாறாவது அத்தியாயத்தின் முடிவில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "இந்தக் காமம், கோபம் மற்றும் லோபம் (பேராசை) ஆகியவற்றைத் துறந்த பிறகுதான், என்னால் ஏற்கனவே பலமுறை கூறப்பட்டுள்ள இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை ஆரம்பிக்கவே முடியும்" என்று தெளிவுபடுத்திக் கூறினார். நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்யாமல் பரமஸித்தி, பரமசுகம், பரமகதி கிடைப்பதில்லை. ஆகவே, இனி உனக்காக, எது கடமை? எது கடமை இல்லை? மற்றும் எதைச் செய்வது? எதைச் செய்யக்கூடாது? ஆகியவற்றைப் பற்றி அறிந்து கொள்ளும் விஷயத்தில் சாஸ்திரம் ஒன்று மட்டுமே சான்று ஆகிறது. இங்கே, சாஸ்திரம் என்பது வேறு எந்த சாஸ்திரமும் அன்று, மாறாக, **இதி குஹ்யதமம் சாஸ்த்ரமிதம் (15/20)** கீதையே தன்னில்தானே முழுமையானதொரு சாஸ்திரமாகும். வேறு சாஸ்திரங்களும் இருக்கலாம். ஆனால், இங்கே, இந்த கீதை என்னும் சாஸ்திரத்தின் மீது மட்டுமே முழுக் கவனமும் இருக்க வேண்டும், வேறு எதையும் தேடி அலையக் கூடாது. மற்ற இடங்களில் தேடிக்கொண்டிருந்தால் இதே வரிசைக் கிரமம் கிடைக்காது. எனவே, வழி தவறிப் போக வேண்டியிருக்கும்.

இதுபற்றி அர்ஜுனன், "பகவான்! எவரெல்லாம் சாஸ்திர விதியைப் புறக்கணித்து விட்டு, ஆனால், முழு நம்பிக்கையுடன் கூடியவர்களாக, **யஜந்தே** – வேள்வி செய்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் என்ன கதி உண்டாகிறது? சாத்வீகமா? ராஜஸீகமா? அல்லது தாமஸீகமா?" என்றொரு கேள்வியை எழுப்பினான். ஏனெனில் ஏற்கனவே அர்ஜுனன், 'சாத்வீகம், ராஜஸீகம், மற்றும் தாமஸீகம் என்று எதுவாக இருந்தாலும் சரி, எதுவரைக்கும் குணங்கள் உயிருடன் செயல்படும் நிலையில் இருக்கின்றனவோ, அதுவரைக்கும் ஏதேனும் ஒரு பிறவிக்கே அவை காரணமாக அமைகின்றன' என்று ஸ்ரீகிருஷ்ணரின் வாயிலாகக் கேட்டிருக்கிறான். எனவே, இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே அவன் இந்தக் கேள்வியை எழுப்பினான் –

**அர்ஜுன உவாச்ச –**
**யே ஷாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ஷ்ரத்தயான்விதா**
**தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்வமாஹோ ரஜஸ்தம : (1)**

கிருஷ்ணா! எவரெல்லாம் சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து விட்டு ஆழ்ந்த நம்பிக்கையுடன் வேள்வி செய்கிறார்களோ, அவர்களுக்கு என்ன கதி உண்டாகிறது? சாத்வீகமா, ராஜஸீகமா அல்லது தாமஸீகமா? இத்தகைய

வேள்வியில் தேவர்கள், யட்சர்கள், மனிதர் உட்பட சாதாரண உயிரினங்கள் அனைத்தும் அடக்கம்.

**ஸ்ரீ பகவானுவாச்ச**
**த்ரிவிதா பவதி ஸ்ரத்தா தேஹினாம் ஸா ஸ்வபாவஜா**
**ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஷ்ருணு (2)**

இரண்டாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர், "அர்ஜுனா! இந்த யோகத்தில், நிச்சயிக்கப்பட்டுள்ள கிரியை ஒன்று மட்டும்தான். விவேகமற்றவர்களின் புத்தி எண்ணற்ற கிளைகளை உடையதாக இருக்கிறது. எனவேதான், அவர்கள் எண்ணற்ற கிரியைகளை விரிவாக்கம் செய்து கொண்டே போகின்றனர். உள்ளீடற்ற, ஆனால், வெளியலங்கார வார்த்தைகளால் அவற்றை எல்லாம் வெளிப்படுத்தவும் செய்கின்றனர். அவர்களுடைய இந்த அலங்கரிக்கப்பட்ட, பகட்டான வார்த்தைகள் எவருடைய சித்தத்தில் படுகிறதோ, அர்ஜுனா! அவர்களுடைய புத்தியும் சேதமடைந்து விடுகிறதே ஒழிய, வேறு எதையும் பெறுவதில்லை" என்று கூறினார். சரி! அதையேதான் இங்கே திரும்பவும் சொல்லும் விதமாக' "எவரெல்லாம், **சாஸ்திரவிதிமுத்ஸ்ருஜ்ய** – சாஸ்திர விதிகளைப் புறக்கணித்துவிட்டு இறைவழிபாடு செய்கிறார்களோ, அவர்களுடைய நம்பிக்கையும் (சிரத்தை) மூன்று வகைகளாக அமைகின்றன" என்றார்.

இதுபற்றி ஸ்ரீகிருஷ்ணர், "மனிதர்களின் பழக்க வழக்கங்களில் இருந்து தோன்றிய இந்த நம்பிக்கையானது சாத்வீகம், ராஜஸீகம், மற்றும் தாமஸீகம் – ஆகிய மூன்று விதங்களாக அமைந்துள்ளன. அவற்றை நீ என்னிடமிருந்து கேள். மனிதர்களுடைய இதயத்தில் இந்த நம்பிக்கையானது எப்போதும் இருக்கவே செய்கிறது. –

**ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ஷ்ரத்தா பவதி பாரத**
**ஷ்ரத்தாமயோஅயம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ : (3)**

ஹே பாரதா! எல்லா மனிதர்களிடமும் இந்த நம்பிக்கையானது அவர்களுடைய சித்தத்தில் இருந்து எழுகின்ற எண்ண அலைகளுக்கு ஏற்பவே அமைகிறது. மனிதன் நம்பிக்கைமயமானவன். ஆகவே, எவனொருவன் எந்த மாதிரியான நம்பிக்கை எண்ணம் உடையவனோ, அந்த மாதிரியாகவே அவன் ஆகிறான். பெரும்பாலோர், "நான் யார்?" என்று கேட்கின்றனர். இன்னும் பலர், "நான் அந்த ஆன்மா ஆவேன்" என்றும் சொல்லிக் கொள்கின்றனர். ஆனால், உண்மையில் அப்படி ஒன்றும் ஆவதில்லை. இங்கே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரோ, "நம்பிக்கை எவ்விதமோ, அவ்விதமே மனிதன்" என்று கூறுகிறார்.

கீதை யோக தரிசனம் ஆகும். பதஞ்ஜலி மஹரிஷியும் ஒரு யோகிதான். அவர் இயற்றிய யோக தரிசனம் என்ற நூலும் இருக்கிறது. அதில், யோகம் என்றால் என்ன? என்ற கேள்விக்கு அவர், **யோகஸ்ச் சித்த வ்ருத்தி நிரோத :** (1/2) – என்று பதில் அளிக்கிறார். “சித்தத்தில் இருந்து எழுகின்ற எண்ண அலைகளை என்றென்றைக்குமாக எழவிடாமல் முழுமையாகத் தடுத்து நிறுத்தி விடுவதே யோகம் எனப்படும்’. எவரேனும் மிகுந்த முயற்சி செய்து அவ்வாறு நிறுத்தி விட்டால் அதனால் அவருக்குக் கிடைக்கும் இலாபம் என்ன? **ததா த்ரஷ்டு : ஸ்வரூபேவஸ்த்தானம்** (1/3) “அந்தச் சமயத்தில் இந்த சாட்சி ரூபமாக **(த்ருஷ்டா)** இருக்கின்ற ஜீவாத்மாவானது தன்னுடைய உண்மை இயல்பாகிய, என்றும் நிலையாக உள்ள (சாஸ்வதம்) ஆன்ம வடிவத்தில் நிலை பெற்று விடுகின்றது”. அப்படி என்றால், இவ்வாறு நிலைபெறுவதற்கு முன்பு அது நிலையற்று, தூய்மையற்று இருந்ததா என்ன? பதஞ்ஜலி கூறுகிறார் :

**வ்ருத்தி ஸாரூப்ய மிதரத்ர** (1/4) – “மற்ற சமயத்தில் எண்ணங்கள் எவ்விதமாக உருப்பெருகின்றனவோ, அவ்விதமாகவே அந்த சாட்சி ரூபமாக இருக்கும் ஜீவாத்மாவும் **(த்ரஷ்டா)** மாற்றங்களுக்குட்படுகிறது”. இங்கேயும் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், “மனிதன் நம்பிக்கைமயமானவன். நம்பிக்கை அவனிடம் நிரம்பி வழிகிறது. எதன் மீதாவது அவனுக்கு நம்பிக்கை அவசியம் இருக்கவே செய்கிறது. மேலும், அவனது நம்பிக்கை எவ்விதமாக உள்ளதோ, அவ்விதமாகவே அவன் இருக்கிறான். எண்ணம் எவ்விதமோ, அவ்விதமே மனிதன்” என்று கூறுகிறார். இனி மூன்று விதமான நம்பிக்கைகளை வகைப்படுத்தி விளக்குகிறார்.

**யஜந்தே ஸாத்விகா தேவான்யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா :**
**ப்ரேதான் பூத கணாம்ஷ்ச்சான்யே யஜந்தே தாமஸா ஜனா : (4)**

இவர்களில் சாத்வீகமான மனிதர்கள் தெய்வங்களை வழிபடுகின்றனர். ராஜஸீகமான, மனிதர்கள் யட்சர்கள் மற்றும் ராட்சதர்களை வழிபடுகின்றனர். மற்றும் தாமஸீகமான மனிதர்கள் பிரேதங்களையும் பூதங்களையும் (ஜீவராசிகளையும்) வழிபடுகின்றனர். அவர்கள் மிகுந்த ஈடுபாட்டுடன் அயராது இந்த வழிபாடுகளைச் செய்கின்றனர்.

**அஷாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜனா :**
**தம்பாஅஹங்காரஸம்யுக்தா : காமராகபலான்விதா: (5)**

அந்த மனிதர்கள் சாஸ்திர விதிகளுக்குப் புறம்பாகக் கடுமையான கற்பனை விதிமுறைகளை உருவாக்கிக் கொண்டு, (கற்பனையில்

உருவாக்கப்பட்ட விதிமுறைகள்) தவங்களை மேற்கொள்கின்றனர். திமிர் மற்றும் அகங்காரத்துடன் கூடிய ஆசைகள், பற்றுதல் ஆகியவற்றின் பலத்தால் கட்டுண்டு கிடக்கின்றனர்.

**கர்ஷயந்த சரீரஸ்த்தம் பூதக்ராமமசேதஸ :**
**மாம் சைவாந்த சரீரஸ்த்தம் தான்வித்தயாஸுரநிஷ்சயான் (6)**

அவர்கள் உடலில் நிலைத்திருக்கும் பூத சமுதாயத்தையும், ஆழ்மனத்தில் நிலைத்திருக்கும் அந்தர்யாமியாகிய என்னையும் துன்புறுத்துகிறார்கள். அதாவது, பலவீனமடையச் செய்கிறார்கள். ஆன்மாவானது இயற்கையின் விரிசல்களில் தவறி விழுந்து, விகாரங்களால் (புலன் நுகர்வு ஆசைகளால்) பலவீனமடைகிறது; அதுவே வேள்வி சாதனைகளைச் செய்வதன் மூலம் வல்லமை பெறுகிறது. அந்த அஞ்ஞானிகளை எல்லாம் (ஆன்ம விழிப்புணர்வு அற்றவர்களை) நிச்சயமாகவே அசுரர்கள் என்று நீயறிந்து கொள். அதாவது, அவர்கள் அனைவருமே அசுரர்கள்தான். கேள்வி நிறைவடைகிறது.

சாஸ்திர விதிகளைப் புறக்கணித்துவிட்டு இறைவழிபாடு செய்பவர்களில் சாத்வீகமான மனிதர்கள் தெய்வங்களையும், ராஜஸீகமான மனிதர்கள் யட்சர், ராட்சதர்களையும், மற்றும் தாமஸீகமான மனிதர்கள் பூதப் பிரேதங்களையும் (இறந்தவர்களை) வழிபடுகின்றனர். அவர்கள் வெறுமனே வழிபடுவது மட்டுமல்லாமல், கடுமையான தவங்களையும் மேற்கொள்கின்றனர். ஆனால், அர்ஜுனா! உடலில் நிலைத்திருக்கும் பூத சமுதாயத்தையும் மற்றும் ஆழ்மனத்தில் நிலைத்திருக்கும் அந்தர்யாமி பரமாத்மாவாகிய என்னையும் துன்புறுத்துகிறார்கள். என்னிடமிருந்து வெகுதூரம் விலகிச் செல்கிறார்களே தவிர, என்னை வழிபடுவது இல்லை. அத்தகையோர் அனைவரையுமே 'அசுரர்கள்' என்றே அறிந்து கொள். அதாவது, தேவதைகளை வழிபடுபவர்களும் கூட அசுரர்கள்தாம். இதற்கும் மேலாகச் சொல்வதற்கு வேறென்ன இருக்கிறது? ஆகவே, நாமெல்லோரும் எவருடைய அம்சமோ அந்த மூலப் பொருளாகிய பரமபிதா பரமாத்மாவாகிய அந்த ஒருவரையே இறைவழிபாடு செய்ய வேண்டும். இதையே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் திரும்பத் திரும்ப வலியுறுத்திக் கூறுகிறார்.

**ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய:**
**யஜ்ஞஸ்தபஸ்ததா தானம் தேஷாம் பேதமிமம் ஷ்ருணு (7)**

அர்ஜுனா! எவ்விதமாக நம்பிக்கையானது மூன்று வகைப்படுமோ, அவ்விதமாகவே எல்லோருக்கும் அவரவருடைய குணங்களுக்கேற்ப உணவும் மூன்று விதங்களில் விருப்பமாக அமைகிறது. அதேபோன்றுதான், வேள்வி,

தவம் மற்றும் தானம் ஆகியவையும்கூட மும் மூன்று வகைப்படும். அவற்றிற்கு இடையில் உள்ள வேறுபாட்டை நீ என்னிடமிருந்து கேள். முதலில் வருவது ஆகாரம் அதாவது உணவு பற்றிய வகைப்பாடு.

**ஆயு.ஸத்வபலாரோக்ய ஸுகப்ரீதிவிவர்த்தனா:**
**ரஸ்யா: ஸ்நிக்த்தா: ஸ்த்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விகப்ப்ரியா (8)**

ஆயுள், அறிவு, பலம், ஆரோக்கியம், சுகம் மற்றும் அன்பு ஆகியவற்றை வளர்ப்பவையாகவும் ரஸமுள்ளவையாகவும் பசையுள்ளவையாகவும் மற்றும் உடலில் தங்குபவையாகவும் இருப்பதுடன் இயல்பாகவே இதயத்திற்குப் பிரியமானவையாகவும் இருக்கின்ற உணவுப் பதார்த்தங்கள் (உணவுப் பொருட்கள்) சாத்வீகமான மனிதர்களுக்குப் பிரியமானவை ஆகும்.

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், இதயத்திற்கு இயல்பாகவே பிடித்திருப்பதாகவும் பலம், ஆரோக்கியம், புத்தி, மற்றும் ஆயுள் ஆகியவற்றை வளர்ப்பதாகவும் அமைகின்ற உணவுப் பொருட்களே 'சாத்வீகமானவை' ஆகும். எந்த உணவுப் பொருட்கள் சாத்வீகமானதோ அவைகளே சாத்வீக மனிதர்களுக்குப் பிரியமானவை ஆகும். இதிலிருந்து, எந்தவொரு உணவுப் பொருளும் தன்னில் சாத்வீகம், ராஜஸீகம் அல்லது தாமஸீகம் ஆகிய தன்மைகளைக் கொண்டிருப்பதில்லை என்பது தெளிவாகிறது. அவற்றை உபயோகிக்கின்ற முறைகள் சாத்வீகமாகவோ, ராஜஸீகமாகவோ, அல்லது, தாமஸீகமாகவோ அமைகின்றன. எனவே, பால் சாத்வீகமானது என்பதும் சரியன்று; அதேபோல், வெங்காயம் ராஜஸீகமானது மற்றும் வெள்ளைப் பூண்டு தாமஸீகமானது என்பதும் சரியன்று. பலம், புத்தி, ஆரோக்கியம் ஆகியவற்றை வளர்க்கச் செய்வது, இதயத்திற்கு இயல்பாகவே பிடித்திருப்பது எது? என்பதே பிரச்சினை. உலகம் முழுவதும் மனிதர்கள் தமக்கென்று கொண்டுள்ள வெவ்வேறு சுபாவம் (பிரகிருதி), வேறுபட்ட சுற்றுப்புறங்கள் மற்றும் மாறுபட்ட சூழ்நிலைகளுக்குச் சாதகமாக அமைகின்ற பல்வேறு வகையான உணவுப் பொருட்களை இயல்பாகவே விரும்புகின்றனர். உதாரணமாக, வங்காளிகளுக்கும் தென்னிந்தியர்களுக்கும் அரிசி விருப்பமான உணவுப் பொருளாகும். பஞ்சாபியர்கள் கோதுமையால் ஆக்கப்பட்ட சப்பாத்தி, ரொட்டி ஆகியவற்றை விரும்பிச் சாப்பிடுகிறார்கள். அரேபியர்களுக்குச் செம்மறி ஆட்டுக்கறி பிரியமென்றால், சீனர்களுக்குத் தவளைக் கறி என்றால் கொள்ளை ஆசை. துருவப் பிரதேசங்களைப் போன்று பனிபடர்ந்த பிரதேசங்களில் வாழ்பவர்களுக்கு மாமிசம் உண்ணாமல் வாழவே முடியாது என்றொரு சூழ்நிலை உள்ளது. ரஷ்யா, மங்கோலியாவில் வாழும் ஆதிவாசிகள் உணவில் குதிரையின் மாமிசத்தையும் சேர்த்துக் கொள்கின்றனர். ஐரோப்பியர்களோ பசு, பன்றி இரண்டையும் உண்கின்றனர். அதற்குப் பிறகும்கூட, கல்வியறிவிலும் அறிவுக்

கூர்மையிலும் மற்றும் பொருளாதார முன்னேற்றத்திலும் அமெரிக்கர்களும் ஐரோப்பியர்களும்தான் உலகிலேயே முதலிடம் வகிப்பவர்களாகத் திகழ்கின்றனர்.

கீதையைப் பொறுத்தவரையில் ரஸமுள்ள, பசையுள்ள மற்றும் உடலில் தங்குகின்ற உணவுப் பொருட்கள் சாத்வீகமானவை ஆகும். நீண்ட ஆயுள், அனுகூலம், பலம் – புத்தி ஆகியவற்றை வளர்க்கின்ற, ஆரோக்கிய வளம் தருகின்ற உணவுப் பொருட்கள் சாத்வீகமானவை. இதயத்திற்கு இயல்பாகவே பிடித்துள்ள உணவுப் பொருட்கள் சாத்வீகமானவை. ஆகவே, எந்தவொரு உணவுப் பொருளையும் உயர்ந்தது – தாழ்ந்தது என்று சுட்டிக் காட்ட முடியாது. நிலைமை, சுற்றுச் சூழ்நிலை, மற்றும் தேசம், காலம் ஆகியவற்றை அனுசரித்து, எந்த உணவுப் பொருள் இயல்பாகவே பிரியமானதாக அமைகிறதோ, அத்துடன் உயிர்சத்தும் நிரம்பியுள்ளதோ அதுவே சாத்வீகமானது ஆகும். எந்தப் பொருளும் சாத்வீகமாகவோ, ராஜஸீகமாகவோ, தாமஸீகமாகவோ இருப்பதில்லை. அவற்றை உபயோகிக்கும் முறைகள்தான் சாத்வீகம், ராஜஸீகம், தாமஸீகமாக அமைகின்றன.

இந்த, ஆன்மீக சாதனையை அனுகூலமாக்க எவனொருவன் வீடு, வாசல், சுற்றத்தார் அனைவரையும் தியாகம் செய்து விட்டு முழுமையான இறை ஆராதனையில் மூழ்கியிருக்கிறானோ, சன்னியாச ஆசிரமத்தில் வாழ்கிறானோ, அவனுக்கு மாமிசம், குடிப்பழக்கம் ஆகியவை தடை செய்யப்பட்டுள்ளன. ஏனெனில், இந்தப் பொருட்கள் எல்லாம் ஆன்மீகப் பாதைக்கு முரண்பட்ட, விபரீதமான மனவுணர்வுகளை உண்டாக்குகின்றன என்று அனுபவப்பூர்வமாகக் கண்டறியப்பட்டுள்ளது. ஆகவே, இத்தகைய பொருட்களை உபயோகிப்பதால் சாதனைப் பாதையில் இருந்து வழிதவறிப் போவதற்கு அதிகமான வாய்ப்புகள் இருக்கின்றன. எவனொருவன் யாருமில்லாத, தன்னந்தனியான இடங்களில் வாழும் விருப்பமுடைய விரக்தனோ, அவனுக்கென்று யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஆறாவது அத்தியாயத்தில் உணவு முறைகளில் கடைப்பிடிப்பதற்கான விதிமுறைகளை வகுத்து, "**யுக்தாஹார விஹாரஸ்ய'** (உணவு மற்றும் உடல் உழைப்பு இரண்டிலும் மிதமான போக்கைக் கடைப்பிடித்தல்) அவற்றையே நன்றாக நினைவில் வைத்துக் கொண்டு பின்பற்றி நடக்க வேண்டும்" என்று கூறியுள்ளார். இறைவழிபாட்டில் ஈடுபடுவதற்கு உதவியாக இருக்குமளவிற்கு மட்டுமே உணவை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹின:**
**ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா துக்க ஷோகாமயப்ரதா : (9)**

கசப்பானவையும் புளிப்பானவையும் அதிகமான உப்புத்தன்மை உள்ளவையும் மிகவும் சூடான, காரமான, வறட்சியுடன் கூடிய, எரிச்சல்

உண்டாக்கக் கூடிய, துக்கம், கவலை, மற்றும் வியாதியை உண்டு பண்ணக் கூடிய ஆகாரம் (உணவு) ராஜஸீகமான மனிதர்களுக்குப் பிரியமானவை ஆகும்.

**யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத்**
**உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம் தாமஸப்ரியம் (10)**

நாள்பட்டதும் **'கதரஸம்'** – ரஸமற்றதும் துர்நாற்றமுடையதும், பழையதாகிப்போனதும், எச்சிலாக்கப்பட்டதும் மற்றும் தூய்மையற்றதுமான உணவு தாமஸீக மனிதர்களுக்குப் பிரியமானவை ஆகும். கேள்வி நிறைவடைகிறது. அடுத்துவருவது 'வேள்வி' –

**அஃபலாகாங்க்ஷிபிர்யஜ்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே**
**யஷ்டவ்யமேவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக : (11)**

எந்த வேள்வியானது **'விதி த்ருஷ்ட'**– சாஸ்திர விதிகளின் மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ளதோ அது. (ஏற்கனவே மூன்றாவது அத்தியாயத்தில் 'வேள்வி' என்ற சொல் மட்டுமே உச்சரிக்கப்பட்டது. நான்காவது அத்தியாயத்தில் 'வேள்வி என்றால் என்ன?' என்பதை முழுமையாக விளக்கும்போது, "பெரும்பாலான யோகிகள் பிராணனை அபானனிலும் அபானனை பிராணனிலும் வேள்வி செய்கின்றனர். பிராணன் – அபானன் ஆகியவற்றின் போக்கைக் கட்டுப்படுத்தி, பிராணன்களின் போக்கினைச் சீராக்கி, உறுதிப்படுத்துகின்றனர். புலன்கள், மனம் ஆகியவற்றைக் கட்டுப்பாடு என்னும் அக்கினியில் (ஸம்யமக்னி) வேள்வி செய்கின்றனர். இம்முறையில், வேள்வியின் பதிநான்கு படிநிலைகளைப் பற்றிக் கூறப்பட்டு உள்ளது. அவை அனைத்தும் பிரம்மம் வரைக்கும் சாதகனைக் கொண்டு போய்ச் சேர்க்கின்ற ஒரே செயலின் (கிரியை) உயர்ந்த, தாழ்ந்த நிலைகளாகும். சுருக்கமாகச் சொன்னால், வேள்வி என்பது, ஆன்மீகச் சிந்தனையின் செயல்முறைப்பாடு பற்றிய விளக்கமாகும். வேள்வியின் இறுதி விளைவானது (பரிணாமம்) 'என்றென்றும் நிலையான, பழைமையான ஸனாதன பிரம்மத்திற்குள் நுழைவு பெறுதல்' ஆகும். அதைப் பற்றிய விதிமுறைகள் அனைத்தும் இந்த சாஸ்திரத்தின் மூலமாகக் கட்டமைக்கப்பட்டுள்ளன).

அதே சாஸ்திர விதிமுறைகள் பற்றித்தான் திரும்பவும் வலியுறுத்திக் கூறும் வகையில், "அர்ஜுனா! சாஸ்திர விதிகளால் நிச்சயிக்கப்பட்டுள்ளதும், எதைச் செய்வது மட்டுமே கடமையென்று ஏற்றுக் கொள்ளப்படுகின்றதோ, மற்றும் மனத்தை முழுமையாகக் கட்டுப்படுத்துகின்றதும், பலனைச் சிறிதும் விரும்பாத மனிதர்கள் மூலமாகச் செய்யப்படுகின்றதுமான, அந்த வேள்வியே சாத்வீகமானது" என்கிறார்.

**அபிஸந்தாய து ஃபலம் தம்பார்த்தமபி சைவ யத்**
**இஜ்யதே பரதஸ்ரேஷ்ட்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் (12)**

அர்ஜூனா! எந்த வேள்வியானது, ஆடம்பரத்திற்காகவும் பலனை அடையும் நோக்கத்தை ஏற்படுத்திக் கொண்டும் செய்யப்படுகிறதோ, அதை ராஜஸீகமானது என்று அறிந்து கொள். இந்த வேள்வியைச் செய்பவன் சாஸ்திர விதிகளை அறிவான். ஆனால், ஆடம்பரத்திற்காகவோ, பலனை அடையும் நோக்கத்தை ஏற்படுத்திக் கொண்டோ, 'நாம் விரும்பிய பொருள் கிடைக்குமா? அனைவரும் பார்க்குமாறு வேள்வி செய்வோம், அதைப் பார்த்து எல்லோரும் பாராட்டுவார்கள்' என்றெல்லாம் எண்ணிக் கொண்டு வேள்வி செய்பவன் உண்மையில் ராஜஸீகமானவன். இனி, தாமஸீக வேள்வியின் முழுமையான வடிவத்தைக் கூறுகிறார்.

**விதிஹீனம்ஸ்ருஷ்ட்டான்னம் மந்த்ரஹீன மதக்ஷிணம்**
**ஷ்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே (13)**

எந்த வேள்வியானது சாஸ்திர விதிகளுக்குப் புறம்பானதாக இருக்கிறதோ, அன்னத்தைப் (பரமாத்மா) படைக்கின்ற திறமையற்று உள்ளதோ, மனத்தை அகத்தின் அடியாழத்தில் நிலைநிறுத்துகின்ற திறனற்று இருக்கிறதோ **'தக்ஷிணா'** – அதாவது, முழுமையான சமர்ப்பண உணர்வு இல்லாமல் கடைப்பிடிக்கப்படுகிறதோ மற்றும் நம்பிக்கையின்றி செய்யப்படுகின்ற அந்த வேள்வி 'தாமஸீகமான வேள்வி' என்றழைக்கப்படுகிறது. அத்தகைய வேள்வியைச் செய்பவன் உண்மையான வேள்வியைப் பற்றி ஒன்றுமே அறியாதவன் ஆவான். அடுத்து வருவது 'தவம்'.

**தேவத்விஜகுருப்ராஜ்ஞபூஜனம் ஷௌசமார்ஜவம்**
**ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே(14)**

பரம தெய்வமாகிய பரமாத்மா, **'த்வைதம்'** (இருமைகள்) எனப்படுகின்ற 'நாம் வேறு; இறைவன் வேறு' என்ற நிலையை வெற்றி கொண்டவராகிய அந்தணர், **(த்விஜர்),** ஸத்குரு மற்றும் ஞானிகளின் வழிபாடு, புனிதம், எளிமை, பிரம்மச்சரியம் மற்றும் அஹிம்ஸை ஆகியவை, 'உடல் சம்பந்தப்பட்ட தவம்' என்றழைக்கப்படுகிறது. உடலானது எப்போதுமே புலனின்ப நுகர்ச்சிகளை (வாசனை) நோக்கியே ஓடுகிறது. எனவே அதனை மேலே கூறப்பட்டுள்ள ஆழ் மனத்தின் ஆன்மீக எண்ணவோட்டங்களுக்கு இணைவாக அடக்குவதே 'உடலால் மேற்கொள்கின்ற தவம்' எனப்படும்.

**அனுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத்**
**ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே (15)**

மனத்தைப் புண்படுத்தாத, பிரியமான, நன்மை பயக்கவல்ல, மற்றும், உண்மையான வாக்கு, அத்துடன் பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்ல சாஸ்திர சிந்தனைப் பயிற்சி, இறைநாம ஜபம் இவை அனைத்தும் 'வாக்கு சம்பந்தப்பட்ட தவம்' எனப்படும். நமது பேச்சு புலன் இன்ப நாட்டமுடைய எண்ணங்களையே எப்போதும் வெளிப்படுத்திக் கொண்டு இருக்கின்றன. எனவே அதனை அவற்றிலிருந்து விடுவித்து பரம தத்துவ பரமாத்மாவின் திசைக்குத் திருப்புவதே 'வாக்கினால் மேற்கொள்ளப்படும் தவம்' எனப்படுகிறது. இனி, 'மனம் சம்பந்தப்பட்ட தவம்' என்றால் என்ன? என்று பார்க்கலாம்.

**மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌனமாத்மவிநிக்ரஹ:**
**பாவஸம்ஷுத்திரித்யேதத்தபோ மானஸமுச்யதே (16)**

மகிழ்ச்சியான மனநிலை, இனிமையான உணர்வு, மௌனம், அதாவது, இஷ்ட தெய்வத்தை (ஸத்குரு, இறைவன்) விட்டு வேறு எதைப் பற்றிய நினைப்பும் இல்லாதிருத்தல், எல்லா வகையிலும் ஆழ்மனதைப் புனிதமாக வைத்திருத்தல் (அகத்தூய்மை) இவை அனைத்தும் 'மனம் சம்பந்தப்பட்ட தவம்' எனப்படும். அதாவது, 'மனத்தால் மேற்கொள்ளப்படும் தவம்' எனப்படும். மேலே கூறப்பட்டுள்ள உடல், வாக்கு, மனம் ஆகிய மூன்றினாலும் மேற்கொள்ளப்படுகின்ற தவங்களை மொத்தமாகச் சேர்த்து 'சாத்வீகமான தவம்' எனப்படுகிறது.

**ஷ்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத்த்ரிவிதம் நரை:**
**அஃபலாகாங்க்ஷிபிர்யுக்தை : ஸாத்விகம் பரிசக்ஷதே (17)**

பலனை விரும்பாமல், அதாவது, (பற்றற்ற) நிஷ்காம கர்மத்துடன் கூடிய மனிதர்கள் மூலமாக, மேலான நம்பிக்கையுணர்வுடன் செய்யப்படுகின்ற மேலே கூறப்பட்டுள்ள மூன்று தவங்களையும் மொத்தமாகச் சேர்த்து 'சாத்வீகமான தவம்' எனப்படுகிறது. அடுத்து, 'ராஜஸீகமான தவம் என்றால் என்ன?' என்பதைப் பார்க்கலாம்.

**ஸத்காரமானபூஜார்த்தம் தபோ தம்பேன சைவ யத்**
**க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்ருவம் (18)**

எத்தகைய தவமானது பாராட்டு, புகழ் மற்றும் பூஜைக்காகவும் அல்லது வெறுமனே போலித்தனமாகவும் செய்யப்படுகிறதோ அந்த உறுதியற்ற மற்றும் சஞ்சலமான பலனையுடைய தவம் ராஜஸீகமானது என்று கூறப்படுகிறது.

**மூடக்ராஹேணாத்மனோ யத்பீடயா க்ரியதே தப:**
**பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத்தாமஸமுதாஹ்ருதம் (19)**

எத்தகைய தவமானது அறிவற்றதாகவும், பிடிவாதமாகவும் மனம், வாக்கு மற்றும் உடலைத் துன்புறுத்துவதாகவும், அத்துடன் சேர்த்து மற்றவர்களுக்குக் கெடுதலை உண்டாக்குவதற்காவும், பழி வாங்கும் உணர்வுடனும் செய்யப்படுகிறதோ, அத்தகைய தவம் 'தாமஸீகமான தவம்' எனப்படுகிறது.

இந்த முறையில், சாத்வீகமான தவத்தில், உடல், மனம், மற்றும் வாக்கு ஆகியவற்றை இஷ்ட தெய்வத்தின் (சத்குரு—இறைவன்) விருப்பத்திற்கு ஏற்ப வழிநடத்த வேண்டும். ராஜஸீகமான தவத்திலும் மேற்கொள்ளப்படுகின்ற செயல் என்னவோ அதேதான். ஆனால், தற்பெருமை, மரியாதை முதலான ஆசைகளுடன் செய்யப்படுகிறது, அவ்வளவுதான். பெரும்பாலான மகாத்மாக்கள் கூட, வீடு, வாசலைத் துறந்து ஆன்மீகப் பாதையைத் தேர்ந்தெடுத்த பிறகும் இந்த விகாரங்களுக்குப் (தவிர்க்கப்பட வேண்டிய தீய எண்ணங்கள்) பலியாகி விடுகின்றனர். மேலும், மூன்றாவது வகையான தவமோ சாஸ்திர விதிமுறைகளுக்கு முற்றிலும் புறம்பாகச் செய்யப்படுகின்றது. அது, மற்றவர்களுக்குத் தீங்கிழைக்கும் கண்ணோட்டத்துடன் செய்யப்படுகின்றது. அடுத்து வருவது 'தானம்'.

**தாதவ்யமிதி யத்தானம் தீயதேஅனுபகாரிணே**
**தேஷே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் (20)**

'தானம் அளிப்பதே கடமையாகும்'— இத்தகைய உணர்வுடன் உரிய இடத்தில், உரிய காலத்தில் மற்றும் தகுதியுடையவருக்கு, பதிலுக்கு எந்த பிரதி உபகாரத்தையும், உதவியையும் எதிர்பார்க்காத உணர்வுடன் அளிக்கப்படுகிறதோ, அந்த தானமே 'சாத்வீகமான தானம்' எனப்படுகிறது.

**யத்து ப்ரத்யுபகாரார்த்தம் ஃபலமுத்திஷ்ய வா புன:**
**தீயதே ச பரிக்லிஷ்ட்டம் தத்தானம் ராஜஸம் ஸம்ருதம் (21)**

எத்தகைய தானம் மனவருத்தத்துடனும் (கொடுப்பதற்கு மனமின்றி, ஆனால் கொடுக்க வேண்டிய கட்டாயத்தின் பேரில்) கைம்மாறு கருதுகின்ற உணர்வுடனும் அதாவது, 'இதைக் கொடுத்தால் இது கிடைக்கும்' என்ற எண்ணத்துடனோ அல்லது பலனை வேண்டிக் கொண்டோ அளிக்கப்படுகிறதோ, அத்தகைய தானம் 'ராஜஸீகமான தானம்' எனப்படுகிறது.

**அதேசகாலே யத்தானமபாத்ரேப்யஷ்ச்ச தீயதே**
**அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதாஹ்ருதம் (22)**

எத்தகைய தானமானது மரியாதை இன்றியோ அல்லது அலட்சியமான முறையில், வேண்டாவெறுப்புடன் பொருத்தமற்ற இடம், மற்றும் காலத்தில்,

தகுதியில்லாதவர்களுக்கு அளிக்கப்படுகிறதோ அத்தகைய தானம் ‘தாமஸீகமான தானம்’ எனப்படுகிறது. ‘பூஜ்ய ஸ்ரீ பரமஹம்ஸ பரமானந்த சுவாமிகள்’, “தகுதியற்றவனுக்கு தானம் அளிப்பவன் இழப்பை அடைகிறான்” என்று கூறுவார்கள். சரியாக, இதேபோன்றுதான் ஸ்ரீகிருஷ்ணரும், “தானம் அளிப்பது கடமை ஆகும். காலம், இடம், தகுதியுடையவர் வாய்த்தபிறகு பதிலுக்கு எந்த உதவியையும் எதிர்பார்க்காமல் பெருந்தன்மையுடன் அளிக்கப்படுகின்ற தானமே சாத்வீகமானது. ஆனால், கொடுப்பதற்கு மனமின்றி, மிகுந்த மனவருத்தத்துடன், கைம்மாறு எதிர்பார்த்து, அளிக்கப்படுகின்ற தானமோ ராஜஸீகமானது. மேலும், மரியாதையின்றி, வேண்டா வெறுப்புடன், பொருத்தமற்ற இடம், காலம் மற்றும் தகுதியற்றவனுக்கு அளிக்கப்படுகின்ற தானம் ‘தாமஸீகமானது’ என்கிறார். ஆனால், ஒருவகையில் அதுவும் தானம் என்றுதான் கருதப்படுகிறது. இதை விடவும் எவனொருவன் தன்னுடைய உடல், வீடு முதலான அனைத்துவிதமான பற்றுணர்வுகளையும் துறந்து இஷ்ட தெய்வத்திடமே (ஸத்குரு, இறைவன்) சமர்ப்பித்து அவரையே நம்பி இருக்கிறானோ! அவனுக்குத் தானம் பற்றிய விதிமுறைகள் இன்னும் உயர்வான முறையில் கூறப்படுகிறது. அதுவே, முழுமையான சமர்ப்பண உணர்வு, அனைத்து விதமான புலனின்ப நுகர்ச்சிகளில் (வாசனைகள்) இருந்து மனத்தை விடுவித்து இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு—இறைவன்) சரண கமலங்களில் அந்த ‘மனத்தைச் சமர்ப்பித்தல்’ என்பதாகும். இதைத்தான் பகவான் ஸ்ரீகிருஷ்ணரும் **‘மய்யேவ மன ஆதத்ஸ்வ’**— என்று கூறுகிறார். எனவே, தானம் அளிப்பது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். அடுத்து வருவது, ஓம், தத் மற்றும் ஸத் என்றால் என்ன? மற்றும் அவற்றின் விளக்கம் யாது?

**ஓம் தத்ஸதிதி நிர்த்தேஶோ ப்ரஹ்மணஸ்த்ரிவித : ஸ்ம்ருத:**
**ப்ராஹ்மணாஸ்தேன வேதாஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா: புரா (23)**

அர்ஜுனா! ஓம், தத் மற்றும் ஸத் — என்று மூன்றுவிதமான நாமங்கள் (பெயர்கள்) **‘ப்ரஹ்மண:’ நிர்தேச : ஸ்ம்ருத:’** — பிரம்மத்தைச் சுட்டிப் பொருள் உணர்த்துகின்றன; நினைவூட்டுகின்றன; குறிப்பால் உணர்த்துகின்றன; மேலும், அவை பிரம்மத்தை அறிமுகம் செய்து வைக்கின்ற இறைச் சொற்கள் ஆகும். அவற்றினால் **‘புரா’** — ஆரம்பத்தில், பிராம்மணர், வேதம் மற்றும் வேள்வி முதலானவை உருவாக்கப்பட்டன. அதாவது, பிராம்மணர், வேதம், மற்றும் வேள்வி ஆகியவை ‘ஓம்’ என்னும் பிரணவத்தில் இருந்தே பிறக்கின்றன. இதுவொரு யோகப் பிறப்பாகும். ‘ஓம்’ என்னும் திருநாமத்தைத் தொடர்ச்சியாக ஆன்ம சிந்தனையில் பழகி வந்தால் மட்டுமே இவற்றின் உற்பத்தி சாத்தியமாகிறதே தவிர, வேறு வழி ஒன்றுமில்லை.

**தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதானதப:க்ரியா:**
**ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினாம் (24)**

ஆகவே, பிரம்மத்தை அறிய விரும்புவோர், சாஸ்திர விதிமுறைகளின்படி, நிச்சயிக்கப்பட்டுள்ள வேள்வி, தானம் மற்றும் தவம் ஆகிய செயல்கள் மூலம் நிரந்தரமாக 'ஓம்' என்னும் இறைநாமத்தைத் தொடர்ந்து உச்சரித்து, அதன் மூலமாக, அந்த பிரம்மத்தின் நினைவு கிடைக்கட்டும் என்றெண்ணி ஈடுபடுகின்றனர். அடுத்து, 'தத்' என்ற சொல்லின் உபயோக முறையை விளக்குகிறார்.

**ததித்யனபிஸந்தாய ஃபலம் யஜ்ஞதபக்ரியா:**
**தானக்ரியாஷ்ஸ்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி : (25)**

**'தத்'** – அதாவது, 'அதுவே (பரமாத்மா) நீக்கமற எங்கும் நிறைந்தது' என்ற உணர்வுடன் பலனை விரும்பாமல், சாஸ்திரத்தின் மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள வேள்வியின் பல்வேறு வகைகள், தவம் மற்றும் தானம் ஆகிய செயல்கள் மேலான நன்மையாகிய பரமாத்மாவை அடையும் விருப்பமுடையவர்கள் வாயிலாகச் செய்யப்படுகின்றன. **'தத்'** – என்ற சொல், 'பரமாத்மாவிடம் சமர்ப்பண உணர்வைப் பெற்றிருத்தல்' என்பதைக் குறிப்பால் உணர்த்துவதாகும். அதாவது, 'ஓம்' என்ற திருநாமம்தான் ஜபிப்பதற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். 'வேள்வி, தானம் மற்றும் தவம் முதலான செயல்களை அந்தப் பரம்பொருளாகிய இஷ்ட தெய்வத்திடம் (ஸத்குரு – இறைவன்) மட்டுமே சமர்ப்பண உணர்வுடன் சார்ந்து நிறைவேற்றுங்கள்' என்பதே 'தத்' என்ற சொல்லின் உபயோக முறையாகும். அடுத்து, 'ஸத்' என்ற சொல் எவ்விடத்தில் உபயோகிக்கப்படுகிறது என்பதைக் கூறுகிறார்.

**ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத்ப்ரயுஜ்யதே**
**ப்ரஷஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே (26)**

அடுத்து வருவது **'ஸத்'** – யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே 'ஸத் என்றால் என்ன?' என்பதை விளக்கியுள்ளார். கீதையின் ஆரம்பத்திலேயே அர்ஜுனன், "குலதர்மமே என்றும் நிலையானது, மாறாதது, சத்தியமானது!" என்றெல்லாம் கேள்விகளை முன்னிறுத்தியபோது ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! உனக்கு இந்த அஞ்ஞானம் எங்கிருந்து உண்டானது? 'ஸத்' அதாவது, உண்மைப் பொருளானது மூன்று காலங்களிலும் ஒருபோதும் இல்லாமல் இருந்ததில்லை. அதை அழிக்கவே முடியாது. மற்றும், 'அஸத்' அதாவது, உண்மையற்றதற்கோ மூன்று காலங்களிலும் 'நிலைத்தன்மை' என்பது இல்லவே இல்லை. அதை எதனாலும் நிலை நிறுத்தவும் முடியாது" என்று பதில் கூறினார். உண்மையில், மூன்று

காலங்களிலும் அழிவென்பதே இல்லாத அந்தப் (ஸத்) பொருள்தான் எது? மற்றும், நிலைத் தன்மை என்பதே இல்லாத அந்த 'அஸத்' என்பது எந்தப் பொருள்? என்ற கேள்விக்கு அவர், "இந்த ஆன்மாவே உண்மையானப் பொருளாகும். மேலும் மனிதர்கள் முதல் புழு பூச்சிகள் வரையிலான ஜீவராசிகளின் உடல்கள் அனைத்துமே அழியக் கூடியவை. ஆன்மாவே என்றும் நிலையானது, மாறாதது (ஸனாதனம்); புலன் உணர்வுகளை எல்லாம் கடந்தது (அவ்யக்தம்); நிரந்தரமானது (சாஸ்வதம்); மரணமில்லாப் பெருவாழ்வு உடையது (அமிருத ஸ்வரூபம்) – இந்த ஆன்மாவே மேலான உண்மைப் பொருள் (பரம சத்தியம்)" என்றும் கூறினார்.

இங்கேயோ அவர், " 'ஸத்' என்கின்ற பரமாத்மாவின் இந்தத் திருநாமம் **'ஸத்பாவே'** – உண்மைப் பொருளாகிய இறைவனிடம் கொண்டிருக்கும் ஆன்ம உணர்வு மற்றும் சாது பாவம் ஆகியவற்றை உணர்த்தும் வகையில் உபயோகிக்கப்படுகிறது. மேலும், பார்த்தனே! எப்பொழுது நியமிக்கப்பட்டுள்ள கர்மமானது தங்குதடையின்றி, தொடர்ந்து, நல்லமுறையில் நடைபெறுகின்ற நிலை வந்து விட்டதோ அப்பொழுதுதான் இந்த 'ஸத்' என்ற சொல் பிரயோகிக்கப்படுகிறது" என்கிறார். 'ஸத்' என்பதற்கு அர்த்தம், 'இந்தப் பொருள் என்னுடையது' என்பதன்று. எப்பொழுது, இந்த உடலே நம்முடையது இல்லை என்றாகிவிட்டதோ, அந்த உடல் அனுபவிக்கின்ற பொருட்கள் மட்டும் எங்கிருந்து நம்முடையது என்றாகப் போகிறது? இது 'ஸத்' அன்று. 'ஸத்' என்ற சொல்லின் பிரயோகம் ஒரே திசையில்தான் உபயோகிக்கப்படுகிறது – அதுவே 'ஸத்பாவம்' ஆகும். எந்த உண்மையின் மீது உணர்வுப் பூர்வமான அணுகுமுறை இருக்கிறதோ, அந்த உண்மையை தன்னில் வரித்துக் கொள்கின்ற 'சாதுபாவம்' இருக்கிறதோ, மேலும், அந்த ஆன்மாவை நேரில் தரிசனம் செய்து அறிந்து முக்தி நிலையைப் பெற்றுத் தருகின்றவாறு கர்மமானது போற்றத் தக்கவகையில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறதோ, அவ்விடத்தில் இந்த 'ஸத்' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இதுபற்றி யோகேஷ்வரர் தொடர்ந்து கூறுகிறார்.

**யஜ்ஞே தபஸி தானே ச ஸ்திதி : ஸதிதி சோச்யதே**
**கர்மசைவ ததர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே (27)**

'வேள்வி, தவம் மற்றும் தானம் ஆகியவற்றை நிறைவேற்றும்போது எந்த நிலையானது அடையப்படுகிறதோ, அதுவும் 'ஸத்' ஆகும், என்று கூறப்படுகிறது. **'ததர்த்தீயம்'** – 'அந்த பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலை பெறுவதற்காகச் செய்யப்படுகின்ற கர்மமே 'ஸத்' ஆகும்' – என்று கூறப்படுகிறது. அதாவது, அந்த பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்து முக்தி பெறுகின்ற

நிலையில் உள்ள கர்மமே 'ஸத்' ஆகும். வேள்வி, தானம், தவம் ஆகியவை இந்தக் கர்மத்தை நிறைவேற்றும் பொருட்டு, அதற்கு இணைவாகச் செய்யப்படுவன ஆகும். கடைசியில் அவர் தீர்மானமாக, "இவை அனைத்தையும் செவ்வனே நிறைவேற்றி முடிப்பதற்கு நம்பிக்கை, சிரத்தை மிகவும் இன்றியமையாத ஒன்றாகும்" என்று கூறுகிறார்.

**அஸ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்**
**அஸதித்யுச்யதே பார்த்தநசதத்ப்ரேத்ய நோ இஹ (28)**

ஹே பார்த்தனே! நம்பிக்கையின்றிச் செய்யப்படும் வேள்வி, அளிக்கப்படும் தானம், மேற்கொள்ளப்படும் தவம் மற்றும் அத்துடன் சேர்த்துச் செய்யப்படுகின்ற கர்மம் ஆகியவை அனைத்தும் **'அஸத்'** ஆகும்' – என்று கூறப்படுகிறது. அவை இகலோகத்திலும் பரலோகத்திலும் இலாபம் தரக் கூடியவை அல்ல. எனவே, சமர்ப்பணத்துடன் கூடிய நம்பிக்கை மிகவும் இன்றியமையாத ஒன்றாகும்.

**முடிவுரை:**

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன், "பகவானே! எவரெல்லாம் சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து விட்டு, அதேசமயம், நம்பிக்கையுடன் கூடியவர்களாக இருந்து கொண்டு வேள்வி செய்கிறார்களோ (மக்கள் எப்போதுமே பூதங்கள் தேவதை மற்றும் தெய்வங்கள் என்று எண்ணற்ற வழிபாடுகளைச் செய்து கொண்டுதான் உள்ளனர்) அவர்களுடைய நம்பிக்கை எந்த வகையானது? சாத்வீகமானதா? ராஜஸீகமானதா? அல்லது தாமஸீகமானதா?" என்றொரு கேள்வியை எழுப்பினான். இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுனா! மனிதன் நம்பிக்கைமயமானவன்; நம்பிக்கை வடிவானவன். அவனுக்கு ஏதேனும் ஒன்றில் நம்பிக்கை நிச்சயமாக இருக்கவே செய்கிறது. நம்பிக்கை எவ்வகையோ அவ்வகையே மனிதன். எண்ணம் எவ்விதமோ, அவ்விதமே மனிதன். அவனிடம் உள்ள நம்பிக்கை சாத்வீகம், ராஜஸீகம், மற்றும் தாமஸீகம் என்று மூன்று வகைகளாக அமைந்துள்ளது. சாத்வீகமான நம்பிக்கை உடையவன் தெய்வங்களையும் ராஜஸீகமான நம்பிக்கை உடையவன் யட்சர்களையும் (புகழ், வீரம் ஆகியவற்றை அளிக்க வேண்டி), ராட்சதர்களையும் (பாதுகாப்பு வேண்டி), தாமஸீகமான நம்பிக்கை உடையவன் பூதங்களையும் பிரேதங்களையும் வழிபடுகின்றனர். சாஸ்திர விதிகள் பின்பற்றப்படாத இந்த வழிபாடுகள் மூலமாக, இந்த மூன்று வகையான நம்பிக்கை உடையவர்களும், உடலில் நிலைத்துள்ள பூத சமுதாயத்தையும் அதாவது, தங்களுடைய சங்கல்பங்களையும் மற்றும் இதய தேசத்தில் வீற்றிருக்கும் அந்தர்யாமியான பரமாத்மாவாகிய என்னையும் துன்புறுத்துகிறார்களே தவிர, அவர்கள் என்னை வழிபடுவதே இல்லை.

நிச்சயமாகவே, அவர்கள் அனைவரையும் அசுரர்கள் என்றே நீயறிந்து கொள். அதாவது, பூதம், பிரேதம், யட்சர், ராட்சதர்கள் மற்றும் தெய்வங்களை வழிபடுபவர்கள் அனைவருமே அசுரர்கள்தாம்” என்று கூறினார்.

‘தேவதை’ (அன்ய தேவதா) என்ற தலைப்பில் அமைந்த விவாதப் பொருளை ஸ்ரீகிருஷ்ணர் இங்கேயும் மூன்றாவது முறையாக எடுத்துக் கையாள்கிறார். ஏற்கனவே அவர் ஏழாவது அத்தியாயத்தில், “அர்ஜுனா! உலகியல் ஆசைகளால் எவருடைய ஞானம் அபகரிக்கப்பட்டுவிட்டதோ, அத்தகைய மூட அறிவினரே, மற்றபிற தேவதைகளை (தெய்வங்களை) வழிபடுகின்றனர்” என்று கூறினார். அடுத்ததாக ஒன்பதாவது அத்தியாயத்தில் அதே விவாதப் பொருளை மறுபடியும் கையாளும்போது, “எவரெல்லாம் மற்றபிற தெய்வங்களை வழிபடுகிறார்களோ, அவர்களும்கூட என்னைத்தான் வழிபடுகின்றனர். ஆனால், அவர்களுடைய அந்த வழிபாடு சாஸ்திர விதிமுறைகளுக்கு முற்றிலும் புறம்பானது, அதாவது, சாஸ்திரத்தால் நிச்சயிக்கப்பட்டுள்ள விதிமுறைகளினின்று முற்றிலும் வேறுபட்டதாகும். எனவேதான், அவர்கள் அழிய நேரிடுகிறது” என்றார். இதை அடுத்து பதினேழாவது அத்தியாயத்தில் அவர், ‘இவர்களையெல்லாம் அசுர சுபாவத்தை உடையவர்கள்’ என்று எடுத்துரைத்து அவர்களை அடையாளம் காட்டி அருளினார். ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், ‘ஏக இறைவனாகிய பரமாத்மா ஒருவரே! அவரை மட்டும் தான் வழிபட வேண்டும்’. இதுவே விதிமுறையாகும்.

இதையடுத்து, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் நான்கு விவாதப் பொருட்களை எடுத்துக் கொண்டு ஒவ்வொன்றாக விளக்கியருளினார். அவை முறையே, ஆகாரம் (உணவு), வேள்வி, தவம் மற்றும் தானம் ஆகியவையாகும். சாத்வீகமான மனிதர்களுக்கு, ஆரோக்கியம் அளிக்கவல்ல இதயத்திற்கு இயல்பாகவே பிரியமாக அமைகின்ற, பசையுள்ள உணவுவகைகளே பிரியமானதாகும். ராஜஸீகமான மனிதர்களுக்குக் கசப்பான, காரமான, சூடான, எண்ணெயில் பொறிக்கப்பட்ட, மசாலாப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட, வியாதிகளை உண்டாக்குகின்ற உணவுவகைகளே பிரியமானவை ஆகும். தாமஸீகமான மனிதர்களுக்கோ, எச்சிலாக்கப்பட்ட, பழையதாகிப்போன, மற்றும் தூய்மையற்ற உணவு வகைகளே பிரியமானவை ஆகும்.

சாஸ்திரவிதிமுறைகளின் மூலம் நிச்சயிக்கப்பட்டுள்ள வேள்வி (அதாவது, இறை ஆராதனையின் அகச் செயல்முறைப்பாடு) அதாவது, மனத்தைக் கட்டுப்படுத்தி அழிக்க வல்லதாகவும் பலனை விரும்பாமலும் செய்யப்படுகின்ற வேள்வியே, ‘சாத்வீகமானது’ எனப்படுகிறது. பகட்டு, கர்வம், மற்றும் ஆடம்பரம், பலனை விரும்பியும் செய்யப்படுகின்ற வேள்வி ராஜஸீகமானது ஆகும். மேலும்,

சாஸ்திர விதிகளைப் பின்பற்றாமலும் மந்திரம், தானம் மற்றும் நம்பிக்கையின்றியும் செய்யப்படுகின்ற வேள்வியே தாமஸீகமானது ஆகும்.

பரம தெய்வமாகிய பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்ல அனைத்துத் தகுதிகளும் எவரிடம் பரிபூரணமாக இருக்கிறதோ, அந்த மெய்ஞ்ஞானியாகிய சத்குருவின் வழிபாடு, அவருக்கு சேவை புரிதல், மற்றும் ஆழ்மனத்தால் அகிம்ஸை, பிரம்மச்சரியம் மற்றும் புனிதம் ஆகியவற்றைக் கடைப்பிடிப்பதற்கு இணைவாக உடலை வாட்டுவதே, 'உடலால் மேற்கொள்ளப்படும் தவம்' எனப்படுகிறது. உண்மை, அன்பு மற்றும் நன்மையை அளிக்கின்ற வார்த்தைகளையே பேசுவது, 'வாக்கினால் மேற்கொள்ளப்படும் தவம்' எனப்படுகிறது. மேலும், மனத்தைக் கர்மத்திலே ஈடுபடுத்துவது, இஷ்ட தெய்வத்தைத் (சத்குரு, இறைவன்) தவிர, புலன் இன்ப விஷயங்களைப் பற்றிய சிந்தனையிலிருந்து மனத்தை விடுவித்து மௌனமாக வைத்துக் கொள்வது 'மனத்தால் மேற்கொள்ளப்படும் தவம்' எனப்படுகிறது. மனம், வாக்கு மற்றும் உடல் ஆகிய மூன்றையும் ஒன்று சேர்த்து மேற்கூறியவாறு தவத்தில் ஈடுபடுத்துவதே 'சாத்வீகமான தவம்' எனப்படுகிறது. ராஜஸீகமான தவத்தில், ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக இதே தவமானது மேற்கொள்ளப்படுகிறது. ஆனால், தாமஸீகமான தவத்திலோ, சாஸ்திர விதிகள் கடைப்பிடிக்கப்படாமலும் தன்னிச்சையாகவும் மேற்கொள்ளப்படுகிறது.

கடமையுணர்வுடன் இடம், காலம் மற்றும் தகுதி ஆகியவற்றை எல்லாம் நன்கு ஆராய்ந்து கொண்டு, நம்பிக்கையுடன் அளிக்கப்படும் தானம் 'சாத்வீகமானது' ஆகும். ஏதேனும் பலனை எதிர்பார்த்துப் பேராசை உணர்வுடன், மிகுந்த மனவருத்தத்துடன், கஷ்டப்பட்டு அளிக்கப்படுகின்ற தானம் 'ராஜஸீகமானது' ஆகும். மற்றும், வேண்டாவெறுப்புடன் தகுதியற்றவருக்கு அளிக்கப்படும் தானம் 'தாமஸீகமானது' ஆகும்.

ஓம், தத், ஸத் என்றால் என்ன? என்பதை விளக்குகின்ற வகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், " 'ஓம்' என்னும் திருநாமம் பிரம்மத்தின் நினைவைப் பெற்றுத் தருகிறது. சாஸ்திர விதிகளால் நிச்சயிக்கப்பட்டுள்ள தவம், தானம் மற்றும் வேள்வியை ஆரம்பிக்கும்போது 'ஓம்' என்ற திருநாமம் உபயோகிக்கப்படுகிறது. மேலும், வேள்வி முழுமையடைந்து நிறைவுபெற்ற பிறகுதான் 'ஓம்' என்ற திருநாமம் இறைவனில் ஒன்றிக் கலந்து ஓய்கிறது. 'தத்' என்பதற்கு அர்த்தம் என்னவென்றால், 'அந்த பரமாத்மாவிடம் (ஸத்குரு) சமர்ப்பண உணர்வுடன் சரணடைந்து பிறகுதான் அந்தக் கர்மமே தொடங்குகிறது' என்பதுதான். மேலும், எப்பொழுது கர்மமானது, தங்கு தடையின்றித் தொடர்ச்சியாக நிகழ ஆரம்பித்து விட்டதோ, அப்பொழுதுதான் 'ஸத்' என்ற சொல் பிரயோகிக்கப்படுகிறது. இறைவழிபாடே 'ஸத்' எனப்படுகிறது. 'ஸத்' எனப்படும்

இறைவனிடம் ஒன்றுபடுகின்ற உணர்வு, மற்றும், அவரைத் தன்னில் வரித்துக் கொள்கின்ற சாது உணர்வு அடையப் பெற்றபிறகே இந்த 'ஸத்' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்வித்து முக்திநிலையைப் பெற்றுத் தருகின்ற கர்மம், வேள்வி, தானம் மற்றும் தவம் ஆகியவற்றின் இறுதிவிளைவு (பரிணாமம்) கிடைக்கும் போதுதான் 'ஸத்' என்னும் சொல் பயன்படுத்துப்படுகிறது. மேலும், பரமாத்மாவில் நுழைவுபெற்றுத் தருகின்ற கர்மம் நிச்சயப்பூர்வமாகவே 'ஸத்', (உண்மை) ஆகும். ஆனால், இவை அனைத்துடன் சேர்த்து நம்பிக்கை (சிரத்தை) மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். நம்பிக்கையின்றி செய்யப்படுகின்ற கர்மம், அளிக்கப்படுகின்ற தானம், மேற்கொள்ளப்படுகின்ற தவம் இந்தப் பிறவியிலும் சரி, அடுத்த பிறவியிலும் சரி, எந்த இலாபத்தையும் பெற்றுத் தரப் போவதில்லை. எனவே, நம்பிக்கை (சிரத்தை) தவிர்க்க முடியாத அளவு முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகக் கருதப்படுகிறது.

இந்த அத்தியாயம் முழுவதும் நம்பிக்கை (சிரத்தை) பற்றி விரிவான விளக்கம் அளிக்கப்பட்டது. மற்றும், இறுதியில், ஓம், தத், மற்றும் ஸத் ஆகியவற்றிற்குத் தெளிவான விளக்கவுரையும் தரப்பட்டு உள்ளது. கீதையின் சுலோகங்களில் இவை பற்றிய விளக்கம் முதன்முதலாக இடம் பெற்றுள்ளன. அத்துடன்.

ஓம் தத் ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்திரே ஸ்ரீகிருஷ்ணார்ஜூன ஸம்வாதே 'ஓம் தத்ஸத் ஸ்ரத்தாத்ரய விபாக யோகோ' நாம ஸப்த தசோத்த்யாய:

இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்யையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜூன உரையாடலுமாகிய, 'ஓம் தத் ஸத் ஸ்ரத்தாத்ரய விபாக யோகம்' என்ற பெயருடைய பதினேழாவது அத்தியாயம் நிறைவுபெறுகிறது.

இதி, ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய சிஷ்ய ஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத் பகவத் கீதாயா; 'யதார்த்த கீதா' பாஷ்யே 'ஓம் தத்ஸத் ஸ்ரத்தாத்த்ரய விபாக யோகோ' நாம ஸப்த தசோத்தயாய:

ஹரி: ஓம் தத் ஸத்

இவ்வாறு ஸ்ரீமத் பரமானந்த பரமஹம்ஸ மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய ஸ்ரீமத் பகவத் கீதையின், 'யதார்த்த கீதை' என்ற உரையில், 'ஓம் தத்ஸத் ஸ்ரத்தாத்ரய விபாக யோகம்' என்னும் பதினேழாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத் ஸத்

# ஓம் ஸ்ரீ பரமாத்மனே நம :

# பதினெட்டாவது அத்தியாயம்

இதுவே கீதையின் கடைசி அத்தியாயம் ஆகும். கீதையின் முதற்பகுதியில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் மூலமாகப் பல்வேறு விதமான கேள்விகளுக்கு விடையளிக்கப்பட்டது. மேலும், கீதையின் பிற்பகுதியோ, இந்த கீதையினால் கிடைக்கும் நன்மை என்ன? என்பதை விளக்குகின்ற முடிவுரையாகும். பதினேழாவது அத்தியாயத்தில் உணவு, வேள்வி, தானம், தவம் மற்றும் நம்பிக்கை ஆகியவற்றை வகைப்படுத்தி, ஒவ்வொன்றும் தெளிவாக விளக்கப்பட்டது. அந்த வகையில், தியாகம் என்றால் என்ன? அதன் வகைகள் யாவை? என்பதைப் பற்றி விளக்க வேண்டியது மட்டும் மீதம் உள்ளது. மனிதன் செய்கின்ற காரியங்கள் அனைத்திற்கும் காரணமாக அமைவது யார்? அவற்றையெல்லாம் செய்விப்பது யார்? பகவான் செய்விக்கிறாரா அல்லது செய்வது இயற்கையா? இந்தக் கேள்வியானது ஆரம்பத்திலிருந்தே வந்து கொண்டிருந்த ஒன்றாகும். அதுபற்றி இந்த அத்தியாயத்தில் மறுபடியும் விளக்கப்படுகிறது. இதேபோன்று, வர்ண அமைப்பு என்பதன் முழுமையான வடிவம் மற்றும் அவற்றின் ஒவ்வொரு பிரிவையும் பற்றிய உண்மையான விளக்கம் இந்த அத்தியாயத்தில் இடம்பெறுகிறது. கடைசியில், கீதையின் மூலமாக அடையப் பெறுகின்ற தெய்வீக மகிமைகள் பற்றியும் விளக்கம் தரப்படுகிறது.

கடந்த அத்தியாயத்தில் பல்வேறுபட்ட தலைப்புகளில் அடங்கிய விவாதப் பொருள்களின் வகைப்பாட்டியலைக் கேட்டு அர்ஜுனன் தானாகவே, 'தியாகம் மற்றும் சன்னியாசம் ஆகியவற்றையும் அவற்றின் வகைகளுடன் விளக்கியருள வேண்டும்' என்றொரு கேள்வியை ஸ்ரீகிருஷ்ணரின் முன்வைத்தான்.

**அர்ஜுன உவாச்ச**
**ஸன்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும்**
**த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்கேஷினிஷுதன (1)**

அர்ஜுனன் கூறினான்: "பெருந்தோள்களை உடையவரே! இதயங்களை எல்லாம் அறிந்தவரே!

நான் சன்னியாசம் மற்றும் தியாகம் ஆகியவற்றை உள்ளது உள்ளபடியாகவும் (யதார்த்தம்) ஒவ்வொன்றையும் தனித்தனியாகவும் அறிந்து கொள்ள விரும்புகிறேன்." எந்த நிலையில் சங்கல்பங்கள் மற்றும் வினைகள் அனைத்தும் அழிக்கப்பட்டு விடுகின்றனவோ, அந்த நிலையில் உள்ள முழுமையான தியாகமே 'சன்னியாசம்' எனப்படுகிறது. மற்றும், அதற்கு முந்தைய

நிலையில், ஆன்மீக சாதனையை முழுமையாக நிறைவேற்றி முடிக்கும் வகையில், ஒவ்வொரு கட்டத்திலும் ஆசைகளையும் பற்றுதல்களையும் துறப்பதுவே 'தியாகம்' எனப்படுகிறது. இங்கே, 'சன்னியாசம்' என்ற தத்துவத்தை அறிந்து கொள்ள விரும்புகிறேன், மற்றும், 'தியாகம்' என்ற தத்துவத்தை அறிந்து கொள்ள விரும்புகிறேன் என்று இரண்டு கேள்விகள் இடம் பெற்றுள்ளன. இதுபற்றி யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் கூறினார்.

**ஸ்ரீபகவானுவாச்ச**
**காம்யானாம் கர்மணாம் ந்யாஸம் ஸன்யாஸம் கவயோ விது:**
**ஸர்வ கர்ம ஃபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: (2)**

அர்ஜுனா! "ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகச் செய்யப்படுகின்ற கர்மங்களைத் துறப்பதுவே சன்னியாசம்" என்று எத்தனையோ பண்டிதர்கள் கூறுகின்றனர். மேலும், "அனைத்து விதமான கர்மங்களின் பலன்களையும் துறப்பதுவே சன்னியாசம்" என்று எத்தனையோ அறிவு ஜீவிகளான மேதைகளும் சொல்கின்றனர்.

**த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர்மனீஷிண:**
**யஜ்ஞதானதப:கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே (3)**

இன்னுமொரு அறிஞரோ, "எல்லாக் கர்மங்களுமே தன்னில்தானே ஏதேனும் குற்றமுடையவைகள்தான். ஆகவே, அவை அனைத்துமே துறப்பதற்குத் தகுதியானவைதான்" என்கிறார். மேலும், மற்றொரு அறிஞரோ, "வேள்வி, தானம் மற்றும் தவம் ஆகியவை துறப்பதற்குத் தகுதியானவை அல்ல" என்கிறார். இந்தமுறையில், எத்தனையோ விதமான கருத்துக்களை முதலில் எடுத்துக் கூறிவிட்டு, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் அதற்குப் பிறகு தம்முடைய உறுதியான கருத்தினை நிலைநாட்டுகிறார்.

**நிஷ்சயம் ஷ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம**
**த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித :(4)**

அர்ஜுனா! அந்தத் தியாகத்தைப் பற்றிய விஷயத்தில் என்னுடைய உறுதிப்பாடு என்ன என்பதைக் கேள். ஆண்களில் சிறந்தவனே! அந்தத் தியாகம் மூன்று வகைப்படும் என்று சொல்லப்படுகிறது.

**யஜ்ஞதானதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்**
**யஜ்ஞோ தானம் தபஷ்சைவ பாவனானி மனீஷிணாம் (5)**

வேள்வி, தானம், மற்றும் தவம் ஆகிய மூன்று விதமான கர்மம்

துறப்பதற்குத் தகுதியானவை அல்ல. அவற்றைச் செய்து கொண்டுதான் இருக்க வேண்டும். ஏனெனில், வேள்வி, தானம் மற்றும் தவம் ஆகிய மூன்றுமே மனிதர்களைப் புனிதப்படுத்த வல்லவை ஆகும்.

ஸ்ரீகிருஷ்ணர் வழக்கத்திலிருக்கும் நான்கு விதமான கருத்துக்களைப் பற்றிக் கூறினார். முதலாவதாக 'ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகச் செய்யப்படும் கர்மங்களைத் துறப்பது.' இரண்டாவதாக, 'அனைத்து விதமான கர்மங்களின் பலன்களைத் துறப்பது.' மூன்றாவதாக, 'ஏதேனும் குறைபாடுகள் இருப்பதால் எல்லாக் கர்மங்களையும் துறப்பது.' மேலும், நான்காவதாக வருகின்ற கருத்துதான் – 'வேள்வி, தானம் மற்றும் தவம் ஆகியவை துறப்பதற்குத் தகுதியானவை அல்ல' என்பதாகும். மேற்கூறியவற்றில் இருந்து ஒரேயொரு கருத்தை மட்டுமே சான்றாக ஏற்றுக் கொண்டு, "அர்ஜுனா! வேள்வி, தானம், மற்றும், தவம் முதலான கிரியைகள் துறப்பதற்குத் தகுதியானவை அல்ல என்பதுதான் என்மூலமாகவும் உறுதிசெய்யப்பட்டுள்ள கருத்தாகும்" என்கிறார். இதிலிருந்தே, ஸ்ரீகிருஷ்ணருடைய காலத்திலும் கூட, பல்வேறுபட்ட கருத்துக்கள் நடைமுறையில் இருந்தன என்பதும் அவற்றில் ஒரேயொரு கருத்து மட்டுமே யதார்த்தமானதாக (உண்மையானதாக) இருந்திருக்கிறது என்பதும் தெளிவாகிறது. அந்தக் காலத்திலும் பல்வேறுபட்ட கருத்துகள் இருந்திருக்கின்றன, இன்றும் இருக்கின்றன. மகாபுருஷர்கள் இவ்வுலகில் தோன்றும்போது, பல்வேறுபட்ட கருத்துக்களிலிருந்து மேலான நன்மையை ஏற்படுத்தவல்ல உண்மையான கருத்தினைப் பிரித்தெடுத்து, மக்கள் முன்பு நிலை நிறுத்துகின்றனர். ஒவ்வொரு மகாபுருஷரும் இதே பணியைத்தான் செய்து வந்துள்ளனர். ஸ்ரீகிருஷ்ணரும் இதே பணியைத்தான் நிறைவேற்றினார். அவர் ஒன்றும் புதியதானதொரு வழி எதையும் கூறிவிடவில்லை. மாறாக, வழக்கத்தில் இருந்த கருத்துகளின் மத்தியில் உண்மையான கருத்தினை ஆதரித்து அதைத் தெளிவாக விளக்கியருள்கிறார்.

**ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா ஃபலானி ச**
**கர்த்தவ்யானீதி மே பார்த்த நிஶ்ச்சிதம் மதமுத்தமம் (6)**

யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் வலியுறுத்திக் கூறுகிறார்: "பார்த்தா! வேள்வி, தானம் மற்றும் தவம் என்கின்ற கர்மத்தை பற்று, பலன் ஆகியவற்றை முற்றிலுமாகத் துறந்து விட்டுக் கடைப்பிடித்து வருவது மிகவும் இன்றியமையாததாகும். இதுவே, என்னுடைய, உறுதியான, மேலான கருத்தாகும். இனி, அவர் அர்ஜுனனின் கேள்விக்குப் பதில் அளிக்கும் விதமாகத் தியாகம் என்றால் என்ன? அவற்றின் வகைகள் யாவை? என்பதையெல்லாம் தனித்தனியாகப் பிரித்துப் பொருள் விளக்கம் அளிக்கிறார்.

**நியதஸ்ய து ஸன்யாஸ: கர்மணோ நோபபத்யதே**
**மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ: பரிகீர்த்தித :(7)**

அர்ஜுனா! நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மமாகிய (ஸ்ரீகிருஷ்ணருடைய வார்த்தைகளில் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் ஒன்று மட்டும்தான். அதுவே வேள்வியின் செயல்முறை எனப்படுகிறது. இந்த, 'நியமிக்கப்பட்டுள்ள' அல்லது 'நிச்சயிக்கப்பட்டுள்ள' (நியதம்) என்ற வார்த்தையை யோகேஷ்வரர் எட்டு அல்லது பத்து முறைகளுக்கும் மேல் கூறியிருப்பார். சாதகன் வழிதவறிப்போய்க் கர்மம் என்ற பெயரில் வேறு எதையாவது செய்யத் தொடங்கிவிடக்கூடாது என்பதற்காகத்தான் அவர் இந்த, 'நியமிக்கப்பட்டுள்ள' அல்லது 'நிச்சயிக்கப்பட்டுள்ள' என்ற வார்த்தையைத் திரும்பத் திரும்ப வலியுறுத்திக் கூறிக்கொண்டே இருக்கிறார்.) இந்த சாஸ்திர விதிகளின் மூலமாக நிச்சயிக்கப்பட்டுள்ள இந்தக் கர்மத்தைத் தியாகம் செய்வதென்பது பொருத்தமானதன்று. மோகவசப்பட்டு அதனைத் தியாகம் செய்வது, 'தாமஸீகமான தியாகம்' எனப்படுகிறது. உலகியல் சார்ந்த புலனின்ப நுகர்ச்சிகளின் மீது பற்று வைத்துக் கொண்டு, அவற்றில் சிக்கிக் கொண்டு, செய்யத் தகுதியுடைய கார்யம் கர்மத்தைத் (கார்யம் கர்மம், நியத கர்மம் – அதாவது, செய்வதற்குத் தகுதியுடைய கர்மம், நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் ஆகியவை ஒன்றையொன்று நிறைவேற்றுபவை ஆகும்.) தியாகம் செய்வது 'தாமஸீகமானது' ஆகும். அத்தகையவன் **'அத: கச்சதி'**– 'அதோ கதி' என்று சொல்லப்படுகின்ற புழு, பூச்சி முதலான தாழ்ந்த, கீழான பிறவிகளை அடைகிறான். ஏனெனில், அவன் இறைவழிபாட்டிற்கான, மேலான, ஆன்மீக எண்ணவோட்டங்களைத் தியாகம் செய்து விட்டான். இனி, ராஜஸீகமான தியாகத்தைப் பற்றி எடுத்துரைக்கிறார்.

**துக்க மித்யேவ யத்கர்ம காயக்லேஷபயாத்த்யஜேத்**
**ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகஃபலம் லபேத் (8)**

கர்மத்தைத் துக்கமயமானது என்றெண்ணி, உடலுக்குத் துன்பம் உண்டாகுமே என்று பயந்து கர்மத்தைத் தியாகம் செய்பவன் ராஜஸீகமான தியாகத்தைச் செய்த பிறகும்கூட, தியாகத்தின் பலனை அடைவதில்லை. எவனுடைய இறைவழிபாடு இன்னும் முழுமையாக நிறைவேற்றப்படாத நிலையில் இருக்கிறதோ மற்றும் **'காயக்லேசபயாத்'**– 'உடலுக்குக் கஷ்டம் உண்டாகும்' என்ற பயத்துடன் கர்மத்தைத் தியாகம் செய்கின்ற அந்த மனிதனுடைய தியாகம் 'ராஜஸீகமானது' ஆகும். அவனுக்குக் கர்ம தியாகத்தின் பலனாகிய மேலான அமைதி (பரம சாந்தி) கிடைப்பதில்லை. அத்துடன் –

**கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதேர்ஜுன**
**ஸங்கம் த்யக்த்வா ஃபலம் சைவ ஸ த்யாக: ஸாத்விகோ மத: (9)**

அர்ஜுனா! ‘செய்வது கடமையாகும்!’ என்று அறிந்து கொண்டு **‘நியதம்’** சாஸ்திர விதிகளால் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை சேர்க்கை தோஷம் மற்றும் பலன் ஆகியவற்றைத் தியாகம் செய்து விட்டுக் கடைப்பிடிப்பதுவே ‘சாத்வீகமான தியாகம்’ எனப்படுகிறது. ஆகவே, ‘நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்யவும்! அதைத் தவிர, மற்ற அனைத்தையும் துறக்கவும்! இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையும் கூடச் செய்து கொண்டேதான் இருக்க வேண்டுமா? அல்லது, அதையும் தியாகம் செய்கின்ற நிலைவருமா? இதுபற்றிக் கூறுகிறார். (இனி, இறுதி நிலைத் தியாகத்தின் வடிவம் என்ன? என்று காணலாம்)

**ந த்வேஷ்டயகுசலம் கர்ம குஷலே நானுஷஜ்ஜதே**
**த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சின்னஸம்சய :(10)**

அர்ஜுனா! எவரொருவருக்கு, **‘அகுசலம் கர்ம’ –** அதாவது, நன்மை பயக்காத கர்மத்தில் (சாஸ்திர விதிகளால் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மமே மேலான நன்மையை உண்டாக்கவல்லது. அதற்கு முரண்பாடாக, விரோதமாக அமைகின்ற மற்றவை அனைத்துமே இவ்வுலகியல் பந்தத்திற்கு நம்மை உள்ளாக்குபவை ஆகும். எனவேதான் அவையெல்லாம், நன்மையை உண்டாக்குபவை அல்ல எனப்படுகிறது. அத்தகைய கர்மத்தில்) வெறுப்புமில்லையோ, மற்றும், மேலான நன்மையை ஏற்படுத்தவல்ல, நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தில் எந்தப் பற்றுதலும் இல்லையோ, அதாவது, கர்மத்தில் இனியும் செய்து முடிக்க வேண்டுமே! என்று எதுவுமே எஞ்சியிருக்கவில்லையோ அத்தகைய சத்துவத்தில் ஒன்றிணைந்தவனும், சந்தேகங்கள் அனைத்தும் நீங்கப் பெற்றவனும் ஞானவானும் தியாகி ஆவான். அவனே அனைத்தையும் தியாகம் செய்தவன் எனப்படுகிறான். ஆனால், இறைவனை அடையப் பெற்ற நிலையில் செய்யப்படுகின்ற, முழுமையான, பரிபூரணமான தியாகமே ‘சன்னியாசம்’ எனப்படுகிறது. “இதைவிடவும் எளிமையான வேறு வழி ஏதாவது இருக்கலாம் அல்லவா?” என்று கேட்டால், “இல்லை, நிச்சயமாக இல்லை” என்று பதில் கூறுகிறார். மேலும் பார்க்கலாம்.

**ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்யசேஷத :**
**யஸ்து கர்மஃபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே (11)**

உடல் தரித்துள்ள மனிதர்கள் மூலமாக (இங்கே ‘உடல்’ என்று குறிப்பிடுவது, வெறுமனே நமது கண்களுக்குத் தென்படுகின்ற ஸ்தூல உடல் மட்டுமன்று. ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், இயற்கையில் இருந்து

தோன்றுகின்ற இந்த சத்துவம், ராஜஸம், தாமஸம் ஆகிய மூன்று குணங்களே இந்த ஜீவாத்மாவை உடலில் பிணைக்கின்றன. எதுவரைக்கும் குணமானது உயிருடன், செயல்படும் நிலையில் இருக்கிறதோ, அதுவரை அவன் 'ஜீவஉணர்வு' உடையவன்தான். ஏதேனும் ஒருவிதத்தில் உடலானது மாறி மாறிக் கிடைத்துக் கொண்டேதான் இருக்கும். உடல் எடுப்பதற்குக் காரணமாக அமைகின்ற இந்தக் குணம் எதுவரைக்கும் உயிருடன் இருக்கிறதோ, அதுவரைக்கும் உடலெடுக்கும் படலமும் தொடரவே செய்கிறது.) முழுமையான அளவில் அனைத்துக் கர்மங்களையும் தியாகம் செய்வதென்பது சாத்தியம் இல்லாத ஒன்று. எனவேதான், 'எவரொருவர் கர்மங்களின் பலனைத் தியாகம் செய்கிறாரோ, அவரே தியாகி ஆவார்' என்று சொல்லப்படுகிறது. ஆகவே, எதுவரைக்கும் உடலிற்கான காரணம் உயிருடன் செயல்படும் நிலையில் உள்ளதோ, அதுவரைக்கும் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்து கொண்டேதான் இருக்க வேண்டும். மற்றும், அந்தக் கர்மத்தின் பலன்களைத்தான் தியாகம் செய்து கொண்டே இருக்க வேண்டும். கர்மத்தைச் செய்து கொண்டே, அதற்குப் பதிலாக, வேறுபலன்கள் கிடைக்க வேண்டுமென்று ஆசைப்படக்கூடாது. அவ்வாறு ஆசைகளுடன் கூடிய மனிதர்கள் செய்கின்ற கர்மத்திற்குப் பலனும் உண்டாகவே செய்கிறது.

**அனிஷ்டமிஷ்டம் மிஷ்ரம் ச த்ரிவிதம் கர்மண ஃபலம்**
**பவத்யத்யாகினாம் ப்ரேத்ய ந து ஸன்ன்யாஸினாம் க்வசித் (12)**

ஆசைகளுடன் கூடிய மனிதர்களின் கர்மத்திற்கு நல்ல, தீய மற்றும் இரண்டும் கலந்தது என்று மூன்று வகையான பலன்கள் அவர்கள் இறந்ததற்குப் பின்னாலும் கூட அவர்களுக்கு உண்டாகவே செய்கின்றன. எத்தனை பிறவிகள் ஆனாலும் அவை அவர்களைச் சென்று அடையவே செய்கின்றன. ஆனால், **'ஸன்யாஸினாம்'**– அனைத்தையும் துறக்கின்ற முழுமையான தியாகிகளின் கர்மங்களுக்கோ எந்தக் காலத்திலும் பலன் உண்டாவதில்லை. இதுவே, தூய்மையான சந்நியாசம் எனப்படுகிறது. சன்னியாசம் என்பது ஆன்மீக வாழ்க்கையின் மிகவும் உயர்ந்த இறுதிக் கட்டமாகும். நல்ல மற்றும் கெட்ட கர்மங்களின் பலன் மற்றும் அனைத்தையும் துறக்கின்ற (ந்யாஸகாலம்) அந்தக் காலகட்டத்தில் அந்தப் பலன்களின் முடிவு என்ற பிரச்சினையும் நிறைவு பெற்று விடுகிறது. இனி, மனிதர்கள் மூலமாக நல்ல, மற்றும், கெட்ட (சுபம், அசுபம்) கர்மங்கள் நிகழ்வதற்கு எவையெல்லாம் காரணமாக அமைகின்றன? இதுபற்றிப் பார்க்கலாம்.

**பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோத மே**
**ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே ஸர்வகர்மணாம் (13)**

பெருந் தோள்களை உடையவனே! மஹாபாஹோ! எல்லாக் கர்மங்களும் நடந்து முடிவதற்கு ஐந்து காரணங்கள் ஸாங்க்ய சித்தாந்தத்தில் கூறப்பட்டுள்ளன. அவற்றை நீ என்னிடமிருந்து நல்லமுறையில் அறிந்து கொள்.

**அதிஷ்டானம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம்**
**விவிதாஷ்ஸ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் (14)**

கர்மம் நடைபெறுகின்ற இந்த விஷயத்தில், **(கர்த்தா)** செய்பவர் ஆகிய இந்த மனம், கர்மமானது எவற்றின் மூலமாகச் செய்யப்படுகிறதோ, வெவ்வேறு தனித்தனியான கருவிகள் **(கரணம்),** ஆகியவை முக்கியப் பங்காற்றுகின்றன. ஒருவேளை, நல்லவை நடைபெற்றால், விவேகம், வைராக்கியம், மனக் கட்டுப்பாடு (சமம்), புலனடக்கம் (தமம்), தியாகம், எந்நேரமும் ஆன்மீகச் சிந்தனையில் ஈடுபடுகின்ற எண்ணவோட்டம் முதலானவை கருவிகளாக (கரணம்) அமைகின்றன. ஒருவேளை, கெட்டவை நடைபெற்றால், காமம், கோபம், விருப்பு, வெறுப்பு, பேராசை முதலானவை கருவிகளாக (கரணம்) அமைகின்றன. இவற்றின் மூலமாகக் கெட்டவை ஊக்கம் பெறுகின்றன. அதன்மூலம், பல்வேறு வகையான, வெவ்வேறுவிதமான, வீணான செயல்கள் **(சேஷ்டா),** எண்ணற்ற ஆசைகள் உண்டாகின்றன. மற்றும், **(ஆதாரம்)** இணைவு அதாவது, எந்த ஆசையுடன் எவ்விதமான இணைவு கிடைக்கிறதோ, அவை நல்லவையோ அல்லது கெட்டவையோ, எதுவாக இருந்தாலும் சரி, அந்த ஆசைகள் நிறைவேறுகின்றன. மேலும், ஐந்தாவது காரணமாக அமைவதுதான் **(தைவம்)** அல்லது **சம்ஸ்காரம்** எனப்படுகிறது. இதுவே, மேற்கூறிய கர்மம் நிகழும் முறையை, அதாவது, வினை (செயல்) நடைபெறும் முறையை ஊக்குவிக்கிறது.

**சரீரவாங்மனோபிர்யத்கர்ம ப்ராரபதே நர:**
**ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ : (15)**

மனிதர்கள் மனம், வாக்கு, உடல் ஆகியவற்றின் மூலமாகச் சாஸ்திர ஏற்புடைய அல்லது முரண்பாடான, எந்த வகையான கர்மத்தை ஆரம்பித்தாலும், அதற்கெல்லாம் இந்த ஐந்துமே காரணமாக அமைகின்றன. ஆனால், அப்படியொரு நிலை இருந்தபிறகும் கூட

**தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மானம் கேவலம் து ய :**
**பஷ்யத்யக்ருதபுத்தித்வான்ன ஸ பஷ்யதி துர்மதி : (16)**

எவரொருவர் தூய்மையற்ற அறிவின் காரணமாக, மேற்கூறிய, கர்மம் நிகழ்கின்ற விஷயத்தில், கைவல்ய வடிவமாகிய ஆன்மாவை கர்த்தா (செய்பவர்)

என்று பார்க்கிறானோ, அந்தக் களங்கமுள்ள அறிவுடையவன் யதார்த்தத்தைப் (உள்ளதை உள்ளபடியாக) பார்ப்பதில்லை. அதாவது, பகவான் எதையும் செய்வதில்லை.

இந்த வினாவிற்கு யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இரண்டாவது முறையாக வலியுறுத்திக் கூறுகிறார். ஐந்தாவது அத்தியாயத்தில் அவர், “அந்தப் பிரபு எதையும் செய்வது இல்லை; எதையும் செய்விப்பதும் இல்லை. கிரியைக்கு இடையில் (கர்மம் – கர்த்தா – கர்மபலன்) எந்த இணையையும் ஏற்படுத்துவதுமில்லை. அப்படி என்றால், ‘பகவான்தான் செய்கிறார், செய்விக்கிறார்’ என்று மக்கள் கூறுவது ஏன்? மோகத்தால் அவர்களின் அறிவு சூழப்பட்டு உள்ளது. எனவேதான், அவர்கள் எதை வேண்டுமானாலும் சொல்கிறார்கள்” என்று கூறினார். அதையேதான் இங்கும் கூறுகிறார் – “கர்மம் நடைபெறுவதற்கு ஐந்து காரணங்கள் உள்ளன. இதற்குப் பிறகும்கூட கைவல்ய வடிவமாகிய பரமாத்மாவைக் கர்த்தாவாகப் (செய்பவர்) பார்க்கின்ற அந்த மூடபுத்தியுடைய, களங்கமுள்ள அறிவுடையவன் யதார்த்தத்தைப் (உள்ளதை உள்ளபடி உணர்தல்) பார்ப்பது இல்லை. அதாவது, பகவான் எதையும் செய்வதில்லை.” ஆனால், அர்ஜுனனுக்கு மட்டும் அவர் மார்தட்டிக் கொண்டு, அவனுக்குத் துணையாக வந்து நின்று கொள்வதுடன் மட்டுமின்றி, **‘நிமித்த மாத்ரம் பவ’** – “செய்பவன், செய்விப்பவன் எல்லாம் நான்தான், நீ வெறும் நிமித்த காரணமாக மட்டும் வந்து நின்று கொள், போதும்” என்று கூறுகிறார். கடைசியாக, அந்த மகாபுருஷர் என்னதான் சொல்ல விரும்புகிறார்?

உண்மையில், பகவான் மற்றும் படைப்பு ஆகியவற்றிற்கு இடையில் ஒரு ஈர்ப்பு ரேகை இருக்கிறது. எதுவரைக்கும் சாதகன் படைப்பின் எல்லைக்குள் இருக்கிறானோ, அதுவரைக்கும் பகவான் எதையும் செய்வதில்லை. அவனது இதய தேசத்தில், வெகு அருகில் வீற்றிருந்தபோதும் அவர் வெறும் சாட்சி ரூபமாக **(த்ரஷ்டா)** மட்டும் இருந்து கொள்கிறார், அவ்வளவுதான். அதே சாதகன் நிலைத்த உணர்வுடன் இஷ்ட தெய்வத்தின் (ஸத்குரு – இறைவன்) சரணங்களை நாடத் தொடங்கிய உடனே பகவான் அவனது இதய தேசத்தில் எழுந்தருளி, சாரதியின், (வழிநடத்துபவர்) நிலையை ஏற்றுக் கொண்டு விடுகிறார். சாதகனும் படைப்பின் ஈர்ப்புரேகையைக் கடந்து பகவானுடைய க்ஷேத்திரத்திற்குள் வந்து விடுகிறான். அத்தகைய, ஆர்வமுள்ள பக்தனுக்காக சத்குருவானவர் வரிந்து கட்டிக் கொண்டு, எப்போதும், தயார்நிலையில் அவனுக்காக நின்று கொள்கிறார். அவனுக்காக மட்டும்தான் பகவான் செய்கிறார். ஆகவே, நீங்களும் தியானம் (சிந்தனை) செய்யுங்கள். கேள்வி நிறைவடைகிறது. மேலும் பார்க்கலாம்.

**யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே**
**ஹத்வாபி ஸ இமான்லோகான்ன ஹந்தி ந நிபத்தயதே (17)**

எவரொருவருடைய ஆழ்மனதில் 'நானே செய்பவன் ஆவேன்' என்கின்ற கர்த்தா என்னும் உணர்வு இல்லையோ மற்றும் எவருடைய புத்தி தடுமாற்றம் அடைவதே இல்லையோ அவர் இந்த எல்லோரையும் கொன்றாலும்கூட, உண்மையில் யாரையும் கொல்வதும் இல்லை. மேலும், அதனால் அவர் பந்தப்படுவதும் இல்லை. இங்கே, 'அனைவரையும் கொல்வது' என்பதற்கு என்ன அர்த்தம் என்றால் 'உலகியல் தொடர்பான அனைத்து (சம்ஸ்காரங்கள்) வினைகளையும் ஒழித்தல்' என்பதாகும். இதையே, 'லோக சம்ஹாரம்' என்றும் சொல்வர். இனி, அந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வதற்கான ஊக்கம் எவ்வாறு கிடைக்கிறது? இதுபற்றிப் பார்க்கலாம்.

**ஜ்ஞானம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதனா**
**கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித : கர்மஸங்க்ரஹ : (18)**

அர்ஜூனா! (**'பரிஜ்ஞாதா:'–** அதாவது, பரிபூரண ஞானம் பெற்ற மகா புருஷர்கள் மூலமாக, **'ஜ்ஞானம்'–** அந்த ஞானத்தை அறிவதற்கான விதியின் மூலமாக, மற்றும், **'ஜ்ஞேயம்'–**'அறிவதற்குத் தகுதியுடைய பொருளின் மூலமாகிய அந்த ஒரே பொருள் நான்தான்' என்று கூறியுள்ளார். இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வதற்கான ஊக்கம் கிடைக்கிறது. எனவே, முதலில் பூரண ஞானம் அடைந்த மகாபுருஷரின் சரணம் கிடைக்க வேண்டும். அதற்குப் பிறகு, அவர் மூலமாக, அந்த ஞானத்தை அறிவதற்கான விதிமுறையை அடையப் பெற்றிருக்க வேண்டும். மேலும், இலட்சியமாகிய, அந்தப் பரம் பொருளாகிய சத்குருவின் மீது மட்டுமே நமது மொத்த கவனமும் நிலைபெற்றிருக்க வேண்டும். அப்படி இருந்தால் மட்டுமே கர்மம் செய்வதற்கான ஊக்கம் கிடைக்கும். மேலும், **கர்த்தா** (மனத்தில் சத்குருவின்மீது மட்டுமே பிடிப்புணர்வு கொண்டிருத்தல்), **கரணம்** (விவேகம், வைராக்கியம், மனக்கட்டுப்பாடு **(சமம்),** புலனடக்கம் **(தமம்)** முதலானவை) மற்றும், கர்மத்தை நன்கு அறிந்து கொண்டு செய்வதால் கர்மம் அதிக அளவில் பெருகத் தொடங்குகிறது. கர்மம் மிகப் பெரிய அளவில் நடைபெறுகின்ற நிலையை அடைகிறது. ஏற்கனவே, முந்தைய பகுதியில் கூறியுள்ளபடி, இறைவனை அடைந்த பிறகு, அந்த மகாபுருஷருடைய நிலையை அடையப் பெற்றவருக்கு கர்மத்தைத் தொடர்ந்து செய்வதால் எந்தப் பயனும் உண்டாவதில்லை, மற்றும், செய்யாமல் விட்டு விடுவதாலும் எந்த இழப்பும் ஏற்படுவதில்லை. அப்படி இருந்த பிறகும்கூட, **'லோக ஸங்க்ரஹம்'** அதாவது, பின்வரும் சமுதாயத்தினரின் இதயத்தில் மேலான நன்மையை ஏற்படுத்தவல்ல ஆன்மீக சாதனையாகிய இந்தக் கர்மம் பெருக வேண்டும் **(ஸங்க்ரஹம்)**

என்ற உயர்ந்த நோக்கத்துடன் அவர்கள் தொடர்ந்து கர்மத்தை அனுசரித்து வருகிறார்கள். **கர்த்தா, கரணம், கர்மம்** ஆகியவற்றின் மூலமாக இந்தச் சேகரிப்பு (ஸங்க்ரஹம்) நடைபெறுகிறது. ஞானம், கர்மம், மற்றும் கர்த்தா ஆகியவையும் மும்மூன்று வகைப்படும்.

**ஜ்ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத:**
**ப்ரோச்யதே குணஸங்க்யானே யதாவச்ருணு தான்யபி (19)**

ஞானம், கர்மம் மற்றும் கர்த்தா ஆகியவையும் குணங்களின் வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்டு, சாங்க்ய சாஸ்திரத்தில் மும்மூன்று வகைகளாகப் பிரித்துப் பொருளுணர்த்தப்படுகிறது. அவற்றை உள்ளது உள்ளபடியாக என்னிடமிருந்து கேள். முதலில் வருவது, ஞானம் பற்றிய வகைப்பாடு.

**ஸர்வ பூதேஷு யேனைகம் பாவமவ்யயமீக்ஷதே**
**அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜானம் வித்தி ஸாத்வீகம் (20)**

அர்ஜுனா! எந்த ஞானத்தால் மனிதன் பல்வேறு வகைப்பட்ட, அனைத்து உயிரினங்களிலும் ஒரே அழிவற்ற பரமாத்ம உணர்வை, எந்தப் பாகுபாடும் வேறுபாடும் இன்றி, ஒருமைப்பாட்டு உணர்வுடன் காண்கிறானோ, அந்த ஞானத்தை நீ 'சாத்வீகமான ஞானம்' என்று அறிந்து கொள். ஞானம் என்பது இறைவனை அனுபவப்பூர்வமாக நேரடியாக தரிசனம் செய்து பெறுகின்ற அனுபூதியாகும். இந்த அனுபூதி வாய்த்த பிறகுதான் குணங்களும் முடிவுக்கு வருகின்றன. இது ஞானத்தின் பரிபக்குவமான நிலையாகும். இனி, 'ராஜஸீகமான ஞானம்' என்றால் என்ன? என்று பார்க்கலாம்.

**ப்ருதக்த்வேன து யஜ்ஞானம் நானாபாவான்பருதக்விதான்**
**வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஞானம் வித்தி ராஜஸம் (21)**

எந்த ஞானம், மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களையும் வெவ்வேறாகவும், பல்வேறுபட்ட உணர்வுகளால் தனித்தனியாகவும் 'இது நல்லது; இது கெட்டது' என்றெல்லாம் வேறுபடுத்தியும் அறிகிறதோ, அந்த ஞானத்தை நீ 'ராஜஸீகமானது' என்று அறிந்து கொள். அவ்வாறுதான் நீயும் வேற்றுமை உணர்வுடன் அறிகிறாய் என்றால், உன்னுடைய ஞானம் இப்போது 'ராஜஸீகமான நிலையில்' உள்ளதென்றும் அறிந்துகொள், இனி, 'தாமஸீகமான ஞானம் என்றால் என்ன?' என்று பார்க்கலாம்.

**யத்து க்ருத்ஸ்னவதேகஸ்மின்கார்யே ஸக்தமஹைதுகம்**
**அதத்வார்த்தவதல்பம் ச தத்தாமஸமுதாஹ்ருதம் (22)**

எந்த ஞானம் 'உடல்' என்ற அளவிற்கு மட்டுமே உணர்கிறதோ, இந்த உடலையே 'முழுமையானது' என்றெண்ணிக் கொள்வதற்கு ஒப்பான பற்றுணர்வுடன் நின்று விடுகிறதோ, யுக்தியின்றி, அதாவது, அகச் செயல் (அகக்கிரியை எதுவுமற்று உள்ளதோ, தத்துவத்தின் பொருள் வடிவமாக விளங்கும் பரமாத்மாவை அறிவதிலிருந்து வெகுதூரம் விலகியிருக்கிறதோ, கீழ்த்தரமான, அந்த ஞானம் 'தாமஸீகமானது' எனப்படுகிறது. அடுத்து வருவது கர்மத்தின் மூன்று வகைகள்.

**நியதம் ஸங்க ரஹிதமராகத்வேஷத : க்ருதம்**
**அஃபல ப்ரேப்ஸுனா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே (23)**

எந்தக் கர்மமானது **'நியதம்'** – சாஸ்திரவிதிகளால் நிச்சயிக்கப்பட்டுள்ளதோ (மற்றவை அன்று.) உலகியல் சேர்க்கை தோஷம் மற்றும் பலன் ஆகியவற்றைச் சிறிதும் விரும்பாத மனிதர்கள் மூலமாக விருப்பு, வெறுப்பு ஆகிய வேற்றுமை உணர்வின்றிச் செய்யப்படுகிறதோ, அந்தக் கர்மமே 'சாத்வீகமானது' என்று அழைக்கப்படுகிறது. (நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே, 'இறை ஆராதனை' என்றும் ஆன்ம சிந்தனைச் செயல் என்றும் கூறுவர். இதுமட்டுமே மேலான, பரம்பொருளாகிய பரமாத்மாவினுள் நுழைவு பெற்றுத் தரும் வல்லமை கொண்டது.)

**யத்து காமேப்ஸுனா கர்ம ஸாஹங்காரேண வா புன:**
**க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் (24)**

எந்தக் கர்மம் கடும் முயற்சியுடன் மிகவும் கஷ்டப்பட்டு நடைபெறுகிறதோ, பலனை விரும்பிச் செய்யப்படுகிறதோ மற்றும் ஆணவம் உடையவர்கள் மூலமாகச் செய்யப்படுகிறதோ, அந்தக் கர்மமே 'ராஜஸீகமானது' என்று சொல்லப்படுகிறது. இதைச் செய்பவரும்கூட அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைத்தான் செய்கிறார். ஆனால், பலனை விரும்பியும், ஆணவத்துடனும் செய்யப்படுகிறது என்ற அளவில் சாஸ்திர விதிகளினின்று வேறுபடுகிறது. எனவேதான், அவர் மூலமாக நடைபெறுகின்ற இந்தக் கர்மம் 'ராஜஸீகமானது' எனப்படுகிறது. அடுத்து வருவது, 'தாமஸீகமான கர்மம்'.

**அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமனவேக்ஷ்ய ச பௌருஷம்**
**மோஹாதாரப்யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே (25)**

எந்தக் கர்மமானது கடைசியில் அழிவடையப் போகிறதோ, **'ஹிம்ஸா' (இம்சை)** மற்றும் 'சாமர்த்தியம்' ஆகியவற்றைப் பற்றியெல்லாம் சிறிதும் ஆராயப்படாமல் வெறுமனே மோகவசப்பட்டு ஆரம்பிக்கப்படுகிறதோ அந்தக் கர்மமே 'தாமஸீகமானது' எனப்படுகிறது. இதிலிருந்தே, 'இந்தக் கர்மம் சாஸ்திர

விதிகளால் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் அல்ல' என்பது தெளிவாகிறது. ஆனால், அந்தப் பெயரில் வேறு ஏதோவொரு தவறான, குழப்பமான கொள்கையை அடிப்படையாகக் கொண்டு செய்யப்படுகின்ற, பிழையுடைய, வீணான செயலாகும் இது. அடுத்துவருவது கர்த்தாவின் (கர்மத்தைச் செய்பவன்) இலட்சணங்கள்.

**முக்தஸங்கோனஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமன்வித:**
**ஸித்த்யஸித்தயோர்நிர்விகார : கர்த்தா ஸாத்விக உச்யதே (26)**

எந்தக் கர்த்தா (கர்மத்தைச் செய்பவன்) உலகியல் சேர்க்கை தோஷங்களில் இருந்து முழுவதும் விடுபட்டவனாக, அகங்காரம் நிறைந்த பேச்சுகளைப் பேசாதவனாக, தைரியமானவனாக, மற்றும் உற்சாகம் நிரம்பியவனாக, சிரமேற் கொண்டுள்ள காரியம் வெற்றி பெற்றாலோ அல்லது தோல்வி அடைந்தாலோ அதற்காக மகிழ்ச்சி அல்லது துயரம் முதலான விகாரங்களுக்கு (ஒன்றுக்கொன்று வேறுபட்ட இருவேறுவிதமான உணர்வு நிலைகள்) எல்லா விதத்திலும் ஒருபோதும் இரையாகாதவனாக இருந்து கொண்டு, நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தில் இரவும் பகலும் தொடர்ந்து ஈடுபடுகிறானோ அத்தகைய 'கர்த்தாவையே' 'சாத்வீகமானவன்' என்று சொல்கிறார்கள். இதுவே உத்தமமான சாதகனின் இலட்சணங்கள் ஆகும். இங்கே, கர்மம் என்பது அதே நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே குறிப்பிடுகிறது.

**ராகீ கர்மஃபலப்ரேப்ஸுர்லுப்தோ ஹிம்ஸாத்மகோஅஷுசீ:**
**ஹர்ஷ சோகான்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித : (27)**

பற்றுதல் உடையவனாக, கர்மத்தின் பலனில் ஆசை கொண்டவனாக, பேராசை உடையவனாக, மற்றவர்களுக்குக் கஷ்டம் தரக் கூடியவனாக, புனிதமற்றவனாக, மகிழ்ச்சி, துயரம் ஆகிய இருவேறுபட்ட உணர்வு நிலைகளில் மூழ்கியவனாகத் திகழும் அத்தகைய கர்த்தாவை 'ராஜஸீகமானவன்' என்று சொல்கிறார்கள்.

**அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த்த: ஷடோஅநைஷ்க்ருதி கோஅலஸ:**
**விஷாதீ தீர்க்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே (28)**

எவனொருவன் அலைபாயும் சித்தம் உடையவனோ, அநாகரீகமானவனோ, கர்வம் உடையவனோ, கீழ்த்தரமானவனோ, பிறருடைய காரியங்களில் தடங்கலை உண்டாக்குபவனோ, மனவருத்தம் கொள்ளும் இயல்பினனோ, சோம்பல் உடையவனோ, எந்தக் காரியத்தையும் பிறகு செய்து கொள்ளலாம் என்று ஒத்திப் போடுபவனோ அவன் **(தீர்க்க ஸூத்ரி)** அதாவது தாமஸ குணம் கொண்டவன் என அழைக்கப்படுகிறான். அத்தகைய கர்த்தாவை 'தீர்க்கஸூத்ரி' – அதாவது,

நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தை, 'நாளை செய்து கொள்ளலாம்' என்று தள்ளிப் போடுபவன் ஆவான். ஒருவகையில் பார்த்தால், 'கர்மத்தைச் செய்ய வேண்டும் என்ற ஆசை அவனுக்கும் இருக்கவே செய்கிறது. இம்முறையில் கர்த்தாவின் இலட்சணங்கள் நிறைவு பெறுகிறது. அடுத்ததாக, யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஒரு புதிய கேள்வித்தொடரை எழுப்புகிறார் – அதுவே புத்தி, தாரணை, மற்றும் சுகம் ஆகியவற்றின் இலட்சணங்கள்.

**புத்தேர்பேதம் த்ருதேஷ்சைவ குணதஸ்த்ரிவிதம் ஸ்ருணு**
**ப்ரோச்யமானமசேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய (29)**

தனஞ்ஜயனே! புத்தி மற்றும் தாரணை, சக்தி, சுகம் ஆகியவையும்கூடக் குணங்களை அடிப்படையாகக் கொண்டு, மூன்று விதமாக வகைப்படுத்தப்படுகிறது. அவற்றிற்கிடையில் உள்ள வேறுபாட்டினை முழுமையான அளவில், ஒவ்வொரு தனிப்பட்ட பிரிவின்கீழ் வகைப்படுத்தப்பட்டுள்ளதை என்னிடமிருந்து கேள்!

**ப்ரவ்ருத்திஞ் ச நிவ்ருத்திஞ் ச கார்யா கார்யே பயாபயே**
**பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்தி ஸா பார்த்த ஸாத்விகீ (30)**

பார்த்தனே! செயலில் ஈடுபடுவது (பிரவிருத்தி) மற்றும் ஈடுபடாதது (நிவிருத்தி) ஆகியவற்றையும் கடமை மற்றும் கடமையற்றது ஆகியவற்றையும் பயம் மற்றும் பயமற்ற தன்மை ஆகியவற்றையும் பந்தம் மற்றும் மோட்சம் ஆகியவற்றையும் எந்த புத்தியானது உள்ளதை உள்ளவாறு அறிந்து கொள்கிறதோ, அந்த புத்தி 'சாத்வீகமானது' எனப்படுகிறது. அதாவது, பரமாத்மப் பாதை (நிவிருத்தி) பிறப்பு–இறப்பு என்னும் சுழற்சியுடைய உலகியல்பாதை (பிரவிருத்தி) ஆகியவற்றைப் பற்றித் தெள்ளத் தெளிவாகவும் சரியான முறையிலும் அறிந்திருப்பதுவே 'சாத்வீகமான புத்தி' எனப்படுகிறது. அத்துடன்–

**யயா தர்மமதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச**
**அயதாவத்ப்ரஜானாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸி (31)**

பார்த்தனே! எந்த புத்தியின் மூலமாக மனிதன் தர்மம் மற்றும் அதர்மத்தையும் மற்றும் கடமை மற்றும் கடமையற்றது என்பதையும் உள்ளது உள்ளபடியாக, அறிந்து கொள்வது இல்லையோ, அரைகுறையாக மட்டுமே அறிந்து கொண்டிருக்கிறானோ, அத்தகைய புத்தியே, 'ராஜஸீகமானது' எனப்படுகிறது. அடுத்ததாக, 'தாமஸீகமான புத்தி என்றால் என்ன?' என்று பார்க்கலாம்.

**அதர்மம் தர்மமிதி யா மன்யதே தமஸாவ்ருதா**
**ஸர்வார்த்தான் விபரீதாம்ஷ்ச்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ (32)**

பார்த்தனே! தமோ குணத்தால் சூழப்பட்டு உள்ள எந்த புத்தியானது அதர்மத்தை தர்மம் என்று அறிந்து கொள்கிறதோ, மற்றும், எல்லாவிதமான நன்மைகளையும் முரண்பாடான, விபரீதமான கண்ணோட்டத்துடன் பார்க்கிறதோ அத்தகைய புத்தியே 'தாமஸீகமானது' எனப்படுகிறது.

இங்கே, முப்பதாவது சுலோகத்தில் இருந்து முப்பத்திரண்டாவது வரைக்கும் புத்தியின் மூன்று வகைப்பாடுகள் கூறப்பட்டன. முதல் வகையான புத்தியானது, எந்தக் காரியத்தில் இருந்து விடுதலை (நிவிருத்தி) பெறவேண்டும் என்பதையும் மற்றும் எந்தக் காரியத்தில் ஈடுபட வேண்டும்? (பிரவிருத்தி) என்பதையும், கடமை எது? எது கடமை இல்லை? என்பதையும் மிகவும் தெளிவான முறையில் அறிந்து கொள்கிறது. இதுவே 'சாத்வீகமான புத்தி' எனப்படுகிறது. இரண்டாவதாக, எந்த புத்தியானது எது கடமை? எது கடமை இல்லை? என்பவற்றைத் தனித் தனியாகப் பகுத்தறியாமல் இரண்டையும் கலந்து கலப்படமான முறையில் அறிந்து கொள்கிறதோ, உள்ளதை உள்ளபடியாக அறிந்து கொள்வது இல்லையோ அதுவே, 'ராஜஸீகமான புத்தி' எனப்படுகிறது. மூன்றாவதாக, அதர்மத்தைத் தர்மம் என்றும் அழியும் பொருளை அழிவற்றது என்றும் நன்மையைத் தீமை என்றும், இந்த முறையில், முரண்பட்ட, விபரீதமான கண்ணோட்டத்துடன் அறிந்து கொள்கிறதோ அதுவே, 'தாமஸீகமான புத்தி' எனப்படுகிறது. இவ்வாறு, புத்தியின் வகைப்பாடு நிறைவடைகிறது. அடுத்து வருவது **'த்ருதி'**– தாரணையின் மூன்று வகைகள்:–

**த்ருத்யா யயா தாரயதே மனப்ராணேந்த்ரியக்ரியா**
**யோகேனாவ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ (33)**

**'யோகேன'**– யோகச் செயல்முறைப் பயிற்சியின் மூலமாக, **'அவ்யபிசாரிணீ'**– யோகச் சிந்தனையைத் தவிர, வேறு எதைப் பற்றிய நினைப்பு வந்தாலும் அது **'வ்யபிசாரம்'** (தவறான, ஒழுக்கம் தவறிய நெறிமுறை) எனப்படும். சித்தம் ஆன்ம சிந்தனையிலிருந்து விலகிப் போய்விடுவதே வ்யபிசாரம் (ஒழுக்கம் தவறிய நெறிமுறை) ஆகும். ஆகவே, அத்தகைய 'அவ்யபிசாரிணீ தாரணையின்' மூலமாக, அதாவது, இஷ்ட தெய்வத்தைத் தவிர (சத்குரு – இறைவன்), வேறு எதைப் பற்றிய சிந்தனையும் இல்லாமல், எவனொருவன் மனம், உயிர் மற்றும் புலன்களின் செயல்பாடுகளையெல்லாம் ஆன்மீகச் செயல்களில் ஒன்றுபடுத்தி ஈடுபடச் செய்கிறானோ, அத்தகைய தாரணை, 'சாத்வீகமானது' ஆகும். அதாவது, மனம், உயிர் மற்றும் புலன்களை இஷ்ட தெய்வமாகிய சத்குருவின் திசையிலேயே

செலுத்துவதுதான், 'சாத்வீகமான தாரணை' எனப்படும். அத்துடன் –

**யயா து தர்மகாமார்த்தான்த்ருத்யா தாரயதேஅர்ஜுன**
**ப்ரஸங்கேன ஃபலாகாங்க்ஷீ த்ருதி : ஸா பார்த்த ராஜஸீ (34)**

பார்த்தனே! பலனில் விருப்பமுள்ள மனிதர்கள் அதிகமான பற்றுணர்வுடன் எந்த தாரணையின் மூலமாக தர்மம், அர்த்தம் மற்றும் காமம் ஆகியவற்றை மட்டுமே (மோட்சத்தை விரும்பாமல்) தன்னில் வரித்துக் கொள்கிறார்களோ அதுவே, 'ராஜஸீகமான தாரணை' எனப்படுகிறது. இந்த தாரணையிலும் இலட்சியம் என்னவோ அதேதான். ஆனால், ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளும் எண்ணத்துடன் நடைபெறுகிறது. எதைச் செய்தாலும் பதிலுக்கு எதையோ எதிர்பார்க்கின்ற எண்ணம் இருக்கிறது. இனி, 'தாமஸீகமான தாரணை என்றால் என்ன?' என்று பார்க்கலாம்.

**யயா ஸ்வப்னம் பயம் சோகம் விஷாதம் மதமேவ ச**
**ந விமுஞ்ஜதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ (35)**

பார்த்தனே! தாழ்ந்த மற்றும் கீழ்த்தரமான அறிவுடைய மனிதர்கள் எந்த தாரணையின் மூலமாக உறக்கம், பயம், மனக் குழப்பம், துக்கம் மற்றும் கர்வம் ஆகியவற்றையெல்லாம் (இவற்றை எல்லாம் துறக்காமல் அப்படியே சேர்த்து வைத்துக் கொண்டு) தாரணை செய்து கொண்டிருக்கிறார்களோ, அவர்களுடைய தாரணை 'தாமஸீகமானது' ஆகும். இங்கே கேள்வி நிறைவடைகிறது. அடுத்ததாக வருவது 'சுகம்'.

**ஸுகம் த்விதானீம் த்ரிவிதம் ஷ்ருணு மே பரதர்ஷப**
**அப்யாஸாத்ரமதே யத்ர துக்காந்தம் ச நிகச்சதி (36)**

அர்ஜுனா! அடுத்ததாக, சுகம் என்பதன் மூன்று வகைகளையும் என்னிடமிருந்து கேள்! இவற்றில், எந்த சுகமானது, சாதகனை யோகப் பயிற்சியிலேயே திளைத்திருக்கச் செய்கிறதோ, அதாவது, சித்தத்தை எல்லாப் பக்கங்களிலிருந்தும் முழுவதுமாக விடுவித்துக் கொண்டு இஷ்ட தெய்வமாகிய சத்குருவின் தெய்வீக நினைவுகளிலேயே திளைத்திருக்கச் செய்கிறதோ, மேலும், எல்லாத் துக்கங்களையும் அழிக்கவல்லதோ, அத்துடன்

**யத்ததக்ரே விஷமிவ பரிணாமேஅம்ருதோபமம்**
**தத்ஸுகம் ஸாத்வீகம் ப்ரோக்தமாத்மபுத்திப்ரஸாதஜம் (37)**

மேலேகூறப்பட்டுள்ள அந்த சுகமானது, சாதனையின் ஆரம்பகாலத்தில் எல்லாவிதத்திலும் விஷத்திற்கு ஒப்பானதாக இருந்தாலும் (பிரஹலாதனை

நெருப்பில் தள்ளி விட்டனர். மீராபாய் அம்மையாருக்கு விஷம் கொடுக்கப்பட்டது.) கபீர்தாஸர் பின்வருமாறு கூறுகிறார்:

**ஸுகியா ஸப் ஸம்ஸார் ஹை, காயேஔளர்ஸோவே**
**துகியா தாஸ்கபீர் ஹை, ஜாகே ஔளர் ரோவே"**

"இந்த உலகம் உண்பதிலும் உறங்குவதிலும் இன்பங்கண்டு சுகமாக இருக்கிறது. ஆனால், இறைவனின் அடிமையான இந்தக் கபீரோ விழித்துக் கொண்டும் அழுது கொண்டும் துக்கமாக இருக்கிறான்." ஆகவே, ஆன்மீக சாதனை ஆரம்பத்தில் விஷத்தைப் போன்றே தெரிகிறது.) இறுதி விளைவில் (பரிணாமம்) அமிர்தமாகிறது. அமிர்த தத்துவத்தைப் (மரணமில்லாப் பெருவாழ்வு) பெற்றுத் தருகிறது. ஆகவே, ஆன்மாவுடன் இணைவு பெற்றுள்ள புத்தியின் பிரசாதத்தில் இருந்து உண்டாகும் அத்தகைய ஆன்ம சுகம் 'சாத்வீகமானது' எனப்படுகிறது. அத்துடன்

**விஷயேந்த்ரியஸம்யோகாத்யத்ததக்ரேஅம்ருதோபமம்**
**பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம்ஸ்ம்ருதம் (38)**

எந்த சுகமானது, புலனின்ப விஷயம் மற்றும் புலன்களின் சேர்க்கையால் ஏற்படுகிறதோ, எல்லாவிதத்திலும், அவற்றை அனுபவிக்கின்ற காலத்தில் அமிர்தத்திற்கு ஒப்பானதாகத் தெரிகிறதோ, ஆனால், இறுதியில், விஷத்திற்கு ஒப்பான விளைவைக் கொண்டுள்ளதோ, அதாவது, பிறப்பு – இறப்பு ஆகியவற்றிற்குக் காரணமாக அமைகிறதோ அந்த சுகமானது, 'ராஜஸீகமானது' எனப்படுகிறது. அத்துடன்

**யதக்ரே சானுபந்தே ச ஸுகம் மோஹனமாத்மன:**
**நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத்தாமஸமுதாஹ்ருதம் (39)**

எந்த சுகமானது அனுபவிக்கின்ற காலத்திலும் மற்றும் விளைவுகளிலும் ஆன்மாவை மோகத்தில் ஆழ்த்துகின்றதோ, உறக்கம், **'யா நிசா ஸர்வபூதானாம்'** – இந்த உலகம் என்னும் இரவில் அமிழ்ந்து கிடக்கச் செய்கின்றதும், சோம்பல் மற்றும் வீணான செயல்களின் மூலம் உருவாகின்ற அந்த சுகமானது 'தாமஸீகமானது' எனப்படுகிறது. அடுத்து யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், 'அனைவரையும் பின்தொடர்ந்து கொண்டிருக்கும் இந்தக் குணங்களின் செயல்பாடு எதுவரை நீடிக்கிறது' என்பதைப் பற்றிக் கூறுகிறார்.

**ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புன:**
**ஸத்வம் ப்ரகிருதிஜைர்முக்தம் யதேபி: ஸ்யாத்ரிபிர்குணை: (40)**

அர்ஜுனா! பூமியிலும் சொர்க்கத்திலும் அல்லது தெய்வங்களிலும் கூட, படைப்பில் இருந்து உண்டான இந்த மூன்று குணங்களைக் கடந்தவர் என்று எவரும் கிடையாது. அதாவது, பிரம்மாவில் இருந்து புழு, பூச்சி முதலான அனைத்தும் அடங்கிய ஒட்டு மொத்த உலகமும் கொஞ்சகாலமே நீடித்திருக்கும் தன்மை உடையன. ஒவ்வொரு கணமும் மாற்றத்திற்கு உட்படும் இயல்புடையன. பிறப்பதும் இறப்பதுமாக இருப்பன. மூன்று குணங்களுக்குக் கட்டுப்பட்டன. அதாவது, தெய்வங்களும் கூட மூன்று குணங்கள் என்ற விகாரங்களால் (வேறுபட்ட உணர்வுகள்) ஆக்கப்பட்டவைதான், அழிவுறும் தன்மை கொண்டவைதான்.

இங்கே, மற்றபிற தெய்வங்களைப் (தேவதைகள்) பற்றி நான்காவது முறையாக யோகேஷ்வரர் குறிப்பிடுகிறார். ஏழாவது, ஒன்பதாவது, பதினேழாவது மற்றும் பதினெட்டாவது அத்தியாயங்களில் 'தேவதை' பற்றிய விவாதம் இடம் பெற்றுள்ளது. இவை அனைத்திற்கும் அர்த்தம் என்னவோ ஒன்றுதான். அதாவது, 'தெய்வங்களும் (தேவதைகளும்) மூன்று குணங்களுக்கு கட்டுப்பட்டவைதான்' என்பதாகும். எவரெல்லாம் இவற்றை வழிபடுகின்றனரோ, அழிவுறும் இயல்புடைய ஒன்றையே அவர்கள் வழிபடுகின்றனர் என்றறிக!

பாகவதத்தின் பன்னிரண்டாவது காண்டத்தில் சுக தேவ மகரிஷியும் பரீக்ஷித் மகாராஜாவும் இடம் பெறுகின்ற புகழ்பெற்ற உரையாடல் இடம் பெற்றுள்ளது. அதில், சுகதேவமகரிஷி தமது உபதேசத்தில் பின்வருமாறு கூறுகிறார்.

"ஆணுக்கும் பெண்ணிற்கும் இடையில் காதல் ஏற்பட வேண்டுமென்றால் சிவன் – பார்வதியையும் ஆரோக்கியம் வேண்டுமென்றால் அஸ்வினி குமாரர்களையும் வெற்றி வேண்டுமென்றால் இந்திரனையும் மற்றும் செல்வம் வேண்டுமென்றால் குபேரனையும் வழிபட வேண்டும்." இவ்வாறு பல்வேறு வகையான ஆசைகளைப் பற்றி எல்லாம் கூறிவிட்டுக் கடைசியில் தீர்மானிக்கும் வகையில் அவர், "எல்லாவகையான ஆசைகளையும் நிறைவேற்றிக் கொள்வதற்கும் மற்றும் மோட்சத்திற்காகவும் பகவான் நாராயணரை மட்டுமே வழிபட வேண்டும்" என்று கூறுகிறார். **''துளஸீமூலஹிம் ஸீஞ்சியே, ஃபலய் அகாய்''** – துளஸீதாஸரும்கூட இதே கருத்தைத்தான், "பரமபிதாவாகிய பரமாத்மா ஆசைகள் அனைத்தையும் நிறைவேற்றி வைத்து உன்னைத் திருப்தி அடையச் செய்வார்" என்று கூறுகிறார். எனவே, எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பிரபுவை நினையுங்கள். அவரை அடைவதற்கான ஒரே உபாயம், 'சத்குருவிடம் அடைக்கலம் பெறுதல் மற்றும் கபடமற்ற உள்ளத்துடன் அவருக்குச் சேவைபுரிதல்' ஆகும்.

அசுர மற்றும் தெய்வீகச் செல்வம் (குணம்) ஆழ்மனத்தில் ஒன்றுக்கு ஒன்று இருவேறுபட்ட எண்ணவோட்டங்களைக் குறிப்பிடுவதாகும். இவற்றில், தெய்வீகச் செல்வமோ பரம தெய்வமாகிய பரமாத்மாவை நேரடியாக தரிசனம் செய்வதற்கு உறுதுணையாக அமைகின்றன. எனவேதான் 'தெய்வீகமானவை' (தைவீ) எனப்படுகின்றன. ஆனால், இந்த தெய்வீகச் செல்வம் எனப்படுவதும்கூட மூன்று குணங்களுக்குள் அடங்குபவைதான். குணங்கள் அமைதியடைந்து விட்டபிறகு, இந்த தெய்வீகச் செல்வம் (தேவதை) எனப்படுபவையும் அமைதியடைந்து விடுகின்றன. அதற்குப்பிறகு, அந்த ஆன்மாவில் திருப்தியுற்ற யோகிக்கென்று எந்தவிதமான கடமையும் எஞ்சியிருப்பதில்லை.

அடுத்து வருவது, ஏற்கனவே எழுப்பப்பட்ட பிரச்சினைதான். அதுவே வர்ண அமைப்பு என்பதாகும். வர்ணம் என்பது பிறப்பை அடிப்படையாகக் கொண்டு அமைவதா? அல்லது, கர்மத்தை அடிப்படையாகக் கொண்டு அடையப்படுகின்ற 'ஆழ்மனத் தகுதி நிலையின் பெயரா?' இதுபற்றிப் பார்க்கலாம்.

**ப்ராஹ்மணக்ஷத்ரியவிசாம் ஷூத்ராணாம் ச பரந்தப**
**கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவப்ரபவைர்குணை :(41)**

மேலான தவத்தை உடையவனே! பரந்தப! பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் மற்றும் சூத்திரர் ஆகியோர்களின் கர்மங்கள் சுபாவத்தில் இருந்து தோன்றிய குணங்களின் மூலமாகத் தனித்தனியாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. சுபாவத்தில் சாத்வீகமான குணம் இருந்தால் உங்களுடைய அகத்தில் தூய்மை இருக்கும், தியானம், சமாதி ஆகியவற்றில் நிலைக்கின்ற ஆன்மீகத் திறன் இருக்கும். தாமஸீகக் குணம் இருந்தால் சோம்பல், உறக்கம், கவனமின்மை இருக்கும். உங்கள் மூலமாக நடைபெறும் கர்மத்தின் தரமும் அந்தந்த நிலைகளுக்கு ஏற்பவே அமையும். எந்தக் குணம் செயல்படுநிலையில் உள்ளதோ, அதுவே உங்களுடைய உண்மை வர்ணம் ஆகும். அதுவே உங்களுடைய உண்மை வடிவமும் கூட. இவ்வகையில் ஒருபாதி சாத்வீகம் – மறுபாதி ராஜஸீகம் – இதுவே க்ஷத்திரிய வர்க்கத்தினரின் குண அமைப்பு மற்றும் பாதியை விடக் கொஞ்சம் குறைவான அளவு தாமஸீகம், அதிகளவு ராஜஸீகம் – இதுவே இரண்டாவது வர்க்கமாகிய வைசியரின் குணஅமைப்பு ஆகும். இங்கே, 'வர்ண அமைப்பு' என்ற பிரச்சினையை யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் நான்காவது முறையாக எழுப்புகிறார். இரண்டாவது அத்தியாயத்தில் இந்த நான்கு வர்ணங்களில் ஒன்றான 'க்ஷத்திரியர்' என்ற பெயரை மட்டும் குறிப்பிட்டு, "க்ஷத்திரியருக்கென்று யுத்தம் செய்வதைத் தவிர, நன்மை தரவல்ல வேறு வழி எதுவுமில்லை" என்றார். மூன்றாவது அத்தியாயத்தில் அவர், "பலவீனமான குணமுள்ளவனாக இருந்தாலும் கூட அவனது சுபாவத்தில் இருந்து தோன்றிய

திறனுக்கு ஏற்ப, சுயதர்மத்தைக் கடைப்பிடித்து வருகையில் ஒருவேளை மரணமே வந்தாலும் கூட மேலான நன்மையைப் பெற்றுத் தருவதாகும். மற்றவர்களைப் பார்த்து அவர்களைப் போலவே நடிக்க முயல்வது பயத்தையே உண்டாக்க வல்லதாகும்" என்று கூறினார். நான்காவது அத்தியாயத்தில் அவர், "இந்த நான்கு வர்ணங்களையும் நானே உருவாக்கினேன்" என்றார். அப்படி என்றால், "அவர்தான் மனிதர்களை எல்லாம் நான்கு பிரிவுகளாகப் பிரித்துப் போட்டாரா என்ன?" என்ற கேள்விக்கு அவர், "அப்படி இல்லை. **'குணகர்ம விபாகச:'**– குணங்களின் தகுதியை அடிப்படையாகக் கொண்டு, இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே நான்கு சாதனைப் படிநிலைகளாக ஒழுங்குமுறைப்படுத்தினேன்" என்று பதில் கூறினார். இங்கே குணம் ஒரு அளவுகோல் ஆகும். அவற்றின் மூலமாக அளவீடு செய்து, மதிப்பிட்டு, இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வதற்கான 'கர்மத் திறனே' நான்கு பிரிவுகளாகப் பிரித்து ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டு உள்ளது. ஸ்ரீகிருஷ்ணரின் வார்த்தைகளில் சொல்வதென்றால், 'புலன் உணர்வுகளை எல்லாம் கடந்து விளங்குபவராகிய பரமாத்மாவை அடைவதற்காகச் செய்யப்படும் ஆன்மீகக் கிரியை (செயல்) மட்டுமே கர்மம் ஆகும். 'ஏக இறைவன் (சத்குரு) மீது மட்டுமே நம்பிக்கை கொண்டு ஆரம்பிக்கப்படுகின்ற, இறைவனை அடைவதற்காக அனுசரிக்கப்படுகின்ற இறைஆராதனை' ஆகும். ஆரம்பத்தில் இருந்தே சொல்லி வருவதைப்போல, ஆன்மீகச் சிந்தனைச் சிறப்பு விதிமுறைகள் ஆகும். அத்தகைய வேள்வியை நிறைவேற்றுவதற்காக மட்டுமே செய்யப்படுகின்ற இந்த நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தையே (யக்ஞார்த்த கர்மம்) நான்கு பிரிவுகளாகப் பிரித்து ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டுள்ளது. இனிமேல், நம்மிடம் எந்த குணஅமைப்பு உள்ளது? மற்றும் நாம் எந்த சாதனைப் பிரிவைச் சேர்ந்தவர்? என்பதையெல்லாம் எப்படி அறிந்து கொள்வது? அதுபற்றி இங்கே கூறவிழைகிறார்.

**ஷமோ தமஸ்தப : ஷௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச**
**ஜ்ஞானம் விஜ்ஞானமாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம் (42)**

மனக் கட்டுப்பாடு, புலனடக்கம், முழுமையான புனிதஉணர்வு, மனம், வாக்கு மற்றும் உடலை இஷ்ட தெய்வத்தின் (சத்குரு–இறைவன்) விருப்பத்திற்கு ஏற்ப அடக்குதல், தவம், மன்னித்தருளும் குணம், மனம், புலன்கள் மற்றும் உடல் ஆகியவை அனைத்திலும் எளிமையுணர்வு, இறைநம்பிக்கையுடன் கூடிய புத்தி அதாவது, இஷ்டதெய்வத்திடம் (சத்குரு–இறைவன்) மட்டுமே கொண்டிருக்கும் நல்லவிதமான நம்பிக்கையுணர்வு, ஞானம், அதாவது, பரமாத்மாவை மட்டுமே அறிகின்ற நோக்கம் கொண்டு செயல்படுதல்,

விஞ்ஞானம், அதாவது, பரமாத்மாவிடமிருந்து கிடைக்கின்ற இறைக் கட்டளைகளை அறிகின்ற விழிப்புணர்வு, மற்றும் அதற்கேற்ப ஆன்மீகப் பாதையில் முன்னேறிச் செல்வதற்கான திறன் — இவ்வனைத்துச், சுபாவங்களும் பிராம்மண சாதனைப் பிரிவினருக்காகத் தோன்றிய கர்மம் ஆகும். அதாவது, எப்பொழுது சுபாவத்தில் இந்தத் தகுதிகள் அனைத்தும் வந்து விடுகின்றனவோ, கர்மம் இயல்பாகவே தங்கு தடையின்றிப் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கி, சுபாவத்தில் ஒன்று கலந்து விடுகின்றதோ, அப்போது அவர் பிராம்மண சாதனைப் பிரிவின் கர்த்தா (கர்மத்தைச் செய்பவர்) ஆகிறார். அத்துடன்

**ஷௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம்**
**தானமீஷ்வரபாவஷ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் (43)**

வீரதீரம், தெய்வீக ஒளியுடன் (தேஜஸ்) இணைந்திருத்தல், தைரியம், ஆன்ம சிந்தனையில் நேர்த்தியான திறன்பாடு, அதாவது, **'கர்மஸுகௌசலம்'**— கர்மம் செய்வதில் நேர்த்தியான திறன்பாடு, இயற்கையுடனான மோதலில் இருந்து பின்வாங்காத இயல்பு, தானம், அதாவது, முழுமையான சமர்ப்பண உணர்வு, அனைத்துவிதமான எண்ணங்களின் மீதும் தலைமையுணர்வு, அதாவது, மேலான இறைஉணர்வு — இவை அனைத்தும் க்ஷத்திரியர்களின் **'ஸ்வபாவஜம்'**— இயல்பில் இருந்து தோன்றிய கர்மம் ஆகும். இயல்பாகவே இந்தத் தகுதிகள் காணப்பட்டால் அத்தகைய கர்த்தா (கர்மத்தைச் செய்பவர்) க்ஷத்திரிய பிரிவினர் எனப்படுகிறார்கள். அடுத்து வருவது, வைசியர் மற்றும் சூத்திரர் என்னும் சாதனைப் பிரிவுகள் பற்றிய விளக்கம்.

**க்ருஷி கௌரக்ஷ்ய வாணிஜ்யம் வைஷ்ய கர்ம ஸ்வபாவஜம்**
**பரிசர்யாத்மகம் கர்ம ஷூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் (44)**

விவசாயம், பசுவளர்ப்பு (கோரக்ஷா) மற்றும் தொழில் புரிதல் ஆகியவை வைசியரின் இயல்பில் இருந்து பிறக்கின்ற கர்மம் ஆகும். பசுக்களைப் பேணிப் பாதுகாத்தல் (கோபாலன்) என்றால் என்ன? எருமை மாடுகளை எல்லாம் கொன்று விடலாம் என்று அர்த்தமா? இல்லை, ஆடுகளை வைத்துக் கொள்ளக் கூடாது என்று பொருளா? அப்படி எல்லாம் ஒன்றுமே கிடையாது. பண்டைய வேத இலக்கியத்தில் 'கோ' என்னும் சொல் ஆழ்மனம் (அந்தகரணம்) மற்றும் புலன்களைக் குறிப்பிடுகின்றது. 'கோரக்ஷா' என்பதற்குப் 'புலன்களைப் பாதுகாத்தல்' என்று பொருள். விவேகம், வைராக்கியம், புலனடக்கம் (தமம்), மனக்கட்டுப்பாடு (சமம்) ஆகியவற்றைப் பயிற்சி செய்வதன் மூலம் இந்தப் புலன்கள் பாதுகாக்கப்படுகின்றன. மேலும், காமம், கோபம், லோபம் (பேராசை), மோகம் ஆகியவற்றின் மூலமாகப் புலன்கள் வழி தவறிச் சிதறுண்டு போய்விடுகின்றன,

பலவீனமடைந்து நலிவுறுகின்றன. ஆன்மீகச் செல்வமே நிலையான செல்வம் ஆகும். இதுவே ஒருவருடைய நிஜமான செல்வமாகும். ஒருமுறை நம்மை வந்தடைந்து விட்டால் ஒருபோதும் நம்மை விட்டுப் பிரிவதில்லை. படைப்பின் இருமைகளிலிருந்து, அதாவது, ஒன்றுக்கொன்று வேறுபட்ட உணர்வுநிலைகளின் மோதலில் இருந்து, அவற்றைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேமிப்பதுவே 'தொழில் செய்தல்' எனப்படுகிறது. **வித்யா தனம் ஸர்வதனம் ப்ரதானம் –** 'ஆன்மவித்யையே எல்லாச் செல்வங்களிலும் உயர்ந்தது. இதனைச் சம்பாதிப்பதுதான் 'வணிகம் செய்தல்' எனப்படுகிறது. விவசாயம் என்றால் என்ன அர்த்தம்? இந்த உடலே ஒரு க்ஷேத்திரம் ஆகும். இதனுடைய அகத்தில் விதைக்கப்படுகின்ற விதைகள் எனப்படும் எண்ணங்களே, வினைகளின் (சம்ஸ்காரம்) வடிவில் நல்லவை, கெட்டவைகளாக முளைத்தெழுகின்றன. அர்ஜூனா! இந்த (பற்றற்ற) நிஷ்காம கர்மத்தில் விதைக்கப்படுகின்ற விதையானது, அதாவது, ஆரம்பம் ஒருபோதும் அழிவதில்லை. (இங்கே கர்மம் எனப்படுவது இந்த மூன்றாவது சாதனைப் பிரிவுக்குட்பட்ட கர்மம் அதாவது, இஷ்ட தெய்வத்தின்மீது (சத்குரு – இறைவன்) செய்யப்படுகின்ற ஆன்ம சிந்தனை எனப்படும் நியமிக்கப்பட்டுள்ள கர்மம் ஆகும். பரம தத்துவத்தின்மீது செய்யப்படுகின்ற ஆன்ம சிந்தனைக்கான விதையானது இந்த உடல் என்னும் க்ஷேத்திரத்தில் சத்குருவின் மூலமாக விதைக்கப்படுகிறது அல்லவா! அதனை நன்கு பாதுகாத்தபடியே, அதனை அழிக்கின்ற நோக்கத்துடன் முளைக்கின்ற 'களைகள்' எனப்படும் 'முரண்பாடான தீய எண்ணவோட்டங்களாகிய' காமம், கோபம் முதலான விகாரங்களை எல்லாம் வேருடன் பிடுங்கியெறிந்து ஆன்மீகச் செயலினை நன்கு பராமரித்து வளர்த்து வருவதையே 'விவசாயம்' என்கிறோம்.

**"க்ருஷி நிராவஹிம் சதுர் கிஸானா**
**ஜிமி புத தஜஹிம் மோஹ மத் மானா"**
**(ராம சரித மானஸ்4/14/8)**

இந்தமுறையில் புலன்களின் பாதுகாப்பு மற்றும் படைப்பின் இருமைகளில் இருந்து, அதாவது, வெவ்வேறுபட்ட உணர்வு நிலைகளின் மோதலில் இருந்து ஆன்மீக செல்வத்தை கொஞ்சம் கொஞ்சமாகச் சேகரிப்பது, மற்றும், இந்த உடல் என்னும் க்ஷேத்திரத்தில் பரம தத்துவ பரமாத்மாவின் சிந்தனையைப் போற்றிப் பேணிப் பாதுகாத்து வளர்த்தல் இவை வைசிய சாதனைப் பிரிவின் கர்மம் ஆகும்.

ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில் **'யஜ்ஞ சிஷ்டாசின:'–** வேள்வி நிறைவு பெறுகின்ற காலத்தில் அது எதைத் தருகிறதோ, அதுவே 'சர்வ வல்லமை படைத்த இறைவன்' (பராத்பர பிரம்மம்) ஆகும். அதை அடைகின்ற (அருந்துகின்ற)

சாதுமக்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டு விடுகின்றனர். மேலும், அந்த 'இறைவனை அடைதல்' என்னும் நிலையைப் பெறுவதற்குக் கொஞ்சம் கொஞ்சமாக ஆன்மீகச் சிந்தனைச் செயலின் தியானத்தில் ஈடுபடுவதன் மூலமாக விதைக்கும் பணியானது நடைபெறுகிறது. அந்த ஆன்மீகச் செயலை இந்த உடல் என்னும் க்ஷேத்திரத்தில் பராமரித்தல், பேணிப்பாதுகாத்தல் என்பதையே 'விவசாயம்' என்கிறோம். வேத சாஸ்திரங்களில் 'அன்னம்' என்பதற்கு 'பரமாத்மா' என்று பொருள். அந்தப் பரமாத்மா ஒன்று மட்டுமே அருந்துவதற்குத் தகுதி படைத்த **(அசன்)** 'அன்னம்' ஆகும். ஆன்மீகச் சிந்தனையின் நிறைவுக் காலத்தில் இந்த ஆத்மா, பரமாத்மா என்கின்ற அன்னத்தை அருந்தி முழுமையாக திருப்தியடைந்து விடுகிறது. அதற்குப் பிறகு ஒருபோதும் அது அதிருப்தி அடைவது இல்லை. பிறப்பு, இறப்பு என்ற நிலைக்கு மீண்டும் வருவதில்லை. இந்த அன்னத்தினைத் தருகின்ற ஆன்மீகக் கிரியை என்னும் விதையை நன்கு சேமித்து வைத்துக் கொண்டு, இந்த உடல் என்னும் க்ஷேத்திரத்தில் அதனைக் கவனத்துடன் பராமரித்து, போற்றிப் பேணிப் பாதுகாத்து வளர்த்து வருவதையே 'விவசாயம்' என்கிறோம்.

தன்னை விடவும் ஆன்மீக சாதனையில் மிகவும் உயர்ந்த நிலைகளை எட்டியுள்ள, இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலையை அடையப் பெற்றுவிட்ட, மகாபுருஷர்களாகிய சத்குருவிற்குச் சேவை செய்தல், சூத்திரர்களின் சுபாவத்திற்கு ஒத்து வருகின்ற, அவர்களுடைய அக இயல்பிலேயே அமைந்துள்ள கர்மம் ஆகும். 'சூத்திரர்' என்பதற்குத் 'தாழ்ந்தவர்' என்று அர்த்தம் கிடையாது. மாறாக, 'குறைவான அறிவுடையவர்' என்பதே சரியான பொருளாகும். ஆன்மீகச் சாதனைப் பிரிவில் ஆரம்ப நிலையைச் சேர்ந்த சாதகரே ' சூத்திரர்' ஆவார். நுழைவு பெறுகின்ற நிலையில் உள்ள அந்த சாதகர் சேவையில் இருந்தே ஆரம்பிக்கட்டும். சேவையின் மூலமாகக் கொஞ்சம் கொஞ்சமாக அவனது இதயத்தில் ஆன்மீக எண்ணங்கள் உண்டாகத் தொடங்கும். மேலும், படிப்படியாக முன்னேறிச் சென்று அவன் வைசிய, க்ஷத்திரிய மற்றும் பிராம்மண சாதனைப் பிரிவுகளை எல்லாம் ஒவ்வொன்றாகக் கடந்து சென்று அனைத்து வர்ண அமைப்புகளையும் நிறைவு செய்து விட்டு, பிரம்மத்தில் நுழைவு பெற்று விடுகின்றான். சுபாவம் அல்லது மானுட அக இயல்பு என்பது மாறிக் கொண்டே இருப்பது. சுபாவ மாற்றத்துடன் சேர்ந்தேதான் வர்ண அமைப்பிலும் மாற்றம் உண்டாகிறது. உண்மையில், இந்த வர்ண அமைப்பு எனப்படும் மிகவும் உயர்ந்தது, உயர்ந்தது, நடுத்தரம், மற்றும், தாழ்ந்தது எனும் நான்கு படிகளும் கர்மப்பாதையில் செல்கின்ற ஒரே சாதகனின் உயர்ந்த, தாழ்ந்த சாதனைப் பிரிவு நிலைகளையே குறிப்பிடுவதாகும். ஆனால், கர்மம் ஒன்றுதான். அதுவே, நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் எனப்படுவது. ஸ்ரீகிருஷ்ணர், "பரம சித்தி எனப்படுகின்ற இறைவனை

அடையப் பெறுகின்ற காரியத்தில் வெற்றி பெறுதல் என்பதற்கு, ஒவ்வொரு தனிமனிதனும் சுபாவத்தில் அமைகின்ற சாதனைத் தகுதிநிலைகளுக்கு ஏற்ப, அங்கிருந்தே ஆரம்பிக்க வேண்டும் என்றொரு வழி மட்டுமே உள்ளது" என்கிறார். அதைப் பற்றிப் பார்க்கலாம்.

**ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத : ஸம்ஸித்திம் லபதே நர:**
**ஸ்வகர்ம நிரத : ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு (45)**

தங்களுடைய சுபாவத்தில் இயல்பாகவே அடையப் பெற்றுள்ள தகுதிகளுக்கு ஒத்துவருகின்ற ஆன்மீகச் சாதனைப் பிரிவில் இருந்து கொண்டு கர்மத்தைச் செய்து வருகின்ற மனிதர்கள் **'ஸம்ஸித்திம்'–** 'பகவானை அடையப் பெறுதல்' என்கின்ற 'பரம சித்தியைப்' பெறுகிறார்கள் இதைப் பற்றி ஏற்கனவே, "இந்தக் கர்மத்தைச் செய்து நீ பரம சித்தியை அடைவாயாக!" என்று கூறப்பட்டுள்ளது. 'எந்தக் கர்மத்தைச் செய்து இந்தப் பரம சித்தியை அடைவது?' என்ற கேள்விக்கு அவர், "அர்ஜுனா! நீ சாஸ்திர விதிமுறையால் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்! வேள்வியைச் செயல்முறைப்படுத்துகின்ற கர்மமாகிய யக்ஞார்த்த கர்மத்தைச் செய்!" என்று அவர் கூறினார். அடுத்ததாக, அவர், "சுயகர்மத்தைச் செய்கின்ற திறனுக்கு ஏற்றவாறு கர்மத்தில் ஈடுபட்டுள்ள மனிதர்கள் எவ்வாறு பரமசித்தியை அடையப் பெறுகிறார்களோ, அதற்கான விதிமுறையை நீ என்னிடமிருந்து கேள்" என்கிறார். அதனை நாமும் கவனத்துடன் கேட்போம்.

**யத: ப்ரவ்ருத்திர்பூதானாம் யேன ஸர்வமிதம் ததம்**
**ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: (46)**

எந்த பரமாத்மாவில் இருந்து மனிதர் உட்பட எல்லா உயிரினங்களும் தோன்றியதோ, எவர் இந்த ஒட்டு மொத்த உலகம் முழுவதும் இங்கிங்கெனாதபடிக்கு எங்கும் நீக்கமற நிறைந்துள்ளாரோ, அந்த பரமேஸ்வரரை **'ஸ்வகர்மணா'–** தன்னுடைய சுபாவத்தில் இருந்து தோன்றிய கர்மப் பிரிவுகள் மூலமாக வழிபட்டு மனிதர்கள் பரம சித்தியை அடையப் பெறுகின்றனர். ஆகவே, பரமாத்மாவிடம் மட்டுமே உணர்வுடன் (உருக்கத்துடன்) கூடிய அணுகுமுறை மற்றும் பரமாத்மாவை மட்டுமே எல்லா அங்கங்களாலும் வழிபடுதல், மற்றும், இதே பாதையில் படிப்படியாக முன்னேறிச் செல்தல் மிகவும் அவசியமாகும். உதாரணமாக, எந்த மாணவனாவது தனது தகுதி நிலையை விடவும் உயர்ந்த வகுப்பில் உட்கார்ந்து கொண்டானேயானால், தனக்கான பாடத்தையும் படிக்காமல் கோட்டைவிட்டு விடுவான். அத்துடன், தன்னுடைய தகுதியை விட உயர்வான வகுப்பின் பாடத்திட்டமும் அவனுக்குப் புரியாது. ஆகவே, இந்தக் கர்மப் பாதையில் ஒவ்வொரு படியையும் வரிசைக் கிரமமாகக் கடந்து செல்வதற்கே

விதிமுறையும் வழிவகையும் உள்ளது. பதினெட்டாவது அத்தியாயத்தில், ஆறாவது சுலோகத்திலும் இதையே மறுபடியும் வலியுறுத்தும் விதமாக, "நீங்கள் 'குறைந்த அறிவுடையவர்' எனப்படும் ஆரம்பநிலை சாதனைப் பிரிவைச் சேர்ந்தவராகவே இருந்தாலும் கூடப் பரவாயில்லை. அதே நிலையில் இருந்து இந்தக் கர்மத்தை ஆரம்பியுங்கள்" அதுவே முறையாகும். என்று கூறுகிறார். 'பரமாத்மாவிடம் மட்டுமே முழுமையான சமர்ப்பண உணர்வு', இதுவே விதிமுறையாகும்.

**ஷ்ரேயான்ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத்**
**ஸ்வபாவநியதம் கர்ம குர்வன்னாப்னோதி கில்பிஷம் (47)**

மிகவும் நல்லமுறையில் அனுசரிக்கப்பட்டு வருகின்ற பிறருடைய தர்மத்தை விடவும், குணங்களற்றதாகவே இருந்தாலும் கூடத் தம்முடைய சுயதர்மமே மேலான நன்மையைப் பெற்றுத் தரவல்லதாகும். **'ஸ்வபாவ நியதம்'–** சுபாவத்தால் நிச்சயிக்கப்பட்டுள்ள, கர்மத்தைச் செய்து கொண்டே இருக்கும் மனிதன் பாவத்தை அடைவதில்லை. அதாவது பிறப்பு–இறப்பு என்ற நிலையைப் பெறுவதில்லை. பெரும்பாலான சாதகர்களின் மனத்தில், 'நாம் எப்போதுமே இவ்வாறு சேவை செய்து கொண்டேதான் இருக்க வேண்டுமோ? மற்றவர்கள் எல்லாம் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார்களே? நல்ல விதமான குணங்களைப் பெற்றிருப்பதால் அவர்களுக்கெல்லாம் நல்ல மரியாதை வேறு கிடைக்கிறதே?' என்றெல்லாம் பல்வேறு விதமான எண்ணங்கள் அலைமோதுகின்றன. அவர்கள் உடனே, உயர்நிலை சாதகர்களைப் பார்த்து அவர்களைப் போலவே நடிக்க ஆரம்பித்து விடுகின்றனர். ஸ்ரீகிருஷ்ணரைப் பொறுத்தவரையில், "பிறரைப் பார்த்து அவர்களைப் போன்று நடிப்பதாலோ, பொறாமைப்படுவதாலோ எதுவும் கிடைக்கப் போவதில்லை. தன்னுடைய சுபாவத்தால் கர்மம் செய்கின்ற திறனுக்கு ஏற்ப, கர்மத்தைச் செய்வதால்தான் எவராக இருந்தாலும் பரம சித்தியை அடைய முடியுமே தவிர, சுயகர்மம் செய்வதை விட்டு விட்டு அன்று."

**ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷ்மபி ந த்யஜேத்**
**ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னிரிவாவ்ருதா : (48)**

குந்தியின் மைந்தனே! குற்றங்களுடன் கூடியதாக இருந்தாலும்கூட, (குறைவான அறிவுடையவன் என்ற ஆரம்பநிலைச் சாதனைப் பிரிவினன் என்றால், அந்நிலையில் குற்றங்கள் அல்லது குறைபாடுகள் மேலோங்கி இருக்கவே செய்யும் என்பது தெளிவு. அத்தகைய குற்றங்களுடன் கூடியதாக இருந்தாலும்கூட) **'ஸஹஜம் கர்ம'–** சுபாவத்தில் இருந்து இயல்பாகவே தோன்றுகின்ற கர்மத்தை மட்டும் தியாகம் செய்யவே கூடாது. ஏனெனில், நெருப்பிருந்தால் புகை இருப்பதற்கு ஒப்பாக, எல்லாக் கர்மங்களுமே ஏதேனும் ஒருவகையில் குற்றமுடையதாகவோ, அல்லது குறையுடையதாகவோதான் உள்ளன. பிராம்மண

சாதனைப் பிரிவாகவே இருந்தாலும் சரி, கர்மத்தைச் செய்ய வேண்டும் என்ற கட்டாயம் இருக்கிறது அல்லவா! 'இறைவனை அடைதல்' (ஸ்திதி) என்ற நிலை கிடைக்கும் வரையில், இந்தக் 'குறைபாடு' அல்லது 'குற்றம்' என்பதும் உயிருடன்தான் இருக்கிறது. இயற்கை என்னும் திரையினால் மூடப்பட்டிருக்கின்ற சூழ்நிலைதான் உள்ளது. எப்பொழுது பிராம்மண சாதனைப் பிரிவின் கர்மமும், பிரம்மத்தில் நுழைவு பெற்று, அதற்குள்ளாகவே, கலந்து மறைந்து விடுகின்ற நிலை உண்டாகிறதோ, அப்பொழுதுதான் இந்தக் குறைபாடுகளுக்கெல்லாம் முடிவு உண்டாகிறது. அவ்வாறு இறைவனை அடையப் பெறுபவரின் இலட்சணம் என்ன? எந்த நிலையில் இந்தக் கர்மத்தின் உபயோகம் இல்லாமல் போகிறது?

**அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ:**
**நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸன்ன்யாஸேனாதிகச்சதி (49)**

எவ்விடத்திலும் பற்றுதல் என்பதே சிறிதும் இல்லாத புத்தியுடைய, புலனின்ப நுகர்ச்சி என்பதே முற்றிலும் இன்றி, மிகவும் நல்லமுறையில் வெற்றி கொள்ளப்பட்ட ஆழ்மனத்தை உடையவன் **'ஸன்யாசினாம்'** – அனைத்தையும் துறந்தவன் என்ற நிலையை அடையப் பெற்று 'பரம நைஷ்கர்ம்ய ஸித்தியைப்' பெறுகிறான். இங்கே, 'சன்னியாசம்' என்பதும் 'பரம நைஷ்கர்ம்யஸித்தி' என்பதும் ஒரே பொருளைத் தருகின்றன. ஞான யோகியும் (ஸாங்க்ய யோகி) பற்றற்ற கர்மயோகியும் இந்நிலையைத்தான் வந்தடைகிறார்கள். இந்த நிலை கிடைப்பது என்பது இரண்டு வழிகளை பின்பற்றுகின்ற சாதகர்களுக்குமே உண்டு என்று சமமான கண்ணோட்டத்துடன் கூறப்பட்டுள்ளது. அடுத்து, 'பரம நைஷ்கர்ம்ய ஸித்தியை' அடையப் பெற்றவன் எவ்வாறு பிரம்மத்தை அடைகிறான்? என்பதைச் சுருக்கமான அளவில் விவரிக்கிறார்.

**ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாப்னோதி நிபோத மே**
**ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா ஜ்ஞானஸ்ய யா பரா (50)**

குந்தியின் மைந்தனே! எது ஞானத்தின் மேலான உறுதிப்பாடோ, இறுதி எல்லைக்கோடோ, அந்தப் பரம ஸித்தியை அடையப் பெறுபவன் எவ்வாறு அந்த பிரம்மத்தை அடைகிறானோ, அந்த விதிமுறையை நீ என்னிடமிருந்து சுருக்கமான அளவில் கேட்டறிந்து கொள். அடுத்த சுலோகத்தில் இருந்து அந்த விதிமுறையைப் பற்றிக் கூறப் போகிறார். எனவே அனைவரும் கவனமாகக் கேளுங்கள்.

**புத்த்யா விஷுத்த்யா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச**
**ஷப்தாதீன்விஷயான்ஸ்த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச (51)**
**விவிக்தஸேவீ லக்வாஷீ யதவாக்காயமானஸ :**

**த்யானயோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாஷ்ரித : (52)**

அர்ஜுனா! மிகவும் சிறந்தமுறையில் தூய்மையாக்கப்பட்ட புத்தியுடன் கூடியவனும், ஏகாந்தம் மற்றும் ஆன்மீகப் பயிற்சியை மேற்கொள்வதற்கான சூழ்நிலைகள் அமையப் பெற்றுள்ள இடங்களை மட்டுமே தேர்ந்தெடுத்து வாழ்பவனும், சாதனைக்கு உதவுகின்ற அளவு மட்டுமே உணவை ஏற்றுக் கொள்பவனும், வெற்றி கொள்ளப்பட்ட மனம், வாக்கு, மற்றும் உடலை உடையவனும், திடமான வைராக்கியத்தைச் சிறந்த முறையில் அடையப் பெற்றவனும், நிரந்தரமாக தியான யோகத்தைப் பழகிவருகிறவனும், மற்றும், அத்தகைய தாரணை குணங்களை கொண்டிருக்கக் கூடிய, அதாவது, மேற்கூறப்பட்டுள்ள குணங்கள் அனைத்தையும் தாரணை செய்பவனாக மற்றும், ஆழ்மனத்தை வசப்படுத்திக் கொண்டு, பார்த்தல், கேட்டல் முதலான புலனின்ப விஷயங்கள் அனைத்தையும் துறந்து, விருப்பு – வெறுப்பு ஆகியவற்றை எல்லாம் ஒழித்துக் கட்டியவனாக, அத்துடன்.

**அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் குரோதம் பரிக்ரஹம்**
**விமுச்ய நிர்மம : ஷாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே (53)**

ஆணவம், பலம், தற்பெருமை, காமம், கோபம் மற்றும் புறஉலகியல் விஷயங்கள், அகத்தில் அவற்றைப் பற்றிய சிந்தனை ஆகியவற்றை எல்லாம் துறந்து, 'நான்', 'எனது' என்ற அகங்காரம் இன்றி (மமதையின்றி), அமைதியான ஆழ்மனத்துடன் விளங்குபவனே பரபிரம்மத்துடன் இணைந்து ஒருணர்வைப் பெறுவதற்கான தகுதியுடையவனாகக் கருதப்படுகிறான். மேலும் பார்க்கலாம்.

**ப்ரஹ்மபூத : ப்ரஸன்னாத்மா ந ஷோசதி ந காங்க்ஷதி**
**ஸம : ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் (54)**

பிரம்மத்துடன் இணைந்து ஒருணர்வைப் பெறுகின்ற தகுதியுடைய அந்த மகிழ்ச்சியான சித்தமுடையவன் எந்தப் பொருளையும் எண்ணி வருந்துவதுமில்லை, மற்றும் எதையும் அடைய வேண்டுமே என்று எண்ணி ஆசை கொள்வதுமில்லை. மனிதர் உட்பட, எல்லா உயிர்களையும் சமமான உணர்வுடன் பார்க்கின்ற அவன் பக்தியின் இறுதி எல்லையை அடைந்து விடுகிறான். பக்தியானது அதனுடைய இறுதி விளைவு அல்லது பரிணாமம் எனப்படுகின்ற பிரம்மத்திற்குள் நுழைவு பெறுதல் என்ற நிலையைப் பெற்றுத் தருகின்ற பக்குவத்தை அடைந்து விட்டது. அடுத்ததாக–

**பக்த்யா மாமபிஜானாதி யாவான்யஷ் சாஸ்மி தத்வத :**
**ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விஷ்தே ததனந்தரம் (55)**

அத்தகைய உயர்நிலை பக்தியின் (பராபக்தி) மூலமாக, அவன், என்னைத் தத்துவமாக மிகவும் நல்ல முறையில் அறிந்து கொள்கிறான். அந்தத் தத்துவம் என்றால் என்ன? அதாவது, நான் எவ்வாறானவன்? எத்தகைய சர்வ வல்லமை பொருந்தியவன்? 'பிறப்பற்றவன், இறப்பற்றவன், என்றென்றும் நிலையாக, மாறாமல் உள்ளவன் என்பது போன்ற, உலகியலுக்கு அப்பாற்ப்பட்ட, தெய்வீகக் குணதர்மங்களுடன் கூடியவன்' என்பதையெல்லாம் அறிந்து கொள்கிறான். அத்துடன், அவன் என்னைத் தத்துவமாக அறிந்து கொள்கின்ற அடுத்தக் கணமே என்னுள் நுழைவும் பெற்று விடுகிறான். 'இறைவனை அடையும் காலம்' எனப்படும் இந்த நிலையில்தான் இறைவன் புலப்படுகிறார். மேலும் இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலைபெற்ற, அடுத்தக் கணமே அவன் தன்னுடைய ஆன்மாவானது அந்தப் பரமாத்ம வடிவத்தில் நிலைபெற்றுள்ள அனைத்து தெய்வீக மகிமைகள் பொருந்திய குணதர்மங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளதென்று, அதாவது, தனது இந்த ஆன்மா பிறப்பற்றது, மரணமற்றது, என்றும் நிலையானது, புலன் உணர்வுகளையெல்லாம் கடந்து விளங்குவது, மாறாதது என்பதை எல்லாம் அனுபூதியில் கண்டு தெளிகிறான்.

இரண்டாவது அத்தியாயத்தில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே பின்வருமாறு கூறியருளினார் :

"ஆன்மாவே சத்தியமானது, சனாதனமானது, புலன் உணர்வுகளையெல்லாம் கடந்து விளங்குவது, மற்றும், அமிருத வடிவமானது, அதாவது, மரணமில்லாப் பெருவாழ்வுடையது, ஆனால், இந்த தெய்வீக மகிமைகள் அனைத்தும் பொருந்தியதாகிய ஆன்மாவை 'தத்துவ தரிசிகள்' மட்டுமே கண்டுள்ளனர்." அப்படியென்றால், உண்மையில் 'தத்துவ தரிசனம்' என்றால் என்ன? என்றொரு கேள்வி பிறப்பது இயல்பானதுதான். பெரும்பாலோர் ஐந்து தத்துவம், இருபத்தி ஐந்து தத்துவம், என்று பௌதீகரீதியான (அறிவு நிலை சார்ந்த) கணக்கீடுகளைப் போடும் முயற்சியில் ஈடுபடுகின்றனர். ஆனால், இதுபற்றித் தீர்மானிக்கும் வகையில் இங்கே பதினெட்டாவது அத்தியாயத்தில்தான் "பரமாத்மாவே பரம தத்துவம் ஆவார். எவன் அந்தப் பரம தத்துவமாகிய பரமாத்மாவை அறிந்தவனோ அவனே தத்துவ தரிசி எனப்படுகிறான்" என்று பதில் தருகிறார். எனவே, இப்போது, ஒரு வேளை உங்களுக்குத் "தத்துவம்" வேண்டுமென்று விருப்பமிருந்தால், பரமாத்ம தத்துவம்தான் வேண்டுமென்று ஆசையிருந்தால் அதற்காக இறைவழிபாடு, ஆன்ம சிந்தனை மிகவும் அவசியமாகிறது.

இங்கே, நாற்பத்தி ஒன்பதாவது சுலோகத்தில் இருந்து ஐம்பத்தி ஐந்தாவது சுலோகம் வரைக்கும் யோகேஷ்வரர் ஸ்ரீ கிருஷ்ணர், "சன்னியாச மார்க்கத்திலும்

கர்மம் செய்தாக வேண்டும்'' என்பதைத் தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கிறார். அவர் கூறுகிறார் : ''**ஸன்யாஸேன**'' –சன்னியாசத்தின் மூலமாகக் (அதாவது, ஞான யோகத்தின் மூலமாக) கர்மத்தைச் செய்து கொண்டே போய், ஆசைகள் இல்லாதவனாக, பற்றற்றவனாக, மற்றும், நல்ல முறையில் வெற்றி கொள்ளப்பட்ட, தூய்மையான ஆழ்மனத்தையுடைய மனிதன் எந்த முறையில், ''(பரம நைஷ்கர்ம்ய சித்தி) கர்மங்களிலிருந்து விடுபட்ட நிலை என்னும் பரம சித்தியை அடையப் பெறுகிறான்" என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன் கேள் :

"ஆணவம், பலம், கர்வம், காமம், கோபம், மதம், மோகம் முதலான இயற்கை எனப்படுகின்ற உலகியலில் தடுமாறி விழச் செய்கின்ற விகாரங்கள் அனைத்தும் எப்பொழுது, முழுவதுமாக அமைதி அடைந்து விடுகின்றனவோ, மேலும், விவேகம், வைராக்கியம், புலனடக்கம் (தமம்), மனக்கட்டுப்பாடு (சமம்), ஏகாந்தவாசம், தியானம் முதலான பிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தருகின்ற உயர் ஆன்மீகத் தகுதிகள் எப்பொழுது, முழுமையான அளவில், பரிபக்குவமடைந்த நிலையை அடைந்து விடுகின்றனவோ, அந்தச் சமயத்தில் அவன் பிரம்மத்தை அறிகின்ற தகுதியைப் பெறுகிறான். அந்த தகுதியின் பெயர்தான் 'உயர்நிலை பக்தி' அல்லது 'பராபக்தி' எனப்படுகிறது. அத்தகைய தகுதியின் மூலமாக அவன் தத்துவத்தை அறிகிறான். தத்துவம் என்றால் என்ன? அதாவது, என்னை அறிகிறான். பகவான் எத்தகையவரோ, எந்தெந்த தெய்வீக மகிமைகளுடன் கூடியவரோ அதை அறிகிறான். மேலும், அவ்வாறு என்னை அறிந்து கொண்ட அடுத்த கணமே என்னில் நிலைபெற்றும் விடுகிறான், அதாவது, பிரம்மம், தத்துவம், இறைவன், பரமாத்மா, மற்றும் ஆன்மா – இவை எல்லாம் ஒரே பொருளையே தருகின்றன. ஒன்று மற்றொன்றை நிறைவேற்றுபவை ஆகும். ஒன்றை அறிவதன் மூலம் இவை அனைத்தையும் பற்றிய ஞானம் கிடைக்கிறது. இதையேதான் பரமஸித்தி, பரமகதி, பரமபதம் என்றும் சொல்கிறார்கள்.''

எனவே, கீதையின் உறுதியான நிலைப்பாடு இதுதான் :

''சன்னியாசம் (ஞான யோகம்) மற்றும் (பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகம் ஆகிய இரண்டு சூழ்நிலைகளிலுமே பரம நைஷ்கர்ம்ய ஸித்தியை (கருமங்களிலிருந்து விடுபட்டநிலை) அடைய வேண்டுமென்றால் நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் (ஆன்ம சிந்தனை) செய்வது தவிர்க்க முடியாத ஒன்றாகும்.''

இதுவரை, "சன்னியாசிகளுக்கும் இறைவழிபாடு ஆன்ம சிந்தனை ஆகியவை மிகவும் அவசியம்" என்பதை வலியுறுத்திக் கூறினார். அடுத்ததாக,

சமர்ப்பணத்தைப் பற்றி எடுத்துரைத்து "(பற்றற்ற) நிஷ்காம கர்ம யோகம்" என்ற தலைப்பின் கீழ் மேற்படி விவாதத்தை தொடர்கிறார் —

**ஸர்வ கர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாஷ்ரய :**
**மத்ப்ரஸாதாதவாப்னோதி ஷாஸ்வதம் பதமவ்யயம் (56)**

என்னிடம் மிகவும் சிறந்த முறையில் அடைக்கலமாகியுள்ளவர்கள் எப்போதும் எல்லாக் கர்மங்களையும் செய்தபடியே, கொஞ்சம் கூடத் தவறு எதுவும் நிகழாமல் கவனமாகப் பார்த்துக் கொண்டு என்னுடைய அருட் பிரசாதத்தால் என்றும் நிலையாக உள்ள, அழிவற்ற, பரமபதத்தை அடையப் பெறுகிறார்கள். கர்மம் அதேதான் — நிச்சயிக்கப்பட்டுள்ள கர்மம் எனப்படுகின்ற வேள்வியின் செயல்முறை. பூரணத்துவ நிலையை அடையப் பெற்ற, யோகேஷ்வரராக விளங்குகின்ற, சத்குருவைச் சரணடைந்துள்ள சாதகன் அவருடைய அருட் பிரசாதத்தால் மேலே கூறப்படுகின்ற, பரமபதத்தை வெகு சீக்கிரமே அடைந்து விடுகிறான். ஆகவே, அதனை அடைவதற்குச் சமர்ப்பணம் மிகவும் அவசியமானது ஆகும்.

**சேதஸா ஸர்வ கர்மாணி மயி ஸன்யஸ்ய மத்பர :**
**புத்தியோகமுபாஷ்ரித்ய மச்சித்த : ஸததம் பவ (57)**

எனவே அர்ஜுனா! எல்லாக் கர்மத்தையும் (உன்னால் முடிந்தஅளவு) மனத்தால் என்னிடம் அர்ப்பணம் செய்து, உன்னையே நம்பிக் கொண்டு இராமல், மாறாக, என்னிடம் சமர்ப்பணம் செய்து, என்னை மட்டுமே சார்ந்து நின்று கொண்டு புத்தி யோகத்தால், அதாவது, யோகத்துடன் இணைந்துள்ள புத்தியுடன் கூடியவனாக நிரந்தரமாக என்னிடமே உனது சித்தத்தை நிலைநிறுத்து. யோகம் என்னவோ ஒன்றேதான். அதுவே, என்றென்றைக்குமாகத் துக்கங்களை எல்லாம் முடிவிற்குக் கொண்டுவர வல்லதும், மற்றும், பரம தத்துவ பரமாத்மாவில் நுழைவு பெற்றுத் தரவல்லதும் ஆகும். அதில் செய்யப்படுகின்ற யோகக் கிரியையும் ஒன்றே தான், அதுவே, மனம் மற்றும் புலன் கட்டுப்பாடு, உள்மூச்சு, மற்றும், வெளிமூச்சு ஆகியவற்றில் நாமஜபம், மற்றும், ஸத்குருவின் திருவுருவத் தியானம் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டு நடைபெறும் வேள்வியின் செயல் முறை ஆகும். அதனால் விளைகின்ற பரிணாமமும் ஒன்றேதான்— "**யாந்தி ப்ரஹ்ம ஸனாதனம்**" — "என்றென்றும் நிலையான, மாறாத பிரம்மத்தில் நிலைபெறுதல்." இது பற்றி மேலும் கூறுகிறார்.

**மச்சித்த : ஸர்வதுர்க்காணி மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி**
**அத சேத்த்வமஹங்காரான்ன ஷ்ரோஷ்யஸி வினங்க்ஷ்யஸி (58)**

இந்த வகையில் என்னிடமே நிரந்தரமாகச் சித்தத்தை ஈடுபாட்டுடன் வைத்துக்கொண்டு, நீ என்னுடைய கிருபையால் மனம் மற்றும் புலன்கள் எனப்படுகின்ற எல்லா விதமான கோட்டைகளையும் (தடைகளையும்) சிரமமின்றி மிகவும் எளிமையாகக் கடந்து சென்று விடுவாய். "**இந்த்ரின்ஹ் த்வார் ஜரோகா நானா, தஹாம் தஹாம் ஸுர் பைட்டே கரிதானா, ஆவத் தேகஹி விஷய ப்யாரி, தே ஹடி தேஹிம் கபாட் உகாரீ**" – "(தேகம் என்கின்ற வீட்டின் புலன்களுக்கு பல்வேறு ஜன்னல்கள் உண்டு. ஒவ்வொரு ஜன்னலுக்கு அருகிலும் ஒவ்வொரு எண்ணம் சமயத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றன. எந்தக் கணத்தில் புலன் இன்ப விஷயம் என்ற காற்று அடிக்கிறதோ, அதைப் பார்த்த உடனே, அவையெல்லாம் பலவந்தமாகக் கதவைத் திறந்து கொண்டு அடிக்கின்ற காற்றை அனுபவிக்கத் தொடங்கி விடுகின்றன.") – "புலன்களே வெல்லுதற்கரிய கோட்டைகளாகும். என்னுடைய அருளால் நீ இந்தத் தடைகளையெல்லாம் நல்ல முறையில் ஆக்கிரமித்து, வென்று, அவற்றைக் கடந்து விடுவாய். ஆனால், ஒரு வேளை ஆணவத்தின் காரணமாக என்னுடைய திருவசனங்களைக் கேட்காமல் போவாயானால், வீழ்ச்சியை (அழிவை) அடைய வேண்டியிருக்கும். பரமார்த்தப் பாதையினின்றும் வழி தவறிப் போக வேண்டியிருக்கும்." அவர் மீண்டும் இதையே வலியுறுத்துகிறார்.

**யதஹங்காரமாஷ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே**
**மித்யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி (59)**

இன்னும் ஒரு வேளை நீ அகங்காரத்தைத் துணையாகக் கொண்டு, "நான் யுத்தம் செய்ய மாட்டேன்" என்று கூறிக் கொண்டு இருப்பாயானால் அது நிச்சயமாகவே உன்னுடைய தவறான கண்ணோட்டம் மட்டுமே ஆகும். ஏனெனில், உன்னுடைய சுபாவமே உன்னைப் பலவந்தமாக யுத்தத்தில் ஈடுபடச் செய்து விடும்.

**ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த : ஸ்வேன கர்மணா**
**கர்த்தும் நேச்சஸி யன்மோஹாத்கரிஷ்யஸ்யவஷோஅபி தத் (60)**

குந்தியின் மகனே! மோக வசத்தால் நீ எந்தக் கர்மத்தைச் செய்ய விரும்பவில்லையோ, அதையும் கூட, உனது சுபாவத்தில் இயல்பாகவே தோன்றியுள்ள கர்மத்திற்குக் கட்டுப்பட்டவனாக, பலவந்தமாக உந்தப்பட்டுச் செய்யவே போகிறாய். இயற்கையின் மோதலில் இருந்து பின்வாங்க விரும்பாத உனது க்ஷத்திரிய சாதனைப் பிரிவிற்கான சுபாவம் உன்னை வலுக்கட்டாயமாகக் கர்மத்தில் ஈடுபடச் செய்து விடும். கேள்வி இத்துடன் நிறைவடைகிறது. அடுத்து, அந்த இறைவன் எங்கே இருக்கிறார்? இதுபற்றிக் கூறுகிறார்.–

**ஈஷ்வர ஸர்வபூதானாம் ஹ்ருத்தேஷே அர்ஜூன திஷ்ட்டதி**
**ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா (61)**

அர்ஜூனா! அந்த இறைவன் மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களின் இதய தேசத்தில் வசிக்கிறார். இவ்வளவு அருகில் இருக்கிறார் எனும்போது அனைவராலும் அவரை அறிய முடியவில்லையே ஏன்? மாயை என்னும் இயந்திரத்தில் ஏறிக்கொண்டு அனைவரும் பிரமையின் வசத்திற்குக் கட்டுப்பட்டவர்களாக, இங்குமங்கும் சுற்றித் திரிகின்ற காரணத்தால் அவரை அறிந்துகொள்ள முடிவதில்லை. ஆகவே மீண்டும், மீண்டும் அழிவுறுகின்ற இந்த உடல்களிலேயே சுற்றியலைய வைக்கின்ற இந்த மாயை என்னும் இயந்திரம் ஒரு மிகப் பெரிய தடையாகும். அப்படி என்றால் யாரைச் சரணடைவது?—

**தமேவ ஷரணம் கச்ச ஸர்வபாவேன பாரத**
**தத் ப்ரஸாதாத்பராம் ஷாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி ஷாஸ்வதம் (62)**

எனவே, பாரதா! முழுமையான உணர்வுடன் அந்த (இதய தேசத்தில் வீற்றிருக்கும்) இறைவனிடம் நிலைத்த சரணத்தைப் பெற்றுக் கொள். அவருடைய அருள் பிரசாதத்தால் நீ மேலான அமைதியையும், என்றும் நிலையான, மாறாத வீடு பேற்றையும் அடையப் பெறுவாய். எனவே தியானம் செய்ய வேண்டுமென்றால் இதய தேசத்தில்தான் செய்ய வேண்டும். இதை நன்கு அறிந்து கொண்ட பிறகும் கூட, கோயில், மசூதி, தேவாலயம் மற்றும் இன்னபிற இடங்களிலும் தேடியலைந்து கொண்டிருந்தால் நேரத்தை வீணாக்குகிறோமே ஒழிய, வேறொன்றும் செய்யவில்லை. ஆம், அந்த இறைவன் எங்கே இருக்கிறார்? என்பது தெரியாத வரைக்கும் இவ்வாறு பல்வேறு இடங்களில் தேடி அலைவது என்னவோ இயல்பான விஷயம்தான். இதய தேசமே இறைவனின் வசிப்பிடம் ஆகும். பாகவதம் என்ற பெரிய ஆன்மீக நூலின் சுருக்கம் நான்கு சுலோகங்களில் தரப்பட்டுள்ளன. அவற்றைச் ''சதுஸ்லோகம்'' என்று கூறுவர். அந்த பாகவதத்தின் ''சதுஸ்லோகம்'' மற்றும் கீதையின் சாராம்சம் இதுதான் :

''இறைவனாகிய நான் எங்கும் நீக்கமற நிறைந்து உள்ளவனாவேன்; ஆனால், இதய தேசத்தில் தியானம் செய்வதால் மட்டுமே நான் அடையப் பெறுகிறேன்.''

**இதி தே ஜ்ஞானமாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா**
**விம்ருச்யைததசேஷேண யதேச்சஸி ததா குரு (63)**

இந்த வகையில் எல்லா மறைபொருள் இரகசியங்களுக்கும் மேலான இரகசியமான இந்த ஞானத்தை முழுவதுமாக நான் உனக்காகக் கூறிவிட்டேன்.

எனவே, இதே விதிமுறையில், முழுமையான வடிவில், இதைப் பற்றிய ஆன்ம சிந்தனையில் ஈடுபடு. அதற்குப் பிறகு நீ எவ்வாறு விரும்புகிறாயோ, அவ்வாறே செய். உண்மை என்னவோ இதுதான். இறைவனை அணுகுகின்ற சரியான இடமும் இதுவேதான். இறைவனை அடையப் பெறுகின்ற இடமும் இதுவேதான். ஆனால், இதயத்தில் வீற்றிருக்கும் இறைவன் தென்படுவது இல்லையே? ஏன்? என்றால் அதற்கான உபாயத்தைக் கூறுகிறார்.

**ஸர்வகுஹ்யதமம் பூய : ஸ்ருணு மே பரமம் வச :**
**இஷ்டோஅஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் (64)**

அர்ஜுனா! எல்லா மறைபொருள் இரகசியங்களை விடவும் மேலான இந்த எனது இரகசியத்துடன் கூடிய திருவசனத்தை நீ மறுபடியும் கேள். (ஏற்கனவே சொன்னேன். ஆனால், திரும்பவும் கேள்! அதாவது ஆர்வமுள்ள அன்பனுக்கு (அனுராகி) உதவ இஷ்ட தெய்வமாகிய சத்குருவானவர் எப்போதும் தயார் நிலையில் இருக்கிறார்.) ஏனெனில், நீ எனக்கு மிகவும் பிரியமானவன். எனவேதான், இந்த மேலான நன்மை பயக்கவல்ல வசனத்தை (வார்த்தைகளை) நான் உனக்காக மறுபடியும் கூறுகிறேன். அது என்ன?–

**மன்மனா பவ மத்பக்த்தோ மத்த்யாஜீ மாம் நமஸ்குரு**
**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோஅஸி மே (65)**

அர்ஜுனா! நீ என்னிடமே எப்போதும் நிலைத்த மனமுடையவனாக இரு! என்னுடைய ஒப்பற்ற (அனன்ய) பக்தனாக இரு! என்னிடம் உனது நம்பிக்கை முழுமையான அளவில் இருக்கட்டும். (என்னை நினைத்தாலே உனக்குள் ஆனந்தக் கண்ணீர் பெருக வேண்டும்.) என்னை மட்டுமே வணங்கு. அவ்வாறு நடந்து கொள்வதன் மூலம் நீ என்னையே வந்தடைவாய். இதை நான் உன் பொருட்டு சத்தியப்பிரமாணம் செய்து கூறுகிறேன். ஏனெனில் நீ எனக்கு மிக மிகப் பிரியமானவன், ஸ்ரீகிருஷ்ணர் ஏற்கனவே, ''இறைவன் இதய தேசத்தில் இருக்கிறார். அவருடைய சரணத்திற்குப் போ'' என்றார். இங்கேயோ அவரே, ''என்னுடைய சரணத்திற்கு வா! இந்த எல்லா மறைபொருள் இரகசியங்களை விடவும் மேலான எனது இந்த இரகசியமான திருவசனத்தைக் கேட்டு, என்னுடைய சரணத்திற்கு வா'' என்கிறார். உண்மையில், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் என்னதான் கூற விரும்புகிறார்? எனில், ''சாதகனுக்கு சத்குருவின் சரணம் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும்'' என்பதாகும். ஸ்ரீகிருஷ்ணர் ஓர் பூரண யோகேஷ்வரர் (சத்குரு) ஆவார். அடுத்து, சமர்ப்பணத்திற்கான விதிமுறையைக் கூறுகிறார்.–

**ஸர்வதர்மான்பரித்யஜ்ய மாமேகம் ஷரணம் வ்ரஜ**
**அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஷுச : (66)**

எல்லாவிதமான தர்மங்களையும் துறந்து விட்டு (அதாவது, நான் பிராம்மண சாதனைப் பிரிவைச் சேர்ந்தவன், அல்லது, சூத்திர சாதனைப் பிரிவைச் சேர்ந்தவன், க்ஷத்திரியன் அல்லது வைசியன்—என்பது போன்ற எண்ணங்களை எல்லாம் கூடத் துறந்து விட்டு) என்னுடைய நிலைத்த சரணத்தை மட்டுமே அடைந்து விடு. நான் உன்னை எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுவித்து விடுவேன்! நீ வருத்தப் படாதே!

இந்த விதமான பிராம்மணர், க்ஷத்திரியர், முதலான வர்ண தர்மங்களைப் (வகுப்பு தர்மங்கள்) பற்றியெல்லாம் சிந்தித்துக் கொண்டிருக்காதே. (அதாவது, இந்தக் கர்மப் பாதையில் நாம் எந்த நிலையில் இருப்பவர் என்பதை எல்லாம் பற்றிச் சிந்திக்கக் கூடாது.) எவனொருவன் நிலைத்த (அனன்ய) உணர்வுடன் சத்குருவின் அடைக்கலத்தை அடைந்து விடுகிறானோ, இஷ்ட தெய்வத்தைத் தவிர, வேறு எதையும் பார்க்காதவனோ, அவனுக்குப் படிப்படியாக வர்ண அமைப்பில் மாற்றங்களை ஏற்படுத்துவது முதல் (சாதனைப் பிரிவில் மாற்றம் உண்டாக்குவது) உயர்நிலைப் பிரிவுகளில் கொண்டு போய் அவனைச் சேர்ப்பது மற்றும் எல்லாப் பாவங்களில் இருந்தும் அவனை விடுவித்து ஆன்ம விடுதலையைப் (வீடுபேறு) பெற்றுத் தருவது வரையிலான, பொறுப்புகள் அனைத்தையும் இஷ்ட தெய்வமாகிய சத்குருவானவர் தாமே முன்வந்து தமது கைகளில் எடுத்துக் கொள்கிறார்.

ஒவ்வொரு மகாபுருஷரும் இதையேதான் கூறுகிறார்கள். சாஸ்திரமானது எப்பொழுது எழுத்து வடிவம் பெறுகிறதோ, அப்பொழுதே அது எல்லோருக்கும் பொதுவானது என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. ஆனால், உண்மையில், இந்த சாஸ்திரம் (அதிகாரிக்கு) நம்பிக்கையுடையவனுக்காக மட்டும்தான். அர்ஜுனன் ஆன்மீகப் பாதையில் செல்லும் தகுதி படைத்த அதிகாரி ஆவான். ஆகவே, அவனுக்காக இது வலியுறுத்திக் கூறப்பட்டது. அடுத்து, யோகேஷ்வரர், “இதற்கான அதிகாரி யார்?” என்பதைத் தீர்மானிக்கும் வகையில் தாமே முன்னின்று விளக்குகிறார்.—

**இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன**
**ந சாஷுஸ்ருஷவே வாச்யம் ந ச மாம் யோஅப்யஸூயதி (67)**

அர்ஜுனா! இந்த வகையில், உன்னுடைய நலனுக்காகக் கூறப்பட்ட இந்த கீதை என்னும் உபதேசத்தை எந்தக் காலத்திலும் மறந்தும் கூடத் தவமற்ற

மனிதர்களிடம் கூறவே கூடாது. பக்தியற்ற மனிதர்களிடமும் கூறவே கூடாது. கேட்கவே விருப்பம் இல்லாதவர்களிடமும் கூறவே கூடாது. மேலும், எவறெல்லாம் என்னை நிந்திக்கும் விதமாக, “இது குற்றம், அது குற்றம்” என்றெல்லாம் குறைகூறுகிறார்களோ, அவர்களிடமும் கூறவே கூடாது. ஸ்ரீகிருஷ்ணர் மகாபுருஷர்தான். அவருக்கு அருகில் அவரைப் போற்றி வழிபடுபவர்களுடன் சேர்த்து, அவரை நிந்திக்கின்ற சில பேர்களும் இருந்திருக்கிறார்கள். ஆகவே, அத்தகையோர்களிடம் இதையெல்லாம் கூறக் கூடாது எனப்பட்டுள்ளது. எனில், யாருக்குக் கூறலாம்? என்றொரு கேள்வி எழுவது இயல்பானதே. இதைப்பற்றிப் பார்க்கலாம்.

**ய இமம் பரமம் குஹ்யம் மத் பக்தேஷ்வபிதாஸ்யதி**
**பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்சய : (68)**

எவனொருவன் என்னுடைய ‘உயர் நிலை பக்தி’ எனப்படும் ‘பராபக்தியை’ அடையப் பெற்று இந்த மேலான, இரகசியம் பொருந்திய கீதை உபதேசத்தை என்னுடைய பக்தர்களிடம் கூறுவானேயானால், அவன் சந்தேகமேயில்லாமல் என்னையே அடையப் பெறுகிறான். மேலும் கீதையின் உபதேசத்தைக் கேட்கின்ற அந்த பக்தனும் என்னையே அடையப் பெறுகிறான். ஏனெனில், அவன் கீதை உபதேசத்தை மிகவும் நல்லமுறையில் கேட்டு இதயத்தில் பதித்துக் கொள்வான். அது சொல்கின்ற பாதையில் செல்வான். அத்துடன் கரை கடந்தும் விடுவான். அடுத்து, அந்த கீதை உபதேசத்தைக் கூறுபவனைப் பற்றி எடுத்துரைக்கிறார்.–

**ந ச தஸ்மான்மனுஷ்யேஷு கஷ்சின்மே ப்ரியக்ருத்தம :**
**பவிதா ந ச மே தஸ்மாதன்ய : ப்ரியதரோ புவி (69)**

அவனை விடவும் மேலானமிக்க அன்புடன் செயல்படுபவன் மனிதர்களில் வேறு எவருமே இருக்க முடியாது. மேலும், அவனை விடவும் இந்த உலகில் வேறுயாரும் எனக்கு மிகவும் பிரியமானவனாக இருக்கவே முடியாது. (எவனை விடவும்? எவன் எனது பக்தர்களிடம் என்னுடைய உபதேசத்தைக் கூறி, அவர்களை நான் வகுத்துத் தந்துள்ள ஆன்மீகப் பாதையில் வழி நடத்துகிறானோ அவனை விடவும்!) ஏனெனில், மேலான நன்மையை அடைவதற்கான வழி இது ஒன்று மட்டுமே ஆகும். இது “**ராஜ மார்க்கம்**” ஆகும். அடுத்து வருவது,

**அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ :**
**ஜ்ஞானயஜ்ஞேன தேனாஹமிஷ்ட : ஸ்யாமிதி மே மதி : (70)**

எவனொருவன் இந்த தர்ம மயமான, நமது இருவருக்கும் இடையில் நடந்த ஆன்மீக உரையாடலை “**அத்யேஷ்யதே**”– நல்ல முறையில் மனனம்

செய்கிறானோ, அவன் மூலமாக நான் ஞான வேள்வியால் வழிபடப்படுகிறேன். அதாவது, ''எந்த வேள்வியின் பரிணாமம் அல்லது இறுதி விளைவு ஞானமோ, எந்த வேள்வியின் விளக்கம் ''ஞான வேள்வி'' என்னும் பெயரில் ஏற்கனவே விளக்கிச் சொல்லப்பட்டு உள்ளதோ, அதாவது, ''இறைவனை நேரடியாக அறிந்து கொள்வதே ஞானம் என்றும் கூறப்பட்டதோ, இதுவே எனது ஏற்கனவே கூறப்பட்ட திட்டவட்டமான கருத்தாகும் என்று என்னால் தெளிவாக அறிவிக்கப்பட்டு உள்ளதோ, அந்த ஞான வேள்வியின் மூலமாக நான் வழிபடப் படுகிறேன்'' என்பதே இதன் அர்த்தமாகும்.

**ஸ்ரத்தாவானனஸூயஷ்ச்ச ஷ்ருணுயாதபி யோ நர :**
**ஸோஅபி முக்த : சுபான்ல்லோகான்ப்ராப்னுயாத்புண்யகர்மணாம் (71)**

எவனொருவன் நம்பிக்கையுடையவனாகவும் மற்றும் பொறாமையுணர்வு இல்லாமலும் கீதையைக் கேட்க மட்டும் செய்கிறானோ, அவனும்கூட, பாவங்களில் இருந்து விடுதலை பெற்று மேலான (உத்தமமான) கர்மங்களைச் செய்கின்றவர்கள் அடைகின்ற சிறந்த உலகங்களை அடைகிறான். அதாவது, கர்மத்தை முழுமையாகச் செய்து முடிக்கவில்லை என்றாலும்கூட, கீதையைக் கேட்டுக் கொண்டிருக்கும் பட்சத்தில், அப்போதும் மேலான (உத்தமமான) உலகங்கள் கிடைக்கவே செய்கின்றன. ஏனெனில், அவன் தன்னுடைய சித்தத்தில் அந்த உபதேசங்களைத் தானே உள்வாங்கிக் கொண்டிருக்கிறான். இங்கு, அறுபத்தி ஏழாவது சுலோகத்தில் இருந்து எழுபத்தியோராவது சுலோகம் வரை மொத்தம் ஐந்து சுலோகங்களில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், ''இந்த கீதையின் உபதேசத்தை தகுதியற்றவர்களுக்குக் கூறக் கூடாது. ஆனால், நம்பிக்கையுள்ளவனுக்கு அதனை அவசியம் கூறவேண்டும். எவன் அதைக் கேட்கிறானோ, அவனும் என்னையே அடைவான். ஏனெனில், இந்த மாபெரும் மறைபொருள் இரகசியத்தைக் கேட்டு, அவன் கீதை வகுத்துத் தந்துள்ள ஆன்மீகப் பாதையில் செல்லத் தொடங்குவான். எவன் இதனை என்னுடைய பக்தர்களிடம் கூறுகிறானோ, அவனை விடவும் அதிகப் பிரியமானவன் என்று சொல்லும்படியாக எவனும் எனக்கு இருக்க முடியாது. எவன் கீதையை ஆழ்ந்து படிக்கிறானோ, அவன் மூலமாக நான் ''ஞான வேள்வியால்'' வழிபடப் படுவேன். வேள்வியின் இறுதி விளைவே ''ஞானம்'' ஆகும். எவன் கீதையில் கூறப்பட்டுள்ளதற்கு ஏற்பக் கர்மம் செய்யும் திறமையற்றுள்ளானோ, ஆனால், நம்பிக்கையுடன் கீதையைக் கேட்க மட்டும் செய்கிறானோ, அவனும் கூட, புண்ணியமயமான உலகங்களை அடையப் பெறுகிறான்'' என்று கூறினார். இந்த முறையில், பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கீதையைக் கூறுதல் மற்றும் கேட்டல் மற்றும் படித்தல் ஆகியவற்றை வலியுறுத்திக் கூறினார். கேள்வி நிறைவடைகிறது.

இனி, கடைசியாக, அவர், ''நான் சொன்னது ஏதாவது புரிகிறதா?'' என்று அர்ஜுனனிடம் கேட்கிறார்.

**கச்சிதேதச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா**
**கச்சிதஜ்ஞானஸம்மோஹ : ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய (72)**

பார்த்தனே! என்னுடைய இந்தத் திருவசனங்களை எல்லாம் நீ ஒருமித்த மனத்துடன் கேட்டாயா? இல்லையா? உன்னுடைய அஞ்ஞானத்தால் தோன்றிய மோகம் அழிந்ததா? இல்லையா? இதற்கு அர்ஜுனன் கூறினான்.

**அர்ஜுன உவாச்ச**
**நஷ்டோ மோஹ : ஸ்ம்ருதிர்லப்த்தா த்வத்ப்ரஸாதான்மயாச்யுத**
**ஸ்த்திதோஅஸ்மி கதஸந்தேஹ : கரிஷ்யே வசனம் தவ (73)**

அச்சுதா! உங்களுடைய அருளினால் எனது மோகம் அழிந்து விட்டது. எனது சுய நினைவு (ஸ்ம்ருதி) திரும்பியது. (எந்த மறைபொருள் இரகசியமான ஆன்ம ஞானமானது மனுவின் மூலமாக ஸ்ம்ருதி பரம்பரையில் வழி வகையாகத் தொடர்ந்து வந்து கொண்டிருந்ததோ, அந்த ஆன்ம ஞானத்தையே அர்ஜுனன் அடையப் பெற்றான்.) இப்பொழுது, நான் சந்தேகங்கள் அனைத்தும் நீங்கப் பெற்று உறுதிப்பாட்டினை அடைந்து விட்டேன். மேலும், நான் உங்களுடைய மேலான ஆணையை நிறைவேற்றுவேன். கீதையின் முதல் அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ளபடி, படைகளின் பலத்தை ஆராய்கின்ற சமயத்தில், இரண்டு சேனைகளிலும் இடம் பெற்றிருந்த படைவீரர்களில் சுற்றத்தார்களையும் குடும்ப உறவினர்களையும் கண்டு அர்ஜுனன் மனக் கலக்கம் அடைந்து இருந்தான். அந்நிலையில், அவன் ஸ்ரீகிருஷ்ணரிடம், ''கோவிந்தா! சொந்த பந்தங்களையெல்லாம் கொன்று விட்டு நாம் மட்டும் எப்படி சுகமாக இருக்க முடியும். அத்தகையதொரு யுத்தத்தால் என்றும் நிலையான, மாறாத குலதர்மம் அழிந்து விடும்; பிண்டோதக் கிரியை மறைந்துவிடும்; வர்ணக் கலப்பு (வகுப்புக் கலப்பு) உருவாகி விடும். நாமெல்லாம் இவற்றை நன்றாக அறிந்தவர்களாக இருந்தும் கூடப் பாவம் செய்யத் துணிந்து விட்டோமே! என்னுடைய இந்த வார்த்தைகளை மதித்து, இந்தப் பாவத்தில் இருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ளும் உபாயத்தை நாம் ஏன் தேடக் கூடாது? ஆயுதம் தரித்து நிற்கும் கௌரவர்கள் நிராயுதபாணியாக நின்று கொண்டு இருக்கும் என்னை இந்தப் போர்க்களத்திலேயே கொன்றாலும் கூட, அதையே நான் மிகவும் உயர்வாக எடுத்துக் கொள்வேன். கோவிந்தா! நான் யுத்தம் செய்ய மாட்டேன்'' என்றெல்லாம் கூறியபடியே, அவன் இரதத்தின் பின்பாகத்தில் பேசாமல் உட்கார்ந்து விட்டான்,

இந்த முறையில், கீதையில் அர்ஜுனன், யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரை நோக்கிப் பல்வேறு கேள்விக் கணைகளைச் சரமாரியாகத் தொடுக்கலானான். அவற்றையெல்லாம் இப்போது வரிசையாகக் காணலாம் :

அத்தியாயம் **(2/7)** சுலோகத்தில், ''எது நிச்சயமாகவே எனக்கு மேலான நன்மை மற்றும் உயர்வைத்தரக் கூடியதோ, அந்த சாதனையை எனக்காகக் கூறுங்கள்**?**'' ; அத்தியாயம் **(2/54)** சுலோகத்தில், ''**(**ஸ்திதப்ரக்ஞ**)** புருஷரின் இலட்சணங்கள் யாவை**?**'' ; அத்தியாயம் **(3/1)** சுலோகத்தில், ''உங்களுடைய கண்ணோட்டத்தில் ''ஞான யோகமே உயர்ந்தது **!**'' என்பதானால் என்னை மட்டும் இந்த பயங்கரமான கர்மத்தில் ஈடுபடுத்துகிறீர்களே ! ஏன்**?**'' ; அத்தியாயம் **(3/36)** சுலோகத்தில், ''மனிதன் தானாகவே விரும்பாவிட்டாலும்கூட எதனுடைய தூண்டுதலினால் பாவத்தைச் செய்கிறான்**?**'' ; அத்தியாயம் **(4/4)** சுலோகத்தில், ''உங்களுடைய பிறவியோ இப்பொழுது உண்டானது**?** மேலும், சூரியனுடைய பிறவியோ மிகவும் பழைமையானது**?** எனவே, கல்பத்தின் ஆரம்பத்தில் இந்த யோகத்தினை நீங்கள் தான் சூரியனிடம் கூறினீர்கள் என்பதை எப்படி நான் ஏற்றுக் கொள்வது**?**'' ; அத்தியாயம் **(5/1)** சுலோகத்தில், ''நீங்கள் சில சமயம் சன்னியாசத்தைப் புகழ்ந்து கூறுகிறீர்கள். மற்றொரு சமயமோ (பற்றற்ற) நிஷ்காம கர்மத்தைப் புகழ்ந்து கூறுகிறீர்கள். இவற்றில் ஏதேனும் ஒன்றை நிச்சயப்படுத்திக் கூறுங்கள். அதன் மூலம் நான் மேலானதை, மிகவும் உயர்வானதை அடையப் பெறுவேனாகுக **!**''; அத்தியாயம் **(6/35)** சுலோகத்தில், ''மனம் அலைபாயும் தன்மை உடையது. எனவே குறைந்த அளவு முயற்சியுடைய, ஆனால், நம்பிக்கையுடைய மனிதன், உங்களை அடைய முடியாத நிலையில் வேறு எந்தத் தாழ்ந்த நிலையை **(**துர்க்கதி**)** அடைகிறான்**?**''; அத்தியாயம் **(8/1–2)** சுலோகத்தில், ''கோவிந்தா **!** நீங்கள் குறிப்பிடுகின்ற அந்த பிரம்மம் என்றால் என்ன**?** அந்த அத்யாத்மம் என்றால் என்ன**?** அதிதைவம், அதிபூதம் என்றால் என்ன**?** இந்த உடலில் அதியக்ஞர் யார்**?** அந்தக் கர்மம் என்றால் என்ன**?** இறுதிக் காலத்தில் நீங்கள் எந்த முறையில் அறிந்து கொள்ளப்படுகிறீர்கள்**?**''**–** ஆக மொத்தம் ஏழு கேள்விகளை வரிசையாக அடுக்கினான்; அத்தியாயம் **(10/17)** சுலோகத்தில், அர்ஜுனன், ''நிரந்தரமாக ஆன்ம சிந்தனையில் ஈடுபட்டுக் கொண்டே, உங்களை எந்தெந்த வகையான ஆன்மீக உணர்வுகளின் மூலம் நான் நினைத்து வழிபட வேண்டும்**?**'' என்ற தன்னுடைய ஆர்வத்தை வெளியிட்டான்; அத்தியாயம் **(11/4)** சுலோகத்தில், அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணரிடம், ''எந்தெந்த தெய்வீக மகிமைகளை எல்லாம் நீங்கள் விளக்கமாக வர்ணித்தருளினீர்களோ, அவற்றையெல்லாம் நான் நேரடியாக தரிசனம் செய்து அறிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்று வேண்டுகோள் விடுத்தான் ; அத்தியாயம் **(12/1)** சுலோகத்தில், ''நிலைத்த நம்பிக்கையுடன் இறைவழிபாட்டில்

ஈடுபட்டுள்ள பக்தர்கள் மிகவும் நல்ல முறையில் உங்களை (சத்குருவின் திருவுருவத்தை) வழிபாடு செய்கிறார்கள். மேலும், மற்றொரு வகையினர், அழிவற்றது, குறைவற்றது என்றெல்லாம் சொல்லப்படுகின்ற, புலன் உணர்வுகளுக்கெல்லாம் (அவ்யக்தம்) அப்பாற்ப்பட்ட பிரம்மத்தை வழிபாடு செய்கிறார்கள்– இவர்கள் இருவரில் உத்தமமான யோக வேத்தா (யோகத்தை நன்கு அறிந்தவர்) யார்?'' ; அத்தியாயம் (14/21) சுலோகத்தில், ''மூன்று குணங்களையும் கடந்து செல்கின்றவர் (திரிகுணாதீதர்) எத்தகைய இலட்சணங்கள் உடையவராக இருக்கிறார்? மற்றும், சாதாரண மனிதர்களும்கூட எந்த வழியில் சென்று இந்த மூன்று குணங்களையும் கடந்து அப்பால் போக முடியும்?'' ; அத்தியாயம் (17/1) சுலோகத்தில், ''எவரெல்லாம், ஏற்கனவே கூறப்பட்டுள்ள, சாஸ்திர விதிகளை எல்லாம் புறக்கணித்து விட்டு, ஆனால், நம்பிக்கையுடன் கூடியவர்களாக, வேள்வி செய்கிறார்களோ, அவர்களுக்கு என்ன கதி உண்டாகிறது?''; அத்தியாயம் (18/1) சுலோகத்தில், ''பெருந்தோள்களை உடையவரே! மஹாபாஹோ! நான் தியாகம் மற்றும் சன்னியாசம் ஆகியவற்றை உள்ளது உள்ளபடியாகவும் ஒவ்வொன்றையும் தனித் தனியாகவும் விரிவான முறையிலும் அறிந்து கொள்ள விரும்புகிறேன்.'' இந்த முறையில் அர்ஜுனன் கேள்விக் கணைகளைத் தொடுத்துக் கொண்டே சென்றான். ஆனால், அவனால் எழுப்பவே முடியாத, மறைபொருள் இரகசியங்களை எல்லாம் பகவான் தாமாகவே முன்வந்து எழுப்பி அவற்றிற்கு விடையளித்தும் அருளினார், தாமாகவே முன்வந்து அவனுக்குப் புரியவைத்தார். அர்ஜுனன் தனது கேள்விகளுக்கெல்லாம் நல்லதொரு சமாதானம் (திருப்தியான விடை) கிடைத்துவிட்டதை அறிந்து அத்துடன் கேள்வி கேட்பதை நிறுத்திக் கொண்டான். அவன் ஸ்ரீகிருஷ்ணரிடம், ''கோவிந்தா! இனி நான் உங்களுடைய, மேலான ஆணையை நிறைவேற்றுவேன்'' என்று கூறினான். உண்மையில், இங்கே இடம் பெற்றுள்ள கேள்விகள் அனைத்துமே ஒட்டு மொத்த மனித சமுதாயத்திற்கும் பொதுவானது ஆகும். இங்கே எழுப்பப்பட்டுள்ள கேள்விகளுக்கு எல்லாம் மனநிறைவு கிடைக்காமல் எந்தவொரு சாதகனாலும் மேலானதும், உயர்வான நன்மையைப் பெற்றுத் தர வல்லதுமான ஆன்மீகப் பாதையில் தீவிரமாக ஈடுபடவே முடியாது. ஆகவே, சத்குருவின் இறையாணைகள் அனைத்தையும் நிறைவேற்றுகின்ற தகுதியைப் பெறுவதற்கும் உயர்ந்த நன்மையைப் பெற்றுத் தரவல்ல ஆன்மீகப் பாதையில் தீவிரமாக ஈடுபடுகின்ற வலிமையைப் பெறுவதற்கும் கீதையை முழுவதும் ஆழ்ந்து கற்பது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். அர்ஜுனனுக்குச் சமாதானம் கிடைத்து விட்டது. அத்துடன் சேர்த்தே ஸ்ரீகிருஷ்ணருடைய திருவாயிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்த இறை வாக்குகளும் இனிதே முடிவுற்றன. இதுபற்றி சஞ்ஜயன் கூறினான்.–

(பதினோராவது அத்தியாயத்தில் தமது பிரம்மாண்டமான (விராட் வடிவத்தை) விசுவரூபத்தை அர்ஜூனனுக்குக் காட்டியருளிய பிறகு, ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜூனா! நீ இப்பொழுது தரிசனம் செய்ததைப் போன்றே, (அனன்ய) நிலைத்த பக்தியின் மூலமாக, இந்த முறையில் தரிசனம் செய்வதற்கும் (அதாவது நீ என்னைத் தரிசனம் செய்ததைப் போல) தத்துவ ரூபமாக அறிவதற்கும் மற்றும் நுழைவு பெறுவதற்கும் (பிரவேசிப்பதற்க்கும்) நான் சுலபமானவன் ஆவேன் **(11/54).** இந்தமுறையில் என்னை தரிசனம் செய்பவன் சாட்சாத், என்னுடைய ஆன்ம வடிவத்தையே அடையப் பெறுகிறான்." என்று கூறினார். இங்கே, பதினெட்டாவது அத்தியாயத்தில் அவர் அர்ஜூனனிடம், ''என்ன, உனது மோகம் அழிந்து விட்டதா?'' என்று கேட்டார். அதற்கு அவன், ''ஆம்! எனது மோகம் அழிந்து விட்டது. நான் எனது சுய அறிவை, (தன்னைப் பற்றிய அறிவு) தன்னுடைய சொந்த, மற்றும் உண்மை இயல்பாகிய ஆன்மாவைப் பற்றிய அறிவு) நினைவாற்றலைத் (ஸ்ம்ருதி) திரும்பவும் பெற்றேன். நீங்கள் என்ன சொல்கிறீர்களோ, அதையே செய்வேன்'' என்றும் கூறினான். இறைவனை தரிசனம் செய்து அறிந்து கொண்டதுடன் சேர்த்து அர்ஜூனன் ஆன்ம விடுதலை (முக்தி) அடைந்திருக்க வேண்டும் என்பதே சரியாகும். உண்மையில், அர்ஜூனன் தான் எதுவாக வேண்டுமோ, அதுவாகவே ஆகி விட்டான். ஆனால், சாஸ்திரம் எதிர்கால சமுதாயத்தினருக்காகக் கூறப்படுகிறது. அதனுடைய உபயோகம் உங்கள் அனைவருக்காகவே உள்ளது.)

**ஸஞ்ஜய உவாச்ச**
**இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன :**
**ஸம்வாதமிமமஷ்ரௌஷமத்புதம் ரோமஹர்ஷணம் (74)**

சஞ்ஜயன் கூறியதாவது:

இந்த வகையில் நான் வாஸுதேவர் மற்றும் மகாத்மா அர்ஜூனன் (அர்ஜூனன் ஒரு மகாத்மா, யோகி, சாதகன் ஆவான். அதைவிடுத்து, எவரையெல்லாமோ கொன்றொழிப்பதற்காக, வில் அம்புகளை எல்லாம் ஏந்திக் கொண்டிருக்கும் போர்வீரன் அல்ல. எனவே, ''மகாத்மா அர்ஜூனன்'') ஆகியோருக்கு இடையில் நடந்த உலகியலுக்கு எல்லாம் அப்பாற்பட்ட ஆன்மீகம் தொடர்பான மற்றும் மயிர்க்கூச்செரிய வைக்கும் உரையாடலைக் கேட்டேன். அவருக்கு இதைக் கேட்கின்ற திறன் எவ்வாறு கிடைத்தது? மேலும் கூறுகிறார்.–

**வ்யாஸ ப்ரஸாதாச்ருதவானேதத்குஹ்யமஹம் பரம்**
**யோகம் யோகேஸ்வராத்க்ருஷ்ணாத்ஸாக்ஷாத்கதயத : ஸ்வயம் (75)**

ஸ்ரீவேதவியாஸருடைய அருளால், அவரால் அளிக்கப்பட்ட தெய்வீக திருஷ்டியால் நான் இந்த மேலான மறைபொருள் இரகசியமாகிய யோகத்தை யோகேஷ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணர் தாமாகவே முன்னின்று திருவாய் மலர்ந்தருளியதை அவர் மூலமாகவே கேட்டேன். சஞ்ஜயன் ஸ்ரீகிருஷ்ணரை யோகேஷ்வரர் என்று அறிந்திருந்தான். எவர் தாமும் யோகியோ, மற்றும் பிறருக்கும் யோகத்தை அளிக்கின்ற வல்லமை உடையவரோ, அவரே யோகேஷ்வரர் ஆவார்.

**ராஜன்ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிமமத்புதம்**
**கேசவார்ஜுனயோ : புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர் முஹு: (76)**

ராஜன்! கேசவர் மற்றும் அர்ஜுனன் ஆகியோருக்கு இடையில் நடைபெற்ற இந்த மேலான, நன்மை பயக்கவல்ல, மற்றும் அற்புதமான உரையாடலை மறுபடியும் மறுபடியும் நினைத்து மீண்டும் மீண்டும் மகிழ்ச்சியால் திளைக்கிறேன். எனவே, இந்த உரையாடலை எப்போதும் நினைக்க வேண்டும். மேலும், இதே நினைவில் எப்போதும் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். அடுத்து, ஸ்ரீகிருஷ்ணரின் திருவடிவத்தை மனதில் நினைத்தபடியே சஞ்ஜயன் கூறினான்.—

**தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே :**
**விஸ்மயோ மே மஹான் ராஜன்ஹ்ருஷ்யாமி ச புன : புன : (77)**

ராஜன்! ஹரியின் (எவர் நல்லவை, கெட்டவை (சுபம், அசுபம்) என்று எல்லாவிதமான வினைகளையும் அழித்து, சொந்த, மற்றும் உண்மை இயல்பாகிய ஆன்ம வடிவத்தில், அதாவது, தன்னில் நிலைத்திருப்பவரோ, அந்த ஹரியின்) அதி அற்புதமான திருவுருவத்தை மறுபடியும் மறுபடியும் நினைத்து, நினைத்து என்னுடைய சித்தத்தில் (மனத்தில்) மாபெரும் ஆச்சரியத்தை உணர்கிறேன். மேலும், நான் மீண்டும் மீண்டும் மகிழ்ச்சியில் திளைக்கிறேன். இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவின் திருவுருவம் திரும்பத் திரும்ப நினைக்கப்பட வேண்டிய (ஸ்மரன்) ஒன்றாகும். கடைசியில், சஞ்ஜயன் தனது முடிவினைக் கூறுகிறான்.—

**யத்ர யோகேஷ்வர : க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்த்தர :**
**தத்ர ஸ்ரீர்விஜயோ பூதிர்த்ருவா நீதிர்மதிர்மம (78)**

ராஜன்! எங்கே யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரும் மற்றும் வில்லேந்திய அர்ஜுனனும் (தியானமே வில்லாகும். புலன்களை அடக்குகின்ற திடவல்லமையே "காண்டீவம்" ஆகும். அதாவது மிகுந்த மனஉறுதிப்பாட்டுடன் தியானம் செய்யும் வல்லமை படைத்த, மகாத்மாவாகிய அர்ஜுனன்) இருக்கிறார்களோ, அங்கேதான் "ஸ்ரீ :"— அனைத்து செல்வங்கள், வெற்றி அதாவது எதற்குப் பின்னால் தோல்வி என்பதே கிடையாதோ, அத்தகைய நிரந்தரமான வெற்றி, தெய்வீக மகிமைகள்

பொருந்திய சர்வ வல்லமை, மற்றும், மாறிக் கொண்டேயிருக்கும் உலகியலில் மாறாமல் என்றும் நிலையாக இருக்கும் நீதி ஆகியவை இருக்கும்—இதுவே எனது கருத்தாகும்.

இன்றைய காலகட்டத்தில் அர்ஜூனன் நம்மிடையே இல்லை! இந்த நீதி, வெற்றி, தெய்வீக வல்லமை எல்லாம் அர்ஜூனன்வரை மட்டும்தான் என்று கூறப்பட்டுள்ளது! அவனுடைய காலத்திற்கு மட்டுமே பொருந்துவது! இவை எல்லாம் துவாபர யுகத்துடன் முடிந்து போய் விட்டன! என்ன அப்படித்தானே? என்றால், 'அப்படியெல்லாம் ஒன்றுமே கிடையாது' என்பதே பதிலாகும். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், "நான் அனைவருடைய இதய தேசத்திலும் வீற்றிருக்கிறேன்" என்றல்லவா கூறியிருக்கிறார்! எனவே, 'உங்களுடைய இதயத்திலும் அவர் இருக்கிறார்' என்றுதானே அர்த்தம். அனுராகமே அர்ஜூனன் ஆவான். அனுராகம் (இறைப்பற்று) என்பது உங்களுடைய ஆழ் மனதில் இஷ்ட தெய்வமாகிய ஸத்குருவை நோக்கிச் செல்கின்ற உயர் ஆன்மீக எண்ணவோட்டம் மற்றும் பிடிப்புணர்வின் பெயராகும். ஒருவேளை, உங்களிடமும் அத்தகைய இறைப் பிடிப்புணர்வு இருக்குமேயானால் எப்போதுமே உண்மையான வெற்றியும் மற்றும், என்றும் நிலையானது எதுவோ, அந்த இறை நிலையைப் பெற்றுத் தரவல்ல நீதியும் என்றென்றைக்குமாக உங்களிடம் இருக்கும். "எப்போதோ இருந்தன, இப்போது இல்லை" என்ற பேச்சிற்கே இடமில்லை. எதுவரை, மனிதர் உட்பட, அனைத்து ஜீவராசிகளும் இருக்கின்றனவோ, பரமாத்மாவின் உறைவிடம் அவற்றின் இதய தேசம் என்ற நிலையிருக்குமோ, "அவரைப் பிரிந்து விட்டோமே, அவரை அடைய வேண்டுமே" என்று துயரப்படுகின்ற ஆன்மாக்கள் இருக்கின்றனவோ, மற்றும் அவர்களில் எவருக்கேனும் தமது இதயத்தில் இந்த உயர் ஆன்மீக குணமாகிய இறை ஆர்வம் "**அனுராகம்**" பொங்கிப் பெருகுகிறதோ அவர்களே அர்ஜூனனின் சாதனை நிலைப் பிரிவினர் ஆகின்றார்கள். ஏனெனில், இறைப்பற்று மிக்கவனே அர்ஜூனன் ஆவான். எனவே, மனிதனாகப் பிறந்தவன் மட்டுமே இந்த நிலையை அடைய முடியும்.

**முடிவுரை :-**

இதுவே கீதையின் கடைசி அத்தியாயம் ஆகும். இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே அர்ஜூனன், "பிரபு! தியாகம் மற்றும் சன்னியாசம் ஆகியவற்றிற்கு இடையில் உள்ள வேறுபாடு மற்றும் அவற்றின் உண்மையான விளக்கம் என்ன? என்பதை நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன்" என்றொரு கேள்வி கேட்டான். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் இதுபற்றி ஏற்கனவே வழக்கத்தில் இருந்த நான்கு விதமான கருத்துக்களை எடுத்துரைத்தார். அவற்றில் ஒரு கருத்து சரியானதாக இருந்தது. அதனை மட்டும் சான்றாக

எடுத்துக் கொண்டு யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், தம்முடைய தீர்மானத்தை அறிவிக்கும் வகையில், ''வேள்வி, தானம் மற்றும் தவம் ஆகியவற்றை எந்தக் காலத்திலும் துறக்கவே கூடாது. அவை மனிதர்களைப் புனிதப்படுத்துபவை ஆகும். இந்த மூன்று செயல்களையும் செய்து கொண்டே அவற்றிற்கு விரோதமான எதிரிடையான (செயல்களை) வினைகளைத் தியாகம் செய்வதுதான் உண்மையான தியாகம் ஆகும். இதுவே, ''சாத்வீகமான தியாகமும்'' ஆகும். பலனின் மீதுள்ள விருப்பத்துடன் சேர்ந்து தியாகம் செய்தலே, ''ராஜஸீகமான தியாகம்'' என்றும் மோகவசத்தால், நியமிக்கப்பட்டுள்ள செயலினையே தியாகம் செய்வதுதான் ''தாமஸீகமான தியாகம்'' என்றும் கூறப்படுகிறது. மேலும் சன்னியாசம் என்பது தியாகத்தின் உச்சவரம்பு நிலையாகும். நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தைச் செய்வது மற்றும் தியானம் மேற்கொள்வதால் உண்டாகும் சுகமே ''சாத்வீகமானது'' ஆகும். புலன்கள் மற்றும் புலனின்ப விஷயங்களை அனுபவிப்பதால் உண்டாகும் சுகமே ''ராஜஸீகமானது'' ஆகும். மேலும், ஆன்மாவை திருப்தியடையச் செய்கின்ற ''பரமாத்மா'' என்னும் அன்னத்தை உற்பத்தி செய்யும் திறனற்று துக்கத்துடன் கூடிய சுகமோ, ''தாமஸீகமானது'' ஆகும்.

மனிதர்களைப் பொறுத்தவரையில், அவர்கள் மூலமாக, சாஸ்திரத்திற்குப் பொருந்துகின்ற அல்லது முரண்பாடான ''காரியங்கள்'' நடைபெறுவதில் ஐந்து காரணங்கள் உள்ளன.—கர்த்தா (மனம்), வெவ்வேறு கரணங்கள் (கருவி) (காரியம் எவற்றின் மூலமாகச் செய்யப்படுகின்றதோ அதுவே கரணம் (கருவி) எனப்படும். நல்லவை நடந்தால் விவேகம், வைராக்கியம், புலனடக்கம், மனக்கட்டுப்பாடு, ஆகியவை கரணமாக (கருவி) அமைகின்றன. கெட்டவை நடந்தால் காமம், கோபம், ஆசை, வெறுப்பு முதலானவை கரணமாக (கருவி) அமைகின்றன.) பல்வேறு விதமான ஆசைகள் (சேஷ்டா) (ஆசைகள் எண்ணற்றவை, அனைத்தும் நிறைவடைவதில்லை. எதனுடன் ஒத்துழைப்புக்கிடைக்கிறதோ அந்த ஆசையானது மட்டுமே நிறைவு அடைகிறது.), நான்காவது காரணம் இணைவு அல்லது ''ஆதாரம்.'' ஐந்தாவது காரணமே "தைவம்" (பிராரப்தம் அல்லது சம்ஸ்காரம்) எனப்படுகிறது. ஒவ்வொரு காரியம் நடைபெறுவதற்கும் இந்த ஐந்துமே காரணங்களாக கூறப்படுகின்றன. அதற்குப் பிறகும் கூட தூய்மையின் வடிவமாக விளங்கும் பரமாத்மாவைக் கர்த்தா (செய்பவர்) என்று சொல்பவன், மோகம் சூழ்ந்த மூட அறிவினன் ஆவான். அவன் உள்ளதை உள்ளபடிக்கு அறிவதில்லை. அதாவது, பகவான் எதையும் செய்வதில்லை. ஆனால், ஸ்ரீகிருஷ்ணர் இதற்கு முன்பு, ''அர்ஜுனா! நீ நிமித்த காரணமாக மட்டும் வந்து நின்று கொள், போதும்; செய்பவன், செய்விப்பவன் எல்லாம் நான்தான்'' என்றும் கூறியிருக்கிறார். முடிவாக, அந்த மகாபுருஷர் சொல்ல விரும்புவதுதான் என்ன?

உண்மையில், இயற்கை மற்றும் புருஷன் (இறைவன்) ஆகிய இருவருக்கும் இடையில் ஒரு ஈர்ப்பு ரேகை இருக்கிறது. எதுவரைக்கும் மனிதன் இயற்கையிலேயே சுற்றியலைந்து கொண்டு இருக்கிறானோ, அதுவரை மாயையே அவனுக்குத் தூண்டுணர்வைத் தந்து கொண்டிருக்கிறது. மேலும், எப்பொழுது அவன் இதைவிட்டு மேலெழுந்து விடுகிறானோ, இஷ்ட தெய்வமாகிய சத்குருவிடம் சமர்ப்பண உணர்வுடன் முழுமையாக அடைக்கலம் புகுந்து விடுகிறானோ, அதுமட்டுமல்லாமல், அந்த இஷ்ட தெய்வமாகிய சத்குருவானவர் அவனுடைய இதய தேசத்தில் எழுந்தருளி, சாரதியாக நின்று கொள்கிறாரோ, அதற்குப் பிறகு எல்லாம் பகவான்தான் செய்கிறார்.

அர்ஜூனன் இத்தகையதொரு உன்னதமான நிலையில் இருந்தான். சஞ்ஜயனும் அதே நிலையை அடையப் பெற்றிருந்தான். ஆக, எல்லோருமே இந்நிலையை அடையவேண்டும் என்பதே வழிமுறையாக இருக்கிறது. ஆகவே, இங்கே பகவான் செய்கிறார் ; அதாவது, தூண்டுணர்த்துகிறார். பூரண ஞானம் பெற்ற மகாபுருஷர் (பூரணமாக அறிந்தவர்), ஞானத்தை அறிவதற்கான விதிமுறை, (அறியப்படும் வழிமுறை), மற்றும் 'ஜ்ஞேயம், அறியப்படும் பொருளான பரமாத்மா இந்த மூன்றிற்கும் இடையில் ஏற்படும் தெய்வீகத் தொடர்பினாலேயே இந்த ''ஆன்மீகத் தூண்டுணர்த்தல்'' கிடைக்கிறது. ஆகவேதான், ஏதேனும் ஒரு பூரண அனுபவம் வாய்ந்த மகாபுருஷராகிய சத்குருவின் சரண சான்னித்தியத்திலேயே ஞானத்தை அறிந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டும்.

வர்ண அமைப்பு (வகுப்பு அமைப்பு) என்னும் கேள்வி நான்காவது முறையாகக் கையாளுகின்றபோது யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு கூறினார்: ''புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு, மனஒருமைப்பாடு, உடல், வாக்கு மற்றும் மனம் ஆகியவற்றை இஷ்டதெய்வமாகிய சத்குருவின் விருப்பத்திற்கு ஏற்றாற்போல வாட்டுதல், வினை ஆற்றல், தெய்வீக மகிமைகள் பற்றிய ஞானம் இயக்க நிலை பெறுதல், இறையாணைகளைப் புரிந்து கொண்டு அவற்றை நிறைவேற்றுகின்ற திறன் முதலான பிரம்மத்தில் நுழைவு பெற்றுத்தர வல்லதான தகுதிகள் அனைத்தும் பிராம்மண சாதனைப் பிரிவிற்கான கர்மம் ஆகும். வீரம், படைப்பின் மோதலில் இருந்து பின்வாங்காத குணம், அனைத்து ஆன்மீக உணர்வுகளின் மீதும் தலைமையுணர்வு, கர்மத்தில் தொடர்ந்து நேர்த்தியாக ஈடுபடும் திறன், ஆகியவை க்ஷத்திரிய சாதனைப் பிரிவிற்கான கர்மம் ஆகும். புலன்களை அகமுகமாக வைத்துப் பாதுகாத்தல், ஆன்மீகச் செல்வங்களைச் சம்பாதித்தல் முதலானவை வைசிய சாதனைப் பிரிவிற்கான கர்மம் ஆகும். சேவை புரிதலே சூத்திர சாதனைப் பிரிவினருக்கான கர்மம் ஆகும். சூத்திரர் என்பதற்கு ''குறைவான சாதனை அறிவுடையவன்'' என்று பொருள். குறைவான

சாதனை அறிவுடையவன், இந்த நியமிக்கப்பட்டுள்ள கர்மம் எனப்படும் ஆன்ம சிந்தனையில் இரண்டு மணி நேரம் உட்கார்ந்திருந்தாலும், அவனால் பத்து நிமிடம் கூட அவன் நினைத்ததைப் போன்று கர்மத்தை மனம் ஒன்றிச் செய்ய முடிவதில்லை. உடல் என்னவோ உட்கார்ந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால், எந்த மனத்தை ஆன்ம சிந்தனையில் ஈடுபடுத்த வேண்டுமோ, அது என்னவோ தன்போக்கில் காற்றுடன் பேசிக் கொண்டிருக்கிறது. அத்தகைய சாதகனுக்கு நன்மை எப்படி விளையும்? அவன் தன்னை விடவும் உயர் ஆன்மீக நிலைகளை அடையப்பெற்ற சாதகர்களுக்குச் சேவை செய்ய வேண்டும். மகாபுருஷர்களாகிய சத்குருவின் சேவையில் ஈடுபட வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக அவனுக்குள்ளும் ஆன்மீக செயல்பாடுகள் உருவாகும். சாதனை அறியப்பட்டு வளர ஆரம்பிக்கும். ஆகவே, இந்தக் குறைவான சாதனை அறிவுடைய சூத்திர பிரிவினரின் கர்மம் சத்புருஷர்களின் சேவையில் இருந்துதான் ஆரம்பமாகிறது. கர்மம் ஒன்றேதான். அதுவே நியமிக்கப்பட்டுள்ள கர்மம், ஆன்மீகச் சிந்தனை. அதனைச் செயல்படுத்துகின்ற கர்த்தா (சாதகன்) நான்கு சாதனைப் பிரிவு நிலைகளின் வழியாகச் செல்ல வேண்டியுள்ளது—அதி உத்தமம், உத்தமம், நடுத்தரம், மற்றும் தாழ்ந்த நிலைப் பிரிவு (அல்லது) பிராம்மணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்பவை ஆகும். மனிதர்களை அடிப்படையாகக் கொண்டு அல்லாமல் குணங்களை அடிப்படையாகக் கொண்டு, இந்தக் கர்மமானது நான்கு சாதனைப் பிரிவுகளாக ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டுள்ளது. கீதையில் சொல்லப்பட்டு இருக்கும் வர்ண அமைப்பு இதுமட்டுமேயாகும்.

தத்துவத்தைத் தெளிவு படுத்தும் வகையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு கூறினார் :

“அர்ஜுனா! எதனை “ஞானத்தில் மேலான உறுதிப்பாட்டுடன் நிலைபெறல்” என்கிறோமோ, அந்தப் பரம சித்தியை பெறுவதற்கான விதிமுறையைக் கூறுகிறேன் கேள். விவேகம், வைராக்கியம், புலன் அடக்கம், மனக்கட்டுப்பாடு, இடைவிடாத ஆன்ம சிந்தனை, மற்றும், தியானத்தில் ஈடுபாடு, பிரம்மத்தில் நுழைவு பெற்றுத் தரவல்ல அனைத்துத் தகுதிகளும் எப்பொழுது பரிபக்குவம் அடைகின்றனவோ, காமம், கோபம், மோகம், விருப்பு, வெறுப்பு முதலான இயற்கையிலேயே மனத்தை இழுத்துப் பிடித்து, அழுத்தி வைக்கின்ற புலன்நுகர்வு எண்ணவோட்டங்கள் அனைத்தும் எப்பொழுது முழுமையாக அமைதி அடைந்து விடுகின்றனவோ, அந்தச் சமயத்தில் அத்தகைய சாதகன் பிரம்மத்தை அறிகின்ற தகுதியைப் பெறுகிறான். இந்தத் தகுதிக்கு ‘உயர்நிலை பக்தி’ அல்லது ‘பராபக்தி’ என்று பெயர். பராபக்தியின் மூலமாகவே அவன் தத்துவத்தை

அறிகிறான். அந்தத் தத்துவம் என்றால்தான் என்ன? என்ற கேள்விக்கு அவர், ‘‘நான் எத்தகையவனோ, எந்த தெய்வீக மகிமைகளுடன் கூடியவனோ, அதை அறிகிறான். அதாவது, பரமாத்மாவானவர் புலன் உணர்வுக்கு அப்பாற்ப்பட்ட புலப்படாத நிலையில் இருக்கின்ற, என்றென்றும் நிலையானது, மாற்றமில்லாதது என்றெல்லாம் சொல்லப்படுகின்ற உலகியல் சாராத தெய்வீகக் குணதர்மங்களை உடையவர்’’ என்பதை அறிகிறான். மேலும், அதையறிந்து அடுத்தக் கணமே என்னில் நிலைபெற்று விடுகிறான். ஆகவே, பரமாத்மாவே தத்துவம் எனப்படுகிறார். அதை விடுத்து, ஐந்து தத்துவம், இருபத்தி ஐந்து தத்துவம் என்பதையெல்லாம் ‘‘தத்துவம்’’ என்று கொள்ளக் கூடாது. ‘இறைவனை அடையப் பெறுதல்’ எனப்படுகின்ற முக்தி நிலையுடன் சேர்த்து ஆன்மாவானது அதே வடிவத்தில் நிலைபெற்றுவிடுகிறது, அதனுடைய எல்லா குணதர்மங்களையும் பெற்று விடுகிறது’’.

இறைவனுடைய வசிப்பிடம் பற்றிக் கூறுகையில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், ‘‘அர்ஜூனா! அந்த இறைவன் மனிதர் உட்பட, எல்லா உயிரினங்களின் இதய தேசத்திலும் வசிக்கிறார். ஆனால், மாயை என்னும் இயந்திரத்தில் ஏறிக் கொண்டு அனைவரும் எங்கெங்கோ வழிதவறிச் சுற்றிக் கொண்டே திரிகின்றனர். எனவேதான் அவர்களால் இறைவனை அறிந்து கொள்ள முடிவதில்லை. ஆகவே, அர்ஜூனா! நீ இதய தேசத்தில் நிலையாக வீற்றிருக்கும் அந்த இறைவனுடைய சரணத்திற்குக் செல். இதைவிடவும் மாபெரும் மறைபொருள் இரகசியம் என்னவென்றால், எல்லாவிதமான தர்மங்களைப் பற்றிய சிந்தனையையும் விட்டுவிட்டு நீ என்னுடைய சரணத்திற்கு வா. நீ என்னையே அடையப் பெறுவாய். இந்த இரகசியத்தைத் தகுதியற்றவர்களிடம் சொல்லவே கூடாது. எவன் பக்தன் இல்லையோ, அவனிடம் சொல்லக் கூடாது. ஆனால், எவன் பக்தனோ அவனிடம் அவசியம் சொல்ல வேண்டும். அவனிடம் இடைவெளி வைக்கக் கூடாது.’’ என்றார். அவனிடமும் மறைத்து விட்டால், அவனுக்குப் பிறகு எப்படி நன்மை ஏற்படும்? கடைசியில் யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணர், ‘‘அர்ஜூனா! நான் சொல்லிய எல்லாவற்றையும் நீ நல்ல முறையில் கேட்டுப், புரிந்து கொண்டாயா? அதனால் உன்னுடைய மோகம் அழிந்ததா, இல்லையா?’’ என்று கேட்டார். அதற்கு அர்ஜூனன், ‘‘பகவானே! என்னுடைய மோகம் அழிந்தது. நான் என்னுடைய சுய நினைவைத் திரும்பவும் பெற்று விட்டேன். நீங்கள் எதையெல்லாம் சொல்கிறீர்களோ, அது அத்தனையும் உண்மை. இனி, நான் அதையே பின்பற்றுவேன்’’ என்று பதில் கூறினான்.

சஞ்ஜயன் அதாவது இவர்கள் இருவருக்கும் இடையில் நடந்த உரையாடலை மிகவும் நல்ல முறையில் கேட்டவன், தன்னுடைய முடிவை

எடுத்துரைக்கும் விதமாகக் கூறுகிறான் :

"ஸ்ரீகிருஷ்ணர் ஒரு மகா யோகேஷ்வரர். மற்றும், அர்ஜுனன் ஒரு மகாத்மா. அவர்களுடைய உரையாடலை மீண்டும் மீண்டும் நினைவுபடுத்தி மகிழ்ச்சி அடைகிறேன். ஆகவே, அதனை எப்போதும் நினைவில் வைத்துப் போற்ற வேண்டும். அந்த ஹரியின் திருவுருவத்தை நினைத்து திரும்பத் திரும்ப எனக்குள் மகிழ்ச்சி பொங்குகிறது. ஆகவே, அவரது திருவுருவத்தை மீண்டும் மீண்டும் நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும். அவரது திருவுருவத்தைத் தியானம் செய்து கொண்டே இருக்க வேண்டும். யோகேஷ்வரர் ஸ்ரீகிருஷ்ணரும், மகாத்மா அர்ஜுனனும் எங்கே இருக்கிறார்களோ, அங்கே தெய்வீகம் இருக்கிறது. வெற்றி, தெய்வீக மகிமைகளுடன் கூடிய சர்வ வல்லமை மற்றும் அசையாத, மாறாத நீதி (துருவ நீதி) இருக்கிறது". படைப்பில் காணப்படும் நீதிகள் எல்லாம் இன்று இருக்கின்றன. ஆனால் நாளையே மாறிப் போகின்றன. பரமாத்மா ஒருவர் மட்டுமே எப்போதும் இருக்கின்ற ஒரே துருவம் ஆவார். அவருக்குள் நுழைவு பெற்றுத் தருகின்ற நீதியே 'துருவ நீதி' எனப்படுகிறது. ஒருவேளை, ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜுனன், துவாபரயுகம் என்றொரு யுகத்தில் வாழ்ந்த இரண்டு மனிதர்கள் என்று மட்டும் ஏற்றுக்கொண்டோமேயானால், இன்றைய அளவில், அர்ஜுனன் அல்லது ஸ்ரீகிருஷ்ணர் ஆகிய இருவருமே நம்மிடையே இல்லை. ஆகவே, உங்களுக்கு ஒருபோதும் வெற்றியும் கிடைக்காது, என்றென்றும் தெய்வீக மகிமை பொருந்திய சர்வ வல்லமையும் கிடைக்காது என்றாகிவிடும். அப்படி என்றால், கீதை உங்களைப் பொறுத்தவரையில், ஒரு பயனும் அற்றது என்றாகிவிடும். ஆனால், அவ்வாறல்ல. ஸ்ரீகிருஷ்ணர் ஒரு யோகியாக இருந்தார். ஆர்வம் ததும்பி நின்ற இதயத்தையுடைய மகாத்மாவே அர்ஜுனன் ஆவார். அவர்கள் எப்போதுமே இருக்கிறார்கள்; இருந்து கொண்டே இருப்பார்கள். ஸ்ரீகிருஷ்ணர் தம்மைப் பற்றிக் கூறும்போது, "நான் புலன் உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஆன்ம வடிவத்தில் நிலைத்திருப்பவன்தான். ஆனால், நான் எந்த இறைப் பேருணர்வை அடையப் பெற்றுள்ளேனோ, அந்த இறைவன் அனைவருடைய இதய தேசத்திலும் வசிக்கிறார். அவர் எப்போதும் இருக்கிறார் ; இருப்பார். அனைவரும் அவருடைய சரணத்திற்கே செல்ல வேண்டும். அவ்வாறு சரணத்திற்குச் சென்றவரே மகாத்மா மற்றும் இறை ஆர்வமுடையவர் (அனுராகி) எனப்படுகிறார். மேலும், அத்தகைய இறை ஆர்வமுடையவரே (அனுராகி) அர்ஜுனன் எனப்படுகிறார். இதற்காக, ஏதேனும் ஒரு ஸ்திதப்ரக்ஞ மகாபுருஷருடைய சரணத்திற்குச் செல்வது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். ஏனெனில், இதயத்தில் வீற்றிருக்கும் இறைவனிடம் செல்வதற்கான தூண்டுணர்வைத் தரவல்லவர் அவர்தான்.

இந்த அத்தியாயத்தில் ‘‘சன்னியாசம் என்றால் என்ன? என்று முழுமையான விளக்கம் தரப்பட்டது. அதன்படி, அனைத்தையும் துறக்கின்ற நிலையே ‘‘சன்னியாசம்’’ எனப்படுகிறது. அதை விட்டுவிட்டு வெறுமனே ஏதேனும் ஒரு குறிப்பிட்ட நிறம் கொண்ட (காவி நிறம் முதலான) ஆடையை மட்டும் உடுத்திக் கொள்வதாலும் சமயச் சின்னங்களை அணிந்து கொள்வது மட்டுமே ‘‘சன்னியாசம்’’ என்றாகிவிடாது. அதற்கு மாறாக, ஏகாந்தமான இடங்களில் வாழ்ந்து கொண்டு இந்த நியமிக்கப்பட்டுள்ள கர்மத்தை, தன்னுடைய சொந்த பலத்தை நன்றாக அறிந்து கொண்டோ, அல்லது சத்குருவிடம் தன்னை முழுமையாகச் சமர்ப்பணம் செய்து கொண்டோ, தொடர்ச்சியாகச் செய்து வரவேண்டியது தவிர்க்க முடியாத ஒன்றாகும். ‘‘இறைவனை நேரடியாக தரிசனம் செய்து முக்தி நிலையைப் பெறுதல் என்ற நிலையில் எல்லாக் கர்மங்களையும் துறத்தலே ‘‘சன்னியாசம்’’ எனப்படுகிறது. இதையேதான் ‘‘வீடுபேறு’’ என்றும் கூறுகிறார்கள். இதுவே, சன்னியாசத்தின் உச்சவரம்பு நிலையாகும். அத்துடன்—

**ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸூ**
**ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே**
**ஸ்ரீகிருஷ்ணார்ஜூன ஸம்வாதே “ஸன்யாஸ**
**யோகோ” நாமாஷ்ட்டாதசோத்த்யாய :**

—இம்முறையில், ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷதமும் பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணர் மற்றும் அர்ஜூன உரையாடலுமாகிய ‘‘சன்னியாச யோகம்’’ என்ற பெயருடைய பதினெட்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்தஸ்ய**
**சிஷ்யஸ்வாமி அட்கடானந்த க்ருதே ஸ்ரீமத்**
**பகவத் கீதாயா : “யதார்த்த கீதா”**
**பாஷ்யே ‘‘ஸன்யாஸ யோகோ’’ நாமாஷ்ட்டாதசோத்த்யாய :**

ஹரி : ஓம் தத் ஸத்

இவ்வாறு, ஸ்ரீமத் பரமஹம்ஸ பரமானந்த மஹராஜ் அவர்களின் சீடரான ஸ்வாமி அட்கடானந்தர் இயற்றிய, ஸ்ரீமத் பகவத் கீதையின் ‘‘யதார்த்த கீதை’’ என்ற உரையில் ‘‘சன்னியாச யோகம்’’ என்ற பெயருடைய பதினெட்டாவது அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஹரி : ஓம் தத்ஸத்

# நிறைவுரை

தற்காலத்தில் மக்கள், கீதையின் பல்வேறு உரைகளை எல்லாம் படித்துக் கொண்டு, அவற்றில் ஏதேனும் புதிய விஷயங்கள் கிடைக்குமா என்றெல்லாம் தேடிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், உண்மையில் உண்மை என்பது என்னவோ ஒன்றுதான். அது ஒருபோதும் புதியதாவதும் இல்லை, அதேபோன்று பழையதாகிப் போவதும் கிடையாது. தினசரி செய்தித் தாள்களில் வேண்டுமானால் அன்றாடம் நிகழும் பிறப்பு இறப்பு செய்திகளையும், புதிது புதிதாகக் கிளம்புகின்ற பல்வேறு விதமான விஷயங்களையும் அச்சிடலாம். உண்மை என்றும் மாறாதது எனும்போது, அதைப் பற்றிப் புதிதாகவும் வேறுவிதமாகவும் சொல்வதற்கு என்ன இருக்கிறது? ஒரு வேளை யாராவது அப்படிச் சொன்னால், அவன் அந்த உண்மையை அடையவில்லை என்பது தெளிவு. ஒவ்வொரு மகாபுருஷரும், ஒருவேளை ஆன்மீகப் பாதையில் சென்று அந்த இலட்சியத்தை அடைந்து விட்டார்களேயானால், அதைப் பற்றி ஒரே மாதிரியான கருத்தையே வெளியிடுவார்கள். அவர்கள் சமுதாயத்திற்கு (மத்தியில்) நடுவில் பிரிவினையை ஏற்படுத்துவதில்லை. அப்படி ஒரு வேளை யாரேனும் பிரிவினையை உண்டாக்கினால், அவர் இலட்சியத்தை அடையவில்லை என்பதும் தெளிவாகிறது. ஸ்ரீகிருஷ்ணரும், முற்காலத்தவர் கண்டறிந்த அதே உண்மையையே கூறுகிறார். இனி, எதிர்காலத்தில் வரப்போகும் மகாபுருஷர்களும் ஒரு வேளை இதே உண்மையை அடைந்தார்களேயானால் இதையேதான் கூறுவார்கள்.

**மகாபுருஷர் மற்றும் அவருடைய ஆன்மீகச் செயல்பாட்டியல்:–**

மகாபுருஷர் இவ்வுலகில் உண்மையின் பெயரால் நிலவிவருகின்ற, மற்றும் உண்மையைப் போலவே தோற்றமளிக்கின்ற தவறான நெறிமுறைகளை அழித்தவாறே, மேலான நன்மையை உண்டாக்கவல்ல பாதையை அமைத்துத் தருகிறார்கள். அந்தப் பாதையும் கூட இவ்வுலகில் ஏற்கனவே இருந்த ஒன்றுதான். ஆனால், அதையொத்த, அதைப்போலவே தென்படுகின்ற பல்வேறு பாதைகள் வழக்கத்திற்கு வந்து விடுகின்றன. அவற்றிலிருந்து உண்மையான, பாதையைப் பிரித்து அறிவது மிகவும் கடினமாகி விடுகிறது. உண்மையில், ‘‘எது உண்மை?’’ என்பதை அடையாளம் காண முடிவதில்லை.

மகாபுருஷர்கள் அந்த உண்மையில் நிலைபெற்று இருக்கின்ற காரணத்தால், அவை எல்லாவற்றிலும் இருந்து ‘‘எது உண்மை?’’ என்பதைத் தெளிவாக அறிந்தே இருக்கின்றனர். அதை உறுதிப்படுத்தவும் செய்கிறார்கள். மேலும் அந்த உண்மையை நோக்கிச் செல்லுமாறு சமுதாயத்தினரையும் தூண்டுகின்றனர். ஸ்ரீராமர் இதையே செய்தார். இதையேதான் மகாவீரர் செய்தார்.

